உகளு—உகள், கிறது, உகண்டது, உகளும், உகள. v. n. To leap, jump, bound, spring forward, gallop, leap over, frisk, gambol, குதிக்க. 2. To leap—as a frog, பாய. 3. To pass, கடக்க. (p.)

வாளைப்பகட்டிளமுகளுங்கழனி. The cool (flooded) fields where the varly fish sport. (கைடதம்.)

உகா, s. A tree, உகாமரம், Salvadara persica, L.

உகாதி, s. Argha, அருகன்; [ex யுக, et ஆதி.] (p.)

உகிரம், s. The இலாமிச்சை grass, Andropogon muricatum, L.

உகிர், s. A finger or toe-nail; a talon, a claw, நகம். (p.)

உகிர்ச்சுற்று, s. A whitlow, felon. See நகச்சுற்று. (c.)

உகு, கிறது, ந்தது, ம், உக, v. n. To be shaken off, to fall or drop off—as fruits, &c.; to shed feathers, hair; to become separated; to cast off as the nails, &c., உதிர. 2. To be strewed, scattered, poured out, &c., சிதற. 3. To trickle or fall down—as rain or tears, சொரிய. 4. To be divested of, liberated from, அழல. (p.)

நெஞ்சுகவாம்பலாக்கண்ணீருகுக. The heart fainting and the lotus-flower like eyes shedding tears.

மஞ்சுகவார்த்தன. The (bells) sounded so loud as to cause the clouds to fall.

உள்ளமுடைந்துக்கக்கால். If the heart be broken and utterly fail. (குறள்.)

உயிருக. The soul departing.

உடுத்திரளுதிர்ந்தெனவுகுநகைவோ. Teeth scattered as if multitudes of stars had fallen.

அட்சளற்றுகுக்கவமிழ்து. Delicious food scattered in the mud. (குறள்.)

உகு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To spill, sprinkle, pour down, சிந்த. 2. To discharge, pour out, விட. 3. To shed, cause to fall, drop, உதிர்க்க. (p.)

கன்றுகுணிலாக்கனியுகுத்தமாயவன். The mighty Vishnu who beat off wood-apples (from the tree) with a calf, using it as a cudgel.

கண்ணீருகுத்தான். He shed tears.

உகுணம், s. A bug, முகட்டுப்பூச்சி. (p.)

உகை, கிறது, ந்தது, யும், ய, v. n. To move—as a beast or vehicle with a rider, to be ridden or driven, செல்ல. (p.)

உகையுஞ்சிவிகை, s. The passing palankeen.

உகை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To drive a carriage, &c., to ride, go on a horse, in a palankeen, &c., to put in motion, செலுத்த. 2. To discharge—as arrows, &c., to cast, throw, அம்புமுதலியவற்றை விட. 3. To urge forward, to incite, எழுப்ப. (p.)

உக்கம், s. The waist, the middle of the body, மருங்கு. 2. A bull, a bullock, an ox, எருது. 3. A cow, பசு. 4. A large kind of circular fan to grace processions, ஆலவட்டம். 5. Fire, heat, நெருப்பு. 6. A fowl, கோழி. 7. A ball, பந்து. (p.)

உக்கம், s. (Tel. ఉక్కము.) A rope by which any thing is suspended or carried in the hand, தூக்குக்கயிறு.

உக்கலை, s. [vul. உக்களை.] The hips, மருங்கின்பக்கம். (நிகண்டு-பிங்.) (p.)

உக்கல், s. Side, பக்கம். (p.)

உக்களம், s. Night-watch, சாமக்காவல். 2. Entrenchment about a camp, பாசறைச்சூழ்ச்சி. 3. Advanced guard, தலைக்காவல்.

உக்களம்வைக்க, inf. To set a guard.

உக்களவர், s. [prov.] Those that watch by night.

உக்கா, s. (Hin.) A Turkish pipe used for smoking கஞ்சா, &c., a hookah, கஞ்சாமுதலியபுகைகுடிக்குங்கருவி.

உக்காரம், s. [improp. முக்காரம்.] Vomiting, vomition, சத்திபண்ணுகை. 2. Bellowing—as an ox, தெருதுபோடல். (p.)

உக்காரிக்க, inf. To vomit, வாந்திக்க. 2. To bellow—as an ox, உக்காரம்போட.

உக்காரி, s. A species of meal-cake, பட்டு. (p.)

உக்கிடர், s. A spider, சிலந்திப்பூச்சி.

*உக்கிரமம், s. Anger, wrath, மூர்க்கம். Wils. p. 137. Ugrama.

நாசியுக்கிரமம், s. A disease of the nose.

*உக்கிரம், s. Vehemence, ardor, intensity, severity, fervency, fierceness, pungency (of spices, &c.), asperity, harshness, impetuosity, கொடுமை. 2. Wrath, rage, கோபம். 3. The height of a disease, முதிர்வு. 4. Ferocity, savageness, மூர்க்கம். Wils. p. 137. Ugra. 5. (p.) The front guard, தலைக்காவல்.

உக்கிரகந்தம்—உக்கிரகந்தி, s. Garlic, வெள்ளுள்ளி, Allium sativum. Wils. p. 137. Ugragand'ha and Ugragandin. 2. Assafœtida, பெருங்காயம். 3. Acorus calamus, வசம்பு. 4. The வேம்பு tree, Azadirachta Indica, L. 5. Sugar-cane, கரும்பு, Saccharum officinarum.

உக்கிரகுணம், s. Fierceness of disposition.

உக்கிரமது, s. Ardent spirits.

உக்கிரமானமருந்து, s. Pungent and stimulating medicine.

உக்கிரமானவார்த்தை, s. Asperity of language, a harsh expression.

உக்கிரன், s. Siva, சிவன். Wils. p. 137. Ugra. 2. Veerapattra, வீரபத்திரன். (p.)

உக்கிராணம், s. (Tel.) A storehouse, a granary, பண்டகசாலை. (c.)

உக்கிராணக்காரன், s. A steward.

உக்கிராணவிசாரணை, s. The management of provisions, stewardship.

*உக்கிருட்டம்—உக்கிருஷ்டம், s. [prop. உற்கிருஷ்டம்.] Excellence, greatness, மேன்மை. 2. Excessiveness, மிகுதி. Wils. p. 140. Utkrushta.

உக்கு, கிறது, உக்கினது, உக்கும், உக்க, v. n. To rot, decay, moulder, perish, உக்கிப்போக. 2. To dread, fear, பயப்பட.

உக்கதலமணிபுரகாரதுக்கென்றல். If the king of serpents which inhabits the abyss be shocked——

துக்கத்தினுலுக்கிப்போனான். He is wasted with grief, he is pining away.

உக்கினமரம், s. A worm-eaten tree, or rotten timber.

உக்கல், s. [vul.] Rottenness, putridity, பதனழிவு. 2. Any thing rotten or perished, உளுத்தது.

உக்குளான், s A kind of hare which lives on dried leaves, சருகுமுயல்.

*உங்காரம், s. The utterance of the particle உம், in token of displeasure, or to intimidate another, உம்மெனவெருட்டுகை. 2. Menace, reproof, reprehension, roaring, bellowing, அதட்டுகை. Wils. p. 977. Hunkara. 3. The buzzing of bees, வண்டொலி. (p.)

உங்காரத்திலுரப்புமோதையாள். She who thundered out the menacing உம். (ஸ்காந்தம்.)

உங்காரமதுகரங்கள். The humming, buzzing bees. (பாரதம்.)

உங்கரிக்க—உங்காரிக்க, inf. To reprove, menace, scold, reprehend, அதட்ட. 2. To utter a kind of grunt in token of disapprobation, உம்மெனவெருள. (p.)

உங்கை, s. Your younger sister, உன்றங்கை. (ஸ்காந்தம்.) See தங்கை. (p.)

உசரம், s. [prop. உயரம்.] Height.

உசர்—உசரு. See உயர்.

*உசற்காலம், s. [prop. உஷற்காலம்.] Day-break, வைகறை; [ex உஷஸ், dawn.]

*உசனம், s. One of the eighteen உபபுராணம். 2. One of the eighteen தருமநூல்.

*உசனன், s. The planet Venus, சுக்கிரன். Wils. p. 167. Ushanas.

*உசா—உசாதேவி, s. [prop. உஷாதேவி.] One of the consorts of the sun, சூரியன்மனைவி—the other is சாயாதேவி.

உசார், s. (Hin.) Watchfulness, விழிப்பு.

உசாவு, கிறேன், உசாவினேன், வேன், உசாவ, v. a. To consult, inquire, ponder, consider, ஆராய. 2. To deliberate mentally, எண்ண. 3. To deliberate in an assembly, take counsel, யோசனைகேட்க. 4. To spy, reconnoiter, ஒற்று. (p.)

உசாவிச்சொல்லு. Speak considerately.

உசாவிச்செய்ய, inf. To act after deliberation with others. 2. To act cautiously.

உசாவிப்பார்க்க, inf. To look or inquire into, examine by inquiry of others.

உசா—உசாவு, v. noun. Consultation, inquiry, examination, espionage, ஆராய்வு. 2. s. Searchers, examiners, spies, ஒற்றர். (p.)

உசாக்கேட்க, inf. To ask counsel, to consult, ஆலோசனைகேட்க. (p.)

உசாத்துணை—உசாவுதுணை, s. An adviser, a counsellor, a faithful companion, ஆலோசனைத்துணைவன்.

*உசி, s. Wish, விருப்பம். Wils. p. 164. Ushi. 2. (p.) Sharpness, கூர்மை.

*உசிதம், s. Propriety, suitableness, convenience, fitness, தகுதி. Wils. p. 137. Uchita. 2. Excellence, niceness, உத்தமம்.

உசிதசமயம், s. Opportunity, season, a fit occasion.

உசிதமானஆசனம், s. An appropriate seat in an assembly.

உசிதவசனம், s. Excellent speech, language.

உசிதன், s. A king of the Pandian dynasty, பாண்டியன். (சது.) (p.)

உசிரம், s. The pepper plant, செவ்வியம், Piper nigrum. 2. (p.) A bull, இடபம். 3. A ray of light, கிரணம்.

*உசிரம்—உசீரம், s. The root of a fragrant grass, இலாமிச்சைவேர், Andropogon muricatum. Wils. p. 164. Ushira.

உசிலம்—உசிலை—உசில், s. A fine timber tree. a kind of ebony with yellow veins, சீக்கிரிமரம், Acacia pennata.

உசு, s. A wood-worm, உளு. (பாரதி.) See the examples given under the குற்றியலுகரம், "உச்சாரமிருமொழிக்குரித்தே" in மொழிமரபு a chapter in தொல்காப்பியம்.

உசுப்பு, கிறேன், உசுப்பினேன், வேன், உசுப்ப, v. a. [vul.] To excite, rouse, wake up, incite dogs—to scare, fray, drive away—as birds, &c., எழுப்ப.

உசும்பு, கிறேன், உசும்பினேன், வேன், உசும்ப, v. n. To move, stir—as from a state of rest or sleep, to be in motion—as wind; to show signs of life, to be just moveable, அசைய.

*உசுவாசம், s. [com. உச்சுவாசம்.] Inhaling, inspiration—the opposite of நிசுவாசம்.

உச்சட்டம், s. [prov.] Mark, butt, இலக்கு. 2. Straightness, நேர்.

உச்சந்தம், s. [prov.] Declension, having past the height, crisis, தணிவு. 2. Being at the highest price, விலையுயர்ச்சி.

உச்சந்தமாக, inf. To be past the height, to be softening, allaying, &c.—as rain, disease, &c.

*உச்சம், s. Height, elevation, altitude, greatness, dignity, உயர்ச்சி. 2. Zenith, meridian, being right over the head, தலைக்குநேரிடம். Wils. p. 137. Uchcha. 3. The treble in music, வல்லிசை. 4. [in astrology.] One of the five situations of a planet, the most influential, auspicious and benign. (See கேந்திரம்.) 5. The top, tip, the extreme point, நுனி.

உச்சமாய்ப்பாடுகிறான். He sings treble.

தோணியுச்சமோட்டோடிற்று. The dhony sailed at the top of its speed.

உச்சக்கிரகம்—உச்சத்தானம், s. One of the five situations of a planet, being the most auspicious. See கேந்திரம்.

உச்சமானவன், s. A tall person.

உச்சவீடு, s. The position of the sun, or any planet in its most auspicious sign, உச்சவிராசி. See கேந்திரம்.

உச்சயனி—உச்சயினி, s. The city Ougein, formerly the capital of Vikramaditya, நகரம். Wils. p. 139. Ujjayani.

உச்சரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To pronounce, enunciate, utter, articulate, உரைக்க.

உச்சரிப்பு—உச்சாரணம்—உச்சாரணை, v. noun. Pronunciation, utterance, articulation, உச்சரிக்கை. (p.) 2. Uttering or reciting incantations, மந்திரோச்சாரணை.

உச்சாரம், s. Pronunciation.

*உச்சலம், s. The mind, மனம். Wils. p. 137. Uchchala.

*உச்சவம், s. A feast, festival, holiday. See உற்சவம். Wils. p. 144. Utsava.

*உச்சாகம், s. Perseverance, willingness, happiness. See உற்சாகம். Wils. p. 145. Utsaga.

*உச்சாடனம், s. Expelling a demon from a person or place, exorcism—one of the eight magical arts, அஷ்டகருமம். 2. Exciting a demon to injure or destroy some one by magical incantations, uprooting, பேய்முதலியவைகளையோட்டுகை. (See கருமம்.) Wils. p. 137. Uchchadana. 3. The science which treats of exorcism, அவ்வுச்சாடனத்தைப்பற்றிய சாஸ்திரம்.

உச்சாணி, s. [vul.] Elevation, height, உச்சி.

உச்சாணிக்கொப்பு, s. The highest branch of a lofty tree.

உச்சாரம், s. [a corruption of உச்சம்.] Height, elevation.

உச்சி, s. The crown of the head, உச்சந்தலை. 2. (fig.) Head, தலை. 3. Zenith, meridian, தலைக்குநேரிடம். 4. Mid-day, noon, when the sun is in the zenith, மத்தியானம். 5. Top, apex, summit of a mountain, நுனி. (c.) 6. (p.) A knot of hair, மயிர்முடி. 7. Men's hair, ஆண்மயிர். 8. A dog, நாய்.

உச்சந்தலை, s. The crown of the head.

உச்சிக்கரண்டி, s. A small spoon to pour oil on the heads of infants, சிறுகரண்டி.

உச்சிக்கலயம், s. The uppermost earthen vessel of a number placed one above another. 2. A small earthen pot.

உச்சிக்கிழான், s. The sun, (lit.) the ruler of the zenith, சூரியன். (பிங்கலந்தை.) (p.)

உச்சிக்குடுமி, s. A tuft of hair on the crown of the head of boys and men. (c.)

உச்சிக்குழி, s. Dimple in a child's cranium, the fontanel, தலையுச்சிப்பள்ளம். (c.)

உச்சிக்கொம்பன், s. A beast with perpendicular horns near together, உச்சியிற்கொம்புள்ளமாடு. 2. Rhinoceros, an animal with one straight horn, காண்டாமிருகம்.

உச்சிச்செடி, s. The புல்லுருவி, a parasitical plant, Loranthus, L.

உச்சித்திலகம், s. A flowering shrub with red blossoms, ஒருபூச்செடி.

உச்சிப்பிளவை, s. An ulcerous scab or sore on the crown of the head, உச்சந்தலையிலுண்டாகும்புண்.

உச்சிப்பொழுது. s. Noon-day, மத்தியானம்.

உச்சிமலை, s. A steep hill, a precipitous height.

உச்சிமோக்க, inf. To smell the crown of the head of young children—as parents often do through fondness, உச்சித்தலையைமோக்க.

உச்சிவிடுதி, s. Cessation of rain at noon, மத்தியானநேரத்தில்மழைவிடுகை. 2. Recess at noon of laborers, or of boys at school.

உச்சிவேர், s. The main root of a tree, மூலவேர்.

உச்சுகாட்டல், v. noun. [prop. உச்சுக்காட்டல்.] Setting dogs, directing a dog to an object of attack, &c., நாயை யேவல்.

உச்சுச்சொனல், v. noun. Calling a dog, நாயைக்கூப்பிடல்.

மலையுச்சி, s. The top of a hill, the peak.

*உச்சிட்டம்—உச்சிஷ்டம், s. Refuse of food, regarded as impure, எச்சில். Wils. p. 138. Uchchishda.

உச்சிட்டசாங்கரியம், s. Eating or drinking from the same vessel in common, ஒரேபாத்திரத்திற்புசிக்கை.

உச்சிதம், s. [prop. உசிதம்.] Excellence, rareness, niceness, valuableness, choiceness, அருமை. 2. Fitness. (See உசிதம்.) 3. The நெருஞ்சில் plant, Tribulus lanuginosus, L. 4. (Rott.) A present, a gift, கொடை.

உச்சிதமாகக்கொடுக்க, inf. To give as a present.

உச்சிதமாய்ப்பண்ண, inf. To do a thing pleasingly. 2. To do a thing on a new plan.

உச்சிரதம், s. A creeper, பிரண்டை, Vitis quadrangularis.

*உச்சிரயம், s. Height, உயரம். 2. Upright side of a triangle, முக்கோணத்தின்நிலைக்கோடு. Wils. p. 138. Uchchraya.

உச்சினி—உச்சினிமாகாளி, s. The city Ougein, ஒருபட்டணம்.

உச்சு, கிறேன், உச்சினேன், வேன், உச்ச, v. a. To pitch at a mark, cast a game with betel nuts, shells, money, &c., சூதாட்டமுதலியவைவெல்ல. 2. [prov.] To conquer in a game or controversy, to win, surpass, get the advantage of by subtilty or artifice, வெல்ல. 3. [vul.] To get another's property by artifice, to defraud, trick, பிறர்பொருளைக்கவர.

உடைநாரமுந்தச்சேலைகளுமுச்சிக்கொண்டேனென்றேன். Having robbed her of her clothes, mantle and all, I exulted in the exploit. (திருச்செந்தூர்க்கோவை.)

உச்சன், s. [prov.] A shell, areca-nut, tamarind seed, &c. used for pitching in a game.

*உச்சைச்சிரவம், s. The horse of Indra, இந்திரன்குதிரை. Wils. p. 138. Uchchaishravas. (p.)

உஸ், s. A hiss, a sound for setting on or inciting dogs, for scaring away birds, &c.

உஸ்ஸென்றோட்ட, inf. To scare, scare away by hissing.

உஞற்று, கிறேன், உஞற்றினேன், வேன், உஞற்ற, v. a. To enterprise, act with energy, attend to with energy and perseverance, to perform, execute, முயற்சிசெய்ய. 2. To institute a lawsuit, prosecute, வழக்கேற்க. (p.)

உலைவின்றித்தாழுதஞற்றுபவர். Those who persevere with untiring energy.

பலதருமம்பதியனுமதமின்றுஞற்றினள். She performed various charitable acts without her husband's consent. (பாரதம்.)

உஞற்று, *v. noun.* Energy, enterprise, exertion, ஊக்கம். 2. Unfailing application, untiring perseverance, முயற்சி. 3. Prosecution at law, institution of a lawsuit, வழக்கோதுகை. (*p.*)

உஞ்சட்டை, *s.* Thinness, slenderness (in person), மெலிவு. (colloquially, ஒஞ்சட்டை.) (*c.*)

உஞ்சல், *s.* [*prop.* ஊஞ்சல்.] A swing.

உஞ்சு, *s.* [*vul. prov.*] [*prop.* உச்சி.] A term for calling dogs, நாயைக்கூப்பிடுமொலிக்குறி.

உஞ்சுகாட்ட, *inf.* To set on dogs. See உச்சி.

உஞ்சை, *s.* The city of modern Ougein, அவந்திநகரம். (*p.*)

உடக்கு, *s.* [*vul.*] The spiral winding of the nut of a screw, திருகாணிக்கவைப்புரிச்சுற்று. (*p.*)

உடங்கு, *s.* Union, association, combination, கூடியிருக்கை. 2. [*adverbially.*] Together, together with, கூட. (*p.*)

அடைந்தார்ப்பிரிவுமரும்பிணியுஞ்சேமெழுடன்குடம்பு மேவன்பாற்குறவர். Forasmuch as separation from friends, disease and death are incident to those who are in the body—

*உடசம், *s.* A hut made of leaves, straw, &c., the residence of hermits, பன்னசாலை. (சேதுப்புராணம்.) Wils. p. 139. Udaja. (*p.*)

உடந்தை, *s.* Fellowship, companionship, confederacy, partnership, proprietorship, heirship, கூட்டுறவு. 2. Connexion, concert, union, combination, participation, சேர்க்கை. (*c.*)

ஒவ்வொரிற்குணங்களுக்குமுடந்தையாய். Uniting at once in fellowship with every virtue. (பாரதம்.)

அவனிதற்குடந்தையானி. He is a partner. 2. He is a joint-heir. 3. He is accessary to it.

அவனுக்குமெனக்குமுடந்தையில்லை. I have no connexion with him. 2. I am not related to him. 3. I have no business with him. 4. I disown him.

உடந்தைப்பட, *inf.* To consent, become accessary, to have a hand in, be engaged in, ஒருமிக்க.

உடப்பு, *s.* A tree, தொரட்டுமுள் மரம், Pisonia georgina, *L.*

உடம்படுமெய்—உடன்படுமெய், *s.* [*in grammar.*] The consonants ய் and வ், as serviles or connecting letters, இரண்டுயிர்களைப்பொருந்துமைப்பதெய்மெய்யெழுத்து. (*p.*)

உடம்பிடி, *s.* A lance or dart, வேல். (*p.*)

உடம்பு, *s.* Body, உடல். 2. The body as assumed by the soul in its transmigrations according to the deeds of former births, உயிர்க்கிருப்பிடம். 3. (*p.*) A consonant, மெய்யெழுத்து.

உடம்பைத்தேற்றிக்கொண்டன்றோயோகத்திலேபோகவேண்டும். To engage in the austerities of a Yogi, one must strengthen himself by medicine.

உடம்புதேற, *inf.* To be strengthened, to grow strong—as a convalescent person from food, exercise, &c.

உடம்புநன்றாயிருக்க, *inf.* To be well, to be in health.

உடம்பெடுக்க, *inf.* To take a body, to be born, சரீரமெடுக்க.

பரிகாசம்பண்ணவும்நிந்திக்கவுமுடம்பெடுத்தான். He is born to be mocked and despised.

கள்ளனென்றுடம்பெடுத்தவன். One who is born a rogue.

உடம்புரட்டல், *v. noun.* [*prov.*] Rolling or turning about—as infants before they begin to creep. 2. Rubbing off dirt or dust from the body.

ஆணுடம்பு, *s.* The penis.

பெண்ணுடம்பு, *s.* [*vul.*] Pudendum muliebra.

உடம்மை, *s.* Troubled or turbid water, கலங்கனீர். (சது.) (*p.*)

உடம்மைபயிலுங்குதிக்கயலினம். Fishes leaping in agitated water.

உடலம், *s.* Body common to man and brute, உடம்பு. (*p.*)

உடலு—உடல், கிறேன், உடன்றேன், வேன், உடல, *v. n.* To fight, be enraged, கோபந்தோன்றப்போர்செய்ய. 2. To exhibit signs of fierce anger, சினக்குறிப்புக்காட்ட. (*p.*)

உடல்சினஅரவம். The furious serpent. (வ்காந்தம்.)

அவருடனுடன்றுபொரவுன்னினும். Should one be enraged and attack them in battle. (பாரதம்.)

உடலல், *v. noun.* Rage, being enraged, சினத்தல். 2. Exhibiting signs of fierceness, சினக்குறிப்பு.

உடல், *s.* Body—human or brute, bodily constitution—one of the three obstacles to piety, சரீரம். 2. (*p.*) A consonant, மெய்யெழுத்து. 3. Gold, பொன்.

மறுப்படாவுடலேழுபொதிதந்துவாழியே. Do thou prosper giving (me) seven bags of gold.

உடலிரண்டுயிரொன்று. A shell-fish, இப்பி. 2. Intimate friendship—two bodies but one life, சிநேகம்.

உடலிலான், *s.* Kama, the Hindu cupid, காமன். (*p.*)

உடலெடுக்க, *inf.* To take a body, to be born. 2. [*prov.*] To fatten, become fat or fleshy—as cows.

உடலெரிவு, *s.* Smarting or burning sensation all over the body.

உடலெழுத்து, *s.* An inanimate letter, a consonant.

உடல்வாசகம், *s.* The body of a writing in bonds, &c., exclusive of signatures and of a letter exclusive of salutation, &c., கட்டெழுத்துவாசகம்.

உடல்வேலை, *s.* Body of a work, chiefly applied to painting or other ornamental work, பரும்படியானவேலை.

உடற்கருவி, *s.* Body armor.

உடற்குறை, *s.* A headless body, முண்டம். 2. Any blemish in the body, உறுப்புக்குறை.

உடற்கூறு, *s.* Anatomy, the component parts of the human system, சரீரக்கூறு.

உடற்கூற்றுத்தத்துவம், *s.* The principles of anatomy or the description of the component parts of the body.

உடற்கொழுப்பு, *s.* A disease which creates a dislike to food.

உடற்றழும்பு, *s.* A scar, a cicatrice, the mark of a stroke or blow, உடலின்மறு.

குதிரையுடலன், *s.* [*prov.*] A bull having his belly straight and narrow as that of a horse.

உடறல், *v. noun.* [*a change of* உடறுதல்.] Raging. See உடலல்.

உடற்று, கிறேன், உடற்றினேன், வேன், உடற்ற, *v. a.* To attack furiously in battle, to charge or rush on with fury, போர்செய்ய. 2. To vex, afflict, torment, வருத்த. 3. To drive back, beat away, &c., துரத்த. 4. To frustrate, thwart, scatter, disperse—as an opposing army, &c., சிதறவடிக்க. 5. To kill, destroy, exterminate, அழிக்க. 6. To discharge an arrow or other missile, பிரயோகிக்க. (*p.*)

ஆசுகமுடற்றினுரே. They discharged arrows in rage. (பாரதம்.)

வெஞ்சமமுடற்றினுரே. They carried on a destructive war.

ஒல்லும்கருமமுடற்றுபவர்கேண்மை. The friendship of those who frustrate one's designs when they are about to be accomplished. (குறள்.)

உலகத்தனையின்றுடற்றும்பசி. Hunger will afflict the world.

உடற்றல், *v. noun.* Attacking with fury. 2. *s.* Great fury, பெருங்கோபம். (*p.*)

உடன், *s.* A particle of time and place used in combination with other words and expressing co-existence, accompaniment—a form of the third case or the social ablative, மூன்றும்வேற்றுமைப்பின்சொல்லுருபு. 2. Instantly, immediately, at once, அப்பொழுதே.

உடனாளி, *appel. noun.* Companion, co-partner, கூட்டாளி. 2. (*Rott.*) A man of property.

உடனிகழ்ச்சி—உடனிகழ்தல்—உடனிகழ்வு, *v. noun.* Co-existing, happening simultaneously. 2. A term in grammar implying co-existence, concomitancy, உடனிகழ்ச்சிப்பொருள்.

ஒடுவென்பதுடனிகழ்வைக்காட்டும். The particle ஒடு shows accompaniment.

உடனிலைமயக்கம்—உடனிலைமெய்மயக்கம், *s.* [*in orthography.*] The combination of two consonants of the same kind—as அக்கம், அச்சம், opp. to வேற்றுநிலைமெய்மயக்கம்.

உடனுக்குடனே. The very instant, at the very juncture, immediately succeeding another event.

பாம்புகடித்தவுடனுக்குடனேபிரயோகம்பண்ணிக்கொண்டான். He applied the remedy as soon as the snake bit him.

உடனுற்றவன், *s.* A servant of the same class with another.

உடனே, *adv.* Immediately. 2. *prep.* With, together with.

ஒருசாமமானவுடனே. Immediately after the first watch.

அவனதைச்சொன்னவுடனே. As soon as he had said it.

என்னுடனேவா. Come along with me.

உடனொத்தபங்காளி, *s.* An equal sharer.

உடனொத்தவன், *s.* An equal, a fellow, an acquaintance, a compeer.

உடன்கட்டையேற, *inf.* To ascend the funeral pile—as a Hindu widow with her deceased husband, அனுமரணமடைய; [*ex* கட்டை, log of wood.]

உடன்கூட்டு, *s.* Co-partnership, fellowship, உடன்சேர்க்கை.

உடன்கூட்டாளி, *s.* Co-partner, participator.

உடன்கை. [*prop.* உடனே.] Immediately succeeding, just after, as soon as.

வேலைசெய்துமுடிந்தவுடன்கையிலேகூலிகிடைக்கும். The wages will be paid as soon as the work is done.

உடன்பங்காளி, *s.* A joint-sharer or participator, a co-partner, கூட்டுப்பங்காளி. 2. A co-heir, joint-heir, a brother's sons having a right to share in the family property, உடன்சுதந்தரவாளி.

உடன்பங்கு, *s.* A joint-share, equal share (whether in trade, inheritance, land or otherwise), participation, joint-heirship, கூட்டுப்பங்கு.

உடன்படு, *inf.* [*com.* உடம்படு.] To agree, assent, consent, acquiesce, harmonize with, சம்மதிப்பட. 2. To engage, contract, form a compact, பொருந்த. 3. To undertake, enter upon, உடம்படிக்கைசெய்ய. 4. To answer in the affirmative, மறுதிருக்க. 5. To be privy to, to have a hand in, சேர. 6. To yield, submit, comply, இசைய.

உடன்படிக்கை, *s.* [*com.* உடம்படிக்கை.] A contract, agreement, compact, covenant, engagement, &c., written or verbal, சம்மதிப்பத்திரம். 2. A promise, assurance, உறுதிப்பாடு.

உடன்படுத்த, *inf.* To induce consent, to make willing, சம்மதிப்படுத்த. 2. To unite, reconcile, இசைவிக்க.

உடன்படுவிலக்கு, *s.* A figure of speech by which a negation is couched in affirmative words—as அப்போதடுப்பதறியேனருள்செய்ய இப்போதிவருமிசைகின்றன்—தப்பில், பொருளோபுகழோதாப்போவீர்மாலை இருளோநிலவோவெழும். (அலங்காரம்.)

உடன்பட்டகடமை, *s.* A covenanted obligation.

உடன்பாடு—உடம்பாடு, *s.* Harmony, concord, union, fellowship, agreement, பொருத்தம். 2. Compact, covenant, engagement, உடம்படிக்கை. 3. Consent, assent, compliance, acquiescence, சம்மதிக்கை. 4. Being concerned in, complicity, உடந்தை. 5. Affirmation, மறுமை. 6. [*in grammar.*] Positive or affirmative—as opposed to negative terms, or negative forms of expression, விதி.

உடம்பாடிலாதவர்வாழ்க்கைகுடங்கருட்பாம்போடுடனுறைந்தற்று. Those who live in discord are as if enclosed in a vessel with a live snake.

உடன்பாட்டுவினை, *s.* A verb in the affirmative form, விதிவினை.

உடன்பிறந்தவர்கள்—உடன்பிறந்தார், *s.* Own full brothers or sisters.

உடன்பிறந்தார்சுற்றத்தாரென்றிருக்கவேண்டாம். Because born with you, do not imagine them to be your friends.

உடன்பிறப்பு, *s.* [*impr.* உடப்பிறப்பு.] Connascence, கூடப்பிறக்கை. 2. Offspring of the same parents, an own brother or sister.

உடன்றல், *v. noun.* [*as* உடலல்.] Raging.

உடு, *s.* A goat, sheep, ஆடு. 2. A star, விண்மீன். 3. An arrow, அம்பு. 4. The feathers of an arrow, அம்பினிறகு. 5. The point and barb of an arrow, அம்புத்தலை. 6. A boatman's pole, ஓடக்கோல். 7. A fort-ditch, அகழி. 8. A tree, சிக்கிமரம். (*p.*)

உடுகொட்டி, *s.* The பொன்னுங்காணி.

உடுநீர், *s.* A fort-ditch, அகழி. (*p.*)

உடுபதி—உடுவின்காந்தன்—உடுவின்வேந்தன், *s.* The moon, சந்திரன்; [*ex* காந்தன், a lover or husband]—he who took as his wives the constellations.

உடு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To dress, attire, put on clothes, வஸ்திரந்தரிக்க. 2. To dress another, ஒருவனுக்குடுக்க. 3. (*fig.*) (*p.*) To surround, encircle, சூழ.

பிள்ளைக்குச்சீலையுடுத்தாள். She dressed the child.

பூசலாசிறிக்குச்சந்தப்பூந்தழையுடுத்து. Adorning the attractive eyed body with boughs of the sandal tree. (திருச்செந்திற்புராணம்.)

உடுகூறை, *s.* Clothes—in colloquial use, chiefly women's.

உடுத்தவாடை, *s.* Home-dress or dishabille, under-clothes.

உடுத்தவாடையில்லாதாணீராட்டும். A woman's bathing without her under-garments (is improper). (நிகண்டு.)

உடுத்துக்கொள்ள, *inf.* To dress one's self.

உடுத்துவிட, *inf.* To dress another.

உடுபாவனை, *s.* Mode or style of dress. 2. [*prov.*] A suit of clothes. 3. (*Rott.*) Clean clothes.

உடுபுடவை, *s.* Garments.

உடுமானம், *s.* A dress befitting a person's station in life.

நகருடுத்த, *rel. part.* Surrounding the city.

கடலுடுத்தபார், *s.* The sea-girt earth.

உடுக்கை, *v. noun.* Dressing. 2. *s.* Raiment, clothing, உடை.

உடுக்கையிழந்தவன்கைபோலவாங்கேயிடுக்கண்களைவதாநட்பு. (Real) friendship to one removes his distress with that promptitude with which the hands of him whose garments are loosened (while before an assembly) adjust them. (குறள்.)

உடுப்பு, *s.* Clothes, garments, clothing, vesture, dress, வஸ்திரம்.

உடுப்புடுக்க, *inf.* To dress, clothe (one's self or another).

உடுக்கை, *s.* A small kind of drum, tapering in the middle, இடைசுருங்குபறை. 2. Tambourine, தக்கட்பறை.

உடுத்து, கிறேன், உடுத்தினேன், வேன், உடுத்த, *v. a.* To dress another, clothe, பிறனுக்குடுத்த.

உடுபதி, *s.* A tree and its root very bitter and medicinal, மரமஞ்சள், Menispermum fenestratum.

*உடுபம், *s.* A raft, float, தெப்பம். Wils. p. 139. Udupa.

உடுப்பை, *s.* The சீக்கிரி tree. (See உசிலம்.) 2. The name of a town near Tellicherry where the priest of the Madduvar resides, மத்துவாசாரியாரிருக்குமிடம்.

உடும்பு, *s.* The double-tongued lizard, the guana, கோதா, Lacerta iguana.

உடும்புநாக்கு, *s.* It's bifid tongue.

உடும்புநாக்கன், *s.* A double-tongued or deceitful man.

உடுவை, *s.* A fort-ditch, அகழி. (*p.*)

உடை, *s.* A species of thorny tree, குடைவேல், Acacia—in the adjective and genitive forms, ஐ is changed into அம், as—உடமுள், the thorn of the உடை tree.

உடை, *s.* Wealth, செல்வம். 2. Owning, belonging to, being owned, possessed, உடைமை. This word is conjugated as a symbolic verb, in the various inflections of which, or in the abstract form உடைமை, it chiefly obtains; when used as a qualifying prefix in its simple form, except as a participle, it requires the reduplication of the hard letters.

பாட்டுடைத்தலைவன், *s.* The patron of a poem to whom it is addressed. 2. The hero of a poem.

உடைப்பெருஞ்செல்வர், *s.* Those possessed of great wealth.

உடைத்து. Third person sing. neut. of a symbolic verb often used appellatively with ஆகுதல். It has, possesses, belongs to, is subject to.

இது அவற்குடைத்து. This belongs to him.

மகிமையுடைத்தானமோட்சம். Glorious bliss.

அச்சாணியன்னாருடைத்து. (The world) possessing persons as important (to society) as the linch pin is to a chariot. (குறள்.)

யாக்கைஅழிவுடைத்தாயிருக்கின்றது. The body is perishable.

உடைத்தானவன், *s.* A proprietor, possessor, one subject to.—*Note.* This form, though a solecism, is allowed.

உடைய. The participle of the verb, (1) used as a form of the sixth or possessive case, ஆறம்வேற்றுமைச்சொல்லுருபு—as என்னுடையபொருள், my property. 2. Affixed to nouns it governs the accusative case expressed or understood—as மரத்தையுடையவன், the owner of the tree. Sometimes it is annexed to the dative —as பொருளுக்குடையவன், an heir.

என்னுடையது. It is mine.

மணமுடையபூ, *s.* A fragrant flower.

மரத்தினுடையகொம்பு, *s.* The branch of a tree.

உடையவன்—உடையான், (*third pers. masc. sing.*) He has, he possesses, (often used appellatively). 2. *appel. n.* He who has, he who possesses. (*a*) the owner, the possessor, (*b*) the Supreme Being, (*c*) a rich man, (*d*) a king, a lord, (*e*) the master of the house.

உடையார், *s.* The rich, the wealthy, the opulent. 2. [*prov.*] A district officer. 3. A title among some tribes of Hindus.

உடையார்முன்னில்லார்போல். Like the poor in the presence of the wealthy.

ஆஸ்திக்குடையவன், *s.* An heir.

மண்ணுடையான், *s.* A potter, குயவன்.

ஆஸ்தியுடையவன், *s.* A proprietor.

ஊருடையார், *s.* A district officer, a registrar of land, &c.

வீட்டுடையான், *s.* The master of a house, the husband.

உடைமை, *s.* Property, possessing, having, owning, உரிமை. 2. The thing possessed, property, possessions, movable property, உரிபொருள். 3. Jewels, ornaments, ஆபரணம். 4. Wealth, riches, opulence, செல்வம். In the first meaning it is often in classical language affixed to other words.

உடைமையுளின்மைவிருந்தோம்பலோம்பாமடமை.... Poor in the midst of wealth are they who ignorantly neglect the duties of hospitality. (குறள்.)

கல்வியுடைமைபொருளுடைமையென்றிரண்டுசெல்வமுஞ்செல்வமெனப்படும். The two possessions, viz.: knowledge and wealth are possessions indeed. (நீதிநெ.)

உடைமைக்காரன்—உடைமையாளன், *s.* A proprietor, possessor, an owner. 2. An opulent person.

அன்புடைமை, *s.* Love, affection, kind-heartedness.

அறிவுடைமை, *s.* The possession of knowledge, knowledge.

அருளுடைமை, *s.* Grace, benevolence.

உடை, கிறது, ந்தது, யும், ய, *v. n.* To become broken—as a vessel; to crack, burst, break in pieces, split, to be fractured—as the skull, &c.; to break with force suddenly, to break or burst open—as a bank or shore; to break open—as a letter or seal, &c.; to be broken—as the skin; to be hurt—as by a wound, தகர். 2. To become broken—as the ranks of an army, to be discomfited, to retreat before the foe, இரிய. 3. To become broken—as the heart with grief, to be disheartened, dispirited, dejected, alienated, &c., to be in despair, மனம்நெகிழ. 4. To fall below in competition, rivalry or comparison, தாழ. 5. To be reduced in circumstances, to become poor, குறைய. 6. To effloresce, open, burst—as a flower, to blossom, மலர். 7. To become untwisted, முறுக்கவிழ. 8. To be reduced in strength, to be debilitated, to be subdued or overcome by any thing, பலமுடைய. (குறள். 109. அதி. 8.) 9. To be divulged or become known as a secret, வெளிப்பட. 10. To be ruined, கெட.

நெஞ்சுடைந்தவனாய்ப்போனான். He is dispirited, dejected, &c.; he is in despair.

கொப்புளமுடைந்தது. The blister is broken.

ஒன்னலருடைந்துபோனார். The enemy was discomfited.

உடை, *s.* Clothes, garments, vesture, dress, வஸ்திரம்.

உடைநடைபாவனை, *s.* The mode of dress, the gait, the manner, external appearance.

உடையல், *s.* Any thing broken, a breach, a fracture.

உடையல்நெரியல், *s.* Things cracked and broken.

உடைவாள், *s.* A short scimiter, an accoutrement or article of equipage, சரிகை.

உடைவு, *v. noun.* A breach, disruption, eruption, infraction, crack, fracture, தகர்வு. 2. Being routed, a discomfiture, defeat, இரிவு. 3. Debility, brokenness of constitution, தளர்வு. 4. [*with appropriate words prefixed.*] Dispiritedness, dejection, broken-heartedness, despair, மனநெகிழ்ச்சி. 5. Reduction of circumstances from wealth to poverty, கேடு.

மனமுடைவானவன், *s.* A dejected or broken-hearted person.

உடை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To break a vessel, &c.; to burst, break open, break a bank, &c.; to break lumps, clods, &c.; to break a boil, a blister, the skull or any other flat, solid or massive substance; to split, fracture, தகர்க்க. 2. To break the ranks of an enemy, to defeat, discomfit, disperse, rout, put to flight, இரிக்க. 3. To ruin, impoverish one, கெடுக்க. 4. To untwist, untwine, முறுக்கவிழ்க்க. 5. *v. n.* To break—as a boil, கட்டியுடைக்க.—*Note.* உடைய and உடைக்க are not applicable to the breaking of a tree, a branch, an arm or any other long and cylindrical body that is broken off short or asunder. For this meaning see முரிக்க, ஒடிக்க, &c.

தண்ணீருடைத்தப்பாய்கிறது. The water has broken (the dam) and flows out.

பல்லுடைப்பேனென்றான். He said, I will break your teeth.

கட்டுடைக்க, *inf.* To burst an embankment—as water.

பெண்மையுடைக்கும்படை, *s.* The weapon that dissolves female continency.

தலையுடைக்க, *inf.* To take much pains, mentally—as in abstruse calculations, intricate business.

உடைப்பு, *v. noun.* A breaking, a breach, the bursting of a bank, உடைக்கை. 2. *s.* A channel cut or broken through a dam in a field, disruption, உடைந்தஅறுவாய். 3. Weakness, தளர்ச்சி.

தலையுடைப்பு, *v. noun.* A trouble, some intricate employment.

உடைகுளம், *s.* The twentieth lunar asterism, பூராடம். (*p.*)

உடையார்பாளயம், *s.* The name of a country, ஒரூர்.

உட்கட்டு, *s.* Private apartments of a house, அந்தப்புரம். 2. A woman's necklace tied close to the neck, மாதர்கழுத்திற்கட்டுமோர்மணிவடம்; [*ex* உள், the inside.] All words from உள் having the ள் changed into ட் or ண் will be found under உள்.

உட்கார்—உட்காரு, கிறேன், ந்தேன், வேன், உட்கார, *v. n.* [*vul.*] To sit, sit down, (not classical) also written உருக்கார.

உட்காருவிக்க, *inf.* To seat, provide with a seat, cause to sit, உருக்காரச்செய்ய.

உட்கு, *s.* Fear, dread, terror, signs or expression of fear, அச்சம். 2. Shame, bashfulness, modesty, நாணம். (*p.*)

உட்குவரத்தோன்றுமீரேழ்துறைத்தே. It consists of fourteen fearful modes. (புறப்பொருள், தொல்காப்பியம்.)

உட்கு, கிறது, உட்கினது, ம், உட்க, *v. n.* To fear, dread, stand in awe of, அஞ்ச. 2. To betray signs of fear, அச்சக்குறிப்புக்காட்ட. 3. To be ashamed, be bashful, to retire, shrink back with shame, to be modest, நாண. 4. To rot, decay, perish, moulder, மடிய. (*p.*)

உட்குடையாருள்நாணியல்பினள். Who excites the fears of all the matrons of the land and puts them to shame. (நாலடி. அதி. கற்புடைமகளிர்.)

உட்கை, *v. noun.* Fearing, dreading, &c.

*உட்டணம்—உஷ்ணம், *s.* Vehement or intense heat of fire, of the sun, of the weather, or of the body, வெப்பம். Wils. p. 165. USHN'A.

உட்டணகாசம், *s.* A disease, வெப்பக்காசம்.

உட்டணகாலம், *s.* The hot season, hot weather.

உட்டணங்கொண்டிருக்கிறவன், *s.* One affected with excessive heat in the body.

உட்டணசஞ்சீவி, *s.* The பிரண்டை plant, Vitis quadrangularis.

உட்டணசிகை, *s.* The sign in which either the planet mars, saturn or the sun is situated.

உட்டணசைத்தியம், *s.* The use of hot or pungent things to cool the system—as pepper, hot water, &c.

உட்டணபூமி, *s.* A hot country or the torrid zone. 2. Heat and cold.

உட்டணோதிக்கம், *s.* The prevalence of heat in the body, weather, or climate.

உட்டணவாயு, *s.* Hot humors in the body.

உட்டணவியாதி, *s.* A disease—the whites--supposed to be caused by heat in the system.

உட்டணி, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To be hot—as weather—as fire—as heat in the system, &c., வெப்புற.

உணக்கு, கிறேன், உணக்கினேன், வேன், உணக்க, *v. a.* To cause to wither or to fade; to dry with fire, in the sun, &c., உலர்த்த. 2. To grieve one, to wound the feelings, வருத்த. (*p.*)

பாலாற்கழீஇப்பலகாலுணக்கினும்வாலிதாம்பக்கமிருக்கைக்கிருந்தன்று. Though you wash charcoal in milk and dry it ever so long, it will not become white. (நாலடி.)

மீனுணக்கல், *v. noun.* Drying fish. (அகப்பொருள்விளக்கம்.)

உணங்கு, கிறது, உணங்கினது, ம், உணங்க, *v. n.* To fade, wither, dry, droop—as a vegetable or animal, உலர். 2. To be grieved, to be sorry, to be dejected in mind or countenance, வருந்த. (*p.*) 3. To pine away, to wither—as the body, by abstinence, &c.; to be emaciated, reduced, &c.; to languish, வாட.

உணங்குசிந்தையாய். O thou afflicted in mind. (ஸ்காந்தம்.)

நினதுசெம்முகமுணங்கியதென்கொலாம்? Why is your blooming countenance so cast down? (ஸ்காந்தம்.)

படலுணங்கவிடுவார்மாட்டு. With him who has the resolution to desert me whilst languishing from separation—— (குறள்.)

**உணங்குமீன்**, *s.* Drying fish.

**உணக்கம்**, *v. noun.* A dry or withered state, உலர்ந்தநிலைமை. 2. Dejection of countenance, drooping, வாட்டம்.

**உணத்து, கிறேன், உணத்தினேன்,** வேன், உணத்த, *v. a.* [*vul. improp. for* உணக்கு.] To dry in the sun, wind, &c.

**உணர்—உணரு, கிறேன், உணர்ந்தேன்,** வேன், உணர, *v. a.* To be conscious, to feel mentally, to perceive, understand, comprehend, arrive at, or possess full and perfect knowledge, அறிய. 2. To discern, distinguish, பகுத்தறிய. 3. To think, reflect or consider, meditate, contemplate, நினைக்க. 4. To feel, perceive by the touch, பரிசித்தறிய. 5. To learn, acquire knowledge, கற்றறிய. 6. To become reconciled—as man and wife, be reunited after a love quarrel, ஊடறீர. 7. To become free from delusion, doubt, error, &c.—as in waking from sleep; recovering from languor; acquiring spiritual perception, &c., தெளிய. (*p.*)

தெய்வப்புலவனுக்குநாவுணருஞ்சித்திரகாரனுக்குக்கையுணரும். The tongue of the inspired poet and the hand of the painter perform their functions intuitively. [*prov.*]

உற்றுணரெங்களிலொருவன். One of us who have been initiated. (பாரதம்.)

**உணராமை**, *neg. v. noun.* Stupor, want of perception, knowledge, feeling, &c., அறியாமை. 2. Insanity, intoxication, infatuation, bewilderment, உன்மத்தம்.

**உணருமறிவு**, *s.* Instinct, intuition. 2. Ready apprehension, cleverness.

**உணர்ந்தோர்—கற்றுணர்ந்தோர்**, *s.* The learned, persons of profound erudition, men of ability.

**உணர்**, *v. noun.* Feeling, perception, knowledge, intellect, உணர்வு.

**உணர்ச்சி**, *v. noun.* Consciousness, feeling, intuition, perception, discernment, understanding, sensibility, knowledge, wisdom, judgment, experience, reason, learning, &c., acquiring knowledge, உணர்வு.

என்காலிலேயுணர்ச்சியில்லை. My leg is devoid of feeling, affected by paralysis, &c.

**உணர்தல்**, *v. noun.* Being reconciled—as man and wife after a love-quarrel.

ஊடலுணர்தல்புணர்தலிவைகாமங்கூடியார்பெற்றபயன். Disunion, reconciliation and the pleasures of love, these are the fruits of matrimony. (குறள்.)

**உணர்த்தி**, *s.* [*vul. prop.* உணர்ச்சி.] Feeling.

**உணர்த்தியற்றவன்**, *s.* A man past feeling, one devoid of sensibility.

**உணர்த்தியுள்ளவன்**, *s.* A man of sensibility, one who is affected by the wants of others.

**உணர்வு**, *v. noun.* Feeling, consciousness, intuition, perception, understanding, knowledge by means of the senses, உணர்கை. 2. Clear discernment, intellect, reason, தெளிவு. 3. Cessation from sleep, love quarrels, &c., ஊடறுந்துயிலுநீங்கல். 4. Acquiring of knowledge, learning, experience, acquaintance with science, &c., கற்றுணர்கை. 5. A sense, புலன். 6. Separation, நீங்கல்.

உணர்வுணருமுணர்வுடையாரைப்புணர்ப்புணருமின்பம். To be united in friendship with the prudent who think of what they ought to think is productive of the highest felicity. (நாலடி.)

உள்ளத்துணர்வுடையான். A man of great wisdom.

**உணர்வுகேடு**, *s.* Forgetfulness, listlessness, inattention, உணர்ச்சியின்மை. 2. Want of understanding, அறிவீனம்.

**நுண்ணுணர்வு**, *s.* An acute perception.

**தேர்ந்தவுணர்வினன்**, *s.* A man of improved understanding.

**தளர்ந்தவுணர்வினன்**, *s.* A dull man, one slow of understanding.

**உணர்த்து, கிறேன், உணர்த்தினேன்,** வேன், உணர்த்த, *v. a.* To teach, instruct, explain, cause to feel, perceive, understand, to enlighten, impart knowledge, to convince, கற்பிக்க. 2. To declare, treat of a subject—as a speaker or author, அறிவிக்க. 3. To conciliate the other party—as man or wife, to recover the affections—as lovers after love quarrels, ஊடறீக்க; [*ex* உணர், *v.*] (*p.*)

கலத்துணர்த்தற்காதலர்க்கண்டாற்புலத்தலாற்புலக்கப்புகுதியென்னெஞ்சு. O my heart, if thou once again behold thy husband, who by love can conciliate thee, thou wilt no longer maintain thy feigned opposition. (குறள்.)

ஊடியவரையுணர்த்தாமை. Not conciliating your concubine. (குறள்.)

**உணவு**, *s.* Food, sustenance, eatables, chiefly applicable to substantial food—as wheaten bread, rice, animal food, &c., ஆகாரம்.

**உணவின்மை**, *s.* Fast, abstinence from food.

**உணு**, *s.* Food, sustenance, போசனம். 2. Cooked rice, சோறு. (*p.*)

உணுமிசைத்தனர். They took food. (ஸ்காந்தம்.)

**உணி**, *s.* [*a contraction of* உண்ணி.] A tick, &c.

**உண்—உண்ணு, கிறேன், உண்டேன்,** உண்பேன் or உண்ணுவேன், உண்ண, *v. a.* To eat, drink, suck—as a child; to take food, whether solids, liquids or other kinds, to taste, அருந்த. 2. To feed, make a full meal—as a dinner, &c., புசிக்க. 3. To enjoy, suffer, experience, or receive the fruits of actions performed in former births, or in future the actions of the present, அநுபவிக்க. 4. To imbibe, absorb, விழுங்க.—*Note.* With verbal roots and sometimes with verbal nouns it forms a passive—as அடியுண்ண, to be beaten; அலையுண்ண, to be distressed.

உண்டசுற்றமுறவும். Relations or friends who have eaten together will cherish towards each other kindly feelings.

உண்டசோற்றுக்கிரண்டகம்பண்ணப்படாது. One ought not to be ungrateful to his benefactor.

உண்டாரைமேனிகண்டாற்றெரியும். A person's diet may be known by his appearance.

உண்ணக்கைசலிக்க. To be so delicate as to tire by eating—as a dainty child, &c. 2. To be wearied, cloyed, sated, &c. by too profuse a supply of food.

உப்பாலிவைப்பயனுண்ணுங்கால். While experiencing the inevitable fruits of former births.

**உண்கலம்**, *s.* A plate or dish to eat from, a porringer, commonly brass, தாலம்.

**உண்டாட்டு**, *s.* Play of females, மகளிர்விளையாட்டு. 2. Play, sport, விளையாட்டு. 3. Festivity, drinking, joviality, மதுவுண்டாடுகை.

**உண்ணி**, *s.* An appellative termination often contracted to உணி—as தூக்குணி, &c., one who eats, an eater.

**உண்ணீர்**, *s.* Water to drink.

**உண்பிக்க**, *inf.* To cause to eat, drink, &c., feed one, உண்ணுவிக்க.

**தூக்குணி**, *s.* One so vile and daring as not to fear hanging. 2. A malefactor who is hanged. 3. One who hangs about to get food.

**அழுகுணி**, *s.* One who is always weeping; also one who is disposed to weep.

**அடியுணி—குட்டுணி**, *s.* One who is beaten.

**குத்துணி**, *s.* One who is stabbed. 2. A dastard, mean spirited person.

**இரப்புணி**, *s.* A beggar, one who eats what he begs.

**அடையுணி**, *s.* One dependent for food.

**கட்டுண்ண**, *inf.* To be tied up.

**வெட்டுண்ண**, *inf.* To be cut down.

**தடையுண்ண**, *inf.* To be hindered.

**மையுண்கண்ணி**, *s.* A woman with painted eyes, (*lit.*) she whose eyes have absorbed paint.

**முலையுண்ணுங்குழந்தை**, *s.* An infant at the breast.

நீலமுண்டதுகிலிகை. The pencil which has imbibed blue paint. (கன்னுலை.)

**கள்ளுண்ணி**, *s.* A drunkard.

**தள்ளுண்ண**, *inf.* To be rejected.

**வீண்சோறுண்ணி**, *s.* A rice consumer, a worthless person.

**உண்டல்.** A past verbal form of உண்ணல், eating.

**உண்டா, கிறது, னது, கும், க,** *v. n.* To come into existence, to rise into being, happen, occur, take place, become, to be formed, to form, to concrete, உளதாக. 2. To become, to be made or created, தோன்ற. 3. To be conceived, to have origin, கருவுண்டாக. 4. To grow as vegetables, thrive, flourish, to be produced, be productive, &c., முளைக்க. 5. To become rich, wealthy, opulent, to prosper, செல்வமுண்டாக; [*ex* உள்.] (*c.*)

உண்டாயபோழ்திலுடைத்தழீக்காகம்போற்றொண்டாயிரவர்தொகுபவே. Thousands crowd about the wealthy as crows about a corpse. (நாலடி.)

எனக்குண்டானவுடைமை. My property.

உலகமுண்டானதுமுதல். From the creation of the world.

பிள்ளையுண்டாயிருக்கிறவள். A pregnant woman.

சதுரக்கள்ளியிலகிலுண்டாகும். In the prickly pear grows the (fragrant) agillochum.

**உண்டாயிருக்க**, *inf.* To have, belong to, exist.

அவள்நாலுமாதமுண்டாயிருக்கிறாள். She is advanced four months in pregnancy.

**உண்டானவன்**, *appel. n.* One who has wealth—as உள்ளவன்.

**உண்டாக்கு**, கிறேன், உண்டாக்கி னேன், வேன், உண்டாக்க, *v. a.* To make, cause to exist, create, effect, occasion, generate, படைக்க. 2. To raise crops, trees, &c., to propagate, cultivate, விளைவிக்க. 3. To raise to affluence, enrich, விருத்திக்கப்பண்ண. 4. To produce, form, உண்பெண்ண; [*ex* உள்.] (c.)

**உண்டாக்கிவைக்க**, *inf.* To raise one, to establish in life.

அவர்வெகுபேரையுண்டாக்கிவைத்தார். He has been the making of many.

**கதையுண்டாக்க**, *inf.* To fabricate a story. 2. To spread a rumor.

**உண்டி**, *s.* Food, sustenance, eatables, உணவு. 2. Boiled rice, சோறு. 3. The food of carnivorous animals, இரை. (கிலேடு and திவாகரம்.) 4. (பாதிதி.) The food of birds and beasts in general, பறவைவிலங்கிவற்றினுணவு. Four kinds of eating are enumerated, viz.: 1. உண்டல், eating without mastication—as boiled rice, &c. 2. தின்றல், masticating, chewing—as meat, curries, &c. 3. நக்கல், licking—as honey, molasses, lapping. 4. பருகல், drinking, sucking—as a child. Sometimes a fifth is added, viz.: மென்றல், chewing—as spices, pungents, leaves, &c. kept in the mouth.

உண்டிசுருங்குதல்பெண்டிர்க்கழகு. It is becoming in a woman to eat little.

**பேருண்டி**, *s.* A principal meal—as dinner, &c., போசனம். 2. Eating to excess, gluttony, gormandizing, பெருந்தீன்.

**சிற்றுண்டி**, *s.* A light meal—as luncheon, tiffin, பலகாரம். 2. Eating sparingly, சிறுதீன். 3. A kind of small cake, அப்பவருக்கத்தொன்று.

**உண்டி—உண்டிகை**, *s.* A bill of exchange, உண்டிபத்திரம். 2. A treasury box, an alms box, பொக்கசப்பெட்டி. 3. A box in which the tax money is deposited.

**உண்டிகைச்சீட்டு—உண்டியற்சீட்டு**, *s.* A bill of exchange, உண்டிப்பத்திரம்.

**உண்டியல்**, *s.* A bill of exchange, a draft, உண்டிச்சீட்டு. 2. A treasury box, an alms box, உண்டிகை. (continental usage). 3. That part of the offering which is reserved for the use of the temple, கோயிற்குச் சேர்க்கும்பணம் [*ex* உண்டி, existing].

**உண்டு**, [*ex* உள்.] Third pers. neut. sing. of the symbolic verb உள், but now used with all persons, in both numbers and in both திணை, it is, it exists, there is, there was, there are, there may be, there might be, &c. In some connexions, it implies a degree of uncertainty, குறிப்புவினைமுற்று. 2. Existing, existence, a thing that exists, உள்ளது. This and the participle உள்ள, (with its appellative) are the only parts of the verb, generally brought into colloquial use.

எனக்குத்தெய்வமுண்டு. God is my help, (எனக்கு is often omitted)—spoken of one when deserted, ill-treated, &c.

அதற்குநானுண்டுஅவனுண்டு. This concerns him and me exclusively (you need not meddle with it). 2. He and I are responsible for that.

உண்டில்லையெனல். Either affirming or denying.

**உண்டுபட**, *inf.* [*prop.* உண்டாக.] To come into existence, to become formed or produced by natural process evident to the senses, to happen, occur, தோன்ற. 2. To have origin, உண்டாக. 3. To grow, thrive, flourish, முளைக்க.

உண்டுபட்டவெல்லாமழியும். All that is created will perish, or be reduced to its primeval elements.

இதிலுப்புண்டுபட்டது. Salt is formed here.

அங்கேயொருகலகமுண்டுபட்டிருக்கிறது. An insurrection is sprung up there.

**உண்டுபடுத்த**, *inf.* [*prov. prop.* உண்டுபண்ண.] To make, create, &c.—as உண்டாக்க. 2. To fabricate, make a false story, எற்படுத்த.

வேதம்உண்டுபடுத்தியசித்திவியாதமுனி. Vedaviasar renowned as the compiler of the Vedas. (திருச்.)

**உண்டுபண்ண**, *inf.* To make, bring into existence.

**உண்டுபண்ணிவைக்க**, *inf.* To make, to establish, render permanent. 2. To rear plants, &c. 3. To establish one in life.

**உண்டென**, *inf.* To say it is. 2. [*vul. adverbially.*] Much, exceedingly, more, மிகவு.

உண்டெனத்தாவேண்டும். Give me more, give me liberally.

**உண்டுகம்**, *s.* The பெருவாகை tree, Mimosa, *L.*

**உண்டை**, *s.* A ball, bowl, a globe, a sphere, a bullet, any thing round or globular, commonly rather small, உருண்டை. 2. A bolus, a pill, magical pill, குளிகை. 3. A cake—as சிற்றுண்டி. 4. A weaver's woof, weft, உண்டைநூல். (probably a contraction of உருண்டை.) 5. (*p.*) A division of an army, படைவகுப்பு.

**உண்டைநூல்**, *s.* Woof, weft.

**உண்டையாய்ச்சுற்ற**, *inf.* To wind bobbins or balls.

உண்டையும்பாவும். The woof and warp.

**நூலுண்டை**, *s.* A ball or clew of thread, cotton, &c. 2. A weaver's bobbin or quill.

**உண்ணு—உண்ணாக்கு**, *s.* The uvula, அண்ணம்; [*ex* உள்.] (c.)

**உண்ணி**, *s.* The acarus or tick on sheep, dogs, cows, &c., ஓர்செந்து. 2. A kind of wart or mole on the body, பாலுண்ணி.

**சருகுண்ணி**, *s.* A tick frequenting woody places.

**தவிட்டுண்ணி**, *s.* Sheep or cow-tick.

**நாயுண்ணி**, *s.* A dog-louse.

**குடவுண்ணி**, *s.* A larger kind of tick.

**உண்மை**, *s.* Being, existence, entity, (opposed to இன்மை) உள்ளது. 2. Natural or intrinsic quality, essense, nature, இயல்பு. (*p.*) 3. Sincerity, honesty, probity, fidelity, uprightness, faithfulness, veracity, reality, fact, யதார்த்தம். 4. Certainty, ascertainment, மெய். 5. Oath, abjuration, சத்தியம். 6. (*p.*) Destiny or entailment of actions issuing in joys and sorrows, ஊழ். 7. Wisdom, right knowledge, அறிவு.

உண்மையானுண்டிவ்வுலகு. By the existence (of kindness, favor, politeness) the world is sustained. (குறள்.)

நீயதற்குண்மைபண்ணிக்கொடுப்பாயா? Will you swear to it?

உண்மைகண்டவன். One who has experienced the truth (of a religion).

**உண்மைத்தவறு**, *s.* Falsification, உண்மைவழு. 2. Failure in moral rectitude, சன்மார்க்கவழு. 3. A breach of trust, நாணயப்பழுது.

**உண்மைத்தாழ்ச்சி**, *s.* Unfaithfulness, breach of trust, உண்மைக்குறை.

**உண்மைத்தாற்பரியம்**, *s.* The real object, scope or design, யதார்த்தமானகருத்து.

**உண்மைத்துரோகம்—உண்மைப்பாதகம்**, *s.* A very flagrant breach of truth, flagitious crime or the guilt thus incurred, நம்பிக்கைத்துரோகம்.

**உண்மைப்பட**, *inf.* To become evident to the mind—as the deity to his worshippers, மெய்ப்பட. 2. To prove true—as religion, by means of the Shasters, arguments, miracles, &c., மெய்ப்பாக. 3. To appear as a certainty to the exclusion of all doubt, hesitation, &c., நிச்சயப்பட.

**உண்மைப்படுத்த**, *inf.* To prove or show to be true, மெய்ப்பிக்க.

**உண்மைப்பிடி**, *s.* Tenacious adherence to a religion from a discovery of its truth. 2. Consistent and steady perseverance in religion.

**உண்மைப்பேதகம்**, *s.* Prevarication. 2. Breach of trust, unfaithfulness.

**உண்மைப்பொருள்**, *s.* The Deity, the real Being, as eternal, immutable, &c., மெய்ப்பொருள். 2. The meaning of the Vedas, or of a system of religion, உள்ளபொருள்.

**உண்மையளவை**, *s.* [*in logic.*] Ascertainment of a thing from the attributes or qualities affirmed of it—as when we hear that a stone attracts iron, we know that it is a magnet, பிரத்தியட்சப்பிரமாணம்.

**உண்மையறிந்தவன்**, *s.* One who has discovered the reality, authenticity, mysteries, &c. of religion. 2. One who has experienced the truth, &c. of religion.

**உண்மையானதெய்வம்**, *s.* The true deity.

**உண்மையானவன்**, *s.* A man sincere in religion. 2. A man of probity.

**உண்மையுவமை**, [*in rhetoric.*] A figure in which the simile is rejected, the reality being ascertained, மெய்யுவமை.

***உதகம்**, *s.* Water, நீர். 2. Rain, மழை. 3. Small drops of rain, மழைத்துளி. Wils. p. 145. UDAKA. 4. The earth, பூமி. (*p.*)

**உதகக்கிரியை**, *s.* Presentation of water for the benefit of ancestors, நீர்க்கடன். Wils. p. 145. UDAKAKRYA.

**உஷ்ணோதகம்**, *s.* Hot water, வெந்நீர்.

**சீதோதகம்**, *s.* Cold water, தண்ணீர்.

**சுத்தோதகம்**, *s.* Clean or pure water, நன்னீர்.

**உபவாசம்பண்ண**, *inf.* To fast.

**உபவாசவிரதம்**, *s.* Abstinence from food, fast.

**உபவாசி**, *s.* A person performing a fast. Wils. p. 158. UPAVASIN.

**உபவசிக்க**, *inf.* To fast, நோற்க.

***உபவீதம்**, *s.* The thread or cord worn by Brahmans and others, over the left shoulder, பூணூல். Wils. p. 158. UPAVEEDA.

***உபவேசனம்**, *s.* Sitting, உளுக்காருகை. 2. Voiding by stool, மலங்கழிக்கை. Wils. p. 158. UPAVESANA.

**உபறியாவி**, *s.* The கோட்டம் plant, Cortus, *L.*

***உபாகமம்**, *s.* [*pref.* உப.] A class of books secondary to the Agamas, சார்பாகமம்.

***உபாகருமம்**, *s.* [*pref.* உப.] Ceremonies performed before reading the Vedas, a preparation, வேதமோதற்குமுன்செய்புஞ்சடங்கு. Wils. p. 160. UPAKARMMAN.

***உபாகிதை**, *s.* A meteor, a comet, விண்வீழுங்கொள்ளி. Wils. p. 161. UPAHITA.

***உபாக்கியானம்**, *s.* [*pref.* உப.] A tale, a story, a narrative, இதிகாசம். Wils. p. 160. UPAKHYANA.

**உபாக்கியானஞ்சொல்ல**, *inf.* To repeat a narrative. (உப. 407. top.)

***உபாங்கம்**, *s.* [*pref.* உப.] Necessary appendages—as cloths, ornaments, weapons, sectarial marks, &c., மார்க்கத்துக்குரியகுறி. 2. Component parts as the eyes, mouth, nose, &c., are of the face சர்பாவுறுப்பு. Wils. p. 160. UPANGA.

***உபாசனம்**, *s.* [*pref.* உப.] A seat, ஆசனம். 2. Archery, வில்வித்தை. Wils. p. 161. UPASANA.

***உபாசனை**, *s.* Worship, adoration, religious practice, ஆராதனை. Wils. p. 161. UPASANA.

**உபாசனைபண்ண**, *inf.* To worship, serve, adore. (சத. 56.)

**மந்திரோபாசனை**, *s.* The repetition of incantations in worship with the appropriate rites.

**உபாசி**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To worship, adore, perform religious rites, ஆராதிக்க.

***உபாதானம்**, *s.* [*pref.* உப.] Proximate cause, the material cause—as clay is to the earthen vessel; gold to the ring from which they are made, cause, origin, முதற்காரணம். 2. Presents to priests or religious mendicants of uncooked rice, &c., usually a handful, அரிசிப்பிச்சை. When cooked it is called, அன்னதானம். 3. Restraining the organs of sense, ஐம்புலனடக்குகை. Wils. p. 160. UPADANA.

***உபாதி**, *s.* Severe pain, torment, agony, distressing rage of the passions, வாதை. 2. Disease, ailment, வியாதி. 3. (*fig.*) Difficulty, obstruction, வருத்தம்.

**உபாதிப்பட**, *inf.* To suffer, to be distressed, afflicted.

***உபாதி**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To cause distress, to afflict, torment, torture, plague, உபத்திரவஞ்செய்ய.

***உபாத்தியாயன்**, *s.* A teacher of the Vedas, வேதங்கற்பிப்பவன். 2. A preceptor, a schoolmaster (commonly), உபாத்தி. 3. Family augur, புரோகிதன். Wils. p. 160. UPATHYAYA.

***உபாந்தியம்**, *s.* The corner of the eye, கடைக்கண். 2. The last but one, penultimate, ஈற்றயல். Wils. p. 160. UPANTYA.

***உபாயம்**, *s.* Means, contrivance, expedient, device, good or bad, skill in accomplishing an object, சூழ்ச்சி. 2. Stratagem, artifice, craft, shift, art, cunning, shuffling, intrigue, தந்திரம். 3. The means for bringing an enemy to terms, of which four are enumerated, viz.: 1. சாமம், conciliatory measures. 2. பேதம், sowing dissension. 3. தானம், gifts, presents. 4. தண்டம், chastisement, punishment (by war), அரசர்க்குரியவுபாயம். 4. [*vul.*] Smallness, சொற்பம். Wils. p. 160. UPAYA.

**உபாயக்காரன்—உபாயி**, *s.* An artful person, a schemer, contriver, தந்திரக்காரன்.

**உபாயஞ்சூழ**, *inf.* To contrive, scheme.

**உபாயஞ்சொல்ல**, *inf.* To give counsel.

**உபாயதந்திரம்**, *s.* Devices, craftiness, subtility.

**உபாயமானவிளையாட்டு**, *s.* Artful cheating in play.

**உபாயம்பண்ண**, *inf.* To adopt stratagems, to contrive, employ address, use means.

**உபாயவிலக்கு**, *s.* [*in rhetoric.*] Artfully endeavoring to prevent an act, by representing the evil which will happen to one's self—as when a wife dissuades her husband from leaving her by declaring that, in case he does, she must die, ஓரலங்காரம்.

**உபாயோபாயம்**, *s.* Various means or artifices. 2. Cunning for cunning in retaliation, &c.

**மோட்சம்பெறுமுபாயம்—மோட்சோபாயம்**, *s.* Means for obtaining eternal bliss.

**உபானம்—உபானவரி**, *s.* Ornamental line above the lower wall of a temple where the tower begins, கோபுரத்தினடிச்சித்திரவரை.

**உபுக்கு**, கிறது, உபுக்கினது, ம், உபுக்க, *v. n.* [*prop.* உப்புகிறது.] To swell, overflow, பெருக.

***உபேட்சை**, *s.* [*pref.* உப.] Neglect, indifference, connivance, abandonment, அலட்சியம். Wils. p. 161. UPEKSHA.

**உபேட்சிக்க**, *inf.* To neglect, disregard, connive at, அலட்சியம்பண்ண. 2. To abandon, leave, forsake, கைவிட.

***உபேந்திரன்**, *s.* [*pref.* உப.] The younger brother of Indra—an incarnation of Vishnu, விட்டுணு. Wils. p. 161. UPENDRA.

**உபோதம்**, *s.* The பேய்ப்பசளை plant, Portulaca, *L.*

**உப்பக்கம்**, *s.* [*pref.* உ.] The back, முதுகு. (*p.*)

**உப்பட்டி**, *s.* [*prov.*] A sheaf, அரிக்கட்டு.

**உப்பரவர்**, *s.* A tribe of tank or well-diggers, &c., குளமுதலியவகழ்வோர்.

**உப்பரிகை**, *s.* [*pref.* உ.] An upper room or terrace, மேனிலைமாடம்.

**உப்பிலி**, *s.* A kind of running plant, the இண்டு. 2. A plant, சர்க்கரைக்கொல்லிக்கொடி, Pentatropis microphylla, *Willd.*

**உப்பு**, *s.* Salt, any species of salt, acid or alkaline, லவணம். 2. Saltness, உவர்ப்பு. 3. The sea of salt-water—as distinguished from the other seas of Hindu cosmogony, the ocean, கடல். 4. Sweetness, deliciousness, இனிமை. (கு. 382. 8.) 5. A kind of play among females, மகளிர்விளையாட்டு. 6. Melody, music, அராகம். 7. A heap of sand used as a goal in the game of prison-bars, விளையாட்டுமணற்குவியல்.—*Note.* Five salts are spoken of as used by alchymists and சித்தர்கள்; viz.: 1. கறியுப்பு, culinary salt. 2. வெடியுப்பு, salt-petre. 3. இந்துப்பு, a fossil, medicinal salt. 4. ஓட்டுப்பு, salt supposed to be formed in the skull. 5. அமரியுப்பு, Urinary salt.

இந்தப்பேச்சிலேஉப்பில்லை. This speech is void of savor.

**உப்பங்கழி**, *s.* Salt-pan, உப்புக்கழி.

**உப்பளம்**, *s.* Salt-works, salt-pans, உப்புவிளைநிலம். 2. Brackish land, கழி.

**உப்பளங்கட்ட**, *inf.* To construct salt-pans.

**உப்பளம்பாய்ச்ச**, *inf.* To convey water into the salt-pans.

**உப்பளவர்—உப்பமைப்போர்**, *s.* Saltmanufacturers.

**உப்பிட—உப்புப்போட**, *inf.* To salt.

**உப்பில்லாப்பேச்சு**, *s.* Insipid discourse.

**உப்புக்கசனை—உப்பூறணி**, *s.* Being impregnated with salt, as land.

**உப்புக்கட்டி**, *s.* A granulation on a lump of salt.

**உப்புக்கண்டம்**, *s.* Salted meat, a piece of saltfish, flesh, &c.

உப்புக்கண்டம்பறிகொடுத்தபார்ப்பாத்திபோல.... Like a Brahmanee who has lost her salted mutton [*prov.*], used when something is lost which cannot be inquired after.

**உப்புக்கரித்தல்—உப்புக்கூர்த்தல்**, *v. noun.* Having a saline taste.

**உப்புக்கீரை**, *s.* A plant used for curry, ஓர்வகைக்கீரை. 2. A kind of curry made of that plant, ஓர்கறி.

**உப்புக்குத்தி**, *s.* A kind of bird, ஓர்பட்சி.

**உப்புக்கொள்ளுகிறது.** A play, taking a child on the back and crying, *Salt for sale*, ஓர்விளையாட்டு.

**உப்புச்செய்ய—உப்புவிளைவிக்க—உப்பமைக்க**, *inf.* To make salt, உப்புண்டாக்க.

**உப்புத்தண்ணீர்**, *s.* Salt-water, brackish water.

**உப்புத்தரை—உப்புத்தரவை**, *s.* Brackish soil.

**உப்புத்திராவகம்**, *s.* Muriatic acid, இலவணதிராவகம்.

**உப்புத்திரி**, *s.* A twist dipped in a preparation of salt, to serve as an injection for a child, மலங்கழிக்கவைத்ததிரி.

**உப்புப்பட**, *inf.* To form as salt in pans, &c., by natural process, உப்புண்டாக.

**உப்புப்பாத்தி**, *s.* The divisions or beds in salt-pans.

**உப்புப்பாத்திகட்ட**, *inf.* To make salt-pans.

**உப்புப்பார்க்க**, *inf.* To try the seasoning of curry, &c. by the taste, உப்புருசிபார்க்க.

**உப்புப்பால்**, *s.* The milk of the mother after child birth for three days.

**உப்புப்புல்லு**, *s.* Grass growing in salt soil.

**உப்புப்பூக்க—உப்புப்பொரிய**, *inf.* To begin to form—as salt; to form as the lamina, உப்புமலர. 2. To have a pale color on the skin, perhaps a concretion from perspiration, சரீரத்திலுப்புப்பட.

**உப்புப்புளிதள்ள**, *inf.* To abstain from salt and acid things—a regimen in medical prescriptions.

**உப்புப்புளிப்புப்பார்க்க**, *inf.* To examine the taste of curries, சுவைபிடிக்கப்பார்க்க. 2. (*fig.*) To examine, make inquiry beforehand. பரீட்சைபார்க்க. 3. (*fig.*) To try or examine a part of a work, &c. in order to form an estimate of the whole.

**உப்புவாணிகர்**, *s.* Salt dealers, the caste, உமணர்.

உப்புவாணிகனறிவானோகர்ப்பூரவிலை? Is a salt dealer acquainted with the price of camphor?

**உப்புறைப்பு**, *s.* Saltishness, flavoring of salt, உப்புக்கரிப்பு.

**காய்ச்சுப்பு** or **சவட்டுப்பு**, *s.* Alkali, salt produced from the earth impregnated with soda.

**வழலையுப்பு**, *s.* Soap.

**கறியுப்பு—கடலுப்பு**, *s.* Sea-salt.

**காருப்பு**, *s.* Salt produced from sesamum seed, எள்ளிலிலவணம்.

**வளையலுப்பு**, *s.* Fel vitri, glass-gall; a very white salt.

**கல்லுப்பு**, *s.* Salt in lumps.

**கந்தகவுப்பு**, *s.* Salt produced from sulphur.

**கறுத்தவுப்பு**, *s.* Black salt produced from the ashes of certain plants.

**மரவுப்பு**, *s.* Potash.

**உப்பு, கிறது, உப்பினது, ம், உப்ப**, *v. n.* To swell, bloat, puff up—as the belly by wind, indigestion, &c., வீங்க. 2. To rise—as leaven, &c., பொங்க. (*c.*)

**உப்பிப்போனமா**, *s.* Risen dough.

**உப்பினவயிறு**, *s.* A swollen belly.

**உப்புசம்**, *s.* Internal swelling preventing respiration and causing asthma, வயிற்றுவீக்கம்.

**உப்பை**, *s.* One of the four celebrated female authors, the daughter of ஆதி and பகவன்; the names of her sisters, are ஔவை, உறுவை and வள்ளி. Three brothers of the same family வள்ளுவர், கபிலர் and அதிகமான் are also celebrated for moral writings.

**உமணர்**, *s.* Saltmakers, saltdealers, the caste, உப்பமைப்போர். (*p.*)

**உமணத்தி**, *s.* A female of the உமணர் caste. (*p.*)

***உமம்**, *s.* A wharf, landing place, இறங்குதுறை. Wils. p. 162. UMA.

**உமரி—உமிரி**, *s.* A kind of delicate, brittle herb, saltish in taste, growing in sandy soils which are occasionally overflowed by the sea. It is used for pickles. Salicornia Indica, *L.* There are various kinds—as காட்டுமரி, சிற்றுமரி, நிலவுமரி, பேருமரி, and சிருமரி. 2. A snail, நத்தை.

**உமரிக்காசு**, *s.* Cowries, shells used as money.

**உமலகம்**, *s.* An orpiment, அரிதாரம்.

**உமலோத்திரம்**, *s.* See உபலோத்திரம்.

**உமல்**, *s.* [*prov.*] A bag made of palmyra leaves or rushes, ஓலைப்பை.

**உமற்கடம்**, *s.* The cusa grass, தருப்பை.

***உமாகடம்**, *s.* A cluster of flax. Wils. p. 162. UMAKADA.

***உமாதசி**, *s.* The hemp-plant, சணல்.

***உமாபட்சி**, *s.* A species of bird, ஓர்வகைப்பட்சி, Paradisea, *L.*

**உமி**, *s.* Husk, chaff, hull, bran, தானியங்களினுமி. (*c.*)

**உமிக்கரப்பான்**, *s.* A small kind of eruption especially in children.

**உமிக்கரி—உமிச்சாம்பல்**, *s.* Rice-husk, charcoal used for cleaning the teeth, polishing metals, &c.

**உமிக்காந்தல்**, *s.* A fire by rice-husks.

**உமிக்கூர்—உமிமூக்கு**, *s.* The apex of rice chaff broken off, or several of them.

**உமிச்சட்டி**, *s.* A vessel containing chaff in which fire is kept alive.

**உமிச்சிரங்கு**, *s.* A superficial troublesome kind of itch. See சமைச்சிரங்கு.

**உமித்தவிடு**, *s.* Bran mixed with fine or broken chaff given to cows, coarse bran.

**உமிநகம்**, *s.* Very thin nails.

**கூருமி**, *s.* See உமிக்கூர்.

**குற்றுமி**, *s.* Broken husk.

**உமி, கிறேன், ந்தேன், வேன், ய**, *v. n.* [*probably a contraction of* உமிழ்.] To spit. 2. *v. a.* [*prov.*] To suck, உறிஞ்ச. 3. To rinse the mouth, கொப்பளிக்க.

மாம்பழத்தையுமிய. To suck the juice of a mango.

கரும்பைச்சப்பியுமிய. To chew and suck sugar-cane.

அவனைப்பேயுமிந்துபோட்டது. A devil has sucked out the juices of his body, emaciating him.

முலையுமிந்துகுடிக்க. To suck the breast.

**உமி, க்கிறது, த்தது, க்கும், க்க**, *v. n.* To become chaff, பதர்த். 2. To become insipid, be spoiled as food, சாரமற. 3. To decay as flesh, dead bodies, the timbers of a house, &c., அழிய. This word is used chiefly in the past tense.

வாழைப்பழமுமித்துப்போயிற்று. The plantains are become tasteless.

வீட்டுவலிச்சலெல்லாமுக்கியுமித்துப்போயிற்று..... The house is totally decayed.

இந்தமீனுப்புப்போடாதிருந்தாலுமித்துநாறிப்போம். If you do not salt this fish, it will become tainted.

சோறுமித்துப்போயிற்று. The boiled rice is become insipid.

**உமிழ், கிறேன், ந்தேன், வேன், உமிழ**, *v. n.* To cast (a liquid) from the mouth, கொப்பளிக்க. 2. To spit, உமிய. 3. (*p.*) To vomit, retch, puke, eject from an over charged stomach, சத்திபெடுக்க. 4. To emit poison—as from the fangs of a snake; to discharge as arrows; to eject as sparks of fire, to emit as rays; to cast forth as the flower does odor; to yield honey as flowers, to emit sound, சொரிய.

நஞ்சமிழ்வேலினன். He whose dart emits poison.

பானையுமிழ்நீர். A secretion which the elephant casts.

வெங்கணையுமிழ்வில். The bow that discharges the fiery arrows.

தழலுமிழ்கண்பானை. Elephants with eyes of fire. (கைடதம்.)

**உமிழ்நீர்**, *s.* [*impr.* உமிநீர்.] Spittle, saliva, துப்பல்.

**உமிழ்நீர்குடிக்க—உமிழ்நீரூற**, *inf.* To have the mouth water for things, to covet after.

**உமிழ்வு**, *v. noun.* Casting from the mouth, spitting, துப்புகை. 2. *s.* (*fig.*) Any thing cast from the mouth—as spittle, secretion, vomit, &c., உமிழ்நீர்.

**உமை**, *s.* Parvati, wife of Siva. பார்ப்பதி. Wils. p. 162. UMA. (*p.*)

**உமாகுரு**, *s.* The Himalaya mountains. Wils. p. 162. UMAGURU.

**உமாசகிதன்**, *s.* Siva—as united with உமை who forms his left side, or according to the mystical philosophy, by means of whom he carries on his operations, சிவன்; [*ex* சகிதம், cohabiting.]

**உமாசுதன்—உமைமகன்**, *s.* Son of Parvati, as Ganesa, Skanda, or Veerapattra, உமையின்புதல்வன். Wils. p. 162. UMASUTA.

**உமாபதி—உமைகேள்வன்**, *s.* Siva, சிவன். Wils. p. 162. UMAPATI.

**உமையாள்—உமையவள்**, *s.* Parvati, பார்ப்பதி. (*p.*) 2. Soap, சவுக்காரம். 3. A peacock's feather as resembling Parvati in color, மயிலிறகு. (*M. Dic.*)

**உம்.** A connective particle variously used, இடைச்சொல். 1. எதிர்மறையும்மை, the use of உம் with an affirmative, or negative expressing probability, possibility, &c., and implying the possibility, &c., of the contrary—as, சாத்தன்வருதற்குமுரியன், Sattan may perhaps come; அவன்வரவுங்கூடும், It is possible that he may come. 2. சிறப்பும்மை, the உம் of speciality, including உயர்வுசிறப்பும்மை, or superiority and இழிவுசிறப்பும்மை, or inferiority—as, ஞானிகளுமறியார்கள்சித்திரநதிமூலம், Even the sages are unacquainted with the source of the சித்திரம் river; இவ்வூர்ப்பூனையும்புலாற்றின்னாது, Even the cats of this place will not eat flesh (so sacred is it, so vile is the practice); பார்ப்பானுங்கள்ளுண்டான், Even a Brahman has been drinking toddy; இவனைநாயுந்தேடாது, Even a dog will not regard him. 3. ஐயவும்மை, the உம் in doubt, uncertainty, indecision, equivocal forms, probability, possibility—as, அவர்பத்தாயினுந்தருவார்பதினைந்தாயினுந்தருவார், Perhaps he may give ten or he may give fifteen; மழைபெய்தாலும்பெய்யும், It may perhaps rain; பத்தானுமெட்டானுங்கொடு, Give ten, or eight, ten would be preferred, but eight may do; வரினும்வருவான், It is probable that he may come. The உம் is often suppressed. 4. எச்சவும்மை, இறந்ததுதழீஇயவெச்சவும்மை, எதிரதுதழீஇயவெச்சவும்மை, the use of உம் implying another person, thing, or event, understood, and meaning *likewise, too, even*—as, அவனும்வந்தான், He also is come (implying that another is come or expected); காம்பாடவும்வேண்டும், We must *sing* also (as well as dance, &c.); கேட்டும்படிக்கவேண்டும், By inquiry also we must learn (as well as by other means). 5. முற்றும்மை, indicating the whole of a number or series, universality, totality—as, ஒருவருக்குமையமில்லை, None can doubt; எங்குமில்லை, no where; இருகண்ணுஞ்சிவந்தன, both eyes reddened; எவ்விடமும், every where; இரண்டையுங்கொண்டுவா, Bring them both; எல்லாரும், எவரும், ஆரும்வந்தார், all, whoever, &c. came; மிகுந்தநாலுபணத்தையுந்தா, Give me the remaining four fanams; மூவரும், all the three persons. 6. எண்ணும்மை, a numeral connective, corresponding with, and commonly repeated with each word of the series; நீயுமவனும்வந்தீர்கள், you and he came. The particle is sometimes joined to the last only—as, சாத்தன், கொற்றன், பூதனும் வந்தார்கள், Sattan, Kottan and Poodan came. Sometimes it is wholly omitted, and a pronoun including the series used instead—as, சாத்தன்கொற்றன்இவர்கள்வந்தார்கள். Sometimes the last noun in the series is used in the plural—as, சாத்தகொற்றர்வந்தார்கள். 7. தெரிநிலையும்மை, the உம் of ascertainment, clear perception, or decision, used of three or more things concerning which doubt has been entertained, but which is now cleared up—as, ஆணுமன்றுபெண்ணுமன்று, It is neither male nor female (but an hermaphrodite); அவருண்பதுசோறுமல்ல, பணிகாரமுமல்ல, சாகமூலபலாதிகள், His food is neither rice nor cakes, but leaves, roots and fruits, &c. 8. ஆக்கவும்மை, உம் expressive of a change of state—as, பாலுமாயிற்று, This milk became medicine also; வலியனுமாயினன், He has become even a strong man. The above eight are given in நன்னூல். 9. உம் joined to an infinitive implies விரைவு, the immediate occurrence of the event—as, துரைகட்டளையிடவுங்காரியஞ்செய்துமுடிந்தது. As soon as the magistrate gave the order, the thing was done; அவர்சொல்லவுமுலகங்களுண்டாம், As soon as he speaks worlds appear. The உம் is often omitted, but then it is less expressive—as, நானிதைச்செய்யெனச்செய்கிறான், I say this and he does it. 10. உம் added to a verbal noun in poetry, sometimes gives it a gerund-like succession of the event—as, கண்டுமிதுசொல்வான், Seeing him he spoke thus; வருதலுந்தழுவிக்கொண்டான், As soon as he came he embraced. 11. உம் is associated to the social ablative with the same meaning—as, கடுங்கணைதொடுத்தலோடும், As soon as the swift arrows were shot. 12. உம் added to the infinitive serves for optative, especially in epistolary usage but not in good style—as, தாங்கள்மறுமொழியனுப்பவும், May you please to send an answer; இப்படிச்செய்யவும், May you do so, I wish you to do so. 13. உம் added to the following forms of a verb, செய்து, செய்யின், செய்தால், has the force of though, although—as, அவனறிந்தும்வரவில்லை. Though he knew, he did not come; சொல்லினும் or சொன்னாலும்அவன்கேளான், Though you may tell him he will not listen. 14. உம் added to இல் or இன் forms of the fifth case gives the force of the comparative degree—as, கந்தனினும்வலியனே, He is even stronger than Skanda. 15. A token of reproof, menace, anger, &c., also of attention, assent, doubt, non-compliance, &c., (see ஊம்)—as, உம்மெனத்தெழித்தாப்ப, He reproved his rashness by uttering the menacing sound உம் (ஹுங்காரம்); கதைசொல்லுகிறேன்உம்கொட்டிக்கேள், I am going to tell you a story, show that you listen by saying உம்; உம்மெனுமாசைபெத்தட்டும், The guilt of Brahmanicide manifested in a phantom threatened by saying உம் and striking on its breast (திருவிளையாடல்). 16. A termination of the imperative plural, முன்னிலைப்பன்மைவிகுதி—as, நீவிர்சொல்லும், say ye. It is often used honorifically in imperative singular—as, கடவுளேகிருபைசெய்யும், God be merciful. 17. A termination of verbs third pers. pres. or fut. tense sing. number, also of neut. plurals—as அவன்செய்யும், He does or will do it; சிங்கங்கள்முழங்கும், The lions roar, or will roar, செய்யுமென்முற்றுவிகுதி. 18. A modification of the pronoun நீ when it is declined in the different cases—as, உம்மை, உம்மால், &c. 19. The termination of the future relative participle, எதிர்காலப்பெயரெச்சவிகுதி—as, உலகாளுமரசர், Kings who govern the world.

**உம்பர்,** *adj.* On, upon, above, மேல். 2. *s.* The sky, the visible heaven, ஆகாயம். 3. Height, elevation, உயர்ச்சி. 4. [*ex* உ, that.] That place (intermediate), that region, உவ்விடம். 5. The celestials, the inferior gods, வானோர். 6. (*fig.*) Brahmans, the superior caste, பார்ப்பார். (*p.*)

உம்பரான்முனிவரால். By celestials and sages.

**உம்பரான்,** *s.* The divine cow, காமதேனு; [*ex* ஆன், cow.] 2. A celestial being or personage, உயர்ந்தோன்.

**உம்பருலகு,** *s.* The heavenly world.

**உம்பல்,** *s.* An elephant, யானை. 2. The male of beasts in general, விலங்கினாண். 3. A ram, ஆட்டுக்கடா. 4. A male elephant, ஆண்யானை. 5. A bull, எருது. 6. A male buffalo, எருமைக்கடா. 7. Mounting on a beast or vehicle, getting up, rising, எழுச்சி. 8. Power, strength, வலிமை. 9. Tribe, family, கோத்திரம். 10. Usage, custom, முறைமை. (*p.*)

**உம்பளம்,** *s.* A present of land, &c. by a king, இராசாவினாற்கிடைத்தவெகுமதி.

**உம்பி,** *s.* Your younger brother, தம்பி (a contraction of உன்றம்பி). (*p.*)

**உம்பிளிக்கை,** *s.* Land granted rent free, in consideration of the performance of certain services, மானியம்.

**உம்பிளிக்கைக்கிராமம்,** *s.* A village granted on similar conditions.

**உம்பிளிக்கைவிடுதல்,** *v. noun.* Giving one a field or village to enjoy it freely.

**உம்மாண்டி,** *s.* [*prov. vul.*] A bugbear, வெருட்டுஞ்சொல்.

**உம்மை,** *s.* The last birth, சென்றபிறப்பு. 2. The coming birth, வருபிறப்பு. 3. The name of the particle உம். (*p.*)

**உயக்கு, கிறேன், உயக்கினேன், வேன், உயக்க,** *v. a.* To afflict, வருத்த. (*p.*)

**உயக்குநரகு,** *s.* A tormenting hell. (சிந்தியார். 509.)

**உயங்கு, கிறேன், உயங்கினேன், வேன், உயங்க,** *v. n.* To suffer, be in distress, be pained whether in body or mind, வருந்த. (சூ. 21.) (*p.*)

**உயக்கம்,** *v. noun.* Suffering, distress, pain, grief, வருத்தம். (*p.*)

**உயத்தி,** *s.* A kind of arsenic in its natural state, வெள்ளைப்பாஷாணம்.

**உயரம்,** *s.* Height, elevation, eminence, altitude, loftiness, sublimity, உயர்ச்சி. 2. [*in astronomy.*] Altitude, உச்சம். 3. Increase, மிகுதி.

**உயரங்காட்ட,** *inf.* To stand up—as a little child in its first attempts.

**உயரி,** *s.* That which is tall as a palmyra, cocoanut or other palm tree, or a tall person.

**உயர்,** *s.* A twining plant—as குன்றி, Abrus precatorius, *L.* (*Rott.*)

**உயர்—உயரு, கிறேன், உயர்ந்தேன், வேன், உயர,** *v. n.* To rise, become high, tall, elevated, to grow, or rise high, வளர. 2. To rise as water; to ascend as a paper kite; to rise towards the meridian as a heavenly body, மேலெழ. 3. To become proud, vain, self-conceited, consequential, to be elated, இறுமாக்க. 4. To be excellent, exalted, eminent, dignified, மேன்மையுற. In neuter forms it is found chiefly in the past tense. 5. To be raised or lifted up, உன்னதப்பட.

உயரப்பறந்தாலுமூர்க்குருவிபருந்தாமோ? Though it soars high, will the sparrow become a hawk?

ஓதற்கொழிலுரித்துயர்மூவருக்கும். The study of the vedas belongs to the three superior castes.

வரம்புயரநீருயருநீருயரநெல்லுயருநெல்லுயரக்குடியுயருங்குடியுயரமுடியுயரும். As the banks are raised, the water will rise, as the water increases, so will the rice, rice will increase population, and as the population increases, so will the dignity of the crown.

உயரநினைப்பவன்றாழ்வான். He who is intent to rise will fall.

தானியமுயர்ந்துவிற்கிறது. Grain sells cheap.

மாற்றுயர்ந்தபொன். Gold of a superior quality, high standard.

**உயரஇருந்துவிழ,** *inf.* To fall down from above.

**உயரக்கட்ட,** *inf.* To build a structure higher.

உயரக்கிளம்ப, *inf.* To rise—as a bird from the ground, &c.

உயரப்பார்க்க, *inf.* To look upward. 2. To seek to rise, aspire, seek dignity, &c.

உயரப்போக, *inf.* To go up.

உயரவெறிய, *inf.* To fling up.

உயரவேற, *inf.* To ascend, rise, to mount up.

உயர், *rel. part.* High, elevated, eminent.

உயரில்லறம், *s.* High domestic virtue.

உயர்குலம்—உயர்ந்தகுலம், *s.* A high caste.

உயர்குலத்தோர், *s.* Persons of high caste or family.

உயர்திணை, *s.* [*in grammar.*] The superior or rational class. See திணை.

உயர்தினம், *s.* A high day, a festival, பெருநாள்.

உயர்நிலம், *s.* High land, a hillock, a hill, மேடு. 2. The world of the inferior gods, தேவலோகம். 3. An upper room or terrace, உப்பரிகை.

உயர்நிலத்தோர், *s.* The gods, the celestials, வானோர்.

உயர்நிலை, *s.* Swerga, சுவர்க்கலோகம். 2. An upper room, மேன்மாடம்.

உயர்ந்தசரக்கு, *s.* Valuable commodities, choice articles. 2. [*in sarcasm.*] A great person—as, அந்தவுயர்ந்தசரக்குவாராது, That precious piece of goods (great personage) will not deign to come hither.

உயர்ந்ததமிழ், *s.* High poetic Tamil, above the comprehension of the vulgar.

உயர்ந்தகுளச்சி, *s.* A kind of prepared arsenic, பலவைப்புற்றுப்பாஷாணம்.

உயர்ந்தபாறை, *s.* A high rock.

உயர்ந்தமனுஷன், *s.* A tall man. 2. A man of high station.

உயர்ந்தவயசு, *s.* A great age, advanced age.

உயர்ந்தோர், *s.* The great, the learned, the renowned, the exalted in piety, virtue, austerities, &c., sages, ascetics, சான்றோர். 2. High caste persons, உயர்குலத்தோர். 3. The celestials, வானோர். 4. Brahmans, பார்ப்பார்.

உயர்மலை, *s.* A high mountain.

உயர்ச்சி, *s.* [*impr.* உயர்த்தி.] Height, elevation, loftiness, altitude, eminence, sublimity, உயர்வு. 2. Excellency, superiority, dignity, moral worth, exaltation, மேன்மை.

உயர்த்திதாழ்த்திபார்த்தல். Regarding the honors of one's caste, rank, property, &c., fastidiously.

உயர்ச்சிகாட்ட, *inf.* To show one's superiority. 2. To exhibit one's real dignity.

உயர்பு—உயர்வு, *s.* Height, loftiness, elevation, உயர்ச்சி. 2. Dignity, greatness, excellence, மேன்மை. 3. Increase, விர்த்தி.

உயர்விக்க, *inf.* To elevate the character of any one, to improve the disposition, increase learning, moral worth, to exalt, dignify, promote, உயர்த்த. 2. To raise the price, increase expenditure, numbers, &c., அதிகப்படுத்த. 3. To raise, lift up, elevate, எழுப்பிக்க.

உயர்த்து, கிறேன், உயர்த்தினேன், வேன், உயர்த்த, *v. a.* To lift up, elevate, raise higher—as a wall in building, a heap, &c., உயரச்செய்ய. 2. To raise (the price), increase (expenditure), அதிகப்படுத்த. 3. To promote to higher office, to make great, to exalt, ennoble, dignify, aggrandize, மேலாக்க. 4. To extol, magnify, praise, கனப்படுத்த. 5. To receive one with honors, show respect, treat in a dignified manner, உபசரிக்க. 6. To raise the voice in singing, speaking, &c., to lift up the heart, affections, thoughts, &c., எழுப்ப. 7. To raise an arm, a leg, a weapon, &c., to raise the head above water, raise the head when in a lying posture, மேலெடுக்க. 8. To improve one's character, improve one's dignity, moral worth, raise one's self to a higher degree in preparation for a future state, ஒழுக்கத்திலுயர்த்த. 9. To assume, elevate one's self, make much of one's powers, பெருமைப்படுத்த.—*Note.* Instances of உயர்த்தல், in the past are found in verse, but in the present and future it seems to be seldom or never found.

நாகந்தன்படத்தையுயர்த்திக்காட்டும். The cobra raises its hood and exhibits it.

சேவலையுயரியதேவநாயகன். The leader of the gods (skanda) who has exalted the cock as his banner.

கலனுயர்த்தவன்னவலஞ்சேல். The lofty carp banner which has exalted victory to view. (நைடதம்.)

உயர்த்திப்பேச, *inf.* To dignify, speak of one with high respect.

உயர்த்தியாய்க்கேட்க, *inf.* To bid high in an auction, &c.

உயல், *v. noun.* [*a poetic contraction of* உய்யல்.] Living.

உயவல்—உயவு, *s.* [*sometimes* உய.] Distress, affliction, pain, suffering, வருத்தம். (*p.*)

உயவர், *s.* Persons in distress, வருத்தினர். (*p.*)

உயவை, *s.* A species of wild creeper, the காக்கணங்கொடி, Clitoria ternatea, *L.* 2. A cloud, மேகம். (பிங்கலந்தை.)

உயா, *s.* Distress, suffering, &c.—as உயவு.

உயிர், *s.* Life, soul, vitality, animal or vegetable life, சீவன். 2. Wind, காற்று. 3. A vowel, உயிரெழுத்து. 4. A living being, human, brute, or vegetable; an animal, ஓரறிவுயிர்முதலியசீவராசி.

உயிருமுடலும்போல. As closely united as the soul and body.

உயிர்போய்விட்டது. Life is gone.

மன்னுயிர்க்கிரங்குகிறது. To be compassionate to other living creatures.

உயிரடங்க, *inf.* To be in a state of insensibility, be in a swoon, to be suspended as the vital powers.

உயிரடைய, *inf.* To revive, to be reanimated.

உயிரளபு—உயிரளபெடை, *s.* The lengthening of a vowel in verse. See அளபெடை.

உயிரறுதியும். Till the very end of life.

உயிருதவி, *s.* Aid in a fatal juncture. 2. Aid by sacrificing life for another.

உயிரெடுக்க, *inf.* To take away life.

உயிரெழுத்து, *s.* A vowel, ஆவி.

உயிரொடுங்க, *inf.* To be reduced as the powers before death, உயிரடக்க. 2. To die, சாவ.

உயிரொளிக்க, *inf.* [*prov.*] To feign great weakness, sickness, inability, &c., in order to gain or effect an object, உயிர்மறைக்க.

உயிரொளித்தகள்ளன், *s.* A cringing deceiver who though rich and strong makes pretensions to the contrary.

உயிரோம்ப, *inf.* To support life, maintain, உயிர்காக்க.

உயிர்கலக்க, *inf.* To revive, to be diffused—as life through the body in one that has been swooning, &c. 2. To reunite as the soul with the body in one restored to life. 3. (*fig.*) To be relieved from anxiety, &c.

உயிர்குடிக்க, *inf.* To devour life, kill (a war term), also used of demons and ferocious deities, கொல்ல.

உயிர்கொள்ள, *inf.* To take the life of an antagonist—as in battle, &c., உயிர்வாங்க.

உயிர்க்கட்டை, *s.* The body, உடம்பு.

உயிர்க்கணம், *s.* One of the four auspicious feet with which to begin a poem consisting of three நேர்—as தேமாங், காய். 2. Vowels, உயிரெழுத்து. See கணம்.

உயிர்க்கருணேசம், *s.* The power of affection which is friendly to life, இச்சாசத்தி.

உயிர்தருமருந்து, *s.* A restorative, a cordial, an elixir, மிருதசஞ்சீவினி.

உயிர்த்தறுவாய், *s.* A great emergency, a critical juncture, extreme danger. See பிராணத்தறுவாய்.

உயிர்த்தானம், *s.* The seat of life, any vital part of the body, உயிர்நிலை.

உயிர்த்துணை, *s.* A friend in extremity, ஆபத்திற்சகாயஞ்செய்பவன். 2. A friend dear as life, பிராணசிநேகன். 3. (*p.*) A wife, மனைவி. 4. A husband, கணவன். 5. God, கடவுள்.

உயிர்த்துணைவன், *s.* A very dear friend, உயிரையொத்தசிநேகன். 2. (*p.*) A husband, கணவன்.

உயிர்த்துணைவி, *s.* A wife, மனைவி. 2. A lady's choice female friend, உயிர்த்தோழி. 3. Sarasvati the consort of Bramah, சரச்வதி. (*p.*)

உயிர்த்தோழமை, *s.* Intimate friendship.

உயிர்த்தோழன், *s.* A very trusty or bosom friend, a friend dear as life, பிராணசிநேகன்.

உயிர்த்தோழி, *s.* A lady's choice female companion, உயிர்ப்பாங்கி.

உயிர்நிலை—உயிர்நிலையகம், s. The body as the seat of life, or station of the soul, உடல். 2. The vital parts essential to life, உயிர்த்தானம்.

உயிர்பிழைக்க—உயிருய்ய, inf. To survive a calamity, escape from, or live through a time of peril, தப்பிப்பிழைக்க. 2. To live, maintain life, subsist, உயிர் வாழ.

உயிர்போக, inf. To expire, to die.

உயிர்ப்பழி, s. The guilt of murder, உயிர்க்கொலை. 2. Vengeance, divine or human, persuing the murderer to death, regarded as the ghost of the murdered person, பிரமகத்தி.

உயிர்ப்பிராணி, s. [vul.] A living creature, a brute, an inferior animal, ஜீவபிராணி.

உயிர்மாய்க்க, inf. To destroy one's self, commit suicide, தன்னுயிரைப்போக்க. 2. To murder, kill, கொலைசெய்ய.

உயிர்மெய்—உயிர்மெய்யெழுத்து, s. An animated consonant, a consonant combined with a vowel, நெடுத்து; (lit.) a living body.

உயிர்வாங்க, inf. To take away life, உயிரெடுக்க.

உயிர்வாழ்க்கை, s. The enjoyment of life, ஜீவிக்கை.

உயிர்வாழ, inf. To live—as men or brutes, ஜீவனோடிருக்க. 2. To enjoy life, be happy, prosperous, சுகமாகவாழ.

உயிர்வேதனை, s. Causes of pain or distress, of which twelve are given, viz.: 1. அனல், heat or fire. 2. சீதம், cold. 3. அசனி, thunder-bolts. 4. புனல், water. 5. வாதம், wind. 6. ஆயுதம், weapons. 7. நஞ்சு, poisons. 8. மருந்து, medicines. 9. பசி, hunger. 10. தாகம், thirst. 11. பிணி, disease. 12. முனிவுறுமை, malice. (p.)

உள்ளுயிர், s. The life within; i. e. God, கடவுள். (p.)

மன்னுயிர்க்கிரங்க, inf. To be kind to living creatures. (p.)

உயிர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To live, revive, come to life—as one dead; to be restored to life or feeling—as a benumbed or injured limb, to be reanimated, &c., உயிரடைய. 2. (p.) To breathe, respire, மூச்செறிய. 3. To blow or move—as a soft wind; to become diffused—as odors, வீச. 4. v. a. To issue, emit fragrance, &c., exhale, eject, discharge, set at liberty, விடுக்க. 5. To give birth to, yield, produce, ஈன. 6. To smell, மோக்க.

அவளக்குழவுயிர்த்தாள். She has borne a child.

மருவுயிர்க்குந்துளவு. The fragrant Tulasi (Ocimum sanctum), which emits odor. (பார.)

உயிர்த்தெழ, inf. To rise to life, to be restored to life, be reanimated, உயிரடைந்தெழ.

உயிர்ப்பன, s. Living creatures, சுவாசமுடையன.

உயிர்ப்பிக்க, inf. To cause to live, raise, or restore to life, to revive, reanimate, resuscitate, பிழைப்பிக்க.

உயிர்ப்பு, v. noun. Reanimation, revival, உயிர்க்கை. 2. s. Breath, respiration, சுவாசம். 3. Wind, air, காற்று. 4. (fig.) Good smell, சுகந்தம். (p.)

நெட்டுயிர்ப்பெறிய—நெட்டுயிர்ப்புவிடக், inf. To fetch a long breath, to sigh.

உயிறு, s. The இலாமச்சை grass, Andropogon muricatum. (M. Dic.)

உய், கிறேன், ந்தேன், வேன், ய, v. n. To live as man, beast, or vegetables; to subsist, survive, revive or flourish—as trees, plants, &c., ஜீவிக்க. 2. (p.) To obtain benefits, privileges, &c.; to be blessed, to be happy, to prosper, flourish, to be relieved from distress, oppression, suffering, &c., உயிர்வாழ. 3. To obtain heavenly bliss, to gain exemption from transmigration, ஈடேற. 4. To escape from dangers, wild beasts, &c., to flee from, தப்ப.

உய்கதியால்—உய்தடி, s. A live hedge-stick.

உய்தவம், s. Austerities leading to bliss.

உய்பயிர், s. Thriving crops, trees, &c. 2. (fig.) A person in thriving circumstances.

உய்வனவு, v. noun. [prov.] Flourishing or reviving as a tree, செழிப்பு. 2. Living, subsistence, maintenance, ஜீவனம். 3. s. Means of attaining eternal bliss, ஈடேற்றம். This word properly must be உய்வு.

உய்விக்க, inf. To save alive, cause to live, prosper, flourish, &c. This is the causative of உய்.

உய்வு—உய்தி, v. noun. Enjoyment of life, prosperity, felicity, உயிர்வாழ்வு. 2. Bliss, salvation, ஈடேற்றம். 3. Living, life as spoken auspiciously, உயிர்க்கை.

ஒருவன்செய்நன்றிகொன்றார்க்குய்தியில்லெனவகும்பமடின்றே. The divine laws declare that to the ungrateful there is no happiness here or hereafter. (புறநானூறு.)

உய், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To put in motion, cause to go, discharge, let go, let fly, send, emit, cast, throw, செலுத்த. 2. To ride, drive a carriage, &c., வாகனமூர. 3. To effect, accomplish, bring about, collect, gather together, காரியத்தைமுடிக்க. 4. To carry on, conduct literally, or morally, lead an army, &c., to manage, guide, direct, influence, operate, நடத்த. 5. To place, put in, shoot in, throw or cast in, plunge into, அமிழ்த்த. 6. To cause to arrive at, சேர்க்க. 7. To place, வைக்க. 8. To enjoy, experience, அனுபவிக்க. (p.) (குறள்.)

உய்த்துச்சொரிநினும்போகாதம. That which is apportioned by fate, though rejected, will not leave. (p.) (குறள்.)

காதலகாதலறியாமையுய்க்கிற்பின். If (a king) enjoy the objects of his desire, (his foes) being unacquainted with those desires—(குறள்.)

உய்த்துணர, inf. To discern, to distinguish, exercise thought, &c., ஆராய்ந்தறிய.

உய்த்துணரவைப்பு, s. The use of such terms, descriptions, or definitions in a written work, as may require the exercise of thought, reference to other parts, &c., in order to comprehend them, ஆராய்ந்தறியவைக்கை—one of the thirty-two உத்தி in நன்னூல்.

உய்த்தலில்பொருண்மை, s. Poetry composed in such terms only as are necessary to express the author's meaning, கருதியபொருள்தோன்றப்பாடப்படுவது.

உய்ப்பு, v. noun. Discharging, emission, accomplishment, &c., including all the meanings of the verb, உய்க்கை.

உய்மணல், s. Black sand, கருமணல்.

உய்யக்கொண்டான், s. [as எருமைமுல்லை.] A plant, Jasminum, L. 2. [as கொய்யா.] A tree, Psidium pyriferum, L.

உய்யானம்—உய்யானவனம், s. A flower-garden, a flower-grove, பூஞ்சோட்டம். 2. A garden, சோலை. 3. A royal garden, a royal forest, ராஜவனம். (p.)

*உரகம்—உரங்கம்—உரங்கமம், s. A snake, serpent, பாம்பு. Wils. p. 162. URAGA and URANGA, also URANGAMA. (p.)

உரகபந்தம்—உரகபந்தனம், s. One of the curious kinds of poems called மிறைக்கவி. See நாகபந்தம்.

உரகமல்லி, s. The நாகமல்லி plant, Justicia nasuta, L.

உரகர், s. [as நாகர்.] Snakes, serpents. 2. Samanar, or Jainas, a sect of Hindus, சமணர். (p.)

உரகன், s. The chief of the நாகர் serpents said to have a thousand heads and to be the couch of Vishnu; the earth is represented as supported on one of its heads, ஆதிசேஷன். (p.)

உரகாரி, s. Garuda, கருடன். Wils. p. 162. URAGARE.

உரகாதிபன்—உரகேந்திரன், s. The chief of the serpents, ஆதிசேஷன்.

உரசு, கிறேன், உரசினேன், வேன், உரச, v. a. To rub, உரிஞ்ச.

உரண்டம், s. A crow, காக்கை. (சது.) (p.)

உரபடி—உரபிடி, s. [prov. vul.] Coarseness, roughness, strength, உரப்பு.

உரபிடியானமனிதன், s. A firm-built man.

உரப்பு, கிறேன், உரப்பினேன், வேன், உரப்ப, v. n. and a. To whoop, vociferate inarticulately or otherwise—as in driving cattle, scaring away birds, beasts, or human beings, to menace or intimidate by shouts, to bluster, shout, call, அதட்ட. 2. To urge forward beasts of burden with shouts, துரத்த. 3. (p.) To pronounce with aspiration, as the second letter in each of the five series of Sanscrit gutterals, உரத்தொலிக்க.

ஆனையைபுரப்பிவிடு. Frighten away, or drive the elephants along.

ஒருவரேயெதிரினிங்ஙனுரப்பிவேதுரப்பர். If but one should oppose them, he may rout them all merely by a menacing shout.

உரப்பிப்பார்க்க, inf. To use menace, boisterousness, &c., in order to try the courage of any one to beat him down, &c.

உரப்பியடிக்க, inf. To attempt, overcome by boisterous talk, overcome in whole, or in part.

உரப்பு, v. noun. Bluster, shout, vociferation, whoop, call, அதட்டுகை.

உரம், s. Strength, firmness, hardness, compactness, coarseness, aspiration, force of voice, expression, meaning, &c., வலி. 2. Energy, spirit, exertion, determination, resolution, fortitude, firmness of mind, ஊக்கம். 3. (p.) The breast, chest, மார்பு. 4. Wisdom, knowledge, spiritual knowledge, ஞானம். 5. Velocity, force, missile or projectile force, வேகம். 6. The solid part of timber, வயிரம். 7. Hardness, induration, obduracy, திண்மை. 8. A surrounding wall, மதில்.

கடலுரமாயிருக்கிறது. The sea is high, rough.

காற்றுரமாயிருக்கிறது. The wind is high, boisterous.

உரகடல்—உரசமுத்திரம், s. A boisterous sea, a sea generally rough.

உரங்குத்த, inf. [prov.] To pound and harden the earth around trees newly set, பலமுறச்செய்ய.

உரங்கொள்ள, inf. To thrive, grow strong—as the wind; to get strength, become boisterous—as the sea, பலங்கொள்ள. 2. To exert strength, &c., வலிபுண்டாக. 3. To be hardened, indurated, obdurate, கடினமுற.

உரங்கொண்டெறிந்து. Throwing with force.

காய்ச்சலுரங்கொண்டுகாய்கின்றது. The fever rages and burns.

உரஞ்செய்ய, inf. To exert influence, take effect, produce, effect—as arguments, பலஞ்செய்ய. 2. To grow strong, வலியுற. 3. To thrive—as vegetables, &c., பலப்பட.

அவனெடுத்தகாரியங்களிலொன்றுமுரஞ்செய்யவில்லை. He has been successful in nothing that he has undertaken.

உரஞ்சொல்ல, inf. To animate, to encourage.

உரமண், s. Hard, ungenial soil.

உரமாய்நிற்க, inf. To stand fast, immovable.

உரமாய்ப்பெய்கிறமழை, s. A heavy rain.

உரமானசத்தம், s. A loud sound.

உரமெடுக்க, inf. To remove a particular ailment incident to infants.

உரம்போட, inf. To manure land, எருப்போட. 2. To fasten, make firm, உரப்பிக்க.

உரம்விழ, inf. To get a particular ailment by rolling on the ground—applied only to a child not twelve months old.

உராதரம், s. A woman's breast, முலை.

உரேந்திரன், s. A hero, a soldier, வீரன்.

உரோருகம், s. A woman's breast, முலை; [ex உரகம், birth, origin.]

கடலுரம், s. Roughness of the sea.

உரக்க, inf. To become intense, grow strong, firm, hard, &c., to increase in strength, intenseness, loudness, &c., to rage, increase in violence, vehemence, heat, malignity, &c., பலமடைய.

உரக்கப்படி. Read out.

உரக்கப்பாடு. Sing loud; sing louder.

காய்ச்சலுரக்கக்காய்கிறது. The fever rages intensely.

உரக்கக்கூப்பிட, inf. To cry aloud.

உரக்கப்பேச, inf. To speak loud.

உரத்தகடல், s. A boisterous sea.

உரத்தகடிதாசி, s. Thick, coarse paper.

உரத்தகாய்ச்சல், s. A vehement fever.

உரத்தகாற்று, s. A violent wind.

உரத்தகுதிரை, s. A powerful horse.

உரத்தசத்தம், s. A strong, harsh voice, a loud noise.

உரத்தசரீரம், s. A firm constitution, a strong compact body.

உரத்ததருக்கம், s. A sharp contest, a violent controversy.

உரத்தநிலம், s. Firm soil.

உரத்தவெயில், s. A hot sun.

உரப்பிக்க, inf. To make firm, to harden, indurate, confirm.

உரப்பு, v. noun. Intenseness, force, strength, firmness, compactness, வலி. 2. Coarseness, thickness, roughness—as of cloth, paper, leaves, &c.; stiffness, hardness—as of rice not well boiled, or of the stomach when overcharged, or when food does not digest, திண்மை.

உரப்பானநிலம், s. Firm, hard (ungenial) land—as உரத்தநிலம்.

உரப்பானபுடைவை, s. Thick, coarse cloth.

நெஞ்சுரப்பானவன், s. A hard-hearted man.

உரல், s. A mortar, large or small, நெல்முதலியகுற்றுமுரல். 2. A mould for making pastry, இடியப்பவுரல்.

உரலாணி, s. A pestle, a rice-pounder, உலக்கை. 2. [prov.] A piece of block inserted in a mortar, when the bottom is worn away, உரலடிக்கிடுமொராணி.

உரலிடித்தல், v. noun. Pounding in a mortar.

அவலென்றெண்ணியுரலையிடிக்கிறது. To beat the empty mortar, thinking of the flattened rice. [prov.]

உரலுமுலக்கையும். The pestle and the mortar. 2. (fig.) The glottis and the uvula of the throat.

உரற்கட்டை, s. A mortar formed of a block of wood—a term applied metaphorically to a stout short man.

உரற்கட்டை—உரற்குற்றி, s. A wooden block for a mortar, உரற்காணமாத்துண்டு.

உரற்குழி, s. A hole in the floor in which a rice mortar is fixed.

பாக்குரல், s. A small mortar made of wood, stone, or metal, in which betel and areca nut are bruised to facilitate mastication.

உரவு, s. Strength, force, firmness, hardness, வலி. (p.)

உரவுச்சினவேந்தன். The formidable king. (அகப்பொருளை.)

உரவன், s. A strong man, வலியன். 2. A learned man, an ascetic, அறிஞன். 3. Argha, அருகன். (p.)

உரவோர், s. The wise, the learned, அறிஞர். 2. Persons of respectability, gravity, age, &c., chief persons, மூத்தோர். (p.)

உரவுநீர், s. The sea in motion, the sea, sea-water, உவரி; [ex உரவு, a change of உலவு, et நீர்.] (p.)

உரவுநீர்க்கருங்கடலுடுத்தமாநிலத்து. Upon the sea-girt earth (lit.) on the earth enclosed by the blue ocean of moving water.

உரறல், s. Great anger, the state of being heated with vehement wrath, பெருங்கோபம். (p.)

உரறு, கிறேன், உரறினேன், வேன், உரற, v. n. To sound, ஒலிக்க. (p.)

உரற்று, கிறேன், உரற்றினேன், வேன், உரற்ற, v. n. To sound, resound, make a loud noise, ஒலிக்க. (p.)

உரற்றிபகன்மழைபும்பரிருக்தென. As if a heavy rattling shower of hail had filled the sky. (கம்பராமம்.)

உதிரவாற்றினைநெதிரமுரற்றிவிழவே. He scattered the things which, when they fell, caused the whole hemisphere to resound. (கம்பரமம்.)

உரற்றல், v. noun. Loud noise, thundering sound, பேரொலி.

உரன், s. Power, strength, firmness, வலி. 2. Strength of mind, fortitude, energy, bravery, ஊக்கம். 3. Knowledge, spiritual or profound knowledge that may induce self-restraint, அறிவு. (p.)

உரனென்னுந்தோட்டியான். By strength of mind as a hook which guides the elephant — (குறள்.)

உராய், கிறேன், ந்தேன், வேன், உராய, v. n. To rub against a thing, உடனுரிஞ்ச. (பிங்.) 2. To rub against one another—as trees, உரிஞ்ச.

உராய்போதல், v. noun. Rubbing in a crowd, jungle, &c., in passing, உரிஞ்சிப்போதல். 2. Rubbing one's self against a thing, உரைதல். (p.)

உராய்ஞ்சு, கிறேன், உராய்ஞ்சினேன், வேன், உராய்ஞ்ச, v. a. [vul.] To rub, உரைக்க.

உரி, s. A small dry or liquid measure, அரைப்படி, marked thus, ௨. 2. (p.) Rind, peel, bark (of some trees), a skin stripped off, either raw, dried, tanned, dressed or otherwise, தோல். 3. Coriander, கொத்துமல்லி, Coriandrum sativum, L. 4. The root of the abstract noun உரிமை, propriety, peculiarity. 5. One of the four general divisions of words, including adjectives and adverbs, also all words expressive of abstract qualities, உரிச்சொல்.

உரிச்சீர், s. A kind of metrical foot. See சீர்.

உரிச்சொல், s. One of the four classes of words. See உரி.

வினையுரிச்சொல், s. Adverb.

பெயருரிச்சொல், s. Adjective.

உரிநெல், s. A half measure of paddy.

உரிப்பொருள், s. The third division of அகப்பொருள், denoting the intercourse of the sexes.

உரியரிசி, s. A half measure of rice. (சதுரகர்.)

உரியாழாக்கு, s. Five-eighths of a measure; marked ௨ழ.

எத்துவார்த்தை, *s.* Enticing words.

எத்தேசகாலமும், *adv.* Always, perpetually, in whatever time and place எப்பொழுதும்; [*ex* எ, what, தேசம், region, *et* காலம், time.]

எந்த, *adj. prefix.* Which, what, வினா.—*Note.* எந்த is sometimes doubled—as எந்தெந்த, and used before a word ending with an உம் which is called முற்றும்மை, or with ஆனாலும், and then it signifies whosoever, whatsoever—as எந்தெந்தச்சமயத்திலும், at any time whatsoever; எந்தெந்தவார்த்தையானாலும்எண்ணாமற்சொல்லவேண்டாம், Utter no word whatever before you have considered it.

எந்தநாட்டிலும்செல்லும். It will pass in any country.

எந்தக்கை. Which hand?

எந்தச்சுமை. Which burden?

எந்தத்தொழில். What business?

எந்தப்பாண்டம். Which vessel?

எந்தமட்டும். How far? how great? how long? how much?

எந்திரம், *s.* Engine, machine in general, சூத்திரம். 2. A hand-mill, திரிகை. 3. Sugar-cane press, ஆலை. 4. A kind of machine for separating the seeds from cotton, பஞ்சுகொட்டுமெந்திரம். 5. Sticks for producing fire by attrition, தீக்கடைகோல். 6. A potter's wheel, குலாலச்சக்கரம். 7. A car, carriage, chariot, தேர். 8. A conveyance artificially managed, ஊர்தி. 9. A mystical diagram in magic or astrology, written on metal or ola and worn on the arm or other part of the body—as a charm or amulet, மந்திரச்சக்கரம். 10. Engines, or other contrivances connected with a fortification to repel or exclude an enemy, மதிலுறுப்பு. See இயந்திரம் and யந்திரம்.

எந்திரகாரன், *s.* A machinist, சூத்திரகாரன்.

எந்திரமெழுதிக்கட்ட, *inf.* To write or engrave a diagram and fasten it on.

எந்திரவாவி, *s.* A machine for drawing water, இலவந்திகை.

எந்தை, *s.* My father, our father, எமதுதந்தை. See also தந்தை.

எப்படி. How, in what way, or manner, எவ்வண்ணம்; [*ex* எ, *et* படி.]

எப்படிக்கூடுமோஅப்படிச்செய். Do as you can.

எப்படியாகிலும்—எப்படியானாலும்—எப்படியாவது. Howsoever it be, nevertheless.

எப்படியும். However, at any rate, at all events.

அதற்கெப்படி. What shall we do?

வழியெப்படிப்போகிறது. Which is the way? which way must we go?

எப்பொருட்குமிறைவன், *s.* The Deity, the Supreme Being, கடவுள்; [*ex* எ.]

எப்பொழுது—எப்போது—எப்போழ்து. When, at what time, எக்காலம்; [*ex* எ.]

எப்பொழுதும். Always, at all times, continually.

எப்போதாகிலும். Whensoever, at any time.

எப்போதுமுள்ளது. That which is eternal.

எப்போதுவந்தாலும். Whenever he comes.

எப்போதைக்கும். Forever.

எமநாகம், *s.* The ஓமம் plant, அசமதாகம், Anethum sowa. 2. The ஊமத்தை plant.

எமநாமம், *s.* The ஊமத்தை plant, Datura alba.

எமர்—எமரார், *s.* Our people, எம்முடையவர்.

எமன், *s.* (*fem.* எமள்.) Our man, friend, relative, &c., எம்முடையவன்.

*எமன், *s.* The deity of *Naraca* or hell, where his capital is placed, in which he sits in judgment on the dead, and distributes rewards and punishments, sending the good to *Swerga*, and the wicked to the division of *Naraca* or *Tartarus* appropriated to their crimes: he corresponds with the *Grecian* god Pluto, and the judge of hell Minos, and in *Hindu* mythology is often identified with death and time; he is the son of Surya, or the sun, and brother of the personified Yamuna or *Jumna* river, யமன். Wils. p. 681. Yama. (இயமன் and யமன்.) 2. The third fang of the cobra, சர்பத்தின்பற்களிலொன்று. (*p.*)

எமகணம்—எமகிங்கரர்—எமதூதர், *s.* The messengers of Yama employed to execute his behests, apprehending souls and conveying them to Tartarus, யமன்தூதர்.

எமதூதன், *s.* The fourth fang of the cobra, சர்பத்தின்பற்களிலொன்று.

எமலோகம், *s.* The place of the deceased; the purgatory of the Hindus; the kingdom of எமன்.

எமாஸ்திரம், *s.* His weapons of which there are three kinds, viz:. 1. தண்டு, a trident. 2. தண்டு, a club. 3. பாசம், a rope.

எமி, *s.* Society, fellowship—the opposite of தமி, solitude. (திவா.) (In சது, erroneously எமி, companion, உடனிருப்பவன்.)

எம், *pos. pron.* [*from* யாம்.] Our—as எம்குலம், our caste; எம, our things. Also the ending of verbs of different persons, உளப்பாட்டுத்தன்மைப்பன்மைவிகுதி—as உண்டனெம்யானுமவனும், I and he ate.

எமக்கு. To us, நமக்கு.

எம்மனோர். Like us, such as we are, persons of our rank, state, circumstances.

எம்முடையது—எமது, *pron.* Ours.

எம்பி, *s.* Our or my younger brother, என்தம்பி. (*p.*)

எம்பியும்யானும்பொருதிக்கப்போரினில். In the fight in which my brother and I engaged. (இராமா.)

எம்பிராட்டி, *s.* Our lady, our mistress, எம்மிறைவி. (*p.*)

எம்பிரான்—எம்பெருமான், *s.* Our lord, god, or chief, எம்மிறைவன். 2. The name of a Vishnu devotee, ஓர்விட்டுணுபத்தன்.

எம்பெருமான்சதகம், *s.* A celebrated devotional book, containing one hundred stanzas, addressed to Vishnu.

எம்மான், *s.* Our God, எம்மிறைவன். (*p.*)

எம்பர். Which place, எவ்விடம்.

எம்புகம், *s.* The நிலக்கடம்பு plant.

எம்மட்டு—எம்மாத்திரம். How much, what extent, how far, how long, எவ்வளவு; [*ex* எ.]

எம்மாத்திரத்திற்குவாங்கினாய். For how much did you obtain it?

அதற்குநானெம்மாத்திரம். Who am I to do such a thing?—implying unfitness.

எம்மை, *inter. n.* Which birth, or transmigration, எப்பிறப்பு. (*p.*)

எம்மையும். In which birth soever past, present, or future. 2. In every kind of birth from those of the gods down to vegetables, referring to the metempsychosis, according to which, the same soul or life assumes different bodies according to its actions in previous births. See பிறப்பு.

எம்மையுலகத்தும். In which world soever, in any or every world. (நாலடி.)

எயில், *s.* A fortress, wall, a fortification, மதில். 2. City, town, புரம். (*p.*)

எயிலொருமூன்றுஞ்செற்றோன். Siva who destroyed the three aerial cities.

எயில்காக்க, *inf.* To guard one's fort, &c.

எயில்வளைக்க, *inf.* To besiege a fort, to surround a fort.

எயிற்புறம், *s.* The parts outside of a fort.

மூவெயில், *s.* [*in mythology.*] The three cities of the Asoors, built in the air one above another, of gold, silver and iron respectively, and destroyed by Siva, because they had abandoned his worship; on which occasion, he made Maha Meru his bow, and Vishnu his arrow for the execution of his purpose. திரிபுரம். (*p.*)

எயிறு, *s.* A tooth, பல். 2. The tusk of an elephant, or wild hog, யானை, பன்றியினுற்றின்கோடு. (*p.*)

எயிறலைக்க—எயிறுதின்ன, *inf.* To gnash the teeth—expressive of anger.

எயிறலைப்பு, *v. noun.* Gnashing the teeth.

எயிறிலி, *s.* The sun whose teeth Siva is said to have broken to pieces, சூரியன். (*p.*)

எயினன், *s.* A desert tribe, எயினச்சாதி. (*p.*)

எயினர், *s.* (*fem.* எயிற்றியர்.) A cast of foresters who live by plunder and who formerly were much employed as soldiers, மறவர்.

எயினக்குடி—எயின்குடி, *s.* A family of foresters.

எயினச்சேரி—எயின்சேரி, *s.* A village of foresters.

எய், *s.* Porcupine, முட்பன்றி. (*p.*)

எய், கிறேன், தேன், வேன், ய, *v. a.* To cast, to throw, to fling stones, &c.; to discharge arrows, அம்புமுதலியனவெய்ய.

எய்தவனிருக்கவம்பைநோவானேன். Why be offended with the arrow seeing that he is present who discharged it? [*prov.*]

எய்வு, *v. noun.* Shooting with a bow, எய்கை.

எய், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To grow weary by exertion, fail in strength—as in battle; to flag through want of food, &c., இளைக்க. 2. To be reduced in circumstances, grow poor, தரித்திரமடைய. 3. *v. a.* To know, understand, comprehend, அறிய. (*p.*)

அனிச்சம்படினும்பொறுமையைபெய்த்தும். Though he (Siva) knew that the feet of his consort could not endure the falling of the (delicate) *anicah* flower— (பிரபுலிங்க.)

எய்ப்பு, *v. noun.* Weariness, languor, &c., இளப்பு.

எய்ப்பில்வைப்பு, *s.* That which is laid up for a time of adversity, வறுமைப் பருவத்துக்கு வைக்கும் திரவியம்.

எய்து, கிறேன், எய்தினேன், வேன், எய்த, *v. a.* To approach, come upon, அணுக. 2. To obtain, acquire, attain, பெற் றுக்கொள்ள. 3. To experience, enjoy, or suffer, பயனனுபவிக்க. 4. *v. n.* To arrive at, come, சேர. 5. To happen, occur, சம்பவிக்க. (*p.*)

மெய்ஞ்ஞானமெதிர்மெய்துகிறது. To obtain true wisdom.

என்பாவத்தின்றுப்பயனென்னைமெய்திற்று. The consequence of my sin came upon me.

எய்தாமை, *neg. v. noun.* The state of not possessing.

எய்யாமை, *s.* Ignorance, அறியா மை. (*p.*)

எரல், *s.* [*as* சமுத்திரசண்டி.] A sea-shell.

எரி, *s.* Fire, burning flame, நெ ருப்பு. 2. Hell, or one of the hells of Hindu mythology, நரகம். 3. Glowing, light, brightness, பிரகாசம். 4. The eighteenth lunar mansion, கேட்டை. 5. The seventh asterism, புனர்பூசம். (*p.*)

எரிகுஞ்சி, *s.* Red, or fiery hair—spoken of the Ratchatas, &c., செம்மயிர். (*p.*)

எரிசனம், *s.* The inhabitants of hell, நரர். (*p.*)

எரிநாள், *s.* The third lunar mansion, கார்த்திகைநாள். (*p.*)

எரிபொழுது, *s.* The setting sun with a red appearance, செவ்வானப்பொழுது. (*p.*)

எரிப்புறம், *s.* Hell, நரகம். (*p.*)

எரியிட, *inf.* To set on fire, நெ ருப்புப்போட. (*p.*) 2. To calcine medicine, மருந்தெரிக்க.

எரிவட்டம், *s.* One of the Hindu hells, நரகம். (*p.*)

எரி, கிறது, ந்தது, யும், எரிய, *v. n.* To glow, shine, give light, பிரகாசிக்க. 2. To burn, ignite; to be injured, or consumed by fire, to be scorched, to flame, அழல. 3. To burn—as a sore, or fever; to smart, to be inflamed, புண்முதலியவெரிய. 4. To be envious, jealous, to fret, be peevish, பொறா மைகொள்ள. 5. To be enraged, indignant, கோபங்கொள்ள. 6. To burn as the stomach with hunger, வயிறெரிய. 7. To suffer pain—as from a heavy load on the head, &c., தலைமுதலியனவெரிய. (*c.*)

அடுப்பெரிகிறது. The fire upon the hearth burns.

அஜீரணமெரிந்துபோனது. The indigestion has ceased, *lit.* is burnt up.

நட்சத்திரமெரிந்துவிழுகின்றது. A star glows and falls.

நானுண்டதெல்லாமெரிந்துபோயிற்று. The food I took has digested. 2. I am so pained by what you said that the food I have eaten seems as nothing. 3. The food I took has digested by means of enchantment, medicines, &c.

வயிறெரிகின்றது. My bowels are inflamed for food. 2. I am in distress, yearning, &c.

அவன்பட்டதைநினைக்கிறபொழுதுஎன்வயிறெரிகிற து. My bowels are inflamed when I think of what he suffered.

கனகனென்றெரிகிறது. It burns with excessive heat.

அவனெரிபொரியென்றுவிழுகிறான். He breaks out with rage and fury, *lit.* saying, Burn him, fry him.

எரிகரும்பு, *s.* Fagots, விறகு. (*c.*)

எரிகுடல், *s.* A canine appetite, எரிவயிறு. (*c.*)

எரிகுடலன், *s.* One who is always craving for food, பேராசையுள்ளவன்.

எரிகுன்மம், *s.* A stomachic disease, excessive heat, head-ache, &c., ஒர்நோய்.

எரிகொள்ளி, *s.* A fire-brand, கொள்ளிக்கட்டை.

எரிசினம், *s.* Burning anger, கடுங் கோபம்.

எரிநரகம், *s.* The burning hell, ஒர்நரகம்—in distinction from others.

எரிபவுவன், *s.* A burning ulcer or cancer, பிளவை.

எரிபந்தம், *s.* A burning torch, a flambeau, தீவர்த்தி. 2. A kind of burning sensation all over the system from disease, எரிச்சல்.

எரிபிடாரி, *s.* An enraged or furious demoness, எரிதூர்க்கை. 2. A peevish, or fretful person—spoken disparagingly, எரிச்சலுடையவள்.

எரிபுழு, *s.* A kind of brownish, yellow caterpillar, the sight of which on leaving home, &c., is regarded as propitious, சம்பசைப்புச்சிபிரேணவகை.

எரிபூச்சி, *s.* A flying insect which, on contact, emits moisture that causes a burning smart and a discoloring of the skin, ஒர்பூச்சி.

எரிமணி, *s.* Sparkling jewels, bright gems, பிரகாசமுள்ளமணி.

எரிமுகி, *s.* A tree, the milk of whose seeds is pungent and caustic, and being indelible, is used in marking, சேங் கொட்டைமரம், Semicarpus anacardium.

எரியவிழிக்க, *inf.* To look fiercely having the eyes flaming with rage, கோ பத்தோடேபார்க்க.

எரிவண்டு, *s.* The Mylabris or blistering beetle, ஒர்வகைவண்டு. 2. An insect which strikes against the eye-ball inducing severe smarting, கண்ணிலடிக்கும் வண்டு.

எரிவந்தம், *s.* A burning sensation in the body, எரிபந்தம். 2. (*Met.*) Anger, wrath, எரிச்சல்.

எரிவனம், *s.* A burning place for the dead, சுடுகாடு.

எரிவரியன், *s.* A snake of the viper kind.

பற்றியெரிய, *inf.* To take fire.

எரிப்பு, *v. noun.* Burning, ignition, எரிவு. 2. *s.* Envy, jealousy, peevishness, malice, rancor, பொறாமை. 3. Satiety, nausea, தெகுட்டிப்பு.

எரிப்புக்காரன்—எரிப்புள்ளவன், *s.* An envious, impatient, peevish, or irritable person, பொறாமையுடையவன்.

எரிப்பெடுக்க, *inf.* To be peevish, cynical, querulous, எரிப்புண்டாக.

ஓரெரிப்பாயெரிக்க, *inf.* To keep a fire burning, to heat continually—as in preparing medicines.

ஓரெரிப்பாயெரித்துப்போட்டான். He consumed it at one burning. 2. He has utterly destroyed (the family, town, &c., by injustice, oppression, &c.).

எரியல், *v. noun.* Burning, எரிவு. 2. [*prov.*] That which is burnt—as food, at the bottom of a vessel in cooking, எரிந்தது.

எரிவு, *v. noun.* Burning, ignition, எரிகை. 2. *s.* Heat in the system, smarting, pungency, inflammation, உடலெரிவு 3. Envy, jealousy, resentment, பொறாமை. 4. Fretting, displeasure, anger, irritation of body and mind, கோபம்.

கண்ணெரிவு, *s.* Burning of the eyes.

கையெரிவு, *s.* Burning of the hands.

காலெரிவு, *s.* Burning of the feet.

உடலெரிவு, *s.* Burning of the whole body.

குடலெரிவு, *s.* Burning of the bowels.

எரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To burn, consume by fire, scorch, எரியச்செய்ய. 2. To keep (a lamp) burning, விளக்கெரிக்க. 3. To cause digestion by extraordinary means—as by incantations, medicines, ஜீரணிப்பிக்க. 4. To sublimate, calcine metals, reduce to powder by fire for medicines, மருந்தெரிக்க.

தான்தின்றநஞ்சுதன்னையெரிக்கும். The poison he takes will consume himself; i. e. evil deeds bring their own retribution.

எரிதைலம், *s.* Medicinal oil prepared by burning, காய்ச்சியதைலம். See எண்ணெயெரித்தல்.

எரிமருந்து—எரியவிட்டமருந்து, *s.* Calcined medicinal powder, எரித்தம ருந்து.

பேயையெரிக்க, *inf.* To consume a demon by magic.

பேயையெரித்துமாரணம்பண்ண. To burn and kill a demon by magic.

எரிகாசு, *s.* One of the five ingredients for perfuming the hair, சரக்கட்டி. See அகிற்கட்டு.

எரிக்கலகாம்போதி, *s.* A tune, ஒர்ராகம்.

எரிச்சல், *s.* A burning sensation in the stomach from hunger, &c., எரிவு. 2. Envy, jealousy, unkindness, spitefulness, பொறாமை. 3. Anger, fury, indignation, moroseness, கோபம். 4. Acerbity, pungency—as of some kinds of fruits, உறைப்பு. 5. Chagrin, மனவெரிவு; [*ex* எரி.]

என்மேலவன்மிகவுமெரிச்சலாயிருக்கிறான். He is very jealous of me; he is very angry with me.

எரிச்சலாக்க, *inf.* To nettle, to irritate, exasperate, கொபமுண்டாக்க.

எரிச்சற்பட, *inf.* To be envious, irritable, எரிவடைய.

எரு, *s.* Manure of cows, sheep, &c., பயிருக்கிடுமெரு. 2. Cowdung, சாணி.

எருக்கட்ட, *inf.* To fold sheep, or tie cows on land by night, for manure, கிடைவைக்க. 2. (*Rott.*) To collect dung.

எருக்கட்டு, *v. noun* The folding of sheep, or tying of cows for manure, கிடைவைக்கை. 2. *s.* A spot of land thus manured, கிடைவைத்தகொல்லை.

எருக்களம், *s.* The site of a dung-hill, எருவிருக்குமிடம்.

எருச்சாட்டி, *s.* A land not manured for the present year, having been manured previously, எருவிட்டநிலம்.

எருப்போட—எருவிட, *inf.* To manure land, வயலுக்கெருப்பெய்ய. 2. To pass excrement—as cows, &c., சாணிபிட.

எருமணம், *s.* The smell of dung, சாணிநாற்றம்.

எருமுட்டை, *s.* Cowdung dried in the sun and used for fuel, வறட்டி.

காட்டெருமுட்டை, *s.* Cowdung found dry in pasture grounds.

எருமுட்டைப்பீநாறி, *s.* A plant, வெதுப்படக்கி.

எருவடைக்க, *inf.* To fold sheep, or tie cows for manure, எருப்பெய்ய.

எருவறட்டி, *s.* Cowdung made in cakes and stuck against a wall to dry, or as found dry in jungles—used as fuel, எருமுட்டை.

எருவாரம், *s.* Share of the produce assigned to those who furnish manure for the land, எருவுக்குக்கொடுக்கும்வாரம்.

எருவிவாயில், *s.* The anus, குதம்.

எருக்கு, *s.* A coarse, milky shrub, the charcoal of which is used in making gun-powder, ஓர்செடி, Calotropis gigantea.

எருக்கமாலை, *s.* A garland of the flowers of the aforesaid shrub: 1. Worn by Siva. 2. Upon the neck of a male-factor before he is executed. 3. Used in adorning the corpse of a bachelor.

எருக்கம்பால், *s.* Milk of the எருக்கு, useful in leprous and other cutaneous diseases, எருக்கினதுபால்.

எருக்கம்வேர், *s.* Root of the எருக்கு, employed medicinally for various purposes, எருக்கினதுவேர்.

வெள்ளெருக்கு, *s.* A white species of the above shrub.

வெள்ளெருக்கஞ்சடைமுடியான். Siva whose matted hair is decorated with a garland of its flowers. (இராமா.)

எருக்கு, கிறேன், எருக்கினேன், வேன், எருக்க, *v. a.* To kill, slay, take away life, to cut, கொல்ல. 2. To lay a burden, சுமத்த. (சது.) 3. To hew, வெட்ட. (*p.*)

எருது, *s.* A bull, an ox, a steer, இடபம். 2. Taurus of the zodiac, இடபராசி—Used adjectively it becomes எருத்த.

எருதுமறித்தல், *v. noun.* [*prov. vul.*] Covering as a bull, எருதுபொலிதல்.

எருதுரப்ப, *inf.* To whoop in order to get bullocks forward in ploughing, எருதைப்பதட்டியோட்ட. 2. To make a great noise to little purpose, எருதைப் போற்சத்திக்க.

எருத்துக்காரன், *s.* A bullock-driver.

எருத்துக்காளை, *s.* A steer, இளவெருது.

எருத்துத்திமில், *s.* A bull's hump, மிடைமுரிப்பு.

எருத்துப்பாரம், *s.* A bullock load.

எருத்துப்பூட்டு, *s.* [*prov.*] The first ploughing on an auspicious day when every one's team is employed and a few furrows turned up, ஏர்பூட்டு.

எருத்துமாடு, *s.* A bull, an ox, எருது.

எருத்துவாலன்—எருத்துவாலன்குருவி—எருத்தவாற்குருவி, *s.* A species of the bird of paradise with a long tail, ஒர குருவி.

பொதியெருது, *s.* A bullock used for carrying burdens.

பொலியெருது, *s.* A bullock for covering. 2. The leading ox in a threshing floor.

உழவெருது, *s.* A ploughing ox, a bullock for ploughing.

எருத்தம், *s.* The nape, the back of the neck, பிடர். 2. A part of the verse called கலிப்பா, தரவு. (*p.*)

எருத்து, *s.* The nape, the back of the neck, பிடர். 2. [*in grammar.*] The penultimate, ஈற்றயல். (*p.*)

எருத்தடி, *s.* The last line but one.

எருந்தி, *s.* A very small shell, இப்பி. (*Rott.*)

எருந்து, *s.* A bivalve shell-fish—as muscles, oysters, &c., கிளிஞ்சில். 2. A large mortar, உரல். (சது.) (*p.*)

எருமணம், *s.* A water plant, செங்குவளை, Nymphæa rubra, *L.*

எருமை, *s.* A buffalo, especially the female, காரான்.

எருமைப்பாற்குடித்தவன். One who has drunk buffalo's milk, a blockhead, மந்தன்.

எருமைக்கடா, *s.* A he-buffalo, பகடு.

எருமைக்கடாத்தானம், *s.* A gift of a buffalo. See தானம்.

எருமைக்கற்றாழை, *s.* A species of the தாழை, growing in stony places.

எருமைக்காஞ்சொறி, *s.* A plant, ஓர்பூடு, Tragia involucrata, *L.*

எருமைக்கொத்தான், *s.* A creeper, ஓர்வகைக்கொடி.

எருமைத்தக்காளி, *s.* A species of தக்காளி plant.

எருமைநாகு, *s.* A buffalo heifer, எருமைப்பெண்கன்று.

எருமைநாக்கி, *s.* A kind of herb, hart's ear, or oleander-leaved cacalia, ஓர்பூடு.

எருமைநாக்கு, *s.* A kind of fish, a sole, ஓர்மீன், Pleuronectes solea, *L.*

எருமைமாடு, *s.* A buffalo, எருமை.

எருமைமுல்லை, *s.* A kind of shrub, ஓர்முல்லைச்செடி.

எருமைமுல்லைத்தீவு, *s.* An ancient name of Jaffna a district in Ceylon—so called from the above-named shrub.

எருமைமுன்னை, *s.* A tree, ஓர்மரம். Premna mysorensis, *L.* (*Rott.*)

எருமையூர்தி, *s.* Yama, the deity of Naraca, whose conveyance is the buffalo, யமன்.

எருவை, *s.* Blood, உதிரம். 2. An eagle, கழுகு. 3. Copper, செம்பு. 4. A species of reed, கொறுக்கை. 5. A kind of grass with a fragrant root, sometimes eaten, கோரை. 6. An ass, கழுதை. 7. Elephant, யானை. (*p.*)

எலி, *s.* A rat, சுருப்பை. 2. The eleventh lunar asterism, பூரம். 3. The கள்ளி tree, Euphorbia, *L.*—*Note.* There are eighteen kinds of rats; i. e. சுத்திரிகணிபன், செம்முகக்கன், வள்ளி, குறட்டை, சுருக்காற்றலைபன், விடவெலி, செந்தலைமுத்தி, செவ்வெலி, வில்லெலி, உலர்ப்பெலி, தும்பெலி, புடையெலி, இளைப்பெலி, செங்கண்ணன், புள்ளி, காடன், குறுங்காலெலி, கச்செலி; some others are enumerated—as கரலெலி, கீரெலி, வெள்ளெலி, முள்ளெலி, சுண்டெலி, வரப்பெலி and புள்ளெலி.

எலிச்செவி, *s.* An herb, rat's ear, சவரிபாக்கத்தல், Evolvulus emarginatus, *L.*

எலித்திசை, *s.* [*in astrology.*] The north west point of the compass—opposite to பூர்வத்திசை, வடமேற்கு. See திசை under திக்கு.

எலிப்பாஷாணம், *s.* A species of arsenic, rat's bane.

எலிப்பிடுக்கன், *s.* A plant, ஓர்பூடு. Crotalaria biflora.

எலிப்புலி, *s.* A cat, பூனை.

எலிப்பொறி, *s.* A rat-trap, எலி பிடிக்குங்கருவி.

எலியளை—எலிவளை, *s.* A rat's hole.

எலியோடி, *s.* A thin timber on the top of a roof, ridge-pole, உருட்டுமரம்.

எலியோட்டி, *s.* A kind of thistle, குருக்கு, Argemone mexicana, *L.*

கட்டெலி, *s.* A kind of rat whose bite is said to be mortal.

வீட்டெலி, *s.* Domestic rat.

எலு, *s.* A bear, கரடி. (*p.*)

எலுநன், *s.* A famous king of Tanjore, ஓரரசன்.

எலுமிச்சை, *s.* A lime tree, a lemon tree, ஓர்மரம், Citrus acida, *Rox.*

எலுமிச்சங்காய், *s.* An unripe lemon.

எலுமிச்சம்பழம், *s.* The ripe fruit of the lemon tree.

எலுமிச்சஞ்செடி, *s.* A lemon plant.

காட்டெலுமிச்சை, *s.* Wild lime, Limonia alata.

கொடியெலுமிச்சை, *s.* A kind of creeper whose fruit resembles a lime.

கஸ்தூரியெலுமிச்சை, *s.* A small species of lemon, Triphasia trifoliata, *D. C.*

சிதம்பரவெலுமிச்சை, *s.* [*prov.*] A species of lime tree which bears large fruit.—*Note.* In the names of some trees ending in ஐ, this letter becomes அம் in combination—as எலுமிச்சங்காய்.

எலும்பி, s. A tree, Linociera purpurea, L.

எலும்பு, s. A bone, அஸ்தி.

எலும்புக்கூடு—முழுவெலும்பு, s. A skeleton, கங்காளம்.

எலும்புச்சீப்பு, s. The rib-bones, விலாவெலும்பு. 2. A bone-comb, தந்தச்சீப்பு.

எலும்புருக்கி, s. A disease, a species of consumption which greatly emaciates the system and exposes the bones to view and is supposed to dry up their juices—*the whites*, ஷயரோகம். (*Ains.*)

எலும்புறுத்த, *inf.* To suffer pain when lying down, &c., by the protrusion of the bones.

எலும்பூற, *inf.* To knit, to unite, coalesce—as a broken bone, ஒடிந்தவெலும்புகூட

நெஞ்செலும்பு—மார்பெலும்பு, s. The sternum.

குண்டியெலும்பு, s. The os sacrum.

சவடியெலும்பு—காறையெலும்பு, s. The clavicle.

தொடையெலும்பு, s. The thigh-bone.

காலெலும்பு, s. The bones of the leg—tibia and febula.

நடுவெலும்பு, s. The spine, the back-bone.

பழுவெலும்பு, s. The rib-bones.

முள்ளெலும்பு, s. The vertebra.

எலுவன், s. A friend or intimate acquaintance, தோழன். (*p.*)

எல், s. Lustre, splendor, light, ஒளி. 2. The sun, சூரியன். 3. Day—in contradistinction to night, பகல். 4. Day of twenty-four hours, நாள். 5. Night, இரவு. 6. Sunshine. வெயில். 7. An interjection of contempt, இகழ்ச்சிக்குறிப்பு. (*p.*)

எல்லவன்—எல்லோன், s. The sun, சூரியன். (*p.*)

எற்பாடு, s. Sunsetting. 2. One of the divisions of the day from two in the afternoon till sunsetting, சிறுபொழுதொன்று. (*p.*)

எற்றோற்றம், s. Sunrising. (*p.*)

எல்லரி, s. Large cymbals, கைம்மணி. (*p.*)

எல்லவர், s. All, all persons, எல்லாரும். (*p.*)

எல்லவர்க்குந்தருந்திருக்கனிபுகழுமன்றே. (Skanda) will vouchsafe heaven, that precious fruit to all. (ஸ்காந்.)

எல்லாம், s. All, the whole, every, முழுதும். Like other universal terms, this admits உம், which however is often omitted, when the word is not used as a prefix; when it occupies the place of an adjective, its ம் is lost, and உம் is added to the word which it qualifies.—*Note.* In classical usage எல்லாம் takes அற்று as its declining particle—as மரமெல்லாவற்றையுங்கண்டான், he has seen all the trees.

எல்லாத்திசைகளும். The whole horizon.

எல்லாமெம்மையும். All of us.

எல்லீர்நும்மையும். All of you.

எல்லாப்பூமியும்—பூமியெல்லாம். All the land, the whole of the land. 2. The whole earth.

எல்லாரும்—எல்லோரும். All persons, அனைவரும்.

எல்லாரையும்—எல்லார்தம்மையும். All of them.

எல்லோரும். We all, all of us, நாமெல்லாம்.

நீங்களெல்லாரும். Impr. for நீவிரெல்லாரும்.

அவர்களெல்லாரும். All of them.—*Note.* The superlative being unknown in Tamil, the comparative is employed, as in the following and similar instances. The universality of the term gives it a superlative meaning.

எல்லாரிலுமேலானவர். The greatest of all. 2. The most high.

அதுஎல்லாவற்றிலும்மேலானது. It is the highest of all.

எல்லி, s. The sun, சூரியன். 2 Night, இரவு; [*ex* எல்.] (*p.*)

எல்லை, s. A limit, border, boundary, frontier, confine, precinct, அவதி. 2. Measure, extent, அளவு. 3. End, termination, verge, goal, extremity, முடிவு. 4. The sun, சூரியன். 5. The distance within the reach of the voice, கூப்பிடுதூரம். 6. A day of twenty-four hours, நாள். 7. A term, a period, a specified or prescribed time, காலவரையறை. (கு. 381.) (*p.*)

எல்லைக்கண்நின்றார். They who abide within the limits (of friendship). (குறள்.)

தீமைக்கெல்லையற்றவச்சத்திலேயே. With infinite dread of vice.

இட்டநாளுமெல்லையும். The destined day and limit, the term of life assigned to every one.

எல்லைகடக்க, *inf.* To exceed the bounds, transgress. 2. To pass over a boundary.

எல்லைகட்ட, *inf.* To limit, set a boundary, எல்லைபோட. 2. To restrain, circumscribe, எல்லைப்படுத்த. 3. To decide differences, settle matters, வரையறுக்க. 4. To finish, முடிக்க.

எல்லைகுறிக்க, *inf.* To mark a limit, set boundaries, determine confines, வரம்பேற்படுத்த. 2. To fix a term, காலவரையறைகுறிக்க.

குறித்தவெல்லைகடவாதே. Pass not over the prescribed boundary.

எல்லைகெட்டநேரம், s. An inauspicious time—as twilight, noon, &c., when demons are about, an unseasonable time for the performance of an action, துஷ்டநேரம்.

எல்லைக்கட்டு, s. A boundary, demarkation, வரம்பு. 2. *v. noun.* Restraint, circumscription, கட்டுப்பாடு.

எல்லைக்கல், s. A stone to mark a limit, a land-mark.

எல்லைக்காவல், s. A watch-shed, &c., to mark the division of one field from another, ஊரெல்லையிற்காக்கும்வயற்காவல்.

எல்லைக்குறிப்பு, s. Boundary-mark, land-mark, எல்லையடையாளம். 2. Milestones, mileposts, வழியளவைக்குறிப்பு.

எல்லைக்கேடு, s. Inconvenience, want of opportunity, சமயமொவ்வாமை. 2. Unsuitableness, or inconvenience in regard to place, ஸ்தானமொவ்வாமை.

எல்லைத்தீ, s. The fire-deluge, the fire that destroys all things at the close of an age, ஊழித்தீ.

எல்லைப்படுத்த, *inf.* To limit, to settle a boundary, அளவுபடுத்த. 2. To settle matters, decide, finish, தீர்க்க.

எல்லைப்பிடாரி, s. An evil demoness supposed to be situated where roads meet, சந்திப்பிடாரி.

எல்லைமானம், s. Boundary, limit, circuit, எல்லை. 2. Measure, extent, அளவு.

எல்லையின்மை, s. Boundlessness, immensity, infinity, அளவின்மை.

எல்லையோட, *inf.* To run the bounds of a village or district—a religious ceremony performed by some of the Hindu sects with much superstition, எல்லைவலஞ்சுற்றிவர.

நாளெல்லை, s. The close of a day. 2. The end of a term. 3. The close of life.

எல்லோ. Interjection of surprise, pity, contempt, அதிசயவிரக்கச்சொல்.

எல்வை, s. Time, காலம். 2. Day, நாள். (*p.*)

*எவட்சாரம், s. Salt-petre, nitre, nitrate of potash, வெடியுப்பு. Wils. p. 682. YAVAKSHARA.

எவண், s. Where, எவ்விடம். (*p.*)

எவன், s. Who, which man? யாவன். 2. What, which things? யாது. 3. A term expressive of sorrow, pity, doubt, &c., துக்கம், இரக்கம், ஐயமிவற்றைக்காட்டுஞ்சொல். In the second sense it is used as a symbolic verb.

எவனும்—எவரும், *pron.* Whoever, every one.

எவனொருவன். Which one, whoever, whichever person.

எவனொருவன்வருவானோஅவனுக்கேகிடைக்கும். Whoever comes, may have it.

அதெவனது. Whose is that? to whom does it belong?

சிறைகாக்குங்காப்பெவன்செய்யும். What avails restraint as regards the chastity of females?

எங்களிலெவன். Who of us?

பயனெவன். What profit is there?

எவை, *inter. neut. pl.* What, which (things)? யாவை.

எவையும்—எவைகளும். Whatever, what things soever, every thing, யாவையும்.

எவ், *inter. adj. neut. pl.* What, which things?

எவற்றிற்கு? For what things?

எவ்வண்ணம். How, in what manner?

எவ்வது, *inter.* What, what manner? எவ்விதம்.

எவ்வதுறைவதுலகம். Whatever be the manner of the world; i. e. of the great. (குறள்.)

எவ்வம், s. Affliction, distress, sorrow, துன்பம். 2. Incurable disease, lingering sickness, தீராநோய். 3. Inferiority, degradation, meanness, இகழ்ச்சி. 4. Loneliness, solitude, தனிமை. (*p.*)

இலனென்னுமெவ்வமுரையாமையீதல். Giving without disgracing one's self by complaints of poverty. (குறள்.)

எவ்வநோய், s. Incurable disease. (குறள்.)

எவ்வளவு. How much? how many? எத்துணை.

எவ்வளவும். A little, some what, how much soever, how little soever.

எவ்வளவுந்தவறுமல். Not deviating in the least.

எவ்வளவுமில்லை. None at all.

* எவ்வனம், s. [as யௌவனம்.] Youth, juvenility, adolescence, இளமை. Wils. p. 690. YOWVANA. 2. (p.) Sprightliness, joy, களிப்பு.

எவ்வனகாலம், s. The days of youth.

எவ்வனபருவமடைய — எவ்வனம்வர, inf. To become marriageable.

எவ்வாறு, inter. In what way or manner, how, எவ்வழி; [ex எ, et ஆறு, manner.]

எவ்விடம், inter. Where? எந்தவிடம்.

எழால், s. The tones of the lute, யாழ்நரம்பினோசை. 2. A species of bird, ஓர்பறவை. (p.)

எழிலி, s. A cloud, மேகம். 2. One of the seven last kings famous for liberality, கடையேழுவள்ளலிலொருவன்.

எழில், s. Beauty, comeliness, gracefulness, அழகு. 2. Color, coloring, paint, வண்ணம். (சூ. 20.) 3. Youth, இளமை. 4. Strength, வலி. (p.) 5. [prov.] A conjectural, or suspicious circumstance (a colloquial meaning), அசகை.

எழிலறியாதவன், s. One who cannot take a hint, or who is unacquainted with another's intentions, குறிப்பறியாதவன்.

எழில்காட்ட, inf. To give a hint.

எழில்சொல்ல, inf. To hint by words, to allude to.

எழினி, s. Curtain, திரைச்சீலை. 2. The cloth round the waist, இடைச்சீலை. (p.)

எழு, s. A pillar, a post, கம்பம். 2. A kind of curved club, வளைதடி. (p.) 3. Steel, உருக்கு.

எழு, கிறேன், ந்தேன், வேன், எழ, v. n. To rise, ascend, get up, rise by one's own power, to rise as a thing by its own levity, rise as a heavenly body, a bird, a kite, &c., to soar, &c., எழும்ப. 2. To stir, be excited, roused, &c., மனங்கிளர. 3. To become resuscitated, rise to life, உயிரடைந்தெழும்ப. 4. To rise to eminence, தலைமைப்பட. 5. To rise and spread as a rumor, பரம்ப. 6. To rise as wind, clouds, &c., கிளம்ப. 7. To rise as a sound, singing, talking, clamor, &c., ஆரவாரமெழ. 8. To rise as a tree, grow larger, swell, to expand as breasts, increase in stature, rise as a building, shoot, sprout, spring up, உயர. 9. To happen, occur, arise, come on, சம்பவிக்க. 10. To become instrumental to, உதவாக. 11, To remove from a dwelling, lodging, village, &c., குடியெழும்ப. 12. To rise in price, விலையேற.

அவனுக்குக்கையெழவில்லை. His hand does not open to give any thing.

அதைச்செய்யவெனக்குக்கைகாலெழவில்லை. My hands and feet would not stir (rise) to do such a thing.

அதைச்சொல்லவாயெழாது. My tongue will not stir (rise) to speak so.

கூரேயிறெழாதகுழவி. A babe that has not yet teethed.

எழுஞாயிறு, s. The rising sun, உதயாதித்தன். 2. Quinsy, a mortal disease which begins with the rising sun; when it begins in the night it is termed படுஞாயிறு. (Mat. Ind. Opp.)

எழுந்தபடி — எழுந்தமானம், s. At random, in an unpremeditated manner, carelessly, மனதிலேதோன்றியபடி.

எழுந்தருள, inf. To rise, become present or manifest as the divinity in an idol on consecration; to be present as a great personage, &c., தோன்ற. 2. To repair to a place—as a sage, holy person, a king, &c., பெரியோர்வர.

எழுந்தருளுநாயகர் — எழுந்தருளும்விக்கிரகம், s. The secondary idol in a temple, உச்சவவிக்கிரகம், representing the same deity as the first, carried about in processions while the other remains stationary—opp. to the மூலவிக்கிரகம்.

எழுந்தருள்படி, s. A procession of heathen gods.

எழுந்திருக்க, inf. To rise, ascend, get up, &c., எழ, spoken chiefly of men. —Note. This is more full and expressive than எழ, alone.

எழுந்துபோக, inf. To depart, to go to meet a person.

எழுந்தேற்றம், s. A Roman catholic procession, உற்சவம். 2. Pride, self-consequence, arrogance, பெருமை. 3. Rashness, presumptuousness, துணிவு.

எழுமுகனை, s. The very beginning of a process, or period, தொடக்கம்.

எழுவான், s. The east, the place of sun-rising, oriens, கிழக்கு, eastern—opp. to படுவான்.

எழுவான்றொடங்கிப்படுவான்மட்டும். From east to west.

என்வீட்டுக்கெழுவானிலே. East of my house.

எழல் — எழுகை, v. noun. Rising, ascent, எழுச்சி.

எழுச்சி, v. noun. Rising, ascent, elevation, எழும்புகை. 2. Stir, excitement, activity, readiness, promptitude, முயற்சி. 3. Haughtiness, aspiring, ambition, resolution, இறுமாப்பு. 4. A disease, or soreness of the ears, காதிலெழும்புமோர்புண். 5. Inflammation of the eyes, கண்ணோயிலொன்று.

எழுச்சிக்கொடி, s. Inflammation of the eyes causing red streaks, கண்ணிற்படருமோர்நோய்.

எழுச்சிபாடுவோன், s. One who sings to rouse a prince, or a great man of a morning, துயிலெழுப்புதல்பாடுவோன்.

எழுச்சிமுரசம், s. A drum beaten to rouse a king, commandant, garrison, &c. of a morning, துயிலெழுப்புமுரசம்.

எழுச்சியிலை, s. A leaf to cure ophthalmia, கண்ணோய்மருந்திலை.

படையெழுச்சி, s. A military expedition, marching to battle.

பள்ளியெழுச்சி, s. A kind of poem sung to rouse princes, &c. from sleep.

மேலெழுச்சி — மேலெழுந்தவாரி, [prov.] Superficiality.

மேலெழுச்சியாய்ப்பேச, inf. To speak carelessly.

மனவெழுச்சி, v. noun. Energy, persevering application.

எழுமை, v. noun. Height, elevation, உயர்ச்சி.

எழுகூற்றிருக்கை, s. A poem whose component words are represented by numerals in seven contiguous rows of long squares, each succeeding row increasing by one subordinate square on both sides, the topmost consisting of three squares, the next five, the next seven, &c. The numbers in each row begin and end increasing by one from the left as far as the middle square, and decreasing in the same ratio towards the right—thus the numbers in the first row, are 1, 2, 1; in the second, 1, 2, 3, 2, 1; in the third, 1, 2, 3, 4, 3, 2, 1, &c., and in the last two rows the numbers are the same. The symbolical poem is construed thus in the first row. 1, one god; 2, two feet; 1, one heart; i. e. Worship the two feet of the only true god with your undivided affections. ஓர்மிறைக்கவி.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | ௧ | ௨ | ௧ | | | | | |
| | | | | ௧ | ௨ | ௩ | ௨ | ௧ | | | | |
| | | | ௧ | ௨ | ௩ | ௪ | ௩ | ௨ | ௧ | | | |
| | | ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௪ | ௩ | ௨ | ௧ | | |
| | ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௫ | ௪ | ௩ | ௨ | ௧ | |
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௬ | ௫ | ௪ | ௩ | ௨ | ௧ |
| ௧ | ௨ | ௩ | ௪ | ௫ | ௬ | ௭ | ௬ | ௫ | ௪ | ௩ | ௨ | ௧ |

எழூதகம், s. [in architecture.] A kind of frieze and moulding, சிற்பவேலையிலொன்று.

எழுது, கிறேன், எழுதினேன், வேன், எழுத, v. a. To write, paint, draw, mark, stain, trace (letters, &c.), inscribe, வரைய. 2. To foreordain, to predestine. This verb is so used from the notion that each one's fate is written by Brahma in the skull, தலையிலெழுத. 3. To write composition, draw up in writing, வசனிக்கவெழுத. 4. To engrave, சித்திரமெழுத.

எழுதக்கைதிரும்பவில்லை. The hand is not yet trained.

எட்கிடைநெற்கிடைவிட்டெழுத. To write leaving the space of a sesamum seed between the letters, and of a grain of rice between the lines—the order to be observed in writing.

எழுதாக்கிளவி — எழுதாமறை, s. The vedas, lit. unwritten works—an appellation adopted with reference to their meaning being handed down by oral explanation and not written, or to the accent, pronunciation, &c., which cannot be written, வேதம்.

எழுதிக்கொடுக்க, inf. To grant by writing, write and deliver as a voucher. 2. To betroth a girl by written contract. 3. To write for another, draw up a document. 4. To write lessons for a learner. 5. To give a list, inventory, &c.

எழுதிக்கொள்ள, inf. To write a letter, petition, &c., to a great person; to write for one's self. 2, To enrol. 3. To write and deliver vouchers reciprocally.

எழுதிச்சேர்க்க, inf. To register, file a writing as a notary public.

எழுதிவைக்க, *inf.* To recount, register, write and keep for a memorandum, &c., to write and leave behind for the use of others.

எழுதினவுடன்படிக்கை—எழுதினவொப்பாரம், *s.* Written contract.

எழுதுகோல், *s.* A writing reed, எழுதுங்கோல். 2. A painter's brush or pencil, தூரிகைக்கோல்.

எழுதுபடம், *s.* A picture, கிழி.

மேற்பாடம்பார்த்தெழுதுதல், *v. noun.* Copying from a written book.

பெயர்த்தெழுத, *inf.* To copy, to transcribe.

குறிப்பெழுத, *inf.* To note down the time, &c. of the birth of a child.

திருத்தமாயெழுத, *inf.* To write correctly.

சரமகவியெழுத, *inf.* [*prov.*] To write a stanza, commemorative of the death of an ancestor, or other near relative, mentioning the day, hour, &c. of the moon, as a memorandum for ascertaining the time to perform the annual funeral rites.

மறுமொழியெழுத—பதிலெழுத, *inf.* To write an answer

பருக்கவெழுத, *inf.* To write in large characters.

கைபடியவெழுத, *inf.* To practise writing, train the hand in writing.

எழுத்து, *s.* A letter, character, அக்கரம். 2. Writing, painting, delineation, engraving, இலிகிதம். 3. A writing, painting, &c., a written letter, a writ, எழுதப்பட்டது. 4. Letters, science, literature, இலக்கணம். 5. A bond, a written engagement, &c., உடன்படிக்கைச்சீட்டு. 6. Destiny—as written in the head, இலலாடலிபி. 7. Written accounts, cyphering, entry or record of reckonings, கணக்கெழுத்து. 8. [*prov.*] Registry, entry, enrolment, அட்டவணை.

எழுத்தடைக்க, *inf.* To enclose letters in magical diagrams, சக்கரத்திலெழுத்துவரைய. 2. To invert a stanza in a figure, or diagram—one of the one-hundred-and-twenty kinds of மிறைக்கவி, சித்திரக்கவியிலெழுத்தடைக்க. (அலங்காரம்.)

எழுத்ததிகாரம், *s.* [*in grammar.*] Orthography, எழுத்திலக்கணம்.

எழுத்தந்தாதி, *s.* The last letter of one verse occurring in the first of the next, ஓர்வகையந்தாதி.

எழுத்தலங்காரம், *s.* A kind of play on letters, எழுத்தணி.

எழுத்தறப்படிக்க, *inf.* To pronounce with distinctness, read or sing distinctly.

எழுத்தாணி, *s.* A style, a metallic pen, for writing on palm leaves, இலேகினி.

எழுத்தாணிப்பூண்டு, *s.* A plant whose flower shoots up in the form of a style, கூத்தன்குதம்பை, Microrhyncus sarmentosus, *L.*

மடக்கெழுத்தாணி—குண்டெழுத்தாணி—மடிப்பெழுத்தாணி—செல்லிக்காவெழுத்தாணி—தேரெழுத்தாணி—வாரெழுத்தாணி—குடவெழுத்தாணி, *s.* Different kinds of iron pens.

எழுத்தாளர், *s.* Men of letters, learned men, அறிஞர். 2. Clerks, writers, எழுதுவோர்.

எழுத்தானந்தம், *s.* The inauspicious use of a word in a poem subjecting the hero on whom it is written to evils, செய்யுட்குற்றத்தொன்று.

எழுத்திலக்கணம், *s.* [*in grammar.*] Orthography. See இலக்கணம்.

எழுத்திலாவோசை, *s.* Inarticulate sounds.

எழுத்துக்காரன், *s.* A writer, a scribe, a clerk, a secretary, a copyist, an amanuensis, எழுதுவோன். 2. A painter, a limner, சித்திரமெழுதுவோன். 3. A cloth painter, சீலையிலெழுதுவோன்.

எழுத்துக்காரியஸ்தன், *s.* A clerk, a writer, எழுதுவோன்.

எழுத்துக்கிறுக்கு. [*prov.*] The act of making written instruments, உடன்படிக்கையெழுதுகை. 2. Writings, documents, உடன்படிக்கைப்பத்திரம்.

எழுத்துக்குற்றம், *s.* Orthographical errors in speaking, writing, &c., spoken chiefly of false interpretation, &c., of the Puranas or other writings deemed sacred, எழுத்திலக்கணவழு.

எழுத்துக்கூட்ட, *inf.* To spell, join letters.

எழுத்துக்கூட்டாமல்வாசிக்க, *inf.* To read fluently.

எழுத்துச்சந்தி, *s.* Union of letters in the combination of words, எழுத்துப்புணர்ச்சி.

எழுத்துச்சாரியை—எழுத்தின்சாரியை, *s.* Particles employed to express the names of the letters—as அ with the consonants; கரம், காரம் and கான் with the short letters and sometimes with the consonants; காரம் with the long vowels and கான் with ஐ and ஔ. In common use, ன is used with the short, and ஆன and அன்னு with the long letters. Some other forms are also given in ancient grammars and they are also occasionally used.

எழுத்துச்சுருக்கம், *s.* A kind of play on letters by omitting one after another in regular succession, and thus changing the sense, ஓரணி.

எழுத்துச்சேலை—எழுத்துப்புடவை, *s.* A woman's fancy dress whether printed or embroidered, சித்திரவஸ்திரம்.

எழுத்துத்திரிதல், *v. noun.* Permutation of letters—the change of one letter for another according to grammatical rules, for the purposes of euphony, மூவிகாரத்தொன்று.

எழுத்துநடை, *s.* Easy and fluent reading.

எழுத்துப்படிய, *s. inf.* To become trained—as the hand to writing; to have a settled hand.

எழுத்துப்பதிக்க, *inf.* To indent in writing, பதியவெழுத. 2. To enter, write, imprint, settle an affair by writing.

எழுத்துப்பதிய, *inf.* To be indented—as writing, engraving. 2. To be entered, written.

எழுத்துப்பிழை—எழுத்துப்பிசகு, *s.* Error in spelling.

எழுத்துப்பொருத்தம், *s.* The five classes into which the letters are superstitiously divided. (See தசப்பொருத்தம்.) 2. Choosing a name for a child so as to begin with one of the letters ascribed in astrology to the lunar mansion, under whose influence the child is supposed to have been born, பிறந்தநட்சத்திரத்திற்குப் பொருந்தப்பெயரிடுகை.

எழுத்துமடக்கு, *s.* Repetition of the same letter in a verse, ஓரணி—as சா சாகரதம்கூடிவைசாகெடுக்கெழுதிவேலாய்.

எழுத்துவருத்தனம், *s.* A kind of diversion by means of poetry, a play on letters, the meaning changing as letters are added. See மிறைக்கவி.

எழுத்துவாசனை, *s.* The art of reading and writing, எழுத்துநடை.

எழுத்துவேலை, *s.* Chintz-painting, சீலையின்மீதெழுதுகை. 2. Writing, transcribing, copying, எழுதுந்தொழில்.

எழுத்தொலி—எழுத்தோசை, *s.* The sound of a letter.

நுணுக்கெழுத்து, *s.* A character or letter written unintelligibly.

கிறுக்கெழுத்து, *s.* A letter erased, cancelled; a letter badly written.

கூட்டெழுத்து, *s.* Double letters, letters written together in a contracted form—as க for க்க; ட for ட்ட; த for த்த, &c.

நீர்மேலெழுத்து, *s.* An inscription on the water—a simile expressive of that which is evanescent.

கல்மேலெழுத்து, *s.* An inscription on a stone expressive of that which is stable and enduring.

நல்லோரொருவர்க்குச்செய்தவுபகாரங்
கன்மேலெழுத்துப்போற்காணுமே—அல்லாத
ஈரமிலாநெஞ்சத்தார்க்கீந்தவுபகாரம்
நீர்மேலெழுத்திற்குநேர்.

The valued favors the deserving gain,
Like sculptures in eternal rock remain;
Of virtue's tribute charity is sure:
But kind attentions to the worthless shown,
Who debts and duties evermore disown,
Like letters written in the wave endure.

முதுவெழுத்து—தேறினவெழுத்து, *s.* Matured well-formed writing.

நிலவெழுத்து, *s.* Letters written on sand.

இளவெழுத்து, *s.* An immature hand not yet formed.

சுட்டெழுத்து, *s.* A demonstrative letter.

நெட்டெழுத்து, *s.* A long sounding letter.

சார்பெழுத்து, *s.* Depending letters of which there are ten kinds, viz.: 1. உயிர்மெய். 2. ஆய்தம். 3. உயிரளபு. 4. ஒற்றளபு. 5. குற்றியலிகரம். 6. குற்றியலுகரம். 7. ஐகாரக்குறுக்கம். 8. ஔகாரக்குறுக்கம். 9. மகரக்குறுக்கம். 10. ஆய்தக்குறுக்கம்.

முதலெழுத்து, *s.* The twelve vowels and the eighteen consonants.

வல்லெழுத்து, *s.* The six hard-sounding letters—as க், ச், ட், த், ப், ற்.

மெல்லெழுத்து, s. The six soft-sounding letters—as க், ஞ், ண், ந், ம், ன்.

இடையெழுத்து, s. The six middle-sounding letters, ய், ர், ல், வ், ழ், ள்.

வினாவெழுத்து, s. An interrogative letter.

குற்றெழுத்து, s. A short-sounding letter.

எழுநா, s. Fire, நெருப்பு. 2. Seven-tongued—as the god of fire; [ex எழு, seven, et நா, tongue.]

எழுப்பம், [prov. impr. for எழும்பல்.] Rising, getting up; rising—as from sickness, or from reduced circumstances, எழுச்சி. 2. The rising, running about, &c., of persons weak, delirious, சஞ்சரிக்கை. 3. Growth, elevation—as of a tree, height, உயர்வு.

அந்தமாடிந்தமாட்டைக்கெழுப்பம். That bullock is taller than this.

அவருக்குக்கால்கையெழுப்பமில்லை. He has not the use of his hands, or feet.

எழுப்பு, கிறேன், எழுப்பினேன், வேன், எழுப்ப, v. a. To awake, rouse, start, துயிலெழுப்ப. 2. To raise one that is prostrate, or sitting, cause, or help to rise, தூக்க. 3. To raise from the dead, resuscitate, restore to life, உயிரோடெழுப்ப. 4. To raise from sickness, excite, rouse, stimulate, inspire, பலம்வருவிக்க. 5. To instigate, agitate, cause a stir, a quarrel, war, சண்டையெழுப்ப. 6. To raise the voice in speaking or singing to a high pitch, இசையெழுப்ப. 7. To dislodge, or eject one, turn out, &c., கெலப்பிவிட. 8. To excite, or inflame the passions, stir up, கோபமூதவியவையெழுப்ப. 9. To raise a building, வீடெழுப்ப.

முயலையெழுப்பிநாயையுமுசுக்காட்டுகிறது. Starting a hare and setting dogs after it; i. e., to excite one to an action and then injure him perfidiously.

எழுப்பு, v. noun. Rousing, waking, எழுப்புகை.

எழுமான்—எழுமான்புலி, s. A plant, தீப்பூடு, Stapelia corymbosa, L.

எழுமை, s. Seven, septuple, எழு. 2. The seven kinds of transmigration, எழுபிறப்பு. 3. Height, உயர்ச்சி. (p.)

எழும்பு, கிறேன், எழும்பினேன், வேன், எழும்ப, v. n. To rise, ascend, &c., wake, with all the meanings of the verb எழு.

புகையெழும்புகின்றது. The smoke rises.

எழுவரைக்கூடு, s. A kind of arsenic, தீவகைப்பாஷாணம்.

எழுவாய், s. Beginning, origin, source, cause, ஆதி. 2. [in grammar.] The nominative case, the subject, முதல்வேற்றுமை; [ex எழு, rising, et வாய், place.]

எழுவாயும்பயனிலையும். The nominative and its verb, or other concluding word.—Note. In Tamil the substantive verb is rarely used.

இந்தக்காரியத்துக்கெழுவாயென்ன. What gave rise to this affair?

எழுவாயுருபு—எழுவாய்வேற்றுமை, s. The first, or nominative case, முதல்வேற்றுமை.—Note. The words ஆனவன், ஆனது, &c., which represent the nominative case are rarely expressed but understood.

எழுவாயெழுஞ்சனி, s. The tenth lunar mansion, மகநாள்.

எளிமை, s. Despicableness, meanness, lowness of rank, circumstances, character, &c., கீழ்த்தனம். 2. Pitiableness, exciting compassion, இரக்கப்படத்தக்கதன்மை. 3. Weakness, பலவீனம். 4. Easiness, facility, being easy to effect, acquire, attain, endure, to be understood; easiness of access, எளிது. 5. Solitariness, தனிமை; [ex எள்.]

எளிஞர்—எளியர்—எளியார்—எளியோர், s. The low, mean, destitute, the poor, தரித்திரர்.

எளிதரவு, [impr. for எளிவரல்.] Indigence, poverty, despicableness, cringing, தரித்திரம். 2. Lowness, humility, தாழ்மை.

எளிது, s. [impr. எளிசு.] Being easy of execution, acquisition, &c., இலேசு.

எளிதானகாரியம், s. A trifling thing, a trivial affair, a thing easily understood.

எளியகுடி, s. Poor, destitute inhabitants. 2. A family low in rank.

எளியகொடை, s. Unworthy gifts, presents unsuitable to the persons to whom they are made.

எளியது, s. That which is despicable, low, trifling, &c., எளிமையானது.

எளியவன்—எளியன், s. A man of low caste, a person poor, destitute, mean, &c.

எளியவன்பெண்டாட்டியெல்லாருக்கும்மைத்துனி. The wife of a poor man is free of access to every body.

எளியாரைவலியார்கேட்பின் வலியாரைத்தெய்வம் கேட்கும். If the powerful oppress the weak, the deity will require it of them.

எளியவிலை, s. Low price.

எளியவேலை, s. Low, menial work.

கைக்கெளியது, s. That which is portable, small, easily carried, stolen, secreted, managed, as a child, &c.

தாளையேதாமறிவிலாதெமக்கெளிதருகிவப்பிரகாசன். The guru (Sivaprakasa) who readily admits us to his feet; i. e., he is ready to grant our desires (சத.)

எள், s. [vul. எள்ளு.] One of the nine kinds of grain, sesamum, from the seeds of which an oil is extracted, used for food, bathing, &c., திலம். Sesamum orientale. See தானியம் and எண்ணெய்.—Note. The ள் of this word becomes ட் and ண் by permutation.

எள்ளைத்தினைமலையாக்கவுயர்த்தமாக்க. To make a mountain of a sesamum seed, to exaggerate.

எள்ளளவு—எள்ளுப்போல. As much as a sesamum seed, a very little.

எள்ளளவுநம்பிக்கையுமில்லை. Utterly unworthy of confidence. 2. Destitute of belief, confidence, &c.

எள்ளுக்குளெண்ணெய்போலெங்கும்நிறைந்தகடவுள். God who pervades the universe, as oil the sesamum seed.

எட்கடை—எட்கிடை—எட்பிரமாணம். As much as a sesamum seed, எள்ளளவு. 2. A standard of measure in regard to space, நிரைவு—eight எள் make a நெல் or grain of rice; eight grains of rice one அங்குலம், an inch, &c.

எட்பாகு, s. A kind of porridge made of sesamum seed, எள்ளுப்பாகு.

எண்ணெய், s. [impr. எண்ணை.] Rape-seed oil. 2. (fig.) A common name for oils of all kinds.

எண்ணெயூற்ற, inf. To express oil, எண்ணெய்வடிக்க.

எண்ணெயெரிக்க, inf. To prepare medicinal oils by burning, in which the drugs are rolled up in a bit of cloth which is dipped in oil and set on fire; the oil which drops from it is used as a medicine, தைலமெரிக்க.

எண்ணெய்க்கறுப்பு, s. The color of rape-seed oil, or dark brown.

எண்ணெய்க்கறுப்பி, s. A female whose skin resembles rape-seed oil, not so much in regard to its color as its soft and beautiful appearance.

எண்ணெய்க்காப்பு, s. Oil for bathing an idol, எண்ணெயபிஷேகம்.

எண்ணெய்க்காரன், s. An oil-monger, எண்ணெய்விற்போன்.

எண்ணெய்ச்சாணை, s. A hone prepared for use by oiling.

எண்ணெய்ச்சாயம், s. Oil paint, எண்ணெயால்செய்யப்பட்டசாயம். 2. Dyeing a cloth red after soaking it in margosa oil, எண்ணெயிற்றோய்த்தேற்றப்பட்டசாயம்.

எண்ணெய்ச்சிக்கு, s. Indigestion produced by eating oily food, எண்ணெய்வயிற்றிற்றங்குகை. 2. A clotted state of the hair from the oil not being well washed out, எண்ணெய்மயிரில்விடாமை. 3. A bad smell—as of oil, எண்ணெய்நாற்றம்.

எண்ணெய்ச்சீலை, s. Cloth dipped in oil to be applied to wounds, எண்ணெய்த்துணி. 2. A piece of cloth put round the waist before bathing, எண்ணெய்க்கோவணம்.

எண்ணெய்தேய்க்க, inf. To rub oil.

எண்ணெய்தொட்டுப்பொட்டுவைக்க, inf. To dip the finger in oil before bathing dropping seven drops on the floor for the சிரஞ்சீவியர், who are supposed in consequence to grant long life.

எண்ணெய்பிறக்க, inf. To form as oil by boiling.

எண்ணெய்பூச, inf. To oil, anoint, besmear with oil.

எண்ணெய்பொருத்த, inf. To put medical oil on the head or other parts of the body, and to rub it in, மருந்தெண்ணெய்பூச.

எண்ணெய்ப்பற்று, s. Adherence of oil or unctuous matter to the bowels, hair, clothes, &c., oil, greasy substance in food—as in fish or on the dress from cooking, எண்ணெய்ச்சிக்கு.

எண்ணெய்வழுக்கு, v. noun. Being greasy—as oil, &c., எண்ணெய்ச்சிக்கு. 2. Shining, sleek, glossy, bright, எண்ணெய்மினுக்கு.

எண்ணெய்வாணிகன், s. An oil-monger, எண்ணெய்விற்போன்.

ஆமணக்கெண்ணெய், s. Castor oil.

தலைக்கெண்ணெய், s. Oil for the head.

கற்கொத்தி, *s.* A species of wild pigeon—as கற்பொறுக்கிப்புறு.

கற்சட்டி, *s.* A stone-pot, கல்லினாற்செய்தசட்டி.

கற்சரீரம், *s.* A hard, stone-like body, whether of men or brutes, வன்மையானவுடல்.

கற்சாகம், *s.* Emerald, மரகதம். (*M. Dic.*)

கற்சாடி, *s.* A stone-jar, a stone-pitcher, கல்லினாற்செய்தசாடி.

கற்சிற்பர், *s.* Stone masons, brick-layers, stone-cutters, &c., கற்றச்சர். See சிற்பர்.

கற்சுண்ணாம்பு, *s.* Stone-lime.

கற்சுவர், *s.* A brick or stone-wall, கல்லினாற்செய்தசுவர்.

கற்படி, *s.* A stone-step, or flight of stone-steps, கல்லினாற்செய்தபடி.

கற்படுக்க, *inf.* To pave, கற்பதிக்க.

கற்படை—கற்புழை, *s.* A secret way into a fort, a sally-port, கோட்டையிற்கள்ளவழி.

கற்பதிக்க, *inf.* To pave, கல்லுப்படுக்க. 2. To set precious stones, enchase, மணிபதிக்க.

கற்பதித்தவிடம்—கற்படுத்ததரை, *s.* A paved place.

கற்பரன், *s.* A kind of native arsenic, வெள்ளைப்பாஷாணம்.

கற்பரிபாஷாணம், *s.* A kind of arsenic occurring in rocks, அதம்பம்.

கற்பலகை, *s.* A slate, a stone-slate.

கற்பற்று, *s.* Stony concretion in chemical preparation, minerals, &c., to be cleared away, இட்டகல்.

கற்பாசி, *s.* A dried pale-colored rock moss.

கற்பாடு, *s.* [*prov.*] Stony ground left uncultivated, கல்லுள்ளவிடம்.

கற்பாஷாணம், *s.* A kind of native arsenic.

கற்பாவை, *s.* A figure made of stone, a statue.

கற்பாழி, *s.* A cavern in a rock, மலைக்குகை.

கற்பாறை, *s.* A rock, கற்றிட்டை.

கற்பூசரம், *s.* A mountain containing lead, ஈயமலை. (*M. Dic.*)

கற்பூமி, *s.* Stony ground, கல்லுள்ளபூமி.

கற்பை, *s.* [*prov.*] A merchant's or jeweller's bag of weights, scales, touch-stone, &c., நிறைகற்பெய்யும்பை.

கற்பொடி, *s.* Green vitriol, அன்னபேதி.

கற்றச்சன், *s.* A stone-cutter, a hewer of stone, கல்லடிப்பவன்.

கற்றளம், *s.* A floor of stone, a pavement.

பருக்கைக்கல்—பருக்காங்கல், *s.* A gravel stone.

பச்சைக்கல், *s.* Green stone, green quartz, Avanturine. 2. A green stone, Diallage. (*Dr. Heyne.*) 3. The same as கதிக்கும்பச்சை.

விஷக்கல், *s.* A stone applied to the bite of snakes.

குருந்தக்கல், *s.* The same as குருந்தம்

நெருப்புக்கல், *s.* Lapis infernalis, Nitrate of silver, காடிக்காரம். (*M. Dic.*)

மாக்கல், *s.* Steatite, Spanish chalk, a whetstone.

துருக்கல், *s.* Iron stone.

குழிக்கல், *s.* The same as கலுவம்.

கருங்கல், *s.* Black or blue stone, black Hornblende, Sienite. See Dr. Ainslie's Mat. Med.

காய்ச்சுகல், *s.* A counterfeit gem.

தீட்டுகல், *s.* A whetstone.

வெண்கல், *s.* White stone, quartz.

தேய்கல், *s.* A touchstone.

கல், கற்கிறேன், கற்றேன், கற்பேன், கற்க, *v. a.* To learn, study, acquire knowledge, கல்விகற்க. 2. To practise arts, the use of arms, படைக்கலமுதலியபயில.

கற்கசடறக்கற்பவைகற்றபினிற்கவதற்குத்தக. Learn perfectly what thou hast to learn, and when thou hast learned it, act upon and persist in it. (திருவள்.)

கல்லாதவன், *s.* An illiterate, ignorant man, an idiot.

கல்லாமை, *v. noun.* Want of learning, ignorance.

கல்லார், *s.* Unlearned, illiterate men, அறியாதார். 2. Low people, கீழ்மக்கள்.

கற்போன், *s.* A scholar, a pupil, மாணாக்கன்.

கற்றவர்—கற்றார்—கற்றோர், *s.* The learned, படித்தவர். 2. Poets, புலவர்.

கற்றறிமூடன், *s.* A learned fool, one who knows but does not practise (morality, &c.).

கற்றறிவு, *s.* Acquired knowledge, learning.

கற்றுக்குட்டி, *s.* A very young scholar, கற்குஞ்சிறுவன். 2. One who has acquired a smattering of knowledge—as taught him without exercising judgment; a superficial scholar, சிறிதுகற்றவன்.

கற்றுக்கொடுக்க, *inf.* To instruct.

கற்றுக்கொள்ள, *inf.* To learn.

கற்றுச்சொல்லி, *s.* A poet's assistant who learns and sings his verses, துணைக்கவிஞன்.

கற்றல், *v. noun.* Learning.

கற்றல்கேட்டல்பயிறல். In making an accomplished scholar, study, enquiry or (hearing), intercourse with the learned are necessary.

கல்—கல்லு, கிறேன், கல்லினேன், கல்லுவேன், கல்ல, *v. a.* To work away earth, pebbles, &c., gradually, அகழ. 2. To dig out by little and little—as a hole, a tank, &c., to hollow, தோண்ட. 3. To scoop out—as a nut, குருவ. 4. To wash away earth, &c., by little and little—as flowing water, கீக்கல்ல. 5. To eat away—as caustic, அரிக்க. 6. [*prov.*] To catch and tear up the fibre in an ola when writing—as a style by being too sharp, எழுத்தாணிக்கூர்கல்ல.

இக்காரங்கல்லிக்கல்லியெடுத்துப்போடும். This caustic will eat away (the proud flesh).

மலைகல்லியெலிபிடிக்க. To excavate a mountain to catch a rat; i.e. to take great pains or be at great expense for little profit.

கல்லிக்கல்லிப்பாய, *inf.* To wash away in flowing.

கல்லல், *v. noun.* The act of digging, தோண்டல். 2. *s.* The noise issuing from a crowd, பேசலாலெழுமொலி.

கல்லணை, *s.* A saddle, குதிரைச்சேணம்.

கல்லத்தி, *s.* A tree, ஓரத்திமரம்.

கல்லழிஞ்சில், *s.* A species of அழிஞ்சில்.

கல்லாடம், *s.* A work on the third part of grammar, ஓர்நூல்.

கல்லாடர், *s.* The author of the above, கல்லாடஞ்செய்தபுலவர்.

கல்லாரம், *s.* The red water-lily, செங்குவளை. 2. A water-plant, கிடகுளிரி, Damasonium Indicum, *L.*

கல்லாலமரம்—கல்லால், *s.* The stone-banyan tree under the shade of which Siva sat when he taught wisdom, ஓராலமரம், Ficus verus.

கல்லி, *s.* A tortoise, ஆமை. 2. A sparrow, ஊர்க்குருவி. (*p.*) (சது.) 3. (*Hin.*) A triangular piece of cloth, a gore in the long coat of a Hindu jacket.

கல்லிச்சி—கல்லித்தி, *s.* A species of இத்தி tree.

*கல்லியம், *s.* Toddy, fermented liquor, கள். (*p.*)

கல்லுக்கலைக்காத்தான், *s.* A plant called பொன்னாங்காணி.

கல்லுண்டை, *s.* A kind of rice, ஓர்நெல்.

கல்லுருணி, *s.* A kind of parasite growing on the branches of trees, புல்லுருவி.

கல்லுருவி, *s.* A kind of herb, ஓர்பூடு, Ammannia densiflora, *L.*

கல்லுளுவை, *s.* A fish, ஓர்மீன். See உளுவை.

கல்லூரி, *s.* An academy, college, a school where the arts and sciences are taught and practised, கல்விபயிலுமிடம். (*p.*)

கல்லெனல், *v. noun.* An imitative sound, ஒலிக்குறிப்பு.

கல்லை, *s.* The knob of a wooden sandal, பாதக்குறட்டின்குமிழ். (*p.*) 2. Leaves stitched together with fibre, இலைக்கலம். (பிங்.) 3. Calumny, aspersion, தூறு.

கல்லைகுத்த—கல்லைதைக்க, *inf.* To stitch leaves together—as a temporary plate.

கல்லைசெய்ய, *inf.* To defame.

கல்லைப்பட்டுப்போனவன்—கல்லைப்பட்டவன், *s.* One who is defamed or ill-spoken of.

கல்லோலம், *s.* Billows, waves, surges, கடற்றிரை. 2. Ripple, புனற்றிரை. (*p.*)

கல்லோலங்கடாலாட்ட. The waves lulling to repose—

கல்வம்—கலுவம், *s.* (*Tel.*) A nether hollow grinding stone, a kind of mortar, குழியம்மி.

கல்வி, s. Learning, erudition, study, அறிவு. 2. Science, literature, வித்தை. 3. Arts, practice, சத்தை. 4. Scientific works, நூல்.

கல்விகற்க, inf. To acquire learning, &c.

கல்விக்களஞ்சியம், s. A repository of learning, or a learned man.

கல்விக்கிருப்பிடம், s. The seat of learning, or a very learned man.

கல்விச்சாதனம், s. The elements or rudiments of science.

கல்வித்திறம், s. Ability, சாமர்த்தியம்.

கல்வித்துறை, s. Branches of a science. 2. Any science, literature.

கல்விநூல், s. Scientific or literary works.

கல்விபயில, inf. To learn and practise arts and sciences.

கல்விபயிலிடம்-கல்விபயிலுமிடம், s. A school for the arts and sciences, a college, a seminary.

கல்விப்பரிட்சை, s. Experimental acquaintance with science, literature, &c.

கல்விப்பொருள், s. Learning considered as property, in distinction from செல்வப்பொருள், substance or material wealth.

கல்விமதம், s. Pride of learning.

கல்விமான், s. A learned man.

கல்வியறிவு, s. Acquired knowledge.

கல்வியூரி, s. A school especially for the arts and sciences, a seminary, a college, கல்லூரி.

*கவசம், s. Armor, mail, a jacket or coat-of-mail, சட்டை. 2. An incantation repeated for defence, மந்திரம். 3. An amulet, a charm worn as a defence from evil, phylactery, spell, காப்பு. 4. The mystical syllable *hum*, forming part of a mantra and considered as a preservative or armor inscribed or carried about the person as a charm, மந்திரத்திலோருறுப்பு. (p.) 5. (c.) A lute, a clayey composition with which chemists close vessels, சீலமண். Wils. p. 204. Kavacha. 6. A medicinal composition, used as a cover for medicines for reducing them to ashes, மருந்துக்கவசம்.

கவசகுண்டலன், s. The king கன்னன்—said to have been born with a coat-of-mail and ear-rings, கவசத்தோடுங்குண்டலத்தோடும்பிறந்தகன்னன்.

கவசங்கட்ட, inf. To bind or restrain malignant deities, &c., by repeating the defensive incantations, as the initiatory part of the daily worship, in order to prevent their depriving the worshipper of the benefit, &c., மந்திரத்தினாற்காப்புபண்ண. 2. To cover or overspread with loam or clay, to lute, சீலமண்வாய்கட்ட.

கவசந்தரிக்க, inf. To put on a coat-of-armor.

கைக்கவசம், s. A gauntlet, an iron glove used for defence.

மெய்க்கவசம், s. A jacket, a coat-of-mail.

மார்க்கவசம், s. A breast-plate.

தோற்கவசம், s. A leathern jacket.

கவடம், s. See கபடம்.

கவடி, s. A small sea-shell used in Bengal as coin, a cowry, பலகறை. 2. A kind of play, leap-frog, ஒர்விளையாட்டு.

கவடிபாய, inf. To play at leap-frog and other leaping games.

கவடு, s. A branch of a tree, மரக்கொம்பு. 2. A forked branch, கவர்க்கோடு. 3. A rope for the neck of beasts, a halter, கழுத்திலிடுங்கயிறு. 4. An elephant rope, யானைகட்டுங்கயிறு. (p.) 5. [prov.] The opening of the thighs whether extended or not, தொடைச்சந்து. 6. [vul.] Fraud, deceit, கபடம். 7. A stride, the length of a step, a pace, இடப்படி.

அவன்கவட்டிலேநுழைந்தான். He passed between the extended legs of the other; i.e. he has submitted to him.

கவடுவிட, inf. To grow forked as a branch.

கவடுவைக்க, inf. [prov.] To pace, straddle, stride.

கவடுள்ளமனம், s. A cunning, deceitful mind.

கவட்டடி, s. [prov.] A stride, a pace.

கவட்டுக்காலன், s. A bandy-legged person, a straddler, விரிக்காலன்.

கவட்டுநெஞ்சன், s. A cunning, artful, sly, designing person, கபடன்.

கவட்டு, கிறேன், கவட்டினேன், வேன், கவட்ட, v. a. To chew, masticate, மெல்ல. (கம்.) (p.)

கவட்டல், v. noun. The act of chewing, மெல்லல்.

கவட்டை, s. [prov.] The fork of a branch, கவர்.

கவணம், s. A bandage for a wound, காயங்கட்டு.

கவணங்கட்ட, inf. To bind up, to dress a wound.

கவணி, s. [vul.] Muslin, ஒர்சீலை.

கவணிச்சால்வை, s. [prov.] A muslin shawl.

கவணிப்புடவை, s. Muslin.

கவணை, s. A sling, கவண். 2. A place for putting grass or straw for cattle to eat, மாட்டுக்குப்புல்லிடுமிடம்.

கவண், s. A sling, கல்லெறிகருவி.

கவணெறிய—கவண்வீச, inf. To sling.

கவண்கல், s. A stone cast by a sling.

கவண்காரன், s. A slinger.

கவண்சுழற்ற, inf. To whirl a sling, to sling.

கவண்டர், s. Scoundrels, rogues, சண்டாளர். 2. A caste so called, ஒர்சாதியார்.

கவண்டி — கவண்டு, s. [vul.] A sling, கவண்.

கவண்டெறிய — கவண்டாலெறிய, inf. To sling.

*கவந்தம், s. Headless bodies, உடற்குறை. 2. Water, நீர். Wils. p. 190. Kavand'ha. (p.)

கவந்தன், s. An Asoor whose body wants the head, ஒரசுரன். Wils. p. 190. Kavand'hah.

கவம்—கவ்வம், s. (Tel. కవ్వము.) A churning stick, மத்து. (p.) 2. [as கபம்.] Phlegm.

கவக்குன்று—கவ்வக்குன்று, s. The mountain Mandara with which the gods churned the ocean.

*கவயம்—கவயல், s. A species of ox, the gayal or wild cow, காட்டா, Bos gawns bison. Wils. p. 286. Gavaya. (p.)

*கவரம், s. A long flexible brush, used both as a whisk and as a fan, சாமரம். Wils. p. 204. Kavara. 2. Fury, rage, wrath, சினம். (p.)

*கவராசம்—கவராயம், s. A pair of compasses, கவருசி. (c.)

கவராசமிட, inf. To draw a circle with compasses.

*கவரி, s. The yac or bos grunniens, கவரிமா. 2. A hair fan formed of the tail of the yac used for fanning idols at temple festivals, சாமரை. 3. (c.) A buffalo, எருமை. 4. A car, a chariot, தேர். (பாதி.) (p.)

கவரிமா—கவரிமான், s. The yac, கவரிமிருகம்.

கவரிறுக்கு, s. A kind of tree, கடல்புரம், Gyrocarpus jacquini.

கவரெழுசங்கம், s. A kind of shrub, முட்சங்கம், Monetia tetracantha, L.

கவர், s. A bifurcated branch, மரக்கப்பு. 2. Divarication of branches, roads, rivers, &c., இரண்டாகப்பிரிகை. 3. Prong of a trident, fork, &c., tooth, tine, spike, சூலத்தின்கவர். 4. A cavity or a kind of mortice on the top of a gate or door post to receive a beam. 5. (p.) (சூ.) A plantain tree, வாழை.

கப்புங்கவருமானமரம். A tree with forked branches.

கவராறு, s. The branching or junction of rivers.

கவர்க்கால், s. A forked prop. 2. A tree with forked branches.

கவர்க்குளம்பு, s. A cloven foot.

கவர்க்கொம்பு, s. A bifurcated branch.

கவர்த்தடி, s. A forked stick used as a pitch-fork, கவர்க்கோல்.

கவர்பட, inf. To be ambiguous—as language, இருபொருள்பட. 2. To hesitate, fluctuate, சிக்குப்பட.

கவர்படுமொழி, s. An ambiguity, இருபொருள்படுமொழி.

கவர்வழி, s. A place where a road divides itself into two, பிரிவழி.

கவர்விட, inf. To grow forked, divaricate, diverge, கப்புவிட. 2. To be ambiguous—as words or language, இருபொருள்பட. 3. To be undecided, சந்தேகப்படுக. 4. To ramify or branch out —as a subject, கிளைக்க.

கவர்ப்பு, v. noun. Forking, bifurcation, ramification.

கவர்—கவருு, கிறேன், கவர்ந்தேன், வேன், கவ, v. a. To seize, grasp, catch, capture, bereave, take by force or stealth, பறிக்க. 2. To ravish, charm, captivate, attract, arrest, இழுத்துக்கொள்ள. 3. To rob, steal, plunder, pillage, கொள்ளையிட. 4. To embezzle, appropriate by force or stealth, திருட. 5. To engross, usurp, grasp in large quantities, மிகக்கொள்க. 6. To carry off, வார. 7. (p) To lust after, இச்சிக்க. 8. To churn, turn by trituration or attrition, கடைய.

கண்கவர்வனப்பு, s. Beauty that captivates the sight.

கவர்ச்சி, v. noun. Seizure, grasp, captivation, bereavement, attraction.

கவர்தல், v. noun. Plundering, கொள்ளையிடல். 2. Stealing, திருடல். 3. Inflamed desire or lust, ஆசைப்பெருக்கம். 4. Churning, கடைதல். 5. Carrying off, வாருதல்.

கவர்வு, v. noun. Seizure, grasp, &c.

கவலை, s. Care, anxiety, solicitude, விசாரம். 2. Regret, sorrow, distress, affliction, grief, துக்கம். 3. A kind of creeping plant with a beautiful flower and yielding an edible root, நர்கொடி. 4. Red millet, செந்தினை. 5. Concern, அக்கறை. 6. (p.) Fear, dread, அச்சம். 7. Disease, pain, நோய். 8. A basket of leather to draw water, கிணற்றுக்கேற்றகூடை. 9. Cross roads, சந்தி. 10. Diverging roads, கவர்வழி. 11. A branch, the forking of branches, a fork, மரக்கொம்பு. இப்போதனக்குக்கவலையில்லாததாலிதைஎழுது.... Write this since thou art not otherwise occupied.

கவலைகொள்ள, inf. To be concerned, anxious, sorrowful; to regret.

கவலைப்பட, inf. To be concerned, be solicitous, be anxious, to care. 2. To lament, sorrow, regret.

கவலைபாய்ந்துபோக — கவலையாயிருக்க, inf. To be careless or confused.

கவலையேற்றம், s. A machine for drawing water by a rope, passing over a wheel and attached to a leathern basket.

தீராக்கவலை, s. Unceasing, unabating, interminable sorrow.

கவல், s. Care, affliction, கவலை. (சதிகை.) (p.)

கவல், கிறேன், கவன்றேன், வேன், கவல, v. n. To be anxious, concerned, distressed, to be in anguish, கவலைப்பட. 2. To regret, sorrow, lament, mourn deeply—as for a near relative or dear friend; to bemoan, புலம்ப. 3. To be afflicted either bodily or mentally, துன்பப்பட. 4. To sound indistinctly, பேசலொலிசெய். (p.)

கவலல், s. Concern, a noise issuing from a crowd, பேசலொலுமொலி.

கவறல், v. noun. Sorrowing, grieving, வருந்துதல்.

கவற்சி, v. noun. Concern, deep care, anxiety, grief, sorrow, anguish, வருத்தம்.

கவவு, கிறேன், கவவினேன், வேன், கவவ, v. n. To put in, insert, inclose, அகத்திட. (p.)

கவவு, v. noun. Rolling in, inclosing, insertion, அகத்திடுகை.
கவவுக்கைநெகிழாமல். The arm that embraces (her) remaining unrelaxed—

கவழிகை, s. Curtains, திரைச்சீலை. (p.)

*கவளம், s. A morsel, a mouthful of food, வாயளவுகொண்டவுணவு. Wils. p. 204. Kavala. 2. A ball of rice or other grain for an elephant, யானைக்களிக்குங்கவளம். 3. Boiled rice, சோறு.

கவளங்கொடுக்க — கவளம்போட, inf. To feed elephants with balls of rice. 2. To put the rice into the mouth in large lumps.

கவளி—கவளிகை, s. [vul.] A bundle of one-hundred betel leaves, வெற்றிலைக்கட்டு.

கவளிகரி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. a. To take food—as an elephant, விழுங்க. 2. To devour, அதிகமாகவிழுங்க. 3. To deprive others of their property, அபகரிக்க. (c.)

கவறு, s. Dice, சூதாடுகருவி. 2. [prov.] Palmyra timber, பனம்பட்டை.

கவறுபோட — கவறுருட்ட — கவறெறிய, inf. To cast dice.

கவறை, s. A tribe of natives in Southern India, நாயுடு—also called கவறைவடுகர். (c.)

கவறைச்செட்டி, s. An inferior division of the செட்டி caste.

கவனம், s. Attention, care, heedfulness, mindfulness, notice, intentness, mental application, observance, கருத்து. 2. (p.) Rapidity, celerity, velocity, வேகம். 3. The paces of a horse, குதிரைநடை. 4. Perplexity, bewilderment, கலக்கம். 5. Vehemence, கடுப்பு. 6. Jungle, forest, desert, காடு. 7. Army, படை.

கவனமாய், adv. Attentively, carefully, intently.

கவனமில்லாமை, neg. v. noun. Neglectfulness, inattention, heedlessness.

கவனன், s. A quick person, a person of penetration. (p.)

கவனி, s. A kind of arsenic in its natural state.

கவனி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. and v. n. (c.) To be attentive, to attend to, take notice of, to heed, observe, exercise thought, சிந்திக்க.

கவனித்துக்கேட்க, inf. To hear attentively.

கவனித்துப்பார்க்க, inf. To look at with attention, to heed, observe.

கவனிப்பு, v. noun. Attention, care, கவனிக்கை.

கவா—கவாச்சி, s. [as வெள்ளைக்காக்கணம்.] A medicinal plant bearing a blue flower, Clitoria ternatea, and its variety, with a white flower.

*கவாடம், s. [as கபாடம்.] A door, கதவு. Wils. p. 204 Kavata.

கவாடம், s. A bullock load of grass or straw, பொதி. (c.)

கவாடக்காரன், s. One who conveys such loads on bullocks.

*கவாட்சம்—கவாட்சி, s. A round window, வட்டச்சாளரம். Wils. p. 286. Gavaksha.

கவாத்து—கவாய்த்து, s. (For.) Military exercise, ஆயுதப்பயிற்சி. (Rott.)

கவாய்—கபாய், s. (Port.) A kind of Turkish garment, மெய்ப்பை.

கவாளம், s. Horse physic, ஓர்மருந்து. (Old Dic.) 2. (Rott.) A dressing of a wound, கவளம்.

கவான், s. The thighs, the lap, தொடை. (p.)

*கவி, s. Planet venus, சுக்கிரன். 2. A poet, a versifier, புலவன். Wils. p. 204. Kavi. 3. An ape, a monkey, குரங்கு. 4. A plant, பூனைக்காலி. 5. One of the four classes of poets, கற்கவி. (See புலமைபேர்.) 6. Poetry, verse, a stanza, பாட்டு. (p.) Poetry is of four kinds, viz.: 1. ஆசுகவி, an extemporaneous poem made by request, the theme, the kind of verse and some of the rhetorical figures to be wrought into it being given. 2. மதுரகவி, a poem in which sublime and gratifying ideas are couched in rich language, with varied appropriate rhymes and rhetorical figures, and all in a sweet flowing style. 3. சித்திரகவி, a poem variously or artfully composed. (See மிறைக்கவி.) 4. வித்தாரகவி, an extended poem, such as the great epics Ramayana and Bharata.—Note. Each of these four is also applied to the poet as well as to the poem.

கவிகட்ட—கவிபாட, inf. To make verses.

கவிகற்றோர், s. Panegyrists attending a prince in his movements, மங்கலப்பாடகர்.

கவிசொல்ல, inf. To make poetry.

கவிச்சக்கரவர்த்தி, s. A distinguished poet, புலவன்.

கவிஞர், s. Poets, bards, புலவர். 2. Scientific persons, கலைவல்லோர். (p.)

கவிதை, s. A poem, poetry, verse, a verse of poetry, stanza, பா. (p.)

கவித்துவம், s. Poetic style or composition, புலமைத்தன்மை.

கவிநாயகன், s. The person to whom a poem is dedicated, who is also the hero, கவிக்கிறைவன்.

கவிமாலை, s. Verses joined together.

கவிரத்தினம், s. A treatise on versification.

கவிராயன், s. (Hon.) A poet, புலவன்.

கவிவல்லோர்-கவிவாணர், s. Learned poets, bards, புலவர்.

கவிவீரராகவமுதலியார், s. The names of two eminent poets, viz.: அந்தககவிவீரராகவமுதலியார்—முத்தமிழ்க்கவிவீரராகவமுதலியார், the first of whom is said to have been born blind. (Rott.)

கவீசுரர், s. Eminent poets.

கவி, கிறது, ந்தது, யும், ய, v. n. To cover, over-spread, bend in or over, overshadow—as branches of trees, the heavens, the clouds, &c.; to canopy, over-spread, bend over, கவிய. 2. To be eager, intent, earnest; to have the mind bent upon a thing, விரும்ப. (p.)
மேகங்கள்மலைச்சிகரத்தைக்கவித்துகொண்டன. The clouds have covered the mountain top.
அவன்மனங்கவிந்திருக்கின்றது. He is very eager after it.
வான்கவித்தவையகமெல்லாம்பெறினும். Though the whole world canopied by the heavens be thy reward—

கவிகை, *v. noun.* Bending, being concave, கவிவு. 2. *s.* An umbrella, குடை. 3. Liberality, munificence, ஈகை. (*p.*)

கவிதல், *v. noun.* Bending.

கவிவு, *v. noun.* Bending, bent down, concave, inclined.

தாழ்வாரங்கவிவாயிருக்கிறது. The lower part of the roof is too much depressed.

கவி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To cover—as with an umbrella; to canopy, over-spread, bend inwards, மூட. (*p.*)

குடைகவித்தான். He covered himself with an umbrella.

கவிப்பு, *v. noun.* Covering, concavity, a bending, curvity, flexure, inclination, மூடுகை. 2. *s.* An umbrella, a canopy, குடை. (*p.*) 3. In divination by astrology, the signs which stand as many signs forward from the rising sign, as the situation of the sun is from the ஆருடம், இராசிக்கவிப்பு. (See ஆருடம் and உதயம்.) 4. Partiality, affection, bias, favoritism, மனக்கவிப்பு.

அவரிவர்கள்மேலேகவிப்பாயிருக்கிறார். He is partial, favorably inclined, &c., toward them.

கவிகம், *s.* A gum, குக்கில். (*Rott.*)

கவிகுருந்தம், *s.* A kind of arsenic, கந்தகபாஷாணம்.

கவிசனை, *s.* (*local.*) A wrapper, an envelope, a cover, உறை.

கவிசினம், *s.* [*prop.* கௌபீனம்.] The under-cloth or fore-flap, கோவணம்.

கவிசினங்கட்ட, *inf.* To fasten up the fore-flap.

கவிசை, *s.* A tumor or swelling in the belly, ஓர்நோய். (*Rott.*)

கவிச்சு, *s.* [*vul.*] Stench of fish, raw flesh, bad eggs, &c., புலால்.

கவிச்சடிக்க, *inf.* To smell rankly.

இரத்தக்கவிச்சு, *s.* The odor of blood.

மீன்கவிச்சு, *s.* The smell of fish.

கவித்தம், *s.* See கபித்தம்.

கவிப்பர், *s.* Chitties, the caste, செட்டிகள். (*p.*)

*கவியம், *s.* A bridle, reins, கடிவாளம். (*p.*) 2. (*Anat.*) Frænum. Wils. p. 204. KAVYA.

கவிரம், *s.* The oleander plant, அலரி, Nerium odorum, *L.* (*p.*)

கவிர், *s.* A thorny tree of rapid growth used for hedging, and for the support of betel vines, &c., முள்முருக்கு, Erythrina Indica, *L.* (*p.*)

கவிழ், கிறது, ந்தது, கவிழும், கவிழ, *v. n.* To be capsized, turned bottom upwards, turned down, தலைகீழாக. 2. To hang down the head with modesty, shame, confusion, &c., தலையிறக்க. 3. To stoop, lower one's self, குனிய. 4. To be subverted, overthrown, routed, destroyed, demolished, கெட. 5. (*p.*) To be discomfited, தோற்க. 6. To die, perish, இறக்க. (ஸ்கா.)

கவிழ்த்துபோனான். He is dead (as a vessel sunk).

கவிழ்மதத்தகைம்மா. The elephant from whose temples the secretion flows.

குடத்தண்ணீர்கவிழ்ந்துபோயிற்று. The pot of water is over-turned.

கவிழ—கவிழ்ந்துவிழ, *inf.* To fall headlong.

முகங்கவிழ, *inf.* To be put to shame.

தோணிகவிழ, *inf.* To be capsized or sunk—as a dhoney.

தலைகவிழ, *inf.* To hang the head.

எல்லாருக்குந்தலைகவிழுகிறவன். One who is obeisant, civil, &c., to every one.

தலைகவிழப்பேச, *inf.* To abuse one so as to cause him to hang his head.

கவிழ்ச்சி—கவிழ்வு, *v. noun.* Overturning, subversion, கவிழ்கை.

கவிழ், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To turn upside down, turn partly over, to capsize, invert, கவிழச்செய்ய. 2. To subvert, overthrow, discomfit, destroy, கெடுக்க.

தன்வாய்க்கஞ்சியைக்கவிழ்த்துப்போட்டான். He has upset the congee of his own mouth; i. e. he has deprived himself of his maintenance.

தேசத்தைபொருகாற்கீழ்மேலாய்க்கவிழ்த்துப்போட்டான். He has once turned the country upside down; i. e. made a great change in public affairs.

கவிழ்த்திட—கவிழ்த்துவிட, *inf.* To turn upside down, &c.

கவிழ்த்தல்—கவிழ்ப்பு, *v. noun.* Over-turning.

கவினம், *s.* Bridle, reins, கடிவாளம். 2. Butter, வெண்ணெய். (*Rott.*)

கவின், *s.* Beauty, grace, fairness, comeliness, elegance, அழகு. (*p.*) 2. (*fig.*) The appropriate qualities, characteristics of a person or thing, தக்கபண்பு.

கவினறுந்தும்பையுங்கொன்றைபுஞ்சூடிபகண்ணுதல். The frontal-eyed beautiful Siva adorned with garlands of தும்பை and கொன்றை flowers.

கவின்—கவினு, கிறது, கவின்றது, கவினும், கவின, *v. n.* To be beautiful, fair, graceful, comely, elegant, அழகாயிருக்க. (*p.*)

கவினம், *s.* A place where cattle have grazed, பசமேய்ந்தஇடம். (*p.*)

கவுசி, *s.* Fainting, குழைவு. 2. Affliction, வருத்தம். (*p.*)

கவுடி, *s.* A mode of singing, ஓர்பண். (*p.*)

கவுதாரி, *s.* A partridge, ஓர்பறவை, Tetrao cinerea, *L.*

கவுல், *s.* (*Hin.*) A treaty, capitulation, உடம்படிக்கை. 2. [*prov.*] A bad smell, நாற்றம்.

கவுள், *s.* The cheeks, கதுப்பு. 2. The jaws of an elephant, யானைக்கதுப்பு. 3. The frontal sinus of the elephant whence flows a secretion called the rut, யானைமதம்பாயிடம். (*p.*)

கவுனி, *s.* A kind of arsenic in its natural state, குதிரைப்பாஷாணம். 2. (*Tel.*) [*prov.*] The gate of a fort, வாசல்.

கவை, *s.* The fork of a branch or tree, மரக்கப்பு. 2. Cross roads, diverging paths, கவர்வழி. 3. Desert, wood, jungle, காடு. 4. Fort, fortification, கோட்டை. (*p.*) 5. (*c.*) Concern, business, வேலை. 6. (*Anat.*) Sigmoid, notch, எலும்புக்கவை.

கவைக்கொம்பு, *s.* A forked branch. 2. A forked horn, antler.

கவைத்தடி, *s.* A forked stick. 2. A pitch-fork.

கவைத்தாள், *s.* A crab, நண்டு.

கவைநா, *s.* Snake, பாம்பு.

கவையடி-கவைக்குளம்பு, *s.* Cloven foot, பிளவடி.

கவ்வாணம், *s.* A kind of singing or tune, ஓர்பண். (சது.)

கவ்வு, *s.* Fork of a branch or horn, கவர். 2. Greatness, பெருமை. (*p.*) 3. A mouthful, grasp of the mouth.

கவ்வை, *s.* Care, &c. See கௌவை.

கவ்வைபார்க்க, *inf.* To be employed, to attend to business.

கழகம்—கழகு, *s.* A public place of learning, a college, கல்விபயிலுமிடம். 2. An assembly of learned men, கல்விச்சங்கம். 3. A theatre, a stage, a place for practising the use of arms, படைபயிலுமிடம். 4. A public hall for wrestling, boxing, gaming, &c., மல்பயில்சாலை. 5. Place for gaming, playing dice, &c., சூதாடுமிடம். 6. Gaming, சூது. (*p.*)

கழங்கம், *s.* Conical pieces in the play of draughts or dice, சூதாடுகருவி. (சது.) (*p.*)

கழங்கு, *s.* A shrub bearing a nut, கழற்சிக்கொடி, Guilandina bonduce. 2. A play among females with the above nuts, கழற்சிவிளையாட்டு. 3. Possession by a spirit for uttering oracles, &c., வெறியாட்டாளனுடல். (*p.*)

கழஞ்சு, *s.* An apothecary's or jeweller's weight, பன்னிரண்டுபணவெடை.

கழப்பு, கிறேன், கழப்பினேன், வேன், கழப்ப, *v. n.* To be idle, to decline or shuffle work, வேலைசெய்யாதகாலம்போக்க. (*c.*)

கழப்பன்—கழப்பாளி—கழப்புணி, *s.* An idle, shuffling person.

கழப்புதல்—கழப்புகை, *v. noun.* Laziness, idleness, slothfulness.

கழலை, *s.* A wen, a tubercle, excrescence, புரைகுழல்.

கழலைக்கட்டி, *s.* A wen.

கழல், *s.* The foot, கால். 2. A warrior's ankle rings, வீரக்கழல். 3. Ankle rings worn by the liberal, the beneficient, &c., to encourage a disclosure of wants; the term is often used by synecdoche for the person of the deity or great personage, கொடையாளரணிவது. 4. Sandals, செருப்பு. 5. The கழற்சிக்கொடி plant. (*p.*)

கழலடி, *s.* Ankled leg.

கழற்காய், *s.* The fruit of the கழற்சி crickles, Guilandina bonducella.

கழற்குடம், *s.* A pot of கழற்சி nuts; i. e. one who teaches not according to the capacity of his pupils, but irregularly, teaching that first which should be taught last.

கழல்—கழலு, கிறது, கழன்றது, கழலும், கழல, *v n.* To become loose—as a fastening, a nail, a shoe, a handle, a lock, a leaf, hair, knot, a part of any mechanism; to be unhinged, to slip off, slough off—as a snake's skin; to become extricated, disentangled, கசிழ்ந்துபோக. 2. To be put out of joint, be dislocated, பொருத்துவிலக. (*c.*)

எண்ணெய்மயிரைவிட்டுக்கழன்றது. The oil has come off the hair.

தலைச்சாத்துக்கழன்றது. The head-dress is untied.

இன்றவன்மெல்லக்கழன்றுவிட்டான். The person who stood here has slipped away.

கழலக்குத்த, *inf.* [*prov.*] To frustrate an object by an unfavorable remark.

கழலப்போட, *inf.* [*prov.*] To let a thing lie in order that it may pass over and be done better another time, &c.

கழலவிட, *inf.* To connive at, to let a thing pass or escape without notice through leniency, partiality, &c.

நஞ்சுகழலல், *v. noun.* Exuding as the poison of a snake from its fangs.

ஊத்தைகழலல், *v. noun.* Coming off—as dirt from a cloth, a vessel, &c.

கழல்வு—கழலுதல்—கழறல், *v. noun.* Getting loose, கழல்கை.

கழற்சி, *v. noun.* Getting loose, extrication, கழல்வு.

**கழறு, கிறேன், கழறினேன், வேன்,** கழற, *v. a.* To charge earnestly, exhort, premonish, உறுதிசொல்ல. 2. To say, declare, tell, சொல்ல. 3. To importune, press, நெருக்க. (*p.*)

கழற்றுரை, *s.* A charge, premonition, an exhortation, position, assertion, asseveration.

கழறல், *v. noun.* Exhortation, admonition, உறுதிச்சொல். 2. Word, சொல். 3. Plaguing, importuning, நெருக்கல்.

**கழற்கொடி—கழற்சி,** *s.* A plant of two species, ஓர்கொடி.

கழற்சிக்காய், *s.* The fruit of கழற்சி.

கழற்சிக்கொட்டை, *s.* Nut of the bonduce used by boys as marbles, &c.

**கழற்பதி,** *s.* A tree, பெருங்குமிழ மரம்.

**கழற்று, கிறேன், கழற்றினேன், வேன்,** கழற்ற, *v. a.* To unloose, unfasten, loosen, unhang, unhinge, unlock, unhook, unbolt, unrivet, unscrew, unbutton, unfetter, &c., கழலச்செய்ய. 2. To strip, take off (clothes, jewels, &c.), unclothe, divest, put off the shoes, hat, head-dress, &c; to dismantle, unrig, ஆடைமுதலியனகழற்ற. 3. To disentangle, extricate, disengage, disencumber, நீக்க. 4. To slough the skin—as snakes, horns—as deer, feathers—as birds; to molt, தோல்முதலியனகழற்ற. (*c.*)

அவன்கடுக்கனைக்கழற்றிக்கொடுத்தான். He took off his ear-ring and gave it.

காப்பைக்கழற்ற, *inf.* To loosen or take off the hand rings.

செருப்பைக்கழற்ற, *inf.* To put off the shoes.

கழற்றல், *v. noun.* Putting off.

**கழனி,** *s.* A field, a corn-field, வயல். 2. (*p.*) Agricultural districts. மருதநிலம். 3. Mud, சேறு. 4. Curtains, திரைச்சீலை. (திவா.)

கழனிப்பயிர், *s.* Paddy.

கழனியடுத்தவர், *s.* Agriculturists, உழவர்.

**கழாயர்,** *s.* Pole-dancers, rope-dancers, tumblers, கழைக்கூத்தர்; [*ex* கழை, a bamboo.] (*p.*)

**கழி,** *s.* A kind of thread, cotton, yarn, silk, &c., a hawk, a knot, a tie, நூற்கருள். 2. Salt-pans, உப்பளம். 3. Shallow sea waters, salt rivers, salt marshes, உப்பறு. 4. Lute-stick, stick for playing on the lute, a plectrum, யாழ்கோலிசைக்குங்கருவி. 5. A rod, a cudgel, a staff, a branch, a twig, a switch, கொம்பு. 6. *adj.* and *adv.* Much, great, excessive, very extensive, மிகுதி. 7. [*prov.*] A roll of sealing wax, lunar caustic, &c., மெழுகுவர்த்தி.

கழிக்கரை, *s.* Banks of salt rivers, marshes, &c., கழியினதுகரை.

கழிக்கரைப்புலம்பல், *s.* [*in erotics.*] Persons expressing in a soliloquy a lady's lamentations for, and complaints of, her lover's absence, ஓர்பிரபந்தம். (*p.*)

கழிக்காரை, *s.* A plant, ஓர்செடி.

கழிநிலம், *s.* Brackish soil, marshy districts bordering on the sea, உவர்த்தரை. 2. Natural salt-pans, உப்பளம்.

கழிமுகம், *s.* The mouth of a river, ஆற்றுநீர்க்கழிவு.

கழியர், *s.* Salt makers, உப்பமைப்போர். 2. Inhabitants of maritime districts, நெய்தனிலமாக்கள்.

கழியூணன், *s.* A glutton, பேருண்டியான்.

**கழி, கிறேன், ந்தேன், வேன், ய, *v n.*** To pass by, pass from, go, remove, depart from, to pass through or over a river, &c., to pass away, lapse, கடக்க. 2. To pass as time, a season, prosperity, adversity, &c.; to elapse, become spent, செல்ல. 3. To pass—as excrements, மலங்கழிய. 4. To be discharged, voided—as semen, &c.. வித்துகழிய. 5. To be separated or detached from, நீங்க. 6. To be abated, deducted, discounted, &c., ஒழிய. 7. To be rejected, exempted, released, excused, &c., விலக்கப்பட. 8. (*p.*) To be excessive, copious, abundant, intense, to be great in quality or quantity, மிக. 9. To expire, cease, die, சாவ.

சந்தைகழிந்தது. The market is broken up, the fair is over.

அவனுக்குவயிறுகழிகிறது. He has a looseness.

கழிகடை, *s.* The worst, either as to persons or things; refuse, that which is base, rejected.

கழிகெட்டது, *appel. noun.* That which is reprobate, refuse, rejected, the worst, lowest, vilest, மிகக்கெட்டது.

கழிகெட்டவன், *s.* [*prov.*] A reprobate fellow, a vile wretch, மிகவுங்கெட்டவன்.

கழிபிறப்பு, *s.* The birth preceding the present, முற்பிறப்பு. (*p.*)

கழியுடல், *s.* A skeleton, ஊன்கழிந்தவுடல். (*p.*)

வாழ்நாட்கழிய, *inf.* To pass, as one's lifetime.

ஏழரைகழிய, *inf.* To expire, as the seven and half years of Saturn's malign influence. See ஏழு.

ஊன்கழிந்தவெலும்பு, *s.* Pure bones, bones stripped of flesh.

கலன்கழிமடந்தை, *s.* A widow, a woman who has lost her marriage symbol.

கழிச்சல், *v noun.* Flux, looseness, கழிதல். 2. [*vul.*] Cholera, epidemical flux, பேதியாதல்.

கிராணிக்கழிச்சல், *v. noun.* A continued looseness.

இரத்தக்கழிச்சல், *v. noun.* The bloody flux.

கழிதல், *v. noun.* Passing, கடத்தல். 2. Dying, சாதல். 3. Walking, நடத்தல். 4. Abundance, மிகுதி.

கழியல், *v. noun.* Departing, passing, separating, கழிதல். 2. Any thing rejected, கழிக்கப்பட்டது.

கழிவு, *v. noun.* Passing, leaving, separating from, discharge—from the bowels, a sore, &c., கழிகை. 2. Copiousness, abundance, excess, superfluity, intensity, surplus, redundancy, மிகுதி. 3. Things ejected or left, refuse, leavings, dross, scoria, கழிகடை. 4. Exception, release, exemption, rejection, elimination, நீக்குகை. 5. [*in arithmetic.*] Subtraction, கழிப்புக்கணக்கு. 6. Deduction, abatement, defalcation, discount, premium, allowance, தள்ளுபடி. 7. Remainder in arithmetic, சேஷம். 8. [*in logic.*] Inference by implication of opposite, as when it is said of two persons, that one is enlightened by virtuous deeds, we infer that the other is darkened by the retributions of vice; or in a case of robbery between two—that one is honest, that the other is the thief, பாரிசேஷம். 9. That which is secondary, inferior, any thing bad or inferior in quality, base, vile, இழிவு.

கழிவில்லை. There is none rejected. 2. There is no abatement, deduction, discount, &c.

கழிவானசரக்கு, *s.* Rejected goods.

கழிவுநிலம், *s.* Waste land—as stony or brackish spots among good land.

பத்திலொன்றுகழிவு, *s.* A deduction or premium of one in ten.

**கழி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க,** *v. a.* To reject, expel, cast off, discard, exclude, dislodge, remove, strip off, separate from, detach, eliminate, அகற்ற. 2. To evacuate, void, discharge, emit, pass excrements, நீக்க. 3. To except, leave as refuse, abandon, ஒழிக்க. 4. [*in arithmetic.*] To subtract, subduct, கணக்குக்கழிக்க. 5. To deduct, abate, குறைக்க. 6. To discount, remit, தள்ளிக்கொடுக்க. 7. To cut off—as the hair, to pare off the nails, &c., to clear off, clear away, smooth off—as knots by cutting; to prune, lop off, தலைமுதலியகழிக்க. 8. To cast off—as exuviæ, கழற்ற. 9. To pass time, spend time, காலம்போக்க. 10. To exempt, release, free from duties—as postage, விலக்க.

கட்டிக்கழித்தபுடவை. Cast-off garments.

சாத்திக்கழித்தமாலை. Garlands formerly put on an idol taken off before another ceremony.

காலத்தைவீணிலேகழித்துவிட்டான். He spent his time in vain.

மாடுதின்றுகழித்தது. The cow having eaten enough, rejected what remained.

உறைகழித்தவொள்வாள். Glittering drawn swords.

கழித்துக்கொடுக்க, *inf.* To make an allowance in another's favor.

தீட்டுக்கழிக்க, *inf.* To purify from ceremonial uncleanness—as after childbirth, &c.

வருந்திக்கழிக்க, *inf.* To pass time in suffering.

மலங்கழிக்க, *inf.* To pass excrement.

கண்டுகழிக்க, *inf.* To enjoy to satiety—as earthly good. 2. To be deprived of appetite by having much to do with food—as cooks, &c.

சாந்திகழிக்க, *inf.* To remove the evil influence of planets by presenting offerings to them, &c.

எச்சில்கழிக்க, *inf.* To purify a place where some one has taken food.

கழித்தல், *v. noun.* The act of rejecting.

கழிப்பு, *v. noun.* Expulsion, rejection, emission, கழிக்கை. 2. Offering to planets, demons, &c., to remove their malignity, சாந்திகழிக்கை. 3. Blemish, defect, fault, குற்றம். 4. That which is refused, rejected. 5. [*in arithmetic.*] Subtraction, கழிப்புக்கணக்கு.

கழிப்புக்கழிக்க, *inf.* To expel malign influence by offerings. This is done by waving boiled rice, cakes, &c., over the head of the patients after which the materials used are thrown away.

கழிநெடில், *s.* A line of more than five feet in a verse, ஐஞ்சீரின்மிக்கசீரையுடையடி. 2. A kind of verse the lines of which consist of more than five feet, கழிநெடில்விருத்தம்.

கழிநெடிலடி, *s.* A line in poetry, consisting of more than five feet, ஐஞ்சீரின்மிக்கவடி.

கழிப்புல், *s.* A kind of grass, Rotbœllia lævis.

கழிமுட்டான், *s.* A kind of grass, ஓர்புல், Apluda aristata.

கழு, *s.* A stake for impaling criminals, கழுமரம். 2. (*p.*) A trident, சூலம். 3. An eagle, கழுகு. 4. [*vul.*] A green clump or clod of grass, புற்பற்றை.

கழுக்களம், *s.* A place of execution by impaling.

கழுக்குன்றம்—திருக்கழுக்குன்றம், *s.* A mountain north-west of Madras, sacred to Siva.

கழுச்சிறையன், *s.* One who deserves impaling.

கழுப்பற்றை, *s.* A clump or tuft of grass.

கழுமரம், *s.* A stake for impaling malefactors.

கழுமரம்போலநிற்கிறான். He stands like a stake, sullen, unmoved, &c.—spoken in anger.

கழுமுள், *s.* A trident, சூலம். 2. A spear, a spike, ஈட்டி. 3. A stake for impaling, கழுமரம். 4. Arms in general, ஆயுதப்பொது. 5. Pomegranate tree, மாதுளை, Punica granatum. (*p.*)

கழுமோத—கழுவறைய, *inf.* To cover the ground with green clods.

கழுவன், *s.* [*prov.*] A daring villain, a rascal, one deserving the stake, மிகுதுட்டன்.

கழுவாணி, *s.* The iron spike on the top of an impaling stake, கழுவிலுள்ளவாணி.

கழுவாய்நிலம்—கழுவெளி, *s.* A green field from which clods are taken.

கழுவினெய்யுருக்கி, *s.* [*prov.*] A woman who collects the juices that fall from persons impaled as a philter for fascinating paramours—a term of abuse or reproach, கொடியவள்.

கழுவேற, *inf.* To be impaled, கழுவிலேற. 2. To partake voluntarily in another's sufferings, through friendship, பிறன்வருத்தந்தாங்க.

கழுவேறி, *s.* A malefactor, one impaled, கழுவிலேறினவன். 2. A villain, a pest, துணிவுடையவன்.

கழுவேற்ற, *inf.* To impale.

கழுவேற்றம், *v. noun.* Impalement.

சிங்காரக்கழு, *s.* A gibbet.

கழுகு, *s.* An eagle, ஓர்பறவை.

கழுக்கடை, *s.* A spear, ஈட்டி.

கழுக்காணி, *s.* [*prop.* கழுவாணி.] A short thick person, குறளன்.

கழுது, *s.* Demon, a vampire, பிசாசம். 2. A shed with an elevated platform for guarding fields against beasts, birds, &c., பரண். 3. A beetle, வண்டு. 4. Guard, defence, காவல். (*p.*)

கழுதை, *s.* An ass, கத்தபம். 2. (*c.*) A dolt, மூடன். 3. (*p.*) The sign of the sixth guardian of the eight angles or points of the world, வடமேற்றிசைப்பாலன்குறி.

கழுதைப்புண்ணுக்குப்புழுதிமருந்து. Dust is the medicine for an ass's wounds; i. e. for the poor any thing serves for medicine.

கழுதையுங்குதிரையும்பிணைத்தாற்போலே. Ill-matched—as an ass and a horse.

கழுதைக்கரணம், *s.* [*in astrology.*] One of the eleven தைதலகரணம்.

கழுதைக்குடத்தி—கழுதைப்புலி, *s.* A hyena, புலிக்குடத்தி.

கழுதைக்குட்டி—கழுதைமறி, *s.* A young ass.

கழுதைநிறம், *s.* Grey, the color of an ass.

கழுதைக்குணம்—கழுதையாட்டம், Stupidity.

கழுதைத்திசை, *s.* [*in astrology.*] The north-west quarter, வடமேற்றிசை.

கழுதைமயிர்பிடுங்கியூர், *s.* A country where they pluck off the hair of the ass; i.e. doing as others do without reason.

கழுதைவாகனி, *s.* The goddess of ill-luck, மூதேவி.

கழுதைவிட்டை, *s.* Ass's dung.

கழுதைவிட்டையாயினுங்கைநிறையவிருந்தாற்போதும். If the hand is full though with nothing but ass's dung, it is enough; i. e. get a great quantity.

கோவேறுகழுதை, *s.* Mule.

கழுத்தல், *s.* A lie, பொய். (*p.*)

கழுத்து, *s.* The neck of a person, brute, thing, &c., கண்டம்.

கழுத்தடி, *s.* The lower part of the nape of the neck, தோண்மேல்.

கழுத்தறுக்க, *inf.* To cut the throat, to sever the wind-pipe.

முன்விட்டுப்பின்னின்றுகழுத்தறுக்கலாமோ...... Would you bid one take precedence and then cut his throat?

ஒருவன்கழுத்திலேகட்டிவிட. To devolve unpleasant consequences on another. 2. To attribute a crime or blame to a person. 3. To impose on another unsaleable goods, or a woman ineligible for marriage.

கழுத்திடுகயிறு, *s.* Halter for a beast.

கழுத்திருத்த, *inf.* To have the neck pressed down with a heavy load. (*c.*)

கழுத்திலேகயிறுபோட, *inf.* To threaten self-immolation for the purpose of recovering debts, &c. 2. To be very treacherous, insidious, perfidious. (*c.*)

கழுத்துக்குட்டை, *s.* A neckcloth, a cravat. (*c.*)

கழுத்துக்கொடுக்க, *inf.* To lay down the neck for another on the block, to subject one's self to inconvenience or danger. 2. To expose one's life by a commission of crime. 3. To submit to the yoke as bullocks.

கழுத்துச்சந்து, *s.* The joint of the neck.

கழுத்துச்சுளுக்கு, *s.* Straining of the ligaments of the neck by violent turning of the head.

கழுத்துத்திருக, *inf.* To wring off the head of a fowl, &c. 2. To throttle, twist the head.

கழுத்துநெடியபானை, *s.* A long-necked pot.

கழுத்துப்பட்டிகை, *s.* A collar, a cape.

கழுத்துப்பட்டை, *s.* The collar of a cloak.

கழுத்துப்பருத்திருக்க, *inf.* To have a thick neck.

கழுத்துப்பொருத்தம், *s.* One of the ten பொருத்தம் for marriage, மணப்பொருத்தம்பத்திலொன்று. (*c.*)

கழுத்துமுறிக்க—கழுத்தைமுறிக்க, *inf.* To break the neck—spoken of the power, &c., of demons.

வேண்டாமென்றுகழுத்தைமுறிக்கிறான். He absolutely refuses, it is very repugnant to his feelings, &c.

கழுத்துவெட்டி, *s.* A cut-throat, a betrayer, an assassin. (*c.*)

கழுத்தாட்டி, *s.* The throat. (*p.*)

கழுத்தேறுதண்டம், *s.* Aggravated or very heavy punishment.

கழுத்தைநெரிக்க, *inf.* To throttle one.

கட்டுக்கழுத்தி, *s.* A married woman.

கழுநீர், *s.* The red water-lily, உற்பலம், Nymphæa rubra.

கழுநீர்ப்பூ—கழுநீர்மலர், *s.* The flower of the lily.

கழுந்து, *s.* The heart or core of a tree, மரவைரம். 2. A tenon, தேய்த்துமழுக்கித்திரண்டவடிவு.

கழுந்தாக்க, *inf.* To make tenons for dovetailing or other joints.

உலக்கைக்கழுந்து, *s.* The end of a pestle. (*Rott.*)

கழுமு, கிறேன், கழுமினேன், வேன், கழும, v. n. To join, unite with, இணைய. 2. To be fascinated, bewildered, confused, மயக்க. 3. To be full, complete, replete, perfect, நிறைய. 4. To be abundant, copious, plentiful, மிக. (p.)

கழுமல், v. noun. Fulness, நிறைதல். 2. Confusion, மயக்கம். 3. Abundance, மிகுதி. 4. Seizing, பற்றதல்.

கழுவு, கிறேன், கழுவினேன், வேன், கழுவ, v. a. To wash, wash off, wash out, wash away, cleanse by washing, to purify, rinse, சுத்திகரிக்க. 2. To free from, dispel —as moral evil, மனமாசுநீக்க. (c.)

கழுநீர், s. Water in which rice has been washed, அரிசிகழுவியநீர். (c.)

கழுவிக்கொள்ள, inf. To wash, cleanse.

கழுவிப்போட, inf. To wash off.

கைகழுவ, inf. To wash the hands of one, to reject totally.

கால்கைகழுவ, inf. To wash the hands and feet.

கலத்தைக்கழுவ, inf. To wash a brass dish.

கால்கழுவ, inf. To wash after passing excrement, lit. to wash the feet.

மலங்கழுவ, inf. To expel moral evils from the soul.

கழுவல்—கழுவுதல், v. noun. Washing, cleansing.

கழை, s. The bamboo, மூங்கில், Bambusa arundinacea. 2. Sugar-cane, கரும்பு. 3. The seventh lunar asterism, புனர்பூசம். (p.)

கழைக்கூத்து, s. Pole-dancing, வேழம்பக்கூத்து.

கழைக்கூத்தர், s. Pole-dancers, வேழம்பர்.

கழைக்கூத்தாடி, s. A pole-dancer.

கள, s. A thorny shrub, களாச்செடி. (p.)

*களகண்டம், s. The Indian cuckoo, குயில்—also written கரகண்டம். Wils. p. 200. KALAKANTA. (p.)

களகம், s. The mountain rat, பெருச்சாளி. (p.)

*களகம்பளம், s. A bull's dewlap, the excrescences on a goat's neck, அலைதாடி. Wils. p. 285. GALAKAMBALA. (p.)

களகளப்பு, s. Din, roar, gurgling, wambling, &c., ஒலிக்குறிப்பு. (c.)

*களகளம், s. A loud and confused noise—as the din of a bazaar, the roaring of water, &c., பேரொலி. Wils. p. 200. KALAKALA.

களகளெனல்—களகளவெனல், s. Tingle, flow with a gentle sound, chatter, &c., ஈரடுக்கொலிக்குறிப்பு. (c.)

களகளவெனக்கொதிக்க, inf. To sound—as water in boiling.

களகளவெனவிரும, inf. To sound —as phlegm in the chest.

களகளவெனவொலிக்க, inf. To roar—as water, multitudes.

களகளவென்றுசிரிக்க, inf. To laugh, making a noise.

களகொளெனல், s. Mumbling, ஒலிக்குறிப்பு. (c.)

களகொளென்றுவயிறிரைய, inf. To wamble—as the bowels.

களக்கர், s. Inferiors, புலையர். 2. Hunters, a caste living by the chase, வேடர். (p.)

களங்கட்டி, s. A kind of fish, ஓர்மீன்.

களங்கம், s. A spot, a mark, a sign, a token, அடையாளம். (p.) 2. (c.) A stain, a blot, a tarnish, a blemish, soil, மாசு. 3. Fault, defect, moral or ceremonial defilement, குற்றம். 4. Black, கறுப்பு. 5. Blue, நீலம். 6. Rust, verdigris, any thing that deteriorates, களிம்பு. 7. A kind of arsenic in its natural state, சிறம்பாஷாணம்.

களங்கசத்துரு, s. Fountain containing lead, ஈயமணல்மலை.

களங்கமற, inf. To be free from defects.

களங்கமற்றிருக்க, inf. To be spotless, sincere, pure.

களங்கமில்லாதநடக்கை, s. Pureness of living.

களங்கமுள்ளவன், s. One whose character is sullied. 2. A knave, a fraudulent person.

நிஷ்களங்கம், s. Purity.

களங்கன், s. The moon, சந்திரன், lit. the spotted. (p.)

களங்கு—களங்குமுறை, s. A compound of metallic bodies prepared with mercury and made into pills, பலலோகக்கலவையுண்டாக்கியஇரசகுளிகை. (Rott.)

களஞ்சி, s. A kind of arsenic, குதபாஷாணம்.

களஞ்சியம், s. A granary, a barn, தானியமிருக்குமிடம். 2. A store room, a repository, a treasury, a magazine, பொக்கசசாலை. (c.)

களஞ்சியத்திலேபோட, inf. To put into a barn.

*களதவுதம்—களதூதம்—களதௌதம், s. Silver, வெள்ளி. Wils. p. 200. KALADOUTA. (p.)

*களத்திரம், s. A wife, மனைவி. 2. Family, race, குடும்பம். Wils. p. 200. KALATRA. (p.)

களத்திரகாரகன், s. The planet regarded as the ruler of the seventh sign from the rising sign at birth, சுக்கிரன்.

களத்திரதானம், s. The seventh from the rising sign at the moment of birth, portending the person's circumstances in respect of the wife (if it predict any), her disposition, wealth, longevity and other properties, ஏழாமிடம்.

களத்தூர்—களந்தை, s. A town near Chingleput, ஓரூர்.

களந்துாி, s. The fruit of a தான்றி tree, Terminalia bellerica, L. (M. Dic.) (p.)

*களபம், s. A young elephant, யானைக்கன்று. 2. An elephant, யானை. 3. Fragrant ointment, perfumery, கலவைச்சாந்து. 4. A mixture, கலப்பு. 5. Mortar, cement, சட்டைச்சாந்து. Wils. p. 200. KALAB'HA. (p.)

களப்பன்னை, s. A shrub, ஓர்செடி.

களப்பு, s. Shallow sea, shallows at sea, கடலிலுமிழ்ந்தவிடம்.

களமூர், s. A town near Madura, ஓரூர்.

களம், s. Place, locality, open space, area, a wide extent, expanse, இடம். 2. Black, dark, கறுப்பு. 3. Poison, venom, விடம். 4. Neck, throat, மிடறு. 5. A wife, மனைவி. 6. Barren or brackish ground, களர்நிலம். (p.) 7. (c.) A threshing floor or place in a field for treading corn, நெற்களம். 8. The place or site of a battle, a field of battle, போர்க்களம். 9. Shallow shelf of rocks at sea, bank under water, sand-bank, shoal, &c., கடலின்மேடு.

களத்திலேதோணிபொறுந்துப்போயிற்று. The dhoney is aground on a shoal.

களப்பலி, s. A human sacrifice, that of valiant men to Doorga, the goddess of war, previous to battle to secure victory, யுத்தகளத்திலிடும்பலி.

களப்பலியிட—களப்பலியூட்ட, inf. To offer human sacrifice.

களப்பாட்டு, s. Threshing floor songs, போரடிப்போர்பாடும்பாட்டு.

களப்பாய், s. A mat spread on the floor to tread out grain, களத்திலிடுகிறபாய்.

களப்பிச்சை, s. Alms given to religious mendicants at a threshing floor, களத்திலிடும்பிச்சை.

களப்பேச்சு, s. Auspicious terms, language, &c., of the threshing floor, களபரிபாஷை.

களப்பேறு, s. [prov.] The portion of grain, distributed at a threshing floor among religious mendicants, also given to a washerman, barber, and other dependent castes, நெற்களத்திற்பெறும்பலன்.

களமதி, s. Estimation of the quantity of grain upon a threshing floor.

களமளக்க, inf. To measure at the threshing floor, களத்திலேநெல்முதலியவளவைக்க.

களமர், s. Husbandmen, agriculturists, உழவர். 2. The புலையர், or one of the divisions of the வைசியர் caste. 3. Inhabitants of agricultural districts, மருதநிலமாக்கள். 4. The Sudra caste, சூத்திரர். (p.)

களம்விடாமலொட்டடிக்க, inf. To sweep clean the threshing floor.

களவழிநாற்பது, s. A poem in forty stanzas descriptive of a field of battle. (Rott.)

களவாரம், s. [com. களவாசம்.] The portion of grain given from the threshing floor to the workmen, களத்திற்கொடுக்கும்வாரம்.

உலைக்களம், s. A forge.

கொலைக்களம், s. A place of execution.

யுத்தகளம்—படைகளம், s. A field of battle.

படைகளத்திலேயுறவுபாரியா. Are relationships observed in the battle-field?

களரவம், s. A dove, pigeon, புறா. (p.)

*குஞ்சரம், s. An elephant, யானை. 2. (*fig.*) Pre-eminence, excellence, உத்தமம்—as in இராசகுஞ்சரம். Wils. p. 225. KUNJARA. 3. A water-plant, கருங்குவளை, Pontederia, *L.*

குஞ்சரக்கன்று, s. Young elephant, யானைக்குட்டி.

குஞ்சரக்கோடு, s. The tusk of an elephant, யானைக்கொம்பு.

குஞ்சராசனம், s. The sacred fig-tree, அரசு; *lit.* the food of elephants. (*p.*)

புருஷகுஞ்சரம், s. An excellent personage, சூடாமணிச்சிரேட்டன்.

குஞ்சி, s. A man's tuft or single lock of hair, குடுமி. (*from Sans. Gunja.*) 2. [*prov.*] A younger paternal uncle or maternal aunt; a father's younger brother or mother's younger sister, சிற்றப்பன், சிறிய தாய். 3. Any thing small—as in குஞ்சிப் பெட்டி. (See குஞ்சு.) 4. Virile membrum—as குஞ்சு. (*from Sans. Kuncha, being little.*) 5. Hair in general, மயிர். (*little used.*)

குஞ்சிச்சடை, s. Short, tangled locks.

குஞ்சிச்சடையன், s. An Indian monk, who wears short, tangled locks.

குஞ்சியப்பன், s. [*prov.*] The father's younger brother, or the mother's younger sister's husband; also, a step-father, சிற்றப்பன்.

குஞ்சியாச்சி-குஞ்சியாயி, s. [*prov.*] The mother's younger sister, or the father's younger brother's wife; also, a stepmother, சிறியதாய்.

குஞ்சிக்கடை—குஞ்சிப்பெட்டி, s. A small ola basket.

குஞ்சிமணி-குஞ்சமணி, s. An ornament for the waist of male infants.

*குஞ்சிதம், s. That which is curved; crookedness, bend, வளைவு. Wils. p. 225. KUNCHITA. 2. Standing on one foot, குஞ்சித்தல்.

குஞ்சி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To stand on one foot (in dancing or penance), குஞ்சித்தல்; [*ex* குஞ்சம், crooked.]

குஞ்சிரிப்பு, s. [*a contraction of* குறுஞ்சிரிப்பு.] A smile, புன்னகை.

குஞ்சு, s. The young of birds, fowls, fishes, oysters, conchs, rats, lizards, frogs, squirrels; also figuratively, young children, பக்ஷி—ஓந்தி—பறவை முதலியவற்றின்குஞ்சு. 2. Virile membrum, குஞ்சி (*from Sans. Kuncha, being little.*)

குஞ்சுக்குவைக்க, *inf.* [*prov.*] To set eggs for hatching.

குஞ்சுபொரிக்க, *inf.* To hatch, to produce young from eggs.

குஞ்சுறை, s. Bird's nest, பறவைக்கூடு; [*ex* உறை, abode.]

குஞ்சுக்கூட்டம், s. The brood of a hen.

பூங்குஞ்சு, s. A very young bird, இளங்குஞ்சு.

குஞ்சுச்சிப்பி, s. [*prov.*] Immature, bivalve fish—as mussels, oysters, &c.

குஞ்சுகுழந்தை, s. Infants and children.

குஞ்சுங்குழுவும்—குஞ்சுங்குழுமானும்—குஞ்சுகுருமன், s. A crowd of small insects.

பஞ்சானுங்குஞ்சும், s. Infants and children.

குஞ்சுரம், s. The குன்றி shrub, Abrus precatorius, Wild licorice. (*M. Dic.*) See குஞ்சம்.

குடகம், s. A country on the Malabar coast; Koorg country, குடகதேசம்.—*Note.* It is one of the fifty-six countries, and forms the western boundary of the Tamil country. 2. A mountain on the Malabar coast, ஓர்மலை.

குடகன், s. The king சேரன்—as the ruler of the குடகம் country.

குடகரம், s. A plant, உத்தாமணி, Cynanchum, *L.*

குடகு, s. The Koorg country. See குடகம்.

குடக்கி, s. [*prov.*] As குடவன்.

குடக்கியன், s. [*prov.*] A bent or crooked person, கூனன்.

குடக்கினி, s. A kind of black-wood tree, ebony, கருங்காலி, Diospyrus, *L.* Acacia sundra. (*M. Dic.*)

குடக்கு, s. West, occidens, மேற்கு. This word becomes குட in adjectives.

குடகோளார்த்தம், s. Western hemisphere, பச்சிமகண்டம்.

குடதிசை, s. The west point, western region, மேற்குத்திசை.

குடநாடு, s. The western country, Malayalim, மேலை.

குடக்கோ—குடக்கோன்—குடநாதன், s. King சேரன்—as king of the west.

குடாது, s. What is in the west, what is western or occidental, குடக்கிலுள்ளது. (*p.*)

குடங்கர், s. [*a poetic form of* குடம்.] A water pot, குடம். 2. Aquarius, a sign of the zodiac, கும்பவிராசி. 3. A hut or cottage, குடிசை.

குடங்கை, s. The palm of the hand. See under குடம்.

*குடசம், s. A medicinal shrub, வெட்பாலை, Nerium antidysentericum, *L.* 2. (Ains. v. 2. p. 461.) The mountain jasmine, மலைமல்லிகை. Wils. p. 226. KUT'AJA.

குடசப்பாலை, s. A twining plant, கொடிப்பாலை, Asclepias volubilis, Twining swallow-wort. (Ains. v. 2. p. 154.)

குடஞ்சுட்டு, s. A cow or a bull, பசு. See under குடம்.

குடத்தி, s. A kind of wolf whose head, ears and tail are like those of an ass, கழுதைக்குடத்தி. Port. Loboasnal. See under குடம்.

குடந்தம், s. [*a poetic change of* குடம்.] Rotundity; any thing round, திரட்சி. 2. [*in dramatic actions.*] Clenching the fingers and with the fists joined, placing the points of the thumbs on the breast and bending the body forward, கைவிரல் மடக்கிப் பெருவிரல் நிறுத்தி நெஞ்சிலணைக்கை. 3. A pot, குடம். 4. The town of Combaconum—as குடந்தை.

குடந்தை, s. The town of Combaconum. See கும்பகோணம்.

குடப்பம், s. A tree, இருப்பை, Bassia, *L.* (*M. Dic.*)

குடப்பாலை — குடப்பாலைமரம், s. Holarrhena codaga.

குடமணம், s. A plant, black cumin, கருஞ்சீரகம், Nigella sativa, *L.* (*M. Dic.*)

குடம், s. A cow, பசு. 2. A town in agricultural districts, மருதநிலத்தூர். 3. A town or village, ஊர்ப்பொது. 4. A kind of dance accompanied by clapping the hands, hollowed, கைகொட்டிக்குனிக்கை. 5. A dance of Vishnu, மாயோன்கூத்து. 6. One of the twelve districts where the vulgar, unpolished Tamil is spoken, கொடுந்தமிழ் நாட்டிலொன்று. 7. The eighth lunar mansion of the Hindus, பூசம்.

குடஞ்சுட்டு, s. A cow, பசுப்பொது.

குடத்தி, s. (*pl.* குடத்தியர்.) Female of குடவர் or cow-herds; a woman of the tribe of cow-herds, and shepherds.

குடவுண்ணி, s. A cow-tick, acarus.

குடமாடல், *v. noun.* A dance of Vishnu, மாயோன்கூத்து.

குடவர், s. Herds-men, cow-herds, இடையர்.

*குடம், s. A large kind of earthen pot, கும்பம். 2. A sign of the zodiac; Aquarius, கும்பவிராசி. Wils. p. 226. KUT'A. 3. Sugar, jaggery, molasses, சருக்கரை. 4. A globular or round part of a pillar, a cylindrical body, திரட்சி. Wils. p. 290. GUD'A.

எண்ணெய்க்குடமும்வெறுங்குடமும்முட்டினுலெதற்குச்சேதம். If a pot of oil come in collision with an empty pot, which, by breaking, is the greater loss; i. e. in collision, who is the sufferer, the man of character or the worthless person?

ஒருகுடம்பாலுக்கொருதுளிஉறைபோதும். One drop of butter-milk for coagulating a whole pot of milk; i. e. a good character, obligations of kindness, &c., are forfeited by a single bad action.

புறக்குடத்துத் தண்ணீர்போல. Like water on the outside of a pot; i. e. forgotten as soon as learnt; advised or taught to no purpose.

பொன்னின்குடத்துக்குப்பொட்டிடவேண்டுமோ.... Does it require that a golden pot be decorated; i. e. things of substantial worth need no embellishment.

மாமியாருடைத்தால்மண்குடம் மருமகளுடைத்தால் பொன்குடம். If broken by the mother-in-law, it is a mere earthen pot; but if by the daughter-in-law, it is a golden vessel; i. e. slight faults in inferiors are greatly magnified.

குடங்கை, s. The palm of the hand.

வெறுங்குடம், s. An empty pot. 2. (*fig.*) One who knows nothing.

குறைகுடம், s. A water-pot not quite full.

நிறைகுடம், s. A full water-pot; very good parts; a capable head.

குடமூக்கு, s. The town of Combaconum. See கும்பகோணம்.

குடமூத, *inf.* To make a sound by blowing into pots, with dancing or jumping—as low-caste women at marriages and in some places at a temple, குடத்திலூன்றிவொலிப்பிக்க.

குடம்விட்டுக்கட்ட, *inf.* [*prov.*] To decorate the marriage pole with stiffened cloth, so as to resemble pots placed one on another.

குடமுழா, s. A kind of drum made of a pot, முழவு.

குடமல்லிகை, s. A kind of jasmine, ஓர் மல்லிகை, Jasminum sambac, *L.* Arabian jasmine. See மல்லிகை.

குடமுருட்டி, s. A branch of the Kavery, ஓர் ஆறு.

குடச்சிப்பி, s. A round shell or conch.

குடவழுந்தர், s. The name of a celebrated poet who, in his youth, was as long in getting a lesson as it required to fill a pot with lentils, உழுந்து, one at a time, ஓர்புலவன்.

குடவெழுத்தாணி, s. An iron-style with knobs or balls at the top, one above another, tapering to a point.

குடம்வைத்தல், v. noun. Playing with the fists one on another, and knocking off the upper in succession, ஓர்விளையாட்டு.

குடமண், s. White sand, வெண்மணல். (M. Dic.)

குடம்பை, s. A bird's nest, பறவையின்கூடு. 2. An egg, முட்டை.

குடரி, s. [a change of குடாரி.] An elephant-hook. யானைத்தோட்டி.

குடர், s. The bowels, the intestines or entrails—as குடல். (p.)

குடலை, s. [prov.] Corn-ears swollen and ready to shoot forth, கதிர்க்குடலை. 2. A kind of basket of cocoanut-leaf or palmyra-leaf for fruits, flowers, &c., ஓலைக்கூடை. 3. A ring of wicker work for a well, கிணற்றுக்குடலை. 4. A cover or screen for fruits, பழக்கூடு. 5. A cover of cocoanut or palmyra leaves carried to defend from rain, ஓலைக்கூடு. 6. The intestines, entrails—as குடல். 7. [vul.] Membrum virile, testes under the fore-flap (in contempt).

குடலைபுங்கதிரும், s. [prov.] Corn-ears shooting forth, and shot forth; spikes partially shot forth.

பூக்குடலை, s. A flower-basket of a braided cocoanut-leaf.

குடலைக்கிணறு, s. A well walled with wicker-work.

குடலைபாருதல், v. noun. [prov.] Being ready to shoot forth—as corn-ears.

கதிர்க்குடலை, s. [prov.] A platted leaf or other covering for fish, carried in the hand.

சோற்றுக்குடலை, s. A platted leaf-basket of boiled rice, for a journey, &c.

குடல், s. Bowels, entrails, intestines, garbage, குடர்.—Note. இரைக்குடல், கல்லுக்குடல், சிறுகுடல், நீளிக்குடல், பெருங்குடல், மணிக்குடல், மலக்குடல்—are different kinds of குடல். (See those words.) 2. A kind of fungous matter in the hollow of gourds, &c., சுரைக்குடல். 3. Pith in the body of trees, மரக்குடல். 4. Streaks running down the interior of plantains and other fruits, பழக்குடல்.

குடலதிருகிறது. The bowels tremble.

குடலுங்கூந்தலுங்கொண்டதுகோலம். The bowels and the hair must be treated as accustomed.

குடலழுகினபூசணிக்காய். A pumpkin, the internal part of which is rotten.

குடல்கொழுத்தது. The bowels are grown fatty; causing a bad appetite—also exciting pride.

குடலெரிகின்றது. The bowels yearn.

குடலேறிக்கொண்டது. The bowels are twisted or deranged—as by assuming an unnatural position.

குடலெட்டிக்கழிய. To have a flux from noxious matter in the bowels; to have a severe and copious discharge at stool.

குடலேற்றம், s. Twisting or derangement of the bowels. See ஏற்றம்.

குடல்மாலை, s. The folds or turnings of the bowels.

குடல்வலி, s. Aching pains in the bowels, caused often by continued hunger.

குடல்வாதம், s. A disease causing flatulency and frequent watery discharges.

குடற்சவ்வு, s. The omentum, caul.

குடற்பிசிவு, v. noun. [prov.] A dislodgment of the bowels.

குடற்புரை, s. The orifice of the bowels.

குடற்பை — குடற்போர்வை, s. The womb, uterus.

குடலறவோட, inf. To run very fast so as to cause the bowels to pant; lit. loosen or part.

குடலைப்பிடுங்க, inf. To draw out the entrails. 2. (metaph.) To heave, retch, nauseate.

குடல்காய்தல், v. noun. Drying of the intestines—being without food: starving.

குடவம், s. Brass, பித்தளை, commonly குடவன்.

குடவப்பருப்பதம், s. A brass-mountain.

குடவளப்பம், s. The wild olive tree, இருப்பை, Bassia, L. (M. Dic.)

குடவன், s. [prov.] Brass (among artificers), பித்தளை. 2. A palmyra or Illuppai fruit with a single stone or seed, ஒருகொட்டைக்காய். (See இருக்காழி and முக்காழி, under காழ்;) [ex குட, crooked.] 3. A plant, கோட்டம், Costus, L. (M. Dic.)

குடவன்பனங்காய், s. A single-stoned palmyra fruit.

குடவு, s. Dance of Skanda, குமரனாடல். 2. [ex குட, crooked.] Crookedness, bent, வளைவு. 3. [local.] A cave, a grotto, குகை.

•குடவு, கிறது, குடவினது, குடவும், குடவ, v. n. To be crooked, bent, concave; to become crooked, வளைய. Wils. p. 226. Kut'a.

குடா, s. A cavity, hollow, &c., in the side of a well or tank; a cavern, குடைவு. 2. A bay, a harbor, a gulf, கடற்குடா. 3. A retired part of a large field, country, &c.; a nook, corner, a recess, கோணம்.

குடாக்கடல், s. A haven, a harbor, a bay or gulf.

வாலியக்குடா, s. A little bay near Kilakare.

குடாக்கை, s. [prov.] A corner in a field, வயலின்மூலை.

குடாவடி, s. A bear; lit. the bent-footed, கரடி. (p.)

குடாக்கு, s. (Hind.) A hookah, உக்கா. 2. A composition of tobacco, jaggery, &c., used in a hookah, உக்காமருந்து.

குடாசகம், s. [prov.] Fraud, deceit, artifice, கபடம். 2. Decoying, seduction, inveigling, மயக்கு. 3. Dissimulation, மாயம். 4. Giving ill advice, bad counsel, துர்ப்போதனை.

குடாச, inf. [prov. a form of கடாச.] To commit fraud, தந்திரஞ்செய்ய.

குடாப்பு, s. A coop or pen for fowls; also for pigs, lambs or kids, கூடு.

•குடாரம், s. An axe, a hatchet, கோடாலி. Wils. p. 227. Kut'hara. 2. A churn, or churning-pot, தயிர்கடைதாழி. (கூ.) 3. The post round which the string of the churning stick plays, தயிர்கடைதறி. Wils. p. 226. Kut'ara.

•குடாரி, s. An axe, கோடாலி. Wils. p. 227. Kut'haree. 2. An elephant goad, யானைத்தோட்டி. (சது.)

குடாரு, s. A churning-pot, தயிர்கடைதாழி. (சது.) See குடாரம்.

குடாவு, s. A hollow; a corner; a cave. See குடா.

குடான், s. A plant, செம்முள்ளி, Barleria prionites, Thorny barleria, L. (M. Dic.)

•குடி, s. A household, a family, குடும்பம். 2. A tribe; race; lineage, கோத்திரம். 3. A subject; subjects of a king, inhabitants of a kingdom, குடியானவன். 4. Inhabiting, residing, the act of living in a place, குடியிருப்பு. 5. A town, a village, ஊர். 6. An agricultural village, மருதநிலத்தூர். 7. A house, habitation, வீடு. 8. A house-wife, மனைவி. 9. The body—as the tenement of the soul, உடம்பு. Wils. p. 226. Kut'i. See under the verb குடி.

குடிசெயல்வகை. Exertions to increase the honor of a family.

குடிதழைக்கின்றது. The family is thriving or flourishing.

குடிகனத்தவூர், s. A populous village, a densely-inhabited town.

குடிகுலத்திலுள்ளவன், s. A person of good caste, family, &c.

குடிகெடுதல், v. noun. Being ruined, undone or destroyed.

குடிகெடுக்க — குடியைக்கெடுக்க, inf. To destroy or ruin a family.

குடிகேடன் — குடிகேடி, s. One who ruins a family. 2. The ruiner of a family, being one of the number.

குடிகேடு, s. Ruin to a family; an unavoidable ruin.

குடிகொள்ள, inf. To inhabit, dwell, to take possession of the mind—as a deity or devil; or of a house—as a demon; also—as bats, snakes, &c.; to be seated or established—as a lingering or chronic disease.

என்னுளங்குடிகொண்டகுலதெய்வமே. Thou, Oh household god, who dwellest in my heart.

முகத்திலேமூதேவிகுடியிருக்கிறாள். The goddess of misfortune has taken possession of his face; i. e. he looks gloomy.

குடிக்காடு, s. Towns in general, ஊர்ப்பொது. 2. Agricultural towns or villages, மருதநிலத்தூர். (சூ.)

குடிக்கூலி, s. House-rent, கொண்டைக்கூலி.

குடிக்கூலிக்கிருக்க, inf. To live in a house for hire.

குடிக்கூலிக்குவாங்க — குடிக்கூலிக்கெடுக்க, inf. To hire a house.

குடிக்கூலிக்குவிட, inf. To let a house.

குடிசனங்கள், s. Inhabitants; subjects.

குடித்தனம், s. A family, a household; domestic life, குடிவாழ்க்கை. 2. Domestic economy, domestic order or propriety, management of a family, குடிமுறை.

குடித்தனக்காரன், s. Householder, குடியானவன். 2. Cultivator, agriculturist, பயிரிடுவோன்.

குடித்தனத்துக்குட்பட, *inf.* To be married, to enter on the state of matrimony; to begin to keep house.

குடித்தனப்படுதல், *v. noun.* [*prov.*] Being married; the state of matrimony, விவாகம்பண்ணல்.

குடித்தனப்பாங்கு, *s.* Domestic order; domestic economy.

குடித்தனம்பண்ண—குடித்தனம்நடத்த, *inf.* To manage a family.

குடித்தனவுறுப்பு, *s.* [*prov.*] Chattels, furniture, slaves, servants, cattle, &c., for a family.

குடிநாசம், *s.* The destruction or ruin of a family.

குடிநாசமாயிற்று. The family is ruined or destroyed.

குடிநாசம்பண்ண, *inf.* To ruin or destroy a family.

குடிநிலம், *s.* Land for a dwelling house—as distinguished from gardens, fields &c.; house-premises, குடியிருக்குநிலம். 2. [*prov.*] Land appropriated to buildings—as an item in a dowry, குடியிருக்கக்கொடுக்கும் கொடுத்தநிலம்.

குடிபுக, *inf.* To commence occupying a new house with appropriate ceremonies. 2. To find and occupy a vacant or undisturbed residence 3. To settle and colonize—as beasts, insects, &c.

குடிபோக, *inf.* To remove from a house. 2. To go to a new place of abode. 3. To emigrate. 4. To swarm and depart—as bees. 5. To evaporate, escape—as essential oils, camphor, &c.

குடிபோய்விட, *inf.* To evaporate—as camphor, essential oils, &c.

குடிபோனவீடு, *s.* A vacated house.

குடிப்படை, *s.* Militia.

குடிப்பழுது, *s.* Stigma on a family, disgrace, disrepute.

குடிப்பாங்கு, *s.* The habits of a cultivator, or an agriculturist.

குடிப்பிறப்பு, *s.* High birth; being born of a distinguished family.

குடிப்பெண், *s.* The lawful wife—as distinguished from a concubine.

குடிப்பெயர், *s.* Family name. 2. [*in gram.*] Nouns of family names—as in சேரிமிரன்

குடிமகன், *s.* A feudatory, or a man of the servile tribe in relation to the families (குடி) of superior caste, to which under certain restrictions he is subject. The connexion is commonly hereditary. 2. A barber, அம்பட்டன்.

குடிமக்கள், *s.* Servile castes in relation to their feudal chiefs, eighteen in number: 1. வண்ணான், washerman. 2. நாவிதன், barber. 3. குயவன், potter. 4. தட்டான், gold or silver-smith. 5. கன்னான், brazier. 6. கற்றச்சன், mason. 7. கொல்லன், blacksmith. 8. தச்சன், carpenter. 9. எண்ணெய்வாணிகன். oil-monger. 10. உப்புவாணிகன், salt-dealer. 11. இலைவாணிகன், betel-seller. 12. பள்ளி. 13. பூமாலைக்காரன், garland-maker. 14. Grave-digger, commonly a பறையன். 15. கோவிற்குடியான், [*prop.*] பணிசெய்வோன், chank-blower. 16. நச்சன், pujari at a temple of பிடாரி. 17. வலையன், fisherman. 18. பாணன், tailor. The special servants in the above are the barber, washerman, black-smith, carpenter and grave-digger.

குடிமதிப்பு, *s.* Assessment, valuation of property for taxation.

குடிமார்க்கம்—குடிமுறை, *s.* Domestic life. 2. Proper conduct as a householder.

குடிமிராசி—குடிமிராசு, *s.* The right or privilege of a hereditary occupant.

குடிமிராசிகொடுக்க, *inf.* To endue with particular மிராசு privileges.

குடிமை, *s.* Customs or manners of the higher classes, பெருங்குலத்தொழுக்கம். 2. Lineage, family, descent, குடிவழி. 3. Vassalage, servitude, feudal dependence, feudal right or connexion; a feudatory in reference to his chief. (See குடிமக்கள்.) —*Note.* The chief is entitled to the service of his feudatory whenever required, and the latter to a proportion of the produce of the land, to perquisites at weddings, funerals, &c. 4. Domestic life, family economy. குடிச்செயல். 5. A king in relation to his subjects, அரசன். (கு.)

குடியரசு—குடியாட்சி, *s.* Democracy, government by the people.

குடியிறை, *s.* Tax, impost—as collected from the subjects, குடிவரி.

குடிவாரம், *s.* Share of produce to the inhabitant or cultivator—as distinguished from மேல்வாரம்.

குடியழிக்க, *inf. v. a.* To ruin a family.

குடியழிய, *inf. v. n.* To be buried or ruined—as a family.

குடியழிவு, *v. noun.* Ruin of a family. 2. A great evil, *often hyperbolically used.*

குடியானவன், *s.* An inhabitant; *emphatically* a caste man, one not of a low caste.

குடியியல்பு, *s.* Domestic life, family management. 2. Domestic order, domestic rules of management.

குடியிருப்பு, *s.* Living—as a family, or an inhabitant; residing, குடியிருக்கை. 2. An inhabited, settled, or populated place, a village, கிராமம். 3. The parts of a village inhabited by different castes respectively. The name of the caste is commonly prefixed—as செட்டிகுடியிருப்பு, a chitties' village.

குடியிறங்க, *inf.* To settle, tarry or halt—as a family or a tribe.

குடியிற்பிறந்தவன், *s.* One born of a good family.

குடியிற்பிறந்து குரங்காட்டமாடுதல். Being born of a good family, and falling into disgrace by bad conduct.

குடியிற்பிறந்து செடியில்விழுந்தான். He was born of a good family, but married low; *lit.* fell into the bush.

குடியெழும்ப, *inf.* To evacuate a house, village, &c., commonly from some unlucky and disastrous event, or anticipation.

குடிவாங்க—குடிவாங்கிப்போக, *inf.* To remove from a place—as a family; to abandon a dwelling. 2. To migrate, to emigrate—as a family.

குடியேற, *inf.* To settle in a new country, to colonize, to people.

குடியேற்ற, *inf. v. a.* To settle people in a country, to stock with inhabitants, to people, to populate.

குடிவாழ்க்கை, *v. noun.* Domestic economy, house-keeping. 2. Regulation of a household.

குடிவிளங்கப்பண்ண, *inf.* To render a family illustrious and prosperous.

குடிவைக்க—குடியிருத்த, *inf.* To settle or establish a family. 2. To provide a family with the means of sustenance.

சிறந்தகுடி, *s.* A family in prosperous circumstances.

சுகவாசிக்குடி, *s.* A tenant; a renter or cultivator—as distinguished from மூலக்குடி. See மூலக்குடி.

நல்லகுடி, *s.* A good or well-ordered family. 2. A well-settled family, a family in prosperous circumstances.

நைந்தகுடி, *s.* An impoverished family.

பசுங்குடி, *s.* Husbandmen.

பயிர்க்குடி, *s.* Husbandmen, tillers.

வந்தேறுகுடி, *s.* A new settler.

குடியோட்டி, *s.* A kind of thistle, நிர்முள்ளி, Argemone mexicana, *L.*

குடி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To drink, to take drink, பருக. 2. To inhale, உறிஞ்ச. 3. To tipple, to guzzle, to drink toddy or arrack, to drink to excess, மதுவுண்ண. 4. To suck—as infants or other young creatures, முலையுண்ண. 5. To devour, to quaff, உண்ண. 6. To take or swallow—as liquid medicines, &c., மருந்துகுடிக்க. 7. (*fig.*) To absorb, to imbibe, உட்கொள்ள. 8. To smoke—as tobacco, &c.

உயிர்குடித்தன்றிநில்லா. Not stopping except to drink the lives of those around.

குடியாதவரெவெறியாது. No tippler is content unless he drinks.

குடிவெறிக்கடிபடத்தீரும். Flogging is a sure remedy for intoxication.

நல்லபாலகுடித்துவளர்ந்தவன். One who has been virtuously brought up.

நிலந்தண்ணீரைக்குடித்துவிட்டது. The earth has drunk up or absorbed the water.

பால்குடிக்கிறகுழந்தை. A child at the breast.

குடிகாரன்—குடியன், *s.* A drunkard, a tippler, வெறியன்.

குடிமதம், *s.* Excitement of spirits by drinking.

குடிவெறி, *s.* Intoxication by drinking, intemperance.

குடிநீர், *s.* A decoction, a tincture, a medical infusion, a diet-drink.

குடி, *v. noun.* Drink; drunkenness; tippling.

குடித்தல், *v. noun.* The act of drinking.

குடிசை, *s.* A hut, a cottage, a shed, குடில்.

குடிசைபோட, *inf.* To put up a cottage or a hut.

குடிசையெடுக்க, *inf.* To remove a hut to another place.

குடிஞை, *s.* River, ஆறு. 2. Birds in general, பறவைப்பொது. 3. A species of owl, கோட்டான். 4. A town, பதி.

குடிரம், *s.* The name of a thorny shrub, காரை, Webera tetrandra. *Willd.*

குடிலச்சி, *s.* A kind of black beetle, நீலவண்டு. (*M. Dic.*)

•குடிலம், *s.* A bend, crook, flexure, curve, வளைவு. 2. Dishonesty, fraud, வஞ்சகம். Wils. p. 226. Kut'ila. 3. Tangled or matted hair, சடை. (Compare கோடீரம்.) 4. Ether—as one of the five elements in nature, ஆகாயம். 5. Undeveloped Maya which, when developed, is called குடிலை. குடிலமாயை. 6. The tri-literal mystic ஓம், employed as the first word of the Vedas and other sacred writings, and the first and last word in incantations, பிரணவம். 7. A species of tree, the குரவு or குரா, Webora, *L.*

•குடிலை, *s.* Primitive Maya in its normal, incipient stage of development, and as operated upon by the Sakti power of the supreme deity.

•குடில், *s.* A hut, a shed, சிற்றில். Wils. p. 226. Kuti'ra. 2. A moveable, conoidal roof for sheltering beasts, stacks of straw, gateways, &c., from the weather, குடிசை. 3 (சது.) Ether—as குடிலம்.

குடு, *s.* Toddy, fermented liquor, கள். 2. *v. Improperly used for* கொடு, give.

குடுகு, *s.* A cocoanut or other shell used as a bottle. See குடுக்கை.

குடுகுடா—குடுகுடி, *s.* A hookah, உக்கா.

குடுகுடாகுடித்தல், *v. noun.* Smoking a hookah.

குடுகுடு, *s.* A rumbling noise, a guggling or sound of water running out of a vessel with a narrow mouth, ஒலிக்குறிப்பு.

குடுகுடுக்க, *inf.* To rumble; to rattle. 2. To be in a great hurry.

குடுகுடுகிழவன், *s.* A tottering, decrepit man; a very old man, தளர்ந்தவயசோன்.

குடுகுடுக்கை, *s.* A dry cocoanut in which the kernel rattles, சப்தஞ்செய்யுந்தேங்காய்.

குடுகுடுப்பை, *s.* Any thing hollow with a rattling inside, குடுகுடுக்கும்பொருள். 2. A small kind of taborine, ஓர்சிறுபறை. 3. [*prov.*] A wooden clapper for scaring away birds, மரமணி.

தலைகுடுகுடுப்பைபற்றிப்போயிற்று. [*prov.*] The head is become very dry from want of oil.

குடுகுடுப்பைக்காரன், *s.* A sooth-saying beggar with a குடுகுடுப்பை taborine.

குடுகுடெனல், *v. noun.* Gurgling, rattling, rushing, &c., ஒலிக்குறிப்பு.

குடுகுடென்றோடுகிறான். He shuffles along very fast.

•குடுக்கை, *s.* The earthen or wooden water-pot of an ascetic or a hermit, கமண்டலம். Wils. p. 227. Kud'ika. 2. A cocoanut or other shell, used as a vessel, தேங்காய்முதலியவற்றின்குடுக்கை.

சுரைக்குடுக்கை, *s.* The hard shell of the Lagenaria vulgaris, *L.* Bottle gourd.

வில்வக்குடுக்கை, *s.* The hard shell of the Ogle marmelos, Boel tree.

விளாக்குடுக்கை, *s.* The hard shell of the Feronia elephantum, *L.* Wood-apple tree.

வஞ்சகக்குடுக்கை, *s.* A vessel (person) of fraudulence.

வினைக்குடுக்கை, *s.* A man full of guile and devices.

தீக்குடுக்கை, *s.* A shell, a grenade, வெடிகுண்டு. (*local.*)

குடுமி, *s.* Men's hair, ஆண்மயிர். 2. A man's single lock of hair, tied in a knot and never shaven off, சிகை. 3. The crown of the head, உச்சி. 4. The summit of a mountain, மலையுச்சி. 5. Victory, success, வெற்றி. 6. [*prov.*] The corner pin of a door fitted into a hole or cavity in the sill, thereby serving the purpose of a hinge, கதவின்குடுமி. 7. The handle of a plough, மேழிக்குடுமி. 8. [*vul.*] A snake-catcher, and dealer in antidotes for the bite of snakes, பாம்புபிடிப்பவன்.

குடுமிமுடிய, *inf.* To tie the hair in a knot.

குடுமிவாங்க, *inf.* To shave off one's hair-lock; i. e. to divest one of office, power, &c.

உச்சிக்குடுமி, *s.* A lock or tuft on the crown of the head.

முன்குடுமி, *s.* A lock nearer the forehead.

பின்குடுமி, *s.* A lock on the hinder part of the head.

கன்னக்குடுமி, *s.* [*prov.*] Side lock of hair.

குடுமிக்கதவு, *s.* A door or shutter that turns with a pin at the upper and lower corners.

குடுமிதட்டுதல், *v. noun.* Beating the tuft of hair—as a preliminary of quarrelling, contending, &c. 2. [*prov.*] Striking off the top of a measure of grain, தானிய அளவிற்றலைவழித்தல்.

கீழ்க்குடுமி, *s.* The lower pin of a door.

மேற்குடுமி, *s.* The upper pin of a door.

குடுமிப்பருந்து—குடுமியன், *s.* [*prov.*] The crested kite, ஓர்வகைப்பருந்து.

•குடும்பம், *s.* A family, including the man, his wife, his sons and his sons' wives, ஒருகுடியிலுள்ளார். 2. Relations, kindred, connexions, உறவின்முறையார். 3. Race, family, house, குடி. Wils. p. 226. Kut'umba.

குடும்பங்கலைக்க, *inf.* To divide or scatter a family by sowing dissension, &c.

குடும்பசம்ரக்ஷணை, *s.* The maintenance of a family; the act of providing for and preserving a family.

குடும்பத்தானம், *s.* The sign next to the rising sign at the moment of one's birth, portending good or evil, wealth or otherwise, to the family, according to the character of the signs, &c. See தானம்.

குடும்பபாரம், *s.* The burden and responsibility of a family.

குடும்பபாரஞ்சுமக்க, *inf.* To support a large family.

குடும்பப்பிரதிட்டை, *s.* The founding of a family.

குடும்பமாயிருக்கிறவன், *s.* One with a large family.

குடும்பவமிசோற்பத்தி, *s.* Lineage, generation by families.

•குடும்பி, *s.* A householder, the father of a large family, குடும்பத்தலைவன். Wils. p 226. Kut'umbi.

•குடும்பினி, *s.* The wife of a householder, a mistress, a matron, the mother of a family, குடும்பத்தலைவி. Wils. p. 226. Kut'umbinee.

குடும்பன், *s.* (*fem.* குடும்பி.) The title of a chief among the Paller people, பள்ளர்தலைவன்.

குடும்பு, *s.* A bunch or cluster of fruits, flowers, &c., பூமுதலியவற்றின்கொத்து. (சது.)

குடுவை, *s.* A small earthen pot, சிறுகலசம்.

குடை, *s.* Umbrella, parasol; canopy—as one of the twenty-one symbols of royalty and victory, ஆதபத்திரம். 2. The knob of a sandal, பாதக்குறட்டின்குமிழ். 3. A tree with very large thorns, the குடைவேல், Mimosa, *L.* 4. The dance of Skanda, குமாரகூத்து.

குடைகவிக்க—குடைபிடிக்க, *inf.* To bear an umbrella.

குடைக்காம்பு, *s.* See under காம்பு.

குடைக்காரன், *s.* An umbrella-bearer.

குடைநிழற்ற, *inf.* To afford shade—as an umbrella.

குடைக்காளான், *s.* A kind of mushroom, ஓர்காளான்.

குடைக்கொள்ள, *inf.* [*prov.*] To rise in a body—as milk over the fire, as some cakes in frying, &c. 2. To rise or be puffed up—as a cloth, &c. 3. To capsize, to be upset—as a cart.

குடைச்செவி, *s.* Ears pricked up and bent forward—as those of an elephant, tiger, horse, &c., in attack, surprise, or rage, குடைக்காது.

குடைப்பனை, *s.* Talipot Fan-palm, தாலபத்திரப்பனை, Corypha umberaculifera, *L.*

குடையாணி, *s.* A pin or nail with a round head—as distinguished from சடையாணி.

வெண்கொற்றக்குடை, *s.* The white canopy of royalty—as a symbol of victory.

குடை, கிறேன், ந்தேன், வேன், ய, *v. a.* To scoop; to work out a hollow; to bore a tube—as a turner, கடைய. 2. To perforate or form holes—as beetles in wood, துளைக்க. 3. To work in flowers, to gather honey, pollen, &c.—as insects, தாதுகுடைய. 4. To wash, bathe in water; *lit.* to scoop out tank, குளிக்க. 5. To produce a tingling pain or itching in the body, ears, &c.; to work or gnaw—as worms; to cause smarting, &c.—as caustic on a sore, நோவுபடுத்த. 6. (*fig.*) To annoy, to cause great grief, heart-breaking, மனமுடைவுறுத்த.

குடைந்தெடுக்க, *inf.* To excavate, to scoop out.

குடைந்துபோட, *inf.* To eat—as a canker. 2. To scoop out; to hollow; to excavate.

குடைந்துகொண்டிருக்க, *inf.* To ache in the limbs or bones. 2. To gnaw, corrode; to eat by degrees.

குடைகரி, s. A concave piece of charcoal for melting very small piece of gold or silver.

குடைவண்டு, s. Perforating beetles, துர்வண்டு.

காதுகுடைய—காதைக்குடைய, inf. To clear the ears of wax. 2. To have itching or tingling pain in the ears.

நீர்குடைய-சுனைகுடைய, inf. To bathe. (p.)

குடைதல், v. noun. Excavation, தோண்டல். 2. A washing, குளித்தல்.

குடைவு, s. Hollow, a cavity, குகை. 2. v. noun. Excavation, &c.

குடைச்சல், v. noun. [prop. குடைதல்.] Pain imagined to resemble scooping.

கைகால்குடைச்சல், v. noun. Pain in the arms and legs.

சூலைக்குடைச்சல், v. noun. Pains in certain arthritical diseases.

குடைக்கிழங்கு, s. A plant, சிற்றரத்தை, Alpinia galanga minor.

குடைப்புல், s. A kind of grass, ஓர் புல், Andropogon barbatum.

குடோரி, s. A slit, scarification, கீற்று. 2. [in medicine.] Scarifying the skin of the skull and inserting a mercurial or other medical pill, over which is placed a pot of live coals, in cases of syncope, coma, epilepsy, &c., in order to revive suspended animation, மருந்துக்குடோரி. (Sans. Kuttara, cutting.) 3. Lead ore, ஈயக்கல். 4. Borax, வெங்காரம். 5. Mercurius sublimatus, வெள்ளைப்பாஷாணம். (M. Dic.)

குடோரிபண்ண—குடோரியிட—குடோரிவைக்க, inf. To perform the குடோரி operation of healing.

குட்டம், s. Depth; hollow, hole, ஆழம். 2. [a change of குண்டம்.] A tank, or pond, குளம். 3. One of the twelve districts in which vulgar, unpolished Tamil is spoken, கொடுந்தமிழ் நாடுகளிலொன்று. 4. A plant, கோட்டம், Costus, L. 5. [a change of குள்ளம்.] The condition or state of being small, little, young, சிறுமை.

குட்டக்குறடு, s. [prov.] A kind of brazier's pincers, சிறுகுறடு.

*குட்டம்—குஷ்டம், s. Leprosy in general, embracing many kinds, தொழுநோய். Wils. p. 236. Kusht'a.

குட்டக்கரப்பன், s. A white scabby eruption or scurf spreading over the whole surface of the body.

*குட்டநாசனம், s. White mustard, வெண்கடுகு. Wils. p. 236. Kusht'anasana.

குட்டம்பிடிக்க, inf. To come on—as the leprosy; to be afflicted with leprosy. 2. To be covered with a scabby eruption.

குட்டம்பிடித்தவன்—குட்டரோகி—குட்டன், s. A leper.

நீர்க்குட்டம், s. Watery leprosy.

வெண்குட்டம், s. The white leprosy.

*குட்டாரி, s. A hill or mountain, மலை. (சது.) Wils. p. 227. Kut't'ara.

குட்டன், s. An infant, a babe, குழந்தை. 2. A son, மகன். 3. A kid or lamb, ஆட்டுக்குட்டி; [ex குட்டம், little.]

குட்டான், s. [prov.] A little ola-case, basket or sheath, of various forms and uses, சிறுஓலைப்பெட்டி; [ex குட்டம், little.]

குட்டான்கட்ட, inf. To tie a basket round a fruit to defend it from birds, &c.

கிலுகிலுப்பைக்குட்டான், s. A basket-rattle for children.

சுண்ணாம்புக்குட்டான், s. A toddy-man's chunam-basket.

பனங்கட்டிக்குட்டான், s. A small jaggery-basket.

பிடியரிசிக்குட்டான், s. A deep, little ola-basket in which handfuls of rice are daily deposited for the temple, or for other charitable purposes.

பூக்குட்டான், s. A small kind of cocoa-leaf flower-basket.

குட்டி, s. The young of elephants, horses, asses, goats, sheep, dogs, jackals, cats, swine, tigers, lions, bears, deers, elks, hares, monkeys, snakes, alligators, ichneumons, sloths, armadillos, sharks, &c.; also, the young of plantain-trees, and sometimes (local) the young of mango-trees, margosa-trees, coconut-trees, and jack-trees, ஆடுமுதலியவற்றின்குட்டி. 2. A little girl, சிறுபெண்பிள்ளை. 3. A child, in fondness, especially the youngest, குழந்தை. 4. [in gambling.] An additional coin or seed set down as a stake by a person who hits a wrong seed, coin, &c., ஓர்விளையாட்டில் அதிகமாகக்கட்டுங்காய். 5. [prov.] An additional sum claimed or allowed on a debt—as a share of the net profit, &c., ஆதாயம்; [ex குட்டம், little.]

குட்டிக்கழுதை, s. A young ass.

குட்டிக்கரடி, s. The whelp of a bear.

குட்டியாடு, s. A kid, a lamb.

குட்டியாடுகொழுத்தாலும்வழுவழுப்புத்தீராது...... Though a kid fattens, its lubricious quality does not cease; though a youth perform notable actions, they are commonly imperfect.

குட்டிபோட, inf. To bring forth—as brutes; to calve, to cub, to whelp, to foal, to kitten, to lamb, to litter, குட்டியீன. 2. [prov.] To put down a forfeited seed or coin in gambling at stakes to be played for, விளையாட்டிலதிகப்பந்தயமிடுக.

குட்டியிட, inf. To bring forth—as cats, dogs and bears.

குட்டியுண்டாயிருக்க, inf. To be big with young—as brutes.

குட்டிக்காணங்கெளிறு, s. A young காணங்கெளிறு fish.

குட்டிக்கிழங்கு, s. Small esculent roots growing about a large one, சிறியகிழங்கு.

குட்டித்தக்காளி. s. A kind of Physalis angulata, சிறுதக்காளி.

குட்டிப்பலா, s. A small jack-tree. 2. A species of jack-tree.

குட்டிவிளா, s. A kind of tree, ஓர்விளாமரம். 2. A shrub.

குட்டித்தாய்ச்சி, s. [vul.] A pregnant animal.

குட்டியப்பன், s. The father's younger brother, சிறியதகப்பன்.

குட்டிச்சாத்தன், s. (fem. குட்டிச்சாத்தி.) An elf, imp, a little goblin, invoked in performing juggling tricks, குறளி.

குட்டிச்சாத்திக்காரரன், s. An enchanter, sorcerer, one who is supposed to have power over a familiar spirit.

குட்டிப்பல், s. An extra or dwarf tooth.

குட்டிவிரல், s. A sixth or extra finger or toe, smaller than the proper size, ஐந்திற்குமிகமானவிரல்.

குட்டிச்சுவர், s. A short piece of wall adjoining a large building, சிறுசுவர். 2. (fig.) A worthless fellow, மடையன்.

காரியங்குட்டிச்சுவராய்ப்போயிற்று The thing has dwindled away, is come to nought.

குட்டிக்கம்பு, s. A small stick which children use in play.

குட்டிக்கொத்தான், s. [prov.] A kind of play with pebbles, ஓர்விளையாட்டு.

குட்டிபடல், v. noun. [prov.] Striking a wrong coin or seed in games. 2. Becoming pregnant—as a sheep, goat, or dog, சினைப்படல்.

குட்டியடிக்க, s. [prov.] To strike another coin, or seed than the one indicated.

குட்டிவைக்க, inf. [prov.] To hit the wrong coin, &c.—as குட்டியடிக்க. 2. To forfeit a coin, seed, &c., in gambling.

*குட்டிமம், s. Ground smoothed and plastered; floor plastered or paved, மெழுகுபூமி. Wils. p. 227. Kut't'ima.

*குட்டியம், s. A wall, சுவர். Wils. p. 227. Kud'hya.

குட்டிப்பிடுக்கி, s. A plant, சிற்றரத்தை, Alpinia galanga-minor, L. (M. Dic.) 2. A plant, கோட்டம், Costus, L. 3. A kind of grass or weed in rice fields, வயற்குடன் முளைக்குமோர்புல்.

குட்டினம், s. A plant, கருஞ்சீரகம், Nigella sativa. (M. Dic.)

*குட்டினி, s. A short hump-backed, mischievous woman; one who sows discord, கூனி. 2. A bawd, a procuress, சக்கம்மாக்குமவள். Wils. p. 227. Kut't'inee.

குட்டு, s. Honor, மானம். (Rott.)

குட்டு, கிறேன், குட்டினேன், வேன், குட்ட, v. a. To cuff on the head, தலையிற்குட்ட. 2 (fig.) To cheat, overcome by fraud, சதிக்க.

குட்டுப்பட்டாலும் மோதிரக்கையினாலே குட்டுப்படவேண்டும். If cuffed at all, let it be with a jeweled hand; i. e. reproof from a worthy character is profitable.

வியாபாரத்திலேயவனைக்குட்டிப்போட்டார்கள்..... They have injured him in traffic.

காகம்அவன்தலையிலேகுட்டிப்போட்டது. The crow has cuffed him on his head.

காகக்குட்டிவிளையாடுகிறார்கள். The boys play crow-cuffing (a play in imitation of the cuffing of crows).

குட்டிக்கும்பிட, inf. To cuff the head, three times or more, and then raise the hands closed in worship.

குட்டு, v. noun. A blow with the fist on the head; a buffet, a cuff, தலையிற்குட்டுங்குட்டு.

குட்டுண்ண, inf. To be buffeted, cuffed, குட்டுப்பட.

குட்டுணி, s. An untractable, shameless fellow, cuffed about by every one, குட்டுண்பவன்.

குட்டல், v. noun. The act of cuffing.

குட்டுவன், s. A king of the ancient Sêra dynasty. See சேரன்.

குட்டை, s. Shortness, dwarfishness—as of a person, குள்ளம். 2. A pool or pond, சிறுகுளம். 3. A handkerchief, a small shawl, கைக்குட்டை. 4. [prov.] Stocks, either for the legs, or the hands, தொழுமரம். 5. A white scabby eruption, considered contagious, ஓர்குட்டநோய்.

குட்டையன், s. (fem. குட்டைச்சி.) A short man. 2. A person affected with the குட்டை eruption.

குட்டையாக்க, inf. To cut short, to curtail.

குட்டையாயிருக்க, inf. To be short.

குட்டைபோட—குட்டைமாட்ட, inf. To put in the stocks.

குட்டைபிடிக்க, inf. To be covered with the குட்டை eruption.

குணகண்டி, s. A winding plant, சிவதை, Convolvulus, L.

•குணகம், s. [in arith.] The multiplier, பெருக்குந்தொகை. Wils. p. 291. GUN'AKA.

•குணகாங்கியம், s. A work on Sanscrit grammar, ஓராரியநூல்.

•குணகாரம், s. (Sans. Gun'ahara.) Multiplication, பெருக்குக்கணக்கு.

குணகு, s. [a change of Sans. Kun'apu.] A devil, a goblin, பிசாசம்.

குணக்கு, s. Crookedness, flexture, curvature, கோணல்; [ex குட, crooked.] 2. Thwartness, opposition, thwarting, எதிரிடை. 3. The east, கிழக்கு.—Note. In the last sense, the word becomes குண to convey an adjective signification—as in குணகடல், குணதிசை, குணகாடு.

குணக்குப்பண்ண, inf. To thwart an undertaking; to cause difficulties in business, to throw obstacles in the way.

குணக்கெடுக்க, inf. To straighten a crooked thing.

நாயின்வாலைக் குணக்கெடுக்கலாமா. Is it possible to divest a dog's tail of its curl?

குணக—குணங்க, inf. v. n. To become bent or crooked, வளைய. 2. To sink, faint, fade, droop, சோர. 3. To be dejected; to feel uneasy; to be vexed, மனங்கசர.

குணக்க, inf. v. a. To bend, to incurvate, வளைக்க.

குணகோளார்த்தம், s. Eastern hemisphere; [ex கோளம், sphere, et அர்த்தம், half.]

குணட்டு, s. [prov.] Ear of corn. See கிணட்டு.

குணட்டு, கிறது, குணட்டினது, ம், குணட்ட, v. n. [prov.] To wanton, to wheedle, to speak amorously—as a courtezan, மயக்கிப்பேச. 2. To whine in jest; to speak saucily—as petted children, செல்லங்கொஞ்ச. 3. To caper about—as a dog, துள்ளிவிளையாட.

•குணபம், s. A dead body, a corpse, a carcass, பிணம். Wils. p. 227. KUN'APA. 2. A goblin or ogre, supposed to haunt cemeteries, and animate dead bodies, பிசாசம். (p.)

குணபவுணர், s. Rakshas, பிசிதவுணர்.

குணபாசி, s. [prop. குணபாசி.] A spirit, an imp, a goblin, பிசாசம்; [ex குணபம், et அச, eating, carcass-eater.]

குணபலம், s. A medicinal root, used for dysentery, அதிவிடையம்.

•குணம், s. Quality, attribute, property, பண்பு. 2. Disposition, temper, nature, தன்மை. 3. Good quality, moral or physical; proper temperament, virtue, நற்குணம். 4. Attribute, perfection, excellence—as of a deity, இலட்சணம். 5. Grace, beauty—as of a style or composition; merit, freedom from fault or defect—opposed to குற்றம், மேன்மை. 6. Wholesomeness, healthfulness, சுகம். 7. Soundness of intellect; normal state of the mental feelings, தெளிவு, புத்தி. 8. Indication, symptoms—as of a disease, வியாதியின்குறி. 9. Color—as a quality, நிறம். 10. Smoothness, மிருது. 11. Properties; functional powers or principles in nature, operative in all sentient beings; the sources of the disposition, &c., தத்துவம். 12. Thread, cord, string, &c., நூல், கயிறு. 13. A bow-string, நாணி. 14. Property of a thing—as proved by experiments; primitive, constitutional property, essence, original principle, சத்து. 15. [in physics.] Varieties, modifications, products of bodies, உடற்குணம். Wils. p. 291. GUN'A. 16. A water-pot, a pitcher—as குடம்.

குணத்தைமாற்றக் குருவில்லை. No guru can change the temper.

குணத்தோடேகேள். Hear me with a right spirit and patience.

குணநாடிக்குற்றமுநாடி. Having examined the excellencies and faults—as of a style, a speech, &c.

குணமதனைவிடேல். Hold to what is good and proper; cease not to show a good disposition.

குணமென்னுங்குன்றேறிநின்றார்வெகுளிகணமேயுங் காத்தலரிது. It is hard to divert, even for a moment, the anger of those who stand upon the mountain of virtue; i. e. who excel in virtue. (குறள்.)

அதிலுமிதுகுணம். This is better than that.

அவனுக்குத்தாய்தகப்பன்குணம்பிடிபடுகிறது. His parents' disposition and temper begin to be visible in him.

குணகுணி, s. [in gram. and log.] Attribute and subject—as in செந்தாமரை, where செம்மை is the attribute, குணம், and தாமரை the subject, குணி.

குணகுணிப்பெயர்கள், s. [in gram.] Abstract noun and subjective noun. (சங்.)

குணக்ஞன்—குணஞ்ஞன், s. A pleasant, good-natured, agreeable person; one of an excellent disposition, நற்குணமுள்ளவன். Wils. p. 291. GUN'AG'N'A.

குணக்குன்று, s. A virtuous man; lit. a mountain of excellent qualities.

குணக்கேடு, s. Bad temper, bad disposition; disobliging, unkind, கெட்டகுணம். 2. Fatal symptoms in diseases, அசாத்தியக்குறி.

குணக்கேடன்—குணங்கெட்டவன்—குணமில்லாதவன், s. An ill-natured person.

குணங்காட்ட, inf. To exhibit natural characteristic qualities, dispositions or propensities. 2. To betray symptoms—as diseases; to indicate good or bad weather—as seasons. 3. To betray mean descent, low caste, &c., by mean behavior.

குணங்குறி, s. Disposition, features, characteristics, குணமுங்குறியும்.

குணங்குறியறிய, inf. To know one's disposition and character.

குணங்குறியுள்ளவன், s. A man of good disposition, and other good characteristics.

குணசந்தி, s. [in gram.] A form of combining words of Sanscrit origin—as சுர and இந்திரன், make சுரேந்திரன், வடமொழிச்சந்தியொன்று.

குணசாலி, s. A good-natured man or woman; one of an excellent disposition.

குணசீலன், s. One abounding in excellent qualities.

குணசுபாவம்—குணப்பிரகிருதி, s. Natural disposition.

குணஷ்டை, s. Delinquency, defect, flaw, குணதோஷம். 2. Difficulty, trouble, தொந்தனை.

குணத்தன்மை, s. [in rhet.] Description of qualities, one of the four subdivisions of தன்மையலங்காரம்.

குணத்திரயம், s. The three properties in nature—purity, passion and darkness. Wils. p. 291. GUN'ATTRAYA. See முக்குணம்.

குணத்துக்குவர, inf. To grow better, to amend, to reform. 2. To recover from illness. 3. To be reconciled, இணங்க.

குணத்தொகை, s. See பண்புத்தொகை.

குணத்தொனி, s. The twang or sound of a bow-string.

குணநிதி, s. A benevolent, kind person, நற்குணநிறைந்தவன். 2. The Deity, கடவுள்.

குணபத்திரன், s. The Deity, கடவுள். 2 The name of the preceptor and guru of மண்டலவன் the author of Nighandu. 3. Argha, அருகன்.

குணபேதம், s. Change of disposition for the worse, degeneracy, குணவேற்றுமை. 2. Unfavorable symptoms in a disease, வியாதிவேற்றுமைக்குணம். 3. Abnormal state of the mental powers—as idiocy, insanity, &c.; derangement, மாறுபாடான குணம்.

அவன்குணம்பேதித்திருக்கிறது. He is changed for the worse.

குணப்பட, inf. To come to a right state, temper, disposition, &c.; to be changed for the better, to become tractable, docile, சீர்ப்பட. 2. To recover from sickness, to get well, சுகமடைய. 3. To improve—as crops, &c., to recover strength, to grow, to thrive, திருப்பட. 4. To reform, to amend in morals, to improve in disposition, character or habits, நடைதிருந்த. 5 [in Christian usage.] To be converted, to repent, to be penitent, மனந்திரும்ப.

குணப்படுத்த, inf. v. a. To improve, to make better, to correct, to reform, to restore to a good state, to health, &c.; to remedy, சீர்திருத்த. 2. To convert, மனந்திரும்பச்செய்ய.

குணப்பட்டவன், s. [in Christian usage.] One who has repented; a convert.

குணப்பண்பு, s. [in gram.] Sensible qualities of objects—as bitterness, whiteness—as distinguished from குறிப்புப்பண்பு, ideal quality, and தொழிற்பண்பு, acting quality. See பண்பு.

குணப்பிழை, s. Ill nature, bad temper or disposition, குணக்கேடு. 2. Ill success, பயனின்மை. 3. Unfavorable signs in disease, &c., அசாத்தியம்.

•குப்பாயம், s. A cloak, a coat, a bodice; a jacket with short sleeves, worn next the body, especially by women; also, a cuirass or quilted jacket, worn as armor, கவசம். Wils. p. 232, and 239. Kurppasa.

குப்பாயசம், s. The body—as covered with a குப்பாயம் coat, சரீரம். (p.)

•குப்பி, s. A phial, a flask, a bottle, தைலக்குப்பி. Wils. p. 239. Kupee. 2. A small golden ornament, worn on the hair of women, மாதர்சிரசணிபொன்று. 3. The screw of a lute, யாழின்குப்பி. 4. A ferrule or knob at the end of a scabbard, bullock's horns, elephant's tusk, spout of a kettle, &c., பூண். 5. [prov.] An ear-ring of a particular shape, குப்பிக்கடுக்கன்.

காசிக்குப்பி, s. A phial containing holy water from the Ganges at Benares.

குப்பிமுடிக்க, inf. To fasten the குப்பி ornament in the hair-tuft.

குப்பிச்சாரம், s. A mineral salt, காசிச்சாரம்.

குப்பிலவணம், s. A medicinal salt, வெடியுப்பு, Fel vitri, L.

குப்பிவைப்பு, s. The process of chemical preparation in an alembic. 2. The materials for the chemical preparation.

குப்பிக்குட்சமைந்தகன்னி, s. A kind of arsenic, பஞ்சபட்சிபாஷாணம்.

குப்புழாய்—குப்புழை, s. [prov.] A kind of creeper, the leaves of which serve as food for cattle.

குப்புறு, கிறேன், குப்புற்றேன், வேன், குப்புற, v. n. To fall prostrate, on the face and front of the body, முகக்குப்புறவிழ. 2. To incline the face downwards, தலைகுனிய. 3. To pass over, to leap over, கடக்க. 4. To jump down, பாய.

பிள்ளைகுப்புற்றுக்கொண்டிருக்கிறது. The child lies with the face downwards.

குப்புறத்தள்ள, inf. To throw one down upon the face.

குப்புறப்படுக்க—குப்புறக்கிடக்க, inf. To lie, or sleep, on the face.

குப்புறப்பிடிக்க, inf. To hold—as an infant—with the face downwards.

குப்புறவிழ-குப்புற்றுவிழ, inf. To trip and fall forward, to fall flat on the face—generally involuntarily.

குப்புறவிழுந்துபிடித்துக்கொண்டான். He lay flat on his face, obstinately refusing to rise.

குப்பை, s. A collection, a heap, குவியல். 2. A clump, a group, கூட்டம். 3. A hillock, மேடு. 4. Sweepings, rubbish, fragments, கூளம். 5. A dunghill, a hillock of sweepings and other refuse, குப்பைமேடு. 6. Dung; excrement, human dung—in decent language, கஷ்டம்.

பணக்குப்பை, s. Abundance of money.

குப்பைமேடு, s. A heap or hillock of sweepings or rubbish.

குப்பையாகவிருக்க, inf. To be in confusion—as goods, &c. 2. To be crowded, or thick—as herbage. 3. To be abundant, plentiful—as money, &c.

குப்பைபோட—குப்பைவைக்க, inf. To cast peel, parings, refuse, &c., on the floor. 2. To manure with sweepings, rubbish, &c.

குப்பைகிளைக்க—குப்பைசீக்க, inf. To tear or scratch up a dunghill, a heap of sweepings, &c.—as a hen.

குப்பைகூட்ட—குப்பைபெருக்க, inf. To sweep up rubbish.

குப்பைக்காரன், s. (fem. குப்பைக்காரி.) A sweeper of the streets, a scavenger.

குப்பைவாரி, s. A garden-rake, வாருகோல். See குப்பைக்காரன்.

குப்பைக்கீரை, s. A kind of weed. See under கீரை.

குப்பைப்பருத்தி, s. A plant, ஓர்பருத்தி. See under பருத்தி.

குப்பையன், s. (fem. குப்பைச்சி.) A sloven, in contempt, அழுக்கடைந்தவன்.

குப்பைமேனி, s. A kind of plant, a vermifuge, an antidote to poisonous bites—also used for food, ஓர்பூடு, Acalypha Indica, L.

குமஞ்சம்—குமஞ்சான், s. Frankincense, தூபவர்க்கம், viz.: 1. ஆண்குமஞ்சான் or குக்கிலியம். 2. பெண்குமஞ்சான் or சாம்பிராணி. (Rott.)

குமடு, s. [vul.] The cheeks, கன்னம்.

குமட்டு, s. Nausea, keck; loathsomeness, ஓக்காளம்.

குமட்டு, கிறது, குமட்டினது, ம், குமட்ட, v. n. To feel nausea, to keck, to retch, வாய்குமட்ட. 2. To loathe, அரோசிக்க.

அவனுக்குத்தின்றதுகுமட்டுகிறது. What he ate is coming up. 2. He is wanton, frolicsome, &c., through high living.

குமட்டிக்கொண்டிருக்க, inf. To be nauseous, kecking, retching.

குமட்டியெடுக்க—குமட்டியெடுத்துப்போட, inf. To puke, vomit.

நெஞ்சைக்குமட்டல், v. noun. Retching, heaving of the stomach.

குமட்டல், v. noun. The act of retching, kecking.

•குமதி, s. A fool, a stupid fellow, புத்திகேடன்; [ex கு, bad, et மதி.]

குமஸ்தா, s. (Hind.) A writer; a clerk.

குமரகண்டம், s. A kind of disease, attended with convulsions, contortions, &c., ஓர்வலிப்பு.

குமரம், s. Beasts without horns, கொம்பில்லாவிலங்கு.

•குமரம், s. An ancient and lost work on Tamil grammar, by a Jaina, குமரமென்னுமிலக்கணநூல்.

•குமரன், s. A young man, one of sixteen years old, பாலியன். 2. A man in his prime from sixteen years to thirty-two, கௌமாரன். 3. A youthful son, புதல்வன். 4. Skanda, முருகன். 5. Bhairava, வயிரவன்.—Note. The gods and celestials are described as remaining permanently youthful, and enjoying juvenile vigor. Wils. p. 230. Kumara.

குமரதானம், s. [in versification.] The second of the five arbitrary divisions of letters, for the beginning of a poem, எழுத்துத்தானத்திலொன்று. See under தானம்.

•குமரி, s. A girl, arrived at maturity and unmarried; a lass, பருவமுடையவள். 2. A virgin, a maid, கன்னிகை. 3. A youthful daughter, புதல்வி. 4. The name of the daughter of Bharata, to whose share the southern division of Bharatavarsha or India fell, and from whom the southern extremity of the peninsula was called Cape Comorin or Kumari, பரதன்மகள். 5. Unfadingness, imperishableness, unchanging youthfulness, அழிவின்மை. 6. The wild aloe. (See கற்றாழை.) 7. The Kumari river near Cape Comorin, where it is said Parvati did penance; one of the seven sacred rivers, கன்னியாகுமரி. 8. Kali, காளி. 9. Durgha, considered as one of the seven matrons. See கௌமாரி. Wils. p. 230. Kumaree.

குமரியிருட்டு, s. Darkness just before day-break.

குமரிவாழை, s. Young, thriving plantain trees.

குமரிஞாழல், s. An ever-green ஞாழல்.

குமரிமாமதில், s. Imperishable fortress, or walls.

குமரியாறு, s. The Kumari river.

குமரிகண்டம், s. A portion of Southern India, named after the queen குமரி, by whom it was first governed.

குமரிச்சேர்ப்பன், s. Any king of the Pándian dynasty, as the owner of the lands, along the banks of the குமரி river.

குமர், s. [a change of குமரி.] A virgin, மணமுடியாதவள். 2. The unmarried state, கன்னிமை.

குமல், s. A sickle, அரிவாள்.

குமளம்பாசு, s. The name of a fish, அறக்குளாமீன் and சுறாமீன்.

குமாரத்தி, s. A daughter, commonly young—auspiciously spoken, புத்திரி. 2. A king's youthful daughter, a princess; a young woman of royal or exalted birth, இராசகுமாரி.

•குமாரன், s. A son, புத்திரன். 2. A young man of sixteen years old, பாலியன். 3. A man in the prime of youth from sixteen to twenty-four, or according to some, from sixteen to thirty-two. (See பருவம்.) 4. The son of a king's minister; a prince, இராசகுமாரன். 5. [in theatrical language.] A prince, the heir-apparent and an associate in the government of the empire, நாடகத்தில்வருங்குமாரன். 6. An adult son—a term of respect or flattery, பிள்ளை. 7. Skanda, as enjoying eternal youth, முருகன். Wils. p. 230. Kumara.

குமாரப்பல்லக்கு, s. A small palankeen.

குமாரவர்க்கம், s. Lineage, progeny.

தேவகுமாரன், s. The son of a deity.

குமாரதளவாய், s. A prime-minister to the king of Madura.

•குமாரி, s. A girl, arrived at puberty, குமரி. 2. A youthful daughter, புதல்வி. 3. Durga, துர்க்கை. Wils. p. 230. Kumaree. 4. A solvent or menstruum which dissolves gold, சுவர்ணபேதி.

•குமார்க்கம், s. Irreligion; heresy, அமார்க்கம்.

குமி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To over-beat—as rice, மிகக்குத்த. 2. To accumulate, to heap up, to gather, குவிக்க.

குமிதை, s. White sesamum, வெள்ளெள்ளு. (நிக.)

குமிட்டக்கல், *s.* Iron-dross, கிட்டக்கல்.

குமிட்டி, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* [*vul. local.*] To swell; to form—as a tumor, a flower-bud, &c., குமிழ்போலாக.

குமிதிகம், *s.* The teak-tree, தேக்கு.

குமிலம், *s.* A great noise, roaring of the sea, &c.; acclamation, shout, பேரொலி. (சது.)

குமிழி, *s.* A water-bubble, நீர்க்குமிழி. 2. [*prov.*] A boss; a knob—as of wooden slippers. மிதியடிக்குமிழ்.

நீயேகுமிழி நீயேசாட்சி. O thou bubble! thou alone art my witness (supposed to be said by a person maliciously and privily drowned).

குமிழிகொள்ள—குமிழிவர, *inf.* To bubble up; to form—as bubbles.

குமிழ், *s.* Bubble, blubber, நீர்க்குமிழி, 2. A knob—as of wooden slippers; a stud, a pommel, any thing round or convex—as the head of a nail, the chapter of a column, &c., திரண்டவடிவம். 3. A kind of thorny tree, Gmelina tomentosa, from which torches are made for travellers, நம்மம். In poetry, the nose is often compared to the red குமிழ் flowers. 4. A reed, நாணல். (*M. Dic.*) 5. The hump of an ox, எருத்தத்திமில். 6. A swelling or protuberance in the sole of the foot, உள்ளங்கால்கட்டி.

குமிழெழும்ப, *inf.* To form—as bubbles.

குமிழாயிருக்க, *inf.* To be globular, bubble-like, spherical.

குமிழாணி, *s.* A knob or stud. 2. A round-headed nail.

குமிழங்கழி, *s.* A stick or staff of the குமிழ் tree.

குமிழஞ்சூழ்-குமிழஞ்சுழுந்து, *s.* Torches of the குமிழ் splinters or branches, used by travellers.

செங்குமிழ், *s.* The red குமிழ் shrub, Gmelina Asiatica.

நிலக்குமிழ், *s.* A low species of the குமிழ் shrub.

பெருங்குமிழ், *s.* The குமிழ் tree.

குமிழ், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To grow into a conical shape; to be spherical, globular; to form—as bubbles, திரள.

குமிழ்ப்பு, *v. noun.* Bubbling up, குமிழ்க்கை. 2. Momentary swelling at the root of the hairs of the body, accompanied with horripilation, புளகம்.

குமிழ்வண்டு, *s.* A perforating beetle. See குடைவண்டு.

குமிளி, *s.* [*local. vul.* குமுளி.] A bubble, நீர்மேற்குமிழி.

குமிளிக்கண், *s.* The fountain or opening of a spring, ஊற்றுக்கண்.

குமிளி, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To bubble; to rise in bubbles, pustules, &c.

குமுகுமெனல், *v. noun.* [*local.*] To spread—as odor; to be very fragrant. 2. To fall in torrents.

குமுகுமென்றுமணக்கிறது. It is very fragrant; it spreads a strong odor.

குமுக்கு, *s.* Whole, total, the lump or gross; wholesale, மொத்தம். 2. A large or considerable quantity, number, &c., பெருந்தொகை. 3. [*local.*] A band, a clan, a crowd, a faction, கூட்டம், சேர்க்கை. 4. (*Hind.*) Aid, assistance, help, உதவி.

குமுக்கிலேவாங்க — குமுக்காய்வாங்க, *inf.* To buy in the lump.

குமுக்குப்பண்ண — குமுக்குச்செய்ய, *inf.* To render assistance.

குமுணன், *s.* One of the seven liberal men of the first class. See வள்ளல்.

குமுதகம்—குமுதம், *s.* [*in architecture.*] A kind of moulding, நிர்த்திரக்கம்பி.

குமுதம், *s.* A cooking fire-place, அடுப்பு. 2. Roaring, acclamation, பேரொலி. 3. [*properly* குமுதம்.] A division of an army, being treble of a சேனாமுகம், படைப்பேரணி தொகை. 4. Sacrificial grass, தருப்பை. 5. A kind of native arsenic, வைக்கிராந்தபாஷாணம். 6. Another kind of native arsenic, வெள்ளைப்பாஷாணம். 7. A disease of the eye, கருவிழிநோயிலொன்று. 8. [*prov.*] Abundance—as of produce, income, &c., மிகுதி.

•குமுதம், *s.* The white water-lily, வெள்ளாம்பல். 2. The red water-lily, செவ்வாம்பல். 3. The elephant of the south west, as supporting the earth, தென்மேற்றிசையானை. Wils. p. 230. Kumuda.

குமுதசகாயன்—குமுதநண்பன்—குமுதபதி—குமுதேசன், *s.* The moon—as the friend and lord of the lily, expanding during the night and closing during the day time, சந்திரன்.

•குமுதன், *s.* One of the chiefs of the monkey force of Ráma, குரங்குப்படைத்தலைவரிலொருவன்.

குமுந்தம், *s.* A kind of native arsenic, கற்பாஷாணம்.

குமுஷி, *s.* A sacred plant among the Hindus, துளசி, Ocymum sanctum, *L.* (*M. Dic.*)

குமுறு, கிறது, குமுறினது, ம், குமுற, *v. n.* To thunder, மேகமுழங்க. 2. To sound, to roar; to bellow, to resound, to rumble, to emit a roaring hollow sound, இரைய. 3. To bubble in boiling, to effervesce, கொதிக்க. 4. To sound—as the noise of a multitude, பேரொலியொலிக்க.

குமுறிக்கொண்டிருக்கிறான். He is bellowing, vociferating; is wanton and mettlesome.

உலைகொதித்துக்குமுறுகிறது. The water (for rice, &c.), is boiling up with a rumbling noise, &c.

முலையிற்பால்குமுறிக்கொண்டிருக்கிறது. The milk in the breast, or udder, is working up to gush out, or to distend the vessels.

குமுற இடிக்க, *inf.* To pound forcibly in a mortar, in beating out the grain, &c.

குமுறக்காய, *inf.* To be boiling hot—as oil; to boil up; to be heated to a high degree.

குமுறிப்பாய, *inf.* To gush or spring out—as a roaring torrent.

குமுறப்பிழிய, *inf.* To press out hard—as juice, &c.

குமை, கிறது, ந்தது, யும், ய, *v. n.* To be over-boiled or boiled soft, or to a mash—as greens, &c., குழையவேவ. 2. To be in a state of confusion, மயங்க. 3. To faint or droop—as one in a swoon, சோர. 4. [*local.*] To be hot, sultry, வெப்பந்தாற்புழுங்க. 5. [*fig. in poetry.*] To be destroyed, அழிய.

எல்லாம் ஒன்றுக்குமைந்துபோய்க்கிடக்கின்றன. The property of several persons, ancestors, &c., has all settled upon one. 2. The things are all in confusion. 3. Several things are mixed together.

குமைந்துகுமைந்துமெலிந்துபோகிறான். He faints every time he is taken up.

கண்குமைகிறது. The eye-lids close together (from a predominance of heat in the system).

குமைந்துபோக, *inf.* To be boiled into a mash.

குமை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To over-boil, boil soft, to reduce to a mash by boiling, குழையவேவிக்க. 2. To tread down, to tread out into a mash, துவைக்க. 3. [*in poetry.*] To destroy, அழிக்க. 4. To beat or bruise in a mortar, உரலிற்குத்த.

குமைஞ்சான், *s.* Frankincense. See குமஞ்சான்.

•கும்பகம், *s.* Stopping the breath by shutting the mouth and closing both nostrils with the fingers of the right hand, சுவாசபந்தனம். As a religious exercise among ascetics, it is the power of suspending respiration, thereby securing the attention, as the Hindu metaphysicians think, to the contemplation of divine and super-human things. Wils. p. 231. Kumbhaka. 2. A native arsenic, தொட்டிபாஷாணம். 3. Another kind of arsenic, சரவங்கபாஷாணம்.

•கும்பகன்னன்—கும்பகர்ணன், *s.* The gigantic brother of Rávan'a, whose ears were like a jar. He is said to have performed austerities to obtain immortality, நித்தியத்துவம்; but, under the evil influence of the supernals, who dreaded his power, he was made to falter in his words and to say, நித்திரைத்துவம் (sleepiness), and he was thenceforward given up to sleep. Wils. p. 231. Kumbhakarn'a.

கும்பகன்னபடலஞ்சேவிக்கிறான். He sleeps long and soundly; *lit.* he serves in the department of Kumbhakarn'a.

•கும்பகாம்போதி, *s.* A tune or class of tunes, a species of காம்போதி—one of the thirty-five.

•கும்பகோணம், *s.* The town of Combaconum, கும்பகோணம். 2. [*fig. vul.*] Fraud, humbug, wiles, trick, மோசம்.

கும்பஞ்சான், *s.* The Jalap plant, சிவதை, Convolvulus turpethum, *L.*

•கும்பம், *s.* An earthen pot, a water-pot, கலசம். 2. A large sacrificial pot filled with water, used on sacred occasions; also, a sacred pot painted with mystic diagrams, adorned with leaves, flowers, &c., and sometimes carried in procession, கரகம். 3. A zodiacal sign, Aquarius, கும்பராசி. 4. The frontal globe of an elephant's forehead, which swells during the rutting season, யானைமத்தகம். Wils. p. 231. Kumbha. 5. The forehead, நெற்றி. 6. [*prov.*] The top of the back about the nape, பிடரிக்கும்பம். 7. [*prov.*] Round, prominent back of the shoulders, தோட்கும்பம். 8. A heap—as of rice, sand, &c., குவியல். 9. (*Rott.*) As கும்பஞ்சான். 10. A kind of arsenic, பலண்டுறுகம். 11. A kind of native arsenic, நரலிங்கம்.

கும்பகலசம், *s.* A small pot of water, wound round with thread and otherwise ornamented, placed on heaps of grain, deified temporarily by incantations, and worshipped as the representative of a deity—as many pots being set as there are deities invoked on the occasion, மகிரிகும்பம்.

கும்பசலம், s. The water in the sacred pot, afterwards sprinkled on the people, or sipped by them, as possessing mystic virtue to cure disease, to expiate sin, &c., மந்திரகும்பநீர்.

கும்பவஸ்திரம், s. The cloth with which the sacrificial pot is adorned.

கும்பஸ்தாபனம், s. Setting up sacred pots for worship, religious ceremonies, &c.

கும்பதக்கணை-கும்பதட்சிணை, s. Money for the sacrificial pot as an offering to the gods, and taken by the officiating priest.

கும்பாபிஷேகம், s. The consecration of an idol, a king, &c., by pouring water from the sacrificial pots with appropriate ceremonies, &c., கும்பசிரபிஷேகம்.

கும்பமெடுக்க, inf. To carry in procession the sacred pot with appropriate ceremonies.

கும்பம்நிறுத்த—கும்பம்வைக்க—கும்பம் ஸ்தாபிக்க, inf. To set up a sacrificial pot for worship.

கும்பம்போட—கும்பங்கொட்ட, inf. To perform a ceremony to the goddess Durga, after recovery from small-pox; also sometimes in fulfilment of a vow.

கும்பகாரன், s. A potter, குயவன். Wils. p. 231. KUMBHAKARA.

கும்பசம்பவன்—கும்பசன், s. A name of Agastya, அகஸ்தியன். Wils. p. 231. KUMBHASAMBHAVA. 2. A name of Dron'a, a priest, celebrated in Bhárata, துரோணாசாரியன்; [ex கும்பம், a pot, et சன், born, the pot-born.]

கும்பமுனி, s. Agastya, அகஸ்தியன். See கும்பயோனி.

கும்பயோனி, s. A name of Agastya, அகஸ்தியன். 2. A name of Vasisht'a, வசிட்டன். 3. A name of Dron'a, துரோணாசாரியன். Wils. p. 231. KUMBHAYONI; [ex கும்பம், pot, et யோனி, birth, the pot-born.]

கும்பச்சுரை, s. A species of gourd.

கும்பஞ்சரிய—கும்பஞ்சாய, inf. [prov.] To hang or droop—as the கும்பம் and head of a person while near death.

கும்பஞ்செய்ய, inf. To make a hillock over a grave, சமாதியின்மேல்மண்குவிக்க. 2. To inter the dead, especially such as died of cholera.

கும்பப்பிளவை, s. A cancerous disease on the top of the back, ஒருபிளவை.

கும்பவாதம், s. One of the eight disorders of flatulence. (M. Dic.)

கும்பாரம், s. [prov. vul. prop. கும்பாசாரம்.] A large heap, a pile, &c., அம்பாரம்.

கும்பல், s. [a change of கும்பம்.] A heap, குவியல். 2. A clump, a cluster, a tuft, திரள். 3. A company, கூட்டம்.

கும்பல்கும்பலாயிருக்கிறார்கள். They are in small groups.

கும்பலாய்க்கூட—கும்பலாயடைய, inf. v. n. To flock into a crowd.

கும்பலாய்க்கூட்ட, inf. v. a. To crowd, to gather up, collect.

கும்பளம், s. A kind of gourd, பூசணி, Cucurbita Indica, L.

கும்பளமோசு, s. The சூரை fish, cut and dried, brought from the Maldives, மாலைதீவின்மீன்.

கும்பளா, s. A kind of fish, ஒருமீன், the rock-cod.

*கும்பன், s. The name of a Ráksha, the nephew of Rávan'a, ஒர்இராட்சதன்.

கும்பா, s. (for.) An urn-shaped brass basin to eat from, ஒர்கலம்.

கும்பி, s. Mud, mire; a slough, சேறு. 2. Heated ashes, or ashes in fire for baking, &c., சாம்பல். 3. The belly, paunch, pot-belly, வயிறு. 4. A heap, குவியல்.

கும்பிக்கிரைதேடியலைவல். Taking great pains in search of food for the belly.

ஒருசாண்கும்பிக்குப்பாடுபடுகிறான், inf. He is toiling for the belly, which is but one span long.

அடுப்புக்கும்பி, s. The heated ashes of the oven.

கும்பிசெட்டி, s. [prop. கும்பிச்செட்டி.] A gold-smith's vessel in which he keeps fire. 2. A pot in which fire is kept for warming in cold weather; a chafer, கணப்புச்சட்டி.

*கும்பி, s. An elephant, யானை. Wils. p. 231. KUMBHEE. 2. Hell, நரகம். Compare கும்பிபாகம்.

கும்பி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To suppress the breath, to suspend the respiration—as a yogi. See கும்பகம்.

கும்பிடு, கிறேன், கும்பிட்டேன், வேன், கும்பிட, v. a. To join the two hands conically, கைகுவிக்க. 2. To worship, make obeisance with the hands joined and raised, கைகுவித்துவணங்க. 3. (fig.) To reverence, adore, worship, ஆராதிக்க. 4. To beg, solicit, crave, entreat, கெஞ்ச.

கும்பிடப்போனதெய்வங்குறுக்கேவந்ததுபோல் சிவசதம். I met you, as if I had met the god whom I was going to worship.

கும்பிடப்போனவன்தலையிலேகோயிலிடிந்துவிழுந்தாற்போல. As if the temple had fallen on the head of him who repaired to it for worship; said of occurrences quite opposite to expectation.

கும்பிடுகள்ளன், s. A hypocritical worshipper; a cunning person.

கையெடுத்துக்கும்பிட, inf. To worship or make obeisance, by raising the joined hands.

கோயில்கும்பிட, inf. To raise the hands in worship, at a temple, either in passing by, or as an attendant worshipper.

கும்பிட்டகைக்குக்கொடுக்க, inf. To make a present to the bridegroom or bride, and sometimes to others, when they raise their hands in reverence to their superiors on the day of marriage, &c., or to a girl on becoming marriageable.

கும்பிடாதவனைக்கும்பிட, inf. To be obliged to serve or ask favors of a mean person.

கும்பிடரி, s. [local.] A bundle of sheaves given to the chief of the village or to the temple.

கும்பிடுகிளிஞ்சில், s. A species of cockle, a bivalve shell.

கும்பிடுபூச்சி, s. [prov.] A class of insects bordering on the vegetable kingdom, whose feelers resemble hands raised in worship.

கும்பிடு, v. noun. Worship, obeisance by raising the hands, வணக்குகை.

கும்பிடுபோட, inf. To venerate; to worship by raising the joined hands.

*கும்பிபாகம், s. One of the seven, chief hells, ஏழுநரகத்திலொன்று. Wils. p. 231. KUMBHEEPAKA.

கும்பு, s. [vul.] A crowd, a collection, a group, கூட்டம்.

சனங்கும்புகும்பாய்ப்போகிறது. The people are passing in companies or crowds.

கும்பு, கிறது, கும்பினது, ம், கும்ப, v. n. [vul.] To become smoky in a slight degree—as food, கும்பிப்போக.

கும்பலடிக்கிறது. It smells smoked.

கும்பற்சாதம், s. Smoked rice (when boiled without a proper addition of water).

கும்பிப்போனகறி, s. Smoked curry.

கும்மட்டம், s. (Hind.) A globe-lantern of paper, &c., விளக்கேற்றக்காகிதமுதலியவற்றாற்கட்டுங்கூடு. 2. The cupola or dome of a pagoda, &c., கோவிலின்குமிழ். 3. (Rott.) Arch, vault, arched roof, வளைவு. 4. A kind of small drum, ஒர்வாத்தியம்.

கும்மட்டி, s. [prov.] Romping, jumping about, leaping, moving about; often, a kind of rustic dance, குதிகொண்டுவிளையாடல். (a corruption of கும்மாளம்.) 2. A drum—as கும்மட்டம்.

கும்மட்டிகுத்த—கும்மட்டியடிக்க, inf. To jump and romp about.

கும்மட்டிக்கூத்து, s. The கும்மட்டி dance.

கும்மலி, s. [prov.] A corpulent, stout girl, பருத்தவள்.

கும்மாயம், s. [local.] Lime, mortar, சுண்ணும்பு.

*கும்மாளம், s. Jumping, romping, moving about—as children, calves, &c.; often, a kind of rustic dance, குதித்துவிளையாடுகை. Wils. p. 230. KUMALA.

கள்ளுவயிற்றிலேகும்மாளங்கொட்டுகிறது. The toddy in his stomach is fermenting (causing him to jump and romp about).

வயிறுகும்மாளங்கொட்டுகிறது. The bowels are rumbling (indicating indigestion or a disordered state of the stomach).

கும்மி, s. [probably a corruption of கொம்மை.] Dancing, especially among young women—accompanied with the clapping of hands to a tune sung by all, ஒர்விளையாட்டு. 2. A species of poem in which the verses are of the same metre as that sung in the கும்மி dancing, ஒர்வகைப்பாட்டு.

கும்மியடிக்க, inf. To play the கும்மி dancing.

கும்மிப்பாட்டு, s. Songs, sung to the கும்மி dance. 2. Stanzas of the கும்மி poem.

சாஸ்திரக்கும்மி, s. [in Christian usage.] A satirical poem, censuring the superstitions of the Hindus, ஒர்நூல்.

கும்மு, கிறேன், கும்மினேன், வேன், கும்ம, v. a. [vul.] To wash—as fine linen, &c., gently working and pressing with the hands, சீலைகும்ம.

கும்மிப்பிழிய, inf. To wash and press fine linen.

கும்மிப்பிசைய, inf. To knead—as dough.

கும்மல், v. noun. Pressing and washing, அடித்தல். 2. s. A sickle—as குமல், அரிவாள்.

கும்மெனல், *v. noun.* A word expressing surprise, or a sense of greatness—as of excessive darkness; also, a sound in the ears when partly stopped with water, &c. கருக்கும்மென்றிருக்கிறது. It is very dark.

குயக்காலம், *s.* A shrub, கிலக்கடம்பு, Justicia, *L.*

குயந்தினலனகை, *s.* A plant, கிலவாகை, Cassia, *L.*

குயபீசகம், *s.* A tree, எட்டி, Strychnos, *L.*

குயமயக்கு, *s.* Intricacy, im-methodicalness, confusion. In சித்திரபாடல். See குசமசக்கு.

•குயம், *s.* Female breast, முலை. Wils. p. 225. Kucha. 2. Juvenility, youthfulness, இளமை. (Compare சுயம்.) 3. A sickle, a reaping hook, a curved knife; wrought iron, கொடுவாள். 4. Sacrificial grass, தருப்பை Wils. p. 235. Kus'a.

குயவரி, *s.* A tiger, புலி. Compare கொடுவரி.

குயவர், *s.* Potters; [*ex* கு, earth.] See குசவர்.

குயவன்மணை—குசவன்மணை, *s.* The foot of a potter's wheel.

குயவிரி—குயவிரிவு, *s.* [*prov.*] Unevenness of surface, or a flaw in a potter's vessel, as it comes from the kiln.

குயவு, *s.* Car; coach, தேர். (கிக.)

குயா, *s.* A kind of cotton tree, கோங்கு. (*M. Dic.*)

குயிலாயம், *s.* [*a change of* குலாயம்.] A bird's nest, பறவைக்கூடு. 2. A pottery, potter's work-shop, மட்கலம்வனையுங்கூடம். 3. A partition or cavity in a wall, சுவரறை.

குயிலு — குயில், கிறேன், குயின்றேன், வேன், குயில, *v. a.* To make, form, execute, or work in general; *hence*, to enchase, or set—as precious stones, இரத்தினம்பதிக்க. 2. To utter, tell, சொல்ல. 3. To call, invite, கூப்பிட. 4. To shape, effect, form, செய்ய. 5. To plat, braid, intwine, பின்ன. 6. To build, construct, &c., கட்ட. 7. To bore, perforate, துளைக்க. 8. *v. n.* To be thick, close, crowded, நெருங்க.

குயிறல். A form of the verbal of குயில்.

குயிலுவம்—குயிலுவத்தொழில், *s.* Playing on stringed instruments, drums, tabrets, clarionets, &c., யாழ்முதலிய கருவித்தொழில்.

குயிலுவர், *s. (pl.)* Lute-players, fiddlers and other players on stringed instruments; also, players on drums, tabrets, clarionets, horns, &c., யாழ்முதலியகருவியாளர். 2. Workers in skins, leather drums, &c., தோல்வினைஞர்.

குயில், *s.* Words; declamation, சொல். 2. The Koil or Indian cuckoo, a bird celebrated in Indian poetry for the sweetness of its notes, ஒருபறவை. It is said to lay its eggs in a crow's nest, and leave them to be hatched and the young reared. There are two species; the black and the striped; [*ex* குயில், to utter.] (See கருங்குயில், புள்ளிக்குயில், or வரிக்குயில்.) 3. A tube, pipe, a hollow cylinder, துளையுடைப்பொருள்.

அவள்பாடுகிறதுகுயில்கூவுகிறதுபோலிருக்கிறது.... She sings as a cuckoo.

குயில்கூவ, *inf.* To sing, to warble—as the குயில். 2. [*prov.*] To present a pleasing, thriving aspect—as growing corn.

குயின்மொழி — குயில்மொழி, *s.* Soft, sweet speech, like the notes of a Koil bird. 2. (*fig*) Licorice, அதிமதுரம். (*M. Dic.*)

குயிலன், *s.* Indra—as having assumed the disguise of a Koil bird, during the flight from his paradise to Srekali in Southern India, இந்திரன்.

குயிற்று, கிறேன், குயிற்றினேன், வேன், குயிற்ற, *v. a.* [*a form of the verb* குயில்.] To enchase, to set stones, பதிக்க. 2. To make, construct, form, செய்ய. 3. To utter, tell; to express, declare, சொல்ல.

குயின், *s.* [*improp.* குயில்.] A cloud, மேகம். (சங்.)

•குயுக்தி, *s.* False wit; false argument, கெட்டயுக்தி.

குய், *s.* Spicy, rich, seasoned curries, தாளித்தகறி. 2. (*p.*) Burnt odors; incense, odoriferous smoke, நறும்புகை.

•குய்யகர், *s.* A class of demigods in the service of Kuvéra, to whose custody his treasures were committed, குபேரதனகாவலர். Wils. p. 294. Guhyaka. (சங்.)

குய்யகலோகம், *s.* The region next above the earth, being the haunt of the Guhyaka demigods. (சங்.)

•குய்யம், *s.* That which is secret, mystical, hidden or private, மறைவு. 2. Pudendum muliebre, பெண்குறி. 3. Genitale virile, ஆண்குறி. 4. The anus, அபானவாயில். 5. Dissimulation, deceit, hypocrisy, கபடம். Wils. p. 294. Guhya.

குய்யபீசகம், *s.* The எட்டி tree, See குயபீசகம்.

•குரகதம், *s.* [*ex* குரம், hoof, *et* கத, going.] A horse, குதிரை. (Compare துரகதம்.) 2. A kind of native arsenic, குதிரைப்பற்பாஷாணம். (*M. Dic.*)

குரகம், *s.* A talking bird, the நாகணவாய்ப்புள், or jackdaw, (*Hind.*) Mainate; Gracula, *L.* 2. (சது.) Water birds, நீர்வாழ்பறவை.

குரகர், *s.* A race of people said to inhabit Saka Dwipa, சாகதீவர். (சங்.)

குரக்கன், *s.* [*prov.*] A kind of red millet, raggy, கேழ்வரகு, Eleusine coracana, *L.*

குரக்கன்நட, *inf.* To transplant the குரக்கன் plants from the nursery or otherwise.

குராங்கம், *s.* The எட்டி tree, Strychnos. (*M. Dic.*)

•குரங்கம், *s.* A deer, an antelope, மான். Wils. p. 232. Kuranga. 2. An animal in general, விலங்கின்பொது. In this sense, not குரங்கம், but குரகம். Wils. p. 274. Khuraka.

குரங்கன்சுறு, *s.* A species of the சுறு fish.

குரங்கி, *s.* The moon; *lit.* the anteloped—the dark figure in the moon being likened to an antelope, சந்திரன்.

குரங்கு, *s.* [*adjectively* குரக்கு, *in poetry.*] A monkey, வானரம். 2. A climbing plant, முசுமுசுக்கை. 3. An animal in general—as குரங்கம், குரகம்.

குரங்கின்கைப்பூமாலை. A flower-garland in the hands of a monkey; i. e. a thing of value with one who knows not its use.

குரங்குக்குத்தன்குட்டிபொன்குட்டி. Even to a monkey her young is as gold; i. e. one thinks highly of his own.

குரங்குதன்குட்டியின்கையைக்கொண்டுபதம்பார்க்கிறதுபோலப்பார்க்கிறான். He tests it by another, as a monkey does a new object by the hand of her young.

குரக்குமனம், *s.* A monkey-mind, retaining its grasp, notions, &c., without inquiry, or discrimination.

குரக்குமுகம் — குரங்குமுகம் — குரங்குமூஞ்சி, *s.* A monkey face.

குரக்குவலி—கொறுக்குவலி, *s.* A kind of disease with which monkeys are commonly said to be affected.

குரங்காட்டம், *s.* Apishness; apish tricks, antics, &c. 2. *v. noun.* Harassing, annoying, treating one as a mere monkey.

குரங்காட்டமாட—குரங்காட்டங்கொள்ள—குரங்காட்டம்பண்ண, *inf.* To annoy, to treat one as a monkey.

குரங்குகடியன், *s.* [*prov.*] A cocoanut, injured at the top, as if by a monkey, squirrel, &c., பழுதுற்றதேங்காய்.

குரங்குச்சம்பந்தம், *s.* The mode of a monkey's hold, grasp, &c., to which the hold of the soul on God is sometimes compared.—*Note.* The hold of God on a soul is compared to that of a cat on its young.

குரங்குச்சேட்டை — குரங்குச்சேஷ்டை, *s.* Mean, monkeyish tricks—as scratching and eyeing carefully; apish imitation.

குரங்குச்சேட்டைபண்ண, *inf.* To play apish tricks; to act meanly; to mimic, in a low manner.

குரங்குப்பிடி, *s.* A firm grasp—as that of a monkey. 2. Dogmatism in opinion, பிடிவாதம். 3. Urgency, importunity.

குரங்குவலி, *s.* Numbness and pain in the limbs with shivering; a spasmodic affection, incident to puerperal women, ஒருநோய்.

குராங்கு, கிறது, குராங்கினது, குராங்கும், குரங்க, *v. n.* To bend, bow, incline, stoop, propend; to be prone—as beasts, குனிய. 2. To be curved, to curl and hang down, வளைந்துதாழ. 3. To bow, to make an obeisance, to render adoration, வணக்கஞ்செய்ய. 4. To relent, grieve, pity; feel sorry, இரங்க. (சது.) This word is sometimes pronounced குறங்கு.

குரங்குளை, *s.* The curled mane. (*p.*)

குரங்கல், *v. noun.* Humiliation, தாழ்தல். (*Rott.*)

குரங்கு, *v. noun.* Bent knee; the lap; the thigh, தொடை. (See குறங்கு.) 2. [*in jewelry*] A hook, clasp, link, கொளுக்கி.

குரங்குதல், *v. noun.* Mercy, இரங்கல். 2. Reverence, வணக்கம். (*Rott.*)

•குரச்சை, *s.* A horse's hoof, குதிரைக்குளம்பு. (*from Sans. Khura,* "a horse's hoof.") Wils. p. 274.

குரஞ்சி, *s.* A kind of tune, ஓரிராகம்.

நாட்டைக்குரஞ்சி, *s.* A tune. See நாட்டை.

மேகக்குரஞ்சி, *s.* A tune which, when sung, is supposed to produce rain.

•குரண்டகம், *s.* A species of மருதோன்றி, with green flowers, Lawsonia, *L.* Wils. p. 232. Kuran'taka.

•குரண்டம், *s.* A stork, கொக்கு. (நிக.) Probably from *Sans. Kurankara,* "the Indian Crane." Wils. p. 232.

•குரத்தம், s. Noise, clamor, acclamation, ஆரவாரம். (சது.) from Sans. Kurava, a bad or harsh sound. Wils. p. 232.

குரத்தி, s. (fem. of குரவன்; see குரவர்.) A mistress, a matron, the lady of the house, தலைவி. 2. Wife of a priest, குருவின் மனைவி. 3. A mother, or any venerable, elderly woman, ஔவை.

குரப்பம், s. (Tel. గొరప్పము.) A curry-comb, குதிரைதேய்க்குங்கருவி.

குரப்பமிட, inf. To curry a horse.

குரமடம், s. Assafœtida, பெருங்காயம். (M. Dic.)

•குரம், s. A horse's hoof; also, a hoof in general, குதிரைமுதலியவற்றின் குளம்பு. Wils. p. 274. Khura. 2. Sacrificial grass—as குசம், தருப்பை. 3. A cow—as குடம், பசு. (சது.) 4. A creeping plant, பாகல், Momordica, L.

குரம்பு, s. An artificial bank or dam, a causeway, செய்கரம்பு. 2. Ridges, banks in rice-fields, or garden-beds, செய்கரை.

குரம்பை, s. Body, உடல். 2. A hut, hovel, shed, சிறுகுடில். 3. A bird's nest, பறவைக்கூடு. 4. (சது.) An egg, முட்டை. Compare குடம்பை.

குரல், s. (from Sans. Kura, to sound.) Voice, the voice of one person as distinguished from another, மிடற்றுப்பிறக்கும் இசை. 2. A good or clear voice; a singing voice, சாரீரம். 3. The voice of birds, beasts, &c., sound; musical sound, tone, ஓசை. 4. (சது.) The throat; trachea, windpipe, மிடறு. 5. The first of the seven musical tunes, produced from the throat, மிடற்றிசை. (See இசை.) 6. The same tune on the lute or guitar, யாழ்நரம்பிலெழோசை. 7. The first or lowest string of the guitar, யாழின் நரம்பு. 8. A tree, பதிரிமரம். (M. Dic.)

குரல்காட்ட, inf. To cry aloud, to whoop, roar, bellow, &c. 2. To call a person. 3. To crow—as a cock; to screech—as an owl, &c.

குரல்மாறிப்பேச, inf. To speak with a feigned voice.

குரல்கம்ம—குரல்கம்மியிருக்க, inf. To be hoarse—as the voice.

குரல்கனக்க, inf. To become thick, heavy, masculine, &c.—as the voice. 2. To become hoarse or thick—as the voice by drinking, &c.

குரலடைப்பு, v. noun. Hoarseness.

குரல்வித்தியாசம், s. Difference in voice. 2. Change in a person's voice.

பறவைக்குரல், s. The chirping of birds.

நெடுங்குரல், s. A long clamor.

நெடுங்குரல்பாய்ச்சியழ — நெடுங்குரல் விட்டழ, inf. To utter long and mournful cries—as at funerals.

வெடித்தகுரல், s. A rough, coarse, dissonant voice. 2. A loud thundering voice.

வேற்றுக்குரல், s. A strange voice. 2. A sound (of an animal, &c.), that has not been heard before.

கூக்குரல், s. A great or loud noise, clamor. See under கூ.

குரல்நயம், s. A good, singing voice.

குரலோசை, s. The vocal sound, the voice.

குரலெடுத்துப்பாட, inf. To lift up the voice and sing.

குரலெழும்ப, inf. To rise—as the voice to higher notes, or to a higher pitch.

குரல்தெளிய, inf. To become clear—as the voice in singing.

குரல்விட்டுப்பாடிக்க, inf. To sing out, to give vent to the voice in singing or reciting.

குரல்குளிற, inf. To jar—as instruments out of tune.

நல்லகுரல், s. A fine voice.

குரல்வளை, s. The windpipe, the trachea, தொண்டை; [ex வளை, orifice.]

குரல்வளையைநெரிக்க, inf. To squeeze one's throat.

குரல்வளையையறுக்க, inf. To cut the throat.

•குரல், s. A curl, a lock of hair, மயிர்ச்சுருள். Wils. p. 232. Kurala. 2. (சது) Women's hair, பெண்மயிர். 3. Feathers, plumage; wings, இறகு. 4. (Tel. గొలుసు.) Millet, தினை. 5. Ears of corn, spike, கதிர்.

•குரவகம், s. A plant, whose flower changes not its color in withering, வாடாக்குறிஞ்சி. 2. A flowering tree, one of the மருதோன்றி. Wils. p. 232. Kuravaka.

குரவம், s. The date-tree, பேரீந்து. 2. A plant from which a medicinal drug is extracted, கோட்டம். 3. The குரவு shrub. 4. Perfume—as குரவு.

குரவரம், s. A winding plant, குறிஞ்சா. (M. Dic.)

குரவர், s. (sing. mas. குரவன். fem. குரத்தி.) Elders; persons qualified by age, family connexion, respectability, knowledge or authority to give advice and exercise control—as parents, kings, statesmen, senators, &c., பெரியோர். 2. Gurus; religious preceptors, ministers or teachers, குருக்கள்.

ஐங்குரவர், s. The five superiors to be venerated and obeyed. See under ஐந்து.

குரவன், s. (sing. of குரவர்.) Brahma —as the father or progenitor of all, பிரமன். See குரவர்.

குரவு, s. A shrub, usually found in barren lands, நச்செடி, Webera corymbosa, Willd. L. 2. Perfume, a gratifying odor, சுகந்தம்.

•குரவை, s. A dance, கூத்து. (சது.) 2. A rural, noisy sport, accompanied with dancing hand in hand—especially among females of the ploughman's caste (vulgarly குலவை), கைகோத்தாடல். 3. A harsh sound; a loud cry, ஒலி. Wils. p. 232. Kurava. 4. Sea, கடல்.

குரவைக்கூத்து, s. The குரவை dance of females.

குரவையாட, inf. To dance the குரவை dance.

குரவையிட, inf. To make a loud cry; to bawl.

குரா, s. The குரவு shrub.

குராசானி, s. A medical plant, ஓர்பூடு, Heliotropium Ceylanicum, L.

குராசானியோமம், s. Black Henbane, Hyosciamus niger, L.

குரால், s. A dun, tawny color, கபிலநிறம். 2. A cow, பசு. (compare குரம்.) 3. A kind of owl, கோட்டான். (திவா.)

குரிகிற்றானி, s. [local.] A kind of root, ஓர்கிழங்கு.

குரிசில், s. A person of dignity, respectability, &c., பெருமையிற்சிறந்தோன். 2. A king, அரசன். 3. A man, ஆண்மகன்.—Note. For the orthography, compare பரிசில், அடிசில், கிளிஞ்சில், இடிஞ்சில்.

குரீஇ, s. A small bird. See under குருவி. (p.)

•குரு, s. A guru, a spiritual teacher, a priest, ஆசான்.—Note. According to the shastras, the guru is to be regarded by the disciple as the personification of the deity; and to be worshipped with divine honors. In his presence, the disciple is exonerated from his accustomed rites, and devotions, and addresses him by appellatives, used in addressing the deity of his sect. 2. The planet Jupiter, regarded as the guru or priest of Swerga, &c., வியாழன். 3. Heaviness, weight, பாரம். 4. Consequence, importance, moment, காத்திரம். 5. Greatness, eminence, excellence, exaltedness, பெருமை. 6. [in music.] The quantity of a long vowel, or a long note. இருமாத்திரை. 7. [in gram.] A long vowel, நெடில். 8. [in the Agama.] The deity Siva—as illuminator of souls, சிவன். 9. Divinity, திவ்வியம். Wils. p. 293. Guru. 10. A kind of native arsenic, பலண்டுறகம். 11. [in medi. &c.] Blue vitriol, துரிசு. 12. [in alchy.] A compound medicine, formed of different metals; philosopher's powder, உலோகங்களை வேதிக்குஞ்சித்தர்முதலியவை. 13. [in chem.] Mercury, இரதம்.—Note. In the last three senses, the word Guru has its technical meanings, derived however from its literal meaning of preceptor and director. 14. Brilliancy, lustre, effulgence, பிரகாசம். Wils. p. 310. Ghru. 15. The name of one of the nine sons of அக்கினிதன், who was the first monarch of Jambu Dwipa, அக்கினீத்திரன்புதல்வரில் ஒருவன். (கந்.) 16. One of the nine divisions or var'shas of Jambu Dwipa which fell to the share of the prince Kuru, being the most northern portion beyond the Sringa range of mountains, குருவருடம். 17. The name of a prince of the lunar race, famous in the Bharata, from whom the family was called குருகுலம் and the descendants, கௌரவர்; குருகுலவம்சத்துமுதல்அரசன். (பார.) 18. A country near Delhi, over which Kuru of the lunar race was once a sovereign, குருபூமி. (பார.) 19. Prickly heat, வேர்க்குரு; Wils. p. 232. Kuru. 20. Pustule, blister; hence, any eruptive disease — as the small-pox, chicken-pox, measles, &c., குருவியாதி.

குருஆரல்மூக்குப்போலிருக்கின்றது. The small-pox is like the nose of a lamprey.

குருநாதன், s. The name of Skanda—as having explained to his father Siva the mystic word ஓம். 2. Siva. 3. A guru—as the lord of the disciple.

குருபரன்—குருமூர்த்தி, s. The deity in human form, appearing for the instruction of a devoted person of the சைவர், especially spoken of Siva.

குருகடாட்சம், s. The gracious or benign look of the guru on his disciple, dispelling sin, imparting spiritual wisdom, and preparing the soul for emancipation.

குருகற்பனை, s. Precept of the guru—deemed sacred.

குருசந்தானம், s. A regular succession of priests, or gurus.

குருசம்பாவனை, s. Blessing or favor of the guru. 2. Worship or honor due to the guru.

குருசம்பிரதாயம், s. Oral instruction in the secret meaning of the mantras, &c., handed down from generation to generation, in the line of the guru, and by him communicated confidentially to his advanced disciples.

குருசன்னிதானம், s. The presence of the guru.

குருசேடம், s. Remains of a guru's food—considered sacred, குருப்பிரசாதம்.

குருசேவை, s. Civilities, duties, worship, &c., paid to a guru, குருஉபசாரனை.

குருதக்கணை — குருதட்சிணை, s. Fees or presents to the guru, commonly in money, given with due homage, &c.

குருதீட்சை—குருதீக்கை, s. The initiation of a disciple by a guru to certain privileges of his religion, or afterwards to a more advanced degree, குருஉபதேசம்.

குருத்திரவியம், s. Property or treasure of the guru.

குருத்துரோகம், s. Treachery towards a guru, or injury of one.

குருநிந்தை, s. Indignity to the priest.

குருத்துவம், s. Priesthood, or the dignity, power, honor, &c., of a guru, குருத்தன்மை. 2. Honor, respectability, கனம். Wils. p. 293. GURUTVA.

குருபத்தி—குருவிசுவாசம், s. Dutiful love, piety, &c., towards the guru, குருவினிடத்திலன்பு.

குருபத்தினி—குருபன்னி, s. The wife of a guru, குருவின்மனைவி.

குருபாரம்பரியம், s. Ancestral priesthood in regular succession; the lineage or genealogy of a guru, குருபாரம்பரை.

குருபீடம், s. The dignified seat, or office of a guru, குருஸ்தானம்.

குருபுத்திரன், s. A son of a guru, குருபுதல்வன். 2. An obedient disciple, உண்மையானசீஷன்.

குருபூசை, s. Pujah or worship, offered to a guru, by an advanced disciple competent to do it, குருவுக்குச்செய்யுமாராதனை. 2. Food, &c., given to Brahmans, religious mendicants, &c., by the disciples of a deceased guru, in remembrance of him as deified, இறந்துபோனகுருவைக்குறித்துச்செய்யும்பூசை.

குருபோதனை, s. The instruction of the guru.

குருப்பட்டம், s. The office, authority or dignity of a guru, குருத்துவம்.

குருப்பட்டம்பெற, inf. To receive priestly authority, ordination, &c.

குருப்பட்டாபிஷேகம், s. The ordination of a guru.

குருப்பிரசாதம், s. The favor, grace, or blessing of the guru; gift from the guru, குருவருள். 2. Remains of a guru's food, குருவுண்டசேஷம்

குருமரியாதை, s. Reverence for the guru.

குருமுகமாய்க்கேட்க — குருமுன்னிலையாயறிய — குருவாக்கியமாய்க்கேட்க, inf. To learn *viva voce*, so as to attain certainty in doubtful matters.

குருமுறை, s. A guru's teaching, குருசொல்லியமுறை.

குருமுன்னிலையாய். In the presence of the guru, குருவின்முன்னிடம். 2. By means or favor of the guru, குருமூலம்.

குருமை, s. Dignity, superiority, பெருமை.

குருமூர்த்தம், s. The manifestation of a deity as a guru for the instruction of disciples; especially spoken of Siva, குருவடிவம்.

குருலிங்கசங்கமம், s. An aggregate of the spiritual guru—Siva under the phallic emblem—and the devotees of Siva, குருவும் லிங்கமும் திருக்கூட்டமும்.

குருமொழி - குருவசனம் - குருவாக்கியம் — குருவாக்கு, s. The precepts, instructions, &c., of a guru.

குருவுக்குநாமம்வைக்கிறவன், s. One who out-schemes, and out-wits, his guru, teacher or superior.

குருவுபதேசம் — குருபதேசம், s. The initiation of a disciple by the guru.

சற்குரு, s. A divine guru, the heavenly teacher.

குருசந்திரயோகம், s. The conjunction of Jupiter and the moon in the same sign—considered auspicious.

குருசாரபலம், s. [*in astrol.*] Good and ill results, derived from the progress of the planet Jupiter through the signs, வியாழபலன்.

குருவாரம், s. Thursday, வியாழக்கிழமை.

குருக்கொடுக்க, inf. [*prov.*] To instigate, ஏவிவிட. 2. To persuade, incite, commonly to a bad action, கொடுமைசெய்யத்தூண்ட. 3. To assume to teach, give advice &c., in the presence of the learned, புத்திசொல்ல.

குருக்கொள்ள, inf. To assume to teach, give advice, &c., above one's age.

இராசநீதி குருக்கொண்டு முறிக்கிறீரோ. Do you take upon you to teach jurisprudence? (*usr.*)

குருதுரியம், s. [*in the Agamas.*] The highest degree in the சுத்தம் state of souls; that next to absorption.

குருபதம், s. The bliss of the deity, சதானந்தம். 2. Liberation from births, and absorption in the deity, முத்திக்கதம்.

குருமுடிக்க, inf. To combine ingredients with medicines to make them active, or to neutralize poisonous qualities, &c., இரசவாதகுருமுடிக்க.

குருகுலம், s. The Kuru dynasty; the patronymic is commonly applied to the sons and descendants of Dhrutarashtra, குருவமிசம்.

குருகுலத்தரசர் — குருகுலவேந்தர், s. Kings of the Kuru race.

குருநிலம், s. The territory of the king Kuru.

குருக்கேத்திரம்—குருக்ஷேத்திரம், s. The country near Delhi, the scene of the great battle between the Kurus and Pandavas, described in the Bharata. Wils. p. 242. KURUKSHETRA.

குருக்கேத்திரன், s. The name of a king in mythology, ஒர்அரசன்.

குருவருடம், s. One of the nine portions or divisions of the central continent, or Jambu Dwipa, ஒர்கண்டம். See வருடம்.

குருநாள், s. The eighth lunar asterism, பூசம்.

குருநாடிவிதி, s. A treatise on the ten tubular vessels in the system, and for the ascertainment of diseases by feeling the pulse, நாடிச்சாஸ்திரம்.

குருபாலப்பிரபோதிகை, s. One of the commentaries on the Sanscrit Amara Cosha.

குருநோய்—குருவியாதி, s. The small-pox, வைசூரி.

குருபுறப்பட - குருக்காண-குருவார்க்க, inf. To take the small-pox.

குருப்பிக்க, inf. v. n. [*prov.*] To shoot forth, to break out—as pimples, &c.

குருமுகறன்—குருமூஞ்சி, s. [*vul.*] One whose face is pock-pitted.

குருவண்டு—குருப்பூச்சி, s. A kind of spotted wasp, ஒர்குளவி.

குருவெறும்பு, s. A kind of large, red ant. See எறும்பு.

குருவேர், s. A plant, the roots of which are very fragrant, ஒர்செடியின்வேர்.

குரு, க்கிறது, த்தது, க்கும், குருக்க, v. n. To be indignant, enraged, கோபிக்க. (*p.*)

குருத்தல், v. noun. Being indignant and enraged, பெருங்கோபங்கொள்ளல்.

குருகு, s. That which is young and tender, இளமை. 2. Whiteness, வெண்மை. 3. A bird in general, பறவைப்பொது. 4. A water-bird, the heron or crane, நாரை. 5. The gallinacious fowl, கோழி. 6. An arm-ring, bracelet, வளையல். 7. The nineteenth lunar asterism, (nacshatra) or the time during which the moon is traversing it, மூலநாள். 8. A species of tree, குருக்கத்தி, Gœrtnera racemosa. 9. Hole in the centre of the smith's forge, for the nozzle of the bellows, உலைமூக்கு. 10. One of the fifty-six countries of India, ஒர்தேசம்.

குருகுக்கிழங்கு, s. Very young yams, or other edible roots.

குருகுமணல், s. Fine, white sand, பொடிமணல்.

குருகுமண், s. White earth, வெண்மையமண்.

குருக்கு, s. [*prov.*] A plantation thick with young palm-trees, வடலிமுதலியன நெருங்கியதோப்பு. See குருக்கு.

குருகுருக்க, inf. v. n. [*vul. and low.*] To have a crawling, itching sensation; the pricking sensation of the prickly heat, வேர்க்குருமுதலியவுறுத்தலினிக்க. 2. To itch and tingle—as in the venereal organs, மோகமுண்டாகைக்க.

குருக்க-குருத்திருக்க, inf. To break out with prickly heat. (*little used.*)

குருக்கண், s. The female breast, முலை.

குருக்கத்தி, s. A kind of tree, ஓர்மரம், Gœrtnera racemosa, *L.*

குருக்கன், s. [*prov.*] Stintedness, blight; a disease, commonly, of plants, வெளிவிக்குநோய். 2. A plant stinted or blighted, commonly a plantain tree, குருக்கனேறுகொண்டசெடி.

குருக்கனடித்தல், v. noun. Being stinted.

குருக்கு, s. A thistle, பிரமதண்டிச்செடி, குடியோட்டிப்பூண்டு. See under குருகு.

உன்வீட்டிலே எருக்குங்குருக்குமுளைக்க. Where thy house is, may எருக்கு plants and thistles grow; i. e. may thy house be destroyed, and laid waste.

குருக்குப்பால், s. Milky juice of the thistle — considered good for flesh wounds, sore eyes, &c.

கொம்புக்காரன், *s.* [*prov.* கொம்பூதி.] A horn blower.

கொம்புக்கால், *s.* The ெ with ா—as ெ-ா, with ள—making ளெ.

கொம்புகாவி, *s.* [*prov.*] A palankeen bearer; a term of reproach.

கொம்புப்பிறை, *s.* A கொம்பு with a பிறை—as ெ and ப with ன making னெ.

கொம்பூத—கொம்புபிடிக்க, *inf.* To blow a horn.

கொம்புமுளைத்தவன்-கொம்பாபிள்ளை, *s.* [*ironically.*] A man of rank, wealth.

**கொம்மட்டி,** *s.* [*vul.* குமட்டி.] A class of running plants of the melon or gourd kind, the water-melon plant, ஓர்செடி, Cucurbita citrullus, *L.*

சிக்கனாக்கொம்மட்டி, சிறுகொம்மட்டி, பெருங்கொம்மட்டி, பேய்க்கொம்மட்டி, வத்தாக்குக்கொம்மட்டி, are varieties of கொம்மட்டி. See those words.

கொம்மட்டிக்காய், *s.* A melon or gourd; water-melon.

கொம்மட்டிக்கீரை, *s.* A kind of greens. See under கீரை.

கொம்மட்டிச்சுரை, *s.* A kind of சுரை gourd; much used for curry.

கொம்மட்டிமாதளை, *s.* A kind of citron, ஓர்மாதளை. (*Rott.*)

**கொம்மெனல்,** *v. noun.* Sounding imitatively—as *Kom.*, அநுகரணவோசை. 2. A sign given by a sound, ஒலிக்குறிப்பு. (*சது.*)

**கொம்மை,** *s.* Conicalness, roundness, rotundity. திரட்சி. 2. Female breasts, முலை. 3. Beauty, அழகு. 4. Youth, juvenility, இளமை. 5. Circle, circularity, வட்டம். 6. Clapping the hands in play, கைகொட்டுங் கொட்டுகை. *Comp.* கும்மி. 7. Strength, வலி. (*சது.*) 8. A rampart, a bulwark, கொத்தளம். 9. (*Rott.*) A water-melon, கொம்மட்டி.

**கொய்,** *s.* [*prov.*] The name of a fish, ஓர்மீன்.

**கொய்,** கிறேன், தேன், வேன், ய, *v. a.* To crop or pluck fruits, flowers, ears of corn by the hand, &c., அறுக்க. 2. To prune, shear, crop off—as hair, &c.; to snip or cut off the head, &c., கத்தரிக்க. 3. [*vul.* கொய்ம்.] To plait, pucker, gather a cloth into folds, சேலைகொய்ய. 4. [*prov.*] *v. n.* To experience dilatation and contraction—as in breathing, மூச்சுகொய்ய.

கொய்சகம், *s.* [*vul.* கொசுவம், com. கொய்யகம், கொய்சுவம்.] The plaited or gathered end of a woman's cloth, sometimes of a man's, சேலையின் கொய்சகம்.

கொய்துகட்ட—கொய்துகிக்க *inf.* To gather up the end of a cloth and fasten it round the waist.

கொய்துபிடிக்க, *inf.* To gather up a cloth, in a bunch and hold it in the hand.

கொய்யகச்சட்டி *s.* A chatty or pot with a kind of border or brim.

கொய்யுளை, *s.* A horse's mane, குதிரை பிடரிமயிர். 2. (*சது.*) A horse, குதிரை; [*ex* உளை, mane.]

தலைகொய்ய, *inf.* To cut off the head.

பூக்கொய்ய, *inf.* To crop flowers.

கொய்வு, *v. noun.* Plaiting. 2. Plucking, pruning.

**கொய்யடி—கொய்யடிநாரை,** *s.* A kind of heron or crane, ஓர்நாரை.

**கொய்யா,** *s.* The guava tree, ஓர்மரம். Psidium pyriferum, *L.*

**கொய்யோவெனல்—கொய்யோக்கூறுதல்—**கொய்யோமுறை, *v. noun.* Exclaiming, shouting, from pity or on account of victory, கொய்யோக்குறி.

**கொரிக்கம்,** *s.* The எழுத்தாணிப்பூண்டு plant. (*M. Dic.*)

**கொருடன்,** *s.* The கொவ்வை creeper. (*M. Dic.*)

**கொலு,** *s.* An erect, majestic, stately posture, &c., கம்பீரம். 2. The royal presence or that of an idol in the temple, சமுகம். 3. The presence-chamber, hall of audience, &c. கொலுமண்டபம். 4. (*Tel.* కొలువు.) Service, சேவை.

கொலுக்கட்டிக்கொண்டிருக்க, *inf.* To stand ready for service.

கொலுக்கூடம்—கொலுச்சாவடி, *s.* A court house.

கொலுமண்டபம், *s.* The presence chamber, the hall of audience. 2. A room in the temple where the idol sits in state.

கொலுவிருக்க — கொலுவீற்றிருக்க, *inf.* To sit or preside as a king, to sit in state.

கொலுவிருப்பு, *v. noun.* The sitting in state, as a king.

**கொலுகொலு,** க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To become loose, disjointed, rickety, deranged in its parts, &c., கழல.(*c.*) 2. [*loc.*] To moulder, crumble into dust—as a dead body. 3. To be defeated in argument, &c., தோல்வியடைய.

எலும்பெல்லாம் கொலுகொலுவாய்த் தெரிகிறது.... The bones all stick out.

கொலுகொலுப்பு, *v. noun.* Becoming loose, disjointed.

கொலுகொலுவெனக்கழல, *inf.* To become loose, or disjointed.

**கொலுகொலுப்பு,** *s.* [*prov.*] Affectation, ostentation, vanity, ஆடம்பரம்.

**கொலுசு,** *s.* (*Tel.* గొలుసు.) A gold or silver chain for the wrist, or ankle, சங்கிலி. 2. (*R.*) As குசை.

**கொலை,** *s.* Killing, slaying, slaughter, murder, assassination, butchery, உயிர்வதை. 2. (*fig.*) The guilt of killing, கொலைக்குற்றம்; [*ex* கொல், kill.]

கொலைகாரன்—கொலையாளன், *s.* A murderer, an assassin. 2. An executioner. 3. A killer, slaughterer, butcher.

கொலைக்களம், *s.* A place of public execution.

கொலைசூழ—கொலைசுற்ற, *inf.* To contrive or compass one's death. (*p.*) 2. To find out the guilt of murder.

கொலைசெய்ய, *inf.* To kill, slay; to commit murder, take away life, to butcher.

கொலைஞர், *s.* Assassins, murderers, killers, butchers, கொலைபாதகர். 2. Hunters; those who live by the chase, வேடர். (*p.*)

கொலைபாதகம், *s.* The crime or guilt of murder; taking away life, human or other—chiefly of men or cows; one of the five heinous sins. See பாதகம்.

கொலைபாதகன், *s.* A heinous killer, or murderer.

கொலைப்பழி, *s.* The blame or guilt of murder.

கொலைமறுத்தல், *v. noun.* Denouncing all killing. This is scrupulously done by Jainas under all circumstances.

கொலையுண்ண, *inf.* To be killed.

**கொல்,** *part.* A poetic expletive—as in காணுங்கொல், he will see, அசைச்சொல். 2. A particle implying doubt; frequently interrogative or connected with interrogative forms—as in காணார்கொல், will they not see—ஐயக்கிளவி. 3. An imitative sound—as in கொல்லெனச்சிரித்தார்கள், they broke out into laughter, ஒலிக்குறிப்பு. 4. *s.* Suffering, distress, affliction, வருத்தம். (*சது*) 5. [With suitable prefixes,] Gold or iron. 6. The blacksmith's caste; a blacksmith, கொல்லன். 7. A mason's trowel, கொல்லறு. 8. (*loc.*) Brass or iron, nailed across a door, or gate, for strength, குறுக்குத்தகடு.

கொல்லர், *s.* [*fem. sing.* கொல்லிச்சி.] Blacksmiths, கருமார். 2. Smiths in general—as in பொற்கொல்லர். 3. (*Hind.*) Treasure keepers, பொக்கசக்காப்போர்.

கொல்லத்தெருவிலேயூசி விலைபோகுமா. Can one barter needles in a blacksmith's street? i. e. you cannot impose on the experienced.

கொல்லச்சேவகர், *s.* As கொல்லர். 3. (*R.*)

செங்கொல், *s.* Gold, (*lit.*) yellow metal.

கருங்கொல், *s.* Iron, (*lit.*) dark metal.

கொல்லுலை, *s.* A blacksmith's forge.

கொல்லன்கம்மாலை, *s.* [*prov.*] A blacksmith's shop, smithery.

கொல்லன்கிட்டம், *s.* See கிட்டம்.

கொல்லுத்தடியாணி, *s.* [*loc.*] A large nail for studding doors or gates, to add to their strength, தகவிளைகுறுப்பாணி.

**கொல்—கொல்லு,** கிறேன், கொன்றேன், வேன், கொல்ல, *v. a.* To take life, kill, slay, murder, கொலைசெய்ய. 2. To deprive mercury of its metallic properties by oxidation; to kill mercury, &c., இரசமுதலிய வற்றைக்கொல்ல. (*c.*) 3.(*fig.*) To vex, tease; to molest by continual importunity, அலட்ட.

அரசனன்றுகொல்லுந்தெய்வம்நின்றுகொல்லும். The king is swift in executing judgment, but God waits.

பார்க்கும்பார்வைஆளைக்கொன்றுபோடும், [*prov.*] His stern looks are enough to kill one.

தன்னைக்கொல்லவரும்பசுவையுங்கொல்லவேண்டும். Even a cow that attacks one may be killed, i. e., we may destroy life in self-defence.

கொல்லுத்தக்கசினம். Mortal wrath.

கொல்லாமற்கொல்ல, *inf.* To speak sarcastically, to put one to shame by sarcasm. 2. To do one a great injury, to ruin one. 3. To compass one's death indirectly. 4. To touch the heart, by returning good for evil.

கொல்லாமை, *v. noun (neg.)* Abstinence from killing, one of the virtues.

கொல்லாவிரதம், *s.* Vows to abstain from killing—as made by Jainas, Saivas, &c.

கொல்லாவேதம், *s.* The sacred books or religion of the Jainas, அருகர்வேதம்.

கொல்லாவேதன், s. Argha—as the teacher of கொல்லாவேதம், அருகன்.
சாகக்கொல்ல, inf. To kill, to kill utterly. 2. To harass, torment.
நன்றிகொல்ல, inf. To be ungrateful. 2. To abuse kindness. (ரு.)
கொல்லி, s. That which kills—as in ஆட்கொல்லி, சர்கொல்லி, கன்றுகொல்லி, சேறுகொல்லி, தாயைக்கொல்லி, தந்தையைக்கொல்லி, பிள்ளைகொல்லி, மாக்கொல்லி, மீன்கொல்லி, மூட்டைகொல்லி, &c. 2. A bow, வில். (p.) 3. Fire, as சொக்கர்க்கொல்லி.
கொல்லிடம், s. The river Coleroon, commonly கொள்ளிடம்.
கொல்லியர், s. See இரக்கொல்லியர்.

கொல்லங்கொவ்வை — கொல்லங்கோவை, s. An air plant, ஆகாசகருடன்.

கொல்லம், s. The town of Quilon, ஒசர்.

கொல்லம்பாகல், s. A kind of பாகல் plant, ஒர்பாகல். Bryonia garcini.

கொல்லறு, s. [loc. vul.] A mason's trowel, கரண்டி. Compare கொல்.
கொல்லற்றுக்காரன், s. A mason, a bricklayer.
கொல்லற்றுவேலை, s. Masonry.

கொல்லன்பகை, s. A kind of native arsenic, அஞ்சனபாஷாணம். (R.)

கொல்லி, s. A mode of singing, ஓர்பண். 2. A hill on the malabar coast, ஓர்மலை. See under கொல், v.
கொல்லித்திறம், s. A variety of the tune.
கொல்லியவராடி, s. A variety of the tune வராடி, ஓரிராகம்.
கொல்லிவெற்பன், s. Any king of the Séra dynasty as the owner of the கொல்லி hill, சேரன்.

கொல்லை, s. An enclosed garden, a field, புன்செய். 2. A grove, nursery, &c., சோலை. 3. A backyard, புறக்கடை.
கொல்லைக்குப்போக. To go to the enclosure, i. e., to go to stool.
கொல்லைக்காரன், s. The gardener, the owner or cultivator.
கொல்லைவாசல், s. The door of the backyard of a house.
கொல்லைவிளைவிக்க, inf. [prov.] To cultivate a garden.
புறக்கடைக்கொல்லை, s. A piece of ground on the skirts of a backyard.

கொல்லைப்பல்லி, s. A plant, ஓர்பூடு. Buchnera Asiatica, L.
அவன்கொல்லைக்குப்பல்லி,குடிக்குச்சகுனி. He is a பல்லி plant [a destroyer] to the garden and a சகுனி [a disturber] to the family.

கொவிந்தம், s. The செம்முள்ளி plant. (M. Dic.)

கொவிள் — கொவிளமரம், s. The mimosa tree, ஓர்மரம். Mimosa frondosa, Nob.
கொவிளம்பட்டை, s. The bark of the mimosa tree.

கொவ்வை, s. [com. for கோவை, which see.] A climbing plant noted for its red edible fruit, to which the lips are compared in poetry.
கொவ்வைக்காய்ப்பதம் — கொவ்வங்காய்ப்பதம், s. [prov.] A stage in the growth of rice when it is as tender and green as the கொவ்வை fruit.
அப்பைக்கொவ்வை, s. As அப்பை.
காக்கணங்கொவ்வை, s. As காக்குறட்டை.
கொவ்வையங்கனி, s. The ripe fruit of கொவ்வை.

கொழி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To separate husk or bran, &c., from rice &c., by a fan, the second or third time, புடைக்க. 2. To cast ashore, to beat up sand, &c.—as the waves, ஒதுக்க. 3. To polish, to refine, தெளிய. 4. To carry away—as a river or flood, வார. 5. (fig.) To sift, criticize, to expose faults, குற்றங்கொழிக்க.
கொழிதமிழ், s. Refined or pure Tamil, தெளிதமிழ். (p.)
கொழிப்பு, v. noun. Separating; beating up by waves; exposing faults.
கொழியல் — கொழியலரிசி, s. Rice not well beaten and sifted, நன்றுய்க்குத்தப்படாதவரிசி.
ஒருகொழியல், s. [prov.] Rice once cleaned.

கொழிஞ்சி, s. The orange tree, as கொழுஞ்சி, கிச்சிலி, Citrus, L. 2. Trees or plants—as figs, &c, which have their flowers in the receptacle and bear without blossoming, பூவாதகாய்க்குமரம்.

கொழிப்பூண்டு, s. The குப்பைமேனி plant. (M. Dic.)

கொழு, s. A plough-share, a coulter, காறு. 2. adj. Fat, rich, &c. See கொழுமை.
கொழுச்சென்றவழித்துன்னூசிசெல்லுமாபோல்...... Just as a small needle passes with ease through a passage made by a coulter.
கொழுக்கட்ட—கொழுத்தைக்க, inf. To fasten the iron point to the plough share. (R.)
கொழுச்சிறாய், s. [prov.] A piece of wood which fastens the coulter to the plough.
கொழுத்தீட்ட, inf. To sharpen the plough-share—a yearly practice.
கொழுமீதி—கொழுமுதல், s. The owner's portion of the produce of a field, deducting the rent to the government.
கொழுக்கட்டை, s. A kind of steamed cake, ஓர் சிற்றுண்டி.
பிடிக்கொழுக்கட்டை, இலைக்கொழுக்கட்டை and ஆவிக்கொழுக்கட்டை, are different kinds of கொழுக்கட்டை pastry.
கொழுக்கட்டைக்குத் தலையுமில்லைக் காலுமில்லை, குறவருக்கு நெறியுமில்லை முறையுமில்லை. The கொழுக்கட்டை cake has neither head nor foot, and the குறவர் people have no manners nor principle.
இருப்புக்கதவிடித்துத் தவிட்டுக்கொழுக்கட்டை யெடுக்கிறதா? Does one break through an iron door to steal cakes made of bran, i. e., no man of sense wearies himself for trifles.

கொழு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To grow fat, to fatten, to become corpulent; to be full, plump, sleek, சதிக்க. 2. To grow too luxuriantly, so as to be unproductive; to be rank, மதர்த்துத்தழைக்க. 3. To be too rich—as land, தழைத்துச்செழிக்க. 4. To be saucy, insolent, impertinent, மேட்டிமைகொள்ள.
நண்டுகொழுத்தால்வளையிலிராது. A crab grown fat will not stay in its hole.
கொழுத்தவன்கைக்கு இளைத்தவன் துரும்பு. A lean man in the hand of a fat man is like a straw.

கொழுகொம்பு — கொழுக்கொம்பு, s. Sticks, poles, &c., for supporting climbing plants, கொடிபேறுகொம்பு. 2. [local.] A central, straight, lofty branch of a tree, கவைக்கொம்பு. 3. (fig.) A help, a support or aid, தஞ்சம்.
கொழுக்கவிட, inf. To fatten animals for slaughter.
கொழுத்தசாப்பாடு, s. Delicate, rich food. 2. [loc.] As கொழுத்தபூசை.
கொழுத்தபூசை, s. [prov.] Severe punishment.
கொழுத்தாடுபிடித்தல், v. noun. A play imitating the fox attacking a flock of sheep—as கொழுக்கரடுபிடித்தல்.

கொழுங்கிரி, s. A shrub, jasmine, மல்லிகை. (M. Dic.)

கொழுஞ்சி, s. [com. கொளிஞ்சி.] A kind of orange tree bearing a small reddish fruit, கொழுமிச்சை. 2. The கொள்ளுக்காய்வேளை plant.
காட்டுக்கொழுஞ்சி, s. A shrub, ஓர்செடி, Purple galega.

கொழுது, கிறது, கொழுதினது, ம், கொழுத, v. a. To dig into, hollow out—as beetles in wood and flowers, கோத. (p.)
வண்டுகொழுதியவார் செய்குழன்மடவீர். Oh, ye whose lock of hair is hollowed by beetles.

கொழுநன், s. A husband, கணவன். 2. A master, a lord, இறைவன்.

கொழுந்தன்-கொழுந்தனார், s. (vul.) The husband's brother, commonly younger brother, புருஷனின்சகோதரன்.
கொழுந்தி — கொழுந்தியாள், s. The wife's sister, commonly younger sister.

கொழுந்து, s. Tender twigs, leaves, shoots, sprouts, இளந்தளிர். 2. Flame, சுவாலை. 3. [prov.] The betel-plant, வெற்றிலைக்கொடி. 4. Cuttings or slips planted for growth, கறிகொழுந்து. 5. A tender, cartilaginous part of the body, மெல்லியது—as in மூக்கன்கொழுந்து, நெஞ்சாங்கொழுந்து, &c.
கொழுந்திலை, s. A tender leaf.
கொழுந்துக்கால், s. Sticks, stakes, &c., set to support betel-runners, கொடிக்கால்.
கொழுந்துகிள்ள, inf. To nip or cut off the shoots of plants, when too rank, to make them productive; also, to injure or destroy them. 2. (p.) To destroy the young heir of a family.
கொழுந்துநட, inf. To plant betel, and other cuttings.
கொழுந்துபதிக்க, inf. To insert pumpkin creepers, &c., in the earth, that they may strike new roots, &c.
கொழுந்துவிட்டெரிய, inf. To burn in a flame, to flame up.
உலக்கைக்கொழுந்து, s. See உலக்கை.
குலக்கொழுந்து, s. See under குலம்.
பிறைக்கொழுந்து, s. The crescent moon. (p.)
மருக்கொழுந்து, s. Southern-wood. See மரு.
மூக்காங்கொழுந்து, s. See மூக்கு.

கொழுந்து, கிறது, கொழுந்தினது, ம், கொழுந்த. v. n. To flame, to burn in a flame; to be kindled—as fire, கொழுந்துவிட்டெரிய. 2. To be burnt, scorched—as by the sun, வெப்பமிலேற்க. (p.)
கொழுந்தியகொழுந்தழற்கொழுந்து. The intense flame of fire which was kindled. (உரி.)

**கொழுப்பு**, *v. noun.* [*substantively.*] Fat, grease, lard, நிணம். 2. Plumpness, fullness, corpulency, fleshiness, புஷ்டி. 3. Rank or exuberant growth in vegetation, luxuriance, செழுமை. 4. Excessive richness or fertility in a soil, கிலவளம். 5. Pride, sauciness, impudence, impertinence, wantonness, செருக்கு; [*ex* கொழு, fatten, &c.]

உன்கொழுப்பையடக்குப்போடுவேன். I will reduce your pride.

கொழுப்புப்பேசுகிறவன். One who speaks petulently or saucily.

கொழுப்பானபூமி, *s.* A rich, fertile soil.

கொழுப்பிறக்க, *inf.* To reduce one's pride.

கொழுப்புக்காட்ட, *inf.* To be saucy, impertinent, wanton.

கொழுப்புக்குடல், *s.* The small intestines of sheep or goats.

கொழுப்பேற, *inf.* To grow proud, insolent, &c.

வாய்க்கொழுப்பு, *s.* Impertinent language; sauciness, insolence.

**கொழுப்புக்கல்**, *s.* A soft red stone.

**கொழுமிச்சை**, *s.* See கொழுஞ்சி.

**கொழுமை**, *s.* Plumpness, fullness, exuberance, luxuriance, richness, fertility, கொழுப்பு. 2 Riches, wealth, வளமை. 3. Color, good color, நிறம். The final மை is dropped to form adjectives.

கொழுங்கண், *s.* A well-formed eye; a wanton look. (*p.*)

கொழுநீர், *s.* Highly fermented liquor—as toddy, &c. (*p.*)

கொழுமணி, *s.* A rich gem.

கொழுமதி, *s.* Self-conceit. (*p.*)

கொழுமையாய்வளர்க்க, *inf.* [*loc.*] To nourish a child luxuriously.

கொழும்புகை, *s.* Odoriferous smoke, நறும்புகை. (*p.*) (*சது.*)

**கொழும்பு—கொளும்பு**, *s.* A town in Ceylon, Colombo, ஒரூர்.

கொழும்புவேர், *s.* Colomba root, used medicinally.

**கொளகொளெனல்**, *v. noun.* Sounding repeatedly; rumbling, gurgling, ஈரொக் கொலி.

**கொளஞ்சி**, *s.* As கொழுஞ்சி.

**கொளுக்கி—கொளுவி**, *s.* [*prov.*] A hook, a clasp, a hasp; a staple, the bow of a key, &c., an eye for a hook; [*ex* கொளுவு.]

**கொளுந்து**, *s.* Joints of the body, articulation, சந்து. 2. Linking, jointing, knitting, மூட்டு. (*சது.*)

**கொளுத்து**, கிறேன், கொளுத்தினேன், வேன், கொளுத்த, *v. a.* To kindle a light; to set on fire; to inflame, ignite, தீப்பற்றவிக்க. 2. To instigate quarrels; to enkindle strife, சண்டைமூட்ட. 3. To play the lute or other stringed instrument, வீணைமுதலியன வாசிக்க. (*p.*) 4. To impart, instil, or infuse knowledge, to form the mind, அறிவுகொளுத்த. (*p.*) 5. To light or fire a rocket, பாணங்கொளுத்த. 6. To spread a rumor, அறப. 7. To reprove sharply, கண்டிக்க. 8. *v. n.* (*fig.*) To burn, to scorch—as the sun, வெயிற்கொளுத்த.

வெயிற்கொளுத்துகிறது. The sun is scorching.

பாணத்தைக்கொளுத்தினான். He has lighted [fired] a rocket.

அவன் என்னுடைய குற்றத்தைவெளியாய்க் கொளுத்திவிட்டான். He has blazed abroad my faults.

என்மனமெரியும்படிகொளுத்திவிட்டான்...... He made my mind to burn [with anger.]

நான் அவனைச்சுருக்கெனக் கொளுத்திவிட்டேன். I gave him a sharp, severe reprimand.

கொளுத்திவைக்க, *inf.* To light, kindle, set on fire.

நரம்புக்கருவியைக்கொளுத்த, *inf.* To play on stringed instruments. (*p.*)

விளக்குக்கொளுத்த, *inf.* To kindle a light.

வீடுகொளுத்த, *inf.* To set a house on fire.

**கொளுவு**, கிறேன், கொளுவினேன், வேன், கொளுவ, [*vul.*] *v. a.* To hook, clasp, buckle, latch on a nail, to hook on; to grapple, பூட்ட. 2. To entangle and ensnare, to take in, to entrap, inveigle, அகப்படுத்த. 3. To take into partnership, கூட்டுச்சேர்க்க. 4. To contrive, to manage by artifice, contrivance or scheming, தந்திரஞ்செய்ய. 5. [*prov.*] To put on shoes, sandals, &c., செருப்புமுதலியதொடுக்க. 6. *v. n.* To be engaged—as in an employment; to be ensnared or entrapped, &c., கொளுவுண்ண. 7. To make an impression—as on the mind, பற்ற. 8. [*prov. impersonal.*] To have cramp, stitches, &c., in the bowels or side, &c., குடல்முதலியகொள்ள.

அந்தவேலையிலே கொளுவினபின்பு. Since he was engaged in the business.

கொளுவிக்கொள்ள, *inf.* To hook, to engage, to entangle.

சங்கிலிகொளுவிக்கொண்டது. The chain has become entangled.

கொளுவிப்பிடிக்க, *inf.* To entangle, catch, to ensnare a man—as a lewd woman. 2. (*Rott.*) To prosecute a law suit. 3. To hook in, &c.

கொளுவியிழுக்க, *inf.* To challenge one, or provoke one to a quarrel. 2. To bring one into trouble, difficulty, &c.

கொளுவிவிட, *inf.* To fasten on ear-rings, &c. 2. To engage one in trade, an office, &c. 3. To marry a woman to one in low life. 4. To set people quarrelling.

கொளுவிவைக்க, *inf.* To adjoin. (*R.*)

கொளுவுகயிறு, *s.* [*prov.*] The loop of the string in an ola book, by loosening which the leaves may be taken apart.

சண்டைகொளுவ, *inf.* To pick a quarrel.

வேலிகொளுவ, *inf.* [*loc.*] To hedge; to enclose with a fence of wood.

**கொளை**, *s.* A melody; a song, chant, இசைப்பாட்டு. (*அரு.*)

**கொள்—கொள்ளு**, *s.* Gram, horse-gram—as காணம்.

கொள்ளெட்டு, *s.* A leguminous plant, Dolychos ciliatus, *Nob.*

கருங்கொள், *s.* See under கருமை.

கறுப்புக்கொள்—கார்க்கொள், *s.* Black gram, used medicinally, Cassia absus, *L.*

காட்டுக்கொள், *s.* Wild gram, Glycine suaveolens, *L.*

செங்கொள், *s.* Common horse-gram.

**கொள்—கொள்ளு**, கிறேன், கொண்டேன், வேன், கொள்ள, *v. a.* To take, receive with the hand, வாங்கிக்கொள்ள. 2. To contain, hold, comprehend, have, comprise, embrace, அடக்கிக்கொள்ள. 3. To buy, purchase, விலைக்குக்கொள்ள. 4. To accept, approve of, admit, அங்கீகரிக்க. 5 To take a wife, to marry, பெண்கொள்ள. 6. To take—as food, medicine, sleep, rest, &c., உணவு முதலியகொள்ள. 7. To conceive—as in the womb, in the mind or in the heart. 8. To get, to acquire, பெற்றுக்கொள்ள. 9. *v. n.* To be contained in, அடங்க. As an auxiliary to other verbs, கொள் denotes, continuation, certainty, &c., of the action, and that the fruit of it reverts to the agent—as படித்துக்கொள்ளுகிறான். He continues to study. குதிரையைவாங்கிக்கொண்டேன். I bought a horse for myself. The verb is generally found in composition with other words—as வாங்கிக்கொள்ள, பெண்கொள்ள, உட்கொள்ள, &c., and very rarely in the personal finite forms in common usage, except in the third meaning.

கொள்வாருமில்லைக்கொடுப்பாருமில்லை.... There are none who receive, none who give.

கொண்டுகுத்துதலும்பேசுகிறதா? Would it be proper to twit a family after you have taken a wife from it?

கொண்டான், *s.* A husband, புருஷன். 2. A play as கொண்டாட்டம். See under கொண்டு, for other words.

கொண்டுபோக, *inf.* To carry, to convey; to take away.

கொள்க, [*optative.*] May take, accept, or may understand.

உமதுஇஷ்டப்படிகொள்க. You may take it as you please.

கொள்கலம், *s.* A vessel, a salver, a dish; a receptacle for sandal-paste, or other ointments, or for ornaments, &c., சந்தமுதலியபெய்கலம். 2. A cup of palm leaf, or bamboo to eat from, பிழா. (*சது.*) A beggar's dish, இரப்போர்கலம்.

கொள்கை, *v. noun.* The act of taking, getting, &c. See, கொள், *v.* 2. Quality, nature, habit, state, குணம். 3. Liking, fondness, regard, attachment, intimacy, சிநேகம். 4. Opinions, tenets, belief, கோட்பாடு. 5. Knowledge, instruction, அறிவு.

அவருக்குமிகுங்கொள்கை. [*prov.*] They two are very intimate.

கிழவிமேலேதேடேமிகுந்தகொள்கையாயிருக்கிறான். The old woman is very fond of him.

கொள்கொம்பு, *s.* A prop for supporting vines. (*R.*)

கொள்வனை—கொள்வனவு—கொள்வினை, *v. noun.* Buying, borrowing; taking, receiving, வியாபாரக்கொள்ளுகை. 2. Marrying a wife, பெண்கொள்ளுகை.

கொள்வனைகொடுப்பனை, [*v. noun.*] Borrowing and lending. 2. Giving and receiving in marriage. 3. [*vul. loc.*] Taking, receiving; buying, borrowing, கொள்ளுகை.

கொள்விலை—கொள்கிரயம், *s.* The first or prime cost, the sum paid for a thing exclusive of profit, &c., கொண்டவிலை. 2. [*prov.*] Purchase, purchased land or property, விலைக்குக்கொண்டது. 3. One of the three species of real property. See சீதனம் and பிதிரார்ச்சிதம்.

கொள்விலைக்காணி, *s.* [*prov.*] Land attained by purchase, as distinguished from lands by dowry and inheritance.

கொள்விலைக்காரன், s. The purchaser of land, &c.

கொள்வோன், s. One who buys, or one who accepts any thing. 2. (சங்.) a pupil, student, learner, கற்போன்.

கொள்ள, [*adverbially*.] While, when—as நான்வரக்கொள்ள, while I was coming. 2. Since, therefore, because, as இருக்கக்கொள்ள, since it is so. ஆகக்கொள்ள, in the phrase நாளைவருவானாகக்கொள்ள, he will come tomorrow, therefore, [*tarry*.] 3. (*Rott.*) as கொள்ள in the phrase கொள்ளாதநோய்கொள்ள, may you be seized with an insupportable disease—*a malediction*. 4. [*prov.*] More, further on, in or under—as கொஞ்சம்கொள்ளவார், pour out a little more; also in கொள்ளக்கொடு, insert a lever, or hand, further in, further under, &c., or let a pair of scissors or pincers take a good hold; and in கொள்ளப்பிடி, take hold further in measuring cloth.

கொளல்வினா, s. [*in gram.*] One of the six kinds of interrogation, implying a desire to obtain the thing mentioned—as அரிசியுண்டோ, have you got any rice? wishing to buy some.

கொள்ளல்—கொளல், v. noun. Taking, receiving, obtaining, buying, &c.

கொள்ளாற்பாடு, [*prov.*] Estimation, worth, honor, மேன்மை.

கொள்ளாதசெய்கை, s. A flagrantly wicked, unbearable act.

கொள்ளாதஇறை, s. One assiduous as a slave—spoken of an affectionate, faithful wife, or a dependent.

கொள்ளாதபுகழ், s. Unbounded praise.

கொள்ளாமை, v. noun. (*neg.*) Excessiveness, transcendency, pre-eminence in good or evil. 2. Disagreement, discordance, enmity, பகை.

வாய்கொள்ளாப்பேச்சு. Language not proper to be used.

கொள்ளார், s. Haters, enemies, பகைவர். (சது.)

இரட்டித்துக்கொள்ள, *inf.* See இரட்டிக்க.

அர்த்தங்கொள்ள, ஆசைகொள்ள, நிலைகொள்ள, துயர்கொள்ள, காட்கொள்ள, கிலேகொள்ள, கீர்கொள்ள, வைத்தியங்கொள்ள, மேற்கொள்ள, கோர்கொள்ள, are some of the compounds.

கொள்ளம், s. Mud, slime, குழைசேறு.

கொள்ளி—கொள்ளிக்கட்டை, s. A fire-brand, நெருப்புவிறகு.

கொள்ளிக்கெதிர்போனாலும், வெள்ளிக்கெதிர்போகலாகாது. You may oppose yourself to a fire-brand, but not to the planet Venus—said in reference to going East-ward when Venus is the morning star or West-ward when it is the evening star.

குடியிருந்தவீட்டிலேகொள்ளிவைக்கிறவன். An incendiary who sets fire to a house where he has received hospitality, i. e., one who returns evil for good.

கொள்ளிகுடம்—கொள்ளியுங்குடமும், s. The fire-brand and water-pot which are carried by the chief mourner three times round the funeral pile previous to its being ignited.

கொள்ளிக்கண்ணன், s. A fierce-eyed man. 2. One whose looks are blighting. 3. [*prov.*] A horse or bull with red eyes, deemed ominous.

கொள்ளிக்கரப்பன், s. A kind of blain in children resembling scars from burning. See கரப்பன்.

கொள்ளிக்காற்குதிரை, s. [*prov.*] A horse with one white leg.

கொள்ளிக்கொட்டான் — கொள்ளியெறும்பு—கொள்ளிவாயெறும்பு—கொள்ளிவாயெறும்பு, s. An ant that stings. See எறும்பு.

கொள்ளிசொருகுதல், v. noun. [*prov.*] To insert a brand in the roof of a house—as an incendiary. 2. To cause or bring about another's ruin.

கொள்ளித்தேள், s. [*prov.*] A scorpion whose sting is very severe, நட்டுவாய்த்தேள்.

கொள்ளிவட்டம், s. A circle described in the air with a fire-brand by boys in play (*p.*)

கொள்ளிவாய்ச்சர்ப்பம்—கொள்ளிவாய்விரியன், s. A serpent whose bite causes burning smart.

கொள்ளிவாய்ப்பிசாசு—கொள்ளிவாய்ப்பேய், s. Ignis fatuus, or jack-with-a-lantern, (*lit.*) a fire-mouthed-devil.

கொள்ளிவாலி, s. [*prov.*] A cow or dog with the body black and tail white.

கொள்ளிவைத்தல், v. noun. Setting fire in general. 2. Lighting the funeral pile,—as done by the chief mourner. 3. Injuring or ruining a person, a family, &c.

கொள்ளிவைத்துக்குடமுடைத்தல், v. noun. Setting fire to the funeral pile and breaking a pot full of water, a funeral ceremony.

கொள்ளி, s. The oleander-leaved Cacalia, எருக்கை. (*M. Dic.*)

கொள்ளிடம், s. The river Coleroon,—as கொள்ளிடம், நதி.

கொள்ளியம், s. The உமரி plant. 2. The புன்கு tree. (*M. Dic.*)

கொள்ளு, s. Gram—as கொள்.

கொள்ளுக்காய்வேளை s. A plant. See காய்வேளை.

கொள்ளை, s. Robbery, plunder, pillage; devastation, depredation, sacking, பிறர்பொருளைக்கவர்கை. 2. Excess, abundance, copiousness, plenty, மிகுதி. (சது.) 3. An epidemic, a pestilence, a plague, பெருவாரிநோய்; [*ex* கொள்.]

கொள்ளைக்கடிக்கப்போனேன். [*prov.*] I have been working without pay, for that bad man—spoken as an imprecation.

கொள்ளைக்குமடைக்குக்தப்பு. Flee from devastating armies, and from epidemics.

கொள்ளைக்குப்போனாலும் கூட்டாகாது. One who intends to pillage, should not associate with others.

கொள்ளாகொள்ளை, s. [*prov.*] Great abundance, plenty.

கொள்ளைகொடுக்க, *inf.* To be plundered. 2. To allow plunder—as a general to his troops.

கொள்ளைகொள்ள, *inf.* To plunder, to ravage, to spoil. 2. To usurp, to monopolize. 3. (*p.*) To engross the mind, affections, desires, &c.

கொள்ளைக்காய்ச்சல், s. Epidemic fever.

கொள்ளைக்காரர், s. Plunderers, murderers.

கொள்ளைநோய், s. As கொள்ளை. 3.

கொள்ளைபோக — கொள்ளையாய்ப்போக, *inf.* To be plundered.

கொள்ளையடிக்க — கொள்ளையாட — கொள்ளையிட—கொள்ளையெடுக்க, *inf.* To rob, plunder, sack, pillage, devastate. 2. To commit burglary.

கொள்ளையாய்க்காய்க்க, *inf.* To yield abundantly—as trees, &c. (*c.*)

கொள்ளையாய்க்கிடக்க, *inf.* To be in a state of devastation—as a town. 2. To be abundant.

கொள்ளையுடைமை - கொள்ளைப்பொருள், s. Booty, spoil.

ஒருகொள்ளை, s. A great abundance, or great number. See ஒரு.

கொறடா, s. (*Hind.*) A horse-whip, குதிரைச்சவுக்கு.

கொறி, s. A sheep, செம்மறியாடு. 2. Aries of the Zodiac, மேடராசி.

கொறி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To work or force off the husks from grains of rice with the fore-teeth—as persons, or with the beak—as birds; to bite or nibble grain, &c., பல்லுதலியவற்றற் கொறிக்க. 2. (*fig.*) To pick, eat but little; to piddle, கொஞ்சங்கொஞ்சமாயுண்ண. 3. [*prov.*] To make a ticking, clucking sound, சட்டுகிட்டெனலிக்க. 4. To chirp—as a lizard, &c., பல்லிமுதலிய கொறிக்க.

கொறிசெருபதமாயிற்று. The paddy is grown so ripe that the husk can be easily forced off.

அவன் என் தலையைக் கொறிக்கப்பார்க்கிறான். He attempts to nibble my head, i. e., to injure me.

ஏன்சும்மாகொறிக்கிறாய்? [*prov.*] Why do you chatter in vain?

கொறித்துப்பார்த்தல், v. noun. Trying rice that has been boiled for husking, by biting, to ascertain whether it is dry enough. 2. Looking staringly with impudence.

கொறிப்பு—கொறித்தல், v. noun. The act of nibbling or nipping.

கொறிதலை, s. A medicinal plant, நிலவேம்பு. (*M. Dic.*)

கொறு, s. A wicker basket for the mouth of a calf to prevent it from sucking.

கொறுக்கச்சி, s. The எருவை reed.

கொறுக்காய், s. The gorga tree; the fruit of which is used for acidifying curries, தமரம், Garcinia gambogia.—*Note.* It does not produce the true Gamboge.

கொறுக்காய்ப்புளி, s. The acid pulpy rind of Gorga fruit, cut in pieces and dried—an article of export.

கொறுக்கை, s. A species of reed or rush, கொறுக்கச்சி. 2. A fish, ஒர்மீன். 3. Snoring, குறட்டை.

கொற்கை, s. The name of an ancient town near Madura, ஓர் நகரம்.

கொற்கையாளி—கொற்கைவேந்தன், s. A race of Pandian kings in கொற்கை town, பாண்டியன். (*p.*)

கொற்றம், s. Victory, success, வெற்றி. 2. Power, strength; ability, வல்லமை. 3. Royalty, kingly government, அரசியல். 4. (சிக.) A limit—as கொற்றம்.

கொற்றக்குடை, s. The Canopy of royalty. (*p.*)

கொற்றவள்ளை, s. Devastation of a country by a hostile army.

கொற்றவன், s. A king, a monarch, அரசன். 2. A valiant, victorious man, வெற்றிசிறந்தோன். (p.)

கொற்றவை, s. Durga—as the goddess of war and victory, துர்க்கை.

கொற்றி, s. Durga, the goddess of war—as கொற்றவை. 2. The goddess, காளி.

கொற்றியாருக்குப்படைத்தல், v. noun. Making offerings to the goddess கொற்றியார்.

கொற்றியானைவழிவிடுதல், v. noun. Dismissing the goddess on the 5th day after child birth, the midwife carrying away the mat on which the woman lay with a little of each kind of food she has eaten, to some open place or jungle.

கொற்றியார், s. [prov.] The goddess of parturition.

கொற்றவன், s. The முடக்கொத்தான் plant. (M. Dic.) See கொற்றம்.

கொற்றன், s. A proper name used as an example, under கொற்ற in grammar, ஒரு சிறப்புப்பெயர். 2. See under கொற்ற.

கொற்றி, s. A young calf, பசுவிளங்கன்று. 2. Female of கொற்றன். See under கொற்றம்.

கொற்று, s. [a contraction of கொல்லற்று.] Masonry, கொற்றத்தொழில். 2. Masons, bricklayers, கொற்றர்.

கொற்றன், s. Mason, bricklayer.

கொன், adv. In vain, uselessly, to no profit—as in கொன்னேகழித்தீர், you have spent it in vain, பயனின்றி. 2. In due time, seasonably—as in கொன்வாவாடை, the north wind coming in its season, பருவகாலத்திலே. 3. Dreadfully, terribly—as is கொன்முனையிருக்கை, a village terribly pinched by poverty, அஞ்சப்படியாய். 4. Almost, entirely, all—as in கொன்னூர்துஞ்சினும், though the town is all asleep, முற்றும். (p.)—Note. The word is sometimes an adjective—as in கொன்னூர், the great town. 5. s. (சாவடி.) Hell, நரகம்.

கொன்றை, s. [improp. கொன்னை.] A genus of flower trees, சரக்கொன்றை. Cassia, L.

சரக்கொன்றை, சிறுகொன்றை, செம்முலைக்கொன்றை, திருக்கொன்றை, புலிநகக்கொன்றை, பெருங்கொன்றை, பொற்கொன்றை, மயிர்க்கொன்றை, முட்கொன்றை, are varieties of கொன்றை. See those words.

கொன்றைக்காய், s. The pods of the Cassia fistula—are sold as a drug, the pulp of them is taken as an electuary for costiveness, the flowers are also used medicinally. [Ainslie vol. 1. p. 66.]

கொன்றைசூடி, s. Siva—as crowned with கொன்றை flowers; similar compounds—as கொன்றைவேணியன், கொன்றைமாலையன், கொன்றைத்தாரான், &c., mean the same.

கொன்றைவேந்தன், s. [prop. கொன்றை வேய்ந்தன்.] A Tamil school book commencing with the words, கொன்றைவேய்ந்தன் by Aviar, ஔவையார்நூல்.

கொன்னு, கிறேன், கொன்னினேன், வேன், கொன்ன, v. n. [vul. probably a corruption of கொஞ்ச, v.] To speak indistinctly, to stammer, articulate imperfectly, கொன்னையாகப்பேச. Used commonly in the gerundial form—as கொன்னிக்கொன்னிப்பேசுகிறான், he stammers, speaks indistinctly, falters in his words.

கொன்னை, v. noun. [vul. prov.] Indistinct speaking, stammering, lisping, imperfect articulation, கொற்றிருக்காமை.

கொன்னைவாயன், s. [fem. கொன்னைவாய்ச்சி.] One who speaks indistinctly, a stammerer.

கொன்னெச்சன், s. [prov.] A kind of gad-fly in cattle, ஒருவண்டு.

கொன்னை, s. [loc.] A cup made of leaves—as தொன்னை.

# கோ

கோ. A letter compounded of க் and ஓ. 2. A vocative particle, அழைப்புக்குறி. 3. An exclamation of success, victory, &c., வெற்றிக்குறி.

கோகோவென்றழ, inf. To weep loudly.

கோ, s. A king, அரசன். 2. A man in his prime, ஆண்மகன். 3. Greatness, superiority, மேன்மை. (சது.) 4. (M. Dic.) The jujubee tree, இலந்தை.

கோக்கள், s. Nobles, gentlemen, இறைவர். 2. Kings, அரசர்.

இளங்கோக்கள், s. The third class or caste of Hindus; the class next below the kings, வைசியர். (நிக.)

கோமகன், s. A prince, a king's son, இராசகுமாரன். 2. A king, அரசன்.

கோமகள், s. Princess, இராசகுமாரத்தி. 2. A mistress, a lady, தலைவி.

கோமாள், s. A lady, a mistress, தலைவி.

கோமான், s. A king, an Emperor, அரசன். 2. A superior, a lord, தலைவன். 3. A guru, a priest, குரு. 4. An elder; a person of dignity, respectability, estimation, &c., மூத்தோன்.

கோமாட்டி, s. A lady, a mistress.

கோவியல், s. Kingly quality, regality.

கோவில், s. A temple, church. See கோயில்.

கோவேறுகழுதை, s. A mule, வேசரி.

கோன், s. A king, a monarch, அரசன். 2. A master, a lord, இறைவன்.

• கோ, s. A cow, பசு. 2. A bull, எருது. 3. Air, ஆகாயம். 4. Swerga or paradise, heaven, சுவர்க்கம். 5. The earth, பூமி. 6. Water, நீர். 7. A point of the compass, region, quarter, திசை. 8. An arrow, அம்பு. 9. Thunderbolt, the weapon of Indra, வச்சிராயுதம். 10. An eye, கண். 11. Any of the five sentient organs, பொறி. W. p. 297. Gô. 12. Hill, mountain, மலை.

கோகத்தி—கோவதை, s. The murder of cows, or the guilt consequent on it, பசுக்கொலை; [ex hatya, killing.]

கோசலம், s. Cow's urine in ceremonial purifications, &c.

கோதனம்—கோதன்னம், s. A calf, பசுவின்கன்று; [ex தன்னம், a calf.]

கோதானம், s. The gift of a cow.

கோபதி, s. A bull, (lit.) lord of cows, இடபம். 2. Indra—as king of Swerga, இந்திரன். W. p. 299. Gôpati.

கோபாலர், s. [pl. of கோபாலன்.] Herdsmen, cow-herds, இடையர். 2. Kings, அரசர்; [ex பாலர், protectors.] W. p. 299 Gôpala.

கோபாலன், s. Krishna, கிருஷ்ணன்.

கோமட்டி, s. [prop. கோமுட்டி.] A caste of merchants.

கோமயம், s. Cow-dung, சாணி. 2. The properties or peculiarities of a cow; any thing cow-like whether in appearance, make, smell or otherwise, ஆவின்தன்மை; [ex மயம், likeness.] W. p. 300. Gômaya. 3. [vul. also கோமியம்.] Urine of the cow, ஆநீர்.

கோமாமிசம், s. Beef, மாட்டிறைச்சி.

கோமாரி, s. A disease of cows, மாட்டுக்குவருநோய்.

கோவர்த்தனர்—கோவலர்—கோவர்—கோவிந்தர், s. Herdsmen, cow-herds, இடையர்.

கோவைசியர், s. A class of வைசியர் who are cow-herds.

இரத்தக்கோமாரி, s. See under இரத்தம்.

கோகண்டம், s. The நெருஞ்சில் shrub.

• கோகநதம்—கோகநகம் s. The lotus; also the red lotus, செந்தாமரை. W. p. 250. Kôkanada.

கோகநதை—கோகநகை, s. Lukshmi, the lotus—seated—as இலக்குமி.

கோகந்தம், s. A kind of arsenic, கந்தகபாஷாணம். (R.)

• கோகம், s. A large carnivorous red bird, the Brahmany or ruddy goose, சக்கரவாகப்புள். 2. A red ferocious animal, செந்நாய். (W. 250. Kôka, a wolf.) 3. Dried flowers, உலர்ந்தபூ. (M. Dic.)

கோகரணம், s. An art, ஓர்வித்தை. (c.)

• கோகர்ணம்—கோகன்னம், s. A celebrated place of pilgrimage on the Malabar Coast, sacred to Siva, ஒருசிவஸ்தலம். W. p. 297. Gôkarna.

கோகலி, s. The கடம்பு tree. (M. Dic.)

கோகழி, s. A place sacred to Siva, ஒருசிவஸ்தலம்.

கோகனம், s. An herb, the கையாந்தகரை. 2. Another herb, the நிலக்கடம்பு. (சது.)

• கோகிலம், s. The Koil bird, or Indian cuckoo, which is often referred to in poetry, as its note is supposed to inspire tender emotions, குயில். 2. The wall lizard, பல்லி. W. p. 250. Kôka. 3. (நிக.) A monkey, குரங்கு; [ex Sa. Kuka, take, seize.] 4. The சிறுகுறிஞ்சா creeper. (M. Dic.)

கோகிலாட்சம், s. The நீர்முள்ளி plant. 2. The கொம்மட்டிமாதளை tree. (M. Dic.)

கோகு, s. An ass, கழுதை. (நிக.) Compare. (Sa. Kóka.)

கோகுத்தம், *s.* The மல்லிகை shrub. (*M. Dic.*)

கோகுலம், *s.* A monkey, குரங்கு. 2. A tube, any thing tubular, குழாயுடைப்பொருள். (*சது.*)

கோ, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* [*com.* கோக்க.] To string—as beads, flowers, ola leaves, &c., to file, கோவைசெய். 2. To insert and draw—as a string, thread, ratan, &c., in a hole, a mesh, a braid, &c., to thread a needle, &c., உட்புகுத்திவாங்க. 3. To compose, compile, arrange, to reduce to order, or system, ஒழுங்குபடுத்த. 4. To clasp or join—as the hands, &c., to lock—as the arms, பிணைக்க, பின்னக்க. 5. To fabricate, as stories, malicious reports, கதைகோக்க.

மாலைகோத்ததுபோலேகோத்துவிட்டான். He arranged it as nicely as a string of flowers.

கோத்திழைக்க, *inf.* [*prov.*] To mend a hole or rent in a mat, a basket, &c.

கோத்துக்கொடுக்க, *inf.* To thread a needle in hedging, roofing, matting, &c., and pass it through to another person. 2. (*fig.*) To present in an unfavorable light—as the wrong, injury, &c., done to one by his adversary and thereby to aggravate the enmity.

கோத்துச்செய்ய, *inf.* To reduce a theme to system and make a poem. (*p.*)

கோத்துப்பின்ன, *inf.* To braid, to lace shoes, stays, &c.

கோத்துவாங்க, *inf.* To turn back the shuttle in weaving so as to exclude the border that it may be of a different color.

கோத்துவிட, *inf.* [*prov.*] To bring into difficulties. 2. To sow discord, to excite enmity.

அத்திரங்கோத்துவிடுதல், *v. noun.* Setting arrows in the bow and discharging them. (*p.*)

நூலில்லாமற்கோத்தல், *v. noun.* Fabricating a story without any foundation; (*lit.*) to string without thread.

கோப்பு, *v. noun.* Stringing, inserting, threading, arranging, methodizing. 2. Gaudiness, showiness, gaiety, parade, இடம்பம். 3. (*Rott.*) Jest, sport, பகடி.

அவன்கல்லகோப்பாயிருக்கிறான். [*prov.*] He is a rich man.

கோப்புகொடுக்க, *inf.* To prepare all kinds of food. (*R.*)

கோங்கம், *s.* The கொல்லி tree. (*M. Dic.*)

கோங்கு—கோங்கிலவு, *s.* A kind of cotton tree—the silk cotton, கள்ளிமரம், Bombax gossypinum, *L.*

கோசமம், *s.* The பீர்க்கு plant.

கோசம், *s.* Nutmeg, சாதிக்காய். (*M. Dic.*)

•கோசம், *s.* Egg, முட்டை. 2. Penis; also the scrotum, ஆண்குறி. 3. Sheath, scabbard, case, receptacle, உறை. These sheaths are five, one within the other. 4. Treasures, stores—as gold or silver plate, jewelry, &c., பலபண்டம். 5. A store house, a treasury, பண்டசாலை. 6. A treatise, a book, especially a dictionary, or vocabulary, புத்தகம். W. p. 252. Kôsha 7. (*சது.*) Covered or ornamented parts of a fortress-wall, மதிலுறுப்பு. 8. Street, வீதி. (*p.*) 9. [*in Hindu philosophy.*] A covering or case for the organised soul, கவசம். Cases supposed to invest the soul are five; 1. அன்னமயகோசம்; the body sustained by food. W. p. 40. Annamayakôsha. 2. பிராணமயகோசம்; the vital, external organs. W. p. 586. Pranamayakôsha. 3. மனோமயகோசம்; the mental organs with the faculty of thought, (மனம்,) operating through the senses. 4. விஞ்ஞானமயகோசம்; the supposed organs of intellectual perception with the faculty of intellect (புத்தி). 5. ஆனந்தமயகோசம்; supreme felicity in which the soul is so entirely absorbed as to be unconscious of everything else. W. p. 113 Anandamayakôsha.

கோசரம், *s.* The மகிழ் tree. (*M. Dic.*)

•கோசரம், *s.* An object of sense—as sound, color, &c., விடயம் 2. Sensation, perception; comprehension, உணர்வு. 3. A country, district, நாடு. 4. [*in astrol.*] The presence of a planet in one's natal sign or one reckoned from it. W. p. 298. Gôchara. 5. (*சது.*) Restriction, restraint, confinement—as சங்கோசம், அடக்கம். (*from Sa. Kucha.* W. p. 225.)

கோசரபலம்—கோசரபலன், *s.* [*in astrol.*] The influence of a planet in one of the above signs.

•கோசலம், *s.* The city of Ayôdhyâ, or Oude, and the adjacent district to the south; forming one of the fifty-six countries of India, அயோத்தியாதேசம். W. p. 252. Kôsala. 2. One of the eighteen languages, பதினெண்பாடையிலொன்று. 3. See under கோ, *Sa.*

•கோசலை, *s.* The கோசலம் country. 2. The mother of Rama, இராமன்றாய். (இராம.)

•கோசனை — கோசணை, *s.* A great noise, roar, பேரொலி. (கா.) W. p. 311. Ghôshan'a. Compare கோடணை.

கோசன், *s.* A kind of native arsenic, சிப்பிப்பாஷாணம். (*R.*)

கோசா, *s.* (*Hind.*) Eunuch, அலிவன்.

கோசாங்கம், *s.* A reed, நாணல்.

கோசாமி, *s.* [*vul.*] A holy man, a devotee of the fourth or highest class, one who has subjected the passions, துறவி. 2. A naked devotee, திகம்பரசந்நியாசி.

கோசாயி, *s.* (*Hind.*) Go'sa'in—as கோசாமி.

•கோசாரம், *s.* [*in astrol.*] As கோசரம்.

கோசாரி, *s.* The பீர்க்கு plant. (*M. Dic.*)

•கோசான், *s.* [*vul. prov.*] Membrum virile—as கோசம்.

•கோசிகம், *s.* Cloth, சீலை; silk cloth—as கௌசிகம், பட்டுச்சீலை. (*Sa. Kosika.*) 2. The third Veda, the சாமம். (*சது.*) Compare கோசிகம், கௌசிகம்.

•கோசிகன், *s.* The anchoret, விசுவாமித்திரன், son of the sovereign காதி. See கௌசிகன்.

கோசு, *s.* A ko's, a measure of distance—two Indian miles—as குரோசம், இரண்டுமைல்வழி. 2. (*சது*) A street—as கோசம், வீதி. 3. The lower front rope of the sail of a dhoney, the clew line, தோணிப்பாயின்முற்புறத்திற்கயிறு. See தாமான். 4. [*prov.*] A voyage, a trip; a term, a time, தடவை. 5. Defeat, frustration, loss, overthrow, பரிகலம். 6. [*loc.*] Affairs, concern, cause, காரியம்.

கோசிலேவர—கோசிலேபிடித்துவர, *inf.* To hold the rudder so as to keep close to the wind; to luff.

அவன்இதிலேகோசுபோய்விட்டான். [*prov.*] His object was defeated in the case.

அவன்கோசுக்குப்போகாதே. Do not interfere in his affairs.

கோசுகால், *s.* [*prov.*] Attenuation in growth—as the stalks of pot-herbs, மெல்லிகால்.

•கோஷணை—கோஷம் — கோடம், *s.* As கோடணை. 1, 2.

•கோஷி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To sound, to hum—as bees, ஒலிக்க. 2. To roar, thunder; to mutter—as clouds, முழங்க. *Sa. Ghósha.*

•கோஷை, *s.* Sound, thunder, சத்தம். W. p. 311. Ghôsha. 2. [*Rott. prop. Goshtee.*] Discourse, dialogue, சம்பாஷணை.

கோடகசாலை, *s.* [*vul.* கோடாசாலை.] A kind of plant, தும்பு, Justicia procumbens, *L.*

கோடகம், *s.* A ewer, குண்டிகை. 2. The ornamental curves of a crown being one of its five parts. (See முடியுறுப்பு.) 3. A place where four ways meet, நாற்றெருக்கூடுமிடம். (See திருக்கோடகம்.) 4. Newness, recency—as கோடி, புதுமை. (*சது.*)

•கோடகம், *s.* A horse, குதிரை. W. p. 311. Ghôt'aka.

கோடங்கி, *s.* [*loc.*] A diviner, soothsayer, வருங்காரியஞ்சொல்வோன். Sometimes கோடாங்கி.

கோடங்கிபார்க்க, *inf.* To consult, &c., a diviner.

கோடங்கிழங்கு—கோடைக்கிழங்கு, *s.* The சிற்றரத்தை plant. (*M. Dic.*)

•கோடணை, *s.* Sound, hum, ஒலி. 2. Noise, roar, thunder, பேரொலி. W. p. 311. Ghôshan'a. 3. Instruments of music in general or drums, வாத்தியப்பொது. 4. Cruelty, கொடுமை. (*சது.*)

கோடதரம், *s.* The dried root of ginger, சுக்கு. (*M. Dic.*)

கோடம், *s.* Border, limit, எல்லை. (*சது.*) 2. As செஞ்சந்தனம். (*M. Dic.*)

கோடரம், *s.* The branch of a tree, மரக்கொம்பு. 2. (*Sa. Kut'hâra.*) A tree in general, மரப்பொது. 3. A grove, a garden, சோலை. 4. A monkey, குரங்கு. 5. The சட்டி tree.

•கோடரம், *s.* The hole or hollow of a tree, மரப்பொந்து. W. p. 250. Kôt'ara. 2. The knob on the top of a car, தேர்மொட்டு. 3. (*Sa. Ghôt'a.* W. p. 311.) A horse—as கோடகம், குதிரை. 4. Fragrant hair-ointment, pomatum, மயிர்ச்சாந்து.

கோடரி, *s.* [*a change of* குடாரி.] An axe, கோடாலி.

கோடல், *v. noun.* Taking, receiving, buying, &c., [a form of கொள்ளுதல்.] 2. Bending, curving, &c.; breaking, snapping, [a form of கோடுதல்.] 3. *s.* The white species of the Gloriosa flower, வெண்காந்தள்.

•கோடவதி, *s.* A vina or Indian lute, வீணை; [*ex* கோடம், கோஷம், sound.] (*சது.*) W. p. 311. Ghôshavatee.

கோடா, *s.* [*prov.*] The dregs of an inferior kind of arrack, சாராயவண்டல்.

கோடாவடிக்க, *inf.* To dissolve the dregs in water.

கோடாங்கி, *s.* [*loc.*] A masquerade, வேஷக்கூத்து. 2. Women's cloth, மாதராடை. 3. A soothsayer—as கோடங்கி.

கோடாசுழி — கோடாசூரி, s. A medicinal plant, கோடகசாலை. 2. A pill or dose of medicine from the plant, கோடகசாலை மாத்திரை.

கோடாசொரி, s. A kind of arsenic, ஒர்பாஷாணம்.

கோடாய், s. One of the five nurses, she that carries the child, செவிலித்தாய்; [ex கோள், carrying, et தாய்.] See தாய்.

கோடாலி, s. [a change of குடாரி.] An axe. (c.)

கோடாலிக்காம்பு, s. The axe-handle.

கோடி, s. Newness, recency, புதுமை. 2. [loc.] New cloth, unbleached cloth, புதுச்சீலை. 3. (சிக.) Cloth in general, சீலை. 4. (c.) A collection of twenty, a score—as of precious stones, &c., இருபது. 5. One of the five parts of a crown—as கோடகம், முடி புறப்பு.

கோடிமுடிய, inf. [prov.] To tie a piece of money in the corner of another's new cloth, to oblige him to give an invitation to a feast.

கோடிப்பருவம்-கோடிவயது, s. Youth. (R.)

கோடியுடுக்க, inf. To put on a new cloth.

கோடியுடம்பு, s. [prov.] A tender body.

கோடியெடுக்க, inf. To buy a new set of cloths, as yearly practiced at தீபாவளி.

கோடிவெள்ளை, s. The whiteness of a cloth after the first washing.

*கோடி, s. A crore, or ten millions, நூறுலட்சம். 2. End, tip, point, projection, முனை. 3. Cape, headland, promontary, தலைமுனை. 4. Nook, corner; the exterior of an angle, மூலை. 5. [in Mathemat.] The complement of an arc or angle to 90°, correlative of புஜை. W. p. 250. Kôṭ'i, 6. [loc.] Back side or backyard of a house—as புறக்கோடி.

கோடிகண்டால்விடுவாரோ. If he get a hint will he not find it out?

கோடாகோடி, s. [com. கோடானகோடி.] A number—a hundred billions, பதுமம். 2. An immense, indefinite number, அளவின்மை.

கோடிகாண்பிக்க, inf. [loc.] To touch slightly on a thing, to hint.

கோடிக்கரை, s. Point Calimere.

கோடிக்கல், s. A corner stone in a building.

கோடிச்சா, s. [in Mathemat.] The cosine.

கோடிசுமான்—கோடீஸ்வரன், s. A man of crores, one worth 10 millions of pagodas or rupees.

கோடிதீர்த்தம், s. A sacred bathing place near Ramisseram. 2. A bathing place near Point Calimere.

கோடிதூங்க, inf. [prov.] To be idle about another's house, to loiter about.

கோடிதூங்கி, appel. n. A loiterer about other's houses.

கோடிப்பாம்பு, s. [loc.] A full grown cobra snake.

கோடியன், s. [prov.] The first and last in a set of palenkeen bearers. 2. The out side ox in a row going round a treading floor,—the inside one being called உள்ளான்.

கோடிகம், s. A jewel casket, அணிகலச்செப்பு. 2. Ewer, or pot with a spout, கெண்டிகை. 3. Cloth,—as கோடிகச்சீலை. 4. A salver for presenting flowers, பூத்தட்டு.

கோடி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [loc.] To make a vow, பிரார்த்திக்க. (R.)

கோடியர், s. (fem. Sa. Gôsht'ee, dramatic composition.) Comedians, dancers, கூத்தர். (சிக.) Compare கூகோடியர்.

கோடிரவம், s. The சதுரக்கள்ளி tree. (M. Dic.)

கோடிலம், s. The கோஷ்டம் tree. See குரா.

*கோடீரம், s. Long entangled hair—as worn by ascetics in imitation of Siva's matted hair, சடை. (சிக.) 2. A crest, a diadem, முடி. (சது.) W. p. 251. Kôṭ'ee'ra.

*கோடு, (Gen, ட்டின்,) s. Crookedness, flexture, obliquity, a crooked thing, வளைவு. W. p. 250. Kôṭa. 2. A diagram or figure, as a square, a circle, an ellipse, &c., வடிவம். 3. Dividing or describing lines, கீற்று. 4. A chank, சங்கு. 5. The horn or tusk of a beast, விலங்கின்கொம்பு. 6. The horn or chank for blowing, ஊதுங்கொம்பு. 7. The symbol of the எ, ெ, or ே, எழுத்தின்கொம்பு. 8. A branch, மரக்கொம்பு. 9. The summit of a hill, மலையுச்சி. 10. Shore, bank of a river, margin of a tank or well, &c., கிக்கரை. 11. Ridge, dam, bank in rice-fields, வரம்பு. 12. (Sa. Kota.) A strong hold, a fort, a fortified place, அரணிருக்கை. 13. Guile, deceit, வஞ்சனை. 14. Crowd, numbers, multitude, திரள். (பிங்.) 15. Side, பக்கம். (பிங்.) 16. A cusp, the horn of the crescent moon, &c., பிறைக்கோடு. 17. [loc. for.] Court of justice, நீதிஸ்தலம்.

கோடுகீற—கோடுகிழிக்க, inf. To draw lines; to make diagrams, figures, &c.

நீர்கிழித்தகோட்டுக்குள்ளடங்கியிருக்கிறேன். I am within the line you drew, i. e., I obey your order.

கோடுகீறிமறிக்க, inf. To draw a circle on the ground round a debtor, adjuring him not to pass it till the debt is paid. 2. To draw a circle round one in order to extort a promise from him. 3. To draw a magic line in order to stop a wild beast, தடைகட்ட.

கோடுபோட, inf. To rule a paper to write (c.)

கோட்டிலக்கம், s. [in arith.] Magic squares. [limited usage.]

கோட்டில்வாழ்விலங்கு, s. Animals that live on trees as squirrels, monkeys, &c.

கோட்டுநீறு, s. Shell-lime, conch-lime. (p.)

கோட்டுப்பூ, s. One of the four kinds of flowers; those on branches. See பூ.

கோட்டுமலை, s. Elephant. (p.)

கோட்டுமா, s. [lit. the tusked animal.] Elephant, யானை. 2. Hog, boar, பன்றி.

ஒருகோட்டன், s. Ganêsa—as the single tusked, விநாயகன். (p.)

வடகோடு, s. The northern cusp of the moon. (p.)

தென்கோடு, s. The southern cusp of the moon. (p)

கோடு, கிறேன், கோடினேன், வேன், கோட, v. n. (Sans. Kôṭ'a, crooked). To be crooked, oblique; to bend, வளைய. 2. To swerve, to deviate, to diverge, கோண. 3. To be partial, biased, நடுவுநிலைகோண. 4. To be envious, displeased, to take umbrage, to have antipathy, வெறுப்புற. 5. v. a. To break, to snap off, முறிக்க. (p.)

கோடாதகோல், s. A right sceptre, just government.

கோடாதமனம், s. A liberal mind, a benevolent mind. 2. A mind free from envy, guile, bias, &c.

கோடாதமொழி, s. Unfailing promises. (p.)

கோடாமை, s. Straight forwardness, unbiasedness, &c.

கோட்டம், v. noun. Crookedness, bent, flexture, வளைவு. 2 Grudging, malice, envy, அழுக்காறு. 3. Partiality, swerving from rectitude, injustice, obliquity, கோணல். 4. [prov.] Lines, figures, diagrams made of rice-flour, &c., on the floor in religious ceremonies, மாக்கோலம்; (ex கோடு.)

முகங்கோடுதல், s. v. noun. Making a wry face through discontent, dissatisfaction, umbrage, sorrow, &c.

சொற்கோட்டமில்லதுசெப்பமொருதலையாவுட்கோட்டமின்மைபெறின். Freedom from obliquity of speech is rectitude, if there be a (corresponding) freedom from bias of mind. (குற.)

முகக்கோட்டம், v. noun. A sad, dejected countenance. 2. A look of reluctance or unwillingness.

கோடை, s. The hot season, வேனிற்காலம். 2. The wind of the hot season, the land-wind, the west wind, மேல்காற்று. 3. (சிக.) Wind in general, காற்று. 4. Sunshine, வெயில். 5. The செங்காந்தள் plant. 6. The வெண்காந்தள் plant. See காந்தள். 7. A kind of plant, the mealy root of which is used by the weaver for sizing warp. See கோடக்கிழங்கு.

கோடைகாலம், s. The hot season.

கோடைக்காற்று, s. West wind. As கோடை 2.

கோடைக்கிழங்கு — கோடங்கிழங்கு, s. The mealy root of the கோடை plant.

கோடைக்குவாடான், s. A Medicinal shrub, ஆவிரை.

கோடைச்செய்கை, s. Preparation of land in the dry season for the next rain.

கோடைப்புரோசனம் — கோடைப்போகம், s. [loc.] Crop grown in the hot season. 2. The produce of cultivation in the hot season.

கோடைமழை, s. Rain in the hot season, deemed pernicious. (c.)

*கோடை, s. A horse. W. p. 311. Ghôṭ'a.

கோட்டகம், s. A tank or pond—as கோட்டம், குளம். (சது.) 2. A temple—as கோஷ்டம், கோவில்.

கோட்டம், s. Place, இடம். 2. A burning place, சுடுகாடு. 3. A country, a cultivated district, நாடு. 4. Agricultural towns or villages, மருதநிலத்தூர். 5. Rice fields, வயல். 6. A tank, குளம். 7. A kind of shrub. See குரா. See under கோடு, v.

செட்டுப்பொட்டாய்ப்போக, *inf.* To be unsuccessful in traffic.

கக்குச்செட்டு, *s.* [*prov. com.* கடுஞ் செட்டு.] Unfair dealing, exorbitant profits, &c.

எதிர்ச்செட்டு, *s.* Opposition in trade, &c. See under எதிர்.

**செட்டை**, *s.* Wing, feather, plumage, சிறை. 2. Fin. (See சவு.) 3. (*Tel.* చెట్ట.) Shoulder blade, தோட்செட்டை. 4. [*prov.*] Gold or other colored threads interwoven. See கிட்டை.

அவனுக்குச் செட்டை முறிந்தது. His power, wealth, or office is gone, his protector is dead; (*lit.*) his wings are broken.

**செண்டா**, *s.* (*Hind.*) A flag, கொடி. Sometimes spoken, சண்டா. (*c.*)

**செண்டு**, *s.* A ball to play with, பந்து. 2. (*Tel.* చెండు.) A kind of nose-gay in a round or longitudinal form, பூச்செண்டு. (*c.*) 3. A kind of weapon, ஆயுதம். 4. An area for training, exercising or running horses; a race course, குதிரையோடும் வீதி. 5. An area for playing at ball, பந்தடி வீதி. 6. (*fig.*) A ball of thread—as கண்டு.

செண்டாட, *inf.* To play at ball.

செண்டுகட்ட, *inf.* To make a nose-gay.

எலுமிச்சம்பழச்செண்டு, *s.* A nose-gay with a lemon on the top.

கலியாணச்செண்டு—பந்திச்செண்டு, *s.* Small nose-gays used at marriages, feasts, &c.

செண்டுமல்லிகை, *s.* [*loc.*] A kind of jasmine—as குடமல்லிகை.

செண்டாயுதம், *s.* The செண்டு weapon.

செண்டாயுதன், *s.* Iyanar, as bearing the செண்டு weapon, ஐயன்.

செண்டுவெளி, *s.* An open place for playing at ball, training horses, racing, &c.

**செண்ணம்**, *s.* Form, shape, வடிவு. (*R.*)

**செண்பகம்**, *s.* A flower tree. See சண்பகம். (*c.*)

**செண்பகவருக்கை**, *s.* [*prov.*] A kind of jack tree, பலா.

**செதில்**, *s.* [*vul.*] Exterior bark of trees, மரச்செதில்.

**செதிள்**, *s.* Fish-scales, மீன்செதிள். 2. As செதில். Compare சிதள்.

**செதுக்கு**, *s.* Mud, mire, சேறு. 2. A Bhuta. (See பூதம்.) (சது.) 3. A monkey, மந்தி.

**செதுக்கு**, கிறேன், செதுக்கினேன், வேன், செதுக்க, *v. a.* (*Sa. Chhida.*) To cut off a surface with a tool, as in cutting grass, pare, shave off, புல்முதலியசெதுக்க. 2. To plane, hew with an adze, to chisel, மரஞ்செதுக்க. (*c.*)

பாவஞ்செய்தவர்களை யமனேவலாக்கத்தச்சன் வாச்சியாற்செதுக்குவான். The carpenter of yama will hew the evil doers.

செதுக்குப்பாரை—செதுக்கி, *s.* A tool for cutting grass, paring the soil, &c., புல்செதுக்கி.

செதுக்கிச்சித்திரித்தசொரூபம், *s.* A carved image.

செதுக்குப்புல், *s.* Grass that has been shaven off by the roots, in distinction from அறுப்புல், that has been cut by a sickle.

செதுக்குவேலை — செதுக்கடவேலை, *s.* Rims adorned with engraved work. See குத்தவேலை.

செதுக்குளி, *s.* Carpenter's chisel. 2. Goldsmith's chisel used in enchasing.

களஞ்செதுக்க, *inf.* To clear an area of grass, weeds, &c., for threshing floor.

செதுக்குப்பாக்கு, *s.* Areca-nuts pared when they are fully ripe.

**செதுக்கை**, *s.* [*prov.*] Scar, cicatrice, தழும்பு.

**செதும்பு**, *s.* Mud, mire, bog, சேறு. Compare சிதம்பு.

**செத்தல்**, *v. noun.* Dying—as சாதல். (சது.) 2. [*prov.*] A cocoanut over-ripened on the tree, உலர்ந்தேங்காய். 2. A shrivelled palmyra or other fruit; dried chillies; plantain trees, or other vegetables or grass dried, பனை முதலியவற்றினுலர்ந்தகாய். 3. (*fig.*) An emaciated person, அப்பிராணி; (*used in Ceylon.*) Compare வற்றல்.

செத்தலோலை, *s.* [*prop.* உலர்ந்தவோலை.] Dried palm leaf.

செத்தல்மாடு, *s.* [*prop.* வற்றல்மாடு.] A poor, reduced or stinted ox.

செத்தற்பிள்ளை, *s.* [*prop.* வற்றற்பிள்ளை.] A stinted child.

செத்தற்புல்லு, *s.* Grass dried, through want of rain; plucked hay.

முந்திரிகைப்பழச்செத்தல், *s.* Grapes dried for medicine, a kind of raisins.

முருக்கஞ்செத்தல், *s.* Dry முருக்கு wood, used by swimmers to help them to float; also for warrior's fancy work.

**செத்து**, *s.* Doubt, hesitancy, uncertainty, சந்தேகம். 2. A particle of comparison, உவமையுருபு. (*p.*)

**செத்தை**, *s.* (*Tel.* చెత్త) Dried vegetable matter—as grass, or leaves, dry rubbish, உலர்ந்தசருகுமுதலியன. 2. [*prov.*] A hedge or fence of palm leaves, ஓலைவேலி.

செத்தைகட்ட, *inf.* [*prov.*] To cover fruit with olas as a screen from thieves or from the blight of the eye.

செத்தையரிக்க, *inf.* To gather up the dried leaves for fuel, &c. See சருகரிக்க.

செத்தைமேய, *inf.* To cover huts with dried vegetables, commonly the leaves of the sugar cane.

செத்தையடைப்பு — செத்தைவேலி, *s.* [*prov.*] A hedge covered with palm leaves.

**செத்தெழுத்து**, *s.* (*contraction of* செத்தவெழுத்து.) A mute consonant—as ஒற்றெழுத்து.

**செங்கட்டி**, *s.* A nettle—as செங்தொட்டி. (*c.*)

**செங்கட்டு**, *s.* A stroke to ward off a blow, to strike off a thing, &c., அடியைத்தடுக்கை. 2. A scheming or knavish contrivance to secure an object, to evade a creditor, tax-gatherer, &c., காரியங்கொள்ளத்தட்டுகை; [*ex* செம்மை, uprightness, *et* தட்டு.]

**செந்தணல்**, *s.* Bright fire; (*lit.*) red flame, செந்தீ.

செந்தணற்கொடி, *s.* Coral, பவளம். (*M. Dic.*)

**செந்தண்டு**, *s.* The red stalk of the Amaranthus, செந்தண்டுக்கீரை. 2. [*prov.*] Red spikes from the rice stalk, கெல்த்தாள். 3. Red coral, பவளம்; [*ex* செம், red.]

செந்தண்டுக்கீரை, *s.* As செந்தண்டு, 1.

செந்தண்டீன, *inf.* [*prov.*] To put forth blighted corn stalks.

**செந்தமிழ்**, *s.* Pure, classical Tamil, unmixed with foreign words—oppos. to கொடுந்தமிழ்; [*ex* செம்மை, right.] (*p.*)

செந்தமிழ்க்குரியோன், *appel. n.* The God Bhairava, வயிரவன். 2. Agastya, அகஸ்தியன்.

செந்தமிழ்நாடு-செந்தமிழ்நிலம், *s.* The Pandyan country, Madura and the parts around, where Tamil was spoken in its purity, பாண்டிநாடு; which is stated in the following stanza—

சந்தனப்பொதியச் செந்தமிழ்முனியுஞ்
சௌந்தரபாண்டியன் எனுந்தமிழ்நாடனும்
சங்கப்புலவருந் தழைத்தினிதிருக்கும்
மங்கலப்பாண்டி வளநாடென்ப.

செந்தமிழ்வழக்கு, *s.* Classical usage in Tamil.

செந்தமிழிலக்கணம், *s.* A Tamil grammar of the higher dialect, in Latin by Beschi; translated into English.

**செந்தலைவிரியன்**, *s.* A snake with a red head, ஒருபாம்பு; [*ex* செம், red.] (*c.*)

**செந்தழல்**, *s.* The eighteenth lunar asterism, கேட்டைநாள். 2. Fire, செந்தணல்.

செந்தழற்கொடி, *s.* A flame of fire, தீத்தழற்சிகை. (*p.*)

**செந்தளிர்**, *s.* The first young red sprout, இளந்தளிர்.

**செந்தளிர்ப்பு**, *s.* [*prov.*] Joy, happiness, felicity through opulence, மகிழ்ச்சி. 2. As செஞ்செழிப்பு.

**செந்தாது**, *s.* Gold, பொன்; [*ex* செம், *et* தாது, metal.]

**செந்தாமரை**, *s.* The red lotus. See தாமரை.

**செந்தாழை**, *s.* A red flowered aloe. (See தாழை.) 2. A redness of the eye causing obscurity of sight, ஓர்கண்ணோய்.

**செந்தாழைநோய்**, *s.* A kind of disease which causes the mouth to smell badly, making the lips sore, ஓர்வியாதி. (*c.*)

**செந்தாளி**, *s.* The purple convolvulus. See தாளி.

**செந்தாள்**, *s.* [*prov.*] As செந்தண்டு, 2.

**செந்தி**, *s.* (*contraction of* செயந்தி.) A town, திருச்செந்தி.

செந்திமுருகன், *s.* Skanda.

**செந்திரிக்கம் — செந்திருக்கம்**, *s.* (*Tel.* చెంద్రిక.) The ola envelope of an ola letter, ஓலைச்சுருள். (*c.*) Compare சந்திரிகை.

**செந்திரு**, *s.* A name of Lukshmi, இலக்குமி. (*p.*)

செந்தில், s. A name of திருச்செந்தில்.

செந்திலந்தாதி, s. A poem of அந்தாதி verses in praise of Skanda; composed in such a manner as to be sung without the lips touching each other.

செந்திறம், s. Red, சிவப்பு. 2. A kind of guitar of hilly districts, குறிஞ்சியாழ்த்திறம்; [ex செம்.]

செந்தினை, s. The கம்பு grain. 2. Millet —oppos. to கருந்தினை, ஓர்தினை. (c.)

செந்தீ, s. Fire, செந்தணல். (p.)

செந்திவண்ணன், s. Siva, the fire colored, சிவன். 2. Mars, the planet, செவ்வாய்.

செந்தீவளர்ப்போர், appel. n. Brahmans who preserve the sacred fire, அந்தணர்.

•செந்து, s. Any animal of the inferior kinds, insect, brute, reptile, worm, சில செந்து. (See சந்து.) 2. A living creature, சீவன். 3. Hell, நரகம். 4. Atom, அணு. 5. An old jackal, கிழநரி. (சது.)

செந்துத்தானம்—செந்துஸ்தானம், s. One of the seven hells, ஓர்நரகம்.

செந்துத்தி, s. A plant. See துத்தி.

செந்துத்தி, s. A plant—as பெருங்காயம், Ferula assafœtida. 2. A medicinal grass, as சுபாமாஞ்சி. (R.)

செந்தும்பை, s. A plant, ஓர்தும்பை, Osbeckia Ceylanica.

செந்துரசம், s. Copal, ஓர்பிசின். (Ainslie's Materia Indica.)

செந்துருக்கம், s. A kind of bastard saffron, safflower, ஓர்பூடு.

செந்துருக்கு, s. A plant from which a red die called சந்திரகாவி is prepared, ஓர்பூடு, Carthamus tinctorius, L.

செந்துருதி, s. A kind of tune, or musical mode, ஓர்யாழ்த்திறம். 2. Hell, நரகம்.

செந்துளசி, s. A variety of the Ocimum sanctum, L.; [ex செம், red.]

செந்துளிர், s. As செந்தளிர்.

செந்துறை, s. A song adapted to dancing, ஆடற்கேற்கும்பாட்டு. (திவா.)

செந்துறைவெண்பா—வெண்செந்துறை, s. A species of couplet, a division of the குறள்வெண்பா.

செந்துறைவெள்ளை, s. As செந்துறை வெண்பா.

செந்தூக்கு, v. noun. Taking up at one lift—as a child or other light thing, சோர் த்தூக்குதல். 2. A kind of verse, ஓர்வகைப் பாட்டு; [ex செம்மை, straightness.]

செந்தூக்காய்த்தூக்கிக்கொண்டுபோனான்....... He snatched away, took from the midst.

செந்தூரம், s. [in medicine.] Red chemical preparation. See சிந்தூரம். (c.)

செந்தூரத்தாசி, s. Sulphur, கந்தகம். (M. Dic.)

செந்தூள், s. Red dust, also dust red from the blood of the slain in battle—oppos. to கருந்தூள். (c.)

செந்தூள்கருந்தூள்பறக்கிறது. An expression denoting the fierceness of combat or the vehemence of the cavaliers in the battle.

செந்தொடை, s. One of the forty-three kinds of தொடை, a species of blank verse, சேரவொழுகவிபதுவகைத்தொடை. 2. A garland of red flowers, சிவப்புமாலை. (p.)

செந்தொடையன், s. The god Bhairava wearing a garland of red flowers, வயிரவன்.

செந்தொட்டி, s. [com. செந்தட்டி.] A kind of nettle, சிறுகாஞ்சொறி 2. A native arsenic, ஓர்பாஷாணம். (M. Dic.)

செந்தோன்றி, s. The red lily, செங் கழுநீர்.

செந்நகரை, s. [prov.] A kind of tree, ஓர்மரம்.

செந்நகரம்பழநெய், s. A kind of medicinal ghee, made of the செந்நகரை fruit.

செந்நாகம், s. Kéthu the descending node—as செம்பாம்பு, கேது. (p.)

செந்நாடிக்கா, s. A running plant, மூக்கிரட்டை. (M. Dic.)

செந்நாயுருவி, s. A species of the நா யுருவி.

செந்நாய், s. A reddish species of wild dog, ஓர்நாய். (c.)

செந்நிறக்கல், s. A kind of red stone, மாணிக்கசிலை. (M. Dic.)

செந்நீர், s. Blood, இரத்தம். (p.)

செந்நெல், s. Superior kind of rice, of a yellowish hue—as செஞ்சாலி.

செந்நெறி, s. A good way, the right way—chiefly in a moral or religious sense, சன்வழி. 2. Virtue, morality, சன்மார்க்கம்; [ex செம்மை, uprightness.] (p)

•செபம், s. The silent repetition of incantations in worship according to prescribed forms, and with accompanying ceremonies, as counting the beads of a rosary, the joints of the fingers, &c., செபிக் கும்செபம். 2. The inaudible repetition of charms, magical incantations, &c., இரகசியமாய்ச்செபிக்கும்செபம். W. p. 340. JAPA. 3. [Christ. usage.] Prayer, வேண்டிக்கொள்ளல் (probably brought into use by the Romanists, with whose practice it accords). (c.)

என்செபம்ஒன்றும்நடவில்லை. My prayer avails nothing.

செபஞ்செய்வோன், appel. n. A praying person.

செபதபம், s. Prayer and worship. (c.)

செபஞ்சொல்ல—செபஞ்செய்ய, inf. [in Christ. usage.] To repeat prayers.

செபவேளை, s. Time of prayer.

செபாலயம், s. [in Christ. usage.] A prayer-house, church, synagogue.

செபத்தியானம், s. Repetition of incantations and contemplation of the image of a deity in the mind, as the two forms of daily worship, for the சரியைக்கா ரன், and கிரியைக்காரன். (c.)

செபமந்திரம், s. Charms, incantations, &c., consisting chiefly of the names, and appellations of the deities addressed.

செபமாலை, s. A rosary, used to determine the number of repetitions of a prayer or incantation. 2. A string of golden beads, worn by women, மாதரணிக லம். (c.)

செபமுருவேற, inf. [prov.] See உரு வேற.

செபம்பண்ண, inf. To repeat incantations inaudibly in worship, magic, medical practice, &c. 2. [in Christ. usage.] To pray.

செபி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To repeat incantations, charms, &c., inaudibly in worship, also for magical, medical, or other purposes, செபஞ்செய்ய.

மந்திரஞ்செபிக்க, inf. To mutter incantations.

செப்படி—செப்படிவித்தை, s. Legerdemain, sleight of hand—from the practice of striking a cup on the ground with the ball under it, செப்புவித்தை. 2. Tricks, deceptive arts, illusion, உபாயம். (c.) 3. [prov.] (fig.) Contrivance, to economize, by dealing out in small quantities, சிக்கனம்.

செப்படிவித்தைக்காரன், s. One who practises legerdemain. 2. (fig.) A deceitful person, உபாயக்காரன்.

செப்படியண்ண—செப்படிவித்தைபண் ண, inf. To practise legerdemain, especially with cup and ball. 2. To play tricks, deceive; practise cheating and knavery. 3. To make a variety of things from the same material; to manage with great economy; (not spoken to the credit of the person.)

செப்பட்டை, s. [vul.] A wing, புறவைச்சிறை. 2. Shoulder blade, தோட்பட் டை. Compare சப்பட்டை.

இப்போதஅவனுக்குச்செப்பட்டைமுறிந்தற்போலா யிற்று. He is now without protection—spoken of the loss of a brother or benefactor.

செப்பம்—செப்பன், s. Straightness, correctness, exactness, smoothness, செவ்வை. 2. Satisfaction, agreeableness, மனஒற்றுமை. 3. Impartiality, equity, justice, நடுவுநிலைமை. (c.) 4. Way, road, வழி. 5. Street, public thoroughfare, வீதி. 6. Breast, bosom, மார்பு. 7. Unity, concord, friendship, கோட்டமின்மை. 8. [prov.] Fitness, preparedness, செப்பனிடல்.

செப்பமாயிருக்க, inf. [prov.] To be fit, be prepared, ready.

செப்பமானநடை, s. Correct deportment, good behavior.

செப்பஞ்செய்ய—செப்பம்பண்ண, inf. To clean, garnish. 2. To fit, dress up. 3. To repair, mend. 4. To put in order, arrange. 5. To inter, புதைக்க.

செப்பமிட—செப்பனிட, inf. To repair, mend, correct, rectify. 2. To level, make even. 3. To polish.

அவ்விருவருக்குஞ்செப்பமில்லை. Those two persons are not on good terms. prov.

ஒப்புசெப்பம், s. [loc. ஒத்தசெப்பம்.] Evenness, smoothness, levelness—as of ground.

செப்பல், s. [prov. prop. செவ்வல்.] Being red. (c.) See செப்பு, v.

பொழுதுசெப்பலோடிவரும்பொழுது. At day break, at the dawning of the morning when the sky is a little red.

செப்பிடல், s. The medicinal grass, சடாமாஞ்சி. (M. Dic.)

**செப்பு**, *s.* A little box of metal, ivory or wood, a casket, செப்பனம். (*c.*) 2. Speech, declaration, saying, மொழி. 3. Answer, reply, விடை.

செப்புப்பெட்டிப்போல. With the greatest secrecy. 2. Unperceivedly, avoiding exposure—spoken of knavish tricks.

**செப்பு**, இறேன், செப்பினேன், வேன், செப்ப, *v. a.* (*Tel.*) To say, speak, declare, tell, சொல்ல. (*p.*)

செப்பிட, *inf.* To say, declare, &c.

செப்பல், *v. noun.* Saying, declaring, &c.—as செப்புதல். 2. As செப்பலோசை.

செப்பலோசை, *s.* The mode of singing the வெண்பா verse, வெண்பாவிற்குரியவோசை.

**செப்புத்துறை**, *s.* [*loc.*] (*probably a corruption of* செப்புத்துறை.) Burial ground, grave-yard, சுடுகாடு.

**செப்புநெரிஞ்சி**, *s.* A kind of herb, Trailing indigo, Indigofera enneaphylla, *L.*

**செம்**, *adj.* Red, straight, beautiful, &c. See செம்மை.

செம்பசலை—செம்பசளை, *s.* A plant. See பசலை.

செம்பஞ்சி—செம்பஞ்சு, *s.* Red cotton. See பஞ்சி.

செம்பஞ்சூட்ட, *inf.* To coat the soles of a lady's feet with red cotton. (*p.*)

செம்படாம், *s.* Red cloth, red vestments; [*ex* படாம்.]

செம்படிகம், *s.* Red crystal. (*M. Dic.*)

செம்படை, *s.* [*prov.*] Reddishness of hair, &c. (*used in Jaffna.*)

செம்பட்டை, *s.* As செம்படை. (*c.*)

செம்பட்டைத்தலை, *s.* A red head.

செம்பட்டைமயிர் — செம்பட்டமயிர், *s.* Red or golden hair.

செம்பட்டு, *s.* Red silk, சிவந்தபட்டு.

செம்பண்ணை, *s.* Cock's comb, காவற்பண்ணை.

செம்பரத்தை—செவ்வரத்தை, *s.* The shoe-flower shrub. [*loc.* சப்பாத்துச்செடி.]

செம்பருத்தி, *s.* The cotton plant with red flowers.

செம்பருந்து, *s.* The red kite with a white neck. (*p.*)

செம்பலகை, *s.* Brick-stone, செங்கல். (*p.*)

செம்பவளச்சம்பா, *s.* A kind of reddish rice.

செம்பழம், *s.* [*prov.*] Fruit turning yellow or red as it ripens. See செங்காய்.

செம்பாகம், *s.* A moiety, half, an equal share, சரிபாகம். 2. The natural construction, unforced meaning of a passage, word, &c. 3. A natural, flowing and easy style in writing. See பாகம்.

சமற்றிற்செம்பாகமன்று. In coition, unequal desire of the two. (குறள்.)

செம்பாடு, *s.* [*prov.*] Red soil. (See செங்காடு.) 2. Any thing soiled or tinged with red earth, செம்மண்கறைபட்டது.

செம்பாட்டுத்தரை — செம்பாட்டுமண், *s.* [*prov.*] As செம்மண்.

செம்பாதி, *s.* An exact half, சரிபாதி.

செம்பாம்பு, *s.* Kéthu the descending node, as the red tail of the dragon, கேது. See கேசரம்.

செம்பாலைமீன், *s.* A kind of fish.

செம்பால், *s.* Blood, இரத்தம். (சது.) Compare சேம்பால்.

செம்பாளை, *s.* [*prov.*] A reddish kind of paddy, நெல்லு.

செம்பிராய், *s.* [*vul.*] The name of a red fish, ஒருமீன்.

செம்புளிச்சை, *s.* A kind of red Hibiscus canabinus. See புளிச்சை.

செம்புறைக்கல், *s.* As செம்பூரான்கல். (*R.*)

செம்புலி, *s.* A tawny colored tiger.

செம்புனல், *s.* Blood; (*lit.*) red fluid. (*p.*)

செம்பூரான்—செம்பூரம், *s.* A species of red centiped. See பூரான்.

செம்பூரான்கல், *s.* [*com.* செம்புராங்கல்.] A kind of stone resembling the color of the centiped, laterite.

செம்பொடி, *s.* Red sand or powder, செம்மணல்.

செம்பொன், *s.* Fine gold, பொன். 2. One of the kinds of gold, that of reddish color. See பசும்பொன். (*p.*)

செம்பொன்மலை, *s.* Mount Meru. 2. (*R.*) A mountain producing copper, செம்புமலை. (*p.*)

செம்மணல், *s.* Red sand.

செம்மணி, *s.* A ruby, மாணிக்கம். 2. The name of different kinds of red stones—as பதுமராகம், கெம்பு, குருவிந்தம், குருந்தக்கல், மாணிக்கம். 3. Red beads, சிவப்புமணி. 4. [*prov.*] One of the circles about the pupils of the eye.

செம்மண், *s.* Red earth, red soil. (*c.*)

செம்மந்தாரை, *s.* A tree, ஒருமரம்.

செம்மயிற்கொன்றை-செம்மயிற்கொண்டை, *s.* A plant, ஒருபூச்செடி.

செம்முருக்கை, *s.* A red species of முருக்கை tree. See முருக்கை.

செம்முள்ளி, *s.* A species of முள்ளி plant, Barleria prionitis, *L.*

செம்மூக்கன், *s.* [*prov.*] A species of alligator, ஒருமுதலை. 2. A kind of rat, ஒரெலி. (*M. Dic.*)

செம்மொழி, *s.* Right words, proper sentiments, good advice, &c. 2. [*in philos.*] Words in their natural order.

செம்மொழிச்சிலேடை, *s.* [*in log.*] Ambiguity, a verse allowing two different constructions — as வேதனைக்கூற்றைத்தவிர்க்கும். It will remove many afflictions, or it will remove Brahma (birth) and Yama (death.)

செம்மேனி, *s.* A copper colored body, சிவந்தமேனி.

**செம்படவர்**, *s.* A tribe of fishermen, ஒர்சாதியார். (*c.*)

செம்படத்தி, *s.* Female of the செம்படவர் caste.

**செம்பாலை**, *s.* [*in music.*] The first of the seven பாலை tunes, ஒர்பண்.

**செம்பி**, *s.* A black beetle, கருவண்டு. (*M. Dic.*)

**செம்பிச்சி**, *s.* A kind of prepared arsenic, ஒர்பாஷாணம். (*R.*)

**செம்பியன்**, *s.* Solan, any king of the Sola dynasty, சோழன். 2. One of the first seven liberal kings, முதலெழுவள்ளலிலொருவன். (*p.*)

**செம்பில்வேதை**, *s.* A kind of prepared arsenic, சோரபாஷாணம். (*M. Dic.*)

**செம்பின்பச்சை**, *s.* A curious green stone, சரப்பச்சை. See துருப்பச்சை.

**செம்பு**, *s.* Copper, தாம்பிரம். 2. (*Tel.* చెంబు.) A small metal-pot, commonly of copper, used as a drinking cup, சிறுதண்ணீர்ச்செம்பு.—*Note.* In combination it often becomes செப்பு.

செப்புக்கம்பி—செம்புக்கம்பி, *s.* Copper wire.

செப்புக்கடாரம், *s.* A copper boiler.

செப்புக்குடம், *s.* A copper water-pot.

செப்புக்குழாய், *s.* A copper tube for a gutter, &c. 2. A little copper tube, with covers at both ends, to enclose magical diagrams.

செப்புக்கோட்டை, *s.* The fort of Ravana, mythologically said to have been made of copper, இராவணன்கோட்டை.

செப்புச்சட்டி, *s.* A copper pan.

செப்புச்சல்லி-செம்புச்சல்லி, *s.* [*prov.*] Copper challies, one-third of a pice.

செப்புச்சிலை, *s.* An idol, a copper statue. 2. A copper colored stone, ஒர்கல்.

செப்புத்தகடு, *s.* Copper in plates.

செப்புத்தூண், *s.* Pillars of copper.

செப்புத்தொட்டி, *s.* A copper trough. 2. (*R.*) A kind of arsenic, செம்பொட்டு.

செப்புப்படி, *s.* Copper measure.

செப்புப்பட்டயம், *s.* Engraving on copper—as royal grants, &c.

செப்புப்பாத்திரம், *s.* Copper vessel.

செப்புப்பாளம் — செம்புப்பாளம், *s.* Copper in bars.

செப்பூசி, *s.* A copper needle; sometimes used as an instrument of torture thrust into the fingers.

செப்போடு, *s.* Tiles of copper, used for roofing, (temples, &c.)

செம்பிலேதண்ணீர்கொடுக்க, *inf.* To hand the water pot to the guests to rinse their mouths, as a notice that food is ready.

செம்புக்களிம்பு, *s.* Verdigris of copper.

செம்புக்காசு-செம்புநாணயம், *s.* Copper coins. See காசு.

செம்புப்பற்று, *s.* Alloy of copper in gold.

செம்புமலை, *s.* A mountain with copper ore.

செம்பூறல், *v. noun.* [*prov.*] Oxidation of copper.

செம்பூறிப்போக, *inf.* To be tainted—as milk, &c., by being kept in a copper pot. Compare களிம்பூற.

செம்புமணல், *s.* Sand containing copper.

அபிஷேகச்செம்பு, *s.* A copper pot, used in anointing an idol, in private worship.

கொட்டுச்செம்பு, s. A copper pot made by beating instead of casting.

இயச்செம்பு, s. A leaden pot.

கெண்டிச்செம்பு, s. A brass pot with a nose. See கெண்டி.

பன்னீர்ச்செம்பு, s. A pot for sprinkling rose water.

வார்ப்புச்செம்பு, s. A cast copper-pot. 2. Cast copper, not very malleable.

வெண்கலச்செம்பு, s. A pot of வெண்கலம்.

வெள்ளிச்செம்பு, s. A silver pot used in temples, &c.

வன்னச்செம்பு, s. A kind of brass pot, inlaid with copper, of superior workmanship, made at Combaconum.

கொத்துவேலைச்செம்பு, s. A wrought copper pot.

பித்தளைச்செம்பு, s. A brass pot.

**செம்புகம்**, s. A bird. See செம்போத்து. (c.)

**செம்புக்குள்வேதை**, s. A kind of natural arsenic, சப்பரிபாஷாணம். (*M. Dic.*)

**செம்புலம்**, s. A field of battle, போர்க்களம். 2. A place of cremation, சுடுகாடு. 3. Parched, jungle-tracts, பாலைநிலம். (சது.) 4. A mountain containing copper, செம்புமலை. (*p.*) See புலம்.

**செம்புளிச்சங்கட்டை**, s. The wood of the ஒதி tree; [*ex* செம்புளிச்சை.] (*R.*)

**செம்புறு**, s. [*prov.*] A kind of fish, the roach, ஓர்மீன்.

**செம்பை**, s. The name of a tree, used for fuel, ஓர்செடி, Coronilla Sesban. *Willd.*—சிச்செம்பை, கருஞ்செம்பை, வயற்செம்பை are the different species of செம்பை.

**செம்பொருள்**, s. The meaning of a passage according to the most natural construction, செம்மொழி. 2. The deity, கடவுள். 3. Works of merit, அறம்; [*ex* செம்.]

**செம்போத்து**, s. Indian cuckoo, செம்புகம். (c.)

**செம்மட்டி**, s. A kind of muscle or oyster. See மட்டி.

**செம்மணத்தி**, s. A fragrant tree. See செம்புளிச்சை.

**செம்மரம்**, s. [*loc.*] The அழிஞ்சில் tree. 3. A red wood, ஓர்மரம்.

**செம்மலை**, s. A shrub, ஆவிரை. (*R.*)

**செம்மலைப்பாலை**, s. [*in music.*] The first of the seven பாலை tunes, ஓரிசை.

**செம்மல்**, s. Greatness, excellence, superiority, பெருமை. 2. A great or honorable man, உயர்ந்தோன். 3. King, monarch, emperor, sovereign, அரசன். 4. A master, எப்பொருட்குமிறைவன். 5. Son, prince, புதல்வன். 6. A faded flower, or flower of a preceding day, பழம்பூ. (சது.) (*p.*)

**செம்மறி—செம்மறியாடு**, s. A good or red kind of sheep, துருவை; [*ex* செம்.] (c.)

செம்மறிக்கடா—செம்மறியாட்டுக்கடா, s. A ram.

செம்மறிப்புருவை, s. A lamb.

**செம்மா**, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, *v. n.* To be proud, haughty, high-minded; to be elated, vain, conceited; to strut, இறுமாந்திருக்க. 2. To be overjoyed, be extatic with spiritual delight, போகத்திலே திளைத்திருக்க. 3. To be erect, stand upright, from pride, vanity, extatic joy, &c., to exult, to be in high spirits, to be intoxicated with joy, களித்திருக்க. (*p.*)

செம்மாந்துசெல்லுஞ்செறுநர். Foes of haughty carriage.

செம்மாப்பு, *v. noun.* Haughtiness, vanity, rapture, &c.—as செம்மா, *v.*

**செம்மாளி**, s. [*loc.*] A kind of sandals used by the Paraver or fisher-caste, ஓர்வகைப்பாதரட்சை.

**செம்மானம்**, s. [*prop.* செவ்வானம், which see.] (c.)

**செம்மான்**, s. (*fem.* செம்மாத்தி. *plu.* செம்மார்.) Shoemaker, a worker in skins, சக்கிலி.—In combination it becomes, செம்மார—as செம்மாரப்பயல்.

**செம்மீன்**, s. A kind of fish, ஓர்மீன்.

செம்மீன்வயிரம், s. Ambergris, மீனம்பர். (*R.*)

**செம்மு**, கிறேன், செம்மினேன், வேன், செம்ம, *v. a.* To cover or overspread with loam or clay, to lute, சீலைமண்கட்ட. 2. To cover up or enclose their cells, as bees, இறுக்கவாய்மூடல்போற்சேமிக்க. 3. To fill a pillow, a bag, &c., and sew up the end, பைசெம்ம.

செம்மிவைக்க, *inf.* (*sometimes* செம்ம.) To lute, put on a coating.

**செம்மு**, கிறது, செம்மினது, ம், செம்ம, *v. n.* To be a little swollen and bleared—as the eyes, கண்செம்ம. 2. To be hard as the belly through indigestion, வயிறுசெம்ம. (c.)

செம்மிப்போயிற்று. The colour has struck through. (*R.*)

**செம்மேவல்**, *v. noun.* [*prov.*] (*a contraction of* செம்மைமேவல்.) Agreeing, as contending parties; becoming reconciled, இணங்கல்.

**செம்மை**, s. Straightness, exactness, செவ்வை. 2. Uprightness, correctness, fitness, rectitude, செப்பம். 3. Integrity, moral rectitude, equity, fairness, honesty, ஒழுக்கம். 4. Fineness, neatness, சுத்தம். 5. Beauty, comeliness, grace, elegance, handsomeness, அழகு. 6. Excellence, eminence, superbness, மேன்மை. 7. Respectability, dignity, பெருமை. 8. Redness, ruddiness, orange or gold color, சிவப்பு. 9. [*prov.*] Unity, concord, agreement, ஒற்றுமை. (c.)

செம்மையானஎழுத்து. A very handsome writing.

செம்மைகட்ட, *inf.* [*prov.*] To adjust, settle. 2. To reconcile parties. 3. To induce consent.

செம்மைக்கல், s. A red stone containing metal, சாணைக்கல். (*M. Dic.*)

செம்மைபண்ண—செம்மைபடுத்த, *inf.* To put in order, to adjust, rectify, correct, repair, arrange, fit up, make ready, prepare. 2. To dress, decorate, adorn. 3. To cleanse, purify, ceremonially or otherwise. 4. To finish, complete.

செம்மைக்குவர, *inf.* To be reformed. 2. To come to a conclusion. 3. To be removed—as any derangement in the system.

செம்மையானபாதை, s. An even road.

செம்மைபட—செம்மையாக, *inf.* To become settled, or reformed.

செம்மையானவன், *appel. n.* A moral, upright or respectable man. 2. A person ceremonially pure.

மனச்செம்மை, s. [*prov.*] Uprightness of heart. 2. Friendship, good terms.

**செயநீர்**, s. [*in alchymy.*] Philosopher's acid.

**செயநீர்க்கருத்தன்**, s. Sal-ammoniac, நவச்சாரம். (*M. Dic.*)

**செயந்தி**, s. The name of a town, திருச்செந்தி; [*ex* செயம்.] (*p.*)

**செயபரம்**, s. A medicinal tree, மரமஞ்சள். (*M. Dic.*)

**செயபீதம்**, s. A kind of prepared arsenic, கௌரிபாஷாணம். (*M. Dic.*)

**செயப்படுபொருள்**, s. [*in grammar.*] The objective case, இரண்டனுருபின்பொருள்.

செயப்படுபொருள்குன்றியவினை, s. Intransitive verb—as நடந்தான். (*Modern.*)

செயப்படுபொருள்குன்றாவினை, s. Transitive verb.

**செயப்பாட்டுவினை**, s. The passive verb.

*செயம், s. Conquest, victory, வெற்றி. 2. Success, சித்தி. (c.) See சயம்.

அந்தக்காரியத்தைச்செயம்பண்ணமாட்டாய். You cannot effect the object.

**செயலை**, s. The Ashoka tree, அசோகமரம். (சது.)

**செயல்**, s. Agency, operations of the deity, தெய்வச்செயல். (c.) 2. A course of good conduct, ஒழுக்கம். 3. Guard, safeguard, defence, protection, காவல். 4. Mire, mud, சேறு. 5. *v. noun.* [*ex* செய்.] Act, action, doing, performance, work, தொழில்.

நஞ்செயலாவேது. What are our (endeavors) purposes!

எல்லாம் அவர்செயல். It is all his (God's) doing—meaning that all are over-ruled by Providence.

இப்போது அவருக்குநடக்கச் செயலில்லை He is now indisposed to go out.

என்கையிலேசெயலில்லை. I have no money in hand, I can't afford so much.

செயலற, *inf.* To be undone, helpless, unable to help one's self, deprived of power or energy, to faint, be motionless. 2. To fail in observance of rites, in a course of conduct, &c.

செயலறல்—செயலறவு, *v. noun.* The state of being undone, helpless, unable to help one's self, deprived of power or energy, fainting, motionless. 2. Non-observance of rites, in a course of conduct, &c.

செயல்கெட, *inf.* To be deprived of power or energy. (c.)

செயலறுநிலை, s. Affliction, want of succor. See கையறுநிலை.

**செயற்கை**, s. That which is artificial, not natural—oppos. to இயற்கை.

செயற்கைப்பொருள், s. As சேர்க்கைப் பொருள்.

செயற்கைவடிவம், s. An acquired form.

செயற்கையறிவு, s. Acquired knowledge. Compare இயற்கையறிவு.

செயற்கையளபெடை, *s.* The lengthening of the sound of a letter in poetry—oppo. to இயற்கையளபெடை.

செயற்கையன்பு, *s.* Love brought about by external means. See இயற்கையன்பு.

செயற்கைவாசனை, *s.* [*com.* சேர்க்கைவாசனை.] Habits according to one's company—oppos. to இயற்கைவாசனை.

**செயி**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To overcome, conquer, vanquish, வெல்ல; [*ex* செயம்.]

**செயிர்**, *s.* Anger, wrath, rage, fury, கோபம். (சது.) 2. Fault, defect, blemish, stain, moral or natural, களங்கம். 3. Disease, நோய். (குறள்.)

**செயிர்**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* and *v. n.* To be angry or indignant with, to frown at, சினக்க. (*p.*)

செயிர்ப்பு, *v. noun.* Anger, wrath.

**செய்**, *s.* A rice field, a corn field in general, cultivated ground, வயல். 2. [*prov.*] A measurement of a corn field, வயலிலோரளவை. (*c.*)

நன்செய், *s.* Land on which paddy is grown.

புன்செய், *s.* Land on which any grain but rice is grown.

**செய்**, கிறேன், தேன், வேன், ய, *v. a.* To make, உண்டாக்க. 2. To practise, do, perpetrate, தொழில்செய்ய. 3. To perform, accomplish, effect, achieve, இயற்ற — *Note.* This word is joined with nouns, verbals, &c., to form compound verbs—as பலஞ்செய்ய.

செய்கபொருளை. Let one acquire property. (குற. chap. 76-9.)

செய்யான். He will not do.

செய்கடன், *s.* Moral duty, rites, ceremonies as devolving on one, filial or other relative duties. 2. Funeral obsequies, rites, &c., for the manes. 3. Obligations of friendship.

செய்கரை, *s.* An artificial bank. See கரை.

செய்காரியம், *s.* [*prov.*] A thing done, a deed, an act. 2. Economy, management, providence, industry, சமாளிப்பு.

செய்குறை, *s.* Failure, non-performance of duty, &c., காரியப்பிழை. 2. Fault, error, mistake. 3. A thing incomplete, or in an unfinished state, குறைவேலை.

செய்குற்றம், *s.* [*prov.*] Fault, error, commission of a fault.

செய்குன்று, *s.* An artificial mount. See குன்று.

செய்கூலி, *s.* Hire for work done. 2. Hire for personal labor.

செய்தகாரியம், *s.* A thing done.

செய்தபிழை, *s.* A fault committed.

செய்தபிழையைப் பொறுத்துக்கொள்ளும். I beg your pardon; pray forgive, &c.

செய்தவம், *s.* Penance, austerities performed, either in the present or any former life.

செய்துகாட்ட, *inf.* To teach or exhibit by practice, action, &c. (*c.*)

செய்துகொடுக்க, *inf.* To do or make for another. (*c.*)

செய்துபழக, *inf.* To exercise one's self. 2. To practise.

செய்துமுடிக்க, *inf.* To accomplish, execute, finish.

செய்நன்றி, *s.* Benefits done.

செய்நன்றிகொன்றார், *appel. n.* The ungrateful; (*lit.*) murderers of benefits. (*p.*)

செய்நன்றியறிதல், *v. noun.* Showing gratitude for favors received. (*p.*)

செய்பயிர், *s.* Growing crops, produce of cultivation as differing from spontaneous productions; trees raised with care by cultivation, especially the வேம்பு, இருப்பை, பனை and புளி.

செய்பவன், *s.* [*in gram.*] The nominative case, கருத்தா.

செய்பாகம், *s.* Proper means employed to effect an object. 2. Medical knowledge; or skill in preparing medicines, &c. 3. Methodical arrangement. 4. Experimental knowledge.

செய்பாகங்கைபாகமறியவேண்டும். One must be acquainted with the preparation and prescription of medicines.

செய்பொருள், *s.* [*in gram.*] The objective case, செயப்படுபொருள்.

செய்யாமற்செய்தவுதவி, *s.* A favor conferred where none has been received. (*c.*)

செய்யுங்காரியம், *s.* A thing that ought to be done, a duty. 2. A proper or lawful act.

செய்யுஞ்சடங்கு, *s.* Appropriate ceremonies. (*c.*)

செய்வன, *s.* (*plu.*) Things fit or suitable to be done. (*p.*)

செய்வனதிருந்தச்செய். Do things that are right, with all your might. (*Avv.*)

செய்விக்க, *inf.* To get done, to cause to be done. (*c.*)

செய்வினை, *s.* Work, business, undertaking, action, avocation, calling, செய்தொழில். 2. [*in gram.*] An active verb, இயற்றும்வினைமுதலானிகழும்வினை. 3. Witchcraft, sorcery, மந்திரிகம்.

செய்வட்டம், *s.* (*with* கால்.) A fan, விசிறி. See under கால்.

செயவென்வாய்பாடு, *v. noun.* Infinitive mood. (*R.*)

**செய்கை**, *v. noun.* Act, action, deed, performance, achievement, operation, process, தொழில். 2. [*prov.*] Cultivation of land, manuring, tillage, labor—commonly agricultural, வேளாண்மை. 3. Artificial productions; those formed or modified by art, as drugs—opposed to விளைவு and இயல்பு, natural productions; constructed, produced, not natural, செயற்கை. 4. (*c.*) Moral deeds, good or evil doings, கிரியை. 5. A course of good conduct, நன்னடக்கை. 6. Witchcraft, sorcery, மந்திரிகச்செய்கை. 7. Means, contrivance, art, expedient, resource, மனச்செய்கை. 8. [*prov.*] Forest land newly broken up, enclosed, cultivated, &c., held by grant, or permission, from government, செய்கைநிலம்.

அவரவர்செய்கையின்படி. According to one's deeds.

செய்கைக்குத்தக்கபலன்காணும். The produce is according to the tillage; i. e. the reward will correspond with the (moral) actions.

செய்கைகாண, *inf.* To be newly cultivated as land. See காண.

செய்கைக்காணி, *s.* [*prov.*] Land held by a cultivator who renders a certain share of the produce to the owner. 2. Land held by a privilege from government, &c., சாசனக்காணி.

செய்கைக்காரன், *s.* A cultivator being a sharer in the produce; a usufructuary. 2. A good cultivator.

செய்கைக்குறைச்சல், *s.* [*prov.*] Deficiency in cultivation, manure, &c. 2. Misdeeds, failure in good conduct. (*c.*)

செய்கைச்சரக்கு, *s.* Prepared or compound drugs. 2. [*prov.*] As கடைச்சரக்கு.

செய்கையாளர், *s.* Artificers as carvers, sculptors, &c., milliners. (*p.*)

செய்கைச்சீட்டு, *s.* [*prov.*] A cultivation deed, a legal contract between the owner and cultivator, வேளாண்சீட்டு.

செய்கைச்சூத்திரம், *s.* A connective rule, one of the six. See சூத்திரம்.

செய்கைத்தலை, *s.* [*prov.*] Land well tilled, richly manured, &c. 2. Land held from government for cultivation, பட்டயக்காணி.

செய்கைத்தாழ்வு — செய்கைத்தாழ்ச்சி, *v. noun.* Mismanagement. 2. Deficiency in labor, &c. (*c.*)

செய்கைத்தேர், *s.* [*prov.*] A kind of car used in processions.

செய்கைபண்ண, *inf.* [*prov.*] To cultivate land, till, manure.

செய்கைபூண, *inf.* [*prov.*] To be cultivated, tilled, &c., as land. Compare செய்கைகாண.

செய்கைப்பங்கு, *s.* [*prov.*] The cultivator's or planter's share; usufruct.

செய்கைப்பிழை, *s.* As செய்கைத்தாழ்வு. 2. Trespass in regard to health, diet, religion or morals; neglect of one's proper calling, &c. (*c.*)

செய்கையாட்சி, *v. noun.* [*prov.*] Possession of land by privilege from government, with the title of a cultivator merely.

செய்கையுப்பு, *s.* [*prov.*] Salt formed by art.

செய்கையொப்பம், *s.* A written grant by government for cultivation.

**செய்தி**, *s.* Act, action, exercise, operation, deed, transaction, செய்கை. 2. Fact, event, circumstance, சங்கதி. 3. News, intelligence, information, சமாசாரம். (*c.*) 4. A course of conduct, ஒழுக்கம். 5. State, course of things, the course of nature, இயல்பு. 6. Message, errand, notice, communication, கட்டளைச்செய்தி.

நற்செய்தி, *s.* Joyful tidings.

உன்செய்தியென்ன. What do you want? or how do you get on?

இருக்கட்டும்செய்திசொல்லுகிறேன். Never mind; I give you notice.

**செய்ய**, *adj.* [*symbolic particle from* செம்மை.] Red, சிவந்த. 2. Fair, beautiful, அழகுள்ள. 3. Correct, perfect, செப்பமான. (*p.*)

செய்யர்-செய்யவர்-செய்யார், *s.* (*plu.*) Upright persons, நேர்மையுள்ளவர்.

செய்யவன், *appel. n.* The sun, சூரியன். 2. Mars, செவ்வாய்.

செய்யகண்கள், *s.* Red eyes.

செய்யன், *appel. n.* A red person, செகப்பன். 2. An upright, virtuous man, செவ்வியன். 3. Siva, சிவன்.

செய்யதாமரை, s. Red lotus flower.

செய்யபவளம், s. Red coral, செம்பவளம்.

செய்யாள்—செய்யவள், appel. n. Lukshmi, இலக்குமி. 2. Sita wife of Rama, (lit.) the red one, சீதை.

செய்யல், s. Mire, mud, சேறு. (p.) Compare செயல்.

செய்யான், s. A red, venomous centiped, செம்பூரான்; [ex செ.] (c.)

பெருஞ்செய்யான், s. A large species of centiped.

செய்யுள், s. Poetry, verse, poesy, the classics, செய்யுணடை. 2. A poem, stanza, கவி. 3. A corn-field, விளைநிலம். (p.)

செய்யுட்கருத்து, s. Poetical meaning. 2. The meaning of a verse, or passage in poetry. 3. The meaning of the poet.

செய்யுட்கலப்பு, v. noun. Anthology, கலம்பகம்.

செய்யுட்சொல், s. Words used only in poetry, classical terms.

செய்யுட்டாரணை, s. One of the nine தாரணை. See நவதாரணை.

செய்யுட்பிரபந்தம், s. Poetry.

செய்யுட்பொருத்தம், s. Ten things to be regarded in the choice of the first word of a poem, addressed to a hero or heroine: 1. மங்கலம், an auspicious word. 2. சொல், a word natural, elegant, unequivocal, and that will scan well. 3. எழுத்து, a word composed of an odd number of letters. 4. தானம், formed of letters taken from any of the first three of the five classes of தானம் (which denote the five stages of life), counting from the first letter of the name of the hero. 5. பால், formed of masculine or feminine letters according to the sex of the person. 6. உண்டி, composed of benign letters. 7. வருணம், of letters appropriate to the caste. 8. நாள், of letters belonging to an asterism, which has no malign aspect on that of his birth. 9. கதி, of letters of the first two families or species. 10. கணம், a word appropriate to some of the first four of the eight கணம், as it regards the feet, &c.

செய்யுட்போக்கு, v. noun. Poetic style, idiom, phraseology, classical usage, poetic language.

செய்யுணடை, s. Poetic usage, or style. 2. The metre of a verse in respect to its feet, or movement in reading or singing.

செய்யுளாக்க—செய்யுள்செய்ய, inf. To put prose into verse, make poetry.

செய்யுள்வழக்கு, s. Poetic usage, style, or phraseology, classical usage; oppos. to உலகவழக்கு, or பாஷைவழக்கு, common usage.

செய்யுள்விகாரம், s. Poetical changes, which are nine—as 1. வலித்தல். 2. மெலித்தல். 3. நீட்டல். 4. குறுக்கல். 5. விரித்தல். 6. தொகுத்தல். 7. முதற்குறை. 8. இடைக்குறை. 9. கடைக்குறை, which see in their places.

செய்யுளியல், s. The second part of Prosody treating of the different kinds of metre, யாப்பிலோர்பிரிவு.

செய்யுளுறுப்பு, s. The constituent parts of poetry, as given in காரிகை. See உறுப்பு.

செய்யோன், s. Argha of the Jainas, அருகன்; [ex செ, red.] (p.)

செரி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To digest—as food in the stomach; concoct, decoct, சீரணிக்க. 2. (fig.) v. a. To control passion, to swallow down anger, கோபத்தையடக்க. (c.)

தருமச்சொத்துனக்குச்செரியாது. The property given for charity cannot be appropriated (digested) by you.

செரியாமை, v. noun. (neg.) Indigestion, செரியாக்குணம்.

செரியாக்குடல்—செரியாக்குடர், s. Imperfect or bad digestion.

செரியாமற்போக, inf. To be subject to bad digestion. (c.)

செரியாப்பண்டம், s. Things that cannot be easily digested.

செரியாமாந்தம், s. A disease inducing indigestion. See மாந்தம்.

குடித்தஎண்ணெய்செரித்துவிட்டதினாற்பேதியாகாது. The oil you took was digested and will not operate.

செரிப்பி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. a. (causative of செரி.) [loc.] To promote digestion by medicine, செரிக்கச்செய்ய. 2. (fig.) To remove a difficulty, தொந்தரைதீர்க்க.

செரிப்பித்துக்கொள்ள, inf. To defend one's cause successfully, அனுகூலமாக்க.

செரு, s. Battle, war, போர். (p.)

செருக்களம், s. Field of battle, போர்க்களம்.

செருக்களவஞ்சி, s. A poem in which is pictured the grandeur of the battle field; the bodies of the slain men, elephants and horses, fed on by dogs, vampires, devils, eagles, hawks, and crows; which exult with clamor while at the same time the Bhutas, and vampires, dance around and sing, பிரபந்தத்திலொன்று.

செருகு, கிறது, செருகினது, ம், செருக, v. n. (also சொருகு.) To sink as the eyes in fainting, in death, &c., கண்சொருக. 2. To gripe, have colic, வயிற்றைச்சொருக.

செருகு, கிறேன், செருகினேன், வேன், செருக, v. a. To stick in, to tuck in, put in, to insert, நுழைக்க. Compare சொருகு.

செருக்கு, s. Haughtiness, wantonness, pride, vanity, self-conceit, self-importance, self-sufficiency, அகங்காரம். 2. Inflation from pride; intoxication with vanity, wealth, office, &c., கர்வம். 3. Exultation, excessive joy, joviality, elation, களிப்பு. 4. Boldness, daring, mettle, intrepidity, frenzy, arrogance, audacity, presumption, temerity, rashness, wilfulness, ஆண்மை. 5. The feeling or vanity of self-agency, instead of ascribing one's actions, &c., to the deity, ஆணவம். 6. Infatuation, illusion, the diversion of the mental powers from their proper course, or from seeking the supreme good, the predominance of the senses over reason, மயக்கம். 7. High hope, aspiration, sanguine expectation, மனோரதியம். (c.)

அவன்செருக்குக்குலைந்தது. His pride is brought down.

செருக்கன் — செருக்குக்காரன், s. A wanton, vain, presumptuous person.

செருக்காய்ப்பேச, inf. To speak proudly, to assume too much.

செருக்காய்வளர்க்க, inf. To bring up in a delicate manner, செல்வமாய்வளர்க்க.

செருக்குக்காட்ட, inf. To show pride, to be vain, self-important, self-conceited.

செருக்குப்பண்ண, inf. To act proudly, arrogantly, wantonly.

படைச்செருக்கு, s. Daring intrepidity, high spirits, vaunting and bravado, &c., of the soldier.

செருக்கடிக்க, inf. To vaunt with an inarticulate sound. (c.)

பணச்செருக்கு, s. Pride of money.

கல்விச்செருக்கு, s. Pride of learning.

செல்வச்செருக்கு, s. Inflation of wealth.

குடிச்செருக்கு, s. A vain conceit of high birth, குடிப்பிறப்பினாணவம்.

செருக்கு, கிறேன், செருக்கினேன், வேன், செருக்க, v. n. To be dizzy, giddy; to be stupified, faint, or to have nausea, from taking strong areca-nuts, &c., தலைகிறுகிறுக்க. 2. To be choked by a bone, or a piece of areca-nut, stopped in the throat, பாக்கடைக்க. 3. To be proud, vain, self-conceited, அகங்கரிக்க. 4. To be wilful, wanton, presumptuous, rash, சுயமாயிருக்க. 5. To be infatuated, to have the mental powers deluded, or the reason under the dominion of the senses, மயக்கமுற. 6. To believe in self-action, and be insensible to the agency of the deity in one's operations, ஆணவமுற. (c.)

மாடுசெருக்குகிறது. The ox chokes (from something stuck in its throat).

செருக்கிக்கிடக்க, inf. To be dizzy from taking strong areca-nuts, or from eating strong வரகு grain.

செருக்கல், v. noun. Dizziness, stupor, nausea, incipient or slight inebriation, from the use of some kinds of areca-nuts, &c., அருக்களிப்பு. 2. Elated feelings, either in a bad or good sense, மிகமகிழ்ச்சி.

செருக்கல்வரகு, s. [prov.] A kind of வரகு, or millet, that causes dizziness, stupor, &c.

செருக்கற்பாக்கு — செருக்குபாக்கு, s. [prov.] Stupifying areca-nuts.

மதஞ்செருக்க, inf. To be mad with lust.

செல்வஞ்செருக்க, inf. To be intoxicated with prosperity.

செருந்தல், s. The udder of a cow or buffalo, பசுஎருமைகளின்மடி. (சது.) (p.)

செருத்தி, s. A banner of victory, or badge of distinction, விருதுக்கொடி. (p.)

செருநர், s. Soldiers, heroes, valiant persons, படைவீரர்; [ex செரு.] (சது.) (p.)

செருந்தி, s. A kind of sedge. (See வாட்கோரை.) 2. A flower tree, நீர்ப்பூமரம், Ochna squarrhosa, L. 3. A plant, மணித்தக்காளி. (M. Dic.)

செருப்படி — செருப்படை, s. A class of medicinal plants often called, செருப்படிசாயன், Coldenia procumbens, L.

பெருஞ்செருப்படி, s. A kind of செருப்படி with larger leaves.

சிறுசெருப்படி, s. A kind of செருப்படி with small leaves. (c.)

**செருப்பு**, *s.* A leathern sandal or slipper, a clog, பாதரட்சை. (*c.*)

ஒற்றடிச்செருப்பு, *s.* (*contraction of* ஒற்றையடிச்செருப்பு.) A slipper.

கிறிச்சுச்செருப்பு, *s.* Creaking shoes.

குத்திச்செருப்பு, *s.* Shoes with thick soles.

தோற்செருப்பு, *s.* Shoes with thin soles.

செருப்பாலடிக்க, *inf.* To beat one with a shoe; deemed very degrading.

செருப்பாலடிக்கறுப்பாயிபிழைப்பிலே. An expression used to denote a servile and mean profession; (*lit.*) beat the life out of கறுப்பாயி (a Toty woman), with a shoe.

செருப்புக்கட்ட, *inf.* To make a pair of shoes. (*c.*)

செருப்புக்கட்டை, *s.* [*prov.*] Worn out shoes.

செருப்புக்கால், *s.* A shod foot.—*Note.* Entering a house with shoes on is regarded impolite among the Hindus.

செருப்பூசி, *s.* A shoe-maker's awl.

செருப்புத்தின்னி, *appel. n.* [*prov.*] A sandal-gnawer—meaning a dog. (*in abuse.*)

**செருமு**, கிறேன், செருமினேன், வேன், செரும, *v. n.* To hem, இருமு. 2. To cough—as a beast, மிருகம் இருமு. 3. To be crowded, thick, close, &c., நெருங்க. (*c.*)

செருமல், *v. noun.* Hemming, either to clear the windpipe, or as a sign of இருமல். 2. The cough of a beast, செருக்குதல்.

**செருமு**, கிறேன், செருமினேன், வேன், செரும, *v. a.* [*prov.*] To crowd in, stuff or cram in, fill up, அடைக்க. Compare செம்மு.

**செலகம்**, *s.* A flower plant, மல்லிகை. (*M. Dic.*)

**செலந்தி**, *s.* [*vul. for* சிலந்தி.] An ulcer, a boil, புண்.

**செலம்**, *s.* The cuscus, வெட்டிவேர், Andropogon muricatum, *L.* See செலியம்.

**செலவு**, *v. noun.* (*used substantively.*) Expenses, charges, cost; expenditure of money, time, life, &c., disbursement, பணமுதலியவற்றின்செலவு. 2. Consumption of stores, &c., materials used, consumed, worked up, செலவழிகை. 3. Provisions, &c., given out or purchased for daily consumption, சமைக்கிரயை. (*c.*) 4. [*loc.*] Permission, leave, license, விடை. 5. Way, passage, route, வழி. 6. (*p.*) Conduct, behavior, நடக்கை. 7. Lapse of time, காலக்கழிவு. 8. Current, issue of a stream, &c., discharge from a sore, &c., சீப்பாவுகை. 9. Removal, detachment, separation, departure, movement, நீங்குகை. (ஓ. 358.) 10. Going, passing, progress, procedure, procession, course, career, journey, செல்லுகை; [*ex* செல், to go.]

செலவோடேசெலவாய். Together with other expenses.

செலவாய்ப்போனான். He has passed away, is dead.

செலவுக்கில்லை. I have no money for my expenses.

எனக்குஅதுசெலவில்லை. I have no call for it.

எச்செலவுந்தள்ளி — எல்லாச்செலவுந்தள்ளி...... Clearing all expenses.

செலவழிக்க, *inf. v. a.* To spend, to consume, to use up—as stores. 2. To give out, give away, to sell off, dispose of, விற்றுப்போட.

நான் இந்தப்பல்லக்கைச் செலவழித்துப்போடவேண்டும். I wish to dispose of this palankeen.

செலவழிய, *inf. v. n.* To be spent, exausted, used or worked up, consumed; to be all gone. 2. To be squandered, wasted, lavished, சிறழிய.

செலவழிவு, *v. noun.* Disbursements and expenditures. 2. Loss and gain.

செலவுகொடுக்க, *inf.* To give out stores for consumption. 2. To bear, or pay expenses. 3. [*loc.*] To give leave, விடைதர.

செலவாக—செலவாய்ப்போக, *inf.* To be spent, exhausted, &c.—as செலவழிய, 1.

செலவுபெற, *inf.* [*loc.*] To take leave.

செலவுவாங்க, *inf.* To buy curry stuffs, &c., for consumption. 2. [*loc.*] To take leave, to get leave, விடைபெற.

செலவாளி — செலவுக்காரன், *s.* An extravagant man, மிதமிஞ்சிச்செலவுபண்ணுகிறவன்.

செலவிட — செலவுபண்ண, *inf.* To expend. 2. To sell off, dispose of, give out—as செலவழிக்க. 3. To give out stores, money, &c., for expenditure.

செலவுசிற்றுரும்பம், *s.* Provisions, &c., as செலவு, 3. (*c.*)

செலவுசொல்ல, *inf.* To account for sum received by enumerating the expenses. 2. To give directions for the expenditure of a sum.

செலவுநடக்க, *inf.* To be expended, be incurred, as expenditure. (*Rare.*)

செலவைவொடுக்க, *inf.* To curtail expenses. See ஒடுக்கு, *v.*

செலவெடுக்க, *inf.* [*prov.*] To take out provisions, &c., for one day or for some days from a store.

செலவோட, *inf.* [*loc.*] To run deep, as an ulcer. Compare கிலேபோடல்.

கைச்செலவு. Expense from one's own pocket.

சாச்செலவு. Funeral expenses.

வீட்டுச்செலவு. House expenses.

பணச்செலவு. Expense of money.

கலியாணச்செலவு. Wedding expenses.

தருமச்செலவு. Expenditure for charitable purposes.

வழிச்செலவு. Travelling expenses for provisions. 2. Stores, supplies, or money for a journey.

அன்றன்றைச்செலவு—அன்றாடசெலவு. Daily expenses.

சில்லறைச்செலவு. Sundry expenses.

நாட்செலவு. Daily expenses. 2. (*p.*) Lapse of days, time, &c.

பொருட்செலவு. Expenditure of property.

வீண்செலவு. Useless expense.

வரவுசெலவு. Income and expenditure, receipts and disbursements. 2. Debt and credit, in accounts.

இதெல்லாம்அவனுக்கொருவரவுசெலவா. Does he care about the receipts and expenditures?

சொற்செலவு. The expense of a word, speaking for one, &c., ஒருவருக்காகப்பேசுதல்.

**செலவு**, *s.* [*prov.*] A hole or small cavity resorted to by rats, crabs, &c., எலிவளைமுதலியன; [*ex* செல், *v.*] (*c.*)

செலவுபோக, *inf.* To be circuitous—as some holes commonly that of the field rats.

**செலாவணி**, *s.* (*Hind.*) That which is current, செல்லுமணி. Compare கிலாமணி. (*Colloq.*)

**செலியம்**, *s.* A grass with a fragrant root, இலாமிச்சை. (*M. Dic.*)

**செளு**, *s.* [*prov.*] The small fins of a fish, மீன்சிறை. 2. *adj.* Thin, poor, puny, stinted, மெலிந்த. See செளுந்தி.

செளுநாய், *s.* A poor dog.

**செளு**, *s.* The நறுவிலி tree, Cordia angustifolia. (*Roxb.*)

**செலுத்து**, கிறேன், செலுத்தினேன், வேன், செலுத்த, *v. a.* To cause to go or to proceed, நடத்த. 2. To discharge as a missile weapon, விட. 3. To drive, to impel, to push forward, to propel, ஓட்ட. 4. To execute, manage, conduct; to forward, carry on, carry into execution—as orders, &c.; to administer—as justice, government, &c., அதிகாரமுதலியசெலுத்த. 5. To perform, effect, observe, pay—as a tribute, debt, &c., கொடுக்க. 6. To fulfil, accomplish a purpose, promise, vow, duty, நிறைவேற்ற. 7. To issue, pass, utter, or circulate coin, &c., பணமுதலியசெலுத்த. 8. To administer—as medicine, food, poison, &c., to cause to take, உட்கொள்ளச்செலுத்த. 9. To despatch, cause a person, or thing to reach the destination, commonly through difficulties, அனுப்ப; [*ex* செல்லு, *v. n.* go, *of which it is the causative.*] (*c.*)

செலுத்திப்போட — செலுத்திவிக்க, *inf.* To pay a promised sum.

செலுத்தவேண்டியவணக்கம், *s.* Due respect, homage, worship.

கோபஞ்செலுத்த, *inf.* To be angry, give vent to anger.

காரியஞ்செலுத்த, *inf.* To transact the business.

சாதனப்படிசெலுத்த, *inf.* To execute a testament or will.

உட்செலுத்த—உள்ளேசெலுத்த, *inf.* To administer medicine, poison, &c., by force, guile, &c. 2. To insert, inject, thrust in. 3. (*fig.*) To give a bribe secretly, லஞ்சங்கொடுக்க.

மனஞ்செலுத்த, *inf.* To direct the mind to an object.

கவனஞ்செலுத்த, *inf.* To pay attention. See கவனம்.

**செளுந்தி—செளுந்தில்**, *s.* [*prov.*] A thin, poor, weakly person or animal; also sometimes spoken of trees when small and stinted, மெலிந்தது.

செளுந்தியான், *s.* A very weak person.

**செளுப்பு**, *s.* [*prov.*] A little piece, a bit of areca-nut, &c., சீவல்; [*ex* செளு.]

**செல்—செல்லு**, *s.* White ants, கறையான். [*loc.*] 2. (*Tel.* చెల్లు.) Endorsement of a bill, &c., by the receiver of the cash, கைபெழுத்து. 3. (*p.*) Thunder-bolt, இடி. 4. Cloud, மேகம். (சது.)

இசெல், *s.* See இசல்.

செல்லடிக்க – செல்லரிக்க – செல்லேற, *inf.* To be eaten by white ants.

திருவாளி, s. [prop.] A rogue, a knave, வஞ்சகன். 2. A trickish person, a rogue, புரட்டன். (c)

திருவாளித்தனம், s. Roguishness, roguery.

•திரேக்காணம், s. [in astrol.] A division of the rising sign into three parts, in forming a horoscope, உதயராசியை மூன்றுகூறாய்ப்பகுத்தல். W. p. 430. DREK'KAN'A.

திரேக்காணுதிபன், s. The ruling planet or regent of the திரேக்காணம்.

•திரேகம், s. [improp. for தேகம்.] Body, சரீரம். (c.)

திரேசந்தி, s. The திராய் plant, Pharnaceum, L.

•திரேதம் — திரேதாயுகம், s. The second or silver age, or Yuga, of the Hindus, consisting of 1,296,000 years, த்ரியுகம். W. p. 392. TRETA, TRETAYUGA.

•திரேதாக்கினி, s. The three-fold class of sacred or brahmanical fire, முத்தீ. See W. p. 392. TRETA.

திரை, s. Wrinkle in the skin by age, உடற்றிரை. 2. A rope or twist of straw, வைக்கோற்புரி. (c.) 3. A roll of cotton prepared for spinning, கொட்டைப்பஞ்சு. 4. Wave, billow, surge, breaker, ripple, அலை. 5. Sea, கடல். 6. River, brook, ஆறு; [ex திரை, v.]

திரைகடலோடியுந்திரவியந்தேடு. Obtain riches even by going on the tossing sea.

நரைதிரையில்லை, நமனும் அங்கில்லை. There is no wrinkle nor gray hair, no death—said of some ascetics called சித்தர், who are supposed to have found the elixir of immortality.

திரையடிக்க, inf. To beat as waves on the shore.

திரையன், s. A ruler or chief in a maritime district, நெய்தனிலத்தலைவன். 2. A chief of a district near Trichinopoly, தொண்டைமான்.

திரைபெறிய—திரைவீச, inf. To toss up waves, as the sea. (p.)

திரைவிழ, inf. To become wrinkled by age.

•திரை, s. Curtain, திரைச்சீலை; [ex Sa. Tiras, concealing.]

திரைகட்ட — திரைபோட, inf. To put up or hang up a curtain.

திரைச்சீலை, s. A curtain.

திரை, கிறது, ந்தது, யும், ய, v. n. To wrinkle by age, திரங்க. 2. To roll as waves, to ripple, to heave up as the sea, அலைய. 3. To curdle as milk, உறைய. 4. To wrinkle up as a cloth or flag by the wind, சுருங்க. 5. To be drifted by the wind on water into heaps, as weeds, &c., திரள. 6. To become smooth, as an earthen vessel turned by a potter. (c.)

நரைத்துத்திரைத்தவன். One who is gray and wrinkled.

திரைந்தபால், s. Turned milk.

திரையல், v. noun. Wrinkling, சுருங்கல்.

திரைவு, v. noun. Wrinkling by age. 2. Rolling—as waves, &c.; used in all the meanings of the verb.

திரை, க்கிறது, த்தது, க்கும், க்க, v. a. sometimes n. To shrivel up a cloth, flag, &c., as the wind, to gather up moss, scum, &c., on the water, as the wind or current, ஒதுக்க. 2. To gather up the folds of a garment in the hand, கொய்துகொள்ள. 3. To gather up the mouth of a sack, &c., சுருக்க. (c.)

நீர்திரைக்கிறது. The water ripples.

திரைத்தசவிகை. A wrinkled jacket. (p.)

திரைப்பு, v. noun. Rolling, wrinkling, &c., used in all the meanings of the verb.

திரையல், s. Betel-leaf, or plant, வெற்றிலை. 2. See திரை, v. n.

•திராராசிகம், s. Rule of three, முத்தொகைவினை W. p. 392. TRAIRASIKA.

•திரோதம்—திரோதயம், s. Obscuration or darkening of the understanding, &c., as திரோதானம்.

திரோதசத்தி — திரோதாயி — திரோதாயிசத்தி —திரோதானசத்தி, s. The female energy of the deity, which is operative in veiling the understanding, and leading the soul to the performance of various actions; and thus enabling it to work itself clear from moral evil, and effect its salvation.

•திரோதாயி, s. See திரோதசத்தி.

•திரோதானம், s. W. p. 377. TIRODHANA. Cover, covering, veil, any thing that hides from sight, மறைப்பு. 2. Disappearance, removal from sight, அதரிசனம். 3. Hiding spiritual things from view, &c., as one of the divine operations embracing five particulars; 1. Obscuring the internal vacuum or spiritual faculty. 2. Causing the illusions of the world to appear as realities, and the deity, and spiritual things as illusions. 3. Inducing the belief that the mental and bodily faculties are the agents in the actions performed, instead of the soul, or the deity operating through the soul. 4. Depriving the soul of spiritual comprehension, reflection, &c. 5. Inducing desires after the pleasures of sense.

திரோதானசத்தி, s. See திரோதசத்தி.

•திரோபவம்—திரோபாவம், s. The darkening of the soul, as one of the operations of the deity. See பஞ்சகிருத்தியம், under கிருத்தியம்.

திரோபவி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To cover, darken, conceal, obscure, மறைக்க. 2. To darken the understanding, hide spiritual things from view. See திரோதானம்.

•திர்ப்தி, s. See திருத்தி.

•திலகம், s. Vermilion, or red paint, for marking the forehead, சிந்தூரம். 2. A mark or spot on the forehead, by the Saivas, பொட்டு. 3. An ornament for the forehead, நெற்றிச்சுட்டி. (c.) 4. A tree, as திலம். 5. (fig.) Excellence, eminence, மேன்மை. W. p. 377. TILAKA. 6. (சஇ.) The கலித்துறை verse.

திலகப்பொட்டு, s. A spot of sandal and vermilion on the forehead.

வீரர்திலகம், s. A distinguished hero.

•திலதம், s. (a change of திலகம்.) The sectarian spot on the forehead, பொட்டு. 2. An ornament for the forehead, நெற்றித்திலகம். 3. Another forehead-jewel, சுட்டி. (c.)

தொட்டுத்திலதம்போட்டுக்கொண்டார்கள். They greatly admired it, and every one got a little.

திலதமிட—திலதம்போட, inf. To put a spot on the forehead.

•திலம், s. Rape seed, or the plant, Sesamum, எள். W. p. 377. TILA. 2. A tree, மஞ்சாடிமரம், Adanantheira, L.

திலதர்ப்பணம், s. An annual ceremony, as திலோதகம்.

திலமளவு, s. The amount of a rape seed.

திலாட்சாரம்—திலட்சாரம், s. The salt extracted from rape seed, எள்ளின்வெடிக்குமலவணம்.

திலோதகம், s. Libations of water poured on rape seed. See under உதகம்.

•திலவகம், s. The bark of the Feronia, விளாம்பட்டை. (R.)

திலாசா, s. (Pers.) Encouragement, தைரியப்படுத்தல்.

தில், s. [prov.] (in cant numbers.) Three, மூன்றின்குழூக்குறி.

தில்புலு, s. Thirty, முப்பது.

•திலோத்தமை, s. One of the courtezans of Swerga.

தில். A particle found in ancient poetry expressing. 1. Desire, as பெறுகதில், to obtain. 2. Time, as பெற்றாங்கறிகதில்லம்மவிவ்வூரே, when (you) reach the country, enjoy it. 3. Implied ellipsis, ஒழிஇசை, as வருகதில்லம்ம வெம்சேரிசேர, let us go to our village, and then—we will see. 4. An expletive, அசைச்சொல்.

தில்லம், s. Jungle, forest, காடு.

தில்லானா, s. Syllables used in humming tunes, தாளக்குறிப்பு. 2. A song of two stanzas, in the interlude of which, these syllables occur, ஓர்சந்தக்குறிப்பு.

தில்லி, s. Delhi. See டில்லி.

தில்லுமுல்லு, s. [prov. தில்லுப்பில்லு.] Lies and nonsense, மாறுபாடு. (Colloq.)

தில்லுமுல்லுத்திரியாவரமும். Lies, tricks, &c.

தில்லுமுல்லுக்காரன், s. A deceptive fellow, a liar.

தில்லை, s. A tree, the milky juice of which from the bark, affords a gum, தில்லைமரம், Excœcaria Agallocha, L. 2. The town of சிதம்பரம். 3. A grove of தில்லை, formerly growing there.

தில்லைக்கோவிந்தர்— தில்லைக்கோவிந்தராயர், s. Vishnu at Chillumbrum.

தில்லைத்திருச்சித்திரகூடம், s. A fane of Vishnu at Chillumbrum.

தில்லைநாயகம், s. [prov.] A kind of rice, ஓர்நெல். (c.)

தில்லைநாயகன், s. Siva as worshipped at சிதம்பரம், சிவன்.

தில்லைமூவாயிரவர், s. (pl.) The three thousand brahmans formerly at சிதம்பரம், all of the same tribe.

தில்லையம்பலம், s. The chief of the five sacred halls in the temple at Chillumbrum, also the temple itself, சிற்றம்பலம்.

தில்லையம்பலவாணன், s. Siva, சிவன்.

தில்லெண்ணெய், s. (sometimes தில்லவெண்ணெய்.) The black oil or tar of the தில்லை.

தில்லைவனம், s. The town of சிதம்பரம்.

•திவசம், s. Day, நாள். W. p. 409. Divasa. 2. (c.) The anniversary of a relative's death, when alms are given to the brahmans for the benefit of the deceased. See சிராத்தம்.

திவசாவசானம், s. (St.) Afternoon, close of the day, பகலின்முடிவு.

திவடல், v. noun. As திவளல். (R.)

•திவம், s. Appearance, visibility, manifestation of a deity, &c., தோற்றம். 2. Day, day-time, பகல். (Sa. Diva.)

திவரம், s. Country, as distinguished from town, காடு. (சது.)

திவலை, s. A small drop, watery particle or globule, சிதறுந்துளி. 2. Rain-drop, மழைத்துளி. 3. Rain, மழை.

திவவு, s. Frets of a guitar, or places where the wires are struck with the fingers, வீணைவலிக்கட்டு. 2. Steps made for ascending a mountain, படிக்கட்டு.

திவள், கிறேன், திவண்டேன், வேன், திவள, v. n. To slacken, relax, stagger, bend as unable to support a weight, துவள. (p.)

திவளல், v. noun. Staggering, bending, &c.

திவறு, கிறேன், திவறினேன், வேன், திவற, v. n. To die, சாவ. (சது.)

•திவா, s. Day-time, as distinguished from night—as திவம், பகல்.

திவாகரம், s. An ancient poetic lexicon, still in use, நூல்.

திவாகரன், s. The author of this book, திவாகரஞ்செய்தவன். 2. The sun, being of the day, சூரியன்.

திவாகீர்த்தி, s. A barber, அம்பட்டன். 2. One of an impure caste, சண்டாளன்.

திவாந்தம், s. An owl, that which is blind by day, கூகை.

திவாமானம், s. Day-time, length of the day from sunrise to sunset.

திவார்த்தம், s. Half of the day-time, பகலிற்பாதி. 2. Noon or mid-day, மத்தியானம்.

திவாராத்திரம்—திவாராத்திரி, s. Day and night, இரவும்பகலும்.

திவேச்சுரன், s. One of the twelve suns, so called, துவாதசாதித்தரிலொருவன்.

•திவோதாசன்—திவோதாதன், s. A king of Benares, and founder of the Indian school of medicine, சரியரசன்; [ex Sa. Diva, heaven.]

திவானி, s. (Arab.) A place of justice, நியாயஸ்தலம்.

திவான்ஜி, s. (Pers.) A minister of state, மந்திரி.

•திவ்வியம், s. Divinity, any thing celestial or god-like, தெய்வீகம். 2. Pre-eminence, super-excellence, மேன்மை. W. p. 409. Divya.

திவ்வியகவி, s. A poet divinely inspired, தெய்வப்புலவன்.

திவ்வியக்கியானம், s. Divine knowledge.

திவ்வியசட்சு, s. As திவ்வியதிருஷ்டி, 1. 2. The office of a seer.

திவ்வியதிருஷ்டி, s. The gracious look of a deity or guru, by which sin is dispelled, and grace conferred. 2. Supernatural vision, spiritual sight, as enjoyed at pleasure by the exalted devotee. 3. A prophet.

திவ்வியதேகம், s. A divine body.

திவ்வியதேசம், s. A place esteemed sacred by Vaishnuvas.

திவ்வியபஞ்சாமிர்தம், s. (St.) Five delicacies with which the idols are anointed. See பஞ்சாமிர்தம்.

திவ்வியபுதுமை, s. A miracle, அற்புதம்.

திவ்வியபூமி, s. Holy land, central India, where religious rites are specially meritorious. 2. Places of pilgrimage. See புண்ணியபூமி.

திவ்வியபோதனை, s. Divine teaching.

திவ்வியவாக்கு, s. A declaration, or oracle of a deity, or saint.

திவ்வியவாசனை—திவ்வியமணம், s. Sweet odors.

திவ்வியரசம், s. Quicksilver. (R.)

திவ்வியரதம், s. A celestial car.

திவ்வியரத்தினம், s. An excellent, precious jewel, a fabulous gem.

திவ்வியவருஷம், s. A year of the gods, supposed to be equal to three-hundred and sixty-five years of men.

திவ்வியாதிவ்வியம், s. Partaking of both natures human and divine.

திவ்வியாத்திரம் — திவ்வியாஸ்திரம், s. Weapon received from the gods.

திவ்வியாபரணம், s. Superior ornaments. 2. Ornaments worn by a sacred or royal personage.

திவ்வியோதகம், s. Sacred waters; rain; [ex உதகம்.]

திளை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To be thick, close, crowded, செறிய. 2. To be full, to abound—as water in a river, பூரிக்க. 3. To have sensual enjoyment, to copulate, போகிக்க. 4. To increase, பெருக. (சது.)

திற, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To grow well, to thrive, to become strong, stout, robust, திரப்பட. 2. To become opulent, to be in good circumstances, விருத்தியுண்டாக; [ex திறம்.]

திறத்தகை, s. [prov.] A strong hand. 2. (fig.) A strong person. (c.)

திறத்தவன், appel. n. (also திறத்தினன்.) A stout, hardy person. 2. An opulent or thriving person.

திறத்தவேலை, s. Strong work. 2. Elegant or good work.

திற, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, v. a. To open, to make an opening, an avenue or passage, &c., வழியுண்டாக்க. 2. To unclose, lay open, to disclose, reveal, வெளிப்படுத்த. 3. To unlock, unbar, unbolt, தாழ்திறக்க. 4. To open, as the eyes, a book, a letter, விரிக்க. 5. To open the mouth in speaking or singing; to emit a loud sound, அங்காக்க. 6. To broach, to tap, துளைக்க. 7. (Beschi.) To form a precedent—as இதற்கு வழிதிறவாதே, of this do not set an example. 8. v. n. (கிறது, ந்தது, க்கும், க்க.) To form as a gap, chasm, passage, breach, பிளவுபட. 9. To become distended, விரிய. 10. To become loud, as the voice, ஒலிமுழக்க. (c.)

காரியத்தைத்திறந்துகாட்டினான். He has divulged the affair.

திறந்தமனம், s. A candid mind.

திறந்தறை, s. [prop. திறந்தஅறை.] An open desolate house or barren country, காவலில்லாஇடம். 2. [vul.] A divulger of secrets, அந்தரங்கத்தைவெளிவிடுவோன்.

திறந்தவாய், s. Gaping, open mouthed, as an idler. 2. Broaching secrets, disclosure of private matters. 3. Gap, aperture—as of a wound, or abscess.

திறந்துகாட்ட, inf. To lay open, to present or expose fully. 2. To explain, to illustrate. 3. To expose one's person.

திறந்துசொல்ல, inf. (sometimes வெளிவிட்டுச்சொல்ல.) To disclose, to reveal, to divulge.

திறந்தவெளி, s. An open place, a plain.

திறந்துவிட, inf. To open, to disclose, to show defects.

திறபட—திறவுண்டுபோக, inf. [prov.] To be opened. 2. To be disclosed, revealed, வெளியாக.

கண்டந்திறக்க, inf. To become open, as the throat of a person just before death. 2. To become clear or shrill, as the voice. 3. To glut, to eat to excess. (Said in contempt.)

கண்திறக்க, inf. To open the eyes. 2. To open the eyes of an idol, giving it the appearance of sight. 3. To cut open the three eyes of the cocoa-nut.

மனந்திறந்துசொல்ல, inf. To unbosom one's self, tell one's mind freely.

வாய்திறக்க, inf. To lower one's self by asking favors of a mean person.

திறவு—திறப்பு, v. noun. An opening, aperture. 2. Way, means, வழி.

திறவறிய, inf. To know how to reveal secret things. 2. (R.) To be experienced, அநுபவப்பட.

திறவுகோல், s. [prov. திறப்பு.] A key, சாவி.

திறக்கு, s. [prov. vul.] One's concerns, affairs, side, காரியம்.

அவன்திறக்கிலேபோகப்படாது. It is not proper to meddle with him.

திறத்தி, s. [prov.] A midwife, மருத்துவப்பெண்; [ex திறம்.]

திறப்பணம், s. [prop. துரப்பணம்.] A kind of gimblet, a drill, an auger, தமருசி.

திறப்பு, s. See திறவுகோல்.

திறமை, s. Goodness, excellence, richness, மேன்மை. 2. Ability, cleverness, competence, சமர்த்து. 3. Strength, vigor, power, வலிமை. 4. Good circumstances, wealth, ஐசுவரியம். 5. Bravery, courage, manliness, தைரியம். (c.)

திறமைகாட்ட, inf. As திறங்காட்ட.

திறம், s. (a change of திரம்.) A kind, class, sort, division, வகை. 2. Quality, state, nature, தன்மை. 3. Party, side in a law-suit or combat, பக்கம். 4. Strength, vigor, power, force, வலிமை. 5. Robustness, hardiness, compactness, soundness, உறுதி. 6. Ability, competence, cleverness, dexterity, சாமர்த்தியம். 7. Goodness, excellence, eminence, richness, superfineness, மேன்மை. 8. Opulence, wealth, good circumstances, ஐசுவரியம். (c.) 9. Largeness of wages, dowry, &c., அதிகம். 10. A kind of guitar with less than seven strings, குறைநரம்புள்ளவீணை. 11. Cause, as distinguished from effect, காரணம். 12. [prov.] Midwifery, மருத்துவம்.

இதற்கதுதிறம். This is preferable to that.
பலதிறமுஞ்சொன்னார்கள். They advised him many times.
எத்திறத்து. In what respect? (நீதிநெறி.)

திறங்காட்ட, *inf.* To display ability, powers, &c.

திறங்கெட்டவன், *appel. n.* A stupid, lazy fellow, an incompetent man.

திறத்தார், *s.* Party, as opposed to or distinguished from another party, பகுதியார்.
இருதிறத்தாரும். Both parties.

திறப்பட, *inf.* To improve, as soil, health, strength, &c., சீப்பட.

திறப்படுத்த, *inf.* [*prov. v. noun.* திறப்பாடு.] To improve soil, circumstances, &c.; to strengthen, &c., to enrich.

திறப்பிக்க, *inf.* [*prov. com.* ஸ்திரப்பிக்க.] To make firm, solid, to harden, consolidate, உறுதிப்படுத்த.

திறமானசம்பளம், *s.* Good wages.

திறவாளி—திறவான், *s.* An able man, a knowing man.

சரீரத்திறம், *s.* Constitution or state of body to be known by a doctor in prescribing medicine, &c., சரீரக்கூறு. 2. Bodily vigor, தேகபலம்.

கல்வித்திறம், *s.* Great learning.

திறனில்யாழ், *s.* A lute or fiddle used in maritime districts, நெய்தல்யாழ்த்திறம்.

**திறம்பு**, கிறேன், திறம்பினேன், வேன், திறம்ப, *v. n.* To fail, to vary, to swerve, to deviate, தவற. 2. To be changed, to come into different circumstances, மாறுபட. (*p.*)
திறம்பாவொழுக்கம். An undeviating course of good conduct.

**திறல்**, *s.* Strength, vigor, வலி. 2. Fighting, warfare, battle, போர். 3. Hostility, பகை. (சது.) 4. Bravery, courage, valor, தைரியம். (*p.*)
திறலோன், *s.* A stout, valiant man.

**திறன்**, *s.* (*poetical use for* திறம்.) Cause, good disposition, a part, &c.

**திறாங்கு**, *s.* [*prov.*] A bolt, கதவடைதாழ். See திராங்கு.

•**திறாணி**, *s.* Ability. See திராணி.

•**திறி**, *s.* Three. See திரி. (*R.*)

**திறுதிட்டம்—திறுதட்டம்**, *s.* [*prov. for* கிறுதிட்டம்.] Straightness, a perpendicular position, erectness as of a person through fear, surprize, &c., நேர்நிற்கை.

**திறுதிறுக்க—திறுதிறெனு**, *inf.* [*used adverbially.*] To stare, to look wild as one in fear, &c., அருண்டுவிழிக்க. (*c.*)

**திறை**, *s.* Tribute, as paid by inferior states, அரசிறை. (*c.*) For the compounds, see இறை.

**திற்றி**, *s.* [*prov.*] Eatables, a relish with food, தின்னற்குரியன; [*ex* தின்.]

•**தினம்**, *s.* Day of twenty-four hours, நாள். W. p. 408. DINA. 2. Day-time, from sun to sun, பகல். 3. A great day, a holiday, திருநாள். 4. *adv.* Daily, as தினந்தோறும். (*c.*)

தினகரன், *s.* The sun, as திவாகரன், ஆதித்தன்; [*ex* கரன், maker.]

தினகவி, *s.* A poem in praise of a king, on his rising up and sitting down. 2. The poet who composed it, தீப்புலவன்.

தினகாலம். Always, எப்போதும்.

தினக்காய்ச்சல், *s.* Quotidian fever.

தினசாரிக்காரன், *s.* One who always rides, &c. See சாரி.

தினசேரி. [*prov.*] Daily, நித்தம். (*c.*)

தினசேஷம், *s.* [*in astron.*] The difference between the வருடசேஷம் and the next less number of days in பரிவிருத்தி.

தினச்சரி, *s.* Occupations of a complete day, முழுநாள்வேலை. (*R.*)

தினச்சரிதை, *s.* The history of one's life.

தினத்திரயம், *s.* Occurrence of three lunar asterisms in one day.

தினந்தினம். Day after day.

தினந்தோறும் — தினமும், *adv.* (*sometimes* தினமானம்.) Every day, daily.

தினபலன், *s.* Daily fortune, daily results of astrological configurations at the birth as written in some nativities.

தினப்படி, *s.* Daily allowance.

தினப்பாடு, *adv.* Every day.

தினப்பிரளயம், *s.* The flood recurring at the close of each day of Brahma.

தினமணி, *s.* (*St.*) The sun, as the pearl of the day.

தினமயக்கம், *s.* Every day's illusion. (சிவவாக்.)

தினம்பார்க்க, *inf.* To distinguish lucky from unlucky days.

தினவர்த்தமானம், *s.* Daily news.
இன்றையதினம். To-day; நாளையதினம், to-morrow; நேற்றையதினம், yesterday; சுதினம், a good day—*in salutation*; துர்த்தினம், an unlucky day.

தினுதினம், *s.* Various days. 2. A great or special day, (*plural for sing. by way of eminence.*)

தினாந்தம், *s.* Evening, sunset, close of the day; [*ex* அந்தம், end.]

தினாந்தரம், *adv.* Daily. 2. *s.* Intervening day or days, இடையாந்தரம்.

தினாம்சம், *s.* Part of a day; [*ex* அமிசம்.]

தினாரம்பம், *s.* Beginning of a day, morning; [*ex* ஆரம்பம்.]

தினார்த்தம், *s.* [*in astron.*] Half of the day-time, of the time from sun to sun.

தினாவசானம், *s.* (*St.*) End of a day, evening, as திவசாவசானம்.

**தினவு**, *v. noun.* Itching, prurience, சொறி; [*ex* தின்.] (*c.*)
தினவுதின்ன — தினவெடுக்க, *inf.* To itch.

**தினிசு—தினிசுவாரி**, *s.* (*a change of* ஜினிசு.) Kind, sort, வகை. (*c.*)
தினிசுவாரியாக்கவை. Put the things with their kind.
தினிசுவாரிச்சரக்குகள், *s.* Different kinds of goods.

**தினை**, *s.* Millet, a kind of grain, ஓர்தானியம், Panicum italicum, *L.* 2. (*fig.*) Smallness, a trifle, சிறுமை.—There are different kinds of millet, வெள்ளைத்தினை, white; அச்சித்தினை, another small kind (probably from Acheen); காட்டுத்தினை, wild; செந்தினை, red; கருந்தினை, dark; அணில்வாற்றினை, a kind of white millet with ears supposed to resemble the tail of the squirrel.

தினைவிதைத்தவர்தினையறுப்பார்வினைவிதைத்தவர்வினையறுப்பார். They that sow millet shall reap millet; they that do evil, will get evil.

தினைக்கஞ்சி, *s.* Millet gruel, for sick persons.

தினைக்குருவி, *s.* A small kind of bird, ஓர்சிறுகுருவி.

தினைச்சாமை, *s.* [*prov.*] The தினை grain, as a species of சாமை.

தினைத்தாள், *s.* Millet stalks or straw.

தினைப்புனம்—தினைப்புலம், *s.* A millet field.

தினைமா, *s.* Millet-flour.

தினையரிசி, *s.* Husked millet.

தினையளவு, *s.* As much as a grain of millet; i. e. a small matter.
தினையளவுமுதவான். He will not help in the least.

**தின்**, கிறேன், றேன், பேன், ன, *v. a.* To eat, to feed, to take a meal, உண்ண. 2. [*in poetry.*] To eat light food, pastries and relishes, &c., சிற்றுண்டிபுசிக்க. 3. To chew, to masticate, மெல்ல. 4. To devour—said of an animal, பட்சிக்க. 5. To eat away, consume, corrode—as white ants, iron-mould, rust, &c., அரிக்க. (*c.*)
தின்றதெல்லாஞ்சமிர்த்துப்போயிற்று. What he has eaten is digested; i. e. he has forgotten the benefits I have done him.
தின்றுகொழுத்துப்போனான். By eating (of my food) he is become fat and saucy. (*In abuse.*)
செல்லுதின்றுவிடும். The white ants will eat away.
தின்னுவீட்டில்தின்னி. One who eats with low families. [*prov.*]
மண்தின்றுவிடும். The earth will corrode it.
இதுஅதைஅந்தஎருதைத்தின்றுவிடும். This ox will surpass that.
நேற்றுத்தின்றதின் அல்லவோ. Is not this (work, &c.) for what I ate yesterday; i. e. I want food to day.
புல்லைத்தின்னும்மாடுஉதவுகிறதுபோலப்புலியைத்தின்னுஞ்செந்நாயுதவுமோ. Will a wild dog which kills the tiger be as useful as an ox that eats grass; i. e. will any one who lives luxuriously labor like one who takes plain food?
யானைதின்றவிளாங்கனிபோலே. Like the wood-apple which the elephant had eaten (swallowed); i. e. hollow, the substance being absorbed through the unbroken shell.

தின்பண்டம், *s.* (*com.* தீன்பண்டம்.) Eatables, including pastry and fruits.

தின்பண்டநல்கல், *v. noun.* One of the thirty-two acts of charity. See அறம்.

தின்றல்—தின்னல்—தின்னுதல், *v. noun.* An eating.

தின்றி, *s.* Eatables, தீன்.

தின்றிப்போத்து, *s.* (*Tel.* తిండిపోతు.) A glutton; (*lit.*) a well-fed bull.

தின்றுகழிக்க, *inf.* To loathe food from satiety.

தின்னாச்சாதி, *s.* Low castes, with whom it is disgraceful to eat. See சாதி.

**தின்மை**, *s.* [*prop.* தீமை.] An evil, a misfortune—oppos. to நன்மை.

**தின்னி**, *appel. n.* [*in combin.*] An eater, தின்கிறவன்—as பலவீடுதின்னி, one who disgraces himself by getting his food from others; தாய்தகப்பனைத்தின்னி, an orphan—*spoken in pity*; வீண்சோறுதின்னி, one who eats the bread of idleness, &c.



தீ. A letter compounded of த் and ஈ.

தீ, s. Fire, நெருப்பு. 2. Elementary principle of fire and heat, caloric, பஞ்சபூதத்தொன்று. 3. Hell, நரகம். (சது.) 4. As தீக்குணம்.—*Note.* A three-fold class of elementary fire is given in சதுரகராதி. 1. உயிர்த்தீ, principle of fire in the sentient soul, and animal body, being a source of warmth and energy in the system. 2. உதரத்தீ, caloric or principle of fire in the stomach, assisting digestion, causing appetite and hunger. It is seated in the peritoneum. 3. சினத்திலெழுந்தீ, fiery principle developing itself in anger. Instead of the first, other authorities give காமத்தீ, the heat or fire of venereal appetite.—*Note* 2. A three-fold class of sacred fire, வேதாக்கினி, is also given. 1. காருகபத்தியம், the sacrificial fire of the Brahmanical householder, received from his ancestors, and kept alive. 2. தட்சிணாக்கினியம், a fire kindled from the standing fire on the southern side of the house, &c. 3. ஆகவனீயம், consecrated fire, taken from the standing fire, for sacrificial purposes.

தீக்கஞ்சி, s. A kind of camphor. See தீபக்கொடிச்சி.

தீக்கடன், s. (*sometimes* தீக்கருமம்.) The duties of the son or heir to one deceased, such as cremation and other funeral rites performed with fire.

தீக்கடைகோல், s. Sticks for producing fire by friction. See கடைகோல்.

தீக்கதிக்கும்பச்சை, s. A precious stone, as காகப்பச்சை.

தீக்கதிர், s. A smith's poker, உலையாணிக்கோல். (*R.*)

தீக்கரண்டி, s. A little cup or bowl for taking up fire, தீயெடுக்குங்கருவி.

தீக்கல், s. Flint, தீத்தட்டிக்கல்.

தீக்காய, inf. (*com.* குளிர்காய.) To warm one's self at the fire.

தீக்குடுக்கை, s. See குடுக்கை.

தீக்குதிக்க, inf. To leap into a pit of fire for self-destruction, as தீக்குளிக்க.

தீக்குருவி, s. The Ostrich. See தழல்விழுங்கி.

தீக்குவெறுங்குலை, s. Soap, சவுக்காரம். (*R.*)

தீக்குழி, s. A pit with coals of fire on which persons walk.

தீக்குழிபாய, inf. As தீக்குளிக்க. 2. To pass through burning coals, as a ceremony.

தீக்குளிக்க, inf. To plunge into fire, for self-destruction. See குளி, v.

தீக்கூர்மை, s. Rock-salt, இந்துப்பு. 2. Salt extracted from sesamum, as திலசாரம். (*R.*)

தீக்கையோன், s. Siva, as holding fire in his hand. 2. See தீக்கை.

தீக்கொளுத்த, inf. To kindle a fire &c., to set fire to any thing.

தீச்சட்டி, s. A vessel of coals, for warming one's self, or heating any thing; a chafing dish, கும்பிச்சட்டி. 2. A vessel for fire carried on one's head in performance of a vow.

தீத்தட்டிக்கல், s. [*prov.*] (*sometimes* தீத்தட்டி.) A flint.

தீத்தாங்கி, appel. n. A fire-fender, தீமறைக்கும்பலகை.

தீத்திரள், s. The deluge of fire, வடவாமுகாக்கினி.

தீத்தீண்டல், v. noun. s. A marriage ceremony, ஒருசடங்கு.

தீத்தெய்வம், s. The god of fire.

தீநா, s. [*in seamen's language.*] A lighted torch held up in a vessel, or on shore, as a signal, அடையாளப்பந்தம்.

தீப்பறக்க, inf. To flash as fire, to be red hot. (*c.*)

தீப்பற்ற, inf. To kindle, as fire.

தீப்பொறி, s. A spark of fire.

தீப்போட, inf. To set fire to any thing.

தீமுறுகல், s. A kind of prepared arsenic, ஒருபாஷாணம்.

தீயிறைக்க, inf. To belch fire. 2. To persecute with wrath.

தீயெச்சம், s. See எச்சம்.

தீவட்டி—தீவத்தி, s. [*prop.* தீவர்த்தி.] A torch, a flambeau. (*c.*)

தீவட்டிக்காரன், s. Torch-bearer.

தீவட்டிக்கொள்ளை, s. Plundering one's house, as robbers with torches.

தீவட்டிபிடிக்க, inf. To carry a torch.

தீவலஞ்செய்தல், v. noun. Worshipping fire, as in the marriage ceremonies, by passing around it to the right, அக்கினிப்பிரதட்சணஞ்செய்தல்.

தீவளர்க்க, inf. To kindle or augment a fire, more especially the sacred fire as one of the duties of the Brahmanical house-holder, or a fire for a widow to plunge into.

தீவளர்ப்போர், appel. n. Brahmans.

தீவறை, s. [*prov.*] A hole dug in the ground for a fire, குழியடுப்பு.

தீவிழ, inf. To be consumed by fire, as from heaven; *used in cursing, or lively description.*

தீவிளங்கும்வயிரம், s. Ambergris, மீனம்பர். (*R.*)

தீவேட்க, inf. To perform a sacrifice, யாகஞ்செய்ய. 2. To marry a wife, கலியாணஞ்செய்ய; [*ex* வேட்க, to sacrifice, &c.]

தீவேள்வி, s. A wedding, கலியாணம். (*சது.*)

தீக்காலி, s. A hag, a mischievous woman. See தடைகாலி.

தீ, adj. Evil, wicked, sinful.

தீக்குணம், s. Evil disposition or practice; vice, evil, துர்க்குணம். Vices are of three classes, of மனம், வாக்கு, and காயம். 1. மனத்தீக்குணம், sins of the mind, as (*a*) கொலைநினைக்கை, murderous intention; (*b*) காமப்பற்று, libidinous desire; (*c*) ஆசை, avarice, ambition. 2. வாக்கின்தீக்குணம், sins of the mouth—as (*a*) பொய்சொல்லல், lying; (*b*) கோள்சொல்லல், tale-bearing; (*c*) கோபித்துச்சொல்லல், angry speaking; (*d*) பயனில்சொல்லல், trifling or vain discourse. 3. காயத்தீக்குணம், sins of the body—as (*a*) களவாடப்போதல், thievish practices; (*b*) வறிதேதொழில்செயல், idleness; (*c.*) கொலைசெயல், killing, murder.

தீக்குணர், s. (*plu.*) The vile, the wicked. 2. The base, the low. (*p.*)

தீக்குறி—தீச்சகுனம், s. A bad sign, symptom or omen, துர்னிமித்தம்.

தீக்கோள், s. A malignant planet, an evil portent, துர்க்கிரகம். See கோள்.

தீச்சொல்—தீமொழி, s. Slander, evil speaking, பழிச்சொல். (சது.). 2. Inauspicious or evil words; a curse, சபம்.

தீத்தொழில், s. Evil practice, evil deeds. (சாவடி.)

தீயது, appel. n. A bad or evil thing.

தீயர், s. (*Malayalim.*) A low caste or tribe—oppos. to நாயர், high caste.

தீயொழுக்கம், s. Evil conduct, a vicious course of life—oppos. to நல்லொழுக்கம்.

தீயோர்—தீயர், s. (*plu.*) The base, the vulgar, கீழ்மக்கள். 2. Savages, barbarians, மூடர். 3. Hunters, those that live by the chase, வேடர்.

தீவினை, s. Evil deeds, vile conduct, wickedness, பாவம்; [*ex* வினை.]

தீ, adj. (*with an incremental letter.*) Palatable, sweet, delicious, luscious, இனிமையுள்ள. 2. Agreeable, gratifying, pleasant to the ear or mind, உவப்பான. (*p.*)

தீங்கனி—தீங்காய், s. Sweet fruit.

தீஞ்சுவை, s. Delicious taste.

தீஞ்சொல், s. Pleasant expression, harmonious speech.

தீந்தமிழ், s. Polished or elegant Tamil.

தீம்பால், s. Sweet milk.

தீம்புகை, s. Fragrant smoke, odorous incense, வாசனைப்புகை.

•தீ, s. Knowledge, understanding, intellect, அறிவு. W. p. 444. DHEE.

தீ—தீய், கிறது, ந்தது, யும், தீய, v. n. To be slightly scorched, or burnt—as food in cooking, கருக. 2. To be scorched—as growing crops, in time of drought, காய.—*Note.* In combination with குடல், கால், மனம், &c., it is used to express envy, deep grief, pity, fear, &c., according to the connection.

அவன்பட்டபாட்டைக்கேட்டால்குடல்தீய்ந்துபோம். If one hears of his afflictions, his bowels will burn.

தீந்தகறி, *s.* Burnt curry.

தீந்தசோறு, *s.* (*com.* தீஞ்சசோறு.) Burnt rice.

தீந்தமனம், *s.* An envious mind.

தீயச்சுண்ட, *inf.* To seethe or boil away.

தீயல், *v. noun.* (*com.* தீசல்.) That which is burnt in cooking. 2. Thick, dry curry, பொரிக்கறி.

தீயல்வழிக்க, *inf.* To scrape off and eat the burnt food that adheres to the chatty; *an act of meanness or poverty.*

தீயவு—தீவு, *v. noun.* Burning, consumption by fire, தீய்தல்.

தீ—தீய், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To scorch slightly in cooking; to burn or singe, சுட்டுவிக்க. 2. To dry up water, as the sun, or the fire in cooking, சுவறச்செய்ய. 3. To boil fish, &c., and dry away the water, that it may keep, மீன்முதலியவற்றைத்தீய்க்க. 4. To scorch, burn, or singe growing crops, பயிரைத்தீய்க்க 5. To dry up or absorb humors in the body; commonly by external applications, வாட்ட. 6. To scar, to cauterize, சுட. (*c.*)

தீக்கணம், *s.* One of the three kinds of ominous feet for the beginning of a poem. See அட்டகணம், under கணம்.

•தீக்கை, *s.* Initiation by a Guru, &c., See தீட்சை. (*p.*)

தீக்கையோன், *s.* A guru, a spiritual teacher, குரு. 2. A disciple who has received தீட்சை from a guru, தீட்சைபெற்றவன். 3. Siva. See under தீ.

தீங்கு, *s.* Evil, vice, wickedness, crime, பொல்லாங்கு. 2. Misfortune, calamity, adversity, ruin, கேடு. 3. Fault, defect, blemish, தவறு. (*c.*)

தீங்கினர், *s.* (*plu.*) The vicious, the wicked, தீயோர். (*p.*)

தீங்குசெய்ய, *inf.* To injure, hurt, harm.

தீங்குநினைக்க, *inf.* To intend mischief, to design evil against one.

தீங்குநேரிட, *inf.* To come upon or befall one, as misfortune, evil, &c.

தீச்சலம், *s.* Sea-shell eaten by age, the cuttle bone, கடல்நுரை. (*R.*)

•தீட்சணம்—தீக்ஷணம்—தீட்சணியம், *s.* Heat, warmth, வெப்பம். 2. Keenness, sharpness, acuteness, penetration, as of the intellect. கூர்மை. 3. Powerfulness, fierceness, ardor—as of the sun, உக்கிரம். (*c*) W. p. 378. TEEKSHN'A.

தீட்சணபுத்தி, *s.* An acute intellect.

தீட்சணமானவெயில், *s.* A scorching and piercing sun. (*Colloq.*)

•தீட்சதர், *s.* See தீட்சை.

தீட்சி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *a. v.* To give the தீட்சை, as a guru, by communicating the initiatory mantra, தீட்சைகொடுக்க. 2. To impart spiritual illumination to a soul, by look, touch, or teaching—as done by a guru.

தீட்சித்துக்கொள்ள, *inf.* To receive initiation. 2. To perform all the prescribed exercises for initiation.

•தீட்சை—தீக்ஷை—தீக்கை, *s.* Initiation of a disciple into the Saiva religion by a Guru, who with appropriate ceremonies communicates the appointed mantras; also his introduction to any higher stage or degree in the system, குருபதேசம். 2. Special means employed by a Guru for the instruction and mental illumination of a disciple; intended for the removal of his sins, and the ripening of his soul for emancipation, ஞானபோதனை. 3. The imparting of spiritual illumination to a soul ripening for absorption; its accumulated stock of merit and demerit—the results of former actions—together with its original மலம்—the source of these actions—being nearly exhausted by the joys and sufferings experienced in its former transmigrations, பக்குவான்மாவைக்கரைசேர்த்தல். 4. Performance of a course of austerities, விரதவியமம். 5. Performance of vows, சங்கற்பம். W. p. 410. DEEKSHA. —*Note.* There are seven kinds of தீட்சை. 1. சட்சுதீட்சை, நயனதீட்சை, by the eye or by looking on the disciple for the dispersion of his mental darkness and moral evils, and the communication of spiritual light. 2. பரிசதீட்சை, by the touch, or placing the right hand on the disciple's head, and touching five principal parts of his body, thus conferring on him the virtue of the five lettered incantations. 3. வாக்குத்தீட்சை, வாசகதீட்சை, oral instruction, and illumination. 4. மானசதீட்சை, by the mind or intense interest felt for the disciple, leading to the enlightening of his mind, &c. 5. சாத்திரதீட்சை, நூற்றீட்சை, spiritual illumination by means of the shastras. 6. யோகதீட்சை, பாவனாதீட்சை, instruction by example, in character of the silent, motionless ascetic, in the eight postures prescribed. (See யோகம்.) 7. அவுத்திரிதீட்சை, imparting instruction by symbolic figures, made on the ground, &c. This last is two-fold, ஞானவுத்திரி, and கிரியாவுத்திரி.—*Note.* There are two other kinds of தீட்சை: 1. சபீசதீட்சை, instruction that has reference to future rites to make them complete; 2. நிர்ப்பீசதீட்சை, instruction complete in itself.

சிவதீட்சை—சைவதீட்சை, *s.* The three stated introductory rites of the Saiva system. 1. சமயதீட்சை, the initiatory rite of discipleship. 2. விசேஷதீட்சை, special rite confirming the disciple, after which he eats in private, or unseen by those of lower degree, and is eligible to read, and receive instruction in the Agama mysteries. It is administered only to சைவர், who eat no flesh or fish. 3. நிருவாணதீட்சை, the highest rite entitling the disciple to perform *puja*, to sit and eat with his Guru, and to enjoy all the privileges of the system.

தீட்சதர், *s.* (*plu.*) Persons who have received the initiatory, or any succeeding rite of the Saiva religion, தீட்சைபெற்றோர். 2. The brahmans of சிதம்பரம், formerly said to have been three-thousand, தில்லைமூவாயிரவர்.

தீட்சதன், *s.* A disciple who has received the தீட்சை.

தீட்சைகேட்க—தீட்சைபெற, *inf.* To receive தீட்சை of the guru.

தீட்சைகொடுக்க—தீட்சைபண்ண—தீட்சைவைக்க, *inf.* To administer தீட்சை.

தீட்சைபெற்றவன், *appel. n.* (*neg.* தீட்சையில்லாதவன்.) One who has received தீட்சை, to whom the secrets of religion may be communicated.

தீட்டம்—தீட்டு, *s.* Ceremonial impurity from catamenia, child-birth, contact with a dead body, having a death in the house, &c., ஆசூசம். 2. Women's monthly course, catamenia, மகளிர்தொடக்கு. (*c.*)

தீட்டுக்கழிக்க, *inf.* To perform ceremonial purification, especially after child-birth.

தீட்டுக்காரி—தீட்டக்காரி, *s.* A woman in her monthly course. 2. A woman ceremonially impure.

தீட்டுச்சீலை—தீட்டச்சீலை, *s.* Menstruous cloths. 2. Cloths impure from child-birth.

தீட்டுத்தொடக்கு, *s.* Ceremonial uncleanness; commonly of child-birth or the menses.

தீட்டுப்பட, *inf.* To be ceremonially polluted. 2. (*fig.*) To be defiled—said of a female.

தீட்டுவீடு, *s.* A house ceremonially impure, from child-birth, &c.

தீட்டு, கிறேன், தீட்டினேன், வேன், தீட்ட, *v. a.* To whet, hone, sharpen, or rub knives, on a board, கூராக்க. 2. To clean rice, &c., by pounding, அரிசிதீட்ட. 3. (*fig.*) To beat, strike, அடிக்க. 4. To improve or sharpen the intellects, மனதைத்தீட்ட. 5. (*for* தீற்று.) To clean the teeth, பல்துலக்க. 6. To write, inscribe, delineate. எழுத. 7. To paint, draw pictures, &c., சித்திரிக்க. 8. To bind, tie, fasten, கட்ட. (திருக்குற்றாலப்புராணம்.)

தீட்டத்தீட்டக்கூராகிறது. It becomes sharpened the more it is whetted; (*fig.*) the mental powers improve by exercise, application and study.

தீட்டிப்பார்க்க, *inf.* To try a knife by a hone. 2. To try one's learning by questions.

நாக்குத்தீட்ட, *inf.* [*prov. in cant usage.*] To praise one's self.

தீட்டல், *v. noun.* Writing, sharpening, cleansing, &c., as the verb.

தீட்டலரிசி—தீட்டரிசி, *s.* [*prov.*] Rice sifted and cleansed. (*c.*)

தீட்டு, *v. noun.* Whetting, honing, கூர்மையாக்குதல்.

தீட்டுக்கல்—தீட்டுகல், *s.* A whet-stone, a hone, &c., சாணைக்கல்.

தீட்டுக்கோல்—தீட்டுகோல், *s.* A paint brush, எழுதுகோல். (*p.*)

தீட்டுப்பலகை—தீட்டுமரம், *s.* A board or slab for sharpening or cleaning knives or other instruments.

தீட்பு, *s.* (*also* தீழ்ப்பு. *vul. in cant.*) Baseness, meanness, degradation, inferiority, இழிவு. 2. A stigma on one's character, குலவடு.

தீட்பாய்ப்பேச, *inf.* To speak of one ignominiously.

தீட்பானவன், *appel. n.* A low, degraded person, one who has disgraced himself.

தீண்டியம், s. A shrub, a variety of Lawsonia spinosa with red flowers, பலவகைச்செடி.

தீண்டு, கிறேன், தீண்டினேன், வேன், தீண்ட, v. a. To touch, feel, come in contact with, தொட. 2. To infect or infuse poison, by contact; to defile, contaminate by touching, தொற்ற. 3. To envenom, as a snake, by biting, விஷந்தீண்ட. 4. To deflour, ravish, கற்பழிக்க. 5. To grasp, take hold of, to appropriate, பற்ற. (c.)

சர்ப்பந்தீண்டியிறந்தான். He was bitten by a serpent and died.

இருசுடரை இராகுகேதுதீண்டின. Rahû and Kêthû seized the two lights of the sun and moon.

ஆத்துமா அந்தக்கரணத்தைத் தீண்டிக்கொண்டறியும். The soul understands by the comprehension of the mental faculties.

கிராணந்தீண்டுதல், v. noun. The occurring (touching) of an eclipse. (c.)

தீண்டாச்சாதி, s. Low castes that are not to be touched.

தீண்டாநெருப்பு, s. An untouchable fire; i. e. a matron of unapproachable chastity, பதிவிரதை.

பிறர்தாரத்தைத்தீண்ட, inf. To defile another's wife.

தீண்டுகை, v. noun. Touching, feeling.

தீது, s. Evil, vice, mischief, தீமை. 2. Fault, blemish, defect, குற்றம். 3. (neut. sing. sym. verb.) It is evil, தீமையாயிருக்கிறது.

•தீத்தம்—தீப்தம், s. Splendor, brightness, பிரகாசம். W. p. 411. Deepta. 2. One of the twenty-eight Agamas, சிவாகமத்தொன்று. 3. Assafœtida, பெருங்காயம். 4. (c.) Sacred water, as தீர்த்தம்.

•தீபகம், s. A lamp light, விளக்கு. 2. A figure in Rhetoric. (See தீவகம்.) W. p. 411. Deepaka. 3. A decoy bird or beast, பார்வைவிலங்கு.

•தீபம், s. A lamp, commonly one lighted, விளக்கு. W. p. 411. Deepa. (c.) 2. A figure in Rhetoric, as தீபகம். 3. The fifteenth lunar asterism, சோதிநாள். 4. (Sa. Dwipa.) Island, continent, தீவு.

தீபக்கம்பம்—தீபமத்திகை, s. Lamp-stand, விளக்குத்தண்டு.

தீபகாந்தி, s. A diamond, வைரக்கல்.

தீபக்கால், s. [prov.] A lamp-stand used in temples, a candelabrum, விளக்கேந்துகருவி. 2. A candlestick, விளக்குத்தண்டு.

தீபக்கிட்டம், s. Lamp-black.

தீபக்கொடிச்சி, s. A kind of camphor, ஆரதிகர்ப்பூரம்.

தீபதூபம், s. Lamps and incense—spoken of as presented before an idol, or great person, விளக்கும்நறும்புகையும்.

தீபதூபங்காட்ட, inf. To present lights and frankincense.

தீபாக்கினி, s. Lighted lamps before an idol, &c. 2. One of the three kinds of medicinal fires. See அக்கினி.

தீபாராதனை, s. Waving lamps before the idol; lamp-worship.

•தீபவதி, s. A river, ஆறு. (சது.)

•தீபவராடி, s. A subdivision of the வராடி melody, வராடித்திறத்திலொன்று.

•தீபனம், s. (sometimes தீவனம்.) Appetite, பசி. 2. [prov.] Eatables, food, provision, ஆகாரம். (c.)—Note. The Sanscrit and Tamil words have the same meaning.

எனக்குப்பசித்தீபனமில்லை. I am not hungry.

அதிகதீபனம், s. Great hunger.

தீபாவலி, s. Lamp-lighting in October. See தீபாவளி.

•தீபாவளி—தீபாளி—தீவாளி, s. The lighting of lamps early in the morning on the fourth day of the decreasing moon in October, each one doing it, first putting a little oil on the head, to commemorate the killing of Naracasura by Krishna, ஓர்பெருநாள். W. p. 411. Deepa-lee.

•தீபிகை—தீவிகை, s. A lamp, விளக்கு. (சது.)

கணிததீபிகை, s. A treatise on arithmetic.

•தீப்தம்—தீத்தம், s. Splendor, பிரகாசம். W. p. 411. Deepta. 2. One of the twenty-eight Agamas. See சிவாகமம், உ.அ.

தீப்பி, s. Fire, நெருப்பு. (பிங்.)—In சிலாகரம், it is தீபி.

தீமை, s. Evil, wickedness, vice, sin, turpitude, depravity, பொல்லாங்கு. 2. Mischief, injury, harm, hurt, கேடு. (c.)

தீமைசெய்ய, inf. To practice vice, to be vicious. 2. To do evil, injury, mischief.

தீம், s. Sweetness, agreeableness. See தீ, adj.

தீம்பு, s. Wickedness, vileness, vice, பொல்லாங்கு. 2. Baseness, vulgarity, தீழ்மை. (p.)

தீம்பன், s. (plu. தீம்பர், fem. sing. தீம்பி.) The base, the wicked.

தீயகம், s. Hell, நரகம்; [ex தீ, fire et அகம்.]

தீயம், s. (Tel.) Sweetness, lusciousness, deliciousness, தித்திப்பு.

தீயர், s. A caste. See தீ, evil.

தீயல், v. noun. See தீ, v.

தீயளி, s. Immature fruit, காய். (சது.)—In நிகண்டு, தீவி.

தீயாக்கினை, s. A medicinal plant, the பொன்னுங்காணி.

•தீரம், s. Strength, vigor, power, வலி. 2. Courage, bravery, valor, தைரியம். W. p. 444. Dheera. 3. Shore, bank, border, edge, கரை. 4. Ridge, dam in rice-fields, வரம்பு. (Sa. Teera.)

தீரத்துவம், s. Strength, courage, வலிபுடைமை.

தீரவாசம், s. Dwelling on the shore of a river.

தீரன், s. A brave or valiant man, a hero.

தீராந்தி, s. (for.) Beam of a building, or cross beam, விட்டம்.

தீராமை, s. [prov.] A heinous crime, great injustice, அநியாயம். 2. False accusation, பொய்க்குற்றச்சாட்டு. 3. Malicious slander of a virtuous person, ஒன்றைத்தீச்சொல்லுங்கோள். 4. See தீர், v. n.

தீரிக்கை, s. (Tel.) Leisure time, ஓழிந்தவேளை. (R.)

தீர், கிறது, ந்தது, தீரும், தீர, v. n. To end, terminate, be consummated, completed, முடிய. 2. To cease as pain or disease; terminate as a curse, or its effects, நீங்க. 3. To be determined, decided, settled, as a law-suit or quarrel; to be passed as a sentence, தீர்மானமாக. 4. To be performed or completed as a duty; to be perfected, finished, நிறைவேற. 5. To leave, quit, cease, pass way, நுட. 6. To be long, remote, to extend, நீள. 7. To be exhausted, used up, consumed, அற. 8. To expire as the allotted punishment for past deeds by the suffering and enjoyment of the soul; to be expiated as sin; to end as transmigration by absorption in the deity, கழிவுறும். 9. v. a. (கிறேன், ந்தேன், வேன், தீர.) To polish or grind gems, clean gems, சாணைதீர. 10. To fire off a cannon or musket, வெடிதீர. 11. To dye, stain, tinge, imbue with color, சாயந்தீர. 12. To finish, as the interlude between the stanzas in singing, playing, dancing, beating time, &c., தாளந்தீர. 13. To levy duty, assess a tax, &c. சுங்கந்தீர. 14. To solve a problem or make any mathematical calculation, கணக்குத்தீர. (c.) 15. (R.) To draw out in a line, as படைதீர, to draw out troops in ranks.

எனக்குவரத்தீராது. I cannot come.

அவர்கள் பலவந்தஞ்செய்ததனால் தீராதென்று கொடுக்கவேண்டியிருக்கிறது. By their pressing (he said) it will not cease; it is necessary to give.—Note தீராது, in such cases has a peculiar meaning.

தாளந்தீர்த்தான். He finished a tune.

அதற்குவர்ணந்தீர்த்தான். He painted it.

இவன்தீர்த்தசாமி. He is a brave fellow; (lit.) a brave god. (In irony.)

தீர்கடை, s. The last end of a thing, termination, conclusion, முடிவு. 2. Absoluteness, entireness, முழுமை.

தீர்ந்தகணக்கு, s. A settled account.

தீர்ந்தகள்ளன், s. A finished rogue, a thorough villain, desperate thief.

தீர்ந்தசரக்கு, s. (neg. தீராதசரக்கு.) Goods on which duty is paid. 2. Goods bargained for.

தீர்ந்தபட்சம் s. The final settlement of accounts, disputes, &c.

தீர்ந்தவன், s. A skilful, experienced man; an adept. (Commonly in a bad sense.)

தீர்ந்தவேலை, s. A finished work.

பட்டைதீர, inf. To give sides to a gem, to a piece of timber, or to a stone, in cutting or polishing.

சாயந்தீர்கிறவன், s. A dyer.

நவைதீருமாகமம், s. The faultless Agamas. (p.)

தீர, inf. [used adv.] Altogether, entirely, perfectly, absolutely, thoroughly, completely, முழுதும்.

தீரப்படித்தவனொருவனுமில்லை. There is none perfect in his studies.

தீரமறக்க, inf. To forget entirely, altogether.

தீராமை, v. noun. (neg.) That which cannot be obviated.

தீராநோய்—தீராவியாதி, s. An incurable disease.

தீராப்பழி, s. An unpardonable injury. 2. Implacable enmity.

தீராவழக்கு, s. A law-suit or dispute which cannot be settled easily.
தீராவழக்குக்குத்தெய்வமேசாட்சி. God only understands an intricate law-suit.
தீர்வு, v. noun. Settlement, close, finish, termination.
•தீர்க்கம், s. That which is long, either in space or time; extension, நீட்சி. 2. Long vowel, நெட்டெழுத்து. W. p. 411. Deergha. 3. Distance, remoteness, தூரம். 4. Perfection, completeness, accurateness, thoroughness, பூரணம். 5. Distinctness in utterance, good articulation, உச்சரிப்பின் திறம். 6. (Beschi.) Decision, positiveness, certainty, திட்டம். (c.)
தீர்க்கசதுரம், s. An oblong square, a parallellogram, நீண்டசதுரம்.
தீர்க்கசத்திரம், s. (St.) A sacrifice for twelve years, யாகவிசேஷம்.
தீர்க்கசந்தி, s. [in gram.] Changes in Sanscrit words, of two similar vowels, whether long or short, when they coalesce in one long vowel, வடவெழுத்துப் புணர்ச்சியுளொன்று.
தீர்க்கசிநேகம், s. Long continued friendship.
தீர்க்கசுமங்கலி, s. A woman blessed with long enjoyment of the marriage state, &c.; used in congratulation.
தீர்க்கதண்டம், s. The most submissive obeisance, or homage; prostration at full length with the arms extended, சாஷ்டாங்கதண்டம்.
தீர்க்கதரிசனம், s. (Chris. usage.) Distant sight, remote vision, foresight, prophesy.
தீர்க்கதரிசனஞ்சொல்ல, inf. To prophesy.
தீர்க்கதரிசனி, s. A prophetess.
தீர்க்கதரிசி, s. A seer, a prophet. W. p. 412. Deerghadarsin.
தீர்க்கதிருஷ்டி, s. A long sight.
தீர்க்கநித்திரை, s. Long sleep, நெடுந்துக்கம். 2. (fig.) Death, மரணம்.
தீர்க்கபாகு, s. A long arm, (fig.) a long armed man.
தீர்க்கம்போட, inf. To put the dash over a long vowel.
தீர்க்கயோசனை, s. A careful consideration.
தீர்க்கவசனம், s. Decisive language.
தீர்க்கவைரம், s. Continued, cherished hatred.
தீர்க்காயுசு, s. Long life, longevity. (c.)
தீர்க்காயுஷ்யம், s. Length of days; a salutation.
தீர்க்காயுதம், s. A spear or lance.
தீர்க்காலோசனை, s. Mature consideration.
தீர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To finish, complete, conclude, முடிக்க. 2. To settle, decide, determine, predestinate, தீர்மானிக்க. 3. To adjust a quarrel, bargain, marriage contract, &c., திட்டஞ்செய்ய. 4. To arbitrate, decide a law-suit, pass sentence as a judge, தீர்ப்புச்செய்ய. 5. To remove moral or ceremonial defilement, to expiate, நீக்க. 6. To remove affliction, sorrow, pain; to terminate births, as the Deity, விலக்க. 7. To satisfy hunger, desire, revenge, lust, &c., திருத்திபண்ண. 8. To accomplish, effect, fulfil, consummate, perfect, பூர்த்திபண்ண. (c.)

தீர்த்துக்கொள்ள, inf. To drop acquaintance, terminate intercourse or dealings.
தீர்த்துக்கொடுக்க, inf. To settle the price and give up the commodity.
தீர்த்துக்கொள்ள, inf. To settle an account.
தீர்த்துப்போட—தீர்த்துவிட, inf. To settle a difference between parties. 2. To pay off.
தீர்த்தல், v. noun. A causing to leave or to quit, போக்குதல். (நீதிநெறிவிள.)
தீர்ப்பு, v. noun. Settlement, conclusion, completion, termination, consummation, முடிப்பு. 2. Decision, award, judgment, decree, sentence, நியமம். 3. Determination, resolution, தீர்மானம். 4. Clearance, removal, liquidation, remission, நிவிர்த்தி. 5. Antidote, atonement, expiation, பரிகரிப்பு.
தீர்ப்பானபேச்சு, s. A decision, conclusion.
தீர்ப்பானவிலை, s. A settled price—as தீர்மானமானவிலை.
தீர்ப்புக்கட்ட, inf. To make a decision, settle a business, to finish, decide, fix. 2. To form an opinion, judgment, &c.
தீர்ப்புக்காண, inf. To find out the result of a law-suit, &c. 2. To terminate, come to an issue—as a law-suit.
தீர்ப்புச்சொல்ல, inf. To speak decidedly. 2. To pass sentence, pronounce judgment. 3. To suggest a remedy, antidote, &c., or counteraction of a curse.
தீர்ப்புநகல், s. Copy of a decision.
தீர்ப்பெழுத, inf. To record a sentence, award, &c., as a judge.
•தீர்த்தகர் — தீர்த்தகரர், s. Rishis among the Jainas, சமணமுனிவர். W. p. 379. Teerthakara.
•தீர்த்தம், s. (Sa. Teertha.) Ceremonial purity, சுத்தம். 2. Sacred rivers, or waters at a place of pilgrimage, or as brought from such place, புண்ணியதீர்த்தம். 3. Consecrated water used for washing an idol, which is afterward brought out and given to the people, especially on the last day of the festival, either to be drunk by them, or taken home for the sick to dispel diseases, திருமஞ்சனநீர். 4. Water consecrated for the sick, நிவிர்த்திக்குநீர். 5. The merit of bathing on an auspicious day, புண்ணியகாலஸ்நானத்தம். 6. A temple festival or procession, திருவிழா. 7. Water in common, நீர். 8. Water given by the brahman in court, in administering an oath, சத்தியதீர்த்தம். (c.)—Note. The seven sacred rivers are the following, 1. கங்கை, Ganges; 2. யமுனை, Jumna; 3. சரச்சுவதி, Sarasvati which is northward of Delhi; 4. நருமதை, Nurbudha; 5. காவேரி, Kavery; 6. குமரி, Kumari at Cape Comorin; 7. கோதாவரி, Godavery.
தீர்த்தங்கொடுக்க, inf. To distribute water, in which the idol has been washed.
தீர்த்தசேவை, s. Pilgrimage to holy bathing places.

தீர்த்தமாட, inf. To bathe in sacred waters. 2. To bathe as a part of the daily religious duties.
தீர்த்தயாத்திரை, s. Pilgrimage to a holy place for the purpose of bathing.
தீர்த்தர், s. (plu.) Devas, celestials, inhabitants of Swerga, சுவர்க்கவாசிகள். (சூ)
தீர்த்தவாசி, appel. n. A pilgrim.
தீர்த்தன், s. Argha of the Jainas, அருகன். 2. Siva, சிவன். 3. Guru, குரு. 4. A teacher, especially of the Vedas, உபாத்தியாயன்.
•தீர்த்திகை, s. A river, ஆறு; [cx தீர்த்தம்.]
தீர்ப்பு, v. noun. See தீர், v. a.
தீர்மானம், s. Decision, determination, resolution, நியமம். 2. Settlement, conclusion, completion, முடிவு. 3. Decree, sentence, award, judgment, தீர்ப்பு. 4. Conclusion of the interlude, sung, played, &c., between stanzas, தாளத்தீர்ப்பு. 5. [prov.] Absoluteness, entireness, completeness, முழுமை. (c.)
தீர்மானக்கறுப்பு. Entirely, exclusively or absolutely black.
தீர்மானப்பட, inf. To be determined, decided, settled.
தீர்மானப்படுத்த—தீர்மானம்பண்ண, inf. To decide, settle, determine, finish.
தீர்மானமாய், adv. Definitively, positively, expressly, absolutely, entirely.
தீர்மானமானவிலை — தீர்மானவிலை, s. Fixed or settled price.
தீர்மானி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To determine, resolve, decide, நிதானிக்க. 2. To conclude, finish, settle, bring to an issue, முடிக்க. 3. To appoint, fix, designate to an office, நியமிக்க. 4. To finish the interlude performed between stanzas in music, &c., தாளந்தீர்க்க. (c.)
தீர்மானிப்பு, v. noun. Determination, decision, conclusion, settlement, முடிப்பு. 2. Termination of the interlude performed between stanzas, தாளத்தீர்ப்பு.
தீர்வை, s. Decision, நியாயத்தீர்ப்பு. 2. Conclusion, issue, result, முடிவு. 3. Custom, duty, excise, toll, tax, impost, சுங்கம். 4. Divine judgment, fate, விதி. (c.) 5. [loc. also தீர்வைக்கரியம்.] Funeral obsequies, கருமாந்தம். 6. (சூ.) A mungoose, கீரி.
தீர்வைகொடுக்க, inf. To pay duty.
தீர்வைச்சரக்கு, s. Customable goods.
தீர்வையிட, inf. To lay duty on goods.
தீர்வைத்துறைமுகம், s. A port where duty is received.
தீர்வைப்பணம், s. Toll-money, money paid for duty.
தீர்வையில்லாதசரக்கு, s. Goods not chargeable with duty.
தீர்வையெடுக்க, inf. To levy or receive duty. 2. [prov.] To obtain the copy of a decree from the court.
தீர்வைவிழ, inf. [prov.] To be passed as a decree, தீர்ப்பாக.
தீர்வு, v. noun. See தீர், v. n.

துளிர், *s.* Bud, sprout, germ, young leaf, tender foliage, தளிர். (*c.*)
துளிர்விட, *inf.* To bud.
நாக்குத்துளிர், *s.* Tip of the tongue.

துளிர், க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* [*com.* தளிக்க.] To bud, sprout, shoot, put forth leaves, vegetate, தளிக்க. 2. (*fig.*) To begin to thrive as a person, செழிக்க. (*c.*)
இவன்துளிர்த்திருக்கிறான். He is flourishing.
துளிர்ப்பு, *v. noun.* Budding, sprouting.

துளும்பு, கிறது, துளும்பினது, ம், துளும்ப, *v. n.* To shake, be agitated, அசைய. 2. To rise into opposition, &c., எழும்ப. 3. To sparkle, glitter, coruscate, shine, செலிக்க. 4. (*சது.*) *v. a.* To smear, தீமிர.
துளும்பல், *v. noun.* Wavering, shining, &c., as the verb.

•துளுவம், *s.* The name of a country on the western coast between Canara and the Concan, ஒர்தேசம். 2. The language of the country, one of the eighteen, பதினெண்பாஷையிலொன்று.
துளுவபாஷை, *s.* The Tuluva language.
துளுவப்பிராமணர், *s.* (*plu.*) Brahmans of the Tuluva country, of whom, the head of the துவைதம் sect, Mad'hvacharia, was one.
துளுவவேளாளன், *s.* An agriculturist of the country.
துளுவன், *s.* An inhabitant of the Tuluva country.

துளை, *s.* [*also written,* தொளை.] Hole, orifice, aperture, perforation, துவாரம். (*c.*) 2. Gateway, passage, thoroughfare, opening, வாயில். 3. The hollow of a tube, உட்டொளை. 4. Bambu, மூங்கில். See தும்பு.
துளைக்கருவி, *s.* Wind instruments, one of the five kinds.
துளைக்கை, *s.* Elephant's trunk, தும்பிக்கை. 2. See துளை, *v. a.*
துளைச்செவி, *s.* Ear of an animal that has no external ear, உட்செவி. 2. An animal with the internal ear only, without any auricle; one of the two great classes of animals according to the Hindus, உட்செவியுள்ளது.
துளைபோட—துளையடிக்க—துளையிட, *inf.* To make a hole, commonly with a chisel and mallet, to punch.

துளை, கிறேன், ந்தேன், வேன், ய, *v. n.* [*prov.*] To play or dive in water, to roll in the sand, &c., மூழ்க. 2. *v. a.* To enjoy, have fruition of, அனுபவிக்க.

துளை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* (*also* தொளை.) To make a hole, bore, drill, punch, துவாரஞ்செய்ய. 2. To perforate, pierce, pierce with arrows, &c., ஊடுருவ.
துளைப்பு, *v. noun.* Boaring, drilling, perforating.

துள்ளல், *s.* Dance, dancing, கூத்து. 2. Goat, sheep, ஆடு. 3. A small fly, gnat, கொசுகு. 4. Melody or movement of the கலிப்பா class of verse, கலிப்பாவிலோசை. (*சது.*) 5. One of the four kinds of movements in verse or singing, being lively or quick, விரைந்தபாடுமோசை. 6. See துள்ளு, *v.*

துள்ளி, *s.* [*for* துளி.] A drop. (*c.*)

துள்ளு, *s.* A leap, jump, spring, frisk, commonly without progress, குதிப்பு. (*c.*)
துள்ளடங்க, *inf.* [*in burlesque.*] To be reduced, as arrogance, &c.
துள்ளாட்டம், *v. noun.* Sprightfulness, arrogance, haughtiness, assumption, overbearing airs.
துள்ளாட்டம்பண்ண, *inf.* To be arrogant, overbearing, unruly, refractory.
துள்ளுக்காளை, *s.* An ungovernable person; (*lit.*) untamed bullock.
துள்ளுப்பூச்சி, *s.* A kind of leaping insect destructive to grain.

துள்ளு, கிறேன், துள்ளினேன், வேன், துள்ள, *v. n.* To spring up, leap up, jump up, frisk in play, commonly not proceeding forward; to leap out of water, as fishes, குதிக்க. 2. To trip along in a frolicksome way, குதித்தசெல்ல. 3. [*in burlesque.*] To be haughty, arrogant, செருக்க. (*c.*)
துள்ளித்தொப்பென்றுவிழுகிறான். He is very insubordinate; (*lit.*) capers and falls.
துள்ளுகிறமாடுபொதிசுமக்கும். An unruly bullock throwing off its load will have a greater burden, *that is,* disobedient persons will not escape punishment.
துள்ளுகுட்டி, *s.* A frisking, young animal. 2. A young animal, plump, strong, and lively. 3. (*fig*) A stout, lively boy. (*c.*)
துள்ளல், *v. noun.* Frisking, leaping, குதித்தல்.

துறக்கம்—துறக்கநாடு, *s.* Swerga or the paradise of the inferior gods, சுவர்க்கம். (*சது.*)

துற, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, *v. a.* To leave, relinquish, desert, reject, discard, கைவிட. 2. To renounce matrimony, and secular things, for an ascetic life, இல்லறந்துறக்க. 3. To neglect, dispense with, omit, avoid, தவிர்க்க. (*p.*)
தாய்சொற்றுறக்கவாசகமில்லை. There is no excuse for slighting a mother's word, (*Avv.*)
அதைத்துறந்து, *v. participle.* Leaving this, besides this.
துறந்துதள்ள, *inf.* To renounce one's relations.
துறந்தார்—துறந்தோர், *s.* (*plu.*) Ascetics, recluses, those that have renounced the world for an ascetic life, sannyasis, சந்நேசர்.
துறப்பு—துறவு, *v. noun.* Relinquishment, rejection, விடுகை. 2. Renunciation of matrimony and social life, for a life of austerities, of wandering and dependence on charitable gifts for support; or retirement to the desert, சந்நியாசம். 3. The principles of abstraction, or renunciation of secularities, as seated and operative in the mind of the devout ascetic, leading to corresponding actions.
துறவர் — துறவோர், *s.* [*plu.*] Munis, ascetics, recluses, முனிவர்.
துறவறம், *s.* Celibacy of the recluse, or of the strict devotee, in the வானப்பிரஸ்தம் state—oppos. to இல்லறம். (See ஆச்சிரமம்.) 2. See அறம்.
துறவி, *appel. n.* An ascetic, a recluse, சந்நியாசி.
துறவுநிலை, *s.* The standing, degree, profession or state of the ascetic.
துறவுபூண, *inf.* To become an ascetic.
துறவொழுக்கம், *s.* The proper course and rules of ascetic life.

•துறட்டி — துறடு, *s.* An iron crook, an elephant goad, அங்குசம். 2. An entanglement, சிக்கு. See தரட்டு.
தறட்டிலேமாட்டிக்கொண்டான். He entangled himself.
துறட்டிச்செடி, *s.* A shrub with crooked thorns, ஒர்முட்செடி, Pisonia, *L.*
துறட்டிப்பழம், *s.* Its fruit.
துறட்டிரும்பு — துறட்டூசி, *s.* A crooked iron or hook fastened in the integuments of the back of those who swing in the air at the செடில் festival.
துறட்டுக்கோல், *s.* An iron crook fixed at the end of a pole to pluck fruits.
துறட்டுப்பிடி—துறட்டுவாதம், *s.* Urgency, compulsive request, pressing one, &c., obstinacy in maintaining one's opinion, பிடிவாதம்.

துறப்பணம்—திறப்பணம், *s.* [*vul.*] A drill. See தரப்பணம்.

துறவி. See துற, *v.*

துறு, *s.* Iron-stone, laterite, செம்பூறான்கல். (*சது.*)
துறுகல், *s.* As துறு. 2. See துறு, *v. a.*

துறு, கிறேன், துற்றேன், வேன், துற, *v. a.* To eat, take food, உண்ண. (*Sa. Truda.*)
துறு—துற்றல், *v. noun.* Eating, taking food, உண்டல்.

துறு, கிறது, துற்றது, ம், துற, *v. n.* To be thick, crowded, full, நெருங்க. 2. To be closed, குவிய. (*p.*)
துறுபடை, *s.* A squadron, or troops, in close order.
துறு, *v. noun.* Thickness, closeness, crowdedness, நெருக்கம்.
துற்றல், *v. noun.* A closing up, குவிதல். 2. Being full, நிறைதல்.

துறு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To stuff, press or crowd into a bag or box, &c., அமுக்க. 2. To cram food into the mouth, திணிக்க. (*c.*)
என்னத்துக்குப்பிள்ளைவாயில்சோற்றைத்துறுக்கிறீர்.. Why does she cram the child's mouth with rice?
துறுகல், *s.* A stone to stop a sluice or channel, கலுங்கையடைக்குங்கல். (*சது.*)
துறுத்தல் — துறுப்பு, *v. noun.* Cramming, stuffing, pressing, நெருக்குதல்.

•துருட்டி, *s.* A plant, small Cardamum, சிற்றேலம். W. p. 392. TRUT'HI.

துறுபவம், *s.* Closeness, thickness, crowdedness, நெருக்கம். (*சது*)

துறுமு, கிறேன், துறுமினேன், வேன், துறும, *v. n.* To be thick, close, crowded, நெருங்க. 2. To be or become round, திரள. 3. *v. a.* To make round, திரட்ட. (*p.*)
துறுமல், *v. noun.* Being close, making round, &c., as the verb.

துறுவு, கிறேன், துறுவினேன், வேன், துறுவ, *v. a.* To eat, take food, உண்ண. 2. *v. n.* To be crowded, close, thick, நெருங்க; [*ex* துற, *v.*]

துறவல் — துறவு, *v. noun.* Eating, புசித்தல். 2. Being thronged, நெருக்கல்.

துறை, *s.* Any passage to, into, or across water—as the entrance to a tank, pond or river, a ford or ferry; a watering place for cattle; a place for bathing or for washing clothes, சீத்துறை. 2. A sea-port, harbor, road-stead, இறங்குதுறை. 3. Way, path, thoroughfare, passage for men or beasts, வழி. 4. Frequented place, a place of meeting, a rendezvous, கலைகூடுமிடம். 5. Place, location, situation, space, position, as ஆடுத்துறை, வண்ணாந்துறை, இடம். 6. A resource, resort, shelter, place of refuge, ஒதுங்குமிடம். (*c.*) 7. River, ஆறு. 8. One of the three-fold subdivisions of any of the four classes of verse, கலித்துறை. (See பாவினம்.) *9. A branch, scope or extent of science, நூற்றுறை. 10. Any theme in love poetry, அகப்பொருட்டுறை. (*p.*)

துறைகாட்ட, *inf.* To show a method.

துறைகாண, *inf.* To find a port, haven, harbor. 2. To find a way, means or method to do or complete a thing.

துறைகண்டவன்விடுவானா. Will one who has discovered the way (to his master's treasure), forsake it?

துறைகாரர், *s.* [*prov.*] Agents, accountants, and other servants of a temple.

துறைக்காவல், *s.* [*prov.*] Watch or guard to a port, excise officer; military guard; a guard-ship.

துறைத்தோணி, *s.* A ferry boat.

துறைநியாயம், *s.* Laws of love poetry.

துறைநெருங்கிவர, *inf.* To direct the course to a port.

துறைபிடிக்க, *inf.* To touch at a port; to gain the haven, &c. 2. To find out means, expedients, உபாயந்தேட.

துறைபேர, *inf.* To leave port.

துறைபோக, *inf.* To acquire a thorough knowledge of a science, &c. 2. To attain one's end.

துறைப்பேச்சு, *s.* Vernacular or vulgar language, கொச்சைப்பேச்சு. (*R.*)

பறையைப் பள்ளிக்குவைத்தாலுந் துறைப்பேச்சுப் போமா. Will a low man forget his vulgar language, even when placed at school?

துறைமாற, *inf.* To mistake the proper course.

துறைமுகம், *s.* The entrance to a port, haven or harbor. (*c.*) 2. A passage or thoroughfare.

துறைமுகக்குத்தகை, *s.* [*prov.*] Rent of a ferry.

துறையடுக்கப்பிடிக்க, *inf.* [*prov.*] To sail toward a port, to anchor in or near the harbor.

துறையறிந்துநிற்க, *inf.* To find a suitable place, and proper persons; to become settled. 2. To know the proper course as to one's religion, caste, profession, &c., and adhere to it.

துறைவல்லோர், *s.* (*plu.*) The learned, கற்றோர். (சது.)

துறைவன், *s.* A chief of a maritime district, நெய்தனிலத்தலைவன். (சது.)

*துறோட்டி, *s.* (*for* துரோட்டி.) Elephant hook, அங்குசம். See தோட்டி.

*துற். A prefix signifying ill, improperly used for துர் before some words beginning with hard letters, as துற்சக்தம், துற்கருமம், துற்கிருத்தியம், துற்சனன், துற்செய்கை, துற்புத்தி, &c. Compare this with சுற்.

*துற்கை, *s.* Durga. See துர்க்கை.

துற்காபூசை—துற்கைபூசை, *s.* Worship of Durga.

*துற்பரிசம், *s.* A plant. See சிறுகாஞ்சொறி. See துர்ப்பரிசம்.

துற்று, கிறேன், துற்றினேன், வேன், துற்ற, *v. a.* To eat, as தறு.

துற்று, *v. noun.* Boiled rice, சோறு. (சது.)

துற்றுமாற்று, *s.* [*prov. for* துத்துமாற்று.] Trick, roguery, deception, திரியாவரம்.

துறுவி, *s.* Long-pepper, திப்பிலி.

துனி, *s.* Affliction, sorrow, distress, ills of life, துன்பம். 2 Disease, pain, suffering, நோய். 3. A protracted love-quarrel, with temporary separation of the parties, புலவிநீட்டம். 4. Fear, dread, அச்சம். 5. Anger, displeasure, கோபம். 6. Disgust, dissatisfaction, loathing, வெறுப்பு. 7. River, ஆறு. (சது.)

துனை—துனைவு, *s.* Quickness, speed, வேகம். See துணைவு.

*துன், [*a change of the Sanscrit prefix,* துர் *before some soft letters, as* ம *and* ன.] Evil, ill. Compare சுன்.

துன்மதி, *s.* Folly, wickedness, அவமதி.

துன்மரணம், *s.* A violent, untimely, or unhappy death, அகாலமரணம்.

துன்மனம், *s.* [*also* துர்மனம்.] An evil mind, vicious disposition.

துன்மாதிரி, *s.* Bad example.

துன்மாதிரிகாட்ட, *inf.* To set a bad example.

துன்மாமிசம், *s.* [*also* துர்மாமிசம்.] Proud flesh in an ulcer, கெட்டசதை. 2. A disease, sore, துர்நோய்.

துன்மார்க்கம், *s.* [*also* துர்மார்க்கம்.] A vicious course of conduct, a wicked life, vice, immorality, கெட்டவழி.

துன்னிமித்தம், *s.* Ill omen, bad sign in general, துர்நிமித்தம்.

துன்னெறி, *s.* Vicious conduct.

*துன்பம், *s.* [See W. p. 380. Tumpa.] Affliction, sorrow, distress, trouble, வருத்தம்—oppos. to இன்பம். 2. Suffering, pain, உபத்திரவம். 3. Misfortune, calamity, adverse circumstances, straits, penury, கிலேசம். 4. [*prov.*] Disease, ailment, நோய்.

துன்பக்காரன், *s.* A sick man.

துன்பஞ்செய்ய, *inf.* To hurt, distress, injure, put to pain, inflict suffering. 2. To cause disease, misfortune, calamity—as wind, water, fire, &c.

துன்பப்பட, *inf.* To be afflicted either in mind or body, to suffer misfortune, adversity, &c. 2. To be vexed, troubled, persecuted.

துன்பப்படுத்த, *inf.* To cause trouble, to vex, as done by a superior; to harass, to keep hard at work, to persecute.

*துன்பு, *s.* Affliction, suffering, distress, calamity, &c., as துன்பம். (*p.*)

துன்புற, *inf.* To suffer, be distressed, வருந்த.

துன்புறுத்த, *inf.* To cause suffering. See உறுத்த.

துன்புறுவோன், *appel. n.* An afflicted man, பீடிதன்.

*துன்மதி, *s.* The fifty-fifth year of the Hindu cycle, ஓர்வருஷம். 2. See துன்.

*துன்முகி, *s.* The thirtieth year of the Hindu cycle, that answering to 1836, ஓராண்டு. 2. [*in mythol.*] A famed female Asura, ஓரரக்கி; also துர்முகி.

துன்று, கிறேன், துன்றினேன், வேன், துன்ற, *v. n.* To get near, approximate, நண்ண. 2. To be close, thick, crowded together, நிறைய. (*p.*)

மலர்துன்றுகூந்தலாள். The fair one, adorned with thick-set garlands.

துன்னபோத்து, *s.* (*Tel.*) A ploughing buffalo, உழவெருமை; *in reproach to a sluggish person.*

துன்னம், *s.* A seam, sewing, stitch, தையல்; [*ex* துன்னு, *v.*] (*p.*)

துன்னர், *s.* Tailors, stitchers, தையற்காரர். 2. Shoemakers, leather-sewers, makers of leathern sandals, leather-dressers of two castes, செம்மார் and சக்கிலியர். (சது.)

துன்னு, *s.* Flesh, meat, இறைச்சி. 2. Back, முதுகு. (சது.)

துன்னு, கிறேன், துன்னினேன், வேன், துன்ன, *v. n.* To approach, approximate, adhere to, attach one's self to, கிட்ட. 2. To be closed, thick, crowded, நெருங்க. 3. To be stuffed, pressed in, crammed full, நெருக்கப்பட. 4. To stick out, be protuberant, distended, swollen, பிதுங்க, வீங்க. 5. *v. a.* To sew, stitch, தைக்க.

கீகுடித்தக்கிடைச்சி துன்னிப்போயிற்று. The piece of cork is swollen with the water which it has absorbed.

துன்னியார்—துன்னுநர், *s.* (*plu.*) Adherents, friends, relations, சிநேகர். (சது.)

துன்னூசி, *s.* A needle, தையலூசி. 2. See ஊசி.

துன்னல், *v. noun.* Being near, கிட்டல். 2. Being close together, நெருங்கல். (சது.) 3. Sewing, தைத்தல்.

துன்னலர் — துன்னாதார் — துன்னார், *s.* Foes, enemies, பகைவர்.

# தூ

தூ. A letter compounded of த் and ஊ.

தூ, *s.* Purity, cleanness, unsulliedness, சுத்தம். 2 Whiteness, வெண்மை. 3. A feather plumage, புள்ளிறகு. 4. Flesh, meat, மாமிசம். 5. Hostility, enmity, பகை. 6. A staff; (*fig.*) a prop, பற்றுக்கோடு. (சது) (*p.*)

•தூ, *inter.* Fie, இகழ்ச்சிக்குறிப்பு. (*c.*)

தூ, *v. a.* (*for* தூவு). To strew, to scatter. (*R.*)

தூக்கணம், *s.* A pendent, &c., as தூக்கு, 1 and 2.

தூக்கணங்குருவி, *s.* See தூக்கு. (*c.*)

தூக்கம், *s.* Drowsiness, sleeping, sleep, நித்திரை. 2. Dullness from inclination to sleep, deadness, flatness, அயர்வு. 3. Languor, lassitude, dullness, want of energy, spiritlessness, சோம்பு. 4. Leaning the head, nodding through drowsiness, தலைசாய்ப்பு. 5. Drooping of plants, &c., வாட்டம். 6. Cessation of wind, fever, &c., தணிவு. 7. Lowness of price, stagnation of commerce, &c., suspension, விலையிறக்கம். 8. A downcast, dejected countenance, முகக்கோட்டம். (*c.*) 9. Hanging or pendent jewels, ஆபரணத்தொங்கல். 10. Hanging of curtains; scollop in the border lace of a tippet; ornamental metal hangings, சல்லி. 11. A bone, எலும்பு. 12. A kind of ear-ornament, காதணி.

தூக்கம்வருகிறது. I feel sleepy.

தூக்கங்கலைந்துபோயிற்று. I am disturbed in sleep.

இராத்திரியெனக்குத்தூக்கங்கெட்டது. Last night my sleep was disturbed.

அவனுக்கிப்பொழுதுதான்தூக்கந்தெளிந்தது. He has just awaked from sleep.

தூக்கக்கலக்கம் — தூக்கமயக்கம், *s.* Sleepiness. (*c.*)

தூக்கங்கொள்ள, *inf.* To give opportunity to sleep—as a disease in time of convalescence. 2. To faint or become dull —as a person in the height of disease.

காற்றுத்தூக்கங்கொள்ளுகின்றது. The wind is dying away.

தூக்கம்பிடிக்க, *inf.* To be drowsy, to be afflicted with sleepiness.

தூக்கம்விட, *inf.* To put up hangings, curtains, festoons, &c., to make ornamental hanging work in metal, masonry, carving, &c. 2. To rouse from sleep, swooning, &c., to revive.

தூக்கிரி, *s.* (*Hind.*) A watchman of a village or field, ஊர்காவற்காரன்.

தூக்கு, *s.* Pendents; anything suspended, தொங்கல். 2. A ring and rope for carrying a pot, or to support it standing; a string for carrying a parcel, உறி. 3. Weighing, weight, நிறை. 4. The fourth of a துலாம், a weight, சற்றுலாம். 5. Libra of the Zodiac, துலாராசி. 6. Any thing carried by hand in a basket, &c., கைத்தூக்கு. 7. Wooden frame of a plumb-line, தூக்குமட்டப்பலகை. 8. A plumb-line, தூக்குநூல். 9. A bird that makes hanging nests, also the nest of the pensile bird, the oriole, or Loxia philipina, &c., தூக்கணங்குருவி. 10. A poem, poetry, செய்யுள். 11. Height, altitude, உயர்ச்சி. 12. Comparison, similitude, உவமைச்சொல். 13. Deliberation, weighing in the mind, pondering, ஆராய்ச்சி. 14. Dancing, கூத்து. (சது.)

தூக்குக்குண்டு. Plumb-line, plumb, &c.

தூக்கணங்குருவி, *s.* As தூக்கு, 9. (*c.*)

தூக்கணங்குருவிகுரங்குக்குப்புத்திசொன்னதுபோலே. As if the Loxia bird should teach the monkey.

தூக்கிலேபோட, *inf.* To hang a person.

தூக்குந்தள்ளுமாய்க்கொண்டுபோக, *inf.* [*prov.*] To lift and push one along with force and precipitation.

தூக்குணி, *appel. n.* A person hanged or impaled. See under உண், *v.*

தூக்குநூல், *s.* As தூக்கு, 8.

தூக்கு, கிறேன், தூக்கினேன், வேன், தூக்க, *v. a.* To lift, lift up, raise, take up, hold up, உயர்த்த. 2. To weigh, to balance, நிறுக்க. 3. To hang, as a criminal, to suspend any substance, தூக்கிலேபோட. 4. To hoist a flag, suspend hangings, jewels, &c., to hoist sail, ஏற்ற. 5. To lift one up, help one up, as from a pit, &c., எடுத்துவிட. (*c.*) 6. To weigh anchor, நங்கூரம்வலிக்க. 7. (*fig.*) To deliberate, consider, investigate, ஆராய்ச்சிசெய்ய.

தூக்கிவினைசெய். Act after proper consideration.

சீர்தூக்கிப்பார்த்தான். He considered well.

தூக்கித்தூக்கியடிக்க, *inf.* To cause frequent nodding as sleepiness. 2. To shake as a child in fever.

தூக்கிப்பார்க்க, *inf.* To weigh a thing in the hand or balance. 2. See சீர்தூக்க.

தூக்கிப்பிடிக்க, *inf.* To take up a sick person. 2. To hunt out trivial faults.

தூக்கிப்பிடியடாபிணக்காடாய்வெட்டுகிறேன்.... Sirrah, take me up, and I will make them a forest of corpses.

தூக்கியெடுக்க—தூக்கிவிட, *inf.* To save from danger, ruin, &c., to help in emergency.

தூக்கியெடுத்துக்கொள்ள, *inf.* To take up or welcome one with great regard, admiration.

தூக்கிரும்பு, *s.* An iron crook, as துறட்டிரும்பு. (*R.*)

தூக்குகோல்—தூக்குங்கோல், *s.* Steelyard, balance, scales.

தூக்குமரம், *s.* Gallows, gibbet. (*c.*)

தூக்குபாலம், *s.* As தூங்குபாலம்.

தூக்குவிளக்கு, *s.* A hanging lamp.

தூக்கல்—தூக்குதல், *v. noun.* Lifting up.

தூங்கணம், *s.* A hanging, a pendent, தூக்கு. 2. The Loxia bird, தூக்கணங்குருவி; [*ex* தூங்கு.]

தூங்கணி, *s.* See தூங்கு, *v.*

தூங்கமுட்டு—தூங்கமுஷ்டு, *s.* The root of the கோரை grass, Cyperus juncifolius, *L.*

தூங்கல், *s.* Hanging, a pendent, any thing suspended, தூக்கம். 2. A dull, lazy ox, &c., மந்தமாயிருப்பது. 3. [*prov.*] One who loiters about the doors of others for food, a dangler, தொங்குவோன். (*c.*) 4. A slow tune, தூங்கிசை. 5. The slow melody of the வஞ்சிப்பா verse, as ஏந்திசைத்தூங்கல், அகவிப்பாவிசை. 6. An elephant, யானை. 7. See தூங்கு, *v.*

தூங்கலன், *s.* A lazy, idle, inactive person, சோம்பன்.

தூங்கலோசை, *s.* A slow tune.

தூங்கல்தனம், *s.* Sluggishness, want of energy.

தூங்கு, கிறேன், தூங்கினேன், வேன், தூங்க, *v. n.* To hang, to hang on, to be suspended, cling to, தொங்க. 2. To be drowsy, to slumber, to sleep, துயில. 3. To be sluggish, inactive, idle, dull, slow, heavy, மந்தமாயிருக்க. 4. To nod, hang the head from drowsiness, தலைசாய. 5. To droop, as a person, or animal, through sorrow, hunger, &c., சோர. 6. To droop, as a plant, be withered, வாட. 7. (*fig.*) To be fixed, as a fortress, wall, நிலைபெற்றிருக்க. 8. To tarry, delay, loiter, hang about, தாமதிக்க. 9. To be drowsy and move the body from side to side, as an elephant, அசைவாட. (*c.*)

தூங்கினவன்கன்றுசேக்கன்று. The calf, of the sleeper is but a bull-calf (having been changed while he slept).

தூங்கணி, *s.* A jewel formed of hanging globules of gold and precious stones, தொங்கணி.

தூங்கிப்போக, *inf.* To droop as a person, beast, plant, &c.

வியாபாரந்தூங்கிப்போயிற்று. Trade is low, on the decline, &c.

தாழ்வாரந்தூங்கிப்போயிற்று. The verandah is too low.

தூங்காமை, *v. noun.* (*neg.*) Vigilance, watchfulness.

தூங்காவிளக்கு, *s.* A lamp burning day and night.

தூங்கிசைச்செப்பல், *s.* A kind of melody of the metre called வெண்பா.

தூங்கிசைத்துள்ளல், *s.* A melody of the கலிப்பா metre.

தூங்கிசையகவல், *s.* A melody of the ஆசிரியப்பா metre.

தூங்கிருள்நடுநாள், *s.* Midnight, thick or abiding darkness.

தூங்கிவிழ, *inf.* To nod through drowsiness. (*c.*)

தூங்குபாலம், *s.* A floating bridge; sometimes தூக்குபாலம்.

தூங்குமஞ்சம், *s.* A hanging cot or bed.

தூங்குமூஞ்சி, *appel. n.* A stupid, sleepy fellow. (*c.*)

தூங்கல், *v. noun.* Dancing, கூத்து. 2. Drowsiness, &c.; used in all the meanings of the verb.

•தூசரம், s. Whitishness, the state of being somewhat white, grey, வெண்மை. (சது.) W. p. 447. D'HUSARA.

•தூசர், s. Washermen, the caste, வண்ணார்; [ex தூசு.] (சது.)

•தூசி, s. Dust, புழுதி. 2. The van of an army, கொடிப்படை. 3. Division of an army, படைவகுப்பு. 4. Horse, குதிரை. (சது.)

மலைதூசியாய்ப்பறந்தது. The mountain has flown away in dust.

தூசியின்முதனாள். The day before the battle. (R.)

தூசிபிடித்திருக்க—தூசிபடிய, inf. To be covered with dust.

தூசிதாங்கி—தூசுதாங்கி, s. A kind of cover or screen from dust set up over an eating or sleeping place. 2. An apron.

தூசிகம், s. A plant, புளியாரை, Oxalis, L.

•தூசு, s. (Sa. Du'shya.) Cloth, garment, வஸ்திரம். 2. An elephant's band, யானைக்கச்சை. 3. (நிக.) The fourteenth lunar asterism, சித்திரைநாள். 4. (for தூசி.) Dust. 5. (Beschi.) Cleanness, சுத்தம்.

தூசுப்பு, s. A plant, தண்ணீர்விட்டான், Asparagus. Willd.

•தூஷணம்—தூஷணை, s. Abuse, invective, calumny, contumely, insult, வைதல். 2. Obscenity, ribaldry, low, vulgar abuse, கூடாமொழி. 3. Blasphemy, commonly தேவதூஷணம். W. p. 491. DUSHAN'A.

தூஷணஞ்சொல்ல—தூஷணம்பேச, inf. To abuse, insult, revile.

தூஷணதிக்காரம், s. Abusive confutation.

தூஷணம்பண்ண, inf. To abuse, revile. 2. To blaspheme.

தூஷணவார்த்தை, s. Abusive words.

தூஷணன்—தூடணன், s. A Rakshasa, one of the brothers of Ravana; (lit.) a slanderer, நிந்திக்கிறவன்.

தூஷணி, v. See தூஷி.

தூஷி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [not so properly தூஷணி.] To abuse, revile, calumniate, slander, வைய. 2. To blaspheme, to vilify sacred things, பழிக்க.

தன்னைத்தூஷிக்க, inf. To mortify the bodily appetites, as an ascetic. 2. To accuse or reproach one's self for a fault.

தூஷிப்பு, v. noun. Abusing, vilifying, reviling, நிந்திப்பு.

•தூட்டி, s. A cloth, a garment, சீலை. (சது.) See தூசு.

•தூணம், s. Quiver for arrows, அம்புறாதூணி. W. p. 382. TUN'A. 2. Pillar, post, column. (See ஸ்தூணம்.) 3 Antipathy, hatred, பகை. 4. A string with a loop or rings to carry a pot, தூக்கணம்.

தூணம்போட, inf. To fasten a string on a pot for carrying.

•தூணி, s. Quiver for arrows, அம்புக்கூடு. (Sa. Tún'in.)

தூணி, s. A measure of capacity, நாலு மரக்கால், marked ௲. Compare தூணிக்கம்.

தூணிப்பதக்கு, s. Six marcals.

இருதூணி, s. Eight marcals.

இருதூணிமுக்குறுணி, s. Eleven marcals.

தூணிகர், s. Chetties, as a caste, merchants, செட்டிகள். (சது.)

தூணி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. [prov. com. தூலிக்க.] To grow full, stout, large, பருக்க.

தூணியங்கம், s. The gum of the Ficus racemosa, அத்திப்பிசின்.

•தூணீரம், s. Quiver for arrows, அம்புக்கூடு. (Sa. Tún'íra.)

•தூண், s. Pillar, post, column, obelisk, ஸ்தம்பம். (c.) 2. Staff, support, பற்றுக்கோடு. (சது.) See ஸ்தூணம்.

தூண்போலேவீங்கினது. It is greatly swollen.

தூண்மாலை, s. [prov.] Columns of flowers for ornamenting a car, a temple, &c.

தூண்டில், s. A fish-hook, மீன்பிடிக்குமுள். 2. A hook in general, கறடு. (c.)

தூண்டில்முள், s. (com. தூண்டிமுள், தூண்டிமுள்.) A fish-hook.

தூண்டிற்காரர், s. Anglers.

தூண்டிற்காரனுக்குமிதப்பின்மேலேகண்ணல்லவா... Does not the angler keep his eye on the float?

தூண்டிற்கோல், s. A fishing rod.

தூண்டில்போட, inf. To angle. 2. To entice, allure, decoy, தன்வசப்படுத்த.

தூண்டில்போட்டுவாரவிழுக்கிறான். He is enticing me to ruin, with the hope of gain to himself.

தூண்டு, கிறேன், தூண்டினேன், வேன், தூண்ட, v. a. To trim a burning lamp, விளக்குத்தூண்ட. 2. To excite, incite, instigate, stir up, as the fire, எழுப்ப. 3. To cause to go, impel; to drive a horse in a vehicle, to despatch; to propel arrows, &c., to send a person, செலுத்த. (சது.) 4. To remind, call the attention, suggest, bring to notice by word, signal or otherwise, நினைப்பூட்ட. (c.)

தூண்டாவிளக்கு, s. A kind of lamp that supplies itself with oil, and needs not constant trimming.

தூண்டிக்காட்ட, inf. To explain. 2. To show one his faults, to upbraid. 3. As தூண்டிக்கொடுக்க.

தூண்டிக்காட்டாதே. Upbraid not others.

தூண்டிக்கொடுக்க, inf. To remind one of something forgotten. 2. To enable a man to get at the point in a dispute. 3. To expose a crime to one's notice. 4. To slander.

தூண்டிப்பிடிக்க, inf. To hold up or magnify little faults; commonly in a bad sense.

தூண்டிவிட, inf. To trim a lamp. 2. To excite, incite. 3. To remind one of, to bring to notice.

தூண்டுகுச்சி, s. A pricker, for stirring a lamp.

தூண்டுகோல், s. As தூண்டுகுச்சி. 2. (fig.) A remembrancer, reminder, one who suggests, &c.

தூண்டல்-தூண்டு-தூண்டுதல், v. noun. Exciting, rousing.

தூதளை, s. [prop. தூதுளை.] A shrub bearing edible berries.

•தூதன்—தூதி—தூதிகை. See under தூது.

தூது, s. A little stone, சிறுகல். (R.)

•தூது, s. Message, communication, errand, notice, tidings, செய்தி 2. Embassage, embassy, commission, mission, ஸ்தானாபதித்துவம். (Sa. Dútya.) 3. (fig.) A negociator in love-intrigues, &c., messenger, ஒற்றன். 4. (fig.) Ambassador, envoy, ஸ்தானாபதி. 5. A kind of poem representing a lady sending messages to her lover by her female companion, or by a bird, a beetle, &c., ஓர்பிரபந்தம்; [ex Sa. Du, to go.] (c.)

தூதனுப்ப—தூதுவிட, inf. To send a message or messenger.

தூதன், s. (fem. தூதி, தூதிகை, pl. தூதர், தூதர்கள்.) A messenger, a news-carrier, செய்தியறிவிப்போன். 2. An ambassador, nuncio, ஸ்தானாபதி. 3. Agent, a spy, an emissary, ஒற்றன். 4. One who treats for another in love intrigues; சமாசாரம் பேசுவோன். W. p. 418. DUTA. 5. The messenger who carries the news of a poisonous bite to the magician; by whose postures, gestures, words, &c., the fate of the bitten person is ascertained. 6. (Chris. usage, with தேவ.) An angel.

எமதூதன், s. A messenger of Yaman, the god of death, to carry away souls to his court. See எமன், இயமன்.

தூதனிலட்சணம், s. Posture, gestures, &c., of the messenger, with news of a snake bite.

தூதன்சொல்லிலட்சணம், s. Words of the above messenger, of which the letters are counted to ascertain the patient's fate.

தூதாள், s. (pl. தூதாட்கள்.) A messenger, a spy, as தூதன்.

தூதிற்பிரிவு, v. noun. [in love poetry.] Separation of a husband from his wife to go on a message for the king.

தூதுசொல்ல, inf. To deliver a message or errand.

தூதுநடக்க—தூதுபோக, inf. To go on an errand, to act as a messenger.

தூதுணம், s. A dove which eats little stones, கல்லைப்புறா. 2. The bird that builds hanging nests, தூக்கணங்குருவி. (சது.)

தூதுணம்பறவை — தூதுணி, s. As தூதுணம்.

தூதுளை, s. [improp.] The three-lobed nightshade. See தூதுளை.

•தூதுவன், s. A messenger, ambassador, commissioner, தூதன்; [ex Sa. Dútya, message.] 2. The planet Mercury, புதன்.

தூதுளை, s. [com. தூதுவளை.] A shrub, three-lobed nightshade, Solanum trilobantum, L.

தூதுளங்கனிவாயாள். The தூதுளை mouthed (red mouthed) damsel. (p.)

தூதுளங்காய்வற்றல், s. The dried berry of the above, used as curry, or a relish with food.

தூதுளம்பழம், s. The ripe berry of the தூதுளை.

தூதுவளைநெய், s. Ghee medicated with the juice of the தூதுளை berry, used for coughs, &c.

•தூதூ, s. Imitative sounding of spitting, as children in a kind of play, உமிழ்தல். W. p. 394. T'HUT'HU.

தூதை, s. [prov.] A small pot, சிறுமட்கலம்.

தூத்துக்குடி, *s.* Tuticorin, a town south of Tinnevelly.

தூந்துதுருப்பிடித்தல், *v. noun.* [*vul.*] Tracing and pursuing, making close search, துப்புதுரப்பிசெய்தல்.

•தூபம், *s.* Incense, fragrant smoke, aromatic vapor, சாம்புகை. W. p. 445. D'HUPA. (*c.*) 2. (*for* தூமம்.) Smoke in general, fume, புகை. 3. (*fig.*) Materials used for incense, தூபவருக்கம்.

தூபகலசம்-தூபக்கிண்ணி-தூபமுட்டி, *s.* A censer.

தூபக்கால், *s.* An incense-stand, a standing censer.

தூபங்காட்ட—தூபங்கொடுக்க, *inf.* To present incense before the idol, or a great person. (See காட்டு, *v.*) 2. To perfume any thing over a censer.

தூபதீபம், *s.* Incense and light; *in religious ceremonies.*

தூபதீபாராதனைசெய்ய, *inf.* To offer incense and light in worship.

தூபவருக்கமிட, *inf.* To offer different kinds of incense.

தூபாரதண்டி, *s.* (*Tel.* దూబరదండి.) A spendthrift, ஊதாரி.

•தூபாரம், *s.* A hornless beast, as the hare, &c., கொம்பில்லாவிலங்கு. W. p. 383. TUVARA.

•தூபி—ஸ்தூபி—தூபிகை—ஸ்தூபிகை, *s.* Upper pinnacle of a temple, சிகரம். 2. (*R.*) Top of a house. 3. Peak of a mountain.

தூபிப்பிரதிஷ்டை, *s.* Consecration of the pinnacle of a temple.

தூபியெழுப்ப, *inf.* To build the pinnacle.

•தூபிதம், *s.* Heat, சூடு; [*ex Sa. D'hupa*, to heat.]

•தூமகேது, *s.* Fire, or the god of fire, அக்கினி. 2. (*also* கேது.) A comet, a falling star, வால்வெள்ளி. W. p. 446. D'HUMAKETU. 3. Evil portent, violence, தீமைக்குறி.

•தூமப்பிரபை, *s.* One of the seven hells, the hell of smoke, நரகவட்டம்; [*ex* தூமம்.]

•தூமம், *s.* Smoke, fume, புகை. W. p. 446. D'HUMA. 2. A potter's kiln, சூளை. (சது.) 3. A plant, புள்ளிநரம்பு, Cissus, *L.*

தூமாகாரம், *s.* The form or appearance of smoke, புகைவடிவு.

•தூமலம், *s.* Purple, a dark red, கருமைகலந்தசிவப்பு. W. p. 446. D'HUMALA.

தூமானம், *s.* [*prop.* துமானம்.] A casket for jewels, &c., ஆபரணச்செப்பு. (சது.)

தூமான், *s.* A seat, throne, ஆசனம்.

•தூமிரம்—தூம்பிரம், *s.* As தூமலம்.

தூமிராக்கன், *s.* [*in mythol.*] One with purple eyes; [*ex* அக்கம், eye.]

தூமை, *s.* Cleanliness, purity, cleanness, சுத்தம். (சது.) 2. White, வெண்மை. (See தூ.) 3. [*vul.*] Catamenia; மகளிர்சூதகம்; *spoken auspiciously as tending to purity.*

தூமைச்சீலை, *s.* Menstruous cloths; *in abuse, a man is called by this term.*

தூம், *s.* (*Tel.* తూము.) A measure, ஓரளவு. (*R.*)

குப்பத்தூம், *s.* A quantity of land free from tribute.

தேவதூம், *s.* Part of the produce of a field given to a temple.

செட்டித்தூம், *s.* Produce given to the head man of the village.

தூம்பா—தூம்பை, *s.* (*for.*) A bier, பாடை. (*R. Cath. usage.*)

•தூம்பிரம், *s.* Purple. See தூமிரம்.

தூம்பு, *s.* Tubularity, உட்டுளை. 2. A channel, gutter, sewer, சலதாரை. 3. Head of a channel for irrigation, மதகு. (*c.*) 4. Bambu, மூங்கில். 5. A narrow or difficult road, defile, அருநெறி. 6. Way, road, வழி. 7. Gateway, doorway, வாயில். 8. A measure of capacity, the marcal, மரக்கால். (சது.) 9. Lead, ஈயம்.

தூய, *adj.* Clean, pure, chaste. This is commonly contracted, as தூய். (*p.*)

தூயசேறு, *s.* Pure or sweet ointment.

தூயது—தூய்து, *s.* That which is pure, clean, unsullied, immaculate, holy, சுத்தம்.

தூயவர், *s.* (*plu.*) Ascetics, recluses; (*lit.*) the pure, holy, virtuous, முனிவர்.

தூயவுடம்பினனாதல், *v. noun.* Being immaculate, as a divine attribute, இறைவனெண்குணத்தொன்று.

தூயவுள்ளம், *s.* A pure mind.

தூயன்—தூயவன், *s.* A pure man.

தூயாள், *s.* Sarasvati, wife of Brahma; (*lit.*) the white, சரஸ்வதி.

தூய்தன்மை, *s.* Impurity, uncleanness, அசுத்தம்; [*ex* தூய்து, *et* அன்மை.]

தூய்தாக்க, *inf.* To clear, clean, purify, sweep, சுத்தஞ்செய்ய.

தூய்து, *s.* Purity. See தூய.

தூய்மை, *s.* Cleanness, purity, holiness, immaculateness, பரிசுத்தம்.

வினைத்தூய்மை, *s.* Innocence of an action.

•தூரம், *s.* A plant, the thorn-apple shrub, ஊமத்தை, Datura, *L.*

•தூரம், *s.* Remoteness, distance, சேய்மை. W. p. 419. DURA. 2. (*fig.*) Remoteness in consanguinity, உறவிற்கலப்பில்லாமை. 3. Difference, distinction, discrepancy, disparity, வித்தியாசம். (*c.*)

தூரத்தண்ணீர்ஆபத்துக்குதவாது. Water at a distance will not avail in emergency.

தூரநில். Stand off.

தூரவிலகு. Go away, get away.

அதற்குமிதற்கும்வெகுதூரம். That is very remote from this. 2. There is much difference between them.

அவர் மனம் வெகு தூரத்திலேயிருக்கிறது. His thoughts are very far from the thing in hand.

தூரத்திலேதெரிகிறது. It appears at a distance.

உனக்குமெனக்குந்தூரம். We differ much.

தூரகாரி—தூரதரிசி, *s.* One capable of understanding futurity or prognosticating, வருகாரியமறிவோன். (பாரதம், Curr. 14.)

தூரகாரியம், *s.* Remoteness from the subject. 2. [*in Rhetoric.*] Effect from a distant cause.

தூரசூலை, *s.* Obstruction of the menses. See சூலை.

தூரதிட்டி—தூரதிஷ்டி—தூரதிருஷ்டி, *s.* Distant sight, being far-sighted, சேய்மைப்பார்வை. 2. Foresight, view of things future, முன்னுணர்ச்சி. 3. A far-sighted man, a seer, a prophet, தீர்க்கதரிசி.

தூரதிருஷ்டிக்கண்ணாடி, *s.* A telescope. See கண்ணாடி.

தூரதேசம், *s.* A distant country.

தூரத்தார், *s.* (*Sing.* தூரத்தான்.) Persons living at a distance. 2. Distant relations.

தூரஸ்திரீ, *s.* A menstruous woman removed for the time from domestic concerns, வீட்டுக்குத்தூரமாயிருக்கிறவள்.

தூரத்திலேபோட, *inf.* To put at a distance. 2. To destine or appoint one to a distant station.

தூரத்திலேயெறிய, *inf.* To throw to a distance. 2. To reject one's advices. 3. To abandon one, to forsake one.

தூரந்தொலை, *s.* A great distance, a long way, as தொலைதூரம்.

தூரத்துறவு—தூரவுறவு, *s.* Distant relations; [*ex* தூரம் *et* உறவு.]

தூரப்பயணம் — தூரப்பிரயாணம், *s.* Journey to a distant place.

தூரமாயிருக்க, *inf.* To be distant, remote, &c. 2. To be far removed. 3 To be very different. 4. To be menstruous; (*lit.*) distant. See தூரஸ்திரீ.

தூரமானஎண்ணம், *s.* Aspiring thoughts, ambition. 2. Anxious thoughts as to futurity, &c. 3 Absence of mind, thinking of other things. 4. Thoughts abstracted from the world, and aspiring after the deity.

தூரர்க்குத்தூரன், *s.* God, as being far from those who are far from him.

தூரவைக்க, *inf.* To treat one coldly, to keep one at a distance, to be reserved in intercourse with one.

கொஞ்சத்தூரம் — கொஞ்சதூரம் — சிலதூரம். To some distance.

நெடுந்தூரம். To a great distance. 2. To a great length, extent, &c.

தூராதூரம், *s.* Various distances. 2. A very great distance, மிகுதூரம்.

தூரல், *s.* Affliction, துன்பம். (சது) 2. See தூர், *v. n.*

தூரி, *s.* A small shell, பலகறை. 2. An ox, எருது. 3. A wicker basket for catching fish, a net, வலை. (*R.*) 4. [*prov.*] A kind of swing, ஊசல். (*c.*)

தூரிக்காசு, *s.* Cowries used for money, also small shells used for cash in play.

•தூரி, *s.* A painter's brush, தூரிகை. W. p. 381. TURI.

தூரிகை—தூரிகைக்கோல்—தூரிக்கோல், *s.* A painting reed or pencil, எழுதுகோல்.

தூரிப்பிளவு, *s.* The split in a painter's reed.

•தூரியம், *s.* Any musical instrument, இசைக்கருவி. W. p. 382. TURYYA. 2. Drum beaten on festive or joyful occasions, உவகைப்பறை. 3. Large war drum, drum, the முரசு. 4. Drum in general, பறைப்பொது. 5. Pencil or reed of a painter, எழுதுகோல். 6. Fine cloth, மெல்லாடை. 7. [*ex Sa. Tura*, to kill.] Javelin, dart, கைவேல். 8. Missile weapon in general, எறிபடைப்பொது. 9. A bullock, எருது. (சது.)

தூரியக்கோல், *s.* As தூரிகைக்கோல்.

•தூரியன், s. (fem. தூரியள்.) One far off, inaccessible, &c., தூரத்திலுள்ளவன். 2. The deity, கடவுள். See தூரியம்.
செல்வித்தூரியளாவள். The goddess of felicity will absent herself from you.

தூரேத்தி, s. A plant, கம்பந்திராய், Pharnaceum, L.

தூரோணம், s. A plant, கவிழ்தும்பை, Borago, L.

தூர், s. Root, வேர். (சது.) 2. [loc. for தூர்வை.] Sticks in the bottom of a well, potsherd, &c. 3. Dregs, வண்டல். 4. (Beschi.) The outside and bottom of a vessel, பாத்திரத்தின்அடிப்புறம். (c.)
தூர்வார, inf. As தூர்வையெடுக்க.

தூர்—தூரு, கிறது, தூர்ந்தது, தூரும், தூர, v. n. To become filled up, stopped up, choked up, as a well, &c., to fill up, with flesh, close as the perforation of the ear, &c., கிம்ப. (c.)
கிணறுதூர்ந்துபோனது. The well is closed up with rubbish, &c.
தூரல், v. noun. A filling up, நிரம்புதல்.
தூர்வு, v. noun. Filling or closing up, as the perforation of the ear, a well, &c.

தூர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To fill up, stop up a well, a pit, &c., நிரப்ப. 2. To sweep, கூட்ட. (c.)
கடலைத்தூர்த்தாலுங்காரியமுடியாது. Though the sea be filled, this will not take place.
தூர்க்கை — தூர்த்தல் — தூர்ப்பு, v. noun. Filling up a well, &c.

தூர்க்கை, s. The eleventh lunar mansion of the Hindus, பூரம். (சது.) 2. See தூர், v. a.

•தூர்த்தம், s. [in combin.] Debauchery, lasciviousness, dishonesty, &c., துன்மார்க்கம். W. p. 446. D'HURTTA.
தூர்த்தகுணம் — தூர்த்தலட்சணம், s. Debauchery, seduction, libidinousness.
தூர்த்தநடை, s. The conduct of a debauchee, debauchery.
தூர்த்தமங்கையர், s. (plu.) Lascivious or unchaste women.
தூர்த்தவியாபாரம், s. Debauchery, rakishness, gallantry.
தூர்த்தன், s. (plu. தூர்த்தர்.) A debauchee, a lecher, a gallant, &c., விடன். 2. A man of guile, a knave, வஞ்சகன்.
தூர்த்தை, s. A lascivious woman.

•தூர்மம், s. The தேட்கொடுக்கி plant, Heliotropium, L.

•தூர்வகம், s. A bearing, sustaining or carrying, சுமத்தல். 2. A bullock for carrying burthens, பொதிமெருது. (சது.)

•தூர்வாசம், s. One of the eighteen secondary class of Puranas, Upa Purana, அட்டாதசஉபபுராணத்தொன்று.

•தூர்வாசன், s. [prop. துர்வாசன்.] The name of a choleric Rishi the son of அத்திரி, ஒருரிஷி. W. p. 417. DURVVASAS.

தூர்வை, s. Rubbish, soil, potsherds, &c., accumulating in a well, கிணற்றடைசு. (c.) 2. Loosened earth from digging, hoeing, ploughing, &c., மிருதுவானநிலம். 3. Dry sticks, straws, sweepings, chips, &c., செத்தை. 4. [prov.] Ground adjacent to a well, as being commonly good, mellow soil, கிணற்றைச்சார்ந்தநிலம்.
தூர்வைக்காரன், s. The sole proprietor of the soil about a well.
தூர்வைப்படுத்த - தூர்வைபண்ண - தூர்வையாக்க, inf. To dig up earth, to plough.
தூர்வையானமண், s. Loose earth.
தூர்வையெடுக்க, inf. To clear out rubbish from a well. (c.)

•தூர்வை, s. A large rooted grass. See அறுகு. (Sa. Durvva.)

•தூர்ணு, s. A grass, as முயற்புல்.

•தூலம்—ஸ்தூலம், s. Stoutness, corpulence, portliness, பருமை. 2. [in the Agama phil.] Gross, atomic materials, palpable, as distinguished from spiritual essences, பஞ்சபூதகாரியதேகம். 3. Beam of a house, வீட்டு உத்திரம்.
தூலக்கடைவீடு, s. A house with cross beams under the roof.
தூலசரீரம்—ஸ்தூலசரீரம், s. The gross material body, as distinguished from சூக்குமசரீரம், the spiritual body.
தூலபூதம்—ஸ்தூலபூதம், s. The gross elements, as நிலம். See பூதம்.

•தூலம், s. Cotton, பஞ்சு. W. p. 382. TULA. 2. The சிமுள்ளி plant. 3. A grass, கோரை.

தூலி—ஸ்தூலி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To grow stout, bulky, corpulent, &c., பருக்க.
தூலித்தசரீரம், s. The material body, as ஸ்தூலகாயம். 2. See சரீரம்.
தூலிப்பு—ஸ்தூலிப்பு, v. noun. Stoutness, corpulency, bulkiness, as of a person, beast, tree.

•தூவத்தி, s. Sword, வாள். (சது.)

தூவல், s. Globules of water, நீர்த்துளி. 2. Rain drops, மழைத்துளி. 3. Fine rain, மழைத்தூவல். 4. Rain, மழை. 5. [prov.] Painter's pencils made of cat's hair, squirrel's hair, &c., சித்திரந்தீட்டுகோல். 6. Feather, feathers of an arrow, அம்பினிறகு. 7. A pen, இறகு; [ex தூவு, v.] See தூவு, v.
தூவல்மழை, s. Drizzling rain.
தூவற்பிளவு, s. The slit of a pen.

தூவானம், s. Rain driven in, or scattered, in fine drops about a room, &c., சிறுமழை. (c.)
மழைவிட்டுந்தூவானம்விடவில்லை. Though the rain has ceased, the drizzling continues, i. e. the quarrel is over, but its effects remain.
தூவானமடிக்க—தூவானம்வீச, inf. To beat in, as rain in scattered drops.

தூவி, s. The feathers or down of birds, இறகு. 2. A swan's feather, அன்னத்தினிறகு. 3. Peacock's tail, மயிற்றோகை. 4. A fin of a fish, மீன்சிறகு. (Beschi.)

தூவு, s. Flesh, meat, ஊன். (சது.)

தூவு, கிறேன், தூவினேன், வேன், தூவ, v. a. To strew; to sprinkle salt, pepper, dust, or powder, சிதற. 2. To scatter, spread out, as grain for fowls, இறைக்க. 3. To rain, மழைபெய். 4. To put grain, &c., loosely in a measure to make it measure more, சிறிதுசிறிதாகப்பெய்ய; [ex Sa. Dhu, to agitate.]
தூவியளக்க, inf. To put grain loosely into a measure, in measuring.
தூவிவிட, inf. To strew curry powders. 2. (fig.) To spread a rumor.
தூவல், v. noun. Shedding, spilling. 2. Raining, மழைபெய்தல்.

•தூளனம்—தூளம், s. Dust, தூள்.

•தூளி, s. Dust, புழுதி. W. p. 446. D'HULI. 2. Pollen, பராகம். 3. Neighing of a horse, குதிரைகனைப்பு. (சது.)
தூளிப்படலம்—தூளிபடலம், s. A drift or cloud of dust.
தூளியாக்க, inf. (com. நிர்த்தூளியாக்க.) To reduce to dust, to demolish.

தூளி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. [prop. தூலி.] To grow stout, corpulent, bulky, &c.

•தூளிதம், s. That which is reduced to powder; dust, தூளாக்கப்பட்டது. 2. Any thing smeared on, விபூதி.
தூளிதம்பண்ண, inf. To pulverize, reduce to powder, dust, &c. 2. To rub on sacred ashes, &c.

•தூள், s. [a change of தூளி.] Dust, powder, particle, தூசு. 2. Medicinal powder, சூரணம். 3. Curry powder, கறித்தூள். 4. Snuff, as மூக்குத்தூள். 5. Any thing small collectively, as fishes, stones, roots, &c., spoken diminutively, பொடி. (c.) 6. The lowest class of pearls being very small, சிறுமுத்து. 7. Pollen of flowers, பூந்தாது.
தூளாக்க, inf. To pulverize, reduce to powder, levigate.
தூட்கல்லு, s. [prov.] Small stones, bricks, &c., பொடிக்கல்.
தூள்போட, inf. To take snuff. 2. To strew curry powder, &c., on the curry before cooking.
தூள்மீன், s. [prov.] Small fish.
தூள்விறகு, s. Small firewood.

தூறல், s. As தூற்றல். 2. See தூறு, v.

தூறு, s. Bushes, shrubbery, low jungle; brush-wood, thick underwood, சிறுசெடி. 2. Calumny, reproachful rumor, slanderous report, பழிச்சொல். (c.) 3. Assemblage, multitude, கூட்டம். (சது.)
ஆறுகொண்டதுபாதிதூறுகொண்டதுபாதி. The river has destroyed half, and the jungle half; said of useless waste.
தூறன், s. [prov. vul.] One who is a disgrace to his people, தப்பன். 2. A rake, a debauchee, தூர்த்தன்.
தூறுக்க, inf. To defame, to asperse one's character.
தூறுப்போக, inf. To be rumoured abroad.
தூறுதலை, s. A rough shaggy head.
தூறுதலையன், s. (fem. தூறுதலைச்சி.) A person with shaggy hair.
தூறுபட, inf. To spread, as a rumor, பரவ. 2. To become bushy, அடைபட. 3. To suffer reproach, பழிசொல்லப்பட.
தூறுபண்ண, inf. To utter invectives or reproaches, to defame, அவதூறுசெய்ய.
தூறுபேச, inf. To slander, asperse.
தூறுமாறு, s. [prov.] Bad conduct, a vicious life.
தூறுவாயன், s. A slanderer.
தூற்றுக்காடு, s. A thicket. See சிறுதூறு.

தூறு, கிறது, தூறினது, ம், தூற, v. n. To drizzle as rain, மழைதூறிக்க. (c.) 2. To sprout forth, become bushy as thickets, செடிக்க. 3. To become shaggy and rough, as hair, சடைபற்ற. [prov.] 4. To defame, slander, நிந்திக்க. 5. To spread, as a report, செய்திபரம்ப.

தூறியமயிர், s. Rough, shaggy, uncombed hair.

தூறல், v. noun. Slandering, பழிசொல்லல். 2. As தூவல், 2, 3, 4.

தூறுபுட்டம், s. The சீந்தில் creeper, Menispermum, L.

தூற்றல், s. Drizzling rain, மழைத்துளி. (c.)

தூற்று, கிறேன், தூற்றினேன், வேன், தூற்ற, v. a. To scatter, disperse, spread or strew abroad, சிதற. 2. To clean chaff from corn in the wind, to winnow, செல்லுதலைய தூற்ற. 3. To cast dust in the air, புழுதிதூவ. 4. To squander, lavish, waste, வீண்செலவுசெய்ய. 5. To asperse, slander, spread evil reports, கோட்சொல்ல. 6. To abuse, பழிகூற. 7. To dishevel the hair, தலைமயிரைத்தூற்ற. (c.)

தூற்றித்தூற்றென்றுதூற்றுகிறான். He is abusing, vilifying, &c.

தூற்றுநெல், s. Unsifted rice.

தூற்றுளி, s. A prodigal, a profligate, a squanderer, ஊதாரி.

தூற்றுப்பொலி, s. Unwinnowed corn.

தூற்றுளித்தனம், s. [prov.] Prodigality, &c., as துர்த்தத்தனம்.

தூற்றுகூடை — தூற்றுக்கூடை, s. A winnowing basket.

தூற்றுமுறம், s. A winnowing fan.

தூற்றுவாய், s. The wind-ward side in winnowing—oppos. to முன்வாய்.

தூற்று—தூற்றுதல், v. noun. Winnowing, clearing chaff from corn by wind, தூற்றுகை. 2. Slander, aspersion; spreading a slanderous report, பழிப்பு.

தூற்றுத்தலையன், s. A tree, பிராய், Trophis, L.

தூற்றுமைக்கொற்றான், s. A creeper. ஓர்கொற்றான்.

•தூனம், s. Pain, affliction, வருத்தம். 2. Motion, அசைவு. W. p. 419. Duna.

# தெ

தெ. A syllabic letter compounded of த் and எ.

தெகிடி, s. (for.) [vul.] A kind of gambling, ஓர்விளையாட்டு. 2. (fig.) Fraud, dishonesty, prevarication, getting another's property by stratagem, புரட்டு.

தெகிட்டு, s. [corrup. of தெவிட்டு which see.] Nausea, symptoms of vomiting.

தெகிள், s. A kind of creeper used for withes, ஓர்படர்கொடி.

தெகிளங்கொடி, s. Withes of this creeper.

தெருட்டி — தெருட்டிகை, s. A plant, தேட்கொடுக்கு, Heliotropium, L.

தெருளம், s. Fulness, repleteness, நிறைவு. 2. Overflowing, abundance, பெருக்கு. (சு.)

தெருள்—தெருளு, கிறேன், தெருண்டேன், வேன், தெருள, v. n. To be full, to abound, overflow, பெருக. (p.)

தெருளல், v. noun. Abounding, &c.

•தெக்கணம், s. South. 2. Right side. See தெட்சணம்.

தெக்கணகுமரி, s. Cape Comorin.

தெங்கணம், s. (Tel. తెంకణము.) The name of a country, one of the sixty-six, ஓர்தேசம்.

தெங்கு, s. The cocoa-nut tree, தென்னைமரம், Cocos nucifera, L. (p.)—Note. The vowel is often lengthened in combination. See தேங்காய்.

தளரவளர்தெங்குதாளுண்டநீரைத்தலையாலேதான்தருதலால். The fine and well grown cocoa-nut tree, returns from its top the water it drank by its roots. (மூதுரை.)

தெங்கங்காய், s. Cocoa-nut. (p.)

தெங்கந்தீவு, s. One of the seven islands. See தீவு.

தெங்கமரம், s. The cocoa-nut tree.

•தெசம், s. Ten. For the compounds of this word, see தசம்.

•தெட்சகன், s. A supporter, a maintainer, manager, savior. இரட்சகன். 2. One of the eight serpents which support the earth. See தட்சகன்.

•தெட்சணம்-தெட்சிணம், s. South, தெற்கு, &c. See தக்கணம், தட்சணம்.

தெட்சணகயிலாயம், s. Sacred places of Siva, as சிதம்பரம், காளத்தி, &c.—oppos. to உத்தரகயிலாயம்.

தெட்சணதேசம், s. Countries southward of mount Meru, especially those in South India.

தெட்சணாவிருத்தம், s. A chank whose spiral turnings are to the right, வலம்புரி.

•தெட்சணை, s. Present or fee to a Guru, school-master, &c. (c.) See தட்சணை.

தெட்டத்தெளிய, adv. [prov.] Evidently, plainly, in an obvious manner, மிகத்தெளிய. (c.)

தெட்டத்தெறிக்க, inf. [prov.] To burst asunder in the midst, நடுவேபிளக்க. தெட்டத்தெறிப்பான். The cursed one who will burst asunder. (in abuse.)

தெட்டு, s. A partition between fighting elephants, யானைக்கவயம்.

தெட்டு, கிறேன், தெட்டினேன், வேன், தெட்ட, v. a. To deceive, cheat, defraud, swindle, எத்த. Compare தட்டு, v.

தெட்டிக்கொண்டுபோக — தெட்டிப்பறிக்க, inf. To cheat one of something and carry it off.

தெட்டல்—தெட்டு, v. noun. Deception, cheating, எத்துதல்.

தெட்டிலேயகப்பட, inf. To be deceived, taken in, entrapped.

தெட்டிலேவயிறுவளர்க்க, inf. To live by fraud.

தெட்பம், s. Maturity or profundity of knowledge, also maturity of gems, முதிர்ச்சி. See தெள். (சு.)

தெண், adj. Clear, transparent, &c. See தெண்மை. (p.)

தெண்டிரை, s. Sea, கடல்; [ex திரை, wave.]

தெண்ணீர், s. Clear water, தெளிநீர்.

•தெண்டம், s. Amercement, அபராதம், &c. See தண்டம்.

•தெண்டன், s. Obeisance, &c. See தண்டன்.

தெண்டி, v. a. Chastise, &c. See தண்டி.

•தெண்டு, s. Staff, club, cudgel, &c., தடி. See தண்டு, 4, 7, and 11.

தெண்டு, கிறேன், தெண்டினேன், வேன், தெண்ட, v. a. [prov.] To raise up, push aside with a lever, &c., கிளப்ப. 2. (impers.) To affect the joints, limbs, &c., as cramps, சம்புவலிக்க. (Jaffna usage.)

தெண்டுதடி, s. A lever.

தெண்டை—தெண்டகை, s. (Tel. ఒండగ.) Pressure, urgency, நெருக்கிடை.

தெண்டைக்குத்தேவை — தெண்டகைக்குத்தேவை, s. Unwillingness, வேண்டா வெறுப்பு. (c.)

தெண்டைக்குத்தேவையாய். Unwillingly, compelled by custom, urging, pressing, &c.

தெண்மை, s. Clearness, perspicuity, lucidness, transparency, தெளிவு. 2. Skill, penetration, intelligence, firmness or competency of mind or body, சாமர்த்தியம். See தெள். (p.)

•தெத்தம், s. A gift, &c. See தத்தம்.

தெத்து, s. [prop. தெற்று, which see.] A hedge of bambu or thorns, &c.

தெத்து, v. a. and n. [prop. தெற்று.] To plat, &c.; also to stammer.

தெத்துமாற்று, s. Tricks, lies. See தந்திரமாற்று. (R.)

தெந்தனு, s. Syllables used in humming tunes, singing interludes, &c., தாளக்குறிப்பு. (c.)

தெந்தி, s. A tree, நேர்வாளம், Croton, L.

தெப்பம், s. (Tel. తెప్ప.) Raft, float, &c., புணை. (c.) Sometimes தெப்பல்.

தெப்பக்காரன், s. The man who pushes the raft.

தெப்பக்குளம், s. The pool in which an idol floats on a festival day.

தெப்பத்திருநாள்—தெப்பத்திருவிழா, s. The festival when an idol is floated on the தெப்பக்குளம்.

தெப்பல், s. (Tel. plu. దెబ్బలు.) Beating, flogging, அடிக்குமடி. (c.) இவனுக்கு நல்லதெப்பல்வாங்கினான். He has had a sound flogging.

தெம்பல், s. [prov.] Hardening of ploughed land by heavy rain. See தம்பல்.

தெம்பாங்கு, s. [prov.] A kind of common tune, ஒர்வகைச்சந்தம். (c.)

தெம்மாடி, s. A senseless person, a fool, அறிவீனன். See திம்மன்.

தெம்முனை, s. Battle field, இரணகளம்; [ex தெவ், war.] (p.) 2. [vul. for தென்முனை.] Southern point.

தெய்தெய், s. Syllables used in singing and dancing, தாளக்குறிப்பு. (c.)

தெய்தெய்யெனல், v. noun. Being furious or angry; (lit.) dancing vehemently.

தெய்தெய்யென்றுவந்துவிழுந்தான். He came to the attack with great fury.

தெய்தெய்யென்றெழும்பினான். He rose in great fury.

தெய்ய, A poetic expletive of very rare use, ஒரிடைச்சொல். (p.)

சொல்லேன்றெய்யநின்னொடுபெயர்த்தே. I will not tell you again.

•தெய்வதம், s. Deity, divinity, தெய்வம். (சது.) (Sa. Daivata.)

•தெய்வம், s. God, the Godhead, Deity; thus used in the neuter by good writers, கடவுள். 2. Fate, destiny, or the influence of actions performed in previous births, pursuing the soul and impelling to actions good or bad, ஊழ். 3. One of the eight kinds of marriage, எண்வகைமணத்தி லொன்று. W. p. 425. Daiva. 4. A year, வருடம். (சது.) 5. One of the five யாகம், ஐவகையாகத்தொன்று.

தெய்வஞ்சீறிற்றவமாறும். When the god is angry the penance is nullified.

தெய்வகளை, s. Lustre of countenance from the indwelling of Deity. See களை.

தெய்வகற்பனை, s. Divine order or injunction, especially as attended by an oracle.

தெய்வகாரியம், s. Divine or sacred things, concerns of religion, &c.

தெய்வக்காவல், s. Divine protection.

தெய்வசகாயம், s. Divine assistance.

தெய்வசபை, s. The divine presence. See தேவசபை.

தெய்வசாட்சி, s. God as witness. 2. The deity as all pervading. 3. Appeal to the Deity, oath.

தெய்வசிந்தனை, s. Divine meditation, contemplations on the deity, &c., pious thoughts.

தெய்வசுரபி — தெய்வப்பசு, s. The cow of the gods, காமதேனு.

தெய்வசோதனை, s. Providential trials.

தெய்வச்சாயல், s. Divine likeness, as in the countenance of a devout or holy person, chaste matrons, &c.

தெய்வச்செயல், s. Providential occurrence, divine providence.

தெய்வதத்துவம், s. Divine power. See தேவதத்துவம்.

தெய்வதுரோகம், s. Sin immediately against the Deity, as profanation, blasphemy, sacrilege, &c., apostasy, &c.

தெய்வதூஷணம், s. Insult offered to the Deity, blasphemy, &c. See தேவது ஷணம்.

தெய்வத்தாபனம்—தெய்வஸ்தாபனம், s. Inspiring an image with the god represented.

தெய்வத்தீர்வை, s. Divine judgment.

தெய்வஸ்துதி, s. Divine praise.

தெய்வத்துவம், s. The Godhead, Deity, the divine nature. See தேவத்துவம்.

தெய்வநாஸ்திகன், s. An atheist, but applied by the orthodox Hindus to any one who denies the divine authority of the Vedas, or doubts that of the Puranas.

தெய்வநிந்தனை, s. Offence or insult offered to the Deity, blasphemy, &c.

தெய்வநியமம், s. Judgment from heaven, divine decree, providential occurrence.

தெய்வபக்தி, s. Devotedness, piety, religious zeal, trust in God for a good or bad destiny.

தெய்வபூசை, s. Pûja to a god.

தெய்வப்பசு, s. See தெய்வசுரபி.

தெய்வப்புலமை, s. Divinely inspired poetry—applied often to the குறள் and இராமாயணம்.

தெய்வப்பெண், s. A female of Swerga.

தெய்வப்பெயர்த்தொகுதி, s. A classification of the names of the gods, and whatever is regarded divine, or celestial, &c., as given in நிகண்டு.

தெய்வமணம், s. One of the eight kinds of marriage. See மணம். 2. Grateful odors, as திவ்வியமணம்.

தெய்வமத்தியஸ்தம், s. God being judge, a solemn appeal to the Deity.

தெய்வமந்திரி, s. The planet Jupiter, as instructor of the gods, வியாழன்.

தெய்வமுனி, s. Munis of the race of Devas, as நாரதர், குதர், &c.

தெய்வமுனிவு, s. Divine indignation.

தெய்வமுன்னிலை, s. Divine presence spoken with a conscientious regard to God.

தெய்வம்வழிபடல், v. noun. Worshiping of God, divine worship.

தெய்வயானை, s. [improp. தெய்வானை.] A female of Swerga nurtured by the elephant ஐராவதம், and afterwards married to the god Skanda.

தெய்வயானைகாந்தன், s. Skanda as husband of Devayanai.

தெய்வவணக்கம், s. Divine worship. 2. Invocation, &c., of some god at the beginning of a treatise.

தெய்வவிசுவாசம், s. Confidence or faith in God. 2. Belief in the divine existence, providences, &c.

தெய்வவிமானம், s. An aerial car, said to move through the sky at the pleasure of the occupier, திவ்வியவிமானம்.

தெய்வவிரதன், s. Bhishma, வீடுமாசாரி. See தேவவிரதன்.

தெய்வாதீனம், s. Divine right, disposal, or direction, தேவசுவாதீனம். 2. Divine providence, தெய்வச்செயல்.

தெய்வாதீனமாய்வருவது. That which happens providentially.

தெய்வேத்தினம் — தேவேத்தினம், s. Divine providence. 2. Destiny or the influence of actions in a former birth.

தெய்வோபாசனை, s. (St.) Divine worship, divine service. See உபாசனை.

•தெய்விகம்—தெய்வீகம், s. That which is divine, which appertains to God, திவ்வியம். (Sa. Daivika.) 2. Divine affairs, events, injunctions, divine providence, தெய்வச்செயல். 3. Transcendence, magnificence, super-eminence, as an august or splendid scene, மகிமை. 4. [vul.] Chance, தற்செயல்.

இராசிகதெய்வீகம், s. Earthly or divine power. See under இராசன்.

இராசிகதெய்வீகம்எப்படிபோதெரியாது. How it will be, we cannot tell.

தெய்வீகத்தாற்பிழைத்தேன். I providentially escaped.

தெய்வீகமாய் மண்டபம் இடிந்து அவன் தலைமேல் விழுந்தது. By chance the pavilion fell upon his head.—Note. This form is used for chance, but implies a divine providence.

தெய்வீகமானான். He has obtained likeness to God, is beatified.

தெய்வீகபுருஷன், s. A divine man.

•தெரி, கிறது, ந்தது, யும், ய, v. n. To be seen or perceived, to be ascertained by the senses or mind, to become evident, தோன்ற. 2. To be known, distinguished, understood, comprehended, விளங்க. (c.) Usually, in the neuter, with a dative. கிறேன், ந்தேன், வேன், ய, v. a. To select, choose, make a selection, to prefer, தெரிந்தெடுக்க. 2. To investigate and comprehend, ஆராய. 3. To search for, to seek, தேட.

ஏற்றகணைதெரிந்தான். He chose a suitable arrow. (p.)

தெரிந்துசெயல்வகை. Precautions for success before any undertaking.

தெரிந்துதெளிதல். Clearly understanding.

தெரிந்தெழுதுதல். Writing correctly, with full information.

தெரிந்துவினையாடல். A king's discreet use of all instruments of government.

பலவிதமுந்தெரிந்துரைத்தான். He carefully considered and spoke.

தெரிகடை, s. [prov.] Refuse, leavings, the best things having been selected.

தெரிகவி, s. [prov.] Selections of poetry, திரட்டுகவி.

தெரிசொல், s. Veracity, truth, சத்தியம். 2. Cause as discovered or alleged. (சது.) 3. Glossary, அருமொழிவிளக்கம்.

தெரிதர, inf. To appear, &c., தோன்ற. (p.) 2. To know, அறிய. (p.)

தெரிநிலை, s. Conspicuousness, definiteness, perspicuity, விளக்கநிற்பது. 2. [in gram.] A division of particles expressive of certainty as to time, காலந்தெரி வதிற்பது.

தெரிநிலைவினை, s. Declarative verb, one of the two classes of verbs, that which expresses action, suffering, &c., generally containing a characteristic of tense—oppos. to குறிப்புவினை. See வினை.

தெரிநிலைவினைமுற்று, *s.* A declarative verb in the terminate form.

தெரிநிலைவினையெச்சம் — தெரிநிலைவினைவினையெச்சம், *s.* The declarative verb in an unfinished form, as infinitives, gerunds, &c., embracing especially twelve varieties, and requiring a terminate verb, appellative, &c., to complete the sense.

தெரிந்தவழி, *s.* A known way. *(c.)*

தெரிந்தவன், *appel. n.* A man who knows.

தெரிந்துகொள்ள, *inf.* To understand. 2. To choose, select things or persons, to elect, pick, cull.

தெரிந்துவைக்க, *inf.* To select and set aside.

தெரியப்பட, *inf.* To be known, seen, to appear. 2. *(adv.)* Visibly.

தெரியப்படுத்த, *inf.* To explain, make known, reveal.

தெரியவர, *inf.* To become known, perceived, understood.

தெரியாத்தனம்—தெரியாத்தன்மை-தெரியாப்புத்தி, *s.* Ignorance, simplicity.

தெரியாநிலைவினை, *s.* A symbolic verb. See குறிப்புவினை.

தெரியாப்பிரகாரம், *adv.* Unwittingly, unknowingly.

தெரியாமை, *neg. v. noun.* Ignorance, அறியாமை. 2. Invisibility, imperceptibility, தோன்றாமை.

தெரியிழை, *s.* A female, a lady wearing choice ornaments, பெண். *(p.)*

தெரிவிக்க, *inf.* [*caus.*] To explain, point out, show, teach, அறிவிக்க. 2. To bring to light, manifest, reveal, display, வெளிப்படுத்த. *(c.)*

தெரிவினைப்பெயரெச்சம், *s.* Participles of the declarative verb, being one for each of the three tenses.

தெரியல், *v. noun.* Appearing, தோற்றல். 2. Searching, investigating, selecting, comprehending, ஆராய்தல்.

தெரிவு, *v. noun.* Choosing, picking, selecting, ஆராய்வு. 2. Any thing select, chosen, &c., superior in quality, a selection, election, choice, picking, தெரிந்தெடுக்கப்பட்டது. 3. Appearance, visibility, தோற்றம். 4. That which is known, ascertained, அறியப்பட்டது. 5. *s.* Knowledge, அறிவு.

தெரிவிட, *inf.* [*prov.*] To choose, select, cull, தெரிந்துகொள்ள.

தெரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To make evident, bring to view; to cause one to see, know or perceive, தோன்றச்செய். 2. To tell, mention, say, declare, சொல்ல. 3. To write, inscribe, எழுத. [*a change of* தெரிவிக்க.] *(p.)* 4. [*prov.*] To separate large and small gems, &c., also different kinds of grain by a fan, &c., கொழிக்க.

தெய்வமாக்கதைமாட்சிதெரிக்கவே. To make known the excellency of this divine tale. (இராமா.)

தெரித்தல், *v. noun.* Writing, எழுதுதல். 2. Saying, சொல்லுகை. 3. Being perverse, மாறுபடு. *(சது.)*

தெரிப்பு, *v. noun.* Informing, acquainting; communicating information, அறிவிப்பு. 2. Saying, mentioning, telling, சொல்லுகை. 3. Writing, inscription, எழுதுகை. 4. Separation of different particles by shaking or sifting in a fan, கொழிப்பு. 5. [*prov.*] Things separated, assorted, chosen, கொழிக்கப்பட்டவை. 6. [*in the* கொக்கரை *play.*] Selecting stones, &c.

•தெரிசனம், *s.* A view of a deity, a vision, &c. See தரிசனம்.

•தெரிசனை, *s.* A vision, an auspicious sight, &c. See தரிசனை.

தெரிசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To obtain an auspicious sight, &c. See தரிசி.

தெரிப்பு, *s.* A note of hand. *(R.)* 2. See தெரி, *v. a.*

தெரிமா, *s.* The lion as the beast that seeks for prey, சிங்கம்; [*ex* தெரி, searching, *et* மா, beast.] *(சது.)*

தெரியலர், *s. (plu.)* The ignorant, unenlightened, uninformed, அறிவிலார். 2. Enemies, பகைஞர். *(p.)*

தெரியல், *s.* A flower garland, பூமாலை. *(சது.)* 2. See தெரி, *v. n.*

தெரிவு, *v. noun.* Choosing, &c. See தெரி, *v. n.*

தெரிவை, *s.* A woman from twenty-six to thirty-one years old, *(lit.)* of discreet age. (See பருவம்.) 2. A woman in general, பெண்பொது. *(p.)*

தெரு, *s.* [*vul.* தெருவு.] High way, public road, வீதி. 2. Street, வழி. *(c.)*

என்குறையைத்தெருவிலேவையாதே. Expose not my faults; *(lit.)* put not my faults in the streets.

சந்துதெருவும்ஒருதெருவாய்த்திரிய. To walk the streets, especially as a harlot.

தெருக்கதவு—தெருவாசல், *s.* A street-door.

தெருக்காவல், *s.* Patrole of the streets.

தெருவிலேபோக, *inf.* To pass through the street. 2. To be wasted, squandered, வீணாக.

தெருவிலேபோட, *inf.* To throw into the street. 2. To be negligent, to waste.

தெருவீதி, *s.* A street, a highway.

தெருட்சி, *s.* See தெருள், *v.*

தெருட்டு, கிறேன், தெருட்டினேன், வேன், தெருட்ட, *v. a.* To convince, inform, persuade, enlighten the mind, தெளிவிக்கச்செய். 2. To confirm, assure, console, வற்புறுத்த; [*ex* தெருள், *v.*] *(p.)*

தெருட்டு, *v. noun.* Puberty of a girl, இருதுவாகுகை. 2. Illuminating, convincing, informing, consoling, அறிவிப்பு.

தெருட்டுக்கலியாணம், *s.* [*vul.* தெரட்டுக்கலியாணம்] The consummating marriage ceremony. 2. Ceremony at the time of a girl's becoming marriageable.

தெருட்டல், *v. noun.* As தெருட்டு, 2.

தெருமரு, கிறேன், தெருமந்தேன், வேன், தெருமர, *v. n.* To whirl, be giddy, சுழல. 2. To fail in mind, be perplexed, be in a dilemma, to sink under distress, மயக்கமுற்றிருக்க. *(p.)*

தெருமந்திசைத்தைப்புகுஞ்சுழன். He became giddy, or confused in mind.

தெருமரல், *v. noun.* Being giddy, சுழலல்.

தெருள், *s.* Knowledge, intelligence; clear perception, comprehension, தெளிவு.—oppos. to மருள்.

தெருளுடைமை, *s.* Clearness of knowledge, sageness, wisdom, அறிவுடைமை.

தெருள் — தெருளு, கிறேன், தெருண்டேன், வேன், தெருள, *v. n.* To be enlightened, be convinced, to grow in knowledge, தெளிய. 2. To perceive, ascertain, become free from doubt, to understand clearly, ஐயமற்றறிய. 3. [*improp.* திரளு, தெரளு.] To arrive at puberty, as a girl, இருதுவாக.

தெருண்டபெண், *s.* A girl grown marriageable.

தெருண்டமனம், *s.* An intelligent, well informed mind, mature understanding.

தெருண்டமேலவர், *s. (plu.)* Great and learned men, அறிவிற்சிறந்தோர்.

தெருட்சி, *v. noun.* Maturity of knowledge, comprehension, understanding. 2. Clearness, தெளிவு. *(சது.)*

தெருளல் — தெருளுதல், *v. noun.* As தெருட்சி, 2.

தெலுகு—தெலுங்கம் — தெலுங்கு, *s. (Tel.* తెలుగు.) [*sometimes written* தெலிங்கம்.] The Telugu country, தெலுங்குதேசம். 2. Telugu language, தெலுங்குபாஷை. *(c.)*

தெலுங்கன், *s. (fem.* தெலுங்கச்சி.) A Telugu person, Gentu.

தெல்—தெல்லு, *s.* [*prov.*] A kind of play; also the thing used in the play, தெல்லுவிளையாட்டு. *(c.)* 2. A stage in a journey by palankeen, or the place of changing bearers, அஞ்சலிடம். 3. Oblong plats or patches in a field, bounded by small ridges, செய்ம்பாத்தி.—*The compounds are limited to Jaffna.*

தெல்லாட்டம், *s.* Playing with தெல். 2. Fraud, trick, deception, வஞ்சனை.

தெல்லுக்கட்ட, *inf.* To construct small ridges between plats in rice-fields.

தெல்லுக்காரர், *s.* Bearers for change.

தெல்லோட்டு, *v. noun.* Continual teasing, pressing, harassing, அலைக்கழிப்பு.

தெவம், *s.* The mango tree, மாமரம்.

தெவிட்டு, கிறேன், தெவிட்டினேன், வேன், தெவிட்ட, *v. n.* To be sated, glutted, overloaded as the stomach, to be cloyed, பூக்க. 2. To loathe from excess, to nauseate, to vomit, வாந்திசெய்ய. 3. To grow full, நிறைய. *(c.)* 4. *(சது.)* To think, reflect, நினைக்க. 5. To sound, ஒலிக்க.

பார்க்கப்பார்க்கத்தெவிட்டவில்லை. However much it is examined, it never cloys.

தெவிட்டாத்தித்திப்பு, *s.* Sweets that do not cloy.

தெவிட்டல்—தெவிட்டு, *v. noun.* Nausea from sweet things, the sight of medicines, &c., உவட்டு. 2. Loathing of food from satiety, வெறுப்பு.

தெவிளு — தெவிள், கிறேன், தெவிண்டேன், வேன், தெவிள, *v. n.* To grow full, நிறைய. *(p.)*

தெவிளல், *v. noun.* Being full.

தெவு, *s.* A taking, receiving, கொள்ளுதல். *(p.)*

நீர்தெவுநிரைத்தொழுவர். The ploughmen who owned the cows that were taking water. *(சது.)*

தெவுட்டு, கிறேன், தெவுட்டினேன், வேன், தெவுட்ட, v. n. To become full, to fill, நிறைய. 2. To abide, stay, தங்க. 3. v. a. To gargle the mouth, கொப்பளிக்க. (நிகா.) 4. To stop, choke up, அடைக்க. 5. To hide, conceal itself, மறைக்க. 6. To think, நினைக்க.

தெவுட்டல், v. noun. Becoming full, &c., used in all the meanings of the verb.

தெவுள்—தெவுளு, கிறது, தெவுண்டது, தெவுளும், தெவுள, v. n. To overflow, increase, பெருக. (p.)

தெவுளல், v. noun. As தெவிளல்.

தெவ், s. Enmity, hostility, பகை. 2. War, battle, contest, போர். 3. Opposing power, enemy, பகைவர். (p.)—*Note.* When the following word begins with ம், the வ் is changed into ம்; as, தெவ்—முனை is தெம்முனை, the battle field.

தெவ்வர், s. Foes, enemies, பகைவர்.

தெவ்வர்முனைப்பதி, s. A hostile encampment.

தெவ்வினை, s. Battle, warfare, contest. (சது.)

தெவ்வு, s. The moon, சந்திரன். 2. [*ex* தெவ்.] Enmity, hostility, animosity, பகை. 3. Battle, contest, war, போர். 4. Opposing force, the enemy, சத்துரு. (சது.)

தெழி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To shout, vociferate, whoop as in driving cattle, scaring away birds, &c., அதட்ட. 2. To tread out corn, தவைக்க. (சது.) 3. v. n. To sound, din, roar, பெரிதொலிக்க. 4. To be angry, rage, bluster, or vociferate through anger, சினக்குறிப்புக்காட்ட.

கனிறக்கரும்பகட்டுளுறெழித்து. Trodden out by the deep blue colored buffaloes. (கைட.)

தெழித்தல்—தெழிப்பு, v. noun. Sound, shout, vociferation, bluster, noisy rage.

தெளி, கிறது, ந்தது, யும், ய, v. n. To become clear, limpid, transparent, by the settling or subsiding of sediment, தெளிவாக. 2. To become serene or clear as the sky, the mind, the countenance; to clear off, to become bright as a shining body, the water of a gem, &c., ஒளிர. 3. To become white as cloths by washing, வெள்ளையாக. 4. To pass away, as scarcity, an epidemic, dulness, sleep, fear, &c., to cease as war, doubt, error, ignorance, பஞ்சமுதலியனஒழிய. 5. To become evident, manifest, obvious, clear, as the meaning of a passage, an idea, &c., வெளிப்பட. 6. To revive as persons or animals from sleep, sickness, &c., எழுந்திர. 7. To grow stout, fat, sleek, as persons or animals, கொழுக்க. 8. To revive, as vegetables, to thrive, செழிக்க. 9. To become clear as sound, the voice, &c., கன்தொலிக்க. 10. To take counsel with another, ஆலோசிக்க. (c.) 11. [*prov.*] To turn out clear, as profit, to accrue as gain, to be clear gain, after deduction, இலாபமாக. 12. To take an oath, as தெய்வக்கொ சிய. 13. v. a. [*with personal endings.*] To consider, deliberate, investigate, ruminate, ஆராய. 14. To pierce, perforate, தொளைக்க. 15. To know, understand, perceive, experience, அறிய.

தெளிஞன்—தெளிந்தவன், s. A learned or wise man, a sage, சற்றோன்.

தெளிநீர்—தெளிந்தநீர், s. Pure, clear water.

தெளிந்தபுத்தி, s. A well informed judgment, mature understanding, clear knowledge or discernment, profound wisdom.

தெளிந்தமனம், s. A lucid mind, clear, free from doubt, obscurity, &c.

தெளிந்தவர், appel. n. (plu.) Clear minded, intelligent persons.

தெளிந்துகொடுக்க, inf. [prov.] To remove doubt, *by an oath.* (c.)

தெளிந்துவர, inf. To become clear, to recover from a swoon, &c.

தெளிமணி, s. A gem of good water.

பட்டுத்தெளிய, inf. To learn by experience. See படு, v.

பயந்தெளிய, inf. To become free from fear, terror, &c.

பேசித்தெளிய, inf. To speak on a subject and come to a conclusion.

வியாதிதெளிய, inf. To be cured of disease.

தெளிய, inf. [*adverbially.*] Clearly, distinctly, evidently, obviously.

தெளிவிக்க, inf. To make clear, serene, &c., வெளியாக்க. 2. To clarify, refine, தெளியச்செய்ய. 3. To explain, illustrate, விளக்க. 4. To inform, clear away doubts, சந்தேகந்தீர்க்க. 5. To dispel fear, sorrow, apprehension, anger, bashfulness, drunkenness, swooning, delirium, sleep, &c., நீக்க. 6. To pour off, strain, decant, வடிக்க. 7. To fatten, make plump, கொழுப்பிக்க. (c.)

தெளிவு, v. noun. Clearing or flowing off from a sediment.

தெளி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To clear or free from turbid or feculent matter; to clarify, to refine, to polish, to clean, சுப்புரவாக்க. 2. To separate large from small particles by a fan, புடைக்க. 3. To heave up sand, pearls, &c., கொழிக்க. 4. To assure, convince, confirm, நிச்சயப்படுத்த. 5. (*for* தெழி.) To sound, make a noise, ஒலிக்க. 6. To drain off, draw off, pour off, clear from sediments, decant, வடிக்க. 7. (c.) To scatter seed, விதைக்க. 8. To strew, sprinkle, தூவ.

பனிநீர்தெளிக்க, inf. To sprinkle rose water on persons on festive occasions, or in a temple, &c.

தெளிப்பு, v. noun. Clearing, fining, clarification, refinement, purification. 2. Separating grain, particles, &c., in a fan. 3. Draining off, straining off, decanting, drainage. 4. Sprinkling, scattering, strewing.

தெளிர், s. Internal sounds perceived by the person himself, உட்சோசை. (சது.)

தெளிர்தல், v. noun. Articulating, ஒலித்தல். (சது.)

தெளிவு, s. Clearness, transparency, limpidness, தலக்கம். 2. Brightness; clearness of a gem, pearl, &c., பிரகாசம். 3. Plainness, obviousness, that which is easy of comprehension, வெளிப்படை. 4. Clearing, passing away as clouds, darkness, fear, sleep, &c., நீக்கம். 5. A lucid interval before death, தசாவஸ்தைபிலொன்று. 6. Placidity, tranquillity, serenity of mind, suspension of the passions, மனஅமைவு. 7. Plumpness, sleekness, fulness, fatness, கொழுப்பு. 8. Clearness of intellect, mature knowledge, good understanding, sagacity, penetration, அறிவு. 9. Water poured off from boiling rice, a kind of thin rice gruel, வடிகஞ்சி. 10. [*in Rhet.*] Simplicity, perspicuity, as one of the ten குணஅலங்காரம். 11. Being clear as profit or gain after deducting expenses, waste, &c., இலாபம். See தெளி, v. n.

தெளிவுகொடுக்க, inf. To make clear; to allow a lucid interval before death. 2. To elucidate. 3. [*prov.*] To grow fat, to fatten.

தெளிவெண்ணெய், s. [prov.] Margosa oil cold drawn; not extracted by heat.

தெள்—தெள்ளு, s. (com. தெள்ளுப்பூச்சி.) A flea.

தெள், adj. Clear, தெளிவான. (p.) [*in combin.* changing ள் to ண்.] See தெண்மை.

தெண்டிரை, s. The clear sea.

தெள்—தெள்ளு, கிறேன், தெள்ளினேன், தெள்ளுவேன், தெள்ள, v. a. To sift softly in a winnowing fan, புடைக்க. 2. To heave up sand, &c., as the sea, cast upon the shore, கொழிக்க. (c.) 3. v. n. To become clear, lucid, pure, refined, as language, தெளிய. 4. To be mature in knowledge or experience, அநுபவப்பட.

தெள்ளத்தெளிய, inf. To understand clearly. See தெட்டத்தெளிய.

தெள்ளுதமிழ், s. Elegant Tamil, செந்தமிழ்.

மாத்தெள்ள, inf. To sift flour.

தெள்ளல், v. noun. Sifting, becoming clear, &c., as the verb.

தெள்கு, s. A flea, தெள்ளு. (p.)

தெள்கு, கிறது, தெள்கினது, ம், தெள்க, v. n. [prov.] To become clear, தெளிவாக. 2. To flirt up, to be tossed or heaved up, as spray, &c., கொழிக்க.

தெள்விளி, s. The name of a tune, ஓர் பண்.

தெள்ளி, s. An elephant, யானை. (சது.)

தெள்ளிச்சி, s. A medicinal powder, பூசு.

தெள்ளிமை, s. Clearness, obviousness, perspicuity, தெளிவு. 2. Intelligence, sagacity, penetration, cleverness, அறிவு. (p.)

தெள்ளிய, adj. Clear, perspicuous, தெளிந்த.

தெள்ளியவன், s. One of clear intellect. (*Beschi.*)

தெள்ளியர்—தெள்ளியோர், s. (plu.) The learned, the wise, the intelligent, sages, persons of clear understanding.

தெள்ளேணம், s. A play among females, மகளிர்விளையாட்டிலொன்று. (p.)

தெறி, s. [prov.] A button, clasp, &c., made of thread or of metal, அங்கிமுதலிய வற்றின்கடைப்பூட்டு. 2. See தெறி, v. n.

தெறிபூட்ட, inf. To button.

தெறி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To break or snap off, short, முறிய. 2. To fly back, rebound, recoil, &c., உதைத்துமீள. 3. To spirt as drops or particles of water, &c., to splash up, top up, as spray, சிதற. 4. To spring or hop, as fleas, தாவ. 5. To part, burst asunder—as a knot, a rope, a fiddle string; to fly apart, burst in pieces, fly off or be struck off, as pieces or sparks, அற. (c.) 6. [*prov.*] To be broken off, as friendship; become disunited, வேறுபட. 7. (*fig.*) To fail, to result unsuccessfully, தவற.

முகத்திலேரத்தந்தெறிக்கப்பேசினான். He spoke in anger, the blood flying to his face.

பருத்தெறிக்கிறது. The boil throbs; (*lit.*) jumps.

நாக்குத்தெறிக்கப்பேசுகிறான். He speaks wickedly enough to make his tongue burst asunder.

பிணிதெறித்துப்போயிற்று. The disease is remedied.

பொறிதெறிக்கிறது. Sparks fly out.

கண்தெறித்தது. The eye is suddenly blinded; (*lit.*) broken by lightning, &c.

தெறிபட்டுப்போயிற்று. It has failed, come to naught.

தெறிப்பான். He will burst asunder; *a curse.*

தெறிக்கடிக்க, *inf.* [*prop.* தெறிக்கஅடிக்க.] To scatter, disperse, as an army; to beat or hammer so as to cause bursting, or to make a part fly off; to confound, to puzzle in controversy.

தெறிக்கப்பேச, *inf.* To speak so as to offend, to break up friendship.

தெறித்தவன், *appel. n.* A man of cruel conduct; *used in cursing.*

தெறித்துவிழ, *s.* To strike on some thing in falling. 2. To burst to pieces; *spoken of one who so acts as to render himself liable to a curse.*

தெறிபதம், *s.* Spirtling of medicinal oil when boiling.

தெறி, *v. noun.* Spattering, splash, spirt, சிதறுகை.

தெறிப்பு, *v. noun.* Rebound, recoil, flying back, resilence, உதைத்தமீள்கை. 2. Spirt, spatter, splash, dash, சிதறுகை. 3. Parting, bursting asunder, flying apart; snapping off, breaking, as a limb, முறிகை. 4. Shooting with the fingers, snapping, &c., சுண்டுகை. 5. Wicked conduct spoken of in cursing, as exposing a person to bursting asunder.

**தெறி**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v.a.* [*prov.*] To flirt off, shoot a particle with the finger and thumb, to bespatter, உக்க. 2. To snap a bow-string, or fiddle-string, with the finger and thumb to try its lightness, to strike the springs of a lute with the fingers, வீணைநரம்புதெறிக்க. 3. To discharge arrows or balls with a bow, to shoot, எய்ய. (*c.*)

எள்ளளவாகிலும் கிள்ளித்தெறிக்கவுமில்லை தொட்டுத்தெறிக்கவுமில்லை. He gives nothing in charity.

**தெறிபட**, *inf.* (*with* போக.) To be desolate, forsaken, forlorn, நிக்கற. 2. To be discomfited and dispersed as an army, அணிகுலைய. 3. To stray and wander as cattle, சிதறுண்ண. 4. To be tossed about, as a mariner, or vessel at sea, அலைக்குலைய. 5. To be puzzled, confounded, &c., கலங்க. (*c.*)

தெறிபட்டவள், *appel. n.* A lewd woman, as சுவெட்டவள்.

**தெறிப்பு**, *s.* A button, as தெறி. (*Beschi.*) 2. See தெறி, *v.*

**தெறு**, த்தேன், வேன், தெற, *v. n.* (*imperfect.*) To tarry, தங்க. 2. *v. a.* To destroy, அழிக்க. (*p.*)

தெறுநர், *s.* Foes, enemies, பகைவர்.

தெறுதல், *v. noun.* Abiding, staying, தங்கல். 2. Hurting, injuring, destroying, அழித்தல். (சூ.)

**தெறு**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To bruise, crush, நெரிக்க. (*p.*)

**தெறுக்கால்**, *s.* A scorpion, தேள். 2. Scorpio of the Zodiac, விருச்சிகவிராசி.

**தெற்கு**, *s.* [*a change of* தக்கணம்.] South, southward, தென்றிசை. (*c.*)

தெற்குவெறிக்கிறது. There is famine in the south.

தெற்கத்தி—தெற்கித்தி—தெற்குத்தி, *adj.* Southern, தெற்கேயுள்ள. (*c.*)

தெற்கத்திப்பேச்சு — தெற்கித்திப்பேச்சு, *s.* Language, dialect, idiom, pronunciation of the southern district.

தெற்கித்திக்காற்று, *s.* Southern wind.

தெற்கித்தியான், *s.* A person of southern India.

தெற்குமண்டலம் — தெற்குவட்டம், *s.* The southern region.

தெற்குமுகம், *s.* Southern, facing the south.

தெற்குமுகமாய்ப்போக, *inf.* To go south.

தெற்கேமுகங்காட்டி, *v. part.* Having the face southward.

தெற்கோட்டம், *s.* [*prov. for* கர்ப்பகோட்டம், *which see.*] The southern passage of the clouds.

•**தெற்பை**, *s.* [*prop.* தர்ப்பை, *which see.*] Sacrificial grass.

**தெற்றி**, *s.* A painted or pictured hall, சித்திரகூடம். 2. A raised verandah, திண்ணை.

**தெற்று**, *s.* (*com.* தெத்து.) Hedge of thorns, &c., to defend a passage; lines of entrenchment, அடைப்பு. 2. (*p.*) Certainty, ascertainment, assurance, persuasion, confidence, தேற்றம். 3. See தெற்று, *v.*

தெற்றென, *inf.* [*adverbially.*] Clearly, certainly, தெளிவாக. 2. Forthwith, immediately, at once, விரைவாக.

தெற்றெனல், *v. noun.* Being clear, certain, sure, தெளிதல். 2. Being in haste, சீக்கிரக்குறிப்பு.

தெற்றெனவு, *v. noun.* Certainty, clearness, தெளிவு.

**தெற்று**, கிறேன், தெற்றினேன், வேன், தெற்ற, *v. n.* (*com.* தெத்து.) To stammer in speaking, வாய்கொன்ன. 2. To have the feet entangled in a rope, &c., to be tripped up, upset, supplanted, இடற. (*c.*) 3. To be perverse, obstinate, மாறுபட. 4. *v. a.* (*c.*) To braid whips, mats, baskets, &c., to plait, entwine, enfold, weave, பின்ன. 5. To disturb, அலைக்க.

தெற்றிப்பேச, *inf.* To stammer.

தெற்றிவீழ்த்த, *inf.* To trip, supplant.

தெற்றுக்காலன், *s.* A person whose legs in walking strike one against the other.

தெற்றுப்பல், *s.* A lapping tooth, a snag tooth.

தெற்றுப்பல்லன், *s.* (*fem.* தெற்றுப்பல்லி.) A person with teeth lapping over each other.

தெற்றுவாயன், *s.* A stammerer.

தெற்றல்—தெற்று, *v. noun.* Intwining, braiding, பின்னுகை. 2. Tripping, இடறுகை. 3. Being perverse, மாறுபாடு.

**தெற்றுமாற்று**, *s.* [*improp.* தற்றுமாற்று.] Tricks, shifts, roguery, deception, திரியாவரம்.

**தெனுது**, *appel. n.* That which is in the south, தெற்குள்ளது. (*p.*)

**தென்**, *adj.* South, southern, தெற்குத்திசை.

தென்கடல், *s.* The southern sea, தெற்குச்சமுத்திரம்.

தென்கயிலாயம், *s.* The southern Kaylasa, the feigned favorite abode of Siva.

தென்கரை, *s.* A name for the town of Periacolom, as தென்கரைநாடுள்ள. (*Govt. usage.*)

தென்கலை, *s.* Southern literature; i. e. Tamil, தமிழ். 2. As தென்கலையார்.

தென்கலைத்திருமண், *s.* A sacred earth used by தென்கலையார், in marking their foreheads.—*Note.* They extend the middle mark below the other two to the bridge of the nose.

தென்கலையார், *s.* A sect of Vaishnuvas who maintain different tenets from the வடகலையார்.

தென்கால்—தென்காற்று, *s.* The gentle south wind.

தென்கிழக்கு—தென்கீழ், *s.* South-east.

தென்கீழ்த்திசை, *s.* The south-east region.

தென்கீழ்த்திசைப்பாலன் — தென்கீழ்த்திசையிறை, *s.* The regent of the south-east, அக்கினிதேவன்.

தென்குமரி, *s.* A sacred river that disembogues itself near Cape Comorin, நதி. 2. Cape Comorin named after the river.

தென்கோடு, *s.* The southern horn of the crescent moon, the word for moon being understood. See வடகோடு.

தென்சார்—தென்பக்கம், *s.* Southern side, parts or region, &c.

தென்பதம், *s.* One of the four கண்டம், as தென்பாதம்.

தென்பாண்டி, *s.* The district south of Madura. See தமிழ்.

தென்பாரதம், *s.* The southern division of India. See பாரதம்.

தென்பாரிசம் — தென்பால், *s.* The southern side or region.

தென்பாரிசத்தார், *s.* Inhabitants of the southern regions.

தென்புலம், *s.* The region or world of the deceased, பிதிர்க்களமுமிடம். 2. A corn-field lying to the south.

தென்புலத்தார், *s.* The manes or souls of the deceased, supposed to be in the south.

தென்புறம், *s.* As தென்பக்கம்.

தென்பூமி, *s.* Southern parts of India, any part south of Mount Meru, மேருவின்றென்பால். 2. The southern parts of the earth.

தென்மதுரை, *s.* South Madura, as distinguished from வடமதுரை, north Madura, ஆலவாய்.

தென்மலை, *s.* The southern mountain Pothiya, supposed to be the residence of Agastia, பொதியம். 2. As சேரன்மலை.

தென்மலையாளம், *s.* South Travancore.

தென்முகம், *s.* Facing the south, southern direction.

தென்முனை, *s.* South pole.

தென்மேல்-தென்மேற்கு, *s.* South-west.

தென்மேற்றிசை, *s.* The south-west region.

தென்மேற்றிசைப்பாலன், *s.* The regent of the south-west, நிருதி.

தென்விதேகம், s. One of the nine divisions of the known continent. See கண்டம்.

தென்றமிழ், s. The Tamil language, as peculiar to the south, செந்தமிழ்.

தென்றல், s. The south wind, as தென்கால். (c.) 2. The wind of the former dewy season, முன்பனிப்பருவத்திற்காற்று.

தென்றல்வீசுகிறது—தென்றலடிக்கிறது. The south-wind blows.

தென்றல்திரும்புகிறது. The wind shifts to the south.

தென்றல்முற்றிப்பெருங்காற்றாயிற்று. The gentle south wind has risen to a hurricane, i. e. a little affair has become a serious quarrel.

தென்றற்றேரோன், s. Kama, whose chariot is the south wind, regarded, as favorable to love, காமன்.

தென்றி, s. South, தெற்கு. 2. The south-wind, தென்றல். (p.)

தென்றிசை, s. South region.

தென்றிசைக்கோன்-தென்றிசைப்பாலன், s. Yama, king of the southern region and god of death, இயமன்.

தென்றேசம், s. The southern region.

தென்னவன், s. A titular name of the Pandyan dynasty of Madura.

தென்னிரேபதம், s. One of the nine divisions of the known continent. See கண்டம்.

தென்னிலங்கை, s. Lanka, Ceylon as situated to the south of India, இராவணன்பட்டணம். (p.)

தென் — தென்னை, s. The cocoa-nut tree.

தென்னங்கள்ளு, s. Cocoa-nut toddy.

தென்னங்கன்று, s. See தென்னம்பிள்ளை.

தென்னங்கருப்பநீர்—தென்னம்பதநீர், s. Cocoa-nut toddy with the fermentation suppressed by lime.

தென்னங்கிளி, s. A kind of parrot that resorts chiefly to the cocoa-nut tree, ரெக்கிளி.

தென்னங்கீற்று, s. The split cocoa-nut leaf-stalk, the leaves of which are braided for screens, &c.

தென்னங்குருகு, s. Heart of the tree.

தென்னங்குருத்து, s. Young cocoa-nut leaves.

தென்னங்குரும்பி - தென்னங்குரும்பை, s. Very young cocoa-nuts.

தென்னங்கொட்டு, s. [prov.] The stump of a cocoa tree.

தென்னங்கோம்பை—தென்னங்கோழை, s. [prov.] A cocoa-nut with the water and kernel taken out.

தென்னஞ்சாலை, s. An alley of cocoa trees.

தென்னந்தும்பு, s. Fibres of the cocoa husk.

தென்னமட்டை, s. Cocoa leaf.

தென்னமரம், s. Cocoa tree, wood, timber.

தென்னம்பன்னாடை, s. A web covering the foot of the leaf-rib of the cocoa, where it joins the tree.

தென்னம்பாளை, s. Blossom of the cocoa tree. 2. Integument or spathe of the blossom which covers it until it expands.

தென்னம்பிள்ளை—தென்னங்கன்று, s. A young, cocoa tree.

தென்னம்வெல்லம், A kind of molasses prepared from the sap of cocoanut and shell lime.

தென்னிலைக்கல்லை, s. [prov.] Cocoa leaves, sewed together with small skewers to serve for a plate.

தென்னீர்க்கு—தென்னைஇர்க்கு, s. Rib of the cocoa leaf.

தென்னோலை—தென்னையோலை, s. Cocoa olas.

தென், s. Beauty, அழகு. 2. Harmony in music, இசை. 3. Blackness, கறுப்பு. (சது.)

தென், A particle, used only in composition to express that which is opposite, எதிர்.

தென்பட, inf. To meet, appear to one. (c.)

அதுஎன்கண்ணிலேதென்பட்டது. It came in my sight.

அதிலேஅவன்முற்றுந்தென்பட்டவன். He is well versed in it.

தென்—தென்னா, s. Syllables used in humming tunes, singing interludes, &c., தாளக்குறிப்பு. See தெத்தனா.

தென்னால்ராமன், s. (Tel.) A gallant. 2. One who lives upon others' earning, (lit.) as Rama.

## தே

தே. A syllabic letter composed of த் and ஏ.

தே, inter. A sound used in driving cattle, ஒலிக்குறிப்பு. (c.)

மாடுமெல்லவோதேயென்றால்நடக்கும்தூவென்றால்நிற்கும்அவ்வளவுமுனக்குப்புத்தியில்லையே. If you say to a bullock dé, he will go; if doo, he will stop—have you not as much sense as a bullock? (கபிலைவாசகம்.)

•தே, s. The deity, a god, a divinity, கடவுள்; [ex de, to preserve.] 2. Grace, favor, clemency, கிருபை.

தேமிகுமருட்கடவுள். The very gracious and exalted deity.

•தேகம், s. Body, bodily constitution, உடம்பு. W. p. 425. DEHA.

தேககாந்தி, s. Lustre of the body, சரீரஒளி.

தேகக்கூறு, s. The temperament of the body. See சரீரக்கூறு.

தேகசம்பந்தம், s. Corporeality of the body.

தேகசுத்தி, s. Purification of the body.

தேகதாரகம், s. Sustenance of the body, சரீரத்திற்காதாரம்; [ex தாரகம்.]

தேகதிடம், s. Stoutness of the body, bodily strength.

தேகத்தியாகம், s. Relinquishment of the body, voluntary death.

தேகத்திரயம், s. The three kinds of bodies. See சரீரத்திரயம்.

தேகநாசம், s. Dissolution of the body.

தேகபந்தம், s. Bodily attachments or affinities, &c., as ensnaring or binding the soul, சரீரப்பற்று.

தேகயாத்திரை, s. (St.) Death, மரணம். 2. Food, maintenance for the body, support, சரீரபோஷணை.

தேகவியோகம், s. Death, மரணம்.

தேகாந்தம், s. Dissolution of the body, i. e. the time of death, மரணம்.

தேகாபிமானம், s. Regard for the body; [ex அபிமானம்.]

தேகி, s. One embodied, a corporeal or living being, sometimes used of the soul inhabiting the body, சீவி. W. p. 425. DEHIN.

தேகனி, s. Indian saffron, மஞ்சள்.

தேக்கம், s. Fulness, repletion, satiety, நிறைவு. 2. Water stopped in its course, stagnant water, நிலைநீர்; [ex தேக்கு, v.] 3. (for திகைப்பு.) Perturbation. (c.)

தேக்கு, s. The teak tree, ஓர்மரம், Tectona grandis, L. 2. The areca tree, கமுகு. (சது.) 3. Fulness, repletion, satiety, நிறைவு. 4. Sweetness, lusciousness, தித்திப்பு. —There are different kinds of teak as கல்தேக்கு, சிறுதேக்கு, பூந்தேக்கு, வெண்தேக்கு.

தேக்கிட, inf. To be satiated, be cloyed, be full, நிறைய. 2. To be satiated as any of the senses, திருத்தியாக. (c.)

தேக்கெறிய, inf. To be satiated by eating, to be surfeited, cloyed, glutted, தெவிட்ட. 2. To be brimful, be full, to swell as the ocean, நிறைய. 3. To belch, ஏப்பமிட. (p.)

தேக்கெறிந்தெனப்பம்பினசெல்லரோ.... The clouds resounded as if belching, from taking the waters of the ocean so freely.

தேக்கு, கிறது, தேக்கினது, ம், தேக்க, v. n. To be full, copious, abundant, replete, நிறைய. 2. To be sated, glutted, cloyed, satiated, தெவிட்ட. 3. v. a. (with the personal termination.) To fill, make full, நிறைக்க.

தேக்குநீர்க்கடல். The sea full of water.

தேங்காய், s. A cocoa-nut, தெங்கங்காய்; [ex தெங்கு, et காய்.] (c.)—There are as, அடித்தேங்காய், இளநீர்த்தேங்காய், இளந்தேங்காய், எண்ணெய்த்தேங்காய், ஒல்லித்தேங்காய், குடுகுடுப்பைத்தேங்காய், கொட்டைத்தேங்காய், கொப்பரைத்தேங்காய், பழந்தேங்காய், மூக்கப்பொறுத்ததேங்காய், வழுக்கைத்தேங்காய், most of these are of Jaffna usage.

குறுந்தேங்காய், s. As சமுத்திராபழம்.

குருவித்தேங்காய், s. Phyllanthus, L. (R.)

தேங்காயடி, v. noun. [prov.] Playing with cocoa-nuts in the new-year's games, he winning who breaks the nut of his antagonist.

தேங்காயுடைக்க, inf. To break a cocoa-nut chiefly in the temple.

தேங்காயுரிக்க, inf. To peel off the husk of the cocoa-nut.

தேங்காயெண்ணெய், s. Cocoa-nut oil.

தேங்காயோத—தேங்காய்மந்திரிக்க, inf. To confer magical virtues on cocoa-nuts, by incantations, to prevent their breaking in games, or to be sent against a foe.

தேங்காயோதிவிட, inf. To enchant cocoa-nuts and despatch them at persons to do them mischief.

தேங்காய்க்கண், s. The three holes or eyes of the cocoa-nut.

தேங்காய்க்கயர், s. The lowest part of the cocoa-nut kernel, that which sticks to the shell. See கயர்.

தேங்காய்க்கீரை, s. A kind of greens, ஓர்கீரை.

தேங்காய்க்கீறு – தேங்காய்க்கீற்று – தேங்காய்ப்பத்தை—தேங்காய்வகிர், s. A slice of cocoa-nut kernel.

தேங்காய்க்குடுக்கை, s. The round empty shell of a cocoa-nut used as a vessel.

தேங்காய்க்குடுமி, s. The tuft of fibres on the foremost part of the cocoa-nut.

தேங்காய்க்குலை, s. A bunch of cocoa-nuts.

தேங்காய்க்கோம்பை, s. [prov.] A cocoa-nut shell, commonly with the husk on.

தேங்காய்ச்சிரட்டை—தேங்காயோடு, s. [prov.] The half of a cocoa-nut shell, கொட்டங்கச்சி.

தேங்காய்ச்சில், s. A roundish piece of cocoa-nut kernel, commonly with the shell. See சில்.

தேங்காய்ச்சொட்டு, s. See சொட்டு.

தேங்காய்த்துருவி, s. A cocoa-nut scraper.

தேங்காய்த்துருவுமணை, s. The wooden supporter of the cocoa-nut scraper.

தேங்காய்த்தண்ணீர், s. Water of the ripe cocoa-nut—oppos. to இளநீர், in the young fruit.

தேங்காய்த்திருவி, s. As தேங்காய்துருவி. (R.)

தேங்காய்த்தும்பு, s. [prov.] As தென்னந்தும்பு.

தேங்காய்த்துருவல் — தேங்காய்ப்பூ, s. Cocoa-nut scrapings for curry, &c.

தேங்காய்நார், s. The fibre around a cocoa-nut shell.

தேங்காய்நெற்று, s. A well ripened cocoa-nut. See நெற்று.

தேங்காய்ப்பட்டணம், s. The name of a town on the Malabar coast.

தேங்காய்ப்பாரை, s. A kind or species of fish, ஓர்மீன்.

தேங்காய்ப்பால், s. Cocoa-nut milk from the scraped kernel pressed in the hand.

தேங்காய்ப்பிண்ணாக்கு, s. The refuse of the cocoa-nut pulp after the oil has been pressed out.

தேங்காய்ப்பூ, s. See தேங்காய்த்துருவல்.

தேங்காய்ப்பூக்கீரை–தேங்காய்ப்பூநாறி, s. A kind of herb the flowers of which resemble scraped cocoa-nut, ஓர்பூடு.

தேங்காய்ப்பூவறை, s. [prov.] A kind of curry without gravy, ஓர் பாகம்.

தேங்காய்மட்டை, s. Cocoa-nut husk and fibre.

தேங்காய்முகசி, s. [prov.] The point in the cocoa-nut between the two closed eyes, deemed the strongest for play.

தேங்காய்முகிழ், s. The integument.

தேங்காய்முளை, s. The round germ of a ripe cocoa-nut.

தேங்காய்மூடி—தேங்காய்முறி, s. Half a cocoa-nut.

தேங்காய்மூரி, s. [prov.] The three nerves of a cocoa-nut.

தேங்காய்மொத்தி, s. [prov.] A lump of flesh between the fore-legs of the cow, buffaloes, &c., மாட்டின்முன்கானிடைத்திரட்சி.

தேங்காய்வழுக்கை, s. The kernel of an immature nut.

தேங்கு, கிறது, தேங்கினது, ம், தேங்க, v. n. To fill, become full, rise to the brim; stand full, stagnate, நிறைய. (c.) 2. To be crowded, abundant, copious, மிக. 3. (for திகைக்க.) To exhibit signs of fear, அஞ்ச.

தேங்கிப்போக, inf. To stagnate; to fear.

•தேசகன், s. A governor, ruler, அரசன்; [ex தேசம்.]

•தேசசு, s. (St.) Splendor, light, &c. See தேயசு.

•தேசம், s. Country, territory, land, region, district, province, நாடு. W. p. 424. Desa. (c.) 2. Place, இடம். 3. Regions of the body as the province, or residence, of their respective gods, உடம்பிற்தேவர்குடியிடம்.—Note. In Hindu Geography fifty-six countries are enumerated, viz.: 1 அங்கம். 2. அருணம். 3. அவந்தி. 4. ஆந்திரம். 5. இலாடம். 6. ஒட்டியம். 7. கருசம். 8. கலிங்கம். 9. கன்னடம். 10. கன்னுடம். 11. காசம். 12. காசுமீரம். 13. காந்தாரம். 14. காம்போசம். 15. கிராடம். 16. குரு. 17. குடகம். 18. குந்தளம். 19. குரு. 20. குலிந்தம். 21. கூர்ச்சரம். 22. கேகயம். 23. கோசலம். 24. கொங்கணம். 25. கொல்லம். 26. கோசலம். 27. சகம். 28. சவ்வீரம். 29. சாலவம். 30. சிங்களம். 31. சிந்து. 32. சீனம். 33. சூரசேனம். 34 சோழம். 35. சோனகம். 36. திராவிடம். 37. துளுவம் 38. தெங்கணம். 39. நிடதம். 40. நேபாளம். 41. பப்பரம். 42. பல்லவம். 43. பாஞ்சாலம். 44. பாண்டியம். 45. புலிந்தம். 46. போடம். 47. மகதம். 48. மச்சம். 49. மாளடம். 50. மலையாளம் 51. மாளவம். 52. யவனம். 53. யுகந்தம். 54. வங்கம். 55. வங்காளம். 56. விதர்ப்பம். (சூ.)

தேசகாலம், s. Time and place, இடமும்பொழுதும். 2. The passing of time, பொழுதுகழிவு. (c.)

தேசகாலமாகிறது. Time is going.

தேசகாலபாத்திரம், s. Propriety or three circumstances to be observed, viz.: where, when, and who, இடமுஞ்சமயமுந்தகுதியும்.

தேசசுவாத்தியம், s. General health and prosperity; climate.

தேசத்தைக்கட்டியாள, inf. To take and govern a country. 2. To govern and control a country.

தேசபாடை — தேசபாஷை, s. The language of a country. 2. Language and country.

தேசபாரம், s. The burden and responsibility of governing a country, as resting on the king, இராச்சியப்பொறுப்பு.

தேசபேதம், s. Difference of climate in different countries.

தேசப்பழமை, s. [prov.] Ancient established customs, or usages.

தேசமுகி, s. The head of the Revenue department. (R)

தேசம்போக, inf. (com. பரதேசம்போக.) To wander into a distant country.

தேசவழக்கம், s. Customs, habits, usages, or laws of a country, தேசாசாரம்.

தேசவளமை, s. [vul.] As தேசப்பழமை.

தேசவாசி, s. A wanderer, a roamer. 2. [prov.] As தேசசஞ்சாரி. (c.)

தேசாசாரம், s. Customs, usages, manners, &c., of a country.

தேசாதிபதி, s. The lord of a country, a king, a governor.

தேசாதிபத்தியம், s. Government, jurisdiction of a king or governor.

தேசாதேசம், s. Various countries, பலதேசம். (c.)

தேசாந்தரம், s. A foreign country, அன்னியதேசம். 2. Each respective country, அவ்வவதேசம். 3. Terrestrial longitude. 4. Allowance made for a planet's proper motion while passing from the first meridian to that of the given place; virtually, allowance for longitude, தேசாந்தரகத்தம்.

தேசாந்தரபாகை, s. Degree of longitude.

தேசாந்தரம்போக, inf. To travel or wander from one's country.

தேசாந்தரரேகை, s. Meridian line.

தேசாந்தரி, s. (lit.) A foreigner. 2. (fig.) A traveller to foreign countries, a wanderer, பரதேசி.

தேசாந்தரியாய்த்திரிகிறான். He wanders about as a vagrant.

தேசோபத்திரவம், s. General calamities, தேசவிபாருலம், which are five: 1. Fire, நெருப்பு. 2. Water, தண்ணீர். 3. Sickness, நோய். 4. Famine, பஞ்சம். 5. Death, சாவு. These come from God. There are other five which are supposed to come from men. 1. Scandal, கோள். 2. Theft, திருட்டு. 3. Foreign oppression, மாற்றரசர்கொள்ளை. 4. Oppression of the king's agents, வேந்தர்பெருங்காரியக்காரர்பரிதாபம். 5. Avarice of the king, தன்னரசிறைகொள்ளை; [ex உபத்திரவம்.]

•தேசா, s. A kind of tune, ஓர்பண். (சூ.)

•தேசாட்சரி, s. Another tune, ஓரிராகம். (சூ.)

•தேசாதி, s. The head-man of the கவறை caste, ஓர்சாதித்தலைவன்.

தேசாவரம், s. A plant with a medicinal root, ஓர்பூண்டு, Piper dichotomum. Ains. vol. ii. p. 416.

•தேசி, s. (Tel. తేజీ.) A large horse, பெருங்குதிரை. (சது.) 2. A lime tree, எலுமிச்சை. 3. The name of a tune, தேசிராகம்; [ex Sa. Teja, spirit, power.]

தேசிக்காய், s. [among physicians.] A lime, a lemon, எலுமிச்சங்காய்.

•தேசிகம், s. Provincialisms, terms peculiar to a country, அவ்வவ்நாட்டுச்சொல். 2. One of the two kinds of dance peculiar to the countries respectively, நிருத்தம். 3. Light, lustre, brightness, ஒளி. 4. Gold, பொன். 5. Beauty, அழகு. (சது.)

•தேசிகன், s. (pl. தேசிகர்.) A spiritual teacher, a Guru, குரு. 2. A merchant as travelling, வர்த்தகன். 3. A Guru of one class of Vaishnuvas, வைஷ்ணவதேசிகன். 4. A teacher of the Vedas, வேதவோதுவிப்போன். 5. A teacher in general, a school master, உபாத்தியாயன். 6. A traveller, a wanderer, a foreigner, தேசாந்தரி. W. p. 425. DESIKA.

•தேசியம், s. Provincial terms or phrases. See திசைச்சொல்.

தேசியம்பாட, inf. To chant foreign melodies.

•தேசு, s. Lustre, light, brightness, ஒளி. 2. Gold, treasure, பொன். (சது.) 3. (St.) Beauty, அழகு. 4. Seminal fluid, விந்து. See தேயசு.

தேசோமயம், s. [vul. தேசோன்மயம்.] Splendor, பேரொளி.

தேசோமயானந்தம், s. Beatific splendor, as applied by Saivas to Siva.

தேசோரூபம், s. Embodied light, ஒளிபுருஷம்.

•தேசோபிந்து, s. One of the thirty-two Upanishads, ஓருபநிடதம்.

தேடீர்வாளபலம், s. [in Hindu astron.] The quotient of any number divided by 248, or the Vakyam, தேடீர்வார்.

தேடு, கிறேன், தேடினேன், வேன், தேட, v. a. To seek, search for, inquire after, நாட. 2. To acquire, earn, procure, சம்பாதிக்க. 3. [vul.] To take care of, cherish, foster, provide for, பராமரிக்க. 4. To inquire about one, to ask after his welfare, உசாவ. (c.)

தேடிப்புதைத்துத்தெருவிலிரக்கிறான். Does he hide what he gets and beg in the street?

தேடிமுடியாது. No search can discover it. It cannot be got by seeking.

தேடினபூண்டுகாலிலேமிதிபட்டது. The plant sought is under foot; i. e. the thing desired at hand.

தேடாக்கூறு, s. [prov.] A state of neglect, பராமரிப்பின்மை; also தேட்டாக்கூறு.

தேடாக்கூறுய்க்கிடக்க, inf. To be neglected.

தேடாத்தேட்டம், s. Acquisition by unparalleled labor, acquisition by unworthy or unjust means.

தேடிக்கொடுக்க, inf. To get for another. 2. To support dependants by labor, &c.

தேடித்திரிய, inf. To go in search of, to seek for.

தேடித்தின்ன, inf. To live by unworthy means. 2. To live by whoredom.

தேடிப்பார்க்க, inf. To search for. 2. To use means for obtaining. (c.)

தேடிப்பிடிக்க, inf. To seek and find out. 2. To get a paramour, as an unchaste woman.

தேடியதேட்டம், s. [in law.] Property acquired, as distinguished from dowry, legacies, or that which is hereditary.

தேடியாடித்திரிய — தேடியோடித்திரிய, inf. To take great pains to search.

தேடிவைக்க, inf. To gather and reserve for the future, to lay up.

தேடேன், neg. I seek not.

தேட்கடை, s. The nineteenth lunar mansion, மூலநாள். (சது.) 2. A kind of drug, ஓர்பூடு.

தேட்குடிச்சி, s. A bee or black wasp, கருவண்டு.

தேட்கெண்டை, s. The name of a fish, ஓர்மீன். See கெண்டை.

தேட்கொடுக்கி, s. The name of a plant, ஓர்பூடு, Helotropium indicum, L.

தேட்டம், s. Anxiety, solicitation, கவலை. 2. Earnest desire, appetite, longing for, பேரவா. 3. That which is earned, hoarded, சேகரிக்கப்பட்டது. (c.)

அவனுக்குக்கல்வியிலேவெகுதேட்டம். He has great eagerness for learning.

அவளுக்குப்பிள்ளைமேல்வெகுதேட்டம். She has great anxiety for her child.

இவனுக்குச்சோற்றின்மேல்தேட்டமில்லை. He has no appetite at all for rice.

தேட்டக்காரன், s. An industrious thriving person.

தேட்டந்தேட, inf. To acquire much property.

தேட்டு — தேட்டம் — தேட்டை, v. noun. Seeking, search, appetence, pursuit, ஆராய்வு. 2. (c.) Acquisition, accumulation, சம்பாத்தியம். 3. Supporting, cherishing, &c., பராமரிப்பு; [ex தேடு, v.]

தேட்டாண்மை, s. (com. தேட்டாமை.) Great industry, aptness at acquiring, thriftiness, பொருள்தேடும்முயற்சி.

தேட்டாளன், s. An industrious, thriving person, சம்பாத்தியக்காரன். (c.)

தேட்டை, s. (Tel. తేట.) Clearness, transparency, தெளிவு. 2. Clear water; also whey, தெளிந்தநீர். 3. See தேடு.

தேண்ட, v. a. [poetical use for தேட.] To seek, search, acquire, &c.

தேதி, s. (Tel. తేది.) Day of the month, as தெய்தி. (c.)

தேமல், s. Yellow spreading spots on the skin in females, படர்சுணங்கு. There are several varieties as அழகுதேமல், beautiful spots, அழுக்குத்தேமல், dirty spots, பொன்குதேமல், spots indicative of good, மங்குதேமல், of disease or other evil. 2. [prov.] A kind of yellowish ring-worm, படர்தாமரை; [ex Sa. Tepa, to sprinkle, to shine.]

தேமல்படர, inf. To spread as spots on the skin.

தேமல்பூக்க, inf. To occur on the skin as small spots.

தேமா, s. The sweet mango tree, தித்திப்புமாமரம். 2. [in prosody.] The spondee species of foot. See சீர்.

தேமாங்கனி — தேமாங்காய் — தேமாந்தண்ணிழல், Technical terms for the quantity of one of these metrical feet, which see under சீர்.

தேம், s. Sweetness, இனிமை. 2. Scent, fragrance, odor, மணம். 3. Honey, honey in flowers, தேன். 4. Toddy, கள். (சது.) 5. Land, country, தேசம். 6. Place, location, room, இடம். 7. One of the forms of the seventh case, or local ablative, ஏழனுருபு, as செவிலியதேத்து, for செவிலித்தாய்தேயத்து, with the nurse, மறையோர்தேத்து; among brahmans.

தேம்பாவணி, s. A celebrated epic poem by Beschi, ஓர்நூல்; [ex பா, அணி.]

தேம்பு, கிறேன், தேம்பினேன், வேன், தேம்ப, v. n. To sob, cry, விம்மியழ. (c.) [ex Sa. Teva, to weep.] 2. To fade, wither, droop, வாட. 3. To grow thin, to be emaciated, attenuated, மெலிய. 4. To be wearied, fatigued, to faint, as சோம்பு, இளைக்க.

தேம்பித்தேம்பியழ, inf. To cry and sob greatly.

தேம்பல், v. noun. Fading, being faded, வாடல். 2. A faded flower, as கம்பல், பழம்பூ.

•தேயசு, s. Lustre, splendor, ஒளி. 2. Beauty, அழகு. 3. The seminal fluid, விந்து. W. p. 384. TEJAS.

•தேயம், s. Country, land, district, நாடு. 2. Place, location, room, இடம். [a change of தேசம்.] 3. Theft, களவு. 4. [for தேகம்.] Body. (சது.)

தேயபரிச்சேதம், s. Certainty of the existence of a thing in one country and not in another. See பரிச்சேதம்.

•தேயம், s. A gift, any thing given, கொடைப்பொருள். W. p. 421. DEYA. 2. An expletive particle affixed to நாமம், as நாமதேயம், name.

•தேயு, s. [a change of தேசு.] Fire, அக்கினி. 2. One of the antitypes of Siva, அட்டமூர்த்தத்தொன்று.

தேய், கிறது, ந்தது, தேயும், தேய, v. n. To wear away, wear off, be rubbed away, wear out, or be frayed away, உரைய. 2. To lessen or decrease, waste away; to become exhausted, குறைய. 3. To wane as the moon, கலைகுறைய. 4. To lessen or be reduced as sin, or as the stock of accumulated actions, good or evil, &c., கன்மந்தேய. 5. To be emaciated, stunted—as a child; to be reduced,—as wealth, property, splendor, &c., இளைக்க. 6. To lapse, pass, wear away—as time, கழிய. 7. To be effaced, erased, obliterated by rubbing, மாய. (c.)

தேய்ந்தானமாய்க்குறைந்துபோயிற்று. It is reduced by little and little.

தேய்ந்தகணக்காய்ப்போயிற்று. It has come to very little.

நடந்துநடந்துகால்தேய்ந்தது. The feet are worn by walking so much.

தேயப்பண்ண, inf. To wear away, cause to decrease.

தேய்கடை, adj. Worn out, worn away, as an implement, &c., தேய்ந்தவை. 2. Stunted in growth, வளர்ச்சியிழிந்தவை.

தேய்கடைப்பணம், s. [also தேய்க்கடைப்பணம்.] A fanam worn by use.

தேய்கடைப்பிள்ளை, s. A stunted child.

தேய்ந்தபல், s. Worn teeth.

தேய்பிறை, s. The waning moon. (c.)

தேய்வு, v. noun. A wearing away, a lessening, abrasion, diminution, குறைவு. 2. Emaciation, மெலிவு. 3. Erasure, obliteration by rubbing, அழிவு.

தொள்ளாடி, s. [prov.] A weak, reduced person; flaccid or decrepit, as persons or beasts; growing lax, as the muscles, வலிமிலி.

தொள்ளாட, inf. To become weak, as தள்ளாட.

தொள்ளாயிரம், s. [com. தொளாயிரம்.] Nine hundred, ஒன்பதநூறு. (p.)

தொள்ளாளி, s. [vul. for தொழிலாளி, which see.] An artificer.

தொள்ளி, s. Soft mire, குழைசேறு.

தொள்—தொள்ளு, கிறேன், தொள்ளினேன், வேன், தொள்ள, v. a. To perforate, make a hole with an instrument, துளைக்க. 2. [vul.] To become weak, infirm, as a person, மெலிய.

தொள்ளல், v. noun. Hole, perforation, துளை. 2. Weak, flabby, infirm state, மெலிவு.

தொள்ளற்சரீரம், s. A weak, flabby body.

தொள்ளை, s. Hole, perforation, துளை. 2. A tube, a pipe, துளையுடைப்பொருள். 3. A navigable vessel, மரக்கலம். (சது.)

தொள்ளைக்காது, s. A perforated pendent ear-lobe. See காது.

தொள்ளைக்காதன், s. [fem. தொள்ளைக்காதி.] A man who has pendent ears, as a *Maravan, Kallan, Sun'an*, &c.

தொறு. A distributive plural particle of place, time, quality, &c., as தோறு, ஓர்பன்மையிடைச்சொல்.

தொறு, s. Crowd, multitude, collection, assembly, கூட்டம். 2. Herd or flock, cattle, பசுக்கூட்டம். 3. Abundance, copiousness, plenty, பொலிவு. 4. Practised, trained to work, தொழில்நிபுணுகுதல். 5. Slave, menial servant, அடிமை. (சது.)

தொறுத்தி s. As தொறுவி. (R.)

தொறுவர், s. (pl.) Herdsmen, இடையர்.

தொறுவியர், s. [sing. தொறுவி.] Females of the இடையர் caste, ஆய்ச்சியர்.

தொறுவு, s. Slave, அடியான். 2. Slavery, அடிமை. 3. Work, trade, craft, occupation, செய்தொழில். 4. A herd or flock, பசுக்கூட்டம். (சது.)

•தொனி, s. (St. துவனி.) Sound, noise, intonation, twang, peal, ஒலி. 2. Tone, musical sound, கண்டத்தொனி. 3. A figure of sound, change of meaning in a word or phrase by change of sound. (c.)

தொனிச்சிலேடை, s. A சிலேடை in which there is only one important meaning, a part of the phrase being merely to make the pun, as ஒற்றுப்பெயர்த்தல்.

தொனியர்த்தம், s. Figurative meaning.

தொனிவைக்க, inf. To make a great sound, noise, roar, &c., பேரொலிசெய்ய.

தொனி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. or v. n. To sound, to intonate, to emit vocal or instrumental sounds, ஒலிக்க.

தொனிப்பு, v. noun. Sounding, a loud sound, ஒலிப்பு.

தொனு, s. [prov.] Suppressed bellowing of a cow, உக்காரம். See தனு.

தொனுப்போட, inf. To roar as a bull; to vociferate. (c.)

தொனுதொனு, v. As தொனுப்பு, v.

தொனுப்பு, கிறேன், தொனுப்பினேன், வேன், தொனுப்ப, v. n. To chatter, to babble, அலப்ப.

தொனுப்பு—தொனுதொனுப்பு, v. noun. Babbling, idle-gossip.

தொனுப்பன், s. A babbler, a vain talker.

தொன்மரம், s. Banyan tree, (lit.) the ancient tree, ஆல்; [ex தொல்.]

தொன்மை, s. Oldness, antiquity, பழமை. 2. Narration of ancient story, as one of the eight beauties in composition, செய்யுள்வனப்பெட்டனுள்ஒன்று; [ex தொல்.] (p.)

தொன்மையோர், s. [plu.] The ancients.

தொன்று, s. [indecl.] Oldness, antiquity, பழமை.

தொன்றுதொட்டு. From of old, from time immemorial. (c.)

தொன்னீர், s. The sea, (lit.) the ancient waters, கடல்; [ex தொல்.]

தொன்னூல்விளக்கம், s. [also தொன்னூல்.] A grammar of Beschi, தொன்மைக்கண் ம்; [ex தொல், ancient, நூல், science, book.]

தொன்னை, s. (Tel. దొన్నె.) A kind of cup made of plantain or other leaf as கொன்னை, இலைக்கலம். (c.) 2. (fig.) A mean wretch, கனன்.

## தோ

தோ. A letter compounded of த் and ஓ.

தோ, interj. [prov.] A sound used in calling a dog or other animal, நாயைக்கூப்பிடும் ஒலி. (c.)

•தோகம், s. [obsolete.] Smallness, minuteness, scantiness, a trifle, சிறுமை. (சது.)

தோகை, s. Feather, plumage, இறகு. 2. Tail of a peacock, மயிற்றோகை. (c.) 3. A tail, வால். 4. A peacock, மயில். 5. Front, border, or end of the skirt of a cloth, முன்றானை. 6. Flag, streamer, banner in token of an achievement, rank, dignity, விருதுக்கொடி. (சது.) 7. A woman, a lady, பெண். 8. (c.) Any thing hanging down, as a flag, a woman's hair, &c., தொங்கல். 9. [prov.] Hollow head of a palmyra root, பனங்கிழங்கின்வாற்றோல். 10. Foreskin, prepuce, நுனித்தோல்.

தோகைமார்புருடு, s. The lewdness of women. (R.)

தோகையர், s. (plu.) Ladies, the fair—as compared to peacocks, பெண்கள்.

தோக்கு, s. A hand-gun, துவக்கு. (R.)

தோக்கை, s. Cloth, garment, சீலை. 2. An upper covering, a scarf, cloak, &c., மேற்போர்வை. (சது.) 3. [prov.] Front border of a skirt, as தோகை.

தோசி, s. [change of தோஷி.] A wretch. (c.)

தோசை, s. A kind of pastry, அப்பவருக்கம். (c.)

தோசைசுட, inf. To fry pan-cakes.

•தோஷம்—தோடம், s. Fault, defect, blemish, blight, குற்றம். 2. Sin, offence, transgression, heinous crime, guilt, பாவம். 3. Disorder or vitiation of the humors of the body; or defect in the functions of the bile, phlegm, or wind—often fatal, and always dangerous, attended with low pulse, prostration and cold extremities; dyscrasy, சன்னி. W. p. 426. Dosha. (c.) 4. Humors of the body, also called, பிணி. 5. Typhus fever, ஒர்சுரம். (Ains.)

முத்தோஷம், s. The three humors of the body: 1. வாதம், wind, acid or hypochondriacal humors. 2. பித்தம், bile. 3. சிலேட்டுமம், phlegm. See திரிதோஷம். The முத்தோஷம் or three defects in composition: 1. அதிவியாப்தி, or மிகைபடக்கூறல். 2. அவியாத்தி or குன்றக்கூறல். 3. அசம்பவம் or மாறுகொளக்கூறல், which see.

தோஷகுணம், s. A cold prostrate state of the body, from supposed derangement of its juices.

தோஷக்காய்ச்சல், s. See காய்ச்சல்.

தோஷங்கொள்ள, inf. To be in a torpid state.

தோஷபரிகாரம், s. Remedying, or avoiding a fault.

தோஷமாக்க, inf. To come on, as a morbid and dangerous state of the system.

தோஷத்திரயம், s. (St.) Vitiation of the three humors of the body. 2. Any combination of three defects. See முத்தோஷம்.

தோஷநாசத்திரவியம், s. A stimulating medicine for lethargy, of which one ingredient is அக்கிராகாரம். (Ains.)

கிருஷ்ணதோஷம், s. Typhus fever. (Ains.)

சலதோஷம், s. A cold, a catarrh. See சலம்.

பட்சிதோஷம், s. An emaciating disease of children. See பட்சி.

•தோஷி, s. [com. தோசி.] A wretch, பாவி.

தோஷிக்கொக்கு, s. An ominous bird, (met.) an unlucky wight.

தோடகச்சிரங்கு — தோடஞ்சிரங்கு, s. [prov.] A kind of itch, கொப்புளச்சிரங்கு; [ex தோடு, petal.] See சிரங்கு.

தோடகம், s. A lotus, தாமரை. W. p. 302. Trotaka. See தோடு.

•தோடயம்—தோடையம், s. (Sa. தோடகம்.) A kind of song, in the prologue of a drama, in which the aid of the gods is invoked, நாடகத்திற்புப்பாயிரக்கவி.

தோடா, s. (For.) Armlet, generally of gold, கைவளை. (c.)

•தோடி, s. One of the thirty-two tunes, ஓரிராகம்.

தோடு, s. [gen. ட்டின்.] A palm leaf, as ஓலை. 2. Petal of a flower, புவிதழ். 3. An ola-roll worn in a hole of the ear, or an ear-jewel, காதணி. 4. Collection, assemblage, crowd, cluster, bunch, கூட்டம். (p.) 5. [prov.] Shell of a fruit, as of a விளாம்பழம், wood-apple, பழத்தினோடு. (c.) 6. [prov.] Fruits cut in round pieces for curry, வட்டமாகஅரிந்தது. 7. A round moulding, வட்டத்திரணை.

தோடகம், s. A lotus, தாமரை.

தோட்டுக்காது, s. [prov.] An ear with a roll in it.

தோட்டுப்புழுக்கொடியல், s. [prov.] Palmyra roots boiled, cut in thin slices, and dried in the sun.

தோடை, s. [prov.] Different kinds of Citrus—as lemons, citron, and oranges. Of the latter are, கைச்சற்றோடை, of a bitter kind; தேன்றோடை, a sweet orange; புளித்தோடை, a sour kind. (Jaffna usage.)

தோடங்காய்—தோடம்பழம், s. Fruit of the தோடை trees.

தோடங்காயெண்ணெய், s. A medicinal oil for ulcers, &c., விரத்திரணவெண்ணெய்.

தோடை, s. The produce of one dive at the pearl-fishery, two of which are daily given to the owner of the boat, சலாபக்குளிவோர்முழுக்குறி. (Beschi.)

•தோடையம், s. See தோடயம்.

தோட்கோப்பு, s. Boiled rice tied up for a journey, (lit.) taken on the shoulder, கட்டுச்சோறு; [ex தோள்.] (சவடி.)

தோட்சுமை, s. A burden for the shoulder, புயத்திற்றூக்குஞ்சுமை. (c.) 2. (சது.) A present taken to a temple in fulfilment of a vow, as காவடி; [ex தோள்.]

தோட்டம், s. A yard or enclosure, especially at the back of a house; a garden, orchard, plantation, சோலை. (c.)

தோட்டக்கள்ளன், s. [prov.] A kind of bird very destructive to gardens, ஓர்பறவை.

தோட்டக்காரன், s. A gardener.

தோட்டக்கால், s. Garden-land.

தோட்டவேலை, s. Horticulture, gardening.

தோட்டந்துரவு, s. One's garden, land, well, &c.

தோட்டப்பயிர், s. Garden vegetables.

தோட்டா, s. (Hind.) Cartridge, wadding, வெடிமருந்துச்சுருள். (c.)

தோட்டி, s. Door, கதவு. 2. Gate, gateway, வாயில். 3. A town on the seashore, surrounded by salt marshes, கும்பவிருக்கை. (சது.) 4. Beauty, அழகு. 5. One of the eight benefits of which the occurrence is auspicious, அட்டமங்கலத்தொன்று. 6. A village servant, வெட்டியான். 7. (Tel.) [loc.] A person for emptying slops, cleaning privies, சுத்திசெய்வோன்.

தோட்டிச்சி, s. [loc.] A female of the தோட்டி caste.

தோட்டிமை, s. The occupation of a village servant, வெட்டியான்வேலை.

•தோட்டி, s. An elephant-hook or goad, யானைக்குபாசி. See தோட்டி. W. p. 386. Totra. 2. A hook, a clasp, கொக்கி. (R.)

தோட்டிமை, s. Union, harmony, ஒற்றுமை. (சது.) 2. See தோட்டி.

தோட்டுச்சக்கரம், s. A kind of rocket that rises in a whirling manner, ஓர்விதபாணம்.

தோட்டுச்சிரங்கு, s. [prov.] A kind of itch, as தோடகச்சிரங்கு.

தோட்பட்டை, s. A shoulder-blade; [ex தோள்.]

•தோணுமுகம், s. A town on the sea shore, surrounded by salt marshes, கழிசூழ்க்கை. See கோணுமுகம். W. p. 431. Dro-n'amukha.

•தோணி, s. Boat, dhoney, மரக்கலம். W. p. 431. Dron'a. (c.) 2. The twenty-seventh or last constellation, இரேவதி. 3. Projections, bastions, &c., in a surrounding wall, மதிலுறுப்பு. 4. Arrow, அம்பு. 5. Mud, mire, சேறு. 6. Water, நீர். (சது.) —For some of the compounds, see கப்பல்.

தோணிதள்ள, inf. To launch a boat.

தோணிதாங்க, inf. To pole a boat.

தோணிவிட, inf. To ply a boat.

தோண்டான், s. A wolf, கோனாய்; [ex தோண்டு, v.] (சது.)

•தோண்டி, s. (Sa. Dron'ce.) A kind of small pot for drawing water, தண்ணீர்நிறைக்குஞ்சிறுபாத்திரம். (c.)

தோண்டு, கிறேன், தோண்டினேன், வேன், தோண்ட, v. a. To dig, to hollow, to excavate, அகழ. 2. To scoop out, to bale or lave out, குடைய. (c.) 3. To draw water from a well, முகக்க.

தோண்மேல், s. Nape of the neck, பிடரி; [ex தோள்.] (p.)

தோதகத்தி, s. A block of wood, a rose-wood tree, ஏக்கமரம். (c.) 2. See தோதகம்.

•தோதகம், s. (Sa. Toda.) Vexation, pain, uneasiness of body or mind, வருத்தம். 2. (சது.) Guile, fraud, deceit, வஞ்சகம். 3. [prov.] Immodesty, lewdness, மரியாதையின்மை.

தோதகத்தி, s. [sometimes தோதகை.] A quarrelsome, immodest woman.

தோதகன், s. A deceiver, a bad paymaster.

தோதகி, s. [fem.] An unhappy, vexed woman.

ஏன்தோதகியேன்பிறந்தேன். Why was I born to a vexed life?

தோதகம்பண்ண, inf. [prov. தோதகமாட.] To be immodest—as a woman.

•தோத்திரம்—ஸ்தோத்திரம், s. Praise, thanks, laudation, eulogy, panegyric, துதி. 2. Compliment, salutation, adulation, flattery, வந்தனம். 3. A song of praise—as தோத்திரப்பாட்டு. (c.) 4. [vul. for சோத்திரம்.] Ear.

தோத்திரப்பாட்டு, s. Songs of praise. 2. [in Chris. usage.] Doxology.

தோத்திரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To praise, to extol, to laud, புகழ. (c.)

தோத்தை, s. [prov.] A small quantity, as much as will stick to the fingers, கொஞ்சம்.

தோப்பறு, s. (Hind.) A leather bag used in feeding horses. 2. A leather bucket for drawing water. (c.)

தோப்பன், s. [prop. தகப்பன், which see.] A father. (Used by brahmans.)

தோப்பாடி—தோய்ப்பாடி. s. [mas. and fem.] A wicked person. (R.) (sometimes தொப்பாடி.)

தோப்பு, s. [a change of தொகுப்பு.] A grove commonly of tall trees, சோலை. (c.)

தோப்பாண்டி, s. A devotee of Siva who waters the groves around a temple.

தோப்பாளன், s. A Vaishnuva devotee who attends to groves. 2. As தோப்பாண்டி; [ex ஆள்.]

தோப்புண்டாக்க, inf. To plant a grove.

தோப்புக்கண்டம், s. A mode of punishment in schools, in which the boy, taking hold of his ears transversely, squats down and rises again a number of times, ஓர்தண்டனை. 2. A mode of self imposed penance, as a tribute to Ganesa for subduing கசமுகன், an Asura, ஓர்வணக்கம்.

தோப்புக்கண்டம்போட, inf. To punish one's self by taking hold of each ear by the opposite hand, and then sitting down and rising.

தோப்பை, s. Any thing which is flabby, as தோப்பைமுலை, hanging breasts of a woman. See தொப்பை.

விரற்றோப்பையாய்க்கழன்றுபோயிற்று. The skin of the finger is sloughed off.

•தோமரம், s. W. p. 386. Tomara. A javelin or hand-lance, எறிபடை. 2. A large kind of lance, பெருஞ்சவளம். 3. A missile weapon, a dart, கைவேல். (சது.) 4. A large club, தண்டம்.

தோம், s. Fault, defect, blemish, குற்றம். (சது.) 2. Moral evil, vice, தீமை.

தோம்பு, s. [loc. Tel. తోంపు.] Redness, red dye, சிவப்பு. 2. (For.) A public register of lands.

•தோயமாபுரம், s. A city of Asuras, ஓர்அசுரநகரம்.

•தோயம், s. Water, liquid, சலம். W. p. 386. Toya.

தோய், கிறேன், ந்தேன், வேன், தோய, v. n. To plunge in water, நீர்ல்மூழ்க. 2. To bathe, commonly in cold water, and without anointing, குளிக்க. 3. To become wet, soaked, sopped, steeped, நனைய. 4. To mix, to blend, to mingle, to commingle, to unite with, as in company, கலக்க. 5. To touch, to come in contact with, to be trailed on the ground as a garment or tail, நிலத்திற்படிய. (நலடிச்சிறப்புப்பாயிரம்.) 6. To copulate, to cohabit, புணர. 7. To be implied, hinted at, alluded to; to be contained or included in, as a meaning by implication, குறிக்கப்பட. 8. (c.) To be curdled, as milk by design, உறைய. 9. To commit one's self in speaking, commonly in the negative, அகப்படுகொள்ள. 10. v. a. [prov.] To temper heated metal, by dipping it in water, துவைச்சலிட. (c.)

கச்செழுத்தைத்தோய்ப்பாடினன். He has tempered his verses with malign letters.

தோயாமற்பேச, *inf.* To speak in ambiguous terms, so as not to commit one's self, or divulge a secret. (*c.*)

தோயப்பம், *s.* A pan-cake, தோசை.

தோயல்—தோய்வு, *v. noun.* Mixing, கலத்தல். 2. Bathing, dipping, குளித்தல். 3. As தலைப்படல், which see.

தோயல்வாய்த்தல், *v. noun.* Being properly heated and tempered by dipping in water. 2. [*fig. prov.*] Availing, as a good opportunity, (*lit.*) a good dipping.

தோய், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To dip, to immerse, to beat clothes in washing, to curdle milk, to temper steel, &c., as 1, 2, 3, and 4, of தலை, *v.* which see. 2. To soak, to drench, to steep, நனைக்க. 3. [*in combination.*] To dye, to tinge, to stain, to imbue, சாயமேற்ற. (*c.*)

தோய்த்தடிக்க, *inf.* To splash, to bespatter.

தோய்த்துக்கட்ட, *inf.* To dip and wash the cloth, commonly in connection with daily rites.

தோய்பனி, *s.* [*prov.*] Heavy dew, drenching dew, மிகுபனி.

தோய்ப்பன், *s.* [*prov.*] A kind of dipped pastry, தோய்பண்ணிகாரம்.

மகரந்தோய்க்க, *inf.* To tinge cloth of a reddish dye. (*c.*)

தோய்ச்சல்—தோய்ப்பு, *v. noun.* Curdling of milk, &c., as தலைச்சல்.

தோய்த்தல், *v. noun.* Tempering steel, &c., dipping, soaking, curdling.

தோய்ப்பாடி, *s.* A wicked person. See தோப்பாடி.

•தோரணம், *s.* Cords hung with garlands, palm-leaves, &c., or cloth hung up to adorn a road, in honor of an idol, or great person; or to garnish a house for a festivity; or the parts about a temple for an annual ceremony, &c., மகிமை. 2. An outward door, a porch or ornamented gateway, சித்திரகோபுரவாயில். (*c.*) 3. A mound raised near a bathing place for a mark, நீராடுமிடத்திற்கட்டுமேடை. W. p. 386. TORAN'A. 4. (*R.*) The beam of a balance, நாராசக்கோல்.

தோரணக்கல், *s.* A stone pillar erected in a large tank to show the height of the water, நீரளவுஅறியுங்கல். (*R.*)

தோரணக்கால் — தோரணக்கம்பம், *s.* Posts supporting garlands, &c. See under கால்.

தோரணங்கட்ட — தோரணந்தூக்க—தோரணம்போட, *inf.* To make lines and decorations as ornaments, &c. 2. To hang up a string of mango leaves over the door of a temple, or across the road, as an auspicious sight.

தோரணதீபம் — தோரணவிளக்கு, *s.* Torches in a row used at temple procession, made of rolls of cloth dipped in oil and hung by wires to a pole extending across the street, உற்சவவிளக்கு.

தோரணவாயில், *s.* A porch, portico, lodge, &c., தலைவாயில்.

தோரணி — தோரணிக்கம் — தோரணை, *s.* (*Tel.* ధోరణి.) Due order, arrangement, method, concatenation of subjects or heads, plan of a discourse, சொல்லொழுங்கு. (*c.*)

தோரணிபண்ண, *inf.* To arrange, to reduce to system, to plan, to design.

தோரணையாய்ப்பேச, *inf.* [*prov.*] To speak in order, with due method, &c. (*c.*)

தோரத்தம், *s.* [*prov.*] Compulsion, molestation, picking quarrels, தொந்தரவு.

தோரத்தக்காரன், *s.* A troubler, a molester.

தோரி, *s.* Boiled rice, சோறு. (சது.)

தோரை, *s.* A kind of rice in hilly-countries, மலைநெல். 2 Blood, இரத்தம். 3. Bambu-sago, மூங்கிலரிசி. 4. A garland of jewels, இரத்தினக்கோவை. 5. Line in the fingers, விரலிறை. 6. The hand, கை. (சது.) 7. [*prov. vul.*] A pale reddish colour, மங்கசிறம். 8. A palmyra tree producing reddish fruit, தோப்பனை. 9. (*for* தோகை) A bunch of peacock's feathers used as a fan, மயில்விசிறி.

•தோரை, *s.* A number, ஒரெண்.

தோர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* [*improp.*] To be defeated, to lose a battle, game, &c. See தோல், *v.* (*c.*)

தோராவழக்கு, *s.* A just lawsuit.

தோராவழக்கன், *s.* An endless wrangler, one who will not be confuted.

தோர்வை, *s.* [*com. for* தோல்வை.] Defeat, failing in rivalry.

வெற்றிதோல்வை. Gain and loss.

தோலா, *s.* (*Hind.*) A tola or a Rupee weight, ரூபாயிடை.

தோலாயா, *s.* Silk cotton tree, இலவு. Bombax. (*R.*)

தோலான், *s.* See தோல்.

தோலி, *s.* A small fish, ஓர்மீன், Silurus. (*Beschi.*) 2. Gumlac, அரக்கு.

தோலியாய்ப்போனான். He is reduced to skin and bones.

கார்த்திகைவாளைத்தோலி, *s.* A species of the தோலி fish.

தோலிக்கருவாடு, *s.* The above fish dried.

•தோலி, *s.* A dhooly. See டோலி.

தோலோதோல், [*loc.*] After all, howbeit, எவ்விதமும்.

தோல், *s.* [*pl.* தோல்கள், தோற்கள்.] Skin, leather, hide, cuticle, membrane, சருமம். 2. Rind, peel, scales or coats of the onion and other bulbous roots, புறணி. 3. Pod, husk of seeds, &c., விதையின்மேற்றோல். 4. Bellows, துருத்தி. (*c.*) 5. Leathern buckler or shield, தோற்கேடகம். 6. Elephant, யானை. 7. Thin layer, தோற்படலம். 8. (*fig.*) A thing of no value, பிரயோசனமில்லாதது. 9. Misfortune, ill-luck, loss, அபசயம். 10. Beauty, அழகு. 11. A diffusive style in poetry, as one of the eight beauties of composition, எண்வகைவனப்பினு ளொன்று. 12. Word, சொல்.

தோலன்—தோலான், *s.* [*prov.* தோலுணி,] [*fem.* தோலாள்.] A mean, good-for-nothing person, அற்பன்.

தோலுரிக்க, *inf.* To skin, to peel, to flay.

தோலூறப்போட, *inf.* To soak skins, as a tanner.

தோலைச்சீவ, *inf.* To scrape off the skin or the coat of a kernel.

தோல்சுருங்க, *inf.* To shrivel, shrink, as skins.

தோல்தனம், *s.* [*prov.*] Imprudence.

தோல்நாய், *s.* [*prov.*] A hunting dog, a greyhound, ஞமலி.

தோல்பதமிட—தோல்பதனிட, *inf.* To dress or tan leather.

தோல்பற்றப்பண்ண, *inf.* To encrust, cause a crust to form. (*R.*)

தோல்புனைய, *inf.* To sew or fasten with thongs.

தோல்முட்டை, *s.* An egg laid before the shell is hard. (*c.*)

தோல்வினைஞர் — தோல்வினைமாக்கள், *s.* (*plu.*) Workers in leather, சக்கிலியர். (*p.*)

தோல்வைக்க, *inf.* [*prov.*] To form new skin as healing sores.

தோற்கட்டு, *s.* Armor for the lower part of the arm, chiefly of leather, கோதை.

தோற்கட்டடம், *s.* Leather band.

தோற்கருவி, *s.* Instruments made of skins, as drums, tabors, &c., one of the five kinds of musical instruments, பஞ்சகருவியிலொன்று.

தோற்கவசம், *s.* A leathern jacket.

தோற்குல்லாய், *s.* A leathern cap.

தோற்சித்தை, *s.* A leathern bottle or vessel. See சித்தை.

தோற்செவி, *s.* Auricle of the ear, புறச்செவி. 2. Creatures having the external ear.

தோற்பரம், *s.* A buckler, a leathern shield, தோற்கேடகம். (சது.) 2. Boots, செருப்பு.

தோற்பறை, *s.* A leather bag. See தோற்பை.

தோற்பனாட்டு, *s.* [*prov.*] Thin layers of the juicy substance of palmyra fruit, dried.

தோற்பாடி, *s.* A mean, worthless woman, a strumpet. See தோப்பாடி.

தோற்பாய், *s.* An undressed skin for a seat.

தோற்பாவை, *s.* Leathern puppets.

தோற்புழை, *s.* Pores of the skin, தோலின்றுளை. 2. [*prov.*] Any membranous part of the body, சவ்வுள்ளவிடம்.

தோற்பை, *s.* A leathern bag or bottle.

தோற்பைமுலை—தோப்பைமுலை, *s.* Flabby breast of a woman. (*R.*)

தோற்பெட்டி, *s.* A leather trunk.

தோற்றுருத்தம், *s.* A leather vessel, சித்தை. 2. A cartouch box, வெடிமருந்துப்பை.

தோற்றுன்னர், *s.* (*plu.*) Shoe-makers, செம்மார். 2. As தோல்வினைஞர். (சது.)

தோற்றேங்காய், *s.* [*prov.*] An unhusked cocoa-nut, உரியாததேங்காய்.

தோல், தோற்கிறேன், தோற்றேன், தோற்பேன், தோற்க, *v. n.* (*with the dative.*) To fail in rivalry, contest, games, &c., to be the inferior, தோற்றுப்படைய. 2. To be defeated, discomfited, vanquished, அபசயப்பட. 3. To fail in comparison, தாழ. 4. To yield, to flinch, to be content to lose, to give away voluntarily, to forbear revenging an affront, enforcing a right, &c., பொறுக்க. 5. To be confuted, refuted, &c., கியாயத்திற்றோற்க. 6. *v. a.* (*fig.*) To lose a dear friend in war, or by any untimely death, இழக்க. 7. To lose property in a game, &c. (*c.*)

தோற்றவன்சுமக்கிறதுவழக்கம். It is the custom for the one defeated in play to carry the victor.

எனக்குத்தோற்றுப்போனான். He yielded to me, he was defeated.

பணத்தைத்தோற்றுவிட்டான். He has squandered his money.

தோலாநாவினார், s. (plu.) Eloquent persons, சதுரர். (p.)

தோலாவழக்கு, s. As தோறாவழக்கு.

தோற்கடிக்க, inf. [prop. தோற்கஅடிக்க.] To defeat, to discomfit. 2. To overcome in a game, &c. 3. To surpass.

தோற்கப்பண்ண, inf. To defeat, to put to the worst, &c.

தோற்றுவிட, inf. To yield a right voluntarily. 2. To lose in a game—to be defeated. 3. To squander.

தோல்வி, v. noun. Discomfiture, defeat, loss of a game, &c., தோற்பு. 2. Yielding to a victor or rival. 3. Defeat in argument.

தோல்விகாண, inf. To suffer defeat, to lose a game.

தோல்வு, v. noun. Defeat, loss, தோற்பு.

தோற்பு, v. noun. Losing, defeat, discomfiture—oppos. to வெல்பு.

தோற்பனதொடேல். Do not undertake what you will fail in. (Avv.)

தோற்றல், v. noun. Being defeated.

தோவத்தி, s. (Tel.) A man's cloth tied round the waist, வேட்டி.

தோழமை, s. Friendship, familiarity, நட்பு. (c.)

தோழமைகொண்டாட, inf. To show mutual friendship, to treat with kindness and attention.

தோழமையாய்த்திரிய, inf. To associate with one as a friend.

தோழன், s. [plu. தோழர், தோழமார்.] A friend, a companion, an intimate acquaintance. 2. The bridegroom's chosen companion, a bride-man, மாப்பிள்ளைத்தோழன்.

தோழி, s. A lady's female friend, a lady's maid. 2. A bride's maid.

தோழம், s. [a change of தொழுவம்.] Fold for cattle, stall, பசுக்கொட்டில். (p.)

தோள, inf. [defective, used principally in the negative.] To pierce, to perforate as தொளைக்க. (p.)

தோளுதல், v. noun. Piercing, perforating, துளைசெய்தல்.

தோளாமணி, s. An imperforated gem. (p.)

•தோளா, s. A litter, a dhooly. (Sa. Dola.)

•தோளி, s. A litter, a dhooly, தோளா. 2. Indigo plant, அவுரி. (சது.)

தோள், s. [probably from Sa. Dos.] Shoulder, புயம். 2. Arm down to the hand, கை. (சது.)

தோள்மேலிருந்துசெவியைக்கடிக்கிறது. Sitting on the shoulder, and biting off the ear of the carrier; i. e. injuring a benefactor.

தோள்காய்க்கிறது. The shoulder becomes callous.

தோளணி, s. A shoulder ornament, an epaulet, &c., வாகுவலயம்.

தோள்கொடுக்க, inf. To help by giving the shoulder. 2. To carry, as the bearer of a palankeen. 3. To help one in an emergency.

தோள்தட்ட—தோள்கொட்ட, inf. To clap the shoulder, in defiance, in triumph, &c.

தோள்பட்டை, s. See தோட்பட்டை.

தோள்மாற—தோள்மாற்ற, inf. To change shoulders. 2. To relieve another in bearing.

தோள்மூட்டு, s. Shoulder-joint.

தோள்வலி, s. Pain in the shoulder. 2. (p.) Strength, power; (lit.) strength of the shoulder.

தோறு. A distributive plural suffix, which with உம் subjoined signifies, each; every, &c., பன்மைஇடைச்சொல்; இடந்தோறும், in each place, here and there; வருஷந்தோறும், annually; வாரந்தோறும், weekly; தினந்தோறும், daily.

தோற்பிக்க, inf. To overcome in a game, to out-do, to surpass, to out-run; used in the first two meanings of தோல், v.

தோற்பு, v. noun. See தோல், v.

தோற்றம், s. Appearance, visibility, perceptibility, காட்சி. 2. Conspicuousness, prominence, distinctness in appearance, பிரகாசம். 3. Origin, rise, beginning, formation, state of existence, spring, source, தொடக்கம். 4. Birth, production of creatures, worlds, &c., creatures, or things produced, பிறப்பு. 5. Offspring, son, மகன். 6. [in Theol.] Evolution of things from their primitive elements—oppos. to ஒடுக்கம். See உற்பத்தி. 7. Reflection, representation, semblance, சாயை. 8. Vision, prospect, object, sight, தரிசனம். 9. Idea, conception, figure formed in the mind, imagination, notion, எண்ணம். 10. Entrance on the stage as a character; debut, வருகை. 11. Rising of a heavenly body, உதயம். 12. Phantom, apparition, illusion, ஆவேசம். 13. Word, சொல். 14. A fit, seasonable word, ஏற்றமொழி. 15. Praise, eulogy, fame, reputation, புகழ். 16. Vigor, strength, power, force, வலி. 17. Phenomena, நூதனக்காட்சி. The two classes of தோற்றம். or beings produced, are:—1. சரம், moveable creatures. 2. அசரம், inanimate beings, &c., which see. The four class of தோற்றம். 1. பை, or சராயுசம், viviparous, womb-born. 2. முட்டை, or அண்டசம், oviparous or egg-born. 3. நிலம், or உற்பிசம், germinating from the earth by seeds, &c. 4. வியர்வை, or சுவேதசம், insects supposed to be engendered by perspiration, &c., which see severally.

வெள்ளிதோற்றம், s. The appearance of stars, as denoting the time of the evening auspicious for marriages, &c.

பேய்த்தோற்றம், s. An appearance of an evil spirit.

நிலாத்தோற்றம், s. Rising of the moon.

தோற்றக்கவி, s. [loc. கட்டியக்காரன்கவி.] A verse sung immediately before the appearance of a person on the stage.

தோற்றத்தரு, s. [prov.] The verse and tune sung at the appearance of a person on the stage, who dances round the area while it is sung.

தோற்றப்பட, inf. To appear, to be visible, to be conspicuous. 2. To be formed, to come into existence, to be born.

தோற்றமாக, inf. To appear on the stage. 2. As தோற்றப்பட.

தோற்றமொடுக்கம், s. Periodical appearance, and disappearance, production and dissolution, evolution.

தோற்றப்பட்டவன்—தோற்றமானவன், appel. n. A conspicuous, celebrated or superior man.

தோற்றாங்கொள்ளி—தோற்றாங்கோளி, s. [prov.] One who has been defeated; a coward; [ex தோல், v.] (c.)

தோற்று, கிறேன், தோற்றினேன், வேன், தோற்ற, v. n. [used com. in the neuter only, with the dative of person.] To appear, to become visible, to come in sight, காணப்பட. 2. To rise, to originate, to spring forth, to come into existence, to emanate, to be born, உற்பவிக்க. 3. To spring, to sprout, முளைக்க. 4. To be evolved, produced—as worlds, creatures, &c., from original elements, உண்டாக. 5. To appear to the mind, to seem, to be evident, மனதுக்குத்தோன்ற. 6. To be presented as images, ideas, &c., to the imagination, to be comprehended by the mind, பாவனையாய்க்காண. 7. To appear on the stage, கூத்தில்வர. 8. To be felt, perceived, &c., by any of the senses, &c., விடயமாக. 9. To cause to appear, to show, to produce, தோன்றச்செய்ய; [ex தோன்று.]

தோற்றாமல், [neg. v. part.] Being imperceptible or invisible.

தோற்றாமற்கொண்டுபோக, inf. To take away unseen. 2. To pilfer by little and little.

தோற்றுவாய், s. Introduction to a literary work, a preface, பாயிரம். (p.)

தோற்றுவாய்செய்ய, inf. To introduce a subject, to make an exordium.

தோற்றரவு, s. Appearance, visibility, காட்சி. 2. Conspicuousness, eminence, dignity, பிரபலம். 3. [poetic.] Rising of a star, உதயம். 4. Appearance of the stars in the evening twilight as denoting the time auspicious for marriages, வான்மீன்தோற்றம். 5. Phantom, apparition, spectre, ஆவேசம்.

தோற்றுவிக்க, inf. To cause to appear, make evident or visible, to present to view or to the mind, தோன்றச்செய்ய. 2. To produce, bring into existence, form, make, create, உண்டாக்க. 3. To beget, to generate, engender, procreate, originate, பிறப்பிக்க. 4. To evolve from primitive elements, உற்பவிக்கச்செய்ய.

தோற்றுவிக்கப்பண்ணுகிறான். He causes a thought to arise in the mind.

தோன்றல், s. A son, மகன். 2. A great man, பெருமையிற்சிறந்தோன். 3. A king, அரசன். 4. A ruler of a forest district, முல்லைநிலத்தலைவன். 5. Elder brother, மூத்தோன். 6. Man, as ஆண்மகன். (சது.) 7. See தோற்ற.

தோன்றி, s. The November flower, red or white lily, especially the red, காந்தள், Gloriosa, L. 2. Blood, இரத்தம்.

தோன்றிகர், s. [plu.] Chitties—the caste; merchants, செட்டிகள். (சது.)

தோன்று, கிறேன், தோன்றினேன், வேன், தோன்ற, v. n. [com. தோனு.] To appear, to seem, to spring, to come into existence, &c., as the eight meanings of தோற்ற. (c.) 2. [in gram.] To be augmented by an added letter or a reduplication, எழுத்ததிகரிக்க.

அவருக்குத்தோன்றவில்லை. He is insensible to an evil or calamity.

எனக்குத்தோன்றமற்போயிற்று. It did not occur to me.

எனக்கொருசத்துருதோன்றினான். An enemy has risen against me.

எனக்குத்தோன்றினதைச்சொன்னேன். I have given my opinion.

ஒருவனுக்கெதிருத்தரந்தோன்றமற்பண்ணுகிறான்.... He refutes the objection.

தோன்றக்கொடுக்க, inf. [vul. தோணக்கொடுக்க.] To give sufficiently, to give so as to show something.

தோன்றச்சொல்ல, inf. To speak, &c., so as to be well understood.

தோன்றாஎழுவாய், s. The nominative understood, or the nominative of an impersonal verb, மறைந்துநிற்குமெழுவாய்.

தோன்றாத்துணை, s. An unseen helper, பிரதியுபகாரஞ்செய்யாதவர். 2. The deity as the unseen helper, கடவுள். 3. One helping. (p.)

தோன்றாமற்கொடுக்க, inf. To give so as not to feel it. 2. To pay in unequal sums according to emergency or convenience. 3. To reward a kindness by little and little, without show or parade.

தோன்றாமற்பேச, inf. To speak in dark sayings, with allusions or hidden sarcasms.

தோன்றினதைச்சொல்ல, inf. To tell what occurs to one's mind.

தோன்றினபடியேசெய்ய, inf. To do after one's own fancy.

பாரந்தோன்ற, inf. To be felt as weight, a burden, or a responsibility.

தோன்றல்—தோன்றுதல், v. noun. Appearing, being visible. 2. Production. 3. [in gram.] Augmentation, augment, ஓர்விகாரம்.

தோன்றல்விகாரம், s. Augmentation.

# தௌ

தௌ. A letter compounded of த் and ஔ.

தௌடு, s. A gallop. See தவுடு.

•தௌதம், s. Silver, வெள்ளி. (சது.)

•தௌத்தியம், s. Praise, ஸ்தோத்திரம்.

•தௌரிதகம்—தௌரிதம், s. A horse's trot in a circle, குதிரைநடை. W. p. 448. Dhowritaka. See தவுரிதகம்.

•தௌரிதம், s. Speed. See துரிதம்.

தௌவு, கிறேன், தௌவினேன், வேன், தௌவ, v. n. To leap, to spring, &c. 2. To perish. See தவ்வு.

தௌவல், v. noun. Perishing, &c., as தவ்வல்.

தௌவை, s. Elder sister, மூத்தாள். 2. The goddess of misfortune, &c., as மூதேவி. See தவ்வை.

# ந

ந். A consonant, the eighth in number and fourth of the soft. It is initial, sometimes medial, rarely final; and of the same class with த being often written before it, as கந்தம், odor; சந்தம், melody.

ந. A syllabic letter compounded of ந் and அ.

•ந. A Sanscrit prefix, meaning good or excellent, as நக்கீரன், excellent கீரன்; நப்பின்னை, Lukshmi, as a good younger sister. It is sometimes a negative, as நபட்சணம், not eating; நபுஞ்சகம், not male.

•நகங்கிருதி, s. Humility, or the feeling that one can act only as acted upon by the deity; one of the seven virtues. See புண்ணியம்.

நகட்டு, கிறேன், நகட்டினேன், வேன், நகட்ட, v. a. To pound, or grind by attrition, அரைக்க. 2. (fig.) To eat all up with avidity, சப்பிட்டுப்போட. 3. [causative of நகர்.] To cause to creep, நகரச்செய்ய. (c.)

நகதா, s. See நகது.

நகதி, s. (Arab.) A monied man, ரொக்கக்காரன்.

நகதிருமந்தா, s. A subordinate in a treasury.

நகது—நகதா, s. (Arab.) Ready money, cash, உரொக்கம்.

நகதுஜாமீன், s. Security for money.

நகபத்து—நகபொத்து, s. A kind of drum, as நகரா. (c.)

•நகம், s. Finger or toe nail, உகிர். W. p. 450. Nakha. 2. A talon, a claw, பறவைநகம். (c.) 3. The extremity or lower part of a hoof, அடிக்குளம்பு. 4. W. p. 451. Naga. Mountain, மலை. 5. Earth, பூமி. 6. Tree, மரம்.

நகக்கண், s. The margin of the nail where it joins the finger.

நகக்காளான், s. A kind of fungus said to spring from nail parings.

நகக்குறி — நகரேகை, s. Marks, or indents of the nails; used in erotics.

நகச்சிராய், s. [prov.] Splinter of the nail, rising on the sides, &c.

நகச்சுற்று, s. A whitlow. See சுற்று.

நகச்சூடு, s. Heat of water bearable by the finger. See சூடு.

நகநுதி, s. The sharp edge of the nails.

நகம்வளர்க்க, inf. To let the nails grow long, as ascetics.

நகம்வாங்கி—நகம்வெட்டி, appel. n. A barber's instrument for cutting the nails.

நகரேகை, s. [improp. நகலேகை.] As நகக்குறி.

நகவிஷம், s. Poisonous quality of the nail, inducing inflammation from scratching.

நகவுளி, s. A barber's instrument as நகம்வாங்கி. 2. A carpenter's tool.

நகாயுதம், s. (St.) A lion, (lit.) the talon-armed, சிங்கம். 2. A tiger, புலி. 3. A cock, சேவல். 4. Any beast or bird having talons, நகமுள்ளவை; [ex ஆயுதம்.]

நகேசன், s. The personified Hymalaya mountain, இமயகிரி; [ex ஈசன், lord.]

•நகரம், s. A city, a town, a fortified town, a metropolis, பட்டணம். W. p. 451. Nagara. 2. A town or village in an agricultural district, மருதநிலத்தூர். 3. A royal palace, இராசமனை. 4. The letter ந.

நகரத்தார், s. (plu.) Citizens, inhabitants of a town.

நகரப்பதிவாணர் — நகரப்பதிவாழ்நர், s. Townsmen, citizens. 2. The polite, well bred. (p.)

நகரமாக்கள்—நகரவாசிகள், s. People of the city.

நகரவாயிற்கோபுரம், s. A tower or building over the gate-way or entrance of a city.

நகரா, s. (Hind.) A kind of drum, ஓர் பறை. (c.)

•நகரி, s. A city, a fortified town, பட்டணம். 2. A metropolis, a capital, இராசநகரம். (p.) 3. The name of a town north-west of Madras, ஓரூர்.

நகரிகாவலர், s. [plu.] The city guard, patrole, watchmen.

நகரிசோதனை, s. [appel. நகரிசோதனைக்காரர்.] Secret examination of city affairs by night, by the king, or by his orders. (c.)

நகரிசோதனைக்குப்புறப்பட. To go on such an errand.

நகரிப்பழக்கம், s. City manners, or habits, urbanity.

நகரிவலம்வர, inf. To make a procession through a city. 2. As ஊர்க்கோலம்வர.

நகரு—நகர், கிறது, நகர்ந்தது, நகரும், நகர, v. n. To creep, as an infant or a reptile; to crawl; to move along in a prone or sitting posture, as a cripple, &c., தவழ. 2. To steal away, leave a place secretly, மறைவாய்ப்போக. (c.)

நகர்ந்துதிரிய, inf. To move about by creeping.

நகர்வு, v. noun. Crawling, creeping, ஊர்தல்.

நகளா, s. [prov.] A small kind of fish, ஓர்மீன். 2. A kind of tree, ஓர்மரம். 3. [vul.] A kind of rice, ஓர்வகைநெல்.

•நகர், s. As நகரம், 1, 2. 3. House, abode, வீடு. 4. A temple, a sacred shrine, கோயில். (p.)

நகர்படுதிரவியம், s. Productions of a city. See திரவியம், ஐ.

நகர்வளம், s. Productions, luxuries, and embellishments of a city.

நகர்த்து, கிறேன், நகர்த்தினேன், வேன், *நகர்த்த*, v. a. [causative of *நகர்*] To push with difficulty, to shove along, to propel a little. 2. To pilfer, to steal little by little. (c.)
*நகர்த்துகிறான்*. He watches an opportunity what move he can make.
*வீட்டை நகர்த்திக்கட்டவேண்டும்*. We must remove the house a little farther.
*சுவரையிடித்துநகர்த்திவிட்டான்*. He tore down and removed the wall.
*அவனைநன்றாய்நகர்த்திப்போட்டார்கள்*. They gave him a good drubbing.

நகல், s. (Arab.) Copy, duplicate—oppos. to *அசல்*. 2. See *நகு*, v.

நகரு—நகர், கிறேன், நகர்ந்தேன், நக ருவேன், *நகர*, v. n. [corrupt. of *நகரு*] To creep, crawl along. (c.)

நகாசு, s. (Hind.) Fine work, *நுண்ணிய வேலை*.
நகாசுதீர, inf. To complete the work with *நகாசுவேலை*.
நகாசுவேலை, s. Exquisite workmanship; that which is shining or dazzling. Compare *பொகனவேலை*.

•நகாயுதம், s. Lion. See under *நகம்*.

•நகிலம் — நகில், s. Female breast, *முலை*. (சது.)

நகு, கிறேன், நக்கேன், வேன், நக, v. n. To shine, glitter, coruscate, *ஒளிவிட*. 2. To laugh, to smile, to smile in approbation or delight of heart, *புன்னகைகொள்ள*. 3. To deride, to laugh at, to ridicule, *இகழ*. (சது.) 4. To bloom, as a flower, *மலர*. (p.)
*இலங்கைபுலம்புக்கநக்கான்*. He laughed until the island of Lanka (Ceylon) shook.
நகல் — நகுதல், v. noun. Shining, deriding, smiling, &c.

•நகுடம், s. The nose, மூக்கு. W. p. 450. NAKUT'A.

•நகுடன்—நகுஷன், s. A king of the Lunar race, who offered a hundred horses in sacrifice, but, by a curse of Agastya was transformed, for a time, into a serpent, *சந்திரகுலத்தரசரிலொருவன்*. W. p. 458 NAHUSHA.

நகுதா, s. (Hind.) The master of a vessel, *மாலுமி*.

நகுத்தம், s. A tree, *ஓர்மரம்*, Dalbergia arborea. (Willd.)

•நகுலம், s. The Viverra Ichneumon, or Mungoose, *கீரி*. W. p. 450. NAKULA.

•நகுலன், s. The fourth of the five Pandavas, *பஞ்சபாண்டவரிலொருவன்*. 2. (fig.) A clever horse-rider or jockey—as *குதிரைக்கு நகுலன், பரிமாவுகைப்போன்*.

நகை, s. A splendid jewel, commonly set with precious stones; jewels, trinkets, *ஆபரணம்*. 2. A metal article, commonly of a superior kind, *உடைமை*. (c.) 3. Laughter, smile, *சிரிப்பு*. 4. Contemptuous laughter, sneer, grin, ridicule, derision, scorn, *இகழ்ச்சி*. 5. Hilarity, mirth, *களிப்பு*. 6. Delight, gratification, pleasure, joy, *இன்பம்*. 7. Brightness, splendor, coruscation, *பிரகாசம்*. 8. The gums, *ஈறு*. 9. Teeth, *பல்*. 10. Flower bud, *பூமொட்டு*. 11. Blossoming of flowers, *மலருதல்*. (p.)
நகைகொள்ள—நகைபுரிய—நகையாட, inf. To smile, to laugh.
நகைகொட்ட, s. To laugh heartily.
நகைசெய்ய, inf. To make a jewel. (c.) 2. To smile, to laugh. 3. To deride, to ridicule.
நகைச்சொல், s. Ridicule, derision, a giggle, a sneer. 2. Pleasantry, joking humor.
நகைநாணயம், s. Wealth, treasure; property in jewels.
நகைரசம், s. Emotion of laughter.
நகைவகை, s. Jewels of various kinds.

நகை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. and a. To laugh, to smile, *சிரிக்க*. 2. To laugh at, to deride, to ridicule, to laugh contemptuously or sarcastically, *பரிகசிக்க*. 3. To scoff, to giggle, to taunt, *கிக்கிக்க*. (c.)
நகைமுகம், s. A smiling countenance.
நகைப்பு, v. noun. Smiling, derision, &c., as the verb.
நகைப்புக்கிடமாயிருக்க, inf. To be ridiculous.

நகையால், s. A plant, பசுந்தறைச்செடி, Ruellia, L. (R.)

நக்கபாரம் — நக்கவாரம், s. (for.) The Nicobar islands, *சிலதீவுகள்*.
நக்கபாரி — நக்கவாரி, s. A native of the Nicobars. 2. One who trades for ready money.
நக்கவாரக்கச்சவடம்— நக்கவாரவியாபாரம், s. Nicobar traffic; i. e. money in one hand and goods on other; traffic where one does not trust another.
நக்கவாரப்பட, inf. To be in pinching poverty or straitened circumstances.
நக்கவாரப்பேச்சு, s. Talk betraying mistrust.
நக்கவாரமாய்ப்போக, inf. To become very poor and indigent.
நக்கவாரம்பிடிக்க, inf. To become poor.
நக்கவாரி, s. A dwarf cocoanut tree, or stinted grain, *குள்ளமானது*. (R.) 2. See *நக்கபாரி*.

நக்கரி—நக்கரை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. [vul.] To shift along in a sitting posture, as a lame or sick person, *நகர*. 2. To linger on a sick bed, *படுக்கையிலிருக்க*. 3. To creep as a child, or wounded reptile, &c., *தவழ*; [ex *நகரு*, v.]
நக்கரிப்பு, v. noun. Shifting along, crawling, &c., as the verb.

நக்கல், s. Things eaten by licking, *நக்கியுண்பது*. 2. An electuary taken up with the tongue, a tincture, *இலேகியம்*. 3. [in contempt.] Leavings, scrapings, as eaten by a poor or mean person, *எச்சில்*. See *நக்கு*.

•நக்கனத்துவம் — நக்கனம், s. Nakedness, nudity, *நிருவாணம்*. See *நக்கினம்*.
நக்கனரூபம், s. A state of entire nudity, as of an ascetic, &c.

•நக்கனப்பிரசாதனம், s. Gift of a cloth to a brahman in the name of a deceased relative, *வஸ்திரதானம்*.

•நக்கன், s. A naked person, especially a mendicant, *நிருவாணி*. 2. Siva, *சிவன்*. 3. Argha, *அருகன்*. (சது.) 4. A fox, *நரி*.

நக்கிப்பூ, s. A plant, தேட்கொடுக்கி, Heliotropium Indicum. (R.)

•நக்கினம், s. Nakedness, as *நக்கனம்*. W. p. 451. NAGNA.

•நக்கினிகரணம், s. Stripping naked, making naked, *நிருவாணமாக்குகை*; [ex *நக்கனம்*, making.] (Sa. Nagnikarun'a.)

•நக்கீரர் — நக்கீரன், s. [sometimes *நற்கீரன்*.] Narkiren, a poet at the head of the Madura College in the ninth century A. D. He appears to have belonged to the class of chank-cutters. He was the author of an epic poem, *கீரனிப்புராணம்*, and of a hymn, *திருமுருகாற்றுப்படை*, in honor of Skanda; [ex *ந*, excellent, et *கீர்*, word.]

நக்கு, கிறேன், நக்கினேன், வேன், நக்க, v. a. To lick, to lap, one of the four kinds of eating. See *உண்டி*. (c.)
நக்கி, appel. n. A licker (in contempt), as *பலவீடுநக்கி*, one who eats in any one's house.
நக்கித்கொண்டுதிரிய, inf. To sneak about, in quest of food, to spunge from others.
நக்கல், v. noun. Licking, lapping, *நக்குதல்*.
நக்கு, v. noun. A lick, lap, lapping.
நக்குணி, appel. n. A lapper, a mean skulker for food, *நக்குவோன்*.

நக்குணி, s. [prov. vul.] A small kind of snake, *ஓர்பாம்பு*. 2. A little boy, *சிறுபிள்ளை*. 3. See *நக்கு*, v.

நங்கணவாய்ச்சி, s. [prop. *நங்கணவாய்*.] The name of a bird, *ஓர்பறவை*.

நங்கு, s. (Tel.) Derision, mockery, *பரிகாசம்*. (c.)
நங்குகாட்ட, inf. To deride.

நங்குரம் — நங்கூரம், s. (for.) An anchor. See *இலங்கர்*.
நங்கூரங்கொத்திவிட, inf. To cut or slip the cable. (R.)
நங்கூரந்தூக்க — நங்கூரம்வலிக்க, inf. To weigh anchor. See *தூக்கு*, v.
நங்கூரப்பல், s. The fluke of an anchor, *நங்கூரத்தின்கொழுவி*.
நங்கூரம்போட, inf. To cast anchor.
நங்கூரவளையம், s. Ring of an anchor.
நங்கூரவாடகை — நங்கூரவாடை, s. Anchorage.

நங்கை, s. A lady, a woman of quality or distinction, *பெண்ணிற்சிறந்தாள்*. (சது.) 2. A plant, *ஓர்பூடு*.—There are two kinds, as *சிறியாநங்கை*, Polygala glabra; *பெரியாநங்கை*, Polygala telephioides.
நங்கைநாச்சி, s. A lady of distinction.

நசநச, v. To be damp, &c. See *நசநச*.

நசபிச, v. To waver &c., as *நசபிசு*.

நசல், s. [prop. *நைதல்*.] Sickness, disease, a chronic disease, *வியாதி*. (c.)
நசலாளி—நசற்காரன், s. A person in ill health, *நோயாளி*.
நசல்பிடிக்க, inf. To become ill.

நசீனா—நசினா, s. (Tel.) A whitish color in the ruby, being a defect, *செம்மணியின்குற்றத்தொன்று*. (R.)

நசிஹத், s. (Arab.) Admonishing, reprimand, *புத்திசுப்பித்தல்*.

நசி, இறேன், ந்தேன், வேன், ய, *v. n.* To be crushed, bruised, mashed; to be broken, as a boil; frayed, as cloth deprived of smoothness or lustre; to be crumpled, as paper, &c., நசுக்க. 2. To be destroyed, அழிய. 3. To be palliated, extenuated, குறைவுகாண. 4. To be kept back, to be spoken indistinctly or with hesitation, திக்க. 5. To be frayed, to be almost worn through, as cloth, தேய. 6. To be reduced in circumstances, செல்வஞ்சுருங்க. (c.) [*ex Sa. Nasa.* to perish, decay, &c.]

நசிந்தபுடவை, *s.* A worn cloth.

நசிந்துகொடுக்க, *inf.* [*prov.*] To yield, as a boil or fruit, to the touch. 2. To yield to one, to concede. (c.)

நசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To perish, to be destroyed, annihilated, consumed, கெட. 2. To be reduced, as a body, to its primitive elements, உருவழிய.

நசிப்பு, *v. noun.* Perishing, involution, &c., *as the verb.*

நசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* [*prov.*] To crush, bruise, mash, to crumple, அரைக்க. 2. To demolish, destroy, consume, அழிக்க. 3. To squeeze, to press, நசுக்க. 4. To make light of, to treat as a small matter, தணிக்க. 5. To suppress, conceal, to connive at, &c.; to keep back, to speak with hesitation, அடக்க.

காரியத்தைநசித்துப்போட்டான். He has treated it as a little matter.

நசிப்பு, *v. noun.* Crushing, bruising, mashing, நெரிவு.

நசிவு, *v. noun.* Bruise, contusion, நெரிவு. 2. Perished, injured, கெடுகை. 3. Reproach, disparagement, நிந்தை.

நசிவானஎழுத்து, *s.* Ill-proportioned, ill-formed or indistinct letters, in writing. 2. A writing in equivocal terms.

நசிவானபுடவை, *s.* Damaged cloth.

நசிவுகாண, *inf.* To be injured or bruised, as ripe fruit. 2. To be shy or discordant as friends. 3. To be in risk, as one's office.

*நசியம், *s.* A medicine taken by the nose, a sternutatory. W. p. 458. Nasya.

நசியம்பிழிய, *inf.* To press out the juice of some medicinal herbs for a snuffing dose. (c.)

நசியல், *v. noun.* [*substantively.*] Any thing crushed or mashed, as over-ripe or decayed fruit; any thing pressed, or bent, as a jewel, &c., நசிந்தது. 2. Any thing tough or yielding, நசநசத்தது.

நசியலன், *s.* A person who practises evasion, or does not answer directly.

நசிறாணி — நசிறாண்டி, *s.* [*prov.*] A vexatious, teasing person, தொந்தரவுசெய்வோன். 2. As நசுவல்.

நசினை, *s.* A defect. See நசனை.

நசீப், *s.* (*Arab.*) Fate, destiny, விதி. 2. Good luck, fortune, &c., அதிஷ்டம்.

நசுகுணி, *s.* [*prov.*] A stunted person, மெலிந்தோன்.

நசுக்கான், *s.* [*vul.*] A small one, சிறியது; [*ex* நசுக்கு, *v.*]

நசுக்கான்பையன், *s.* A little boy.

நசுக்கு, கிறேன், நசுக்கினேன், வேன், நசுக்க, *v. a.* To squeeze, to press with the hand, அமுக்க. 2. To bruise, squash, crumple by pressing, as a letter or parcel, கசக்கச்செய்ய. 3. To keep a matter back, to tell it indistinctly, இழுத்தாற்போற்பேச. 4. To object to, to rebut, to try to defeat, தடுக்க. 5. To reduce, as pride, &c., இறுப்பெடுக்க. (c.)

ஒருவனைநசுக்கிவைக்க. To reduce one in circumstances, &c. 2. To keep one back in growth, progress, &c.

நசுக்கிச்சொல்ல, *inf.* To speak indistinctly, to clip words.

நசுக்கிப்பிழிய, *inf.* To press and squeeze out juice.

நசுக்கிவிட, *inf.* As நசுக்கு. 3.

நசுக்கு, *v. noun.* A bruise, நெரிவு.

நசுக்குத்துரிச்சனம்பண்ண, *inf.* To be mettlesome. (*R.*)

நசுக்குணி, *appel. n.* [*prov.*] A stunted person, மெலிந்தவன். 2. A loitering, delaying person, பின்னிடுவோன். 3. As நசக்கன்.

நசுக்குநசுக்கெனல், *v. noun.* Glueiness, stickiness; sticking to the teeth, &c., ஒட்டுந்தன்மை. (c.)

நசுங்கு, கிறேன், நசுங்கினேன், வேன், நசுங்க, *v. n.* To be squeezed, pressed, crowded, பிதுங்க. 2. To be mashed, crushed, bruised, நசுக்குப்பட. 3. To be crumpled, folded, bent, as a cloth, letter, paper, &c., கசங்க. 4. To be suppressed, dropped as an affair, to fall through, to become hushed, to die away, as a rumor, காரியங்கெட. 5. To be reduced in circumstances, pride, &c., பெருமைகுறைய. (c.)

நசுங்கடிக்க, *inf.* [*prop.* நசுங்கஅடிக்க.] To crush, to bruise, நொறுக்க. 2. To reduce, to discomfit, to beat to pieces, சிதைக்க.

நசுங்கச்சப்பி, *appel. n.* [*prov.*] A stingy person, a niggard, உலோபி.

நசுங்கலன்—நசுங்கலான், *s.* One who speaks or acts with indecision, misgiving, hesitation. 2. As நசுக்குணி.

மனம்நசுங்கப்பேச, *inf.* To speak so as to wound one's feelings.

நசுநசு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* [*used com. in the 3rd person neuter.*] To waver, to be undecided in speech or action, தயங்க. 2. To be continually drizzling, தூறிக்கொண்டேயிருக்க. 3. To be damp as a floor, ஈரிக்க. (c.) 4. [*prov.*] To be yielding to the touch, as நசிந்துகொடுக்க.

நசுநசுத்தகுணம், *s.* Illiberal disposition.

நசுநசுத்தபதம், *s.* A state of adhesiveness and softness.

நசுநசுத்தபேச்சு, *s.* A hesitating speech.

நசுநசுப்பு—நசுநசெனல், *v. noun.* Being damp, tough, wavering, drizzling, &c., *as the verb.*

நசநசென்றதடிநறுக்கவொட்டாது. A tough stick is not easily cut.

நசுபிசு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* [*com.* நசபிச.] To waver, be undecided in speech or action, be unsettled, &c., as நசநச.

நசுபிசெனல், *v. noun.* Being damp, as நசநசெனல்.

நசுவல், *s.* [*prov.*] A stingy person, a miser, உலோபி. (c.) 2. A stunted or emaciated person, or beast, மெலிந்தது. 3. A person without energy, முயற்சியற்றவன்.

நசை, *s.* Desire, eagerness, avarice, lust, &c., ஆசை. 2. Love, affection, fondness, அன்பு. 3. Regularity of conduct, consistency, ஒழுக்கம். 4. Fault, defect, குற்றம். (*p.*) 5. [*cor. of* நகை.] Derision, பரிகாசம். 6. (*R.*) Dampness, moisture, ஈரம்.

மண்ணசையாயிருக்கிறது. The ground is damp.

நசைகாட்ட, *inf.* To allure. 2. To deride.

நசைபண்ண, *inf.* To deride, to ridicule, to scorn.

நசைவினை, *s.* A good career—oppos. to வசைவினை.

நசையுரை, *s.* Amorous talk.

நசை, கிறேன், ந்தேன், வேன், ய, *v. a.* To love, அன்புற. 2. To desire, விரும்ப. (*p.*)

நசைதல், *v. noun.* Desiring, hankering for, lusting after, craving, விரும்புகை.

நசைநர் — நசைஞர் — நசையுநர், *s.* Friends, lovers. 2. Well-wishers. (*p.*)

நசைவு, *s.* Moisture of the earth, as நசை. (*R.*)

நச்சறுப்பாய்ஞ்சான் — நச்சறுப்பான், *s.* A medicinal creeper whose juice is used as an antidote to cutaneous disease, கழுதைப்பாலை; prolific swallow wort, Asclepias prolifera, ஓர்கொடி; [*ex* நஞ்சு.]

நச்சி, *s.* A female gossip. (*R.*)

நச்சினார்க்கினியார், *s.* The name of a commentator, of whose life very little is known. His commentaries on தொல்காப்பியம் and திருமுருகாற்றுப்படை, are masterly productions, நூலுரையாசிரியர்; [*ex* நச்சு.]

நச்சினி, *s.* A kind of millet, raggy, கேழ்வரகு. (*R.*)

நச்சு, *s.* Desire, lust, hankering, craving, &c., ஆசை. (சு.) 2. Babble, தொணப்பு. [*Tel. usage.*] 3. *adj.* Little, small, சிறிய. 4. [*oblique of* நஞ்சு, *as an adjec.*] Poisonous, venomous, baneful.

நச்சுக்கண், *s.* A poisonous eye, that blights whatever it looks upon.

நச்சுக்கத்தி, *s.* A poisoned knife. 2. (*fig.*) A very wicked person, கெட்டவன்.

நச்சுக்காற்று, *s.* An unhealthy wind. See காற்று.

நச்சுக்குழல், *s.* [*vul.*] A long tube for shooting birds with clay pellets, புட்பெடுக்குங்குழல். 2. A telescope, தூரதிருஷ்டிக்கண்ணாடி.

நச்சுக்கொடி, *s.* The after-birth, secundines, as நஞ்சுக்கொடி. (c.)

நச்சுக்கொடிச்சுண்ணம், *s.* A medical powder made of the after-birth, administered in cholera, விஷபேதிச்சூரணம்.

நச்சுச்சொல், *s.* Blighting words, தீச்சொல். 2. Malicious, envious or sarcastic language, கடுஞ்சொல். 3. A malign word in poetic composition supposed to be injurious to the hero, வசைச்சொல்.

நச்சுத்தானம், *s.* [*in erotics.*] Parts of the female body which if touched by men on certain days of the moon, are supposed to produce disgust, அமுதநிலைக்கேடானவிடம்.

நச்சுநீர், *s.* Poisonous water, விஷநீர்.

நச்சுப்படைக்கலம், *s.* Poisoned weapons. (*p.*)

நாரத்தம், s. Sweet flag, Acorus Calamus, வசம்பு. 2. A medicinal grass, கடலாருஞ்சி, Cyperus stoloniferu.

நாரத்தம்புல், s. Sweet rush, lemon grass, or Camel's hay.

நாரத்தை, s. A Mandarin orange, Citrus aurantium, L., as சாரம்பம். (c.)

நாரத்தங்காய், s. Citron fruit.

•நாரம், s. Water, நீர். 2. The multitude of men, ஆத்துமாக்கள். W. p. 462. NARA. 3. Love, affection, அன்பு. 4. String, a cord, நார். 5. The lemon or citron, நாரத்தை. 6. An aquatic plant, as moss, &c., பாசி.—The third and fourth may probably be a change of நார். (சது.)

நாராங்கி, s. [prop. நாதாங்கி.] Staple for the bolt of a door, கதவுநாதாங்குப்பூட்டு. (c.)

•நாராசம், s. An iron pin, rod, wire, skewer, சலாகை. 2. An iron arrow, இரும்பு. 3. The pin passed through an ola book to keep it firm, இருப்பாணி. W. p. 462. NARASA. 4. A narrow straight lane, at right angles to a street, சந்தொழுங்கை. 5. An iron style, எழுத்தாணி.

நாராசபாணம், s. A kind of arrow, நாலஸ்திரம்.

நாராசமேற்றுதல், v. noun. Passing the pin through an ola-book. 2. [also நாரா சம்பாய்ச்சுதல்.] Thrusting an iron rod into one's ears as a punishment.

காதிலேநாராசமேற்றினதுபோலேயிருக்கிறது. As if an iron rod had been thrust into my ears; i. e. the hearing of it was very painful.

•நாராயணகௌளம், s. A kind of tune, இராகம். (சது)

•நாராயணம், s. One of the thirty-two Upanishads, உபநிடதங்களிலொன்று. 2. The religious fig-tree. See அரசு. 3. A fish, மீன்.

•நாராயணன், s. Vishnu as preserver in the deluge, திருமால்; [ex நாரம் et அயனம், place.] W. p. 462. NARAYAN'A. 2. [in சது. but improp.] Siva, சிவன், Brahma, பிரமன், Varuna, வருணன், and Chandra, சந்திரன்.

நாராயணகோபாலர், s. A shepherd form of Vishnu; some say, sons of Krishna. திருமாலுருவுடைபோர்.

நாராயணா, s. [voc.] Oh! Vishnu, a common expression in worship.

நாராயணி, s. Lukshmi, the wife of நாராயணன், இலக்குமி. 2. Durga, துர்க்கை. 3. The Ganges as the goddess, கங்கை. 4. W. p. 655. MATRI. One of the seven personified energies, or Matris, சத்தமாதாக்களிலொருத்தி. 5. A kind of tune, இராகம். (சது)

நாரிபாகன், s. Siva, சிவன், as part male and part female; [ex பாகம், part.]

நாரி, s. Fibrous covering about the bottom of the leaf-stem of a cocoa-nut tree, பன்னாடை. 2. Bow-string, நாணி. 3. String of a guitar, or other musical instrument, யாழ்நரம்பு. 4. Fragrance, odor, வாசனை. 5. [prov.] Loins, hips, இடை.

நாரிக்குத்து—நாரிவலி, s. Pain in the loins.

நாரிப்பிடிப்பு, v. noun. Contraction in the loins.

•நாரி, s. A woman, a female, பெண். W. p. 462. NAREE. 2. Parvati, பார்வதி.

•நாரிகேளம், s. A cocoa-nut, தேங்காய். W. p. 462. NARIKALA. 2. (சது.) A cocoa-nut tree, தென்கு. See நாரிகேலம்.

நாரை, s. A kind of water bird, the heron, cormorant, stork, திச்சிப்புறவை. See கருநாரை, செங்கானாரை, நத்தைக்குத்திநாரை, வெள்ளைநாரை, or வெள்ளைநாரை, பெருநாரை, சாம்பனாரை, கொய்யடிநாரை. (c.)

நாரைப்பசு, s. A tall meagre cow, நெட்டைப்பசு. (R.)

நார், s. Vegetable fibre in fruits, &c., தும்பு. 2. Fibres from plants and the bark of certain trees, மட்டைநார். (c.) 3. String, rope, cord, கயிறு. 4. Love, affection, அன்பு. (சது.)

நாருரிக்க, inf. To strip off bark for strings.

நார்கதுவுதல், v. noun. [prov.] Cutting off a strip of நார் raising the back of the knife with each stroke.

நார்கோக்க, inf. To thread a wooden needle with நார். 2. To pass the needle through in hedging or thatching.

நார்க்கட்டு, s. A bundle of palmyra நார்; commonly a hundred.

நார்க்கயிறு, s. A coir-rope.

நார்ச்சீலை—நார்ப்பட்டு—நார்மடி, s. Cloth made of fibre of trees, resembling silk, இறைஞ்சி.

நார்மட்டை, s. Stalks of palmyra leaves fit for நார்.

நார்முடிதல், v. noun. Tying நார் together, for strings or withes.

உண்மட்டைநார்—உள்மட்டைநார், s. Inner or better bark of a stalk, அகணி.

புறமட்டைநார், s. Exterior bark.

நாலா, s. (Hind.) A water-channel, a ravine, வாய்க்கால்.

நாலி, s. A pearl, முத்து. (சது.)

நாலு—நால், adj. Four, நான்கு. 2. (fig.) Many, general, multifold, universal, all, பல, as நாலுவித்தையும்.—Note. In combination before, க, ச, த, ப, the ல் becomes ற் and before ஞ, ந, ம, it is changed to ன்; sometimes to வ as நாலாவிதமும், divers matters, various affairs, concerns, circumstances.

நாலுகல்வியும். Different branches of knowledge.

நாலுகாரியமுமறிந்தவன். A man of general knowledge, one acquainted with men and things.

நாலுபக்கமும். On all hands, on all sides.

நாலுசாதியும். All the castes. 2. Various castes, several castes.

நாலுதிக்கும். The four cardinal points, quarters, regions. 2. On all sides, in all directions.

நாலுதிக்கிலுஞ்சிதறிப்போக. To be scattered in different directions.

நாலுதெருவுந்திரிகிறான். He strolls, or wanders through all the streets.

நாலுமுகத்திலுமெதிர்த்தார்கள். They faced him on all sides.

நாலும்யோசித்துச்செய்யவேண்டும். One should act with due consideration of the whole matter.

ஆலும்வேலும்பல்லுக்குறுதிநாலுமிரண்டுஞ்சொல்லுக்குறுதி. As the splint of the banyan and வேல் trees gives strength to the teeth (by rubbing them), so நாலடியார், and குறள், give strength to the speech.

நாலடி—நாலடியார், s. The title of a poetical book on morals having four lines to each verse, and four hundred verses; or the book which ascended, according to the legend, four feet against the stream of the river Veiga, at Madura.

நாலாஞ்சடங்கு—நாலாநாட்சடங்கு, s. Bathing of the new married pair on the fourth day with the ends of their cloths tied together.

நாலாமுறைக்காய்ச்சல், s. Quartan fever.

நாலாம்வருணம், s. The Sudras; (lit.) the fourth caste, சூத்திரசாதி.

நாலாயிரப்பிரபந்தம், s. Four thousand poems made by twelve ஆழ்வார்கள்.

நாலாவிதம், s. [probably a change of நானாவிதம்.] Various kinds, varieties, sundry modes, &c.

நாலுபேருமறிய — நாலுபேரறிய, inf. (adverbially) Publicly, before all, generally or universally known.

நால்வகைத்தோற்றம், s. The births of four kinds. See தோற்றம்.

நால்வர், s. The four persons, நான்கு பேர். 2. Four devotees of Siva, சமயாசாரியர்கள் முதலியோர்கள்.

நால்வர்வார்த்தைதேவர்வார்த்தை. The testimony of four persons is equal to that of the gods.

நாற்கணம், s. [in gram.] The four classes of letters, viz, vowels, hard consonants, nasals and medials. See under கணம்.

நாற்கதி, s. The four divisions of living beings. See கதி.

நாற்கவி, s. The four kinds of verses. See கவி.

நாற்கால், appel. n. A quadruped, as நாற்காற்பிராணி. 2. Any four-legged seat, as a chair, a stool, &c.

நாற்காற்சீவன்—நாற்கான்மிருகம், s. A quadruped.

நாற்குணம், s. The four prominent human qualities. See under குணம்.

நாற்கோணம், s. A square, a quadrangular figure, a tetragon.

நாற்சதுரம், s. [com. நற்சதுரம்.] A four angled figure, four square, four sided figure. (a colloquial pleonasm.)

நாற்சந்தி, s. The junction of four ways or streets.

நாற்பண், s. The four kinds of melody.

நாற்பது, s. [poet. நாற்பான்.] Forty, நாற்பது.

நாற்பதுநாளொருசந்தி, s. [R. Cath. usage.] Quadragesimal, the time of Lent.

நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள், s. The 48,000 Rishis.

நாற்பயன்—நாற்பொருள், s. The four fruits of science, or kinds of good, treated of in moral writings, to which every branch of literature may be reduced, நால்வகைப்பயன், viz: அறம், virtue; 2. பொருள், wealth; 3. இன்பம், pleasure, commonly connubial; 4. வீடு, final bliss, liberation from births, absorption.

நாற்பாட்டன், s. The great grandfather's father.

நாற்றிசை, s. [also நாற்பெருந்திசை.] The four cardinal points, நான்குதிக்கு.

நானான்கு, s. Four times four.

நானிலம், s. The four kinds of soil—mountainous, forest, agricultural and maritime, நால்வகைநிலம். 2. The earth, the four quarters of the globe, பூமி.

நானூறு, s. Four hundred.

நான்கு, adj. Four. 2. Four-fold.

நான்மணிமாலை, s. A poem of forty verses of four varieties, (lit.) four gemmed chain, ஓர்பிரபந்தம்.

நான்மருப்பியானை, s. The four tusked elephant of Indra, ஐராவதம்.

நான்மருப்பியானையூர்தி, s. Indra, இந்திரன்.

நான்மறை — நாலுவேதம், s. The four Vedas, சதுர்வேதம். See வேதம்.

நான்மறையோன், s. Brahma, பிரமன்.

நான்முகப்புல், s. A grass, Saccharum spontaneum, சரபம்.

நான்முகன், s. Brahma the four-faced, பிரமன். 2. Argha, அருகன்.

நான்முகன்கிழத்தி, s. Sarasvati, as wife of Brahma, சரஸ்வதி.

நான்முகன்வாழ்நாள், s. A kalpa, (lit.) the life time of Brahma, கற்பம்.

நாலு—நால், கிறேன், நான்றேன், வேன், நால, v. n. [also ஞாலு.] To hang, to be suspended, to be hung up, தொங்க. 2. To hang down, to fall, as the under-jaw, or tongue; to incline to drop, as the heat, இறக்க. 3. To fall down as drops, துளிவிழ. (சது.)

நால்வாய், s. An elephant whose mouth, or lower lip, hangs down, யானை. (சது.)

நால்வாயன், s. The god Ganesa, the elephant faced, விநாயகன். 2. Indra, the elephant rider, இந்திரன்.

நான்றவாய், s. A hanging mouth or jaw.

நான்றுகொள்ள — நான்றுகொண்டிறக்க, inf. [vul. நானுக்கொள்ள.] To hang one's self.

நாவணம், s. The uvula. See நா.

நாவிணை, s. [for நாலிணை.] Four pair of oxen. (Beschi.)

நாவலர், s. Poets, &c. See நா.

நாவல், s. The nawel or jambo-tree, Calyptranthes caryophillifolia, L. 2. The central or jambo-continent, சம்பு, said to abound in those trees, சத்ததீவினொன்று. 3. As a particle uttered to excite beasts in treading out the corn.—There are different kinds of நாவல், பெருநாவல் or சம்புநாவல், Eugenia Jambos, சிறுநாவல் or குழிநாவல், Calyptranthes Jambolana, also கிழங்குநாவல், a plant, Ocimum Menthoides. (c.)

நாவலந்தீவு, s. The central continent surrounded by six others. See தீவு.

•நாவாய், s. A vessel, a ship, மரக்கலம். 2. The twenty-seventh or last lunar asterism, இரேவதி. (p.) See சவ்வு.

நாவாயோட்டுங்கோல், s. A boat-pole, as உடு.

•நாவி, s. A vegetable poison, as நாபி. 2. W. p. 461. Nab'hi. The musk-deer. கஸ்தூரிமிருகம். 3. [com.] Civet cat, புழுகுப்பூனை,

நாவிச்சட்டம், s. The scrotum of the musk-deer whence the perfume, கஸ்தூரிச்சட்டம். 2. See புழுகுச்சட்டம்.

நாவிநெய், s. A juice like musk, that exudes from the scrotum of the civet cat.

நாவிப்பிள்ளை, s. As நாவி, 2. (சது.)

நாவிப்புழுகு, s. [prov.] Civet.

•நாவிதன், s. [fem. நாவிதச்சி.] A barber, அம்பட்டன். (See அம்.) W. p. 461. Napita. 2. The third lunar mansion, கார்த்திகைநாள். 3. The eleventh lunar mansion, பூரநாள். (சது.)

நாவித்தண்டை, s. A kind of teazle plant, எருமுட்டைப்பீநாறி, Ballota, L.

நாவு, s. [prop. நா.] The tongue. For the compounds, see நா, நாக்கு.

நாவு, கிறேன், நாவினேன், வேன், நாவ, v. a. To winnow and clean grain from stones, &c., சேம்ப. (c.) 2. To mock by thrusting out the tongue, நாவால்வையாண்டிகாட்ட.

நாவுரி—நாடூரி, s. [a contraction of நாழிஉரி.] One measure and a half. (சது.)

நாவை, s. The part of the plough that receives the share, கலப்பையடி. 2. The lower end of the படைவாள்; [ex நா.]

•நாழி, s. A corn measure as படி expressed by being the eighth part of a குறுணி or marcal, ஒருநாழி, இருநாழி, &c., one measure, two measures, &c., to eight which is a marcal. 2. [corrup. from Su. Nadi.] Tubularity, any thing tubular, உட்டுளைப்பொருள். 3. [improp. for நாழிகை.] An Indian hour of twenty-four minutes. 4. The twenty-fifth lunar asterism, பூரட்டாதி. 5. A weaver's shuttle, அறுழி.

நாழியோடு, s. A water-spout. See ஓடு.

•நாழிகை, s. (St. நாடிகா.) An Indian hour of twenty-four minutes, அறுபதுவிநாடிகொண்டது. 2. (fig.) The distance walked in twenty-four minutes, ஒருநாழிகைவழி. (c.) 3. (சது.) The twenty-sixth lunar asterism or day, உத்திரட்டாதி.

நாழிகைப்பறை, s. [prov.] The hour drum.

நாழிகைவட்டம், s. A watch, கடிகாரம். (Modern.)

நாழிகைவட்டில், s. A small vessel for determining time, which having holes in the bottom, and floating on water, sinks at the end of twenty-four minutes.

•நாளகம், s. A sweet smelling grass, Cuss-cuss. See இலாமிச்சை.

நாளது, adj. Current, passing, present, instant; [ex நாள்.] (c.)

நாளதுமாதம், s. The current month.

நாளதுவருஷம், s. The present year.

நாளதுவரையில். To the present time.

•நாளம், s. Tubularity, உட்டுளை. 2. A pipe or tube, a hollow stalk, as of a lotus, சம்பு. W. p. 462. Nala.

நாளி, s. A dog, &c. See ஞாளி.

•நாளிகம், s. The வள்ளை creeper, a Convolvulus. W. p. 462. Nalika.

•நாளிகேரம் — நாளிகேளம், s. The cocoa-nut tree, or fruit as நாரிகேளம், தெங்கு.

நாளிகேரபாகம்—நாளிகேளபாகம், s. One of the four kinds of poetic composition, which has a deep and concealed meaning, resembling a cocoa-nut that must be broken before the kernel is obtained.

நாளை, s. To-morrow, மற்றைநாள். (c.)

நாளைக்காலமே. To-morrow morning.

நாளைக்கு — நாளைப்பதினம் — நாளைக்கன்றைக்கு. To-morrow.

நாளைநின்று—நாளைநின்றன்று. The day after to-morrow.

நாளைமற்றைநாள். To-morrow or the day after. 2. Some time hence.

நாளையினன்று—நாளைநன்று. As நாளைநின்று.

நாளைவிட்டுமற்றைநாள். The day after to-morrow.

நாளினி, s. A sour Mango tree, புளிமா. (சது.)

நாள், s. [Gen. நாளின், acc. நாளை, poet. நாளினை.] A day of twenty-four hours, a natural day, from sun rise to sun rise, இராப்பகல்கொண்டபொழுது. 2. Time in general, காலம். 3. An auspicious day, பெருநாள். 4. A lunar asterism. See நட்சத்திரம். (c.) 5. A lunar or astrological day; the period of the moon's passage through an asterism, சந்திரனுள். 6. The name of a metrical foot of the class அசைச்சீர். 7. adj. New, as நாட்பூ.—Note. In combination, the last letter is changed by rule.

நாளொருவண்ணமும்பொழுதொருமேனியுமாய்வளர்ந்துவிட்டது. It has grown every day and every hour.

நாள்வாய்ப்பொழினும். Even in the early part of the day. (p.)

இது அதற்குநாளல்ல. This is not the proper time or season.

நாடோறும், adv. [for நாள்தோறும்.] Daily. 2. Always.

நாட்கடத்த—நாள்கடத்த, inf. To pass away time, காலங்கழிக்க. 2. To put off from day to day.

நாட்கணக்கு, s. Daily accounts. 2. The term, or appointed end of one's life, வாழ்நாளின்முடிவு.

நாட்கழிவு—நாள்கழிவு, v. noun. The passing of time. 2. Deduction of days in payment.

நாட்காரியம், s. A thing of urgent necessity to be done on an auspicious day.

நாட்கால், s. [prov.] The first post of the wedding shed, or of a new building, set up on an auspicious day, மணப்பந்தருக்குமுதனட்டுக்கால்.

நாட்குறிக்க, inf. To appoint a day.

நாட்கூலி, s. Daily hire.

நாட்கொள்ள, inf. To enter on work or business, especially on an auspicious day.

நாட்செலவு, v. noun. Daily expenses. 2. Flight of time or passing of days.

நாட்செல்ல — நாள்செல்ல, inf. To pass, as days or time.

நாட்பட—நாள்பட, *inf.* As நாட்செல்ல. 2. To be of long standing, as a chronic disease, நீலிக்க. 3. To become old, பழமையாக. 4. To be long acted on by air, water, &c.

நாட்பட்டவந்தான். He came after many days.

நாட்பட்டகாரியம். A thing out of date. 2. A thing of long standing.

நாட்பட்டசரக்கு. Old wares or commodities.

நாட்பட்டமரம். An old tree.

நாட்பார்க்க—நாள்பார்க்க, *inf.* To find an auspicious day.

நாட்பூ—நாண்மலர், *s.* A new-blown flower. (*poetic.*)

நாட்பொருத்தம், *s.* Agreement of the lunar constellations in the horoscope of persons to be united in marriage. See தசப்பொருத்தம். 2. One of the ten things in the choice of the first word of a poem. See செய்யுட்பொருத்தம். 3. The class of lunar mansions connected with one's nacshatra, நாளினன்மை.

நாளாறுதி, *s.* Expiration of a term. 2. From time to time, gradually, நாள்வட்டம்.

நாளாக, *inf.* To pass away as time.

அவன்வந்துநெடுநாளாயிற்று. It is a long time since he came.

நாளாகமம், *s.* A chronicle, a book of annals.

நாளாகிறுதிலே—நாளாவட்டத்திலே. See நாள்வட்டத்திலே.

நாளிலே. By degrees. 2. Day by day. 3. In course of time.

நாளுக்கு. For the day, on a day. 2. [*prov.*] On an auspicious day, நல் being understood.

நாளுக்குநாள். From day to day.

நாளைய, *adj.* Now-a-days, modern.

இக்காலையமனிதர். Moderns.

நாளொன்றுக்கு. For each day.

நாளொன்றுக்கொருபணம். A fanam a day.

நாளோலை, *s.* [*prov.*] An ola sent to friends giving notice of the auspicious hour for a marriage, மணவோலை. 2. The ceremony of beginning to cut olas on an auspicious day to cover a house. 3. See ஓலை. (*Jaffna.*)

நாள்தள்ள—நாள்விட, *inf.* To pass one's days, to support one's self, commonly with difficulty.

நாள்தொலைய—நாள்போக, *inf.* To expire as days.

நாள்தோறும். Daily.

நாள்வட்டத்திலே. [*com.* நாளாவட்டத்திலே.] In course of time, at length, by degrees.

நாள்வலிமை, *s.* The great influence of an auspicious birth-day. 2. The influence of one according to his horoscope.

நாள்வேலை, *s.* Work by the day. 2. [*prov.*] Work begun on an auspicious day.

பலநாட்செய்தி, *s.* A history of past events.

மறுநாள், *s.* The next day.

நாறல். See நாறு, *v.*

நாறணு, *s.* A kind of shrub, சடைச்சிப்பூண்டு, Aeschynomene. (*R.*)

நாறு, *s.* Shoot, sprout, முளை. 2. Plants for transplanting, நாற்று. (*p.*)

நாறு, கிறது, நாறினது, நாறும், நாற, *v. n.* To yield a smell, *usually bad*, மணக்க. 2. To stink, துர்க்கந்தம்வீச. (*c.*) 3. To be fragrant, சுகந்தம்வீச. 4. To arise, come into being, begin to exist, தோன்ற. 5. To spring forth, to shoot up, முளைக்க. (*சூ.*)

நாறுகரந்தை, *s.* Sweet basil. See கரந்தை.

நாறல், *v. noun.* Stinking; being offensive in smell, corrupt, or putrid. 2. A stinking thing, a stench, நாற்றமுடையது.

நாறற்சரீரம், *s.* The vile body.

நாறற்சோறு, *s.* Stale and spoiled rice.

நாறற்சோற்றுக்குப்புளிப்பார்ப்பானேன். Why taste spoiled rice; i. e. why take pains to improve what is past recovery?

நாறற்பாக்கு, *s.* Areca-nut soaked to improve the taste till the husk begins to putrify.

நாறல்மீன், *s.* Spoiled fish, stinking fish.

நாறல்வாயன், *s.* A person with stinking breath. 2. (*fig.*) One who uses obscene language.

நாறல்வாயன்தேடக் கற்பூரவாயன் கைக்கொண்டான். What the stinking mouthed (the miser) has sought, the camphor mouthed (the benevolent) has obtained.

நாற்கவிராசநம்பி, *s.* A Jaina considered the king of poets. He was the author of அகப்பொருள்விளக்கம், rules for composing amatory poems, சிற்றின்பம்.

நாற்சி, *s.* [*also* ஞாற்சி.] That which is hanging down, or pendent, தொங்கல்; [*ex* நாலு, *v.*] (*p.*)

நாற்றம், *s.* An offensive smell, stench, fetidness, putridness, துர்க்கந்தம். (*c.*) 2. Smell, scent, odor, fragrance, சுகந்தம். 3. Toddy, கள். 4. (*p.*) Origin, rise, development, as தோற்றம்; [*ex* நாறு, *v.*]

அவன்நாற்றமேபிடிக்கவில்லை. I abhor him, with the utmost disdain.

நாற்றமுமில்லை. Not even a scent of it, of him, &c.

நாற்றங்கேட்டல், *v. noun.* [*prov.*] Being smelt, or perceived by smell.

நாற்றமடிக்க — நாற்றம்வீச — நாற்றமெடுக்க, *inf.* To rise and spread as a bad smell. 2. To cast a bad smell as a carcass, &c.

நாற்றம்பிடிக்க, *inf.* To scent, to catch a smell—as a dog. See மோப்பம்பிடிக்க.

நாற்று, *s.* Plant, as planted or to be transplanted, முளைத்தபயிர்; [*ex* நாறு, *v.*] (*c.*)

நாற்றுநீர்மெத்திப்போயிற்று. The plants are injured by too much water in the bed.

நாற்றங்கால்—நாற்றங்கொல்லை, *s.* A bed on which rice corn is sown, for transplanting, நாற்றுப்பண்ணை.

நாற்றுக்கட்டு, *s.* A number of bundles of plants tied into one.

நாற்றுத்தேங்காய், *s.* [*prov.*] A seed—cocoa-nut.

நாற்றுநடுதல் — நாற்றுநடவு, *v. noun.* Planting or setting plants.

நாற்றுப்பாக்கு, *s.* [*prov.*] Superior areca-nuts, for planting.

நாற்றுப்பாவுதல், *v. noun.* Scattering seeds or setting seed-stones for plants, வித்துவிதைத்தல். 2. Setting young plants in groups, for transplanting.

நாற்றுப்பிடுங்க, *inf.* To pluck up plants.

நாற்றுப்பிடி — நாற்றுமுடி, *s.* A handful of plants for planting, tied together.

நாற்றுமரம், *s.* [*prov.*] A tree producing superior fruit, valued for propagation, நாற்றெடுத்தமரம்.

நாற்றுவிட, *inf.* As நாற்றுப்பாவுதல்.

நாற்று, கிறேன், நாற்றினேன், வேன், நாற்ற, *v. a.* (*caus. of* நாலு.) To hang another, தூக்க.

நானம், *s.* Fragrance, வாசனை. 2. The bos-grunniens. See கவரிமா. (*சூ.*) 3. Musk, கஸ்தூரி. 4. The musk-deer, கஸ்தூரிமிருகம்.

நானமா, *s.* As நானம், 4; [*ex* மா.]

*நானம், *s.* (*St.* ஸ்நானம்.) Bathing, ablution by pouring or immersion, purification by bathing, குளித்தல். (*சூ.*) 2. A bath, water for bathing, முழுகுநீர். For the seven kinds of ablutions, see ஸ்நானம்.

ஸ்நானபானம், *s.* Ceremonial ablution, and eating. (*c.*)

ஸ்நானம்பண்ண, *inf.* To bathe, to perform ablution.

*நானா, *adj.* [*also written* நாநா.] Sundry, divers, various, multiform, பல. W. p. 460. Nana.

நானாகாரியம், *s.* Sundry things.

நானாதேசங்கள், *s.* Several countries.

நானாபலன், *s.* Various fruits, results, various productions.

நானாப்பிரகாரம் — நானாவகை — நானாவிதம், *s.* Various ways or rules, miscellaneous methods.

நானாரூபம், *s.* (*St.*) Various forms.

நானாவிததொனி, *s.* A musical instrument of many tones. (*Sa. Nanad'hvani.*) (*R.*)

நானாவிதபலன், *s.* A variety of produce.

நானான்கு—நானூறு. See நால்.

நானிலம், *s.* Earth, &c. See under நால்.

நான், *pron.* [*Gen.* என், or என்னுடைய.] I, யான். 2. [*in the ayama philos.*] Self-consequence, &c. See நானெனதெனல்.—*Note.* In composition it is sometimes used for நால் (four), as நான்கு.

நானே, I myself, of or by myself, of my own accord.

நானெனதெனல், *v. noun.* Saying I and mine. 2. [*in the ayamas.*] A form used to express self-consequence and the feelings that excite to energy and action but which must be suppressed before the soul is ripe for absorption.

நானென்றஎண்ணம், *s.* Self-importance, presumption, egotism.

நானென்றிருந்தவர்கள் எத்தனைபேர் வெயர் போய் விட்டார்கள். How many, who flourished and boasted, are gone!

# நி

நி. A letter compounded of ந் and இ.

•நி, A Sans. part. of negation, as நிகர்வம், humility, from நி and கர்வம் pride; also of fulness or certainty, as நிர்ணயம் certainty, demonstration, not mere appearance, and நிகற்பம், a long period, or full கற்பம்.

•நிகண்டவாதம், s. A system of religion, which regards Argha as the deity, ஓர்மதம்.

நிகண்டவாதி, appel. n. A professor of the நிகண்டம் religion.

•நிகண்டு, s. A poetic vocabulary of words and their synonymes, divided into twelve parts, ஓர்நூல். 2. A dictionary in general, சொற்றொகுதி. W. p. 466. NIGHANDU. 3. Certainty, ascertainment, நிச்சயம். 4. A chapter or section, படலம். 5. One of the six portions of the secondary Vedas, வேதாங்கமாறினொன்று.

தசவிதநிகண்டுகள். Ten kinds of dictionary, mentioned in Sanscrit.

நிகண்டாயிருத்தல், v. noun. Being true, just, exact.

நிகண்டாய்ச்சொல்ல, inf. To speak the truth.

•நிகமம், s. A town, city, நகரம். 2. The Vedas collectively, holy writ, வேதம். W. p. 465. NIGAMA.

நிகமாகமம், s. Vedas and Agamas.

•நிகமனம், s. Conclusion in a series of logical inferences, உறுதிப்படுத்திச்சொல்லல். W. p. 465. NIGAMANA.

•நிகம், s. (St.) Brightness, splendor, brilliance, பிரகாசம்.

•நிகரம், s. Company, assemblage, flock, multitude, கூட்டம். 2. Heap, bundle, குவியல். W. p 464. NIKARA. 3. A total, மொத்தம். 4. The letter நி.

•நிகருவம் — நிகர்வம், s. Freedom from pride; humility, meekness, அடக்கம். See நி.

இவன்நிகர்வமேரோமணி. He is the most precious of humble men.

நிகர்வி, s. A humble person.

நிகர், s. Comparison, likeness, simile, resemblance, உவமை. 2. [for நிகம்.] Lustre, brightness, splendor, பிரகாசம். 3. Equal, parallel, match, சமானம். See நிகர், v.

அவனுக்குநிகரில்லை. He has no equal.

நிகர், கிறேன், ந்தேன், வேன், நிகர, v. n. To be similar, to be like, ஒப்பாக. (p.)

நிகர்பக்கம், s. [in logic.] Comparison, inference by comparison, உவமைப்பொருளிருக்குமிடம்; [ex பக்கம்.]

நிகர்வு, v. noun. Resemblance, ஒப்பு.

நிகர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To assimilate, liken to, உவமிக்க. 2. To fight, போர்செய்ய. (p.)

நிகர்ப்பு, v. noun. Resemblance, likeness, ஒப்பு. 2. Battle, fighting, warfare, rivalry, போர். (சூ.)

•நிகலம், s. The upper part or top of the shoulder, தோண்மேல். (சூ.)

நிகழ், கிறது, ந்தது, நிகழும், நிகழ, v. n. [causative நிகழ்வி.] To take place, to occur; to go, to go on foot, நடக்க. 2. To shine, பிரகாசிக்க. (சூ.) 3. To be performed, transacted, carried on, to subsist, to exist, நிறைவேற. 4. To pass as time, செல்ல.

நிகழ்காலம், s. Present time, தற்காலம். 2. The present tense, வர்த்தமானம்.

நிகழ்சரம், s. A flying dart. (p.)

நிகழ்ச்சி—நிகழ்வு, v. noun. Occurrence, incident, event, சம்பவம். 2. The present moment.

நிகழ்த்து, கிறேன், நிகழ்த்தினேன், வேன், நிகழ்த்த, v. a. To effect, to perform, to transact, to set on foot, to bring to pass, நடப்பிக்க. 2. To speak, to say, mention; to narrate, to declare, சொல்ல. (p.)

நிகளம், s. [vul. for நீளம்.] Length.

•நிகளம், s. (St. நிகடம்.) A chain, சங்கிலி. 2. Chain for the legs, fetters, கால்விலங்கு. 3. An elephant's chain, யானைச்சங்கிலி. (சூ.)

•நிகற்பம், s. A long period of time, a hundred Kalpas, நூறுகற்பம்; [ex நி, full.]

நிகா, s. (Hind.) Mark, aim, idea, notion, குறிப்பு.

•நிகாசம், s. Likeness, similitude, resemblance, உவமை. W. p. 465. NIKASA.

•நிகாதம், s. Deception, guile, வஞ்சனை; [ex Sa. Gadha, bottom.] See அகாதம்.

நிகாதன், s. A deceiver, a malevolent man, வஞ்சகமுள்ளவன்.

•நிகாயம், s. Assembly, multitude, company, கூட்டம். 2. An agricultural village, மருதநிலத்தூர். 3. House, dwelling, abode, வீடு. W. p. 465. NIKAYA.

•நிகாரணம், s. Killing, slaughter, கொலை. W. p. 465. NIKARAN'A.

நிகாரணன், s. A killer, murderer, executioner, life-taker, கொலைபாதகன்.

•நிகாரம், s. Dew, more properly, hoarfrost, பனி. W. p. 483. NIHARA.

•நிகிதம், s. Army, troops, படை. (பிங்.)

•நிகிலம், s. Entireness, the whole, universality, universe, as அகிலம், எல்லாம். W. p. 465. NIKHILA.

நிகியெனல் - நிகியென்றுகனைத்தல், v. noun. Neighing, as of a horse.

•நிகுஞ்சம், s. Bower, arbor, a place over-grown with creepers, புதர்வீடு. W. p. 465. NIKUNJA. 2. A cavern, mountain, cave, மலைக்குகை. (சூ.)

நிகுதி—நிகதி, s. [vul. for நியதி.] Definiteness; a standard.

•நிகும்பம், s. A small tree, Croton tiglium. See நேர்வாளம். W. p. 465. NIKUMBHA.

•நிகும்பன், s. A name of a Rakshasa, son of கும்பகர்ணன். W. p. 465. NIKUMBHA.

•நிகும்பலை, s. (St. நிகும்பிலை.) [in mythol.] A desert in Lunka, where Indrajit, son of Ravana, performed sacrifice, இந்திரசித்துயாகஞ்செய்தவிடம்.

•நிகேதனம், s. House, dwelling, habitation, வீடு. W. p. 465. NIKETANA. 2. A temple, a place of worship, தேவாலயம். 3. An agricultural town or district, மருதநிலத்தூர். (சூ.)

•நிக்கிரகம், s. Destruction, killing, நாசம். 2. Confinement, arrest, restraint, கட்டுப்பாடு. 3. Punishment, or discipline, as inflicted by kingly or divine power, தண்டனை. 4. Confutation in argument, தோல்வி; [ex நி, before, et கிரகி, to grasp.] W. p. 466. NIGRAHA.

பஞ்சேந்திரியநிக்கிரகம்பண்ணினவன். He that has mortified his senses; i. e. restrained himself.

நிக்கிரகன்தன், s. The deity, as destroyer, அழிப்பவன்.

நிக்கிரகஸ்தானம், s. (St.) Defeat, discomfiture in argument, தர்க்கத்திற்றோற்றல்.

நிக்கிரகானுக்கிரகம், s. Justice and mercy, as attributes of a good king, தண்டனையுமிரக்கமும். 2. [in Theol.] Distribution of rewards and punishments, as by the deity, in reference to former actions, இன்பதுன்பங்கூட்டல்.

நிக்கிரகிக்க, inf. To kill, destroy, கொல்ல. 2. To bind, restrain, confine, பந்திக்க.

நிக்குரோதம், s. As காட்டாமணக்கு.

•நிசம், s. Certainty, assurance, ascertainment, நிச்சயம். 2. Truth, veracity, sincerity, உண்மை. 3. Fidelity, faithfulness, rectitude, honesty, யதார்த்தம்; [ex Sa. Nija, own or contraction of Nichaya.]

நிசஞ்சொல்ல, inf. To assure.

நிசஸ்தன்—நிசவான், s. A true man, the sincere, upright, honest.

நிசத்துக்குநிசம், s. Most true. (Colloq.)

நிசப்பட, inf. To become certain.

நிசமாய், adv. Truly, certainly, truly, verily.

•நிசா, s. Night, இரவு. W. p. 479. NISA.—Note. This retains its Sans. pronunciation in the compounds.

நிசாகரன்—நிசாபதி, s. The moon, சந்திரன்; [ex கரன், maker, பதி, lord.]

நிசாசரர், s. [sing. நிசாசரன். fem. நிசாசரி.] Asuras, அசுரர். 2. Rakshasas, இராக்கதர்; [ex சர், who go.]

நிசாசரி, s. An owl, as the night-bird, கூகை. (சூ.) 2. See நிசாசரர்.

நிசாந்தம், s. Break of day, விடியற்காலம்; [ex அந்தம்.] 2. House, abode, வீடு.

நிசாபுஷ்பம், s. As வெள்ளாம்பல்.

நிசாமணி, s. The moon as the gem of night, சந்திரன். See நிசாமணி. 2. A fire-fly, or glow-worm, மின்மினி.

நிசாமானம், *s.* Night-time, period of night, இராத்திரிகாலவளவு.

நிசார்த்தம், *s.* [*also* நிறார்த்தம்.] Half the night, பாதிராத்திரி; [*ex* அர்த்தம், half.]

•நிசாகசம், *s.* (*St.*) The white water lily, as opening its petals at night, as வெள்ளாம்பல்; [*ex* ஹஸ, smiling.]

•நிசாகம், *s.* Turmeric or Indian saffron, மஞ்சள். W. p. 480. NISAKA.

•நிசாதனம், *s.* Truth, certainty, மெய். 2. House, abode, வீடு; [*ex* நி.] See சாதனம்.

•நிசாரணம், *s.* Killing, slaying, murdering, கொலை. W. p. 480. NISARAN'A.

நிசாரணன், *s.* A killer, executioner, murderer, கொலைசெய்வோன்.

•நிசாரம், *s.* That which is sapless, insipid, dry, or uninteresting, சாரமில்லாதது; [*ex* நி, *neg.*] 2. Trouble, vexation, வருத்தம்.

நிசார்—நிசாறு, *s.* (*Hind.*) Long drawers or pantaloons, நீண்டகாற்சட்டை. (*c*)

•நிசார்த்தம், *s.* [*com.* நிதார்த்தம், *which see.*] Certainty, rectitude, &c.

நிசானம், *s.* A one-headed drum, ஓர் கட்பறை. (சது.)

நிசான், *s.* (*Pers.*) A flag, கொடி.

•நிசி, *s.* Darkness, இருள். 2. Night, இரா; (*a contraction of Nisiya.*) 3. Turmeric or Indian saffron, மஞ்சள். 4. Gold, பொன். See நிசி. (சது.)

நிசிசரர்—நிசிதர், *s.* [*pl.*] Asuras, as நிசாசரர். (சது)

•நிசிதம், *s.* Sharpness, keenness, கூர்மை. W. p. 480. NISITA. 2. [*for* நிஷித்தம்.] Meanness, vileness, ignominy, இகழ்ச்சி. (*c.*)

•நிசுவாசம், *s.* Air exhaled from the lungs; [*ex* நி, *neg.*] See சுவாசம். 2. One of the twenty-eight Saiva Agamas, இருபத்தெட்டாகமத்தொன்று.

•நிசுளம், *s.* As நீர்க்கடம்பு.

•நிச்சம், *s.* Perpetuity, நித்தம்.

•நிச்சயம், *s.* Certainty, assurance, ascertainment, உறுதி. 2. Truth, veracity, மெய். 3. Decision, positiveness, தீர்ப்பு. 4. Resolution, determination, நியமம். W p. 480. NISCHAYA. (*c.*)

நிச்சயதாம்பூலம், *s.* Betel, plantains, turmeric, new cloth, &c., given by the father of the bridegroom to the father of the bride, in confirmation of a marriage contract.

நிச்சயப்பட, *inf.* To be made certain, to be ascertained.

நிச்சயப்படுத்த—நிச்சயம்பண்ண, *inf.* To determine, resolve. 2. To render certain.

நிச்சயார்த்தம், *s.* Certainty, truth, மெய்ப்பொருள்; [*ex* அர்த்தம்.]

நிச்சயி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To ascertain, to arrive at certainty, உறுதிப்படுத்த. 2. To resolve, to determine, to decide, தீர்மானிக்க. (*c.*)

நிச்சயித்துக்கொள்ள, *inf.* To acquire certainty, to ascertain, to appoint, to determine.

நிச்சயிப்பு, *v. noun.* Ascertainment, certainty, assurance, உறுதிப்பாடு. 2. Decision, determination, தீர்ப்பு.

•நிச்சலம், *s.* Immoveableness, fixedness, அசைவின்மை. 2. Fasting. [*ex* நி, *neg.*] நான்இன்றைக்குநிச்சலம். I have had no food to-day.

நிச்சலத்தியானம், *s.* Fixed meditation, அசைவற்றதியானம்.

நிச்சலபுத்தி, *s.* Fixedness of mind.

நிச்சலன், *s.* The deity, as unmoved by passion, &c., கடவுள்.

•நிச்சலும், *adj.* Always, perpetually, constantly, எப்பொழுதும். (*p.*)

•நிச்சித்தம், *s.* Extinction of the will, cessation of volition as in the ascetic, மனோலயம்; [*ex* நி.]

நிச்சித்தல், *v. noun.* [*vul. for* நிச்சயித்தல்.] Ascertaining, being certain.

•நிச்சிந்தன், *s.* The deity, as free from passion, கடவுள். 2. Argha of the Jainas, அருகன்; [*ex* நி, *neg.*]

•நிச்சிந்தை, *s.* Freedom from care, entire repose, கவலையற்றிருக்கை. See சிந்தை.

நிச்சியம், *s.* Garlic, வெள்ளுள்ளி.

•நிச்சுவசனம், *s.* (*St.*) A long and deep breath, a sigh, பெருமூச்சுவிடுதல். 2. Anger, indignation, மூச்சுக்கொள்ளல்.

•நிச்சுவாசம், *s.* [*also* நிசுவாசம்.] Respiration, breathing out, சுவாசம்விடுதல். See under சுவாசம்.

•நிஸ்காரம், *s.* Slander, நிந்தை. (*c.*)

•நிஸ்ஸாரம், *s.* Insipidity, as நிசாரம்.

•நிஸ்தாரம், *s.* (*St.*) Salvation, இரட்சிப்பு.

நிஸ்தாரரத்நாகரம், *s.* The name of a Christian composition in Tamil.

•நிஷதம்—நிடதம், *s.* A mountain, forming one of the eight principal ranges said to be south of Ilarvarta and north of the Himalaya, ஓர்மலை. 2. A country in the south east division of India, ஓர்தேயம். W. p. 480. NISHADHA.

நிடதநாடு, *s.* The Nishata country, the theatre of the events contained in the நைடதம்.

நிடதன்—நிடதர்கோன், *s.* An epithet of Nala Raja, நளன்.

•நிஷாதம், *s.* The last or highest note of the musical scale. The other notes are: 1. சட்ஜமம். 2. ரிஷபம். 3. காந்தாரம். 4. மத்திமம். 5. பஞ்சமம். 6. தைவதம். The initials of these are taken to denote the gamet, as ச, ரி, க, ம, ப, த, நி. The octave is sometimes called சப்தசட்ஜமம்.

நிஷானி, *s.* (*Pers.*) Signature, கையொப்பம்.

•நிஷித்தம், *s.* [*improp.* நிஷிதம்.] Vileness, a vile thing, a disgrace, contumely, இகழ்ச்சி. 2. Deviation from rule, தவறு.

நிஷித்தவார்த்தை, *s.* Contumelious language, இகழ்ச்சிச்சொல்.

•நிஷேகம்—நிடேகம், *s.* The sexual union of a new married couple; in Sanscrit it is used for the ceremony at the first impregnation.

•நிஷேதம்—நிடேதம், *s.* Prohibition, negation, விலக்கு. 2. Discontinuance, ஒழிவு. W. p. 481. NISHED'HA.

நிஷேதிக்க—நிடேதிக்க, *inf.* To prohibit or discontinue, விலக்க.

•நிஷ்கபடம்—நிட்கபடம், *s.* Guilelessness, sincerity, simplicity, கவடின்மை.—This and other similar compounds are of *Sa. Nish*, change of நிர், neg. particle.

நிஷ்கபடபத்தி—நிட்கபடபத்தி, *s.* Sincere devotion or attachment, மெய்யன்பு.

•நிஷ்கம்—நிட்கம், *s.* A certain weight of gold, பொன்னிறை. 2. Gold, பொன்.

•நிஷ்கருஷம்—நிட்கருடம்—நிஷ்கருஷை—நிட்கருடை, *s.* Certainty, assurance, நிச்சயம். W. p. 481. NISHKARSHA. (*c.*)

நிஷ்கருஷபத்திரிகை — நிட்கருடபத்திரிகை, *s.* A certificate or warrant, உறுதிப்பத்திரம். 2. A deed of renunciation, உறுதி.

•நிஷ்களங்கம்—நிட்களங்கம், *s.* Immaculateness, purity, சுத்தம். See களங்கம்.

•நிஷ்களம்—நிட்களம், *s.* Incorporiety, as the superior form of deity, உருவின்மை. (See சகளம்.) 2. Without parts, entire, துண்டின்மை.

நிஷ்களர் — நிட்களர், *s.* [*pl.*] Deities without bodies; the four superior, as distinguished from the four inferior forms of deity, also from சதாசிவம், in which both are combined.

•நிஷ்காபட்டியம்-நிட்காபட்டியம், *s.* Guilelessness, sincerity, as நிஷ்கபடம்.

•நிஷ்காமியம்-நிட்காமியம், *s.* Freedom from selfish desire, as in the proper performance of duties, விருப்பின்மை.

நிஷ்காமியதவம், *s.* Penance or other deeds of merit, performed without regard to self.

•நிஷ்காரணம் — நிட்காரணம், *s.* Without cause, காரணமின்மை. W. p. 481. NISHKARANA.

•நிக்ஷேபம் — நிட்சேபம், *s.* Hoard, treasure hidden in the ground, புதைபொருள். (வை. 6. *p.*)

•நிஷ்டாபரன் — நிட்டாபரன்—நிஷ்டாபரன்—நிட்டாபரன், *s.* An eminent person, strict in the performance of religious duties, நிஷ்டைதவறாதவன்; [*ex* நிஷ்டை.]

•நிஷ்டூரம்—நிட்டூரம், *s.* Harshness, cruelty, inhumanity, கொடுமை. 2. Calumny, aspersion, இடையூறு. (*c.*)

நிஷ்டூரக்காரன், *s.* A cruel man.

நிஷ்டூரம்பண்ண, *inf.* To act with severity.

நிஷ்டூரம்பேச, *inf.* To calumniate.

நிஷ்டூரன்—நிட்டூரன், *s.* [*fem.* நிஷ்டூரி, நிட்டூரி.] A cruel man, கொடியவன்.

•நிஷ்டை—நிட்டை, *s.* Religious practice, attention to personal religious rites or austerities, &c, நியமம். 2. Fixedness of mind as in ascetic worship, அசைவாமை. W. p. 481. NISHT'A.

நிஷ்டைக்காரன், *s.* A person strict in religious duties.

நிஷ்டைபண்ண, *inf.* To perform religious duties, &c.

•நிஷ்பலம் — நிட்பலம், s. Fruitlessness, barrenness, impotence, அவம். 2. Unprofitableness, பயனின்மை. W. p. 482. NISHP'HALA.

•நிஷ்பிரயோசனம்—நிட்பிரயோசனம், s. Unprofitableness. See நிஷ்பலம்.

•நிஷூதனம், s. Killing, slaughter, கொலை. W. p. 480. NISHUDANA.

நிஷூதனன், s. A murderer. (சது.)

நிணு, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To grow fat, கொழுக்க; [ex நிணம்.] 2. v. a. To braid, முடைய. (சது.)

நிணப்பு, v. noun. Fatness, கொழுப்பு.

நிணம், s. Fat, கொழுப்பு. 2. Serum, நிணநீர். (c.)

நிணச்செருக்கு, s. Wantonness, voluptuousness, கொழுப்பாலாகியகர்வம்.

அவன்நிணச்செருக்குஅவனைபாட்டுகிறது. He is given up to voluptuousness.

நிணறு, s. (Tel. నెనరు.) Affection, kindness, உருக்கம். (R.)

அவன்நெஞ்சம்நிணறுங்கொண்டுபேசினன். He spake with kindness.

நிண்டு, கிறேன், நிண்டினேன், வேன், நிண்ட, v. a. [vul.] To nibble as worms, to work one's way in a crowd, to dig in the ground, as a hog, கிண்ட.

என்மாநிண்டிக்கொண்டேயிருக்கிறன். He nibbles at (teazes) me.

•நிண்ணயம், s. Certainty, as in means, medicine, &c., நிச்சயம். See நிருணயம்.

நிண்ணயி, v. a. To determine, &c. See நிருணயி.

•நிதம் — நிதமும், adv. Daily, constantly, perpetually, as நித்தம், எப்பொழுதும். (c.)

•நிதம்பம், s. A woman's buttocks, the buttocks in general, as it is sometimes applied to the circumference of the hip, and loins, பிருஷ்டம். 2. Side of a mountain, மலைப்பக்கம். W. p. 466. NITAMBA. 3. Pubic region, mons veneris, அல்குல். (p.)

நிதம்பசூலை, s. An arthritic disease. See சூலை.

•நிதரிசனம், s. Example, illustration, authority, precept, திருஷ்டாந்தம்; [ex நி, fulness.] W. p. 467. NIDARSANA. 2. [in rhet.] A species of personification, feigning a thing in nature, as doing good or evil for a mode of moral instruction. See அலங்காரம்.

•நிதலம், s. The fourth of the inferior worlds, கீழேழுலகத்தொன்று. W. p. 467. NITALA.

•நிதனம், s. Death, dying, சாவு. 2. Loss, disappearance, annihilation, அழிவு. W. p. 467. NIDHANA.

•நிதார்த்தம், s. [improp. for எதார்த்தம்.] Certainty, assurance, நிச்சயம். 2. Rectitude, uprightness, exactness, punctuality, faithfulness to one's word, நீதி. 3. Truth, the true state of a thing, உண்மை. 4. Adjustment of affairs, சமஞ்செய்கை; sometimes நிசார்த்தம். (c.)

நிதார்த்தமாய்த்தெரியாது. I do not know certainly.

நிதார்த்தமானவன், appel. n. A moral, upright person.

நிதார்த்தம்பண்ண, inf. To make right, or certain, to adjust.

•நிதானம், s. Correctness, exactness, justness, நிச்சயம். 2. Uprightness, rectitude, செம்மை. 3. Ascertainment, certainty, assurance, resolution, decision, determination, தீர்மானம். 4. A parallel, an equipoise, சமம். 5. Standard, criterion, rule, பிரமாணம். 6. Guess, estimate, conjecture, உத்தேசம். 7. Judgment of a disease from the symptoms, according to the prescribed rules; hence applied to a class of medical works, மதிப்பு. 8. Aim, object, point, கோக்கம். (c.) 9. First cause, primary or remote cause, principal, ஆதிகாரணம். W. p. 467. NIDANA. 10. A gem in common, either celestial or terrestrial, கடவுண்மணிக்குஞ்சவமணிக்கும்பொது. 11. Gold, பொன். 12. Army, படை. (Sa. Nidhana.)

உன்னிதானமென்ன. What do you think?

நாடிநிதானத்தில்வந்துவிட்டது. The pulse has taken a favorable turn.

நிதானமாய்ச்சொல்லு. Tell exactly.

நிதானப்பட்டவன், appel. n. As நிதானமுள்ளவன்.

நிதானமுள்ளவன், appel. n. An upright, honest, moral man, யோக்கியன்.

நிதானந்தப்பிப்போக, inf. To be unlawful; to take a wrong course.

நிதானன், s. Deity, the Supreme Being, கடவுள்.

நிதானி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To ascertain, to determine, to resolve, நிச்சயிக்க. 2. To estimate, to judge, உத்தேசிக்க. 3. To fix a measure or standard, பிரமாணிக்க. 4. To infer, deduce, அநுமானிக்க. (c.)

நிதானிப்பு, v. noun. Ascertainment, judgment, &c., as the verb.

•நிதி, s. Treasure, பொக்கசம். 2. Fulness, நிறைவு. 3. Gem, any of the nine terrestrial or of the feigned nine celestial gems of Kuvera. See மணி. 4. Pendent part of an ornament, ஆபரணத்திற்தொங்கணி. 5. Gold, பொன். 6. (fig.) One abounding in, as குணநிதி, one endowed with all good qualities. W. p. 468. NIDHI.—Note. The two species of gold of Swerga, regarded as possessing life, and yielding whatever is desired, are சங்கநிதி, gold in the form of a chank; பதுமநிதி, gold resembling a lotus. The nine gems of Swerga are: 1. பதுமம், lotus-like; 2. மகாபதுமம், major lotus-like; 3. சங்கம், chank-like; 4. மகரம், sword-fish-like; 5. கச்சபம், tortoise-like; 6. முகுந்தம், a gem resembling quicksilver; 7. நந்தம், the gem of felicity; 8. நீலம், blue lotus-like gem.

நிதிக்கிழவன் — நிதிக்கோன் — நிதிபதி— நிதியோன், s. Kuvera, as lord of riches.

நிதிசாஸ்திரம், s. A system of metallurgy, embracing rules for discovering what has been buried, தூசாஸ்திரம்.

நிதிப்பொதி, s. Gold coins tied up, முடிக்கட்டு.

•நிதியம், s. Treasure, திரவியம். 2. (சது.) Any of the gems of Swerga, கடவுண்மணி. 3. Any of the nine gems, or of the five metals, நவநிதிபஞ்சலோகப்பொது.

•நித்தம், adv. [contraction of நித்தியம்.] Daily, constantly, perpetually, eternally, அனவரதம். 2. s. A sacrificial fire place, நித்தியாக்கினி. (திவா.)

நித்தகருமம், s. Daily rites, daily practice of religious duties, சதாசெய்யுங்கருமம். 2. Daily occupations, நாள்வேலை.

நித்தக்கட்டளை, s. Daily allowance.

நித்தக்காய்ச்சல், s. Quotidian fever, as தினக்காய்ச்சல்.

நித்தமும். Daily as நித்தம்.

•நித்தரங்கம்—நிஸ்தரங்கம், s. That which is unruffled or waveless, அலையில்லாமை; [ex நி, neg, et தரங்கம், wave.]

நித்தரங்கசமுத்திரம் — நிஸ்தரங்கசமுத்திரம், s. The unruffled ocean, applied to the mind of the Deity, or the state of the advanced Gnani.

•நித்தலும், adv. Daily, continually, perpetually, as நிச்சலும்.

•நித்தன், s. The Supreme Being, the eternal, கடவுள். 2. Siva, சிவன். 3. Argha, அருகன்; [ex நித்தம்.]

•நித்திகம், s. A plant, Solanum Jacquini. (R.)

•நித்தியம், s. Eternity, சதாகாலம். 2. Final bliss, மோட்சம். 3. Permanence, invariableness, நிலையானது. 4. adv. Constantly, perpetually, daily, சதாகாலம். W. p. 467. NITYA.

நித்தியஅரிகண்டம். Constant vexation.

நித்தியஅவியலும்புழுக்கலும். Constant feasting. (Jaffna.)

நித்தியக்கட்டளை, s. Daily allotted work; daily expenses, daily allowance.

நித்தியகம்புலு, s. [prov.] Constant quarrelling, ஓயாச்சண்டை.

நித்தியகருமம், s. Daily rites, prescribed by the Shastras, as 1. tending the sacrificial fire, by the brahman, நித்தியவிதி; 2. the daily religious duties of the respective castes, நித்தியபூசை.

நித்தியகருமாநுஷ்டானம், s. Performance of daily rites.

நித்தியகலியாணம், s. Everlasting joy, perpetual enjoyment.

நித்தியகலியாணன், s. An exalted ascetic in the enjoyment of divine delight, யோகி. 2. See கலியாணம்.

நித்தியகலியாணி, s. Parvati as கலியாணி.

நித்தியகாலம், s. Eternal ages.

நித்தியக்கொட்டுமுழக்கு, v. noun. Perpetual music.

நித்தியசீவன், s. [in Christ. usage.] Eternal life, மோட்சம்.

நித்தியசேவகம், s. Constant service, permanent employment.

நித்தியதானம், s. Daily alms, gifts, presents—as made by kings or great men.

நித்தியத்துவம், s. Eternal existence.

நித்தியநைமித்திகம், s. Ceremonies of regular though occasional recurrence, as the Sraddhas, at fixed lunar periods, பூசனையும்விழாவும்.

நித்தியநைமித்தியகாமியகன்மங்கள், s. The three classes of rites, stated, occasional and voluntary.

நித்தியபூசை, s. Daily puja at the temple.

நித்தியப்படி, adv. Daily, always, perpetually, சதாகாலம். 2. s. As நித்தியக்கட்டளை.

நித்தியப்படிவந்தென்னைஅலட்டுகிறான். He is constantly troubling me.

நித்தியப்பிரளயம், s. Constant destruction; i.e. by death.

நித்தியப்பிழைப்பு, *v. noun.* Permanent support.

நித்தியமழை, *s.* Daily rain, என்றும் பெய்மழை.

நித்தியமுத்தன் — நித்தியன்முக்தன், *s.* The deity as ever blessed, கடவுள். 2. The exalted devotee as happy in his god, ஞானி.

நித்தியமுத்தி — நித்தியமோட்சம், *s.* Eternal bliss.

நித்தியமும் — நித்தமும், *adv.* Daily, always.

நித்தியயோகம், *s.* Perpetual fortune, குறையாச்சம்பத்து.

நித்தியயவ்வனம்—நித்தியயௌவனம், *s.* Eternal youth, மாறாஇளமை.

நித்தியவிக்கேபம்—நித்தியவிட்சேபம், *s.* Parallax of the zenith distance of the equator at the place of observation. See விக்கேபம்.

நித்தியவிதி, *s.* A sacrificial fire-place, ஓமகுண்டம். (சது.) See நித்தம்.

நித்தியவிநோதம், *s.* One of the umbrellas of Argha.

நித்தியன், *s.* The deity, the eternal, கடவுள்.

நித்தியன்முக்தன், *s.* See நித்தியமுத்தன்.

நித்தியாநித்தியம், *s.* That which is eternal and temporal, அழியாமையுமழிவும்.

நித்தியாநித்தியவஸ்துவிவேகம், *s.* The knowledge of eternal and temporal things. See சாதனசதுட்டயம்.

நித்தியானந்தம், *s.* Eternal joy.

நித்தியானந்தன், *s.* The Supreme Being, கடவுள்.

நித்தியானுஷ்டானம், *s.* Personal religious duties.

•நித்திரை, *s.* Sleep, drowsiness, repose. See தூக்கம். W. p. 467. NIDRA. அயர்ந்தநித்திரை, deep sleep; கள்ளநித்திரை, feigned sleep; சோற்றுநித்திரை, sleep from eating. (*c.*)

நித்திரைதூக்கித்தூக்கியடிக்கிறது. Sleep causes him to nod.

அவன்நித்திரைபோகிறான். He is sleeping.

ஒத்தவிடத்தில்நித்திரைகொள். Sleep in a level place. (*Avv.*)

நித்திராதேவி, *s.* The goddess of sleep, நித்திரைக்கதிதேவதை.

நித்திராலு, *s.* (*St.*) A sleeper, தூங்குவோன்.

நித்திரைகொள்ள—நித்திரைசெய்ய, *inf.* To sleep.

நித்திரைசோதிக்க, *inf.* To examine if one is asleep.

நித்திரைச்சுகம், *s.* Enjoyment of sleep.

நித்திரைசோகம், *s.* Drowsiness, tendency to sleep.

நித்திரைதெளிய, *inf.* To recover from drowsiness.

நித்திரைவிழிக்க, *inf.* To be wakeful, to watch; to keep a watch-night, &c., as கண்விழிக்க.

நித்திலம், *s.* A pearl, முத்து. (சது.)

•நிநதம்—நிநாதம், *s.* Sound, ஒலி. W. p. 468. NINADA.

நிந்தம், *s.* [*prov.*] One's own peculiar right, exemption from claim by others, immunity, உரிமை. (*Beschi.*)

நிந்தக்காணி, *s.* Land of which one is the sole proprietor.

நிந்தப்பங்கு, *s.* One's share, on which others have no claim.

நிந்தம்பகிர, *inf.* To divide property among heirs.

•நிந்தனை, *s.* (*St.* நிந்தனம்.) Censure, blame, abuse, scorn, நிந்தை. (*c.*)

நிந்தனைசெய்ய—நிந்தனைபண்ண, *inf.* To insult, revile, abuse.

நிந்தனைப்பட, *inf.* To be insulted, reviled, &c.

•நிந்தாஸ்துதி, *s.* Ironical praise or flattery, irony, இகழ்தல்போற்புகழ்தல்.

•நிந்தாட்சணை, *s.* Contumely, slander, calumny, நிந்தனை; [*ex Sa. Kshan'a*, to injure.] (*c.*)

நிந்தி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To vilify, abuse, blaspheme, slander, இகழ. (*c.*)

நிந்திப்பு, *v. noun.* Abuse, reproach, blasphemy.

•நிந்திதம், *s.* Abuse, as நிந்தனை.

•நிந்தை, *s.* Reproach, blasphemy, abuse, தூஷணை. W. p. 468. NINDA. (*c.*)

நிந்தைசெய்ய — நிந்தைபண்ண, *s.* To treat with scorn, &c. 2. As நிந்தனைசெய்ய.

நிபத்தி, *s.* (*Tel.* నిబద్ధి.) Certainty, truth, உண்மை.

நிபத்திபண்ண—நிபத்தியாக்க, *inf.* To prove, to verify.

நிபத்தியாய்ச்சொல்ல, *inf.* To speak the truth.

•நிபந்தம், *s.* Obligation, duty, கடமை.

•நிபந்தனம், *s.* A collection of many things, a book, கட்டு; [*ex* நி, fulness.]

நிபந்தனகிரந்தம், *s.* A compendium of different sciences, பலகலைத்திரட்டு.

•நிபந்தனை, *s.* A compact, a bond, ஏற்பாடு. 2. A canon, or general rule, கட்டுப்பாடு. 3. Punishment, penalty, தண்டனை. (*c.*)

நிபந்தனைக்குட்பட்டிருத்தல், *v. noun.* Entering into covenant. 2. Being under a penalty.

•நிபம், *s.* Comparison, likeness, resemblance, உவமை. 2. Cause, antecedent, காரணம். 3. Accusation, slander, calumny, கோள். 4. Fraud, வஞ்சனை. W. p. 469. NIBHA.

நிபச்சொல், *s.* Slander, backbiting, calumny, பழிச்சொல். (*c.*)

•நிபாதம், *s.* Falling, descending, இறங்குகை; [*ex* நி, *neg.*] W. p. 468. NIPATA. 2. Subjection, subordination, cessation of active energy. See சத்திநிபாதம்.

•நிபிடம்-நிபிடாயம், *s.* (*Tel.* నిబిడము.) Closeness, thickness, as of men in a crowd, or leaves on a tree, நெருக்கம்; also நிபிடிகரம்.

நிபிடாயமாய்வந்துநெருங்கினார்கள். They came and crowded closely together.

•நிபுணன், *s.* [*plu.* நிபுணர்.] A learned man, அறிஞன். 2. A skilful or clever man, மிகவல்லோன். (*c.*) W. p. 469. NIPUN'A. 3. Mercury the planet, புதன். See கிரகநிலையன்.

நிபுணத்துவம், *s.* Skill, ability, cleverness, சாமர்த்தியம்.

•நிப்பரம், *s.* Lightness, swiftness, பாரமின்மை. (*Beschi.*) 2. (*Tel.*) Firmness, அசைவின்மை; [*ex* நி, *neg.*]

•நிமந்தம், *s.* Servile labor in a temple, கோயிற்சிறுதொழும்பு.

நிமந்தக்காரன், *s.* A servile servant in a temple.

நிமம், *s.* Nape of the neck, பிடர். (சது.)

•நிமலம், *s.* Pureness, immaculateness, spotlessness, அழுக்கின்மை; [*ex* நி, *neg.*]

நிமலன், *s.* The Supreme Being, as pure, கடவுள். (சது.) 2. A holy person, சுத்தன்.

நிமாசு, *s.* (*Hind.*) A Mohammedan prayer, repeated five times a day, துருக்கர்தொழுகை.

•நிமி — நிமிச்சக்கிரவர்த்தி, *s.* The son of I'kshvaku, a king of the solar race, சூரியகுலத்தரசரிலொருவன். W. p. 469. NIMI.

•நிமிடம் — நிமிஷம், *s.* Twinkling of the eye, a moment, a second of time, கணநுட்பம். W. p. 469. NIMISHA. (*c.*)

ஒருநிமிஷத்திலே. In a moment.

•நிமிடிகரம், *s.* Severe prevalence, as of disease; urgency or pressure, குரூரம். (*c.*)

நிமிட்டு, *v.* As நிமிண்டு, 1.

நிமிண்டு, கிறேன், நிமிண்டினேன், வேன், நிமிண்ட, *v. a.* To rub between the hands, as ears of corn, நிமிட்ட. 2. To pick with the fingers as a boil, a scab, &c., கிள்ள. (*c.*) 3. [*prov.*] To carry away privately, to be light-fingered, சிறிதுசிறிதாகக்கவர.

அவன்தொடையைப்பிடித்து நிமிண்டினான். He pinched the thigh.

நிமிண்டி, *appel. n.* A sly thief, a pilferer.

•நிமித்தம், *s.* Cause, inducement, instrumental cause, காரணம். 2. For the sake of, on account of, பொருட்டு. 3. Motive, reason, occasion, முகாந்தரம். 4. Omen, presage, prognostic, சகுனம். 5. Mark, sign, spot, token, அடையாளம். W. p. 469. NIMITTA.

இதனிமித்தமாக. On account of this.

நிமித்தகாரணம், *s.* The first or moving cause. See காரணம்.

நிமித்தக்காரர், *s.* [*also* நிமித்தம்பார்ப்போர்.] Diviners, prognosticators, augurers from omens, வருங்காரியஞ்சொல்வோர்.

நிமித்தங்காட்ட, *inf.* To show cause.

நிமித்தசூடாமணி, *s.* A book on divination, ஓர்சகுனநூல்.

நிமித்தஞ்சொல்ல, *inf.* To interpret a sign or omen, as of a lizard chirping, &c. 2. To prognosticate by omens.

# ப

ப். A consonant, the ninth in number and fifth of the hard. It is both initial and medial.

ப. A letter composed of ப் and அ. As an *initial*, except in some Sanscrit words, as பலம், pronounced *balam*, it has the sound of *P*; also as a *medial* when doubled, or following ட or ற, as அப்பொழுது, குடம்பம், சற்பு, &c. After a vowel, or a soft mute, it has more the sound of *B*; as சேபம், கம்பம், &c.

பவ்வூரகரம், s. See under ஊர், v.

ப, s. [*in accounts.*] A fraction as $\frac{1}{20}$, நிமிஷவரிலக்கம். See மா.

பஃறொடைமை, s. [*in combin.*] A metre of verse, as பஃறொடைக்கொச்சகக்கலிப்பா, a species of the கலிப்பா verse; பஃறொடைவெண்பா, a species of வெண்பா; [*ex* பல், *poetic form of* பல, many.]

பஃறி, s. A boat, ஓடம். 2. A navigable vessel of any kind, மரக்கலம். 3. The twenty-seventh lunar asterism, இரேவதி. (*p.*)

பஃறொடை — பஃறொடைவெண்பா, s. A kind of poetry with more than four lines. See வெண்பா.

பகடம், s. [*prov.*] Bluster, hector, vain threat, or menace, அதட்டுகை. 2. Coloring, bragging—as பகடு.

பகடம்பண்ண, *inf.* To make a false show. 2. To hector.

பகடி, s. Mockery, sport, பரிகாசம். 2. Jest, witty repartee, விகடம். 3. A jester, a buffoon, அகடியக்காரன். See பகிடி.

பகடு, s. Greatness, hugeness, largeness, பெருமை. 2. Bull, ox, எருது. 3. Bullock of burden, பொதியெருது. 4. A he-buffalo, எருமைக்கடா. 5. Male elephant, ஆண்யானை. 6. A boat, ஓடம். 7. Raft, தெப்பம். (சது.)

பகடொட்டகடு. The rice trodden by the oxen. (சலவு.)

பகடை, s. An ace upon a die, சூதின்ருபத்திலொன்று. 2. A designation of the shoe-maker-caste, சக்கிலிச்சாதி. (*Tel. usage.*) 3. [*prov. fig.*] Sudden smiles of fortune, அதிர்ஷ்டம்.

பகடைதப்பிற்று. It was a narrow escape.

பகடைபோட—பகடையுருட்ட, *inf.* To cast an ace in dice.

பகடையடிக்க, *inf.* To have lucky falls of dice, or smiles of fortune.

பகட்டு, s. (*Tel.* పకట్టు.) Lustre, brightness, splendor, பிரகாசம். 2. Attraction, fascination, allurement, மயக்கம். 3. False show, pretence, deception, plausibility, வெளிவேஷம். 4. Foppery, finicalness, affectation, சாகசம். 5. Bullying, bluster, ostentation, pomposity, இடம்பம். (*c.*)

பகட்டானவேலை, s. Neat, fine or splendid work. 2. Unsubstantial work—as கொற்பவேலை.

பகட்டு, கிறேன், பகட்டினேன், வேன், பகட்ட, v. n. To make a false show, to be foppish, finical, சாகசங்காட்ட. 2. (*R.*) To loathe, அரோசிக்க. 3. To be drowsy, நித்திரைமயக்க. 4. v. a. To charm, fascinate, allure, attract, மயக்க. 5. To deceive, circumvent, misrepresent—as in selling goods, வஞ்சிக்க. 6. To menace, bully, hector, threaten, in order to effect an object, அதட்ட.

போசனம் பண்ணினபின்பு பகட்டிவாந்தி பண்ணினன். After he had eaten he loathed, and vomited, the food.

தூக்கம்பகட்டுகிறது. I am drowsy.

பகட்டிப்பறிக்க, *inf.* To wheedle away money, as a fraudulent dealer, a juggler, or a dancing woman.

பகண்டை, s. The சிவல் bird, a partridge, கவுதாரி. (சது.)

•பகந்திரம், s. [*com.* பவுத்திரம், பவுந்திரம்.] Fistula in ano. W. p. 610. B'HAGANDARA.

பகபகெனல், v. *noun.* Sounding as the crackling of fire, சப்தக்குறிப்பு. 2. The burning, smarting sensation of hunger; or feeling from mental anguish. வெம்புதல். (*c.*)

கண்பகபகென்றெரிகிறது. My eye smarts.

எனக்குப்பகபகென்றுவயிறெரிகிறது. My stomach burns with heat; i. e. I am very hungry.

மனம்பகபகென்றிருந்தது. My mind was indignant.

•பகம், s. Pudendum muliebre, பெண்குறி. 2. Divine perfection, usually considered as embracing six particulars: 1. அவாவின்மை, absence of desire; 2. சர்வத்தன்மை, omnipotence; 3. கீர்த்தி, fame; 4. செல்வம், felicity; 5. ஞானம், wisdom; 6. வீரியம், power. W. p. 610. B'HAGA. 7. The stork or paddy bird, கொக்கு.

•பகரம், s. Lustre, splendor, brilliance, சிறப்பு. 2. Beauty, comeliness, ornament, அலங்காரம். 3. (*p.*) The letter ப. (சது.)

பகரமாயிருக்கிறது. It is elegant or splendid.

பகரிப்பு, s. Ornament, decoration. (*R.*)

பகர், கிறேன், ந்தேன், வேன், பகர, v. a. To tell, utter, declare, say, சொல்ல. 2. To announce, pronounce, publish; to hawk goods, கூற. 3. To sell, vend, விற்க. (சது.)

பகர்தல்—பகர்வு, v. *noun.* Saying, announcing, &c.

பகர்ச்சி, s. Speech, utterance, word, சொல்; [*ex* பகர், v.] (*p.*)

பகர்ச்சிமடவார். The chitchatting women.

•பகல், s. Day, as distinguished from night, day time, பகற்காலம். 2. Mid-day, noon, மத்தியானம். (*c.*) 3. Light, radiance, splendor, பிரகாசம். 4. The sun, சூரியன். [*from Sa. B'haga.* W. p. 610.] 5. A period of two Indian hours, a *muhurta*, முகூர்த்தம். 6. Day of twenty-four hours, நாள். 7. Middle, நடு. 8. Middle or main peg in a yoke, நுகத்தாணி. 9. [*in combin.*] State, birth as முற்பகல், the former birth.

பகலைக்குமேலே. After mid-day; in the after-noon.

பகலுக்கு—பகலைக்கு. For the day or for noon, as food, &c.

பகலே. [ஏ, *emphatic*] In the day time—as அவன் பகலேபோய்விட்டான்.

பகல்போலேநிலா. Moon-shine as clear as day.

பட்டப்பகலிலே. In broad day-light; at mid-day.

பகல்மாா—பகல்மாறு. In the day-time, daily.

சைனர்கள்பகல்மாறுசாப்பிடுவார்கள், இராமறுசாப்பிடார்கள். The Jainas eat in the day-time, not at night.

பகலசனம்—பகற்சாப்பாடு, s. Dinner.

பகலவன், s. The sun, as author of the day, சூரியன். 2. The second lunar asterism, பரணிநாள்.

பகலோன், s. The sun as பகலவன்.

பகல்மானம்-பகன்மானம், s. [*in astron.*] Length of the day-time.

பகல்முகூர்த்தம், s. An hour deemed auspicious, occurring by day.

பகல்வத்தி-பகல்வர்த்தி, s. [*in pyrotechnics.*] Blue lights, made of saltpetre, brimstone, orpiment, indigo, antimony and camphor, making night appear as day.

பகல்வீடு, s. Day-lodging.

பகல்வெளிச்சம், s. Day-light.

பகல்வெள்ளி, s. Stars seen by day.

பகல்வேஷம், s. Masking, or disguising one's self by day; being more difficult than by night.

பகற்கள்ளன்—பகற்றிருடன், s. A day-light-thief, a high-way-robber. 2. [*in reproach.*] One who takes another's property by force, asserting a false claim.

பகற்காலம், s. The day-time. 2. [*Chris. usage.*] The period of one's life.

பகற்குறி, s. [*in love poetry.*] Place chosen by lovers for meeting in private by day.

பகற்பாடு, s. The day time, பகற்காலம். 2. [*among the poor.*] Burden for the day.

கடும்பகல், s. Broad day. (நீதிநெறி.)

•பகவதி, s. The goddess of virtue, தருமதேவதை. 2. Parvati, பார்வதி. 3. Durga, துர்க்கை. [*from Sa. B'hagavati,* any goddess.]

பகவதிநாள், s. The eleventh lunar asterism, பூரம். (சது.)

•பகவன், s. The Supreme Being, கடவுள். 2. Argha, அருகன். 3. Siva, சிவன். 4. Vishnu, திருமால். 5. Brahma, பிரமன். 6. Buddha, புத்தன். 7. A Guru, குரு; [*ex* பகம்.] —*Note.* It is also applied to the regents of the planets, to the gods of the elements, and sometimes to sages, and *Rishis.*

பகவற்பத்தன், s. One devoted to the deity, being one of the six names given to such as are ripe for emancipation, தேவபத்தன்.

பகவற்கீதை, s. A section of the Mahabarata. See கீதை.

•பகவான், s. The Deity, the Supreme, கடவுள். 2. As an affix to the name of any of the superior deities. (c) 3. One of the twelve supposed suns—as பகன். See துவாதசாதித்தர்; [ex பகம்.]

பகவு, s. Parting, division, separation, cleft, பிளப்பு. 2. A slice, a bit, துண்டு; [ex பகு, v.] (p.)

பகழி, s. An arrow, அம்பு. 2. Foot of an arrow, அம்பின்குதை. (சூ.)

பகழிமாரி. A shower of arrows. (p.)

•பகன், s. One of the twelve suns, so called, or solar deities, as பகவான். W. p. 610. B'HAGA. 2. A giant, பகாசுரன்.

பகன்றை, s. The கிலுகிலுப்பை shrub, Crotalaria verrucosa, L. 2. The சிவேதை plant, Indian jalap. See சிவதை. 3. The சீந்தில் creeper. See சீந்தில்.

குத்துப்பகன்றை, s. A plant. See குத்து.

சிறுபகன்றை, s. Ruellia balsamica. (R.)

•பகாசுரவைரி, s. Bhima, one of the Pandavas, வீமன். (சூ.)

பகாப்பதம்—பகாப்பொருள். See under பகு, v.

•பகாலம், s. The skull, as கபாலம். W. p. 610. B'HAGALA.

•பகிடி, s. [also பகடி.] Jest, joke, wit, pun, repartee, விகடம். 2. Mockery, derision, scoffing, பரிகாசம். 2. A buffoon, a jester, a punster, பகிடிக்காரன். [For the compounds, see கேலி.] See B'had'i. W. p. 611.

பகிடியைப் பாம்புகடித்தாற்போலிருக்கிறது. It is like a jester bitten by a snake.

பகிடிக்கதை, s. A story told to excite laughter.

•பகிஷ்காரம், s. Expulsion, degradation. (R.)

பகிஷ்கரிக்க — பகிஷ்காரம்பண்ண, inf. To expel from a caste or sect, to degrade.

•பகிரங்கம், s. [also பயிரங்கம்.] Publicity, மறைப்பின்மை; [ex Sa. Bâhir, an indeclinable particle meaning, out, on the outside.] See W. p. 745. VAHIRANGA. (c.)

•பகிரண்டம், s. [com. with அண்டம்.] The surrounding universal space, firmament, heaven, அண்டத்தின்வெளி; [ex அண்டம்.]

பகிரு — பகிர், கிறேன், பகிர்ந்தேன், வே ன், பகிர, v. a. To divide in shares, distribute, parcel out, apportion, பங்கிட. (c.) See வகிர.

பகிர்ந்துகொடுக்க, inf. To distribute.

பகிர், v. noun. A piece cut off, a section, பங்கு.

பகிர்ச்சி, v. noun. Separation, division, பிரிவு.

•பகினி, s. A sister, உடன்பிறந்தாள். W. p. 610. B'HAGINI.

•பகினேந்திரம், s. One of the thirteen kinds of apoplexy. See சன்னி.

•பகீரதன், s. A king whose austerities are fabled to have brought the Ganges from heaven, சூரியகுலத்தரசரிலொருவன். W. p. 610. B'HAGIRATHA.

பகீரதி, s. (St.) The river Ganges, கங்கை.

பகீரிடுதல் — பகீரெனல், v. noun. Being greatly terrified, அச்சக்குறிப்பு.

பகீரென்றுபற்றினான். He was suddenly inflamed.

வயிறுபகீரென்ன, inf. To be moved in the entrails through sudden fear.

•பகு, adj. [Tamil வெகு.] Many. W. p. 601. BAHU.

பகுவசனம், s. [in gram.] Plural number.

பகு, கிறது, [p. பக்கது.] ந்தது, ம், பக, v. n. To part, divide, separate into branches, to ramify, as a tree or a family, கிளைக்க. (குறள்.) 2. To be at variance, to be disunited, பிரிய—as இழைபகஅம்பெய்தான், he shot an arrow so as to split a thread. (Beschi.)

பகாப்பதம், s. [neg. பகா.] A primitive, indivisible word, as வில், a bow.

பகாப்பொருள், s. [neg. பகா.] An epithet of God, the indivisible.

பகுபதம், s. A compound word or one which may be divided—oppos. to பகாப் பதம்.—Note. It is of two kinds, பெயர்ப் பகுபதம், a compound noun as பொன்னன், and வினைப்பகுபதம், a compound verb, as நடந்தான்.

பகுபதவுறுப்பு, s. The six constituent parts of a word: பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம், which see.

பகுவாய், s. A large mouth, an open mouth, அங்காந்தவாய். 2. A large mouthed vessel, தாழி. (சூ.)

பகுவாய்க்கொள்கலம். A vessel with a large mouth.

பகுவாய்ப்பறை. A large drum.

பகு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To divide, distribute, apportion, allot, destine, பிரிக்க. 2. To give, ஈய. 3. To cut off, தறிக்க. 4. To cut in two, துண்டிக்க.

இன்னபடியென்றுபகுத்துப்பேசினான். He explained it distinctly.

பகுத்தறிய — பகுத்துணர, inf. To distinguish, discriminate.

பகுத்தறியுமறிவுடையஆத்துமா. The rational soul.

பகுத்தறிவு, v. noun. [substantively.] Reason, rationality, discriminating knowledge as possessed by men.

பகுத்தறிவுள்ளவன், appel. n. [neg. பகுத் தறிவிலான், பகுத்தறிவிலி, masc. and fem.] A judicious person.

பகுத்துப்பார்க்க, inf. To survey every part.

பகுப்பு, v. noun. Division, classification.

பகுதி, s. Portion, part, allotment, division, பங்கு. 2. Tax, tribute, திறை. 3. Division of an army, படை. (சூ.)

பகுதிகட்ட, inf. To pay a tax.

பகுதிக்கால், s. The sign of உ in some characters. See கால்.

•பகுதி, s. Primitive nature, homogeneous matter, being the passive, generating cause, இயல்பு, as ஐம்பகுதி, the five genders. 2. The radical form of a word without the affixes, சொன்முதனிலை; [from Sa. Prakruti. W. p. 557.] (சூ.)

•பகுவபஞ்சம், s. One of the thirty-two Upanishads. See உபநிடதம்.

பகுவாய். See பகு, v. n.

•பகுளம், s. The dark half of a lunar month, கிருஷ்ணபட்சம். W. p. 602. BAHULA.

பகுளசத்தமி, s. The seventh day after the full moon. See திதி.

பகை, s. Hatred, enmity, dislike, repugnance, abhorrence, வெறுப்பு. 2. A foe, an enemy, an opponent, a rival, a competitor, பகைஞன். 3. Disagreement, counteraction, heterogeneousness, contrariety, as of light to darkness, or of medicine to the disease, விரோதம். 5. One of the five situations of a planet. See கிரகநிலை. (c.)

முப்பகை, s. The three enemies are: பேய், the devil; 2. உலகு, the world; 3. உடல், the body or flesh. (சூ.)

உட்பகை, கூ, s. The six internal foes attached to the soul: காமம், lust; 2. குரோதம், anger; 3. உலோபம், avarice; 4. மோகம், sensuality; 5. மதம், pride; 6. மாச்சரியம், envy or malice.

பகைமுன்னெதிரேறல். Facing an enemy.

பகைமேற்செல்லல். Going against an enemy.

முற்பகைசெய்யிற்பிற்பகைவிளையும். He who hates will be hated in return. (Avv.)

இருளுக்குச்சூரியன்பகை. The sun is the foe of darkness.

பகைசாதிக்க, inf. To gratify one's anger. See சாதி, v.

பகைஞர், s. [sing. பகைஞன்.] Enemies, foes. (சூ.)

பகைத்தானம், s. One of the five situations of a planet. See தானம்.

பகைத்திறந்தெரிதல், v. noun. Knowing an enemy's strength. (குற.)

பகைத்தொகை, s. [in gram.] The composition of words of opposite meaning, as முரண்டொடை.

பகைபடல், v. noun. Being displeased with, being at variance.

பகைமன்னர், s. [pl.] Hostile kings.

பகையகம், s. Battle-field, போர்க்களம்; [ex அகம், place.] (சூ.)

பகையாளி, s. A foe, an enemy. (c.)

பகையாளிக்குடியையுறவாடிக்கெடுக்கிறது. Destroying the habitation of an enemy by feigning friendship.

பகைவர், s. [sing. பகைவன்.] Enemies.

பகைவர்அரணவிழ்த்தல். Besieging an enemy's fort.

பகை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To hate, oppose, விரோதிக்க. (c.)

பகைமை, s. Hatred, enmity, variance, விரோதம்.

•பகோளம், s. [also ககோளம்.] The celestial sphere, வானமட்டம்; [ex பம்.] See கோளம்.

•பக்கணம், s. A village or street of hunters, வேடர்சேரி. W. p. 490. PAKKAN'A. 2. Town, village, ஊர். (சூ.)

•பக்கணம் — பக்ஷணம், s. Eating, devouring, consuming. See பட்சணம். W. p. 610. B'HAKSHAN'A.

•பக்கம்—பக்ஷம்—பட்சம், s. Side, புறம். (See அக்கம்.) 2. Contiguity, nearness, அருகு. 3. Place, இடம். 4. Faction, interest, party, பிரிவு. 5. Affection, friendship, kindness, attachment, சார்பு. 6. The half of a lunar month or fortnight. See அபரபக்ஷம், பூர்வபக்ஷம். 7. An argument, thesis, proposition advanced, கோட்பாடு. 8. The wing or feather, புட்சிறகு. W. p. 490. Paksha—Note. பக்கம், [in logic.] A twofold relation:—1. புறப்பக்கம், or புறத்தப்பக்கம், an inference regarding exterior or secular matters; 2. உட்பக்கம், or அகப்பக்கம், connected with mental or religious truths. Each of these is applicable to two species of comparison: 1. கிரமப்பக்கம், தல்லியபக்கம், ஒப்பாம்பக்கம், or சபக்கம், *proper comparison*, or deduction from analogy; thus for புறப்பக்கம், there is smoke, therefore there is fire; and for உட்பக்கம், regarding moral actions, originated in the mind; analogy refers them to maya, மாயை, as their basis. The agreement between this doctrine and the experience of a person, is ground of rational deduction. 2. கிரமப்பக்கம், ஒவ்வாதபக்கம், or விபக்கம், *improper comparison* involving incongruity, absurdity, impossibility; thus for புறப்பக்கம், to say "there is fire in water" is an absurdity in affairs of common life; for உட்பக்கம், to say that the basis of Siva's knowledge is மாயை, is an absurdity. In spiritual things the mental faculties, as well as the senses, are referred to மாயை as their basis, and medium of acquiring knowledge. The சூக்கும body, the immediate source of consciousness, is referred to the same principle; and when the soul is liberated from births these are resolved into their original principles.

பக்கத்திலேவாங்கிக்கொள்ளுதல். Borrowing in the neighborhood, or of others besides the persons in question.

அவன்பக்கத்துக்காரியகாரன். He is his agent.

எனக்குப்பக்கத்திலேஇரு. Sit by me.

பக்கக்கிரகணம், s. Eclipse of the sun and moon, or the contrary, in succeeding changes of the moon.

பக்கக்குடுமி, s. [loc. சிலுப்பா.] Men's hair-locks left growing over the ears, and tied behind.

பக்கசூலை, s. A pain in the side, inflammation of the liver. See சூலை.

பக்கச்செடில், s. A self torture, by running iron sticks, through the sides, See செடில்.

பக்கச்சொல், s. A word in one's favor.

பக்கச்சொல்லாளி, s. A spokesman, a puffer, an advocate.

பக்கத்துக்கிளி, s. [prov.] The one who passes in கிளித்தட்டு play. See கிளி.

பக்கத்துணை, s. An aid, a companion, a supporter.

பக்கத்தெலும்பு, s. A side-bone.

பக்கபாதம், s. Partisanship, &c. See பட்சபாதம்.

பக்கப்பவுத்திரம், s. A fistula on either side of the privities. See பவுத்திரம்.

பக்கப்பிளவை, s. A cancer or carbuncle in the side.

பக்கவளை, s. A beam in the side of a bungalow or house, &c. See வளை.

பக்கவாட்டு, s. That which is aside, or beside, as an irrelevant question, or subject. 2. Sidelong.

பக்கவாதம், s. Partial or lateral palsy. See வாதம். 2. As பக்கபாதம்.

பக்கவாயு, s. Sarcocele, with swelling in the side.

பக்கவெட்டுப்போட, inf. To tickle one in the side.

பக்கவேர், s. Side root of a tree, not shooting downward.

பக்கணை, s. A stirrup, அங்கவடி. (திவா.)

•பக்கர், s. Relations, kindred, இனத்தார்; [ex பக்கம்.] (சது.)

பக்கல், s. [a change of பக்கம்.] Side. 2. One's people, class, tribe, இனம். (c.)

எனதுபக்கலிலேவந்துசேர்ந்தான். He has come to me for support, protection.

பக்கறை, s. [for பற்கறை.] Artificial blackness of the teeth.

பக்கா, s. (Hind.) Largeness, greatness, பெரியது—oppos. to கச்சா. 2. [in combin.] Notoriety—as பக்காத்திருடன், a great thief.

பக்காச்சேர், s. A weight of twenty-four *palams*. See சேர்.

பக்காளி, s. (Hind.) One who carries water in a leather sack on a bullock.

பக்காளிமாடு, s. The bullock of பக்காளி; also in contempt.

•பக்கி—பக்ஷி, s. [com. பட்சி.] A bird, any winged fowl, பறவை; [ex பக்கம், feather.] —பக்கி is used to denote a particular species.

பக்கிராசன்—பக்ஷிராஜன், s. The Brahmany kite, as king of birds, கருடன்.

பக்கி—பக்ஷி, v. To feed, &c. See பட்சி.

பக்கிட, inf. To throb as the heart through fear, &c., திடுக்கிட. 2. To give way, to bilge, as a ship, to part, crack, split, வெடிக்க. 3. [also பக்குக்கட்ட.] To form a scab.

பக்கிரி—பக்கீரி, s. (Pers.) A Fakeer; also in contempt—as பக்கிரிப்பயல்.

பக்கு, s. Outer bark of a tree, மரப்பட்டை. 2. Scab of a sore, புண்ணசறு. 3. Tartar on the teeth, பற்பற்று 4. The dried mucus of the nose, சளிப்பக்கு. 5. Scum formed on a prepared dish, பொருக்கு. 6. Fracture, break, crack, பிளப்பு.

பக்குவிடுதல், v. noun. Gaping, parting, splitting, cracking, as the ground. 2. Breaking as the skin by a blow of a ratan.

பக்குப்பக்கெனல், v. noun. Throbbing rapidly, as the heart through fear, அச்சக்குறிப்பு. 2. Being in excess, abounding, மிகுதிக்குறிப்பு. (c.)

பக்குப்பக்கென்றுசிரித்தான். He laughed excessively.

பக்குப்பக்கென்றுவயிறுபற்றுகிறது. The belly is throbbing greatly as by hunger or sorrow.

பக்குப்பக்கென்றெரிகிறது. It burns with a blaze.

•பக்குவம், s. Suitability, fitness for use, the right age, stage or degree, தகுதி. 2. Maturity that which is matured by nature or art, which is come to perfection, முதிர்ச்சி. 3. Ability, cleverness, competency, திறமை. 4. Maturity of the soul for absorption, ஆத்துமபரிபாகம். 5. Puberty of a girl, தெரட்டி. 6. (Beschi.) An excuse, an apology, போக்கு. W. p. 490. Pakva. (c.)

பக்குவமாய்ப்பார்த்துக்கொள். Take good care.

பக்குவசாலி, s. A competent person. 2. One mature for emancipation, பரிபாகி.

பக்குவஞ்சொல்ல, inf. To make an apology. 2. To give directions concerning any work or business.

பக்குவப்பட, inf. To become mature, as the soul. 2. To arrive at puberty, as a girl.

பக்குவமாக, inf. To become fit, competent or suitable. 2. As பக்குவப்பட.

பக்குவமாய்ச்சமைத்தல், v. noun. Cooking well, cooking to one's taste.

பக்குவம்பார்க்க, inf. To watch a fit time.

பக்குவர், s. [pl.] Persons devoted to sacred things, of whom are three classes: 1. கருமாசண்டிகர், those engaged in ritual observance; 2. ஞானாசண்டிகர், those occupied in meditation; 3. பத்திசண்டிகர், those absorbed in devotion.

பக்குவவாளி — பக்குவன் — பக்குவி, s. A competent person, &c., as பக்குவசாலி.

பக்குவாசயம், s. [in phys.] The stomach, one of the five receptacles of the body as ஆமாசயம்.

பக்குவாத்துமா, s. One fit for heaven as பக்குவசாலி.

பக்கெனல், v. noun. Sounding as sudden laughter bursting out, ஒலிக்குறிப்பு. 2. Throbbing as பக்குப்பக்கெனல். 3. Parting, giving way, bilging, splitting, cracking, வெடித்தல். 4. Being sudden, சீக்கிரக்குறிப்பு.

•பக்தன். See பத்தன்.

•பக்தி, s. Faith, belief. 2. Worship, service. See பத்தி.

•பங்கஜம்—பங்கசம், s. See பங்கயம்.

பங்கம், s. [prov.] Wager, பந்தயம்.

•பங்கம், s. Diversity, division, dislodgement, வேறுபாடு. 2. Defeat, discomfiture, disappointment, தோல்வி. 3. Indecency, shame, disgrace, வெட்கம். 4. Distortion, contortion of the limbs, &c., கெலிப்பு, முடம். 5. Violation, desecration, prostitution, profanation, சுரம். 6. Injury, detriment to one's person, reputation, &c., மானபங்கம். 7. Wave, அலை. 8. A tank, குளம். 9. A piece, துண்டு. W. p. 611. B'hanga. 10. Mire, mud, குழைசேறு. 11. Sin, பாவம். 12. Dust, புழுதி. W. p. 491. Panka.

அவனைப்பங்கப்படுத்துகிறான். He vexes him.

என்னைப்பங்கம்பேசினான். He reproached me.

அவன்பங்கப்பட்டுப்போனான். He was ignominiously treated.

பங்கக்கேடு, s. [vul.] Disgrace, ignominy.

பங்கங்கொள்ள, inf. To deride one. (Beschi.)

பங்கசாதம், s. The lotus, தாமரை as பங்கயம்; [ex சாதம், produced.]

பங்கப்பட, inf. To be treated disgracefully, ignominiously, &c., அவமானப்பட. 2. To fall into disgrace, நிறைகெட. 3. To be violated, desecrated, சுரப்பட.

பங்கப்படுத்த, inf. To treat disgracefully, put one to shame, expose one. 2. To violate, desecrate, profane.

பங்கம்அழிதல், v. noun. Becoming disgraceful; losing one's honor, credit, &c.

பங்கேருகம், s. Lotus, as பங்கசாதம்; [ex உருகம்.]

சமயபங்கம், s. An unseasonable time.

பங்கம்பாலை — பங்கம்பாளை, s. A kind of medicinal creeper. See ஆடுதின்னாப் பாலை, இருமிகரம்.

•பங்கயம், s. (St. பங்கசம்.) The lotus, தாமரை; [ex பங்கம், mud et ஜம்=சம், produced.] பாதபங்கயம். Lotus footed.

பங்கயத்தவன், s. Brahma as possessor of the lotus, பிரமன்.

பங்கயன், s. Brahma, as on the lotus, பிரமன். 2. The sun, which when rising, causes the lotus to bloom, சூரியன். (சது.)

பங்கயாசனன், s. Brahma as the lotus seated, பிரமன்.

பங்களா, s. (Hind.) Bungalow.

பங்கா, s. (Hind.) A punkah or large fan, காற்றுசைக்குமோர்கருவி.

பங்காரு, s. [Tel. బంగారు.] Gold, பொன்.

•பங்காளம், s. Bengal. 2. A tune. See வங்காளம்.

பங்காளி, s. A Bengali. 2. See பங்கு.

பங்கி, s. A man's lock of hair, ஆண்மயிர். 2. Hair, மயிர். (சது.)

பங்கி, s. (for.) The கஞ்சா plant. [Eng. Bang.]

•பங்கி, s. A division, separation, பிரிவு, as திரிபங்கி. W. p. 611. B'HANGI.

பங்கிடு. See பங்கு.

பங்கு, s. Share, portion, part, dividend, parcel, பகுதி. 2. Allotment, assignment, appointment, வகுப்பு. 3. Moiety, half, பாதி. 4. Copartnership, கூட்டு. (c.)

நான் உன்பங்கிலிருக்கிறேன். I am on your side.

பங்காளன் — பங்காளி, s. A partner, a fellow-sharer, a share-holder, a consociate, a partaker, a participator, கூட்டாளி.

பங்கிக்க, inf. [prov.] To sever, cut off, part, separate, divide, பகுக்க.

பங்கிட, inf. To divide, parcel out, distribute, apportion. 2. To allot, destine.

பங்கிட்டநாள், s. A lunar asterism belonging to two Zodiacal signs.

பங்கீடு, v. noun. Dividing, sharing, allotting, parcelling, பங்கிடுகை. 2. Adjustment, settlement of strife, disposal of affairs, திட்டம். 3. Measures, means, உபாயம். (c.)

பங்குபங்காகப்பிரிக்க, inf. To divide into portions.

பங்குபட்டநாள், s. The moon's continuing in a lunar mansion through parts of two days.

பங்குபாகம், s. Share, portion, பங்கு; sometimes பங்குபகிர்வு.

பங்குபாகம்பிரித்துக்கொள்ள, inf. To divide an estate, as heirs. See தாயாதி.

பங்குபிரிந்தவர்கள், appel. n. Those who have divided an estate, as heirs.

பங்குவீதம், s. Equal shares.

பங்குள்ளவன், appel. n. [with dative.] Sharer with one.

•பங்கு, s. A lame person, a cripple, நொண்டி. 2. Saturn the planet as lame (slow in progress,) as a punishment for attempting to kick his aunt, சனி. W. p. 492. PANGU.

பங்குசம், s. Head-dress, தலைக்கோலம். (சது.)

•பங்குனி, s. The name of a month, March into April, மீனமாதம். See பற்குனி. 2. The twelfth lunar mansion or asterism, உத்திரநாள். (p.)

பங்குனிமாதம்பகலிலேநடந்தவன்பெரும்பாவி. He who travels by day in the பங்குனி month will suffer; i. e. from heat.

அவன்பங்குனியென்றுபருப்பதுமில்லைச்சித்திரையென்றுசிறுப்பதுமில்லை. He neither increases in March, nor decreases in April; i. e. he is always uniform.

பங்குனன், s. Arjuna who was born in பங்குனி. the twelfth lunar mansion.

பங்குனியுத்திரம், s. A special festival day occurring in பங்குனி month.

•பங்கேருகம், s. See பங்கம், Sa.

பசகள் — பசங்கள், s. [vul. for பயல்கள்.] Boys.

பச, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To become greenish, பசுமையாக. 2. To change in hue, complexion, color, as the skin through love-sickness; to turn sallow through affliction, நிறம்வேறுபட. 3. To become dim, as the twilight, மங்கிப்போக.

பசப்பு, v. noun. Yellow or gold color, பொன்மை. 2. Greenness, &c. (சது.)

அவனிலேபசப்பில்லை. He is emaciated. 2. He is grown poor.

பசண்டை, s. Verdure, moisture, பசுமை. 2. [prov.] Easy circumstances, money at command.

பசந்து — பசந்து, s. (Hind.) Any thing pleasing to the eye, refreshing to the sight, கண்ணுக்கழகு. 2. Elegance, beauty, attractiveness, சோபை. (c.)

பசந்தாயிருத்தல், v. noun. Being pleasing, attractive, engaging to the sight.

பசபசக்க, inf. To itch, தினவெடுக்க. (c.) 2. [prov.] To chatter or grumble in a suppressed tone, to mutter, முணுமுணுக்க.

பசபசத்தான், appel. n. A chatterer, a babbler, அலப்பன்.

பசபுசெனல் — பசபசப்பு, v. noun. Feeling a crawling, itching, &c., as the verb.

பசபுசென்றலட்டுதல். Teasing by continual talking.

பசபுசென்றுதூறல். Drizzling as rain.

பசபுசென்றுபேசுதல். Chattering a long story.

பசபுசென்றுவிழித்தல். Staring through fear or shame.

பசபுசென்றுருதல். Itching, crawling.

பசப்பு, கிறேன், பசப்பினேன், வேன், பசப்ப, v. n. To deceive; to allure, fascinate, gain the affections, மயக்க. 2. To chatter, to talk too much; to tell idle stories, வீணாய்ப்பேச. (c.)

பசப்பு, v. noun. Allurement, deceitful or flattering words, மயக்கு. 2. See பச.

பசமந்திரம், s. A kind of turmeric, மஞ்சள். (R.)

பசம்பை, s. A dove-tailing, in cabinet work. (R.)

பசலி, s. (Arab.) Fusly, a term designating the official revenue year of the Mohammedans, commencing on the twelfth of July. [Govt. usage.]

பசலை, s. Sallowness, greenishness of complexion, from love-sickness, or affliction, காமத்தாலுண்டாம்பசப்பு. 2. As பசளை.

பசலைநிறம், s. Sallow color from love-sickness.

பசனி, s. [prov.] Margin or head of a channel in irrigation, மடைமுகம். 2. See பசளை.

பசளை, s. [also பசலை, பயலை, prov. பசனி; poet. வசலை, or வசலைக்கொடி.] A class of plants, Spinage, portulaca oleracea. 2. [fig.] An infant. 3. Manure, compost, எரு, vulgarly, பயர். 4. Virtue of manure, எருவின்குணம்.—Of பசளை are: கொடிப்பசளை—வெள்ளைப்பசளை, a plant, Basella alba. L. செவ்வுப்புப்பசளை, Basella rubra; கொத்துப்பசளை, Basella lurida; கொடிப்பசளை, a variety of the same; பேய்ப்பசளை, a wild kind of Portulaca; சிறுக்கைப்பசளை, Portulaca palimoides.

பசறு, s. (Tel.) The expressed juice of green herbs, பச்சிலைச்சாறு.

•பசனம், s. Cooking, சமையல்.

•பசனை — பஜனை, s. Worship, service. See சிவபஜனை. W. p. 611. B'HAJANA.

•பசாசு, s. [prop. பிசாசு or பிசாசம்.] A devil, vampire, goblin, demon, fiend; also கூபாசம்.

பசாசுபோலேதிரிதல், v. noun. Being melancholy, dejected; reckless. 2. Being avaricious. 3. Indulging vagrant habits.

பசாடு, s. [prov.] Film in the eye, speck in a gem, scums on the surface of water, &c., மாசு.

பசாடுபிடித்தல், v. noun. Forming as a film in the eye.

பசாடுரித்தல், v. noun. Taking a film from the eye.

பசாடை, s. [prov.] Scum, concretion on water, as பசாடு; not in good use.

பசாரி — பஜாரி, s. (Hind.) A harlot, a whore; a shrew, a scold. (c)

பசாரித்தனம் — பசாரியாட்டம், s. The quarrelsomeness of a woman.

பசார், s. Native shoes, slippers; also called பாபோசி.

பசார்ச்சோடு, s. A pair of slippers.

பசார் — பஜார், s. (Pers.) Bazaar.

பசானம், s. A kind of coarse paddy ripening late, நெல்; also பிசானம். (Beschi.)

பசான், s. A kind of rice reaped in April or May as பசான்.

பசி, s. Hunger, appetite, craving for food, one of the twelve causes of distress; burning from want of food in the stomach. See உபத்திரவம். (c.)

பசிருசியறியாது. நித்திரைசுகமறியாது. Hunger seeks not dainties; drowsiness seeks repose.

பல்லாடப்பசியாறும். Hunger is lessened by having something between the teeth.

உம்முடையமுகத்தைப்பார்த்தாற்போலேபசிபோயிற்று. As soon as I saw your face, hunger left me, i. e. I lost all sense of trouble.

பசிகிடக்க, inf. [also பட்டினிகிடக்க.] To starve.

பசிகொள்ள, inf. To be hungry; to have a good appetite.

பசிக்கொடுமை, s. As பசிவருத்தம்.

பசிக்கொட்டாவி, s. Gnawing of hunger.
பசிச்சோர்வு, v. noun. Withering, through hunger.
பசிதாகம், s. Hunger and thirst.
பசிதணிக்க—பசிதீர்க்க—பசிமாற்ற—பசியாற, inf. To appease hunger.
பசிதணியல்—பசிதீரல்—பசிமாறல்—பசியாறல், v. noun. Abating of hunger.
பசித்தாக்கம், s. As பசிவருத்தம்.
பசித்தீபனம், s. Appetite.
பசிபட்டினியாயிருத்தல், v. noun. Starving, being famished.
பசிபொறுக்க, inf. To endure hunger.
பசிபொறாதவன், appel. n. One who cannot endure hunger.
பசிமந்திக்க, inf. To lose one's appetite.
பசிமந்தித்துப்போயிற்று. The appetite is gone.
பசியறிந்துகொடுக்க, inf. To be mindful of another's hunger and feed him.
பசியிலுலைசாக, inf. To starve; to perish with hunger.
பசியின்மை, s. Want of appetite.
பசியெடுக்க, inf. To be hungry.
எனக்குப்பசியெடுக்கிறது. I am hungry.
பசியெழும்புதல், v. noun. Becoming hungry.
பசிவருத்தம், s. Gnawing or distressing hunger.
சிறுபசி, s. Slight hunger.
சிறுபசியாற. To take tiffin, &c.

பசி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. [impersonal.] To be hungry, to have an appetite, பசியெடு. (c.)
புலிபசித்தாலும்புல்லைத்தின்னாது. Though a tiger be ever so hungry, he will not eat grass.
எனக்குப்பசிக்கிறது. I am hungry.

•பசியாத்தாபம், s. [for பச்சாத்தாபம், which see.] Contrition. (R.)

பசிரி—பசிரிக்கீரை—பயிரி, s. A garden herb used for curry, Portulaca quadrifolia, L. (c.)—It is of three kinds, குதிரைப்பசிரி, Trianthema crystallini; பெரும்பசிரி, Portulaca meridiana; and வறட்பசிரி, another variety.

பசு, adj. [in combin. பசிய, பச்ச, பச்சை, பாசு, பை.] Green, raw, &c. See பசுமை.
பசியமரம், s. Green tree.
பசுநரம்பு, s. [com. பச்சைநரம்பு.] Veins apparent in pregnant women, &c.
பாசடை, s. Green leaf.
பைங்கிளி, s. A green parrot.
பைந்தார், s. A green garland.
பைந்தினை, s. Yellow millet.

•பசு, s. A cow, பெண்பசு. [the most common usage in Tamil.] 2. A bull, எருது. 3. Taurus of the Zodiac, இடபராசி. 4. A living creature, சீவனுடையது. 5. A sacrificial ram, யாகத்துக்குரியஆடு. 6. Any animal, for sacrifice, மிருகம். 7. The soul, a sentient being or principle united with a body, or not; one of the three eternal uncreated principles called பசுபதிபாசம். W. p. 520. Pasu.
பசுத்தோல்போர்த்துப்புலிப்பாய்ச்சல்பாய்தல்........ Putting on a cow's skin and leaping like a tiger, i. e. assuming mildness, and using ferocity.
தன்னைக்கொல்லவருகிறபசுவைத்தான்கொன்றால்தோஷமில்லை. It is not a sin to kill a cow in self-defence.

பசுகரணம், s. Faculties of the soul.
பசுக்காத்தல், v. noun. One of the six occupations of Vaisyas; the care of flocks. See தொழில்.
பசுக்காவலர், s. [pl.] Cowherds—the caste, இடையர். 2. Any of the three divisions of the Vaisyas.
பசுஞானம், s. Nature, capacity or faculties of the soul. 2. Spiritual knowledge of the second degree, as distinguished from பதிஞானம் and பாசஞானம்; the former only being sufficient for salvation. 3 Limited knowledge of the soul as acquired by the senses. 4. The mode of existence of the soul, being itself intelligent, but subject to non-intelligence, by its moral evil, and connexion with matter.
காவேரிக்கரைப்பசுபோல்அலைகிறான். He wanders like a cow on the banks of the Kavery—discontented.
பசுத்தக்காளி—பசுவின்றக்காளி, s. A shrub, தீத்தாளி, Physalis.
பசுத்துவம், s. The nature, properties, &c., of the soul, ஆன்மதத்துவம்.
பசுநா, s. The பிறாய் tree, (lit.) cow-tongue-leaved.
பசுநாகு, s. A female calf, a young cow, a heifer.
பசுபதி, s. (St.) Siva, as lord of souls, சிவன்; [ex பதி, lord.]
பசுபதிபாசம், s. The soul, deity and illusion or மாயை. See திரிபதார்த்தம்.
பசுபாசம், s. The entanglement of the soul with the body.
பசுபாவம், s. Sins against creatures, as murder and cruelty, in distinction from sins against God, உயிர்ப்பாவம்.
பசுபுண்ணியம், s. Meritorious deeds for the benefit of creatures.
பசுப்பட்டி—பசுமாட்டுப்பட்டி, s. A cow-fold.
பசுமந்தை, s. A herd of cows, பசுக்கூட்டம்.
பசுமாடு, s. A cow.
பசுமுன்னை, s. A tree, a variety of Premna integrifolia with small leaves.
பசுமோர், s. Butter milk, whey of cow's milk.
பசுவதி, s. [prov.] A good natured person, gentle as a cow; [ex அதி.]
பசுவதை, s. (St. கோவதை.) Slaughter of a cow, regarded as a great crime.
பசுவன், s. [prov.] A rennet bag.
பசுவின்கன்று, s. A calf.
பசுவின்தயிர், s. Curds of cow's milk.
பசுவின்நெய்—பசுநெய், s. Cow's ghee.
பசுவுக்குவாயுறைகொடுத்தல், v. noun. Feeding a cow; one of the thirty-two meritorious deeds.

பசுந்து, s. (Hind.) Pleasing to the eye, &c. See பசந்து.

பசுமை, s. Greenness, verdure, rawness, பச்சை. 2. Coolness, moistness, freshness, செழுமை. 3. Elegance, beauty, pleasantness, குளிர்ச்சி. 4. Essence, substance, essential part of a thing, சாரம். 5. A greenish yellow, as distinguishing one of the two kinds of gold, பொன்னிறம். 6. A Cashmere shawl, also பசுமைச்சால்வை. 7. (சது.) Reality, truth, honesty, உண்மை. 8. (fig.) Easy circumstances, prosperity, செல்வம். (c.)

உள்ளபசுமைசொல்லு. Speak to the point, declare the substance.
பசுங்கதிர், s. The moon as cool rayed, சந்திரன்கதிர். 2. See கதிர்.
பசுங்கதிர்த்தேவு. The moon, or the cool rayed deity. (சது.)
பசுங்கறந்தை, s. A plant. See கறந்தை.
பசுங்காய், s. Rice or other grain in the ear but not quite ripe. 2. An unripe fruit.
பசுங்காய்ப்பதம், s. A stage in the ripening of grain.
பசுங்கிளி, s. As பைங்கிளி, under பசு.
பசுங்குடி, s. A family of good extraction, of respectability. 2. See குடி.
பசுங்கொற்றான், s. A creeper.
பசுங்கோரை, s. A kind of grass.
பசுந்தரை, s. Grassy ground, verdant field, &c.
பசுமையுள்ளவன்—பசையுள்ளவன், appel. n. A man in good circumstances.
பசும்பயறு, s. [com. பாசிப்பயறு.] A kind of lentils, as பச்சைப்பயறு.
பசும்பிடி, s. A species of ever-green, the பச்சிலை tree. See தமாலம். (சது.)
பசும்புல், s. Green grass, green sward. 2. (சது.) Growing corn, விளைபயிர்.
பசும்புற்றரை, s. As பசுந்தரை.
பசும்பொன், s. Fine gold. 2. Gold of a greenish yellow, as distinguished from செம்பொன்.

பச்சடி, s. A kind of seasoning for food, like pickles, ஊறுகாய். [Tel.] 2. [prov.] Prosperity, command of money, பசுமை; [ex பசுமை.]—Of பச்சடி, are மாங்காய்ப்பச்சடி, pickle of மாங்காய் fruit; மாங்காய்ப்பச்சடி, mango pickle; வாழைப்பூப்பச்சடி, pickle of plantain flowers.
பச்சடிகண்டால்கட்டிக்கொள்ளே. My daughter, if you see [your lover] prosperous, cling to him. [spoken by a time-server.]
பச்சடியன், s. [prov.] A white and black bull or cow.
பச்சரிசி, s. Rice hulled without boiling; for flour, &c. See புழுங்கலரிசி.
பச்சிலை, s. A kind of ever-green, the தமாலம், Xanthocymus pictorious. 2. A green fresh leaf, பச்சையிலை. 3. A medicament consisting of leaves, பச்சமருந்து.
பச்சிலைக்கிச்சிலிக்கிழங்கு. The medicament, and கிச்சிலி, an aromatic root.
பச்சிலைச்சாறுபோலே. Hue of leaf-juice, a leaf juice green.
பச்சிலைப்பாம்பு, s. [com. பச்சைப்பாம்பு.] A kind of green snake.
பச்சிலைமருந்து, s. Leaves used medicinally.
பச்சிலையோணான், s. [prov. for பச்சையோணான், which see.] The chameleon.
பச்சிறைச்சி, s. Raw meat, flesh, &c. 2. A raw sore, பச்சைப்புண்.
பச்சுடம்பு, s. The tender body of an infant, or of a woman after child-birth. 2. One still sore from small pox, &c.
பச்செனல், v. noun. Being green, verdant, tender, or beautiful.
பச்செனவுடம்பு. A tender and beautiful body—said of the female sex.

பச்செனவு, *v. noun.* Greenness, verdure, பசுமை. 2. Moistness, dampness, sap, juice, சாம். 3. Plumpness, fulness, பொலிவு.

பச்செனவானமரம். A verdant tree.

உடம்பிலேசதைறும்பச்செனவில்லை. There is no flesh, no plumpness on him.

பச்சோணான்—பச்சோந்தி, *s.* The green lizard, the chameleon; of which the flesh is used in magic as a philter, &c.

பச்சோலை, *s.* Green olas; also பச்சை யோலை.

பசேரெனல், *v. noun.* Being quite green.

பசேரென்றிருத்தல். [*commonly* பச்சைப் பசேல்.] Being very green.

பசை, *s.* Stickiness, tenacity, ropiness, adhesiveness, பற்று. 2. Glue, paste, cement, பிசின். [*Tel.* పస.] 3. Moisture, sap, juice of meat, சாம். 4. Animal or vegetable gluten, that which causes fulness, firmness, plumpness, &c., in animal or vegetable bodies; glutinous substance in fruits, roots, &c., சாம். 5. Love, affection, compassion, அன்பு. 6. [*with* இரத்தம்.] Boldness, sanguineness, கொழுப்பு. 7. (சது.) Gain, profit, lucre, property, இலாபம். 8. Desire, விருப்பம். 9. Boiled rice, and other ingredients, applied to a drum-head to improve the sound, முழவின்மார்ச்சனை. (*c.*)

அதிலேபசையில்லை. There is no hope in the case, we shall be disappointed; There is no hope of his recovery.

உடம்பிலே பசையில்லை. He is greatly emaciated.

அவர்முகத்திலேத்தப்பசையில்லை. His countenance is gloomy, he looks dejected.

பசைபூசுதல், *v. noun.* Putting பசை on the right side of a drum.

பசையடி, *s.* [*prov.*] The first washing of a new cloth, without starching.

பசையற்றவன், *appel. n.* A person without kindness, or compassion, அன்பில்லாதவன். 2. One impoverished. See பசையுள்ளவன். 3. A man destitute of property, வறியவன்.

பசையாயிருக்க, *inf.* To be glutinous. 2. To be advantageous, profitable, lucrative, for one's interest. 3. To be kind, affectionate, compassionate.

பசையொட்டுதல், *v. noun.* Gluing or pasting any thing.

பசை, கிறேன், ந்தேன், வேன், ய, *v. n.* To be compassionate, kind, affectionate, அன்பு கொள்ள. 2. To be liberal, beneficent, benevolent, ஈரமுள்ளதாக. 3. [*prov.*] To become glutinous, viscous, tempered — as clay, &c., இளக. 4. *v. a.* To temper clay so as to make it viscous—as done by potters, white-ants, or hornets; kneading dough, பிசைய. 5. To fill cracks in iron by beating, ஒட்ட.

பசைந்தார், *appel. n.* [*pl.*] Friends, சிநேகிதர். (சது.)

பசைமட்டை, *s.* [*prov.*] A piece of palmyra stalk used by blacksmiths in tempering the heat of fire by water, இரும்பைப் பசையுமட்டை.

பசைவு, *v. noun.* Compassion, kindness, affection, attachment, அன்பு.

பச்சடி, *s.* A kind of seasoning. [*See* பசுமை, *for this and other similar compounds.*]

பச்சவடம், *s.* (*Tel.* பச்சடம்.) A pair of cloths of the same kind. (*c.*)

*பச்சாத்தாபம், *s.* After-sorrow, repentance, regret, compunction, அநுதாபம். 2. Compassion, pity, இரக்கம்; [*ex* பச்சாத், after *et* தாபம், sorrow.] W. p. 520. PASCHATTAPA.

*பச்சிமம், *s.* The west, மேற்கு. (சது.) 2. (*St.*) Behind, afterwards, பின். W. p. 520. PASCHIMA.

பச்சிமகாண்டம், *s.* The New Testament. See காண்டம்.

விப்பிரபச்சிமபுத்தி. The wit of a brahman comes afterwards.

பச்சை, *adj.* Green, tender, young, unripe, raw, cool; intense; [*ex* பசுமை.]

பச்சைக்கயர்-பச்சைக்கைப்பு, *s.* [*prov.*] Extremely astringent, exceedingly bitter.

பச்சைக்கருப்பூரம், *s.* A greenish kind of drug. See கருப்பூரம்.

பச்சைக்கல், *s.* Unburnt brick, சுடாத செங்கல். 2. See கல்.

பச்சைக்கள்ளன், *s.* [*prov.*] A desperate thief, cheat, rogue; a villain.

பச்சைக்காய், *s.* Green fruit, fruit unripe or uncooked.

பச்சைக்காய்ச்சி, *appel. n.* [*prov.*] A tree with green fruit.

பச்சைக்கிளி, *s.* Green parrot. 2. Green grasshopper.

பச்சைக்குங்கிலியம், *s.* Green resin.

பச்சைக்குழந்தை, *s.* A tender new born infant.

பச்சைக்கூடு, *s.* [*prov.*] The living body, ஸ்தூலதேகம்.

பச்சைக்கூட்டோடேகயிலாயஞ்சேர்வாய். You will attain *kylaya*, the lowest heaven (of Siva.) alive, with vigorous health.

பச்சைக்கொல்லன், *s.* [*prov. in burles.*] A clumsy blacksmith; i. e. beating cold iron.

பச்சைச்சடையன், *appel. n.* An epithet of B'hairava, a form of Siva.

பச்சைத்தடி, *s.* Green sticks, used in making a bier.

விறைத்துப்பச்சைத்தடியாய்ப்போயிற்று. He is grown cold and stiff as a stick; said of one in a fit, &c.

பச்சைத்தண்ணீர், *s.* Cold water, unboiled water.

பச்சைத்தாள், *s.* Green stalks, showing immaturity in the corn.

பச்சைத்தோல், *s.* A raw, untanned skin, a felt. 2. New skin formed on a healing sore.

பச்சைநஞ்சு, *s.* Strong poison. 2. [*prov.*] An atrocious villain, தீயன்.

பச்சைநாடன்பழம், *s.* A kind of plantain with greenish streaks. (*Beschi.*)

பச்சைநாபி, *s.* A strong, vegetable poison. See வச்சநாபி under நாபி.

பச்சைபழுக்காஅடைத்தல், *v. noun.* Painting green and yellow.

பச்சைப்பசேரெனல், *v. noun.* Being very green, all green, verdant, flourishing, மிகுபசுமையாயிருத்தல்.

மரகதம்பச்சைப்பசேரென்றிருக்கிறது........The emerald is very green.

தோட்டம்பச்சைப்பசேரென்றிருக்கிறது. The garden is all verdant.

பச்சைப்பட்டி, *s.* [*prov.*] Raw or undried manure, put on land shortly before sowing, எரு.

பச்சைப்பதம், *s.* Immaturity of grain, &c. 2. The state of not being well boiled.

பச்சைப்பயறு, *s.* A kind of pulse for taking the oil from the head.

பச்சைப்பாக்கு, *s.* Unripe or undried areca-nut.

பச்சைப்பாம்பு, *s.* A kind of green snake.

பச்சைப்பாலகன் — பச்சைப்பாலன்— பச்சைப்பிள்ளை, *s.* A new-born infant.

பச்சைப்பால், *s.* Raw milk.

பச்சைப்பானை, *s.* An earthen pot not burnt.

பச்சைப்பிள்ளைத்தாய்ச்சி, *s.* A woman immediately after child-birth.

பச்சைப்புண், *s.* A raw sore. 2. Sore, as the body through pain, hard labor in child-birth, &c.

சரீரமெல்லாம்பச்சைப்புண். My body is sore all over.

பச்சைப்புல், *s.* Green grass as plucked for cattle.

பச்சைப்புழு, *s.* Green caterpillars, the palmer worm.

பச்சைப்புளுகன், *s.* A great boaster. 2. A notorious liar.

பச்சைப்புளி, *s.* Exceeding sourness.

பச்சைப்புறு, *s.* A green pigeon, or dove.

பச்சைப்பெருமாள், *s.* A kind of paddy that comes to perfection in three months, நெல். 2. Vishnu, விஷ்ணு.

பச்சைப்பொட்டு, *s.* A green spot on the forehead, made with a needle and colouring matter. 2. A green spot on the forehead, to which medical properties are ascribed. 3. [*fig. prov.*] A false show; pretension to wealth, learning, piety, &c., பகட்டு.

பச்சைப்பொய், *s.* A downright lie.

பச்சைமண், *s.* Moist earth. 2. Tempered clay, as in unburnt pots-oppos. to சுட்டமண். See ஒட்டு, *v.*

பச்சைமரம், *s.* A green or living tree. 2. Unseasoned timber.

பச்சைமரங்கூடப்பட்டுப்போம்பார்ப்பான். His look would blight even a green tree.

பச்சைமா, *s.* Flour not well prepared for paste, &c. 2. Raw dough, paste.

பச்சையிரும்பு, *s.* Mere iron. 2. Untempered iron. 3. Cold iron.

பச்சையீரம், *s.* Great dampness, as of soiled clothes, &c., அதிகஈரம்.

பச்சையுடம்பு—பச்சையுடல், *s.* The tender body of an infant, or of a woman after-child birth, மெல்லியவுடல். 2. The body of a person recovering from small pox or other disease that fills it with raw sores, புண்ணுள்ளவுடல்.

பச்சையுப்பு, *s.* Unmixed salt.

பச்சையெண்ணெய், *s.* Oil not heated.

பச்சைவன்னம், *s.* Green color, green paint.

பச்சைவில், *s.* The rain-bow.

பச்சைவிறகு, *s.* Green or undried fire-wood.

பச்சைவெட்டு, *s.* Medicinal minerals used raw, not calcined, எரிபடாமருந்து.

பச்சைவெண்ணெய், *s.* Butter churned from unboiled milk.

பச்சை, s. Greenness, verdure, as பசுமை. 2. Rawness, that which is uncooked, or half cooked—as food; unseasoned—as timber, வேகாதது. 3. Unripeness, immaturity, freshness, இளமை. 4. Rawness of an ulcer, &c., உலராதது. 5. Obscurity, ribaldry, vulgar language, இடக்கர்மொழி. 6. The emerald, மரகதம். 7. Vishnu, விட்டுணு. 8. The planet Mercury, புதன். (சது.) 9. [prov.] Present to a friend, or a new married pair, consisting of fruits, or uncooked grain, உலுப்பை. 10. Offering of fruits to a deity, to avert disease, தெய்வமுதலியவற்றிற்குப்படைப்பது. 11. Indelible green marks in the skin, by puncturing, உடம்பிற்குத்தும்பச்சை. 12. A plant, பூண்டு. (R.) See அழுத்துப்பச்சை, Cressa Indica. 13. [fig. prov.] Intensity, excessiveness, மிகுதி; [ex பசுமை.]

பச்சைகட்டு, s. [prov.] A trifling present of fruits, commonly to a head man, பழங்களைக்கொடுக்கை. 2. (fig.) A mitigative medicine, a lenitive, சாந்திமருந்து. 3. A mitigation, temporary relief.

பச்சைகுத்துதல், v. noun. Making marks on the body with a needle and green coloring matter. See குத்து, v.

பச்சைகொடுத்தல், v. noun. Sending a present of fruits to a wedding house, &c.

பச்சைபாடி, s. [prov.] A present of vegetables, as பச்சை.

பச்சைபிடித்தல், v. noun. [prov.] Seizing on some of the fruits brought to a wedding house—as the barber, washerman, &c.

பச்சைப்படிகொடுத்தல், v. noun. [prov.] Giving raw fruits as presents to Brahmans, pandarams, &c.

பச்சையனுப்புதல், v. noun. [prov.] Sending presents, of vegetables, fruits, rice, &c., to a new married pair, &c.

பச்சை, s. Skin, தோல். 2. Fragrance, பரிமளம். 3. A fragrant plant, புநு. (சது.)

பச்சோணுன். See under பசுமை.

•பஸ்மம், s. [com. பஸ்பம், also பற்பம்.] Ashes, சாம்பர். W. p. 615. B'HASMAN. 2. Metal reduced to medicinal powder.

பஸ்மாசுரன், s. An Asura. [For particulars see note of ஐவிலி.]

•பக்ஷி, s. A bird. See பட்சி, பக்கி.

•பஞ்ச—பஞ்சம், adj. Five, five-fold, ஐந்து. W. p. 493. PANCHAT or PANCHAN.

பஞ்சகச்சஞ்சொருக, inf. To tuck up the cloth in five ways. See சொருகு, v.

பஞ்சகச்சாயம், s. Five kinds of cakes.

பஞ்சகதி, s. The five paces of the horse. See குரகதி.

பஞ்சகந்தம், s. The five aromatics. See கந்தம்.

பஞ்சகம், s. Any thing of five parts.

பஞ்சகம்மாளர், s. [also பஞ்சாளர்.] The five castes of mechanics. See கம்மாளர், under கம்.

பஞ்சகர்த்தாக்கள், s. The five deities, or forms of deity performing operations for the benefit of souls. 1. பிரமா, creator, or evolver of the universe; 2. விட்டுணு, preserver, who furnishes each soul with its allotted portion of joys, and sorrows, as the results of former actions; 3. உருத்திரன், destroyer, reducing souls and worlds to their primitive elements; 4. மகேசுரன், obscurer, darkening the understanding, that the soul may act, and work off its accumulation of moral evil, so as to become ripe for salvation; 5. சதாசிவன், enlightener or illuminator, who imparts divine grace, and prepares the soul for emancipation, and union with the deity. See பஞ்சகிருத்தியம், under கிருத்தியம்.

பஞ்சகலாந்தானங்கள், s. The five parts of the body touched by the gurus in giving தீட்சை.

பஞ்சகலை, s. The five developments of the soul in its beatification are; நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதம். (சத்த.)

பஞ்சகல்யாணி, s. A horse whose feet and forehead are white. See கலியாணி.

பஞ்சகன்னியர், s. [pl.] The five famous women worshipped by females, as able to confer benefits. See கன்னிகை.

பஞ்சகாவியம், s. The five ancient classic poems. See காவியம்.

பஞ்சகிருத்தியம், s. The five operations performed by five பஞ்சகர்த்தாக்கள். See ஐந்தொழில், கிருத்தியம்.

பஞ்சகுரோசஎல்லை, s. The distance of five calls or குரோசம், around Benares, within which no foreign religionist, or other unclean person, should come.

பஞ்சகோசம், s. The five sheaths of the soul. See கோசம்.

பஞ்சகோணம், s. A pentagon. See ஐங்கோணம்.

பஞ்சகோலம், s. The mixture of five spices, சுக்கு, திப்பிலி, திப்பிலிமூலம், செவ்வியம், and சித்திரமூலம்; [ex Kola, pepper.]

பஞ்சகௌடம், s. The five divisions of Bengal or the கௌடம் country. See கௌடம்.

பஞ்சகௌவியம், s. The five products of the cow, used in ceremonial purifications, viz. milk, curds, ghee, urine and dung, ஆன்விடுதைந்து.

பஞ்சகௌவியங்கூட்டித்தெளித்தல். Mixing the five ingredients and sprinkling the the floor, &c.—Note. The same mixture is administered to the woman after child-birth; also sprinkled on the child at the time of purification.

பஞ்சகௌவியப்பிராசனம். Eating the above compound as a purification.

பஞ்சசத்தி, s. The five saktis. See சத்தி.

பஞ்சசயனம், s. The five kinds of beds. See சயனம்.

பஞ்சசிகை, s. The five parts of the body which the Shastras forbid to be shaved; the crown of the head, the two eye-brows, and the arms from the elbow to the hand.

பஞ்சசுத்தி, s. The five purifications. See சுத்தி.

பஞ்சணை, s. [com. for பஞ்சசயனம்.] The five kinds of mattresses, filled with silk-cotton, red cotton, white cotton, hair, or feathers. 2. See பஞ்சு.

பஞ்சதந்திரம், s. [in politics.] The five means of accomplishing one's object; 1. மித்திரபேதம், sowing discord among friends; 2. சகிலாபம், associating with equals; 3. சந்திவிக்கிரகம், associating with a foe and ruining him; 4. அர்த்தநாசம், spending one's property to gain an object; 5. அசம்பிரேட்சியம், acting without inquiry, examination, &c.

பஞ்சதந்திரக்கதை, s. Panchatantra.

பஞ்சதம்—பஞ்சதை, s. Death, dissolution of the five elements of whose aggregate the body consists, மரணம்.

பஞ்சதரு — பஞ்சதாரு, s. The five trees in Swerga. See ஐந்தரு, தரு.

பஞ்சதன்மாத்திரை, s. The five grounds of knowledge by the senses. See தன்மாத்திரை.

பஞ்சதாது, s. The five elements, earth, water, fire, air, ether.

பஞ்சதாரை, s. (Tel పంచదార.) Sugar, சருக்கரை.

பஞ்சதிராவிடம், s. The five provinces of Southern India. See திராவிடம்.

பஞ்சதிரவியம், s. The five productions of the cow used in purification. See கௌவியம்.

பஞ்சநகம், s. An elephant. 2. A tortoise, ஆமை. W. p. 493. PANCHANAKHA.

பஞ்சநகக்கூர்மையோன், s. A tortoise as having five divisions in its claws.

பஞ்சநதி, s. The Punjaub having five rivers, as famous for sacred bathing.

பஞ்சநிம்பம், s. The five parts of the Neem, or Margosa tree; the flowers fruit, leaves, bark and root; [ex நிம்பம், margosa.]

பஞ்சபட்சி, s. The five birds for augury. See பஞ்சபட்சிசாத்திரம், under சாத்திரம்.—The letters, அ, இ, உ, எ, and ஒ, are applied to the birds, and the following accidents, உண்டி, feeding, நடை, walking, அரசு, governing, துயில், sleeping, and சாவு, dying.

பஞ்சபட்சிக்காதல், s. A treatise on augury.

பஞ்சபட்சிவேளை, s. Augury from the eating, sleeping, walking, governing and dying of the five birds, between the full and the new moon. 2. An auspicious hour, ascertained by augury.

பஞ்சபர்வங்கள், s. Five religious ceremonial days in each fortnight.

பஞ்சபாணம், s. [also ஐங்கணை.] The five arrows of Kama, consisting of five kinds of flowers: வனசம், lotus; 2. சூதம், mango; 3. அசோகு, ashoka; 4. முல்லை, jasmine; 5. நீலம், blue water lily.

பஞ்சபாணன், s. Kama, the god of love, as armed with the five arrows, காமன்.

பஞ்சபாணுவஸ்தை, s. The five effects produced by the arrows of Kama; சம்பிரலாபம், thinking and talking of the person loved; 2. விப்பிரலாபம், sighing and lamenting; 3. சோகம், heat or feverishness, nausea and languishing; 4. மோகம், weeping and bewilderment of the faculties; 5, மரணம், death or suspension of the natural powers.

பஞ்சபாணி, s. Parvati, as armed with five arrows, பார்வதி.

பஞ்சபாண்டவர், s. [pl.] The five Pandavas. See ஐவர்.

பஞ்சபாதகம், s. [also பஞ்சமாபாதகம்.] The five heinous sins: கொலை, murder; 2. காமம், lust; 3. களவு, theft or fraud; 4. கள்ளுண்ணல், drinking intoxicating liquor; 5. குருநிந்தை, abuse of the Guru. (சது.)—Some omit காமம், and others, குருநிந்தை, and give பொய், instead.

பஞ்சபாதகன், s. One guilty of the five heinous sins. 2. One very oppressive, and unjust, as பஞ்சமாபாதகன்.

பிருதிவிசக்கரன்-பிருதிவிபதி-பிருதிவிபாலன், s. A king, a ruler, a monarch of the earth, அரசன்.

பிருதிவிதத்துவம், s. [in philos.] The material principle, சடத்தின்மூலம்.

பிருதிவிலிங்கம், s. Earth-linga, worshipped at Conjeveram. See இலிங்கம்.

•பிருது, s. A banner, an insignia. See விருது. [Tel. బిరుదు.] 2. A king of the solar race, சூரியகுலத்தரசரிலொருவன். W. p. 551. PRIT'HU.

•பிருதுமானம், s. The middle part of an elephant's tusk, யானைக்கொம்பினடு. (சது.)

•பிருதுவி, s. Inert matter, as பிருதிவி.

பிருதிவியண்டம், s. The globe of the earth, பூகோளம்.

•பிருதை, s. Kunti, wife of Pandu. See பிரதை.

•பிருத்தியர், s. [com. விருத்தியர்.] Slaves, அடிமைகள். W. p. 626. B'HRITYA.

•பிருந்தம், s. A crowd, a multitude, கூட்டம். 2. The Tulasi plant, துளசி, Ocimum Sanctum. W. p. 802. VRINDA.

•பிருந்தை, s. The wife of சலந்தரன், Salanthran a giant, சலந்தரன்மனைவி. 2. The Tulasi plant. See பிருந்தம், 2. (சது.)

•பிருமத்தி, s. Surprise, bewilderment. (Colloq.)

•பிரேதம், s. A dead body, a corpse, சவம். 2. A ghost or goblin frequenting cemeteries till the funeral rites are completed, பிசாசு. W. p. 591. PRETA.

பிரேதகருமம்-பிரேதகாரியம்-பிரேதகிருத்தியம், s. Ceremonies for dead bodies.

பிரேதகிரகம், s. A tomb for dead bodies, or a monument erected over them, பிணவறை; [ex கிரகம், house.]

பிரேதகும்பம், s. The pot broken after a corpse is laid on the pile to be burnt, பிணத்துக்குடைக்குங்குடம்.

பிரேதக்குழி, s. A grave.

பிரேதசுத்தி, v. noun. Purifying a dead body by washing.

பிரேதச்சாயல் - பிரேதரூபம் - பிரேதாகிருதி, s. A death-like, cadaverous appearance, பிணத்தின்றோற்றம்.

பிரேதபதி, s. The god of death, இயமன்; [ex பதி, lord]

பிரேதாலங்காரம், s. The adorning of the dead body, சவத்தையலங்கரித்தல்.

பிரேதாலங்காரம்பண்ண, inf. To adorn a corpse for the funeral.

பிரேதலோகம், s. The region of departed spirits, where they remain for one year, or until the obsequies are completed, பிதிருலகம்.

பிரேதவனம், s. A place where corpses are buried, or burnt, மயானம்.

பிரேதான்னம், s. Balls of rice, &c., offered to the manes.

•பிரேயம், s. Toddy, fermented liquor, கள். (சது.)

•பிரேரகம்—பிரேரணம், s. Agitation from some extraneous cause, as of matter, souls, or the organs of sense, from the influence of the female energy of deity, சத்திபினியக்கம். W. p. 592. PRERAN'A.

பிரேரகப்படுதல், v. noun. Being moved, animated, excited, as matter, souls, &c.

பிரேரகன், s. An energizer or mover, one who effects any action.

பிரேரகாண்டம், s. A division of operations in the organs of sense, &c., ஐம்பொறிகளின்பேதம்.

பிரேராவத்தை, s. The அவத்தை, in which the soul exercises its powers, &c., ஆன்மாநிலை.

பிரேரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To move, to animate, to rouse to energy or action, to act upon, as the female principle of deity, சத்தியியக்க. 2. v. n. To be moved, excited, operated upon; to rise, rage and swell, as the sea, சரியப்பட.

பிரை, s. Fermented curds, used as runnet, for curdling milk, as உறைமோர். (சது.) 2. Half, பாதி—as பிரைக்காற்கின்னி, the eighth part of a measure. (Beschi.)

•பிரௌடை, s. [com. பிரவிடை.] A woman of middle age. See பருவம். W. p. 593. PROUD'HA.

•பிலகரி, s. A kind of tune, ஓர் இராகம்.

•பிலம், s. The nether regions, the abyss, பாதலம். 2. A deep well, a subterraneous room or passage, a cave, a cavern, குகை. 3. Hole of a rat or snake, வளை. W. p. 782. VILA.

பிலஞ்சுலோபம், s. An ant or emmet as inhabiting a hole, எறும்பு. (சது.)

பிலத்துவாரம், s. A passage through the earth to the nether regions, கீழுலகத்துக்குப்போம்வழி. 2. A mine, a pit, the abyss, கிலவறை.

•பிலவ, s. The thirty-fifth year of the present Hindu cycle, A. D. 1841, ஓராண்டு.

•பிலவகம்—பிலவங்கம், s. A monkey, குரங்கு. 2. A frog, தவளை. W. p. 593. PLAVAGA.

•பிலவம், s. A frog, தவளை. (Sans. Plava.)

பிலவகதி, s. The leaping of a frog, தவளைப்பாய்ச்சல்; [ex கதி.]

•பிலவங்க, s. The forty-first year of the present Hindu cycle, ஓராண்டு.

•பிலன், s. An emmet, an ant, எறும்பு; [ex பிலம்.] (சது.)

பிலா, s. for [vul. பலா.] Jack tree.

பிலாக்கு, s. [Tel. also புலாக்கு.] A kind of nose-ornament, ஓர்மூக்கணி.

பிலாச்சை, s. A sea-frog; an ugly looking kind of fish, கடற்றவளை, the same as பொத்தை or பேத்தை a fish.

கொறிப்பிலாச்சை — முள்ளம்பிலாச்சை — சக்கப்பிலாச்சை, are different kinds.

பிலாயத்துஇனும், s. [Hind.] Enams granted for constructing tanks.

பிலாறு, s. [improp. for பிராறு.] A full reservoir.

பிலிம்பி, s. (for.) [vul. பிலிஞ்சி.] The bilimby tree, குச்சிலிதமரத்தை.

பிலிற்று, கிறேன், பிலிற்றினேன், வேன், பிலிற்ற, v. a. To gargle, கொப்புளிக்க. (சது.) 2. v. n. [prov.] To drizzle, gush out, drop as honey, from flowers, சொரிய.

பிலுக்கு, s. [Tel. బిలుకు.] Foppishness, foppery as சருக்கு, ஆடம்பரம். (c.)

பிலுக்கன்—பிலுக்குக்காரன், s. [fem. பிலுக்குக்காரி.] A fop, a cox-comb, a dandy, beau, ஆடம்பரமுடையோன்.

பிலுக்கு, கிறேன், பிலுக்கினேன், வேன், க்க, v. a. To dress and act foppishly, to act the dandy, to strut, ஆடம்பரஞ்செய்ய.

பிலுபிலெனல், v. noun. The noise of a great multitude running or rushing on one, ஈமொய்த்தொலிக்குறிப்பு. (c.)

பில்கு, கிறேன், பில்கினேன், பில்குவேன், பில்க, v. a. To gargle, spew, emit liquid-matter, from the mouth, கொப்புளிக்க. (சது.)

பில்லங்குழல்-பில்லாங்குழல்-பிள்ளாங்குழல், s. [improp.] A flute, a pipe. See புல்லங்குழல், புல்லாங்குழல்.

பில்லடை, s. A kind of pastry or cake from grass seeds, அப்பவருக்கம். (சது.)

பில்லி, s. Sorcery, witchcraft, magic, சூனியவித்தை. 2. A demon, an elf sent in witchcraft, பேய். (c.)

பில்லிசூனியம், s. Witchcraft, as பில்லி.

பில்லிசூனியமெடுக்க, inf. To discover and remove the magical articles.

பில்லிசூனியம்வைக்க, inf. To place magical materials to bewitch one.

பில்லியடித்தல், v. noun. A demon possessing a person.

பில்லிவிடுதல், v. noun. Sending an elf against one.

•பில்லி, s. [Tel. పిల్లి.] A cat, பூனை. (சது.)

பில்லை, s. [Tel. బిళ్ల.] That which is round, &c. See வில்லை. 2. See புல்லை.

•பில்லம், s. A disease of the eyes at the bottom of the inside of the lids; a film, or cataract, நேத்திரரோகம். W. p. 537. PILLAM.

பில்லங்குத்த — பில்லமுரிக்க, inf. To remove the film. (R.)

பிழக்கடை—பிழைக்கடை, s. [also புழைக்கடை, பிறக்கடை.] Back-yard, behind the house. (c.)

பிழம்பு, s. An intangible appearance, of an oblong shape in form, of a column or pillar—as of fire, flame, a cloud; or darkness, &c., இருட்பிழம்பு, திரட்சி. (சது.)

பிழா, s. A large vessel, a receptacle, கொள்கலம். 2. [prov.] A plate of a palmyra leaf to hold food, ஓலைக்கலம்.

பிழார், s. Basket for irrigation, as part of the watering engine, இறைகூடை. (சது.)

பிழி, s. Toddy, fermented liquor, கள். (சது.)

பிழியர், s. Toddy-sellers, கள்விற்போர்.

பிழி, கிறேன், ந்தேன், வேன், ய, v. a. To squeeze out, to wring or press out in the hand, சாறுபிழிய. 2. v. n. To issue; to give out—as moisture from the hand, oil from the hair and juice from fruits, சாரம்படிய. (c.)

பிழிதல்—பிழிவு, v. noun. Squeezing—as a fruit, wringing—as a cloth.

இரத்தம்பிழிதல், v. noun. Laboring hard; (lit.) wringing one's blood. 2. Forcing one to labor hard; to oppress.

பிழுக்கை, s. Dung of sheep, goats, hares, bats, rats, squirrels, &c., being in small round clots, ஆடுமுதலியவற்றின்மலம். See புழுக்கை.

பிழை, *s.* Fault, misdemeanor, crime, குற்றம். 2. Mistake, error, inaccuracy, failure, பிசகு. 3. [*in some connections.*] Inauspiciousness, bad fate, misfortune, தீமை. (*c.*)

பிழைசொல்ல, *inf.* To make a mistake or blunder in speaking. 2. To criticize, find fault.

பிழைதிருத்த, *inf.* To correct errors.

பிழைதிருத்தம், *s.* Errata.

பிழைபட, *inf.* [*v. noun.* பிழைபாடு.] To turn out wrong, தப்பிதமாக. 2. To fail in, to miscarry, பிசக.

பிழைபார்த்தல், *v. noun.* Correcting a writing, revising.

பிழைபிடித்தல். Finding fault, with a composition or writing.

பிழைபொறுத்தல், *v. noun.* Pardoning wrongs, excusing faults, forgiving.

தண்ணீர்மும்முன்றுபிழைபொறுக்கிறதண்டு. The water waits for three mistakes; i. e. for a person to rise three times before sinking;—*we should be long suffering.*

பிழையன், *appel. n.* [*in combin.*] That which has a flaw, as சுழிப்பிழையன்.

பிழையேடு, *s.* An incorrect copy-book.

பிழை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To fail, to do amiss, to err, பிசக. 2. To fail, as an omen, or prediction, சகுனந்தப்ப. 3. *v. a.* To do wrong, குற்றஞ்செய்ய. (*p.*)

பிழைக்கை, *v. noun.* A mistake, error, fault.

பிழைத்தல், *v. noun.* Erring, failing.

பிழையாமை, *neg. v. noun.* Being free from fault.

பெரியோரைப்பிழையாமை. Being free from fault, [before] holy men. (*p.*)

பிழை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To live, to survive an evil, as danger of death, &c., to outlive, to escape, to survive another, மோசத்திற்றப்ப. 2. To get a livelihood, to live, to subsist, சீவனம்பண்ண. 3. To recover from swooning, sickness, &c., to be restored to life—as one dead, உய்ய.—*Note.* See, under பிழை, *s.*, the same verb with a different meaning. (*c.*)

கணவனைப்பிழைத்தவள். A woman that has survived her husband. (*p.*)

பிழைகாயம், *s.* A wound not mortal.

பிழைக்கப்பார்த்தல், *v. noun.* Seeking one's living.

பிழைப்பு, *v. noun.* Subsistence, maintenance, living, livelihood, sustenance, சீவனம். 2. Restoration, recovery, or escape from threatening death, உயிர்க்கை. (*c.*) 3. [*ex* பிழை, to err.] Mistake, failure, error, miscarriage, abortion, தவறுதல்.

பிழைப்புக்காட்ட, *inf.* To provide means of subsistence—as employment, &c.

பிழைப்புத்தழைப்பு, *v. noun.* Income, living, livelihood.

பிழைப்புத்தேட—பிழைப்புப்பார்க்க, *inf.* To look for employment, to seek for a livelihood.

பிழைப்பூட்ட, *inf.* To support, sustain, maintain, காப்பாற்ற. 2. To restore from threatening death, re-animate, restore life, உயிர்ப்பிக்க. See ஊட்டு, *v.*

பிழைப்பிக்க, *inf.* [*causative.*] To rescue from imminent danger, severe illness, or from death, மோசத்தினின்றுநீக்க. 2. To sustain, support, maintain, keep alive, காப்பாற்ற. (*c.*)

பிளகு. See பிளவு.

பிள, க்கிறது, ந்தது, க்கும், க்க, *v. n.* To be split, cleaved, rent; to gape, to crack, கிழிய. 2. To be blasted, to be blown up, தகர. 3. To be pierced, penetrated, தைபட. 4. [*fig.*] To be mortified, cut to the heart, to be heart-broken, through sorrow, remorse or shame, உள்ளுடைந்து. 5. *v. a.* க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க. To split with force, to cleave, rend, rive, to tear open, to crack, to fracture, to chop, கீற. 6. To blast, as rocks, to blow up, வெடிக்கச்செய்ய. 7. To cut, to part asunder, to break through, to force through—as an army, போழ. 8. To pierce, penetrate as a weapon, to perforate, துளைக்க. 9. [*fig.*] To dissipate, disperse—as darkness or ignorance, நீக்க. (*c.*)

பேச்சிலேபிளந்துவிட்டான். He has cut him up, beaten him in controversy.

அவன்வாயைப்பிளந்துவிட்டான். He is dead.

பிளந்தவாய், *s.* An open mouth, a large mouth. 2. Open mouthed—as oysters, or muscles. 3. The mouth or orifice of a wound.

பிளந்தெறிதல், *v. noun.* Beating in controversy.

பிளப்பு, *v. noun.* Splitting, blasting, tearing open; cutting through; piercing, perforating, *as the verb.* 2. Crevice, or cleft, as பிளவு.

பிளச்சு, *s.* That which is split or cleft. See பிளாச்சு. (*R.*)

பிளவு, *v. noun.* [*used substantively.*] Cleft, slit, crevice, gap, fissure, fracture, பிளப்பு. 2. A part, division, portion, piece, slice, பிரிவு. 3. [*vul.* பிளகு.] A piece of areca-nut *commonly* green, பாக்குத்துண்டு. 4. Half of a குன்றிமணி, as a weight. 5. Slit of a pen or reed, எழுதுகோலின்பிளப்பு. 6. [*in gram.*] Detachment, separation of words, as the nominative from its verb, &c., பிரித்திசைப்பு.

பாக்குவெட்டிப்பொருபிளவுகொடு. Cut the areca-nut and give me a bit.

பிளவுபட, *inf.* To be cloven, split, parted. 2. To be distinct, uncompounded, &c., as adjoining words in a phrase.

பிளவுபோடுதல், *v. noun.* Putting betel in the mouth for chewing.

பிளவுப்பிறை, *s.* The crescent moon.

இருபிளவானகுளம்பு, *s.* A cloven hoof.

பிளவை, *s.* Cancer, fungus, carbuncle, polypus, scrofulus, தீவினைச்சிலந்தி—Of this are different kinds: இறைப்பிளவை, இராசபிளவை, உச்சிப்பிளவை, கும்பப்பிளவை, பக்கப்பிளவை, பனிச்சைப்பிளவை, which see. (*c.*)

பிளவைபுறப்படுதல், *v. noun.* Coming out, appearing—as a cancer.

பிளாச்சு, *s.* Roof-lath, வரிச்சல். (*c.*) 2. Split pieces of wood for fuel, சிராய். 3. [*prov.*] Slice of palmyra root; a piece cut off, பனங்கிழங்கின்பிளவு; [*ex* பிள.]

பிளிர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To gargle the throat, கொப்புளிக்க. (*p.*)

பிளிறு, *s.* Noise, sound, roar, din of voices, ஆரவாரம். 2. An inarticulate sound, எழுத்தில்லாவோசை. 3. Mud, சேறு. (*சது.*)

பிளிறு, கிறேன், பிளிறினேன், வேன், பிளிற, *v. n.* To sound, roar, hum, buzz, ஒலிக்க. 2. To trumpet, as an elephant, யானைபிளிக்க. 3. To sound inarticulately, பேசாமலொலிக்க. 4. To tear open, rend, கீற. (*p.*)

பிளிறல், *v. noun.* Sounding; humming; rending, &c., *as the verb.*

பிளிரொலி, *s.* Trumpeting of an elephant, யானைபிளிறுமொலி.

பிள்—பிள்ளு, கிறது, விண்டது, [*vul.* புண்டது.] பிளும், பிள, *v. n.* To burst as a fruit, to open, to part, to be rent, பிள. 2. To be broken or crumbled, as bread, unburnt brick, or any friable body, தகர்பட. (*c.*)—*Note.* This root is changed to பிட், as பிட்கிறேன், பேட, பேன், க, in a transitive meaning. There is also another, as பிடுகிறேன், பிட்டேன், பிடுவேன், பிட.

இரண்டுபேருக்கும்பிட்டுக்கொண்டது. Both are in a state of disagreement.

பிண்டுவிழுதல், *v. noun.* Sloughing off, caving in.

பிள்ளாங்குழல், *s.* A reed-pipe. See பில்லாங்குழல். (*R.*)

பிள்ளை, *s.* Child, infant, male or female offspring, குழந்தை. 2. Son, மகன். 3. Youth, a lad, இளைஞன். 4. A title suffixed to the name of males in some families of the Vellalar caste, also a respectful appellative given to any male of this class, and sometimes to others, ஒர்பட்டப்பெயர். 5. The young of animals living on the branches of trees, as the monkey, &c., கோட்டில்வாழ்விலங்கின்பிள்ளை. 6. The young of the swine, deer, cat, hare, &c., பன்றி, மான், பூனை, முயலிவற்றின்குட்டி. 7. The young of the அன்றில் bird. 8. [*sometimes.*] The young of birds in general, பறவைக்குஞ்சுகளின்பொது. 9. The young of a cocoa-nut, தென்னம்பிள்ளை. 10. The setting, or planting, of any tree, நாற்று. 11. An affix to the names of some birds and animals, as அணிற்பிள்ளை, கீரிப்பிள்ளை, கிளிப்பிள்ளை. 12. [*usage.*] A small black bird, கரிக்குருவி. 13. The mainate, நாகணவாய். 14. The god Bhairava, வைரவன்; [*ex* பிள், bursting, as the amnios at birth or பிள.] (*சது.*)

பிள்ளைவாள்வருகிறார்கள். The master is coming—used by the Vellalas.

பிள்ளைக்கு விளையாட்டு சுண்டெலிக்குச்சீவன்போகிறது. It is play to the child, but death to the mouse.

பிள்ளாயெனல், *v. noun.* Speaking kindly to a junior.

என்பிள்ளாய். Well, child!

ஆண்பிள்ளை, *s.* A male child; a man, &c. See ஆண்.

பெண்பிள்ளை, *s.* A female child; a woman. See பெண்.

பிள்ளைகரைத்தல், *v. noun.* Procuring abortion.

பிள்ளைகொல்லி, *appel. n.* Infanticide. 2. A disease fatal to infants, ஒர்நோய். 3. A kind of assafœtida, ஒர்பெருங்காயம்.

பிள்ளைக்கட்டி, *s.* The fœtus in the early stages of pregnancy.

பிள்ளைக்கவி, *s.* A species of poetic composition. See பிள்ளைத்தமிழ்.

பிள்ளைக்கற்றாழை, *s.* A common species of கற்றாழை, used medicinally, being always green.

பிள்ளைக்கிணறு, *s.* A small well or hole sunk within a well.

பிள்ளைக்கைவளை, *s.* Bracelets worn by children.

பிள்ளைக்கோட்டை, *s.* A small fort, forming an entrance to the larger, சிறுகோட்டை. 2. A citadel.

பிள்ளைச்சோமன், s. A small சோமன் cloth for a boy or girl.

பிள்ளைத்தக்காளி, s. A shrub. See தக்காளி.

பிள்ளைத்தமிழ், s. A poem celebrating the different stages in the infancy and childhood of a hero, comprized in ten parts: 1. காப்பு, putting on the arm-rings, with magical rites; 2. செங்கீரை, first voluntary movements of the child compared to the motion of herbs by the breeze; 3. தால், lulling the child in the cradle with songs; 4. சப்பாணி, the first clapping of its hands; 5. முத்தம், kissing; 6. வாரானை, extending its hands and calling to be taken; 7. அம்புலி, showing the moon to the infant; 8. சிறுபறை, amusement of a small drum; 9. சிற்றில், making (in play) little houses, or trampling on those made by girls; 10. சிறுதேர், drawing little carriages.—*Note.* When a heroine is described, instead of the last three, the following are substituted, eighth கழங்கு, a kind of play with brass balls; ninth, அம்மானை, a curious play with balls; tenth, ஊசல், swinging. There are two more compositions, bearing this title, one by குமரகுருபரதேசிகர், in praise of மீனாட்சி, the goddess at Madura: the other, by பகழிக்கூத்தர், of the childhood of Skanda.

பிள்ளைத்தாய்ச்சி, s. A pregnant woman.

பிள்ளைத்தேங்காய், s. The best kind of cocoa-nut, reserved for planting, சாற்றுத்தேங்காய். (*Jaff.*)

பிள்ளைத்தேள், s. A centiped; Scolopendra, as மட்டைத்தேள்.

பிள்ளைப்பிறை, s. The youthful moon, இளஞ்சந்திரன். (*p.*)

பிள்ளைப்பூச்சி, s. A kind of insect, the Gryllus, உழுவான், which going into mud is not defiled—so the spiritual man.

பிள்ளைபெற, *inf.* To bring forth a child.

பிள்ளைபெறாதமலடி, s. A barren woman, *used of one who is cruel.*

பிள்ளைபெற்றவீடு, s. The house of a lying-in-woman, *considered ceremoniously unclean.*

பிள்ளைப்பேறு, v. noun. Child-birth.

பிள்ளைப்பேறுபார்த்தவள், s. A midwife.

பிள்ளையமஞ்சணீர்குடிக்கிறது, v. noun. Drinking turmeric water; i. e. adopting a child.

பிள்ளைமாபிரபு, s. [*prov.*] A nobleman, an eminent person, பெருமைமிகுந்தோன்.

பிள்ளைமார், s. [*pl.*] Respectable men, gentlemen; men of the பிள்ளை caste.

பிள்ளைமை, s. Childishness, puerility, babyhood, any thing infantile, பிள்ளைத்தன்மை.

பிள்ளையாண்டான், *appel. n.* A young man, a youth, boy, lad, வாலிபன்.

பிள்ளையார், s. The god Ganesa, *sometimes,* Skanda and Sambanda Mûrti.

பிள்ளையார்சதுர்த்தி, s. A fast on the fourth day of the new or full moon in honor of the god Ganesa.

பிள்ளையார்சுழி, s. A curve to represent பிள்ளையார். See சுழி.

பிள்ளையுண்டாகுதல், v. noun. Becoming pregnant.

பிள்ளைவங்கு, s. [*prov.*] A cavity or socket to receive the mast of a dhoney, பாய்மரம்நிறுத்துங்குழி.

பிள்ளைவண்டு, s. A young beetle, இளவண்டு.

பிள்ளைவிழுதல், v. noun. [*vul.*] Miscarrying, கருவழிதல்.

ஊத்தாம்பிள்ளை, s. A bladder. (*R.*) Sometimes ஊத்தாம்பெட்டி.

பிற. A particle, *used.* 1. As a pl. noun. meaning other things, some others, அஃறிணைப்பன்மைப்பெயர். 2. As an expletive, for euphony—as ஆயனேயல்லபிற, not a herdsman, அசைநிலைச்சொல். 3. As a plural appellative symbolic verb meaning the others, the rest, அஃறிணைப்பன்மைக்குறிப்பு. See பிறிது.

பிறவும். And so on, &c., மற்றவையும். (*சங்.*)

பிற, *adj.* Outer, foreign, other, மற்ற.

பிறதாரம், s. Another's wife.

பிறதேசம், s. A foreign country. See பரதேசம்.

பிறபாஷை, s. A foreign language, அன்னியபாஷை.

பிறநீங்கல். See புறநீங்கல்.

பிறநூன்முடிந்ததுதானுடன்படுதல், v. n. One of the thirty-two rules of criticism. See உத்தி.

பிறமுகம், s. A strange face.

பிறமுகம்பார்த்தல், v. noun. Committing adultery, விபசாரஞ்செய்தல்.

பிறவிடுதி, s. [*prov.*] Lodging near home, as one who leaves for a journey at an auspicious hour, and stops near to finish some business.

பிறவினை, s. Lust, desire, காமம். 2. Sin—oppos. to அறம், பாவம். 3. A transitive verb—oppos. to தன்வினை, intransitive.—It includes the passive voice by reflex action, but தன்வினை has of course no passive.

பிறகு, *adv.* Afterward, பின்பு. 2. Presently, shortly, சற்றேபொறுத்து. (*சது.*) 3. After, in place, behind, பின்புறமாய். 4. Backward, reluctant, தாமதமாய். 5. Below, inferior to, கீழாய்.

பிறகுவா. Come after a little time.

பிறகாலே. As பிறகே.

பிறகிட, *inf.* [*com.* பின்னிட.] To get behind, to fall in the rear, பின்னிடைக. (*சது.*) 2. To be passed by, பிறபட. 3. To be surpassed, excelled, தோற்க. 4. To be past, as time or an event, பின்னாக.

பிறகிட்ட, *part.* That which is passed, கழிந்த.

பிறகிட்டமாதம். The past month.

பிறகிட்டவருஷம். The past year.

பிறகே. [*with the gen. or dat.*] Behind, back, as என்பிறகே—எனக்குப்பிறகே, behind me.

பிறகேநிற்றல், v. noun. Standing back, being behind. 2. Being backward or reluctant. 3. Being shy, bashful.

பிறகேபோகுதல். Following one. 2. Being reluctant.

பிறக்கணி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [*improp. for* புறக்கணி.] To despise, to esteem lightly, to disdain, அவமதிக்க. Compare சிறக்கணி.

பிறக்கம், s. Fear, dread, அச்சம். 2. Branch of a tree, மரக்கொம்பு. (*சது.*)

பிற, க்கிறது, ந்தது, க்கும், க்க, v. n. To be born, produced. 2. To be derived from; to arise, &c. See சனி, r. 3. To form as oil, to be produced as heat by friction, as குடுபிறக்க. (*c.*)

பிறக்கையிலேமுடமானாற்பேய்க்கிட்டாற்தீருமா. If the person be lame by birth, will offerings to devils cure him? i. e. natural defects cannot be remedied.

பிறந்தநாள், s. The constellation under which one is born; also birth-day.

பிறந்தநாள்பனைநாள். One's birth-day and the day previous, as being both of them critical, சென்மநாளும் பனைநாளும்.

பிறந்தநாள்முதல். From birth.

பிறந்தபிறப்பு, s. One's peculiar nature, disposition, tendency; *commonly in a bad sense.*

பிறந்தபிறப்புக்கறியான். He has not known such a thing from his birth—*spoken of one's inexperience of men and things.*

பிறந்தபெருநாள். The day of one's birth according to the lunar asterism.

பிறந்தமேனி. Nakedness at birth. 2. (*fig.*) Genuine, that which is unadulterated.

பிறந்தகோலமாய். Stark nakedness.

பிறக்கு, s. Back-part, backside, பின்புறம். 2. Failure, deficiency, defect, குறை. 3. An expletive, அசைநிலைச்சொல். (*சது.*)

வருவார்தம்விருப்பம்பிறக்கொழிய. To satisfy the desire of those who come.

பிறக்கிட, *inf.* To get behind; to occur afterward, as பிறகிட. (*சது.*)

பிறங்கடை, s. A son, மகன். 2. A son-in-law or nephew; one who has the interest of the family at heart, சந்ததி. (*சது.*)

பிறங்கல், s. Height, eminence, உயர்ச்சி. 2. Hill, mountain, மலை. 3. A mount, hillock, சிறுமலை. 4. See பிறங்கு, v.

பிறங்கியல், s. An ancient forest, jungle, &c., முதுகாடு. (*சது.*)

பிறங்கு, s. Lines inside the joints of the fingers, விரல்ரேகை. (*சது.*)

பிறங்கு, கிறது, பிறங்கினது, ம், பிறங்க, v. n. To shine, glitter, glisten, இலங்க. 2. To be high, lofty, elevated, உயர. 3. To be great, exalted, dignified, illustrious, பெரிதாக. 4. To grow full, complete, abundant, நிறைய. 5. To sound, ஒலிக்க. 6. To come abroad, வெளிப்பட. (*p.*)

பிறங்கல், v. noun. Greatness, பெருமை. 2. Abundance, மிகுதி. 3. Sounding, &c., ஒலித்தல், &c., *as the verb.*

•பிறதிபன்னடி, s. [*in astron.*] Portion of the day remaining after conjunction or opposition of the sun and moon, expressed in *nalikai* and *vinalikai;* sometimes திதி. [*from Sa.* Pratipad. W. p. 564.]

பிறந்தகம், s. One's parental home, தாய்வீடு. (*சது.*) 2. A gift received by a bridegroom, with his bride, பரிசம். 3. A gift at the birth of the first child to its mother, by the grandmother, சீதனம்; [*ex* பிற, *v.*]

பிறந்தமானனாடு. One's native country.

பிறந்தவம், s. Birth, nativity, பிறப்பு. (*சது.*)

பிறந்தை, s. Birth, பிறப்பு. 2. Sin, பாவம். (*சது.*) 3. Nature, natural state, சுபாவம்; [*ex* பிற, to arise.]

**பிறப்பிக்க,** *inf. v. a.* To originate, to produce, உண்டாக்க. 2. To propagate, to generate, as ஜனிப்பிக்க. 3. To educe, to draw; to bring, as from a source; to derive, to deduce, வெளிப்படுத்த. (See தோற்றுவிப்பிக்க.) 4. To assist nature in child-birth, to perform the office of an accoucheur, or of a midwife, மருத்துவம்பார்க்க.

**பிறப்பு,** *v. noun.* Birth, nativity, transmigration, உற்பத்தி. (See பரம்பைக்குறுற்றம்.) 2. Origin, derivation, descent, தோற்றம். 3. Order or scale of beings, class of existences, including animals and vegetables, சாதி. 4. Fear, alarm, *as originating* பயம். 5. Closeness, thickness, denseness, நெருக்கம். 6. (c.) Beginning, commencement—as of the year, or month, தொடக்கம். 7. [*in combin.*] A person as characterized by any distinguishing quality, as அவனொருதெய்வப்பிறப்பு, இவனொருமிருகப்பிறப்பு. 8. A brother or sister, கூடப்பிறந்தவர். 9. [*in prosod.*] A technical term applied to a foot ending in மலர் with உ short, ஈற்றுக்குற்றுகரவாய்பாடு.—For the seven kinds of birth, see எழுபிறப்பு.

மறுபிறப்பு, *s.* Another birth. 2. [*in. Chris. use.*] The new birth. See மறு.

பிறப்பிடம், *s.* The place of origin, உறைவிடம். (சது.)

பிறப்பிலி, *appel. n.* Any thing innate. 2. One without brothers and sisters. 3. The deity, as unborn. (சது.)

பிறப்பிறப்பு, *s.* Birth and departure from the body as incident to the soul, till it attains union with the deity.

பிறப்பிறப்பில்லான், *appel. n.* The Supreme Being, கடவுள். (சது.)

பிறப்புத்தொந்தம், *s.* [*prov.*] Hereditary talents, virtues, vices, excellencies, failings, &c., natural capacity.

பிறப்புவழி, *s.* Family line, lineal descent. 2. Hereditary disposition.

பிறப்புவாசி, *s.* That which is natural or inherent, as faculties of the mind or the completeness or defects of the body, சுபாவம்.

பிறப்பொழுக்கம், *s.* Conduct proper for the tribes of men respectively.

**பிறர்,** *s.* Others, neighbors. See பிறன்.

பிறரைப்பிடித்தல், *v. noun.* Afflicting, or vexing others.

பிறர்கருமத்திற்குடன்படல் — பிறர்க்குப் பொருள்வழங்குதல் — பிறர்செல்வம்பெறுத்தல் —பிறர்துயர்க்கிரங்கல், *v. noun.* Beneficent acts. See தயவிருத்தி.

பிறர்தம்மதமேற்கொண்டுகளைதல்—பிறர் நூற்குற்றங்காட்டல். See மதம்.

பிறர்துயர்காத்தல். Helping others in their tribulations. See அறம்.

பிறர்பொருட்டனுமானம், *s.* An inference drawn for the benefit of others. See அனுமானம்.

**பிறவி,** *s.* Birth, nativity, பிறப்பு. 2. Origin, production, உற்பத்தி. 3. Natural state, சனனத்துவம். 4. Brother, sister, சகோதரம். 5. Transmigration, subjection of the soul to births, புனர்ஜென்மம்.

பிறவிக்கடல், *s.* The vast ocean of births, as சனனசாகரம்.

பிறவிக்குணம், *s.* Natural disposition.

பிறவிக்குருடன், *s.* One born blind.

பிறவிச்செல்வம், *s.* Ancestral riches or wealth.

பிறவித்துயர், *s.* Misery attendant on births, or transmigrations.

பிறவித்துவந்தம் — பிறவித்தொந்தம், *s.* Hereditary failings, as fretfulness, impatience, &c., as பிறப்புத்தொந்தம்.

பிறவித்துன்பம், *s.* Pain, sorrow, misfortune, &c., attending the state of birth.

பிறவிநீங்குதல், *v. noun.* Escaping from births, obtaining liberation—as the soul.

பிறவிநோக்கல் — பிறவிநோக்குதல், *v. noun.* Turning as the child in the womb, in the first process of birth, பிறக்கத்தொடங்குதல்.

பிறவிநோய், *s.* Natural diseases. 2. Birth regarded as a misfortune, பிறப்பாயநோய்.

பிறவிப்பயன், *s.* The end of one's birth—that which he should have in view—final bliss.

பிறவிப்பாஷாணம், *s.* Native arsenic—oppos. to வைப்புப்பாஷாணம், artificial.

பிறவிமயக்கு, *v. noun.* Delusion, stupor or aberration, as incidental to births. 2. Confusion of mind, &c., occasioned by sympathy with others.

பிறவியாரதம், *s.* [*prov.*] Abstinence from the use of flesh from birth, சுபாவத்திற் புலாலுண்ணாமை; [*ex* ஆரதம்.]

**பிறழ் — பிறழு,** கிறேன், பிறழ்ந்தேன், வேன், பிறழ, *v. n.* To change in form, aspect, color or quality, *commonly* for the worse, மாற. 2. To be disarranged, misplaced, irregular, ஒழுங்கின்மையாக. 3. To shine, to glitter, to coruscate, to twinkle, துலக்க. 4. To hate, to become alienated—as the mind; to be ill-disposed, வெறுக்க. 5. To tremble, to be tremulous, அசைய. 6. To say, to speak, சொல்ல. (சது.)

**பிறழ்ச்சி—பிறழ்வு,** *v. noun.* Change, variation, alteration in form or quality, மாறுகை. 2. Disarrangement, irregularity, disorder, ஒழுங்கின்மை. 3. Shine, glitter, coruscation, துலங்குகை. 4. Shivering, quaking, trembling, அசைவு. 5. A disliking, வெறுப்பு; [*ex* பிறழ், *v.*]

**பிறன்,** *s.* [*pl.* பிறர்.] Another person, some other one, any other one, மற்றையான். 2. A stranger, an alien, அன்னியன். 3. A neighbor, அயலான். (c.)

பிறன்பொருள், *s.* Property of another.

பிறன்கோட்கூறல், *v. noun.* [*in literature.*] Adopting the sentiments, &c., of another author, முப்பத்திரண்டுத்தியிலொன்று.

பிறனில் — பிறன்மனை, *s.* Neighbor's house, or ground. 2. [*fig.*] Neighbor's wife, அயலான்மனைவி.

பிறனில்விழையாமை, *s.* Not coveting another's wife. (குறள்.)

பிறன்மனையாள்மேலாசைப்பட, *inf.* To covet another man's wife.

பிறன்மனைவிரும்பாமை, *neg. v. noun.* Not desiring another man's wife.

**பிரூண்டு,** *s.* [*prov.*] Elsewhere, somewhere, வேறிடம்.

**பிரூண்டு,** கிறேன், பிரூண்டினேன், வேன், பிரூண்ட, *v. a.* [*prop.* பறண்டு.] To scratch with the nails, claws, &c., sometimes விரண்டு. (*Jaff.*)

அவள்நிலம்பிரூண்டிக்கொண்டிருக்கிறாள்........She was scratching the ground with her toe, or finger, from shame.

**பிறிதல்,** *v. noun.* [*prop.* பிரிதல்.] Separating, &c.

**பிறிது,** *appel. n.* Another thing, மற்றது. 2. The other thing, that which is different, வேறு. (*p.*)

பிறிதாராய்ச்சியணி, *s.* A figure of speech by which effects are said to take place without a cause, நிலைக்காரம்.

பிறிதினவிற்சி, *s.* A figure of speech by which a common term is supplied by a descriptive one, as இராகுமனைவிக்குத்துக்கத்தைத்தந்தவன், he that gave grief to the wife of இராகு; instead of saying he that slew இராகு, நிலைக்காரம்; [*ex* கவிற்சி.]

பிறிதின்கிழமை, *s.* [*in gram.*] The relation between possessor and possessed when the latter is not a part of the former—oppos. to தற்கிழமை. See கிழமை.

பிறிதுபடுபாட்டு, *s.* A poem, so constructed as to make different metres by different arrangement of the lines. See சித்திரகவி.

பிறிதுவிதி, *s.* Rule of exception.

பிறிதொடுபடான்றன்மதங்கொளல், *v. noun.* One of the seven principles of grammatical standard works, நூன்மதமேழிலொன்று.

**பிறித்தல்,** *v. noun.* [*prop.* பிரித்தல்.] Dividing, &c.

•**பிறியம்,** *s.* [*prop.* பிரியம்.] Pleasure, &c.

**பிறை,** *s.* The new moon, the crescent moon, இளஞ்சந்திரன்; [*ex* பிற, to produce.] 2. A female head ornament in form of the crescent moon, as சந்திரப்பிரபை. (c.) 3. A mode of using the hands in dancing. See கரவட்டணம்.

வளர்பிறை. The crescent moon.

தேய்பிறை. The decrescent moon.

பிறைகாணுதல், *v. noun.* Seeing the new moon for the first time. 2. Appearing as the crescent moon.

பிறைக்கொழுந்து, *s.* The new moon.

பிறைக்கோடு, *s.* Horns of the crescent moon. See கோடு.

பிறைதொழுதல், *v. noun.* Worshipping the new moon.

பிறைசூடி, *appel. n.* Siva as wearing the crescent moon on his head, சிவன். (சது.)

பிறைச்சிந்தாக்கு, *s.* A kind of neck ornament, ஈசுழுத்தணி.

பிறைமுகவாளி — பிறைமுகாஸ்திரம், *s.* An arrow with a crescent-like head, used in ancient wars, அர்த்தசந்திரபாணம்.

பிறைவடிவு, *s.* A crescent form; an arch, வில்வளைவு.

**பிற்கழிக்க,** *inf.* To give ground in battle, to flee, தோற்றோட. (*p.*)

**பிற்காலம்,** *s.* After-times, &c.—For this and similar words, see under பின்.

**பிற்றடி,** *s.* [*vul.* பித்தடி.] Latter part of a time, as பின்னடி.

**பிற்றல்,** *s.* [*for. also* பித்தல்.] The neck of a hoe, மண்வெட்டிக்கழுத்து.

**பிற்றல்,** *v. noun.* Retiring, being defeated, as பின்றல். (*p.*)

**பிற்றை**, *s.* The morrow, the next day, பின்னைநாள். 2. Afterward, after, பிறகு. (*p.*)

**பிற்றைத்தினம்-பிற்றைநாள்**, *s.* The next day.

**பினத்தல்-பினத்துதல்-பினற்றல்-பினற்றுதல்—பிதற்றல்**, *v. noun.* [*vul. properly* பிதற்றல்.] Talking nonsense, chattering.

•**பினாகம்**, *s.* The bow of Siva, சிவன்வில். 2. The trident, திரிசூலம். 3. A shower of dust, மண்மாரி. W. p. 536. PINAKA. 4. A gem-neck-lace, மணிமாலை. (சது.)

**பினாகபாணி**, *s.* Siva. See பினாகி, 1.

•**பினாகி**, *s.* Siva, as armed with a bow, சிவன். W. p. 536. PINAKIN. 2. One of the thirty-one Rudras, உருத்திரரிலொருவன். 3. The பெண்ணை river. (சது.) 4. The name of a Rishi, ஒருரிஷி. See முனி.

**பினாகிநதி — பினாகினி**, *s.* The river பெண்ணை.

**பினைதல்**, *v. noun.* [*improp. for* பிசைதல்.] Kneading, mashing; paining in the stomach. (*c.*)

**பின்**. [*adv. and prepo.*] After, afterward, பிற்காலம். 2. Behind, hinderpart, backward, பின்னிடம். 3. (சது.) Succeeding, following, subsequent, கடை.—oppos. to முன். (*c.*) 4. [*poetice.*] A form of the seventh case, as கண், or இடத்தில், ஏழனுருபிலொன்று; thus காதலிபின்சென்றதம்ம. 5. *s.* Cause, source, காரணம். 6. Greatness, eminence, பெருமை. 7. Way, road, வழி.

அவன்போனபின். After he had gone.

**பிற்காரியம்**, *s.* That which is to come.

**பிற்காலம்**, *s.* After-times, பிற்படுசமயம். 2. Succeeding times, after one's decease, வருங்காலம்.

**பிற்கூறு**, *s.* The latter part or stage of any process or act, பின்பங்கு.

**பிற்கொழுங்கோல்**, *s.* The twenty-sixth lunar asterism, உத்திரட்டாதி. (சது.)

**பிற்சாமம்**, *s.* The fourth or last watch of the night, கடைக்கூறுசாமம்.

**பிற்பகல்**, *s.* Afternoon.

**பிற்பக்கம்**, *s.* The back side, as பின்பக்கம்.

**பிற்படுதல்**, *v. noun.* Getting behind, *commonly in time, sometimes in place.*

**பிற்படை**, *s.* Rear of an army, as பின்படை.

**பிற்பாடு**, *adv.* After, afterwards, பிறகு.

**பின்கட்டு**, *s.* The hands pinioned behind, also பின்கட்டுமாறுய்க்கட்டுதல். 2. The second or back apartment of a house, வீட்டின்பின்புறம். See கட்டு.

**பின்காட்டுதல்-பின்கொடுத்தல்**, *v. noun.* Turning the back going away—*sometimes in displeasure*, புறங்காட்டல். 2. Turning the back to a foe; yielding in games of competition, in dispute, &c., தோற்றுப்போகுதல்.

**பின்கூரை**, *s.* The hinder part of a roof, வீட்டின்பின்பக்கத்துமேற்புறம்.

**பின்கொக்கி**, *s.* A clasp for the neck fastened behind.

**பின்கொம்பு**, *s.* The hinder pole of a palankeen, தண்டிகைபின்பிற்புறத்துக்கொம்பு.

**பின்சந்ததி**, *s.* Posterity.

**பின்சந்து**, *s.* Back part of the hips, இடுப்புச்சந்து. 2. The hinder part or rump of a beast. 3. The back street.

**பின்சரிவு**, *s.* Afternoon, decline of the sun, பின்னேரம்.

**பின்செல்ல**, *inf.* To follow another. 2. To be obedient, submissive, வழிபட. 3. To entreat, to supplicate in a cringing manner, கெஞ்ச.

**பின்தட்டு—பின்றட்டு**, *s.* Short beams across the stern of a dhoney. 2. Stern of a vessel. 3. Back strap of a harness.

**பின்தலை — பின்றலை — பிற்றலை**, *s.* The stern of a ship.

**பின்தளை—பின்றளை**, *s.* Fetters for the hind legs of a cow when milking.

**பின்பக்கம்—பிற்பக்கம்**, *s.* The back side, the rear. 2. Period of the decreasing moon, அபரபக்ஷம். 3. Latter part, latter stage, கடைப்புறம்.

**பின்பத்தி**, *s.* The latter row. See பத்தி.

**பின்பற்றுதல்**, *v. noun.* Following one. 2. Imitating. 3. As பின்றொடர்தல்.

**பின்பனி — பின்பனிக்காலம்**, *s.* The latter dewy season, in February and March. See பருவம்.

**பின்பிறந்தாள்**, *appel. n.* A younger sister, தங்கை. (சது.) 2. Lukshmi as a younger sister, இலட்சுமி.

**பின்பிறந்தோன்**, *appel. n.* Younger brother, தம்பி.

**பின்புத்தி**, *s.* Want of wisdom, folly, indiscretion. 2. After-thought, recollecting when it is too late. See பிராமணன்.

**பின்புறணி**, *s.* Slander, speaking ill of a person in his absence.

**பின்புறம்**, *s.* Hinder side, the rear, back part.

**பின்போடுதல்**, *v. noun.* Putting off, postponing, deferring, தாமதித்தல்.

**பின்மடி**, *s.* The hinder part of an udder, ஆவின்பின்மடி. 2. Any thing tied or folded in the cloth behind, உண்மடி.

**பின்மழை—பின்மாரி**, *s.* Latter rains; latter part of the rainy season.

**பின்முடிச்சு**, *s.* Any thing tied up in the corner of the cloth, and tucked in behind.

**பின்முடுகுவெண்பா**, *s.* A வெண்பா, which has a quick measure in the last two feet. See முடுகு.

**பின்வரி**, *s.* The next line.

**பின்வருகிறது**, *appel. n.* That which will happen in after-times. 2. That which follows.

**பின்வருநிலை**, *s.* A figure of speech, ஓரலங்காரம்.

**பின்வருவிளக்கணி**, *s.* A figure of speech, ஓரலங்காரம்.

**பின்வாங்கல்—பின்வாங்குதல்**, *v. noun.* Receding, drawing back, retiring, பின்போதல். 2. Retreating in battle, giving way in a contest, declining as a competitor, flinching, தோற்குதல். 3. Declining a bargain, engagement or enterprize, பின்னிடுதல். 4. [*Chris. usage,*] Backsliding, ஒழுக்கங்குன்றல்.

**பின்வைத்தல்**, *v. noun.* Leaving behind—as a widow or orphans, விட்டுவிடல். 2. Deferring, postponing, delaying, தாமதப்படுத்தல். 3. Excluding, excepting, omiting in giving invitations; deserting, தள்ளல்.

**பின்றொடரி**, *appel. n.* A thorny shrub. See தொடரி.

**பின்றொடர்தல்**, *v. noun.* Following, pursuing, as பின்பற்றுதல்.

**பின்றோன்றல்**, *s.* A young brother, தம்பி; [*ex* தோன்றல்.] (சது.)

**பின்னங்கால்**, *s.* The hind leg, or foot, of a beast. 2. The hinder part of the foot.

**பின்னடி**, *s.* Latter part—as of a book, a season, time or a thing; that which is subsequent, கடைசி. 2. Future time, futurity, வருங்காலம். [*com.* பின்னுடி.] 3. Posterity, சந்ததி.

பின்னடிக்குத்தெரியும். You will see hereafter.

**பின்னடியார்**, *s.* Descendants, posterity.

**பின்னடைப்பன்**, *appel. n.* Obstruction of urine in cattle, பசுவிலேறுபிணியொன்று.

**பின்னணி**, *s.* Rear. See அணி.

**பின்னணியம்**, *s.* The hinder part or the stern of a ship or vessel, தோணியின் பின்புறம்.

**பின்னணை**, *s.* The back-yard house. 2. (*c.*) The child next after the eldest. See முன்னணை.

**பின்னதுநிறுத்தல்**, *v. noun.* [*in literary works.*] One of the thirty-two rules of criticism, முப்பத்திரண்டுத்திபிலொன்று.

**பின்னந்தலை**, *s.* Back of the head.

**பின்னந்தொடை**, *s.* Hinder part of the thigh; hind quarter of mutton, &c.

**பின்னரை**, *s.* The latter half of the stars in a sign of the Zodiac; [*ex* அரை.]

**பின்னர்**, *adv.* After, afterward, subsequently, பின்பு. (*p.*)

**பின்னர்**, *s.* As பின்னவர்.

**பின்னவர்**, *s.* [*pl.*] Those who come after. 2. The caste of Sudras, சூத்திரர். (சது.)

**பின்னவன்**, *s.* A younger brother, தம்பி. (சது.)

**பின்னவையகத்திணை**, *s.* The rule for foretelling consequences See அகப்பாட்டுறுப்பு.

**பின்னனை**, *s.* One's mother's sister, or a step-mother, சிறியதாய்; [*ex* அனை.]

**பின்னுக—பின்னுலே**, *adv.* Afterwards. 2. Moreover. 3. And again.

பின்னுலேயாகட்டும். Let it be done afterwards.

**பின்னிட**, *inf.* To retire, to go back. 2. To retreat. 3. To get behind. 4. To yield, to be defeated. 5. To be reluctant. 6. To recoil, rebound. 7. To be past, to be too late.

**பின்னிடைய**, *inf.* To flinch, to fall back, to retreat; to yield.

**பின்னிரக்கம்**, *s.* Relenting from previous anger, &c.

**பின்னிருட்டு—பின்னிருட்டுக்காலம்**, *s.* Dark only in the latter part of the night. See இருட்டு.

**பின்னிலவு**, *s.* The moon in its decrease.

**பின்னிளவல்**, *s.* A younger brother, தம்பி—as இளவல். (சது.)

**பின்னிற்றல்**, *v. noun.* Standing back, being reluctant to give, or to contend, பிறகிடல். 2. Begging humbly and cringing, கெஞ்சல். 3. Yielding, submitting, தாழ்தல்.

**பின்னுக்குவருதல்**. Coming after, or late.

பின்னும், *adv.* Afterwards. 2. Moreover. 3. Again, as இன்னும்.

பின்னே, *adv.* After, afterward; behind in time or place, பிறகே.

பின்னேரம், *s.* Afternoon, சாயங்காலம்.

பின்னை, *s.* A younger sister, தங்கை. 2. Lukshmi as younger sister, இலக்குமி. 3. A younger brother, இளையவன். (சது.) 4. *adv.* Moreover, besides, furthermore, consequently. 5. After, afterward, பிறகு. பின்னையென்ன. What further?

பின்னைகேள்வன் — பின்னைபிரான், *s.* Vishnu as husband of Lukshmi, விஷ்ணு.

பின்னைநாள், *s.* The next day.

பின்னையும், *adv.* Moreover.

பின்னொட்டே, *adv.* Presently, afterwards. 2. Behind.

பின்னொக்குதல், *v. noun.* Looking or turning back; retreating, பின்பார்த்தல்.

பின்னோன், *s.* [*pl.* பின்னோர்.] A younger brother, தம்பி. (சது.) 2. One of the Sudra caste. 3. (சங்.) A close imitator of an original work, வழிநூல்செய்வோன்.

பின்பு, *adv.* [*used with geni. and dat.*] After, afterward, subsequently, பிறகு. (சது.)

பின்று, கிறேன், பின்றினேன், பின்றுவேன், பின்ற, [*improp.* பிந்து.] To retreat, get behind, in time or place, பிறகிட. 2. To be below in rank or quality, &c., பிற்பட்டிருக்க.

பின்றல், *v. noun.* Retreating, being defeated. (சது.)

பின்றை, *s.* The next day, the morrow, பின்னைநாள். (சது.) 2. *adv.* After, afterward, subsequently, பின்பு; [*ex* பின்.]

பின்னகம், *s.* A braided head of hair, மயிர்முடி; [*ex* பின்னு.] (சது.)

•பின்னம், *s.* A break, tear, rent, severance, cut, பிளவு. 2. Division, detachment, separation, dismemberment, பிரிவு. (See பின்னுபின்னம்.) 3. Unnatural distortion of a limb, disfiguration, deformity, உறுப்புக்குலைவு. 4. [*in arithm.*] A fraction, கீழ்வாயிலக்கம். W. p. 620. B'HINNA. 5. Change for the worse, degeneracy, deterioration, வேற்றுமை. 6. Frustration, disappointment, மோசம்போகுகை. 7. Rupture, disunion, difference, variance, break, பிணக்கு. 8. Misbehaviour, failure, slip, deviation or severing in a line of duty, முறைகேடு. 9. Perversion, opposition, disagreement, முரண். (See விகற்பம்.) 10. (சது.) Dust, powder as the pollen of flowers, பராகம்.

பின்னகுணனம், *s.* [*in arithmetic.*] Multiplication of fractions, கீழ்வாயிலக்கப்பெருக்கு.

பின்னசங்கலனம்—பின்னசங்கலிதம், *s.* [*in arithmetic.*] Addition of fractions, கீழ்வாயிலக்கங்கூட்டுகை.

பின்னபாகாரம், *s.* [*in arith.*] Division of fractions, கீழ்வாய்ப்பிரிப்பு.

பின்னபேதகம்-பின்னபேதம், *s.* Failure in performance of a promise, சொற்கேடுறுமை. 2. Difference, disagreement, disharmony, விரோதம்.

பின்னப்படுதல், *v. noun.* Being distorted, dismembered, deformed. 2. Being frustrated, disappointed.

பின்னப்படுத்துதல், *v. noun.* Severing, dismembering. 2. Distorting, altering the natural position of any member of the body. 3. Frustrating, disappointing.

பின்னவியகலிதம், *s.* [*in arith.*] Subtraction of fractions, கீழ்வாய்க்கழிப்புக்கணக்கு.

காரியம்பின்னமாயிற்று. The business has failed, met with ill-success.

பின்னல், *v. noun.* Weft, web, texture, braiding, platting, matting lace-work, wreath, twine, பின்னியது. 2. Entanglement, tangle, hamper, சிக்கு. (See சன்னல்பின்னல்.) 3. Entangled locks of hair, சடை; [*ex* பின்னு.] (*c.*)

பின்னல்மோதிரம், *s.* A curious kind of ring.

பின்னல்வேலை, *s.* Net-work, braiding, platting, matting.

•பின்னாசத்தி, *s.* Visible nature distinct from the deity—oppos. to அபின்னசத்தி.

•பின்னிதம், *s.* [*prov.*] Difference, division, opposition, distance, பேதம். 2. [*vul. for* பின்னம், *which see.*]

பின்னிதம்பண்ண, *inf.* To treat with coldness; to be backward, noncompliant.

பின்னிதம்பேச, *inf.* To object, to express disapproval.

பின்னு — பின், கிறேன், பின்னினேன், வேன், பின்ன, *v. a.* To plat, to braid, to lace, to net, to knit, to weave, to entwine, to interweave, to wattle, to wreath, முடைய. (*c.*)

பின்னை, *s.* [*prop.* புன்னை.] A beautiful flower-tree, whose seeds yield an oil of commerce, Calophyllum Inophyllum, *L.* 2. A younger sister, &c. See under பின்.

பின்னையெண்ணெய், *s.* The pinnay oil, for medicine and burning.

## பீ

பீ. A syllabic letter from ப் and ஈ.

பீ, *s.* Excrement, fœces, மலம். *low usage.*

ஆப்பீ, *s.* Cow's dung. [*poet.*]

பன்றிப்பீ, *s.* Pig's dung. [*not of other animals.*]

மூக்குப்பீ, *s.* The mucus of the nose.

பீக்குடல், *s.* The straight gut, மலக்குடல். (*Old Dic.*)

பீநண்டு, *s.* Common crabs. See நண்டு.

பீநாறி, *appel. n.* A stinking person.

பீநாறிச்சங்கு, *s.* A hedge shrub of an offensive smell, as சங்கங்குப்பி, Clerodendron increne.

பீநாற்றமடிக்க, *inf.* To stink as human ordure.

பீநாறிமரம், *s.* [*sometimes* பீநாற்றமரம்.] A tree smelling like ordure having medicinal properties, Sterculia fœtida, *L.* (*Drury's Bot.*)

பீயாக்க — பீயாக்கிப்போட, *inf.* To corrupt, to reduce to dung.

பீவண்டு, *s.* A beetle, Scarabœus femarius.

பீகம்—பேகம், *s.* (*Arab.*) Mohammedan princess, or a lady of rank, பெருமாட்டி.

பீக்கருவேல் *s.* A tree, ஓர்வேலமரம், Mimosa farnesiana.

பீக்கலாட்டம், *s.* [*Tel.* పీకలాటము.] Impediment, hinderance, trouble, தொந்தரவு. (*Old Dic.*)

பீங்கான், *s.* (*for.*) Porcelain, Chinaware, earthen ware, ஓர்பாத்திரம்.

•பீசம், *s.* Seed, விதை. 2. Testicle, அண்டம். 3. Semen virile, சுக்கிலம். 4. Offspring, progeny, சந்ததி. 5. Pericarp of a lotus, தாமரைப்பொகுட்டு. 6. As பீசாட்சரம், which see. 7. Cause, origin, source, மூலம். W. p. 795. VEEJA.

பீசகணிதம், *s.* [*improperly for* வீசகணிதம், *which see.*] Algebra.

பீசதீட்சை, *s.* Spiritual illumination by the guru or deity; of two kinds, சபீசதீட்சை, நிர்ப்பீசதீட்சை, which see under தீட்சை.

பீசநியாயம், *s.* Source of wisdom.

பீசாங்குரநியாயம், *s.* Arguing, or reasoning, in a circle, நியாயவகையாம்; [*ex* அங்குரம், sprout.]

பீசாட்சரம், *s.* The mystical letter, or syllable, which forms the essential part of the mantra of any deity, மூலவெழுத்து.

பீசைப்புல், *s.* A grass, Panicum antidotale. (*R.*)

பீச்சாக்கத்தி—பீச்சாங்கத்தி, *s.* A hand-knife, a jack-knife, சிறுகத்தி. See பிச்சுவா.

பீச்சாங்குழல், *s.* A syringe. See பிச்சாங்குழல். (*c.*)

பீச்சாங்கொள்ளி, *s.* A timid man, பயமுடையோன். (*Colloq.*)

பீச்சு, கிறேன், பீச்சினேன், வேன், பீச்ச, *v. a.* [*com. for* பிச்சு.] To eject watery stools, மலங்கழிய. 2. To squirt, சிட்டிக்க.

பீச்சுவிளாத்தி, *s.* A medicinal shrub which has an offensive smell, ஓர்பூடுமுள்ளசெடி.

பீச்சைக்கால், *s.* [*vul.*] Left leg, இடதுகால்.

பீச்சைக்கை, *s.* [*vul.*] Left hand, இடதுகை.

•பீடணம்—பீஷணம், *s.* Fear, horror, அச்சம். W. p. 621. B'HEESHAN'A.

•பீடம், *s.* A seat, stool, chair; a raised seat, ஆசனம். W. p. 537. PEET'HA. 2. A throne, சிங்காசனம். (சது.) 3. An altar, பலிபீடம். 4. (*Tel.*) A small table, பலகை. 5. [*in geom.*] Complement of a segment.

பீடக்கால், s. Legs of a table or seat.

பீடங்கொடுக்க, inf. To give one a seat.

பீடமேறுதல், v. noun. Taking a seat. 2. Being inaugurated, as the order of the சங்கராசாரியம்.

•பீடாரம், s. Temple, any place of worship, ஆலயம். (சது.)

•பீடனம், s. Pain, affliction, distress; inflicting pain, வருத்தம். W. p. 539. PEED'HANA.

•பீடாபஞ்சகம்—பீடாபயம். See பீடை.

•பீடிகை, s. A seat, stool, little table, as பீடம். 2. Abode of an ascetic or Rishi, முனிவர்ஆசனம். 3. A jewel-casket, அணிகலச்செப்பு. 4. A plate, or tray, for holding flowers, பூந்தட்டு. 5. Market, market-place, கடைவீதி. (சது.) 6. As பீட்டிகை.

பீடி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. a. To give pain, to afflict, to annoy, வருத்தப்படுத்த. 2. To exert evil influences, as malignant planets, கிரகத்துன்புறுத்த; [ex பீடை.]

பீடிப்பு, v. noun. Paining, distressing, வருத்துகை.

பீடு, s. Greatness, dignity, superiority, honor, பெருமை. 2. Might, strength, valor, வலி. (சது.) (p.)

பீடுநடை, s. A bold, majestic gait.

•பீடு, s. Affliction, sorrow, as பீடை. 2. (Tel. usage ...) Decay, deficiency, scarcity, குறைவு.

பீடுகாலம், s. A time of scarcity, கருப்புக்காலம்.

•பீடை, s. Affliction, sorrow, distress, misery, துன்பம். W. p. 538. PEEDA. 2. Inauspicious, as a season, unlucky, காலகேஷம்.

பீடாபஞ்சகம், s. Danger of affliction from five principal things as ascertained by astrology, ஐவகைப்பீடை.

பீடாபயம், s. Danger of disease, known from astrological calculation.

பீடைகழிதல் — பீடைநிவாரணமாதல், v. noun. Being passed—as a season of misery, sorrow, &c.

பீடைபிடித்தல். Being seized with sorrow, &c.

பீடைமாதம், s. The unlucky month; i. e. December, மார்கழிமாதம்.

பீடையானகாலம், s. An unlucky, gloomy, or miserable time.

தேகபீடை, s. Bodily suffering.

மனோபீடை, s. Mental sorrow.

பீட், adj. (for.) Barren, uncultivable, சாகுபடியாகாத. [Govt. usage.]

பீட்டகம், s. An office, தொழில். (Old Dic.)

பீட்டன், s. [com. பூட்டன், fem. பீட்டி.] A great-grand-father, இரண்டாம்பாட்டன். 2. A great-grand-son, இரண்டாம்பேரன்.

பீட்டி, s. [Hind.] The double breast of a garment, as உள்பீட்டி, the part within; மேல்பீட்டி, the part without. (Old. Dic.)

•பீட்டிகை—பீடிகை, s. [Tel. ...] Preface, introduction, முகவுரை.

பீட்டை, s. [com. பூட்டை.] A tender corn-ear after the first harvest, பயிரின் கதிர்; [ex பீள்.] (சது.)

•பீதகம், s. Yellow orpiment, பொன்னரிதாரம். W. p. 538. PEETAKA. 2. A fragrant root, வெட்டிவேர். 3. As பீதம், 1, 2, 3, which see.

பீதகன், s. The planet Jupiter, as gold colored, வியாழம். (சது.)

•பீதம், s. Gold color, பொன்னிறம். 2. Gold, பொன். 3. One of the four kinds of unguents. See சாந்து. W. p. 538. PEETA. 4. Turmeric, மஞ்சள். 5. Fear, dread, அச்சம். W. p. 621. BHEETA.

பீதகதலி, s. (St.) A red plantain, செவ்வாழை.

பீதசாரகம், s. The வேங்கை tree, Pterocarpus. See கணி. (சது.)

பீதசாசவர்த்தம், s. A gem of a golden color. See இரத்னவர்த்தம்.

பீதவண்ணம், s. Gold color, பொன்னிறம்.

பீதன், s. A fearful, timid man, அச்சமுள்ளோன். (சது.)

பீதாம்பரம், s. Gold-cloth, பொன்னாடை. 2. Yellow or gold colored cloth, silk, &c., பொன்னிறத்துகில்; [ex அம்பரம்.]

பீதாம்பரன், s. Vishnu as wearing a silk garment, திருமால்.

•பீதி, s. Fear, அச்சம். W. p. 621. B'HEETI.

•பீதை, s. The மருதோன்றி tree, that bears yellow flowers, பொன்னிறப்பூவுடைமருதோன்றிமரம், Lowsonia. 2. Turmeric, the Indian saffron plant. See மஞ்சள்; [ex பீதம்.]

பீத்தல், s. [vul.] A rent. See பீற்றல்.

பீத்து, s. [corrupt. of பீறு.] Boast, swaggering, வீம்பு.

பீத்து, கிறேன், பீத்தினேன், வேன், பீத்த, v. n. To swagger, to boast, to hector, வீம்புபேச. (Colloq.)

பீத்தை, s. [Port.] Tape, fillet, நாடா.

பீநாறி. See பீ.

பீப்பா—பிப்பா, s. (for.) A vessel, a cask, மரப்பாத்திரம்.

•பீமம், s. Fearfulness, dread, அச்சம். [also வீமம்.] W. p. 621. B'HEEMA. 2. Bulkiness, பருமை.

பீமநாதம், s. A loud or fearful sound, பயவொலி.

•பீமன், s. [also வீமன்.] Bhîma, second son of Pandu and supposed son of Vayu, god of the wind, பாண்டவரைவர்க்குள்ஒருவன். 2. The father of Damiandi, தமயந்திபிதா.

•பீரங்கி, s. A cannon, பெருவெடிக்குழாய்; [ex பீ, formidable et அங்கி, fire.]

பீரங்கிக்காரன், s. An artillery man.

•பீரம், s. The பீர்க்கு gourd, Cucumis. 2. The பூவரசு or Portia tree, Poplar-leaved hibiscus. 3. The வாகை tree, Mimosa. (சது.) 4. (Tel.) Strength, power. See வீரம்.

பீரம்பேணிப்பாரந்தாங்கு. Take a load to suit your strength. (Avv.)

பீராணி, s. A priming wire, or priming, இரஞ்சகம். (R.)

பீராய், கிறேன், ந்தேன், வேன், பீராய, v. a. To sift, to feel and pick out with the fingers, பொறுக்க. 2. To make a thorough search and pick up even little things, ஆராய. (c.)

பீறிடு, கிறது, பீறிட்டது, ம், பீறிட, v. n. To stream, flow, or gush out, as milk, blood, &c., பீறோட. (c.)

பீறிட்டுப்பாய்தல் — பீறிட்டோடுதல், v. noun. Streaming out, as milk, blood, &c.

•பீரு, s. A timid person, பயங்கொள்ளி. W. p. 621. BHEERU. 2. Eye-brow. See புருவம்.

பீருகன், s. A timid man, a coward, அச்சமுடையோன். (சது.)

பீர், s. (Hind.) A shrine taken in procession by the Mussaulmen.

•பீர், s. Fear, timidity, அச்சம். W. p. 621. BHEE, BHEERU. 2. Change of color through love-sickness. பசலை. 3. The பீர்க்கு gourd. 4. (c.) Women's milk as streaming or oozing from the breast, முலைப்பால்பீர்.

பீரோடல் — பீரோடுதல் — பீறிடுதல், v. noun. Streaming out as milk, &c.

பீர்க்கு, s. A kind of gourd.—Of பீர்க்கு are three varieties—as கருக்குப்பீர்க்கு, a dark edible kind with four sided fruit, Cucumis acutangulus; நுரைப்பீர்க்கு—பாற்பீர்க்கு, a whitish edible kind, Cucumis sulcatus; பேய்ப்பீர்க்கு, a wild bitter kind.

பீர்க்கங்கூடு, s. Dry pod of the பீர்க்கு.

பீர்ச்சாங்குழல், s. [improp. பீச்சாங்குழல்.] A syringe.

பீர்ச்சு, கிறேன், பீர்ச்சினேன், வேன், ச்ச, v. a. [vul. பீச்சு.] To squirt, to syringe.

பீர்ச்சல், v. noun. Squirting, syringing, பீச்சுச்செய்தல். 2. Ejecting watery stools, as infants or birds, கழிதல்.

•பீலகம், s. [also பிபீலிகை.] An ant, எறும்பு. W. p. 539. PEELAKA.

பீலி, s. Peacock's tail, மயிற்றோகை. 2. A peacock, மயில். 3. The large circular fan, ஆலவட்டம். 4. The smaller circular fan, விசிறி. 5. (c.) A kind of toe-ornament, கால்விரலணிவிசேஷம். 6. Drum in general, வாத்தியம். 7. The larger lance, பெருஞ்சவளம். 8. Gold, பொன். 9. A small trumpet, சிறுசின்னம். 10. A wall, மதில். 11. [prov.] Dice for casting lots, ஓட்டக்கட்டு. 12. A water-trough or spout for irrigation, நீர்பாய்கொட்டு.

பீலிக்கண், s. Spots on a peacock's tail, மயிற்றோகைக்கண்.

பீலிக்குஞ்சம், s. A bunch of peacock's feathers used as a whisk, மயிலிறகிற்செய்த சாமரம்.

பீலிக்குடை, s. An umbrella made of peacock's feathers. 2. A bunch of peacock's feathers, மயிற்குஞ்சம்.

பீலிக்கொட்டு, s. A trough, as பீலி, 14.

பீலித்தண்டு, s. A kind of missile weapon, எறிபடை. (சது.)

பீலிபோடுதல், v. noun. Casting lots.

பீலிப்பட்டை, s. A large basket for irrigation, பெரியஇறைகூடை.

•பீலி, s. The first leaf or shoot of a palmyra, பனங்குருத்து. 2. The heart of the palmyra root, being the embryo of the future leaf, பனங்கிழங்கினுட்குருத்து. W. p. 539. PEELU.

•பீலு, s. An atom, அணு. W. p. 539. PEELU. 2. Fear, அச்சம்; [from Sa. Bheelu.]

பீலுகன், s. A timid man, as பீருகன்.

பீலுவாதம், s. A system which assumes that the world was formed from atoms, as பீலவாதம்.

பீலுவாதி, s. One of that school.

பீழித்தல், v. noun. Afflicting, distressing, paining, வருத்துதல்; [ex பீழை.] (குறள்.)

•பீழை, s. [as பீடை.] Distress, affliction, pain, துன்பம். (சது.)

•பீளை s. Rheum, gum or secretion from the eyes, கண்மலம். (c.) See பீலம்.

பீளைசாறி, appel. n. A kind of herb, ஓர்பூடு.

பீளைசாறுதல், v. noun. A forming of rheum about the eyes.

பீளைசாறினகண். Blear-eyed.

பீள், s. Embryo; fœtus, சினை. 2. Young ears of corn, முற்றாக்கதிர். (p.)

பீறு, s. [prov. vul.] Anus, குதம்.

பீறு, கிறேன், பீறினேன், வேன், பீற, v. a. To tear, rip, rend, slit, கிழிக்க. 2. To lacerate, to tear to pieces, கீற. 3. v. n. To be torn, கிழிய. (c.)

பீறல், v. noun. Tearing, rending, slitting, கிழித்தல். 2. As பீற்றல்.

பீறுண்ண, inf. To be torn, rent, ripped open, கிழிபட. (c.)

பீறுண்டுசெத்தான். He was torn to pieces and died.

பீற்றல், s. A rent, rip, slit, கிழியல். 2. Rag, tatter, கந்தை; [ex பீறு, v.] (c.)

பீற்றற்சீலை. A ragged cloth.

பீற்றல்பொருத்துதல். Mending a rent. 2. [fig.] Supplying wants, &c. (in contempt.)

•பீனசம், s. [vul. பீனிசம்.] An ulceration in the head attended with offensive discharges of mucus through the nostrils. W. p. 539. PEENASA.—It is of different kinds as இரத்தபீனசம், சிரப்பீனசம், சீப்பீனசம், and மண்டைப்பீனசம், which see.

•பீனம், s. Corpulence, bulkiness, புஷ்டி. W. p. 539. PEENA. 2. Duck-weed, பாசி.

## பு

பு. A syllabic letter composed of ப் and உ.

புகடு, s. [prov.] Raised margin of a fire-place, அடுப்பின்சுற்றுப்புறம்.

புகட்டு, கிறேன், புகட்டினேன், வேன், புகட்ட, v. a. To put in, to infuse, to instil, to pour into a beast's or childs' mouth, ஊட்ட. [vul. பொட்டு.] 2. To strike in, beat in, as rain, உட்செலுத்த. 3. To impress on the mind, மனதிற்பதிக்க. 4. To communicate or instil good or bad principles, அறிவுறுத்த.

குழந்தைக்குப்பால்புகட்டினாள். She poured the milk into the child's mouth.

புகர், s. Tawny color, a brown, or cloud color, கபிலநிறம். 2. Fault, defect, blemish, குற்றம். 3. The planet Venus, சுக்கிரன். 4. Color, நிறம். (சது.) 5. A spotted or mixed color, புள்ளிநிறம்.

புகர்முகம், s. An elephant, as having a spotted face, யானை. (சது.)

புகர்வு, s. Boiled-rice, சோறு. (சது.)

புகலி, s. The name of a country, சீகாழி.

புகலு—புகல்,கிறேன், புகன்றேன், வேன், புகல, v. a. To say, to declare, to speak, to state, சொல்ல. (சது.)

புகலல்—புகறல், v. noun. Speaking, saying, சொல்லல்.

புகலூர், s. The name of a country, ஓரூர்.

புகல், s. Refuge, asylum, தஞ்சம். (c.) 2. Body, உடல். 3. A receptacle for paddy, made of straw and covered with clay, commonly குதிர். 4. Entrance, ingress, பிரவேசித்தல். 5. Victory, வெற்றி. 6. Means, an expedient, உபாயம், used in the south; [ex புகு.] 7. A word, சொல். (சது.)

புகலிடம், s. Refuge, retreat, asylum, as புகல். 2. Town, village, ஊர். (சது.)

புகல்சொல்ல, inf. To give excuses.

புகழ், s. Praise, panegyric, eulogy, adulation, applause, commendation, கீர்த்தி. 2. Fame, renown, glory, celebrity, மேன்மை. (c.)

புகழாப்புகழ்ச்சி, s. Praise, flattery, &c., couched in terms of dispraise. See அலங்காரம்.

புகழாளன், s. A renowned person, கீர்த்தியுடையோன்.

புகழேந்தி, appel. n. A poet cotemporary with கம்பன் and ஒட்டக்கூத்தன். He possessed a masterly talent for composing வெண்பா verses, and was styled the tiger of poets. His works are நளவெண்பா, இரத்தினச்சுருக்கம், அல்லிஅரசாணிமாலை. 2. As புகழாளன்.

புகழ்கூறல், v. noun. Panegyrizing, flattering. See மொழி.

புகழ்நாட்டுதல் — புகழ்நிறுத்துதல், v. noun. Establishing one's reputation, or fame.

புகழ்படைத்தல். Getting applause. (p.)

புகழ்வீசுசந்திரன், s. Native or crude camphor, பச்சைக்கருப்பூரம்.

புகழ் — புகழு, கிறேன், புகழ்ந்தேன், வேன், புகழ, v. a. To praise, extol, to laud, to eulogize, to panegyrize, துதிக்க. 2. To flatter, to applaud, பாராட்ட. (c.)

புகழ்நிலை, s. One of the thirty-two rhetorical figures. See அலங்காரம்.

புகழ்ந்தேத்தல், v. noun. Extolling.

புகழ்பொருள், s. That which is panegyrized, or praised.

புகழ்பொருளுவமையணி, s. A rhetorical figure, ஓர்அலங்காரம்.

புகழ்வோர்-புகழுவோர், appel. n. Encomiasts, panegyrists.

புகழ்தல்—புகழுதல், v. noun. Praising. See சுவபுஞ்ஞியம்.

புகழ்ச்சி, v. noun. [used substantively.] Praise, adulation, fame, &c., as புகழ்—oppos. to இகழ்ச்சி. For the compounds see தற and வீண்.

புகழ்ச்சிமாலை, s. A panegyric on the female sex, composed in the வஞ்சிப்பா metre. See பிரபந்தம்.

புகழ்வு, s. Praise, applause, as புகழ்ச்சி. (p)

புகறல், v. noun. Saying, as புகலல். 2. Indicating, குறித்தல்; [ex புகல்.] (சது.)

புகாமை, s. [negative.] A state of non-entry, பிரவேசியாமை; [ex புகு.]

புகார், s. Mist, fog, haze, பனிப்படலம். 2. Duskiness, dinginess, brownness, dimness, கபிலம். 3. A rainy cloud, மழைபெய்யுமேகம். 4. Cloudiness, an over-cast sky, மந்தாரம்; [ex புகர்.] 5 (சது.) A sea-port town, or village; the mouth of an ebbing river, கழிமுகம். 6. The town of Caveripatnam, காவிரிப்பூம்பட்டினம்.

புகார்நிறம், s. Dusky color, brown, swarthy.

புகார்பிடித்தல், v. noun. Taking a faintish blue, in the staining of cloths.

புகார், s. [Hind.] An evil report; a talk, used in the south.

புகிடி, s. (Tel. బుగడ.) A golden pendant worn by women and hanging at the upper part of the ear, மாதர்காதணியிலொன்று.

புகு—புகுது, கிறேன், புகுந்தேன், [com. புக்கேன்.] வேன், புக, புகுத, v. n. [com. புகு, vul. பூரு, poetic புக்கு.] To enter, to penetrate, to go into, as into a hole or narrow place, to come in, நுழைய. 2. To enter upon, to undertake, to commence, to engage in or enter upon, தொடங்க. 3. To issue, to flow out, to extend—as the sight, செல்ல. 4. [fig.] To come to a mean or abject condition.

குலம்புகுந்தான். He has adopted caste—said in contempt of one who has become a Christian.

யானெனதில்லம்புகேன். I will not enter my house.

இலங்கைபுக்கான். He has gone to Lanka.

புகப்பண்ண, inf. To cause to enter, as புகுத்த.

புகுந்துபார்க்க, inf. To look down into a hole, as நுழைந்துபார்க்க.

புகுடி, s. Gateway, வாயில். 2. A salt-river, or arm of the sea, கழி. (சது.)

•புகுடி, s. [a contrac. of பிருகுடி.] Eyebrow, புருவம்.

புகுதி, s. A small wicket-gate, or other entrance, நுழைவாயில்; [ex புகுது, v.] (சது.)

புகுத்த, *inf.* To cause to enter, to put in, to insert, செலுத்த.

புகுபுகெனல், *v. noun.* [*Tel. com.* குபுகுபெனல், குபீர்குபீரெனல்.] Tossing with velocity, as water, &c., விரைவுக்குறிப்பு. 2. Coming in puffs as wind, ஒலிக்குறிப்பு.

புகுபுகென்றுகாற்றடிக்கிறது. The wind comes in puffs, blasts or whiffs.

புகை, *s.* Smoke, fume, தூமம். 2. Mist, haze, பனிப்படலம். 3. Vapor, exhalation, steam, fumigation, சாவி. (*c.*) 4. Sign of the guardian of the south-east, தென்கீழ்த்திசைப் பாலன்குறி. 6. The distance of a yojana, யோசனைதூரம். (*சது.*)

புகைகட்ட, *inf.* To smoke, to fumigate parts of the body, for local ailments, as for tooth-ache, impaired gums, &c. 2. [*fig*] To impart a gold or silver color by fumigation.

புகைகாட்ட, *inf.* To smoke, to fumigate for a disease. 2. To expel flies, devils, &c., by fumigation. 3. To apply or infuse incense. 4. To tincture or impregnate with smoke.

புகைகுடித்தல்—புகையிலைகுடித்தல், *v. noun.* Smoking tobacco.

புகைக்கப்பல், *s.* A steam vessel.

புகைக்காடு, *s.* A great smoke, a thick mist, a fog.

புகைக்கூடு, *s.* A chimney. 2. A balloon.

புகைக்கூண்டு, *s.* An explosive shell thrown from a mortar, or the hand; a rocket.

புகைசுற்றுதல்—புகைசூழுதல், *v. noun.* Being smoked, as food.

புகைச்சுருட்டு, *s.* A cigar.

புகைநாற்றம்—புகைமணம், *s.* Smell of smoke.

புகைபடுதல்-புகைபிடித்தல்-புகையுண்ணல். *v. noun.* Being smoked, having a smoky taste or smell. 2. Being discolored, blackened, &c., with smoke.

புகைப்படலம், *s.* An expanse or volume of smoke, vapor, fog, cloud.

புகைப்பரண், *s.* A loft over a fire-place for placing things on, that are to be smoked.

புகையிலை, *s.* [*vul.* பொயிலை.] A leaf of tobacco; (*lit.*) the smoke-leaf.—The different sorts of tobacco are, வேதாரணியத்துப்புகையிலை, a superior kind of tobacco cultivated at Vedaranyam; பந்தர்புகையிலை, Bunder tobacco, or that of Masulipatam; காம்புப்புகையிலை, tobacco with a part of its stem; கோர்வைப்புகையிலை, tobacco strung on a line; மேலைமங்கலத்துப்புகையிலை, the best kind from Melaimangalam.

புகையிலைகட்டுதல், *v. noun.* Making up packs of tobacco. 2. Laying up tobacco.

புகையிலைகுடித்தல் — புகையுண்ணல், *v. noun.* Smoking tobacco.

புகையிலைக்கறள், *s.* The soot of the tobacco, &c. See கறள்.

புகையிலைச்சிப்பம், *s.* A pack of tobacco.

புகையிலைச்சுருட்டு-புகையிலைச்சுற்று, *s.* Tobacco-roll, cigar.

புகையிலைபோடுதல். Chewing tobacco.

புகையிலைப்பொடி, *s.* Snuff.

புகையூட்டுதல், *v. noun.* Smoking, fumigating the hair with odors, perfuming. 2. Tincturing, impregnating or medicating with smoke.

புகையழுதல். Forcing the ripening of fruit by fumigation, பழுக்கச்செய்தல். 2. Gilding.

புகையூறல்—புகையூறல்—புகையுறை, *s.* Condensed smoke, as ஒட்டடை. (*c.*)

புகைவிடுதல், *v. noun.* Whiffing, emitting smoke from the mouth, &c.

நறும்புகை—பூம்புகை, *s.* Perfumed incense, smoke. See நறு and பூ.

புகை, கிறது, ந்தது, யும், ய, *v. n.* To smoke, to fume, to reek, புகையெழ. 2. To emit vapor or steam, to be exhaled, ஆவியெழ. 3. [*fig.*] To begin to be spoken of, or made public, to get air, to come out, செய்திவெளிப்படத்தொடங்க. 4. To burn as the heart, to be chagrined, to have ill-will, to fume with anger, to be furious, மனமெரிய. 5. [*prov.*] To become unfruitful as grain, to wither as plants, பயிர்தீய. 6. To be ruined as a family, குடிகாசமாக. (*c.*)

எனக்குத்தொண்டைபுகைகிறது. I feel irritation in the throat.

கண்புகைகிறது. My sight is dim.

இரசம்புகைந்தபோயிற்று. The quicksilver is all gone to smoke.

புகைதல்—புகைவு, *v. noun.* Smoking, fuming, reeking, ஆவிபற்வு. 2. Steaming, exhaling, ஆவியெழுகை. 3. Fuming with anger, சினக்குறிப்பு.

புகை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To cause to smoke, to fumigate, புகைபச்செய்ய. (*c.*)

புகைத்தல், *v. noun.* Fuming with anger, being in a fury, heated with rage, சினக்குறிப்பு. (*சது.*)

புகைப்பு, *v. noun.* Smoking, fumigation, smouldering, புகையெழச்செய்கை.

புகைச்சல், *s.* Smoking, smoke, fumigation, haze, vapor, steam, புகை. 2. Darkness, obscurity, dullness, dimness, gloominess, luridness, இருள். 3. Dimness of sight, பார்வைமழுங்குகை. 4. Slight burning in the stomach from disease or sorrow; gnawing of hunger, வயிறெரிவு. 5. [*fig.*] Coming out, getting publicity, செய்திவெளிப்படத்தொடங்குகை. 6. Umbrage, chagrin, heart-burning, ill-will, எரிச்சல். 7. Irritation of the throat inducing coughing, இருமல்; [*ex* புகை, *v.*] (*c.*)

புகைச்சல்போட,*inf.* To make a smoke to drive away musquitoes, &c.

புகைப்பிக்க, *inf.* To cause to smoke, to cause a fumigation of tobacco in order to blacken it, புகைபச்செய்ய.

புகைவரி, *s.* Tax on houses, மனைவரி.

புக்ககம், *s.* The house of a wife's mother, மாமியார்வீடு; [*ex* புகு.] (*p.*)

புக்கல், *v. noun.* Entering, engaging in, புகுதல்; [*ex* புகு.] (*சது.*)

புக்கி, *s.* The பிராய் tree, பிராய்மரம், Trophis.

புக்கில், *s.* A house, abode, home, புகுந்திருக்குமிடம், வீடு. 2. (*நாலடி.*) Body as connected with transmigration, a temporary abode for the soul, உடம்பு; [*ex* புகு, enter.] (*சது.*)

புக்குப்புக்கெனல், *v. noun.* Burning with a crack or sound, ஒலிக்குறிப்பு.

புக்கை, *s.* [*prop.* புற்கை, *which see.*] Rice-pap, &c.

புங்கமரம்—புங்கு, *s.* [*cor. of* புன்கமரம்.] A tree, Dalbergia.

•புங்கம், *s.* The feathered or lower part of an arrow, அம்பிற்குதை. 2. An arrow, அம்பு. W. p. 539. PUNK'HA. 3. Height, elevation, உயரம். 4. Cloth, சீலை. (*சது.*)

புங்கானுபுங்கம், *s.* Volleys of arrows in succession, அம்பின்பின்அம்புதொடுக்கை.

•புங்கவர், *s.* Celestials, supernals, வானோர். 2. Gods—as Brahma, Vishnu, Siva, கடவுளர். (*சது.*)

•புங்கவன், *s.* The Supreme Deity, கடவுள். 2. A guru, குரு. 3. Buddha, புத்தன்; [*ex Sa. Pungava*, pre-eminent.] (*சது.*)

•புசங்கம், *s.* A snake, as புயங்கம். W. p. 622. B'HUJANGA.

•புசம், *s.* [*com.* புயம்.] Arm, shoulder. W. p. 621. B'HUJA. 2. The arm of a geometrical figure. See திரிபுசம்.

புசல், *s.* A storm, as பிசல். (*Beschi.*) 2. A plastering brush, குச்சமட்டை.

•புசாகோடி—புசாபலம். See புசை.

•புசிகரணம், *s.* Eatables, victuals, provisions, தின்பன.

புசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* [*vul.* பொசி.] To eat, to feed, to take food, உண்ண. 2. [*fig.*] To experience the fruits of actions, as the soul in its births, வினைப்பயனனுபவிக்க; [*ex* B'HUJA. W. p. 621.]

புசிப்பன, *appel. n.* Eatables, உண்பன.

புசிப்பு, *v. noun.* Eating, feeding, taking food, உண்ணுகை. 2. Food, meat, உணவு. 3. Experiencing the fruits of former actions, அனுபவிக்கை. 4. Good fortune or destiny, அதிட்டம். 5. Enjoyment of any good by destiny though against right, ஊழாலனுபவிக்கை.

புசிப்பாளி, *s.* A lucky person, one who has happiness by virtue of former deeds, அனுபோகி.

புசிப்புக்குச்சாதனமானகருவிகள், *s.* Members and faculties of body and mind, as adapted to experience the fruits of former actions. See சாதனம்.

புசிப்பிக்க, *inf.* [*also* புசிப்பூட்ட.] To supply with food, உண்பிக்க. 2. [*fig.*] To impart joys and sorrows, as the Deity; to cause the soul to experience the fruits of its former actions, வினைப்பயனனுபவிக்கச்செய்ய.

•புசை, *s.* An arc of a circle in its first or third quadrant. 2. Two arcs of the ecliptic, ninety degrees each, reckoning from the first of Aries, and the first of Libra, முதலாமிராசிமுதன்மூன்றுமேழமெட்டாமொன் பதாமிராசி.

புசாகோடி, *s.* An arrangement to reduce the mean anomaly to the equation table, which extends only to three degrees, and three-fourths. The reduction is as follows: 1. If the mean anomaly exceeds three signs subtract it from six signs; 2. If it exceeds six signs subtract from it six signs; 3. If it exceeds nine signs subtract it from twelve signs.—*Note.* The Zodiac being divided into four equal sections, the first and third are each called *Pusei*, and the second and fourth each *kodi*; *Pusei* only is to be used, hence the argument is frequently expressed by *Pusei* only.

புசாந்தரசந்திரன், s. Moon's longitude corrected for errors arising from the use of the numbers, 3031 and 248 in determining the longitude.

புசாபலம், s. The result obtained from the above process, புசகோடிக்கேந்திரமிருந்தின தொகை.

•புச்சம், s. A tail, வால். W. p. 539. PUCHCHHA. 2. A scorpion, தேள். (சது.)

புச்சஅமாவாசி, s. [loc.] The remainder of the day of New moon.

புச்சஸ்தலம், s. The posteriors.

•புஷியராகம்—புஷ்பராகம், s. A precious stone, the topaz. See புட்பராகம்.

•புஷ்டி—புட்டி, s. Stoutness.—Note. For this and similar Sanscrit words, as புஷ்பம் see the Tamil spelling, புட்டி, புட்பம்.

•புஸ்தகம்—பொஸ்தகம், s. A book. See புத்தகம்.

•புஞ்சம், s. Collection, heap, quantity, திரட்சி. W. p. 539. PUNJA. 2. A certain number of threads. See குஞ்சம். (R.)

•புஞ்சவனம், s. A ceremony observed on the third lunar month after conception, or when quickening takes place, கருக்கொண்டமூன்றாம்திங்களிற்செய்சடங்கு. W. p. 539. PUMSAVANA. 2. A symbolic ceremony, to promote conception in which images of gods and goddesses are brought together, and conception feigned, கருத்தரித்தற்குச்செய்யும்புணர்க்குறி.

•புடம், s. Refining metals, or sublimating medicines by fire, or sometimes by placing them in the sun, or among grain, உலோகங்களையும், மருந்துகளையுஞ்சுத்திசெய்கை. 2. [fig] The refining or sublimating vessel as placed in the fire. W. p. 539. PUT'A. 3. (Sa. Sp'hut'a.) True daily motion of a heavenly body ascertained by calculation, புடபுத்தி. 4. Celestial longitude, as சத்தப்புடம், இலக்கினபுடம். 5. Place, location, spot, இடம். 6. Side, outside, புறம். (சது.)—Note. In sublimating medicines different tests are given according to the number of எருட்டி, or pieces of dried cowdung used for the fire; as காடைப்புடம், the quail-test, with one piece; கவுதாரிப்புடம், the partridge, with three; குக்குடபுடம், the fowl, with ten; வராகபுடம், the hog-test with twenty, or the greater; கஜபுடம், with fifty; கஜபுடம், the elephant-test with a hundred, or, as most say, one thousand, when all will be finished. There are also சூரியபுடம், exposure to the sun; தானியபுடம், purification of oils by placing them in grain; பூமிபுடம், or பூடம், of salts by placing them in the earth, in bottles.

புடமிட—புடம்போட—புடம்வைக்க, inf. To refine metals, or sublimate medicines.

புடவிக்கேபம்-புடவிட்சேபம்-சுத்தவிக்கேபம்—சுத்தவிட்சேபம், s. [also புடசரி.] The true celestial latitude of a heavenly body. 2. Apparent distance of the centres of the sun and moon at conjunction, being the sum (or difference, as the case may be), of the three விக்கேபம், சசிவிக்கேபம், இராவிக்கேபம், and சித்தியவிக்கேபம்.

புடவித்தல், v. noun. [prov. vul.] Swelling, as from a blow, புடைப்பு.

•புடல், s. (Tel. పొట్ల.) A creeping plant. See புடோல்.—There are different varieties of this plant, கொத்துப்புடல், a low species, not parasitical; சாப்புபுடல், a plant; பன்றிப்புடல், a kind whose fruits are very short and thick; பேய்ப்புடல், a very bitter kind, Tricosanthes laciniosa.

புடலங்காய் — புடோலங்காய், s. The serpent-cucumber.

•புடவி, s. [corrupted from Sans. Prit'hivi, Tel. పుడమి.] The earth, பூமி. (சது.)

•புடவை, s. Cloth, சீலை. 2. Clothing, dress, vesture, garment, வஸ்திரம்; [from Sa. Spud'a, to clothe.]

புடவையெழுதுதல், v. noun. Painting chintz.

புடவைகளைய, inf. To cast off cloths soiled or ceremonially impure. See களை, v.

புடவைக்குஞ்சம், s. A bunch or flounce of cloth; a hanging tassel.

புடவைத்தொழில், s. The cloth-trade.

•புடை, s. Side, adjacent spot, பக்கம். 2. Place, room, location, site, இடம். Compare புடம். 3. A snake or rat's hole, பாம்புமுதலியவற்றின்வளை. (Tel. usage.) 4. Protuberance in a fruit, the side of a well, கிணற்றிலுடையபுடைப்பு. 5. A sign of the seventh or local ablative case, ஏழனுருபு.

அடுப்புப்புடை, s. A fire place. (R.)

புடைகொள்ளல், v. noun. Swelling or dilating, புடைத்தல். 2. Forming as a protuberance near a sore.

புடைக்கருத்து, s. A similar or collateral idea, proximate or correlative meaning, இனம்பற்றியகருத்து.

புடைசூழ்தல், v. noun. Surrounding, accompanying, or attending a great person, &c., sometimes புடைவருதல்.

புடைநூல், s. A work written in support of another, as சார்புநூல்.

புடைபெயர்ச்சி — புடைபெயர்தல், v. noun. Deviation from a line or path, வழிவிலகுகை. 2. Change of state, whether by improvement or deterioration, நிலைமாறுகை. 3. [in gram.] Action or attribute of the noun as expressed by the verb, கருத்தாவின்தொழில். 4. Development of an abstract idea or quality in the form of a verb, வினைப்பகுதிபுடைபெயர்வு.

புடைபெயர்ச்சித்தொழிற்பெயர், s. One of the two classes of verbal nouns, that which has terminations annexed to the root, as செய், செய்கை. See தொழிற்பெயர்.

புடைபெயர்ச்சிவினை, s. Verbs in conjugation, as நடக்கிறான், வந்தான்—oppos. to தனிவினை.

புடைவிழுதல், v. noun. Occuring as a lateral cavity in a well, or protuberance in a fruit.

புடை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To sift, to separate dust, or large from small particles, in a fan, முறத்தாற்புடைக்க. 2. To beat or strike; to beat a drum, அடிக்க. (c.) 3. To cuff, to strike one's self, or another, on the head with the fist or knuckles, குட்ட. 4. To pierce, or punch, குத்த. 5. To flap or clap with the wings, பறவைசிறகடிக்க. 6. (R.) To move, அசைக்க. 7. v. n. (c.) To swell, to dilate, to rise, to puff up—as from a stroke or blow, வீங்க. 8. To grow large, as the breasts, or a local swelling in the sides of an animal after eating, பருக்க. 9. To come to light, to be exposed, divulged, talked of, வெளிப்பட.

புடைப்பு, v. noun. A swelling, protuberance; becoming known; striking, sifting, &c., as the verb.

புடையன்-புடையன்பாம்பு, s. The beaver-snake. See விரியன். (c.)

•புடைவை, s. Cloth, சீலை. (சது.)

•புடோல், s. [com. புடல்.] A kind of plant, the snake-gourd, நாய்பொடி, Trichosanthes anguina; in Port. Patola.—Note. For the derivatives, see புடல்.

•புட்கரம்—புஷ்கரம், s. Sky, heaven, ether, ஆகாயம். 2. Water, நீர். 3. A sacred bathing place, தீர்த்தம். 4. The lotus flower, தாமரைப்பூ. 5. [also புஷ்கரத்தீவு.] The fifth of the seven continents. See தீவு. 6. The Indian crane, குருகு. 7. Tip of an elephant's trunk, யானைக்கைநுனி. 8. A sword, கட்கம். W. p. 545. PUSHKARA. 9. Fulness as புஷ்கலம், நிறைவு. 10. Mouth of a vessel, பாத்திரத்தின்வாய். 11. A kite, பருந்து. (p.)

புஷ்கரன், s. A king who played at dice with Nala and took his kingdom, நாசன்.

•புட்கரிணி—புஷ்கரிணி, s. A tank with lotus flowers, தாமரைத்தடாகம். W. p. 545. PUSHKARIN. 2. A large tank near a temple, கற்சுதைவாவி. (சது.)

•புட்கலம்—புஷ்கலம், s. Fullness, perfection, largeness, நிறைவு. [com. புஷ்கலம்.] W. p. 546. PUSHKALA. 2. One of the nine kinds of clouds that appear at the destruction of the world. See மேகம்.

புட்கலாவர்த்தம், s. Clouds that rain gold. See மேகம், s.

•புட்கலை—புட்கலாதேவி, s. Wife of the god Aiyanar, ஐயனார்தேவியர்ளொருத்தி.

புட்கலைமணாளன், s. Aiyanar as husband of புட்கலை. (சது.)

•புட்களம்—புஷ்களம், s. Fullness as புட்கலம். (c.)

புஷ்களமாய் எண்ணெய்தேய்த்தான். He anointed me with oil, to my satisfaction.

புட்குரல், s. Chirping or noise of birds, பறவைக்குரல். 2. [in erotics.] Voices of certain kinds of birds, imitated during coition; [ex புள்.]—Note. The eight birds are, காடை, quail; கௌதாரி, partridge; கிளி, parrot; குயில், koil bird; மயில், peacock; அன்னம், swan; கோழி, hen; புறு, dove.

•புட்டகம், s. Cloth, சீலை. (சது.)

•புட்டம், s. A crow, காக்கை. 2. Fullness, நிறைவு. 3. Cloth, சீலை. (சது.)

புட்டல், s. A load carried on the head, especially by those who drive bullocks of burden, எருத்துக்காரர்தலைச்சுமை. (Beschi.)

புட்டி s. (Tel. పుట్టి.) A quantity equivalent to seven hundred and fifty Madras measures, ஓர் அளவு. 2. A land-measure of about eight acres. 3. As புட்டில்.

•புட்டி—புஷ்டி, s. Stoutness, robustness, பருமை. 2. Fatness, plumpness, increase, கொழுப்பு. W. p. 546. PUSHT'I.

சப்தபுஷ்டியும்அர்த்தபுஷ்டியுமுள்ளசாஸ்திரம். A science containing excellent truths elegantly expressed.

புட்டிகாந்தன்-புஷ்டிகாந்தன், s. Ganesa, கணேசன்; [ex புஷ்டி, prosperity et காந்தன், lord.]

புஷ்டியானசரீரம், s. A stout, plump body.

புஷ்டியுள்ளவன், appel. n. A fat man.

புட்டில், s. [*also* புட்டி.] A basket for irrigation, இறைகூடை. 2. A basket in general, கூடை. (சது.) (See பெட்டி.) 3. Sheath, scabbard, case, cover, உறை. 4. A thimble, அங்குஷ்டபாண். 5. Boxing gloves, கையுறை. 6. A winnowing fan, முறம். 7. [*loc.*] A bottle.

புட்டிற்கூடை, s. [*improp.* புட்டிக்கூடை.] A small basket.

புட்டிவெல்லம், s. Jaggery, coarse sugar, in moulds of palmyra leaves, கருப்புக்கட்டி. (*R.*)

புட்டை, s. (*Tel.* బుట్ట.) Rupture, hernia. See பீட்டை.

புட்டுத்திருப்பி, s. A plant, Cissampelos. See வட்டத்திருப்பி.

•புட்பகம்—புஷ்பகம், s. The car of Kuvêra, குபேரனுதி. 2. A bracelet of precious stones, இரத்தினகங்கணம். W. p. 546. PUSHPAKA. 3. A car adorned with flowers, புட்பகவிமானம். 4. The conch or shell of Sakadeva, the youngest of the Panduva princes, சகாதேவன்சங்கு.

•புட்பதந்தம்—புஷ்பதந்தம், s. The male elephant of the north-west. See திக்கியானை. W. p. 546. PUSHPADANTA.

•புட்பம் — புஷ்பம், s. A flower, a blossom, பூ. 2. The menses, குசுமம். 3. Specks on the eyes, albugo. See பூ. W. p. 546. PUSHPA. *For* கைபுஷ்பம், *see in its place.*

புஷ்பகீடம், s. A bee, an insect, which takes honey from flowers, தேன்வண்டு.

புஷ்பகேது, s. Kama, the Hindu cupid, whose banner is of flowers, மன்மதன். (சது.)

புஷ்பசயனம், s. A bed of flowers.

புஷ்பசரன் — புஷ்பசராஸனன் — புஷ்பசாபன்—புஷ்பதனுவன், *appel. n.* Kama, the Hindu cupid, மன்மதன்.

புஷ்பசாதிகள், s. Different kinds of flowers.

புஷ்பசாரம்—புஷ்பரசம், s. The honey of flowers, பூந்தேன்.

புஷ்பஞ்சாத்த, *inf.* To put single flowers on the head, or other parts, of an idol.

புஷ்பஞ்சொரிதல், *v. noun.* Casting flowers in worship, or respect.

புஷ்பதடாகம்—புஷ்பவாவி, s. A tank with flowers.

புஷ்பந்தொடுத்தல், *v. noun.* Making a garland of flowers.

புஷ்பத்திரவம் — புஷ்பத்திராவகம், s. Saccharine matter exuding from flowers, பூந்தேன். 2. Infusion or distillation of flowers, பூவிலிறக்கிய.

புஷ்பமஞ்சரி, s. A cluster of flowers, பூங்கொத்து.

புஷ்பமழை-புஷ்பமாரி-புஷ்பவருஷம், s. Showers of blossoms, as strewed in respect or worship.

புஷ்பமாலை, s. A flower garland.

புஷ்பமெடுக்க, *inf.* To pluck flowers, especially for a temple, as பூவெடுக்க.

புஷ்பரதம், s. As புஷ்பவிமானம். 2. The nectar or honey of a flower, பூந்தேன்.

புஷ்பரேணு, s. The pollen of a flower, பூஞ்சுண்ணம்; [*ex* இரேணு.]

புஷ்பலாவன்—புஷ்பலாவகன், s. One born of a brahman mother by a weaver; whose employment is to gather flowers, and make and sell garlands, மாலைவிற்போன். W. p. 546. PUSHPALAVA.

புஷ்பவனம், s. A flower-garden, as சித்திரவனம்.

புஷ்பவிமானம், s. A vehicle adorned with flowers, *commonly* for an idol at a ceremony, பூந்தேர்.

புஷ்பாசனன், s. Brahma, as seated on a lotus, பிரமன்; [*ex* ஆசனம்.]

புஷ்பாசனி, s. Lukshmi, இலக்குமி. 2. Sarasvati, சரஸ்வதி.

புஷ்பாஞ்சலி, s. Worship of an idol after placing flowers before it, பூச்சொரிந்துவந்திக்கை; [*ex* அஞ்சலி.]

புஷ்பாஸ்திரன், s. Kama, the Hindu cupid, as bearer of the flowery arrows, மன்மதன்; [*ex* அஸ்திரம்.]

புஷ்பிதை, s. A girl grown marriageable, இருதுவானவள்.

•புட்பராகம் — புஷ்பராகம், s. [*also* புஷ்பராகம்.] A topaz. See இரத்தினம். W. p. 546. PUSHPARAGA.

புட்பி — புஷ்பி, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To flower, to blossom, மலர.

புணரி, s. The sea, கடல். 2. A wave, அலை; [*ex* புணர், joining. i. e., uniting of waters.] (சது.)

புணர், s. Newness, recency, புதுமை. (சது.)

புணர் — புணரு, கிறேன், புணர்ந்தேன், வேன், புணர, *v. n.* To join, to unite, to combine, இசைய. 2. [*in gram.*] To combine or coalesce, as sounds, letters or words, எழுத்துச்சந்திக்க. 3. To copulate, கலக்க. 4. [*fig. prov.*] To approve itself to the mind, to be understood, விளங்க. 5. To associate with, to have recourse to, இணங்க. மணம்புணர்தல். Marrying. (*p.*)

புணரக்காட்டுதல் — புணரச்சொல்லுதல், *v. noun.* Explaining, making one's self understood.

புணர்ச்சி, *v. noun.* Combination, junction, union, conjunction, இசைவு. 2. Coition, சையோகம். 3. [*in gram.*] Coalescence or combination of letters or words, சந்தி. 4. Connexion of the different parts of a subject, இணக்கம்.

புணர்ச்சிபண்ணுதல், *v. noun.* Copulating.

புணர்ச்சியின்மகிழ்தல், *v. noun.* Rejoicing in conjugal union, அகப்பொருட்டுறையிலொன்று.

புணர்ச்சிவிகாரம், s. Addition, loss, or change, of letters in the combination of words, சொற்றொடரின்வருவிகாரம்—oppos. to செய்யுள்விகாரம்.

புணர்வு, *v. noun.* Combination; coition; connexion, as புணர்ச்சி. 2. Body, as புணர்ப்பு. (சது.)

புணர் — புணர்த்து, க்கிறேன், கிறேன், த்தேன், புணர்த்தினேன், ப்பேன், த்துவேன், புணர்க்க, புணர்த்த, *v. a.* To combine, to connect, இசைக்க. 2. To combine letters or words, எழுத்துப்புணர்த்த. 3. To contrive, to excite, to concert, to plot, தந்திரஞ்செய்ய. 4. To put on ornaments, ஆபரணமணிய. 5. [*fig. prov.*] To explain, to adapt language to the understanding, as உணர்த்த.

புணர்த்திச்சொல்லுதல், *v. noun.* Adapting language to the comprehension. 2. Explaining.

புணர்நிலை, s. [*in rhet.*] A figure by which the same epithets or attributes are applied to two or more different subjects, ஓரலங்காரம்.

புணர்ப்பு, *v. noun.* Coition, joining, சையோகம். 2. Combination, union, coalescence, இணக்கம். 2. Contrivance, scheme of operation, a plan, உபாயம். 4. Artifice, craft, plot, தந்திரம். 5. Body, as composed of various parts, உடல். (*p.*)

புணர்ப்புவல்லவன், s. A crafty schemer, a designer.

•புணர்பூசம் — புநர்பூசம் — புனர்பூசம், s. [*St.* புர்வசு.] The seventh lunar mansion of the Hindus, the stars Castor and Pollux with Capella, அதிதிநாள். W. p. 542. PUNARVASU.

புணை, s. A float, raft, தெப்பம். 2. A boat, vessel, ship, மரக்கலம். 3. A bambu, மூங்கில். 4. Fetters for the legs as பூண்.

புணை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* [*com.* பிணை.] To unite, to tie, கட்ட.

புண், s. A raw sore, ulcer, wound, விரணம். 2. Proud flesh; serum, ஊன். (சது.)

புண்ணிலேபுளிப்பட்டதுபோலே. As acid on a sore; i. e. sorrow upon sorrow, or ungratified anger.

புண்ணிலேகோலிட்டதுபோல. Like the probing of a wound.

புண்காந்துதல்-புண்ணழற்றுதல், *v. noun.* [*prov.*] Smarting of a sore.

புண்ணன், s. A man full of ulcers.

புண்ணுக-புண்ணுப்போக, *inf.* [*trans.* புண்ணுக்க.] To become sore, to be ulcerated.

புண்ணாறுதல், *v. noun.* The healing of a sore.

புண்ணிலவை—புண்ணவை, s. [*prov. com.* குழிப்புண்.] Cavity, or orifice in a wound.

புண்ணீர், s. Blood, serum, இரத்தம். (*p.*)

புண்ணுடம்பு, s. A body full of new sores—said of a woman recently confined, as பச்சையுடம்பு. 2. [*poetice.*] The vile body.

புண்படுதல், *v. noun.* Becoming full of wounds, புண்ணுதல். 2. [*fig.*] Being grieved, விசனப்படுதல்.

புண்வாய்ச்சன்னி, s. Convulsive tetanus, lockjaw from a wound.

•புண்டரம், s. Line or marks on the forehead, நெற்றிக்குறி. (See ஊர்த்துவபுண்டரம், and திரிபுண்டரம்.) 2. Marks on the body with ashes or sandal, as made by the Saivas, ஒரடையாளம். 3. A variety of sugar-cane, ஓர்வகைக்கரும்பு. W. p. 540. PUN'DRA. 4. (சது.) An eagle, கழுகு.

புண்டரீறு, s. Sacred ashes in lines, திருநீறு.

•புண்டரீகம், s. The lotus, தாமரை. 2. The white lotus, வெண்டாமரை. 3. A white umbrella, as an emblem of royalty or victory, வெண்கொற்றக்குடை. 4. A leopard; a tiger, புலி. 5. The elephant of the southeast. See திக்கியானை. W. p. 540. PUN'DAREEKA. 6. A beetle, வண்டு. 7. An eagle, கழுகு. (சது.)

புண்டரீகக்கண்ணன் - புண்டரீகாட்சன், *appel. n.* Vishnu as lotus-eyed, திருமால்.

•புண்ணுக்கு, s. [*vul.*] Refuse of oilseeds pressed. See பிண்ணாக்கு.

•புண்ணியம், s. Virtue, moral, or religious merit, from conformity to the Shastras, அறம். 2. Merit of virtuous actions performed in former births attaching to the soul, and bringing blessings, நல்வினைப்பயன். 3. Purity, holiness, தூய்மை. 4. Charity, good works, நல்வினை. (c.) W. p. 540. PUN'YA.

புண்ணியம்பலிக்கும். Virtue will bring a reward.

புண்ணியம், கூ. Nine charitable actions to a religious mendicant. See நவபுண்ணியம்.

புண்ணியம், எ. Seven good qualities and acts: 1. நகங்கிருதி, exemption from pride and self-importance; 2. தானம், bestowing gifts; 3. விரதம், fasting, penance, abstinence; 4. சினேகம், exercise of friendship or kindness; 5. உபசோசனம், hospitality; 6. சமை, patience, forbearance; 7. உற்சாகம், zeal, fortitude.

புண்ணியகதை—புண்ணியசரித்திரம், s. Purana, the hearing of which is thought meritorious.

புண்ணியகருமம்—புண்ணியகாரியம், s. Meritorious deeds especially of a former birth, resulting in present good, நல்வினை.

புண்ணியகாலம், s. An auspicious time for the performance of religious duties, as the hour of an eclipse, &c.

புண்ணியகேத்திரம் — புண்ணியக்ஷேத்திரம், s. Sacred land, or Central India, as புண்ணியபூமி.

புண்ணியக்கருத்து, s. A virtuous or charitable disposition, தருமசிந்தை.

புண்ணியசடம் - புண்ணியசரீரம் - புண்ணியதேகம், s. A meritorious, holy man. [in admiration.]

புண்ணியசனேசுவரன், s. Kuvêra, குபேரன்; [ex புண்ணியசனம் et ஈசுவரன்.]

புண்ணியசன்மம், s. One born with a virtuous disposition on account of good deeds in former births.

புண்ணியசாலி, s. A charitable person.

புண்ணியசுரூபி—புண்ணியசொரூபி, s. One remarkable for virtue; (lit.) the image of virtue.

புண்ணியசாந்து, s. Cow-dung, சாணம்.

புண்ணியசேடம், s. Merit attaching to the soul at the expiration of each state of existence, to be enjoyed in other births, நல்லூழின்மிதி.

புண்ணியதலம்—புண்ணியஸ்தலம், s. A place of resort for worship.

புண்ணியதானம், s. Sacred gifts, made to brahmans, or others on special occasions.

புண்ணியதிரணம், s. A sacrificial grass, white Kusa, வெண்டருப்பை; [ex திரணம், grass.]

புண்ணியதினம், s. A holy day, adapted to religious duties.

புண்ணியதீர்த்தம், s. Sacred bathing, a place for religious bathing.

புண்ணியத்தானம்—புண்ணியஸ்தானம், [in astrol.] The ninth from the rising sign at birth. See தானம். 2. As புண்ணியஸ்தலம்.

புண்ணியத்தோற்றம், ச. Four kinds of merit, attaching to the soul: 1. தவம், penance, self-mortifications, &c.; 2. ஒழுக்கம், good conduct, moral and ceremonial; 3. கொடை, liberality, alms-giving; 4. கல்வி, education.

புண்ணியநதி, s. A sacred river, as the Kâvery.

புண்ணியபலம் — புண்ணியபலன், s. Fruit of meritorious deeds.

புண்ணியபுத்திரன், s. A child of high religious merit.

புண்ணியபுருஷன், s. As புண்ணியவான்.

புண்ணியபூ—புண்ணியபூமி, s. [also திவ்வியபூமி] The holy land of the Hindus, central Asia, bounded on the north by the Hymalayas, south by the Vindya mountains, and on the east and west by the sea.

புண்ணியமுதல்வன்—புண்ணியமூர்த்தி, s. The first in merit—God, கடவுள். 2. Buddha, புத்தன்.

புண்ணியம்பலித்தல், v. noun. The resulting of merit in earthly prosperity.

புண்ணியராத்திரம், s. A propitious night for ceremonies; [ex ராத்திரம்=இராத்திரி.]

புண்ணியவதி — புண்ணியவாட்டி, s. A meritorious woman.

புண்ணியவாளன் — புண்ணியவான், s. [fem. புண்ணியவாட்டி.] A man of high religious character.

புண்ணியன், s. A righteous being, divine or human. 2. Siva, சிவன். 3. Argha of the Jainas, அருகன்.

புண்ணியாகவாசனம், s. An appeasing or propitious ceremony, a peace-offering, ஓர்சடங்கு. 2. Purification of a house from any ceremonial deflement, ஆகுசநிவாரணம்.—Sans. differs. See W. p. 541. PUN'YAHAVACHANA.

புண்ணியாத்துமா, s. A righteous soul, a charitable person, male or female.

புண்ணியோதயம், s. Manifestation of meritorious deeds, புண்ணியம்தோன்றுகை.

புதர், s. Bushes, a thicket, தூறு. [vul. புதரி.] (c.) 2. [for புதல்.] A grass. 3. See புதன்.

புதர்க்குட்புகுந்துகொண்டான். He hid himself in a thicket.

புதல், s. Grass, high grass, bushes, a thicket, சாலல். 2. An herb, பூடு. 3. Eyebrow, புருவம். (சது.)

புதல்வன், s. [plu. புதல்வர், fem. புதல்வி.] A male child, பிள்ளை. (p.)

புதவு, s. A door, கதவு. 2. A by-way through a tower, a sally port, a wicket in, or near a gate, கோபுரவாயிலிடப்புதவு. 3. A kind of grass, ஓர்வகைப்புல். (சது.)

புதற்பூ, s. One of four kinds of flowers. See பூ; [ex புதல்.]

•புதன், s. Mercury the planet, or its regent, son of the moon by the wife of Jupiter, for which, the moon is afflicted with the consumption, and wanes one half of each month, சவக்கோள்லொன்று. 2. [pl. புதர்.] A wise or learned man, a poet, புலவன். W. p. 606. BUD'HA. 3. A supernal, a god, தேவன். (சூ.)

புதவாரம்—புதன்கிழமை—புதன்வாரம், s. Wednesday.

புதனன்றுராத்திரி, s. Wednesday-night.

புதா, s. A stork, or paddy-bird, கொக்கு.

புதிது — புதிசு, s. [com. புதுசு.] Any thing new, novel, uncommon, நவமானது. 2. First fruits of a rice-crop, a handful of which when boiled, and before eating, is presented in oblation to a lamp, personifying the god of fire, முதல்விளைச்சற்காணிக்கை; commonly புதிர், for புதியகதிர். [ex புதுமை.]

புதிதாக்க, inf. To renew, &c., as புதுப்பிக்க.

புதிதுண்ணல், v. noun. [prov.] Eating, with ceremony the first fruits on an auspicious hour.

புதிய, adj. New; [ex புதுமை.]

புதியது, s. Any thing new, or modern, புதிது. 2. Fresh boiled rice as distinguished from that boiled over night, fresh food—oppos. to பழையது, பழஞ்சோறு.

புதியமனிதன்—புதியவன், s. A novice, a beginner, a stranger; one new in office, &c.

புதியர்—புதியோர், s. [pl.] Guests, visitors—either strangers, or persons, having long been absent, விருந்ினர்.

புதியவர், s. [pl.] New comers. 2. Guests, visitors, விருந்தினர்.

புதியவரைக்கண்டுபழையவரைக்கைவிடுகிறதா.... Should old friends be forsaken for new?

புதியனபுகுதல், v. noun. Adopting or introducing new forms of speech, new fashions, customs, &c., புதியவற்றைப்பயில்வல்.

புதிர், s. [a syncope for புதியகதிர்.] First fruits, &c. See புதிது. 2. (R.) A recondite word, விடுகதை.

புதினம், s. Newness, novelty, நூதனம். 2. News, புதியசெய்தி. 3. A wonderful or strange thing, an extraordinary event, a miracle, அதிசயம். [usage.]

புதினக்கடுதாசி, s. [prov.] A newspaper, சமாசாரபத்திரிகை.

புதீறு, s. [for.] An herb, said to spring from deposits of flies, ஓர்பூடு.

புது, adj. [before a vowel புத்து.] New, strange, wonderful; [ex புதுமை.]

புதுக்கட்டடம், s. A new building.

புதுக்கட்டு, s. New institutions, orders, ordinance, establishments, regulations, &c.

புதுக்கலம், s. A new pot.

புதுச்சரக்கு, s. New merchandise.

புதுச்செய்கை, v. noun. New cultivation.

புதுச்சேரி, s. A new town. 2. Pondicherry; by French Orthography.

புதுத்தண்ணீர்—புதுநீர், s. Freshet, in rivers.

புதுத்தரை, s. New-made land.

புதுநடை, s. A new style, fashion or mode; strange, unusual or incongruous manners.

புதுநாணயம், s. An innovation, something new or strange; often in a bad sense.

புதுப்பணம், s. A small coin.

புதுப்பழக்கம், s. New habit, usage practice, or fashion. 2. Newly practising—as a novice. 3. New or recent acquaintance or intercourse.

புதுப்புதுக்க, inf. [intensitive of புதுக்க.] Anew. See புதுக்கு.

பூணி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To allude to, refer to, சுட்ட. (p.)

பூணித்து, v. part. Concerning, referring to, குறித்து.

பூணை, s. Forest tracts, முல்லைநிலம். (சது.)

பூண், s. A ring, ferrule, cap, உலக்கை முதலியவற்றின்பூண். 2. An ornamental knob of an elephant's tusk, கிம்புரி. (c.) 3. A jewel, an ornament, ஆபரணம்.

பூணாரம், s. Ornaments, jewels, ஆபரணம்; [ex ஆரம்.]

பூணாரவெலும்பு, s. Collar bone, as கா றைவெலும்பு. [limited.]

பூண்கட்ட — பூண்போட, inf. To fasten on a ferrule.

பூண்—பூணு, கிறேன், பூண்டேன், பூண்பேன், பூணுவேன், பூண, v. a. or v. n. To put on, have on; to be adorned with; to wear arms or the brahmanical string, தரிக்க. 2. To be fettered, manacled, shackled, மாட்டப்பட. 3. To be yoked, harnessed, &c., as பூட்டப்பட. 4. To take upon, undertake a business, a course of duties, &c., துணிய. 5. To become involved in, as blame, crime, guilt, குற்றப்பட. 6. To become entangled, as a lock, to be caught, as birds in snare, &c., சிக்கிக்கொள்ள. 7. To take a dye, சாயக்கோப்பிக்கப்பட. 8. To be got as learning, knowledge, அடைய.

விரதம்பூண, inf. To enter up on fasting, or the performance of any vow.

பூணூல்—பூணூல், s. The brahman's string.

பூணூற்கலியாணம், s. The ceremony of investing the young brahman with the sacred cord.

பூண்டி, s. A town, a village, a district, ஊர். (சது.)

பூண்டு, s. [as பூடு, which see.] Any small plant, &c.

•பூதகி—பூதனை, s. A female demon who assumed the form of Krishna's mother to kill him. She gave him poison through her breast. He rejected the poison and drew forth her life by sucking.

•பூதம், s. Any of the five elements. See பஞ்சபூதம். 2. A Bhuta; a goblin, ghost or malignant spirit, employed by magicians and supposed to haunt places where the dead are burnt or buried. Companies of them attend Siva, Ganesa, &c., They are described as dwarfish, with huge pot-bellies, and very small legs, &c., கிருத்திமம். 3. A living being, life, animal power, சீவன். W. p. 623. B'HOOTA 4. The second lunar asterism, as பரணி. 5. Past time, இறந்தகாலம். 6. The banyan tree, ஆல். 7. One of the five யாகம்.—Note. The elements are described as two-fold: 1. குட்சமபூதம், the spiritual or subtle class of elements, types or radicals of the grosser. See தன்மாத்திரை. 2. ஸ்தூலபூதம், the gross or visible elements, which like the former are five: பிருதிவி, or நிலம், earth; 2. அப்பு or நீர், water; 3. தேயு or தீ, fire; 4. வாயு or காற்று, air, or wind; 5. ஆகாசம் or விசும்பு, ether.

பூதம்போலே. Any thing great, monstrous, superhuman, &c.

பூதகணம் — பூதசேனை, s. Companies of Bhutas.

பூதகரப்பன்பட்டை, s. The medicinal bark of the பீநாறி tree.

பூதகலம்—பூதக்கலம், s. [prov. பூதாக்கலம்.] The giving of food by the bride to the bridegroom for the first time. See பரிமாற.

பூதகாலம், s. Past time, past tense, இறந்தகாலம்.

பூதகவிக்கம், s. A kind of collyrium used by magicians. See கலிக்கம்.

பூதக்கண்ணாடி, s. A magnifier, a microscope.

பூதக்கால், s. The large leg, elephantiasis, as யானைக்கால். (Old Dic.)

பூதசாரம், s. Essence of the elements, formed of or belonging to the elements, elemental, பஞ்சபூதசாரம். 2. What is composed of or belonging to the primitive or spiritual class of elements.

பூதசாரசரீரம், s. Bodies composed of spiritual elements. See சூக்குமசரீரம் under சரீரத்திரயம்.

பூததயை, s. Benevolence to creatures, as சீவகாருண்ணியம்.

பூததாத்திரி, s. The earth as formed of the five elements; more etymologically as nourishing living beings, பூமி; [ex தாத்திரி.]

பூததானியம், s. Sesamum, எள்.

பூதநாடி, s. Irregularity in the pulse of one possessed by an evil spirit, பேய் பிடித்தவர்நாடி. 2. As மரணநாடி.

பூதநாதன்—பூதபதி, s. Siva, as lord of the Bhutas, சிவன்.

பூதநாயகி, s. Parvati, பார்வதி.

பூதபஞ்சாட்சரம், s. A five lettered incantation.

பூதபரிணமம், s. Modifications or changes of the elements. See பரிணாமம்.

பூதபரிணமதேகம், s. Bodies formed of the gross elements. See பரிணாமசரீரம் under சரீரத்திரயம்.

பூதபலி—பூதயாகம், s. One of the five kinds of sacrifices. See யாகம்.

பூதபிரேதபிசாச, s. Three classes of vampires.

பூதபேதயோனிகள், s. Varieties of the productions of elemental combination.

பூதவாகனம், s. A vehicle in a temple in imitation of a Bhuta, to carry the image of Siva or any of his family.

பூதவாக்கு—பூதவார்த்தை, s. Obscene talk, கெட்டசொல். (Beschi.)

பூதவாதம், s. A religious belief, making the elements to be god, நாஸ்திகம்.

பூதவாத்துமா — பூதாத்துமா, s. Any living being, சீவாத்துமா.

பூதவிருட்சம், s. The banyan tree, ஆலமரம்.

பூதவிருள், s. The darkness of the elements without the light of the sun, மூலவிருள்.

பூதாதிஅகங்காரம், s. [in the Agam.] One of the three அகங்காரம் or evil principles. See தைசதம்.

பூதாஞ்சனம், s. One of the three species of magical ointments. See அஞ்சனத்திரயம்.

பூதேசன், s. Siva as generalissimo of the Bhuta-hosts, சிவன்; [ex ஈசன்.]

•பூதம், s. Cleanness, purity, truth, சத்தம். W. p. 548. POOTA.

பூதாத்துமன், s. One who has entirely abandoned worldly desires, an ascetic, துறவி.

•பூதரம், s. Hill, or mountain, as supported by the earth, மலை. 2. Mount Meru, மேருகிரி; [ex பூ et தரம், holding.]

•பூதர், s. One of the eighteen classes of dependent supernals. See பதினெண்கணம்; [ex பூதம்.]

•பூதலம், s. The earth, பூமி; [ex பூ.] See தலம்.

•பூதவம், s. The banyan tree, ஆலவிருட்சம். 2. The மருது tree. (சது.)

•பூதனை, s. A female demon. See பூதகி.

பூதாக்கலம். See பூதகலம்.

•பூதாஞ்சனம்—பூதேசன். See பூதம்.

•பூதாரம், s. A hog, as tearing the earth, பன்றி. W. p. 624. B'HOODARA.

•பூதாரன், s. A king, as supporter of the earth, அரசன்; [ex தாரம்=தரம்.]

•பூதி, s. Atrocity, violence and power of Siva, கொடுமை. 2. Affluence, wealth, prosperity, success, செல்வம். 3. Ashes, சாம்பல். W. p. 624. B'HOOTI. 4. Sacred ashes, as விபூதி. 5. Dust, powder, புழுதி, 6. Stench, துர்க்கந்தம். 7. Hell, நரகம். 8. Flesh, meat, ஊன்.

பூதிப்பிடி, v. noun. Attacking a person unjustly. 2. Intermeddling with others' concerns, without reason.

அவனைப் பூதிப்பிடியாய்ப் பிடித்துக்கொண்டுபோனார்கள். They attacked him violently.

•பூதியம், s. The earth, பூமி. 2. Body, உடல். 3. [com. for பூதம்.] Any of the five elements.

பூது, கிறேன், பூந்தேன், வேன், பூத, v. n. [impr. for புகு.] To enter, &c.

பூதை, s. An arrow, அம்பு. (சது.)

பூத்தானம், s. Making much of, keeping too nicely, using very delicately, அருமைபாராட்டுகை. (c.)

•பூஸ்திதி, s. Estate or landed property, நிலைச்சுதந்தரம். (c.)

•பூத்திரம், s. (St.) Mountain, மலை; [ex பூ et திரம், firmness.]

பூத்துப்பூத்தெனல், v. noun. Puffing from running, இளைப்புக்குறிப்பு. 2. A sudden swelling of the body, &c., as பூபூவெனல்.

பூத்துப்பூத்தென்றூதல். Puffing and blowing as with hard labor.

பூத்துப்பூத்தென்றிளைத்தல். Puffing and blowing from running.

பூந்தி. See பூவந்தி, under பூ.

பூந்தை, s. [contract. of பூதன்தந்தை.] The father of one named பூதன். (p.)

•பூபன்—பூமன். See பூ, earth.

•பூபசாலை, s. A bazaar for confectionary, பணிகாரக்கடை. W. p. 548. POOPASALA.

•பூபாளம், s. A tune. See இராகம்.

பூப்பகம்—பூப்பு. See பூ, v.

•பூமான், s. Man, husband, புருஷன். See புமான். (c.)

பூமானும்பூவையும். The bride and bridegroom.

•பூமி, s. The earth, the world, பூவுலகு. W. p. 642. B'hoomi. 2. Land as distinguished from water, ground, soil, நிலம். 3. Any piece or plot of land, landed property, மனை. 4. Country, district, தேசம். 5. A stage or degree in ascetic life, of which there are seven. See ஞானபூமி.

பூமிகாமி, s. A class of horses, as பூகாமி.

பூமிகொழுநன், s. Vishnu, as husband of the goddess earth, விஷ்ணு.

பூமிக்கூர்மை, s. Salt-petre, வெடியுப்பு.

பூமிசம், s. Produced of or on the earth. 2. Hell, நரகம். W. p. 624. B'homija.

பூமிசம்பவை, s. Sita the wife of Rama, சீதை.

பூமிசன், s. The planet mars, செவ்வாய். 2. An Asura, நரகாசுரன்; [ex சன், one born.] (சது.)

பூமிசாஸ்திரம், s. Geography.—*Note.* For this and similar derivatives, see பூ, earth.

பூமிசாரம், s. The fatness of the earth, as பூசாரம்.

பூமிதேவி — பூமிலட்சுமி, s. [*improp.* பூமதேவி, பூமாதேவி.] The goddess earth.

பூமிதைலம், s. A kind of mineral oil, Bitumen. See மண்தைலம்.

பூமியதிர்ச்சி—பூமிநடுக்கம், s. Earthquake, as பூகம்பம்.

பூமிஸ்நானம், s. (St. பூமஸ்நானம்.) One of the seven kinds of purification. See ஸ்நானம்.

பூமிநாதம், s. Salt produced from earth impregnated with soda, உருப்பு

பூமிபரீட்சை, s. Rules for determining the nature of soils, &c. See சிலாருணம்.

பூமிபாரம், s. A burden to the earth, as an overplus of inhabitants, wicked people, &c. 2. Responsibilities of a kingdom, as இராச்சியபாரம்.

பூமிபார்த்துப்பிறக்குதல், v. noun. Being born with the face downward, considered to be connected with benefits from the earth.

பூமிப்பிரவேசம், s. [*also* பூப்பிரவேசம்.] Visiting one's field, for the first time, on an auspicious day in the new year.

பூமியாள, inf. To reign over a country.

பூமிவேர், s. An earth-worm, as பூநாகம்.

பூம்பறியல், s. Scantiness of subsistence, குறைவு. (*Jaff.*)

•பூரகம், s. Filling, inhaling, பூரிப்பு. 2. A form of the yoga worship. See பிராணாயாமம், பேரகம்.

•பூரட்டாதி, s. See புரட்டாதி.

•பூரணமி - பூரணமை - பூர்ணிமை, s. [*also* பௌர்ணமி.] Full moon. W. p. 549. Poorn'ama.

•பூரணம், s. Fulness, entireness, the whole, pervading, முழுமை. 2. Increase, augmentation, நிறைவு. 3. Consummation, accomplishment, பொலிவு. 4. Abundance, plenitude, சம்பூரணம். 5. Satisfaction, gratification, மனப்பூரணம். W. p. 549. Pooran'a. 6. One of the modes of using the hands in dancing. See காலட்சணம்.

பூரணகருப்பம்—பூரணபிண்டம், s. Full pregnancy.

பூரணகலசம்—பூரணகும்பம், s. A full pot of water, used on auspicious occasions, நிறைகுடம்.

பூரணசந்திரன், s. Full moon.

பூரணசற்குணம், s. A perfectly virtuous disposition.

பூரணசாஸ்திரம்—பூரணநூல், s. A treatise ascribed to Agastya.

பூரணசூத்திரம், s. A work on medicines by Agastya, ஷ்ட்ஷ்.

பூரணநிலை, s. One of the states of breathing, in சரநூல். See இயக்குநிலை, under நிலை.

பூரணபலன், s. Full reward.

பூரணப்பட, inf. [*trans.* பூரணப்படுத்த.] To be satisfied.

பூரணலேகியம், s. See பூரணுநிலேகியம்.

பூரணவடிவு, s. Full and perfect beauty, சட்டழகு.

பூரணவயசு — பூரணுயு, s. Full age, one hundred years or above.

பூரணவித்தை, s. A perfect science, art, &c., as நிறைகல்வி.

பூரணவிரதம், s. A fast-day complete, as to all astrological requisitions.

பூரணன், s. The Supreme Being, கடவுள். 2. Siva, சிவன். 3. Argha, அருகன். 4. Vishnu, விஷ்ணு.

பூரணுகுதி, s. The concluding ceremony of the ஓமம்; [ex ஆகுதி.]

பூரணுநிலேகியம்—பூரணலேகியம், s. An inebriating electuary composed of all kinds of narcotics.

•பூரணி, s. The silk-cotton-tree, இலவமரம். W. p. 549. Poorn'a. 2. One of the five female forms of deity, corresponding to தற்புருடன்.

•பூரணை, s. Full moon, or the day of full moon, as பூரணமி. 2. The fifth, tenth, or fifteenth phasis, or day, of either half month. W. p. 549. Poorn'a. 3. Wife of Aiyanar, ஐயனுர்மனைவி.

பூரணைகேள்வன், s. Aiyanar; [ex கேள்வன், husband.]

•பூரம், s. Fulness, completion, abundance, நிறைவு. 2. A centiped, milleped, as பூரான். 3. The eleventh lunar asterism, being one of மவிர்தகணம், தீசார். 4. One of the thirty-two kinds of prepared arsenic. See பாஷாணம். 5. (*R.*) First ceremony of a newly married couple, as சேர்க்கவிழ்த்தல். 6. Camphor, as கர்ப்பூரம்.

பூரவாகனி, s. Sarasvati, as riding on a centiped, சரசுவதி. (சது.)

பூரா, adj. (*Hind.*) Full, முழு.

பூராக்கை — பூராக்கைகாரன், s. A man who is well versed in any thing, *commonly in a bad sense.*

பூராவாய், adv. Fully.

பூராவாய்ருசுவாயிற்று. The case has been fully proved.

•பூராடம், s. [*contrac. of* பூர்வாஷாடம்.] The twentieth lunar asterism, being one of the மவிர்தகணம். See வீராககணம், under கணம்.

பூராடமாசு, s. The galaxy or milky way, பால்வீதிமண்டலம்; (*adopted.*)

பூராயம், s. Inquisitiveness, close investigation, ஆராய்வு. 2. [*prov.*] Curiousness, விசித்திரம். 3. That which engages attention as the first development of intellect in a child.

பூராயக்கதை, s. An old story, பழங்கதை.

பூராயமாய்க்கேட்க, inf. To hear attentively.

பூராயமாய்விசாரிக்க — பூராயமிட, inf. To inquire closely.

பூரார்பலகை, s. Sheathing boards. (*R.*)

•பூரான், s. A centiped, பூரம். (*c.*) 2. [*prov.*] An edible formation in the palmyra stone or cocoa-nut after the root has shot forth, பனைமுளை.—The kinds of centipeds are சதங்கைப்பூரான், or இரட்டைப்பூரான், and செவிப்பூரான், which see.

பூரான்காவிக்கல், s. A yellow ochre. (*Ains.*)

•பூரி, s. Abundance, மிகுதி. 2. Gold, பொன். W. p. 625. B'hoori. 3. One quintillion, ஓரெண். 4. Mixed paddy, கலப்புநெல். 5. Bow-string, விற்குணம். 6. A tune, ஓரிசை. 7. Fault, குற்றம். 8. As பூரிகம்.

பூரிதானம்—பூரிகொடுத்தல், s. Giving, presents to brahmans at weddings, &c.

பூரிபோசனம், s. Food or rice given after the *Shraddha* ceremony.

பூரியர், s. [*pl.*] Wicked persons. 2. Base or low people, as புலையர்.

•பூரிகம், s. [*com.* பூரி.] Pastry, cake, அப்பவருக்கம். See பூரிகை.

•பூரிகலியாணி, s. A tune of the கலியாணி musical mode.

•பூரிகை, s. A trumpet, எக்காளம்பூரிகை. 2. A kind of unleavened cake, அப்பவருக்கம். W. p. 549. Poorika.

பூரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To be full; to be plump, as beasts or fruit, பருக்க. 2. To rejoice, to be satisfied with, to be cheerful or lively, களிக்க. 3. To be strong, robust, பலங்கொள்ள. 4. To thrive as the body in health, செழிக்க (*c.*) 5. v. a. To fill, நிறைக்க. 6. To exercise a superhuman power with regard to the vital air, வாயுவைபிடிக்க.

பூரிப்பு, v. noun. Filling, &c., *as the verb.* 2. Plumpness, fulness as of countenance, செழிப்பு. 3. Satisfaction, cheerfulness, exhileration. 4. Abundance, plenty, மிகுதி.

•பூரிதம், s. That which is filled, நிரப்பப்பட்டது. W. p. 549. Poorita.

பூரிமாயு, s. Male jackal, ஆணரி. 2. Antiquity, oldness, பழமை. (சது.)

•பூரியம், s. Town, village, ஊர். 2. An agricultural town or district, மருதநிலத்தூர். 3. Royal street, அரசவீதி. 4. Royal palace, அரண்மனை. (சது.)

•பூரு, s. Eye-brow. See புருவம். 2. A king of the lunar race, பவுரிமகன்.

பூரு, கிறேன், பூந்தேன், வேன், பூர, v. n. [*imp. for* புகு.] To enter, &c.

•பூருகம்—பூருண்டி. See பூ, earth.

•பூருவம்—பூர்வம், s. The first, the beginning, ஆதி. 2. Priority, precedence, முதன்மை. 3. Antiquity, oldness, பழமை. 4. Ancient history, tradition, &c., பழஞ்சரித்திரம். W. p. 549. Poorvva. 5. (*c.*) As பூர்வபட்சம். 6. East, கிழக்கு. 7. The front, முன்பக்கம். 8. Former parts of the day, பகலின்முற்பாதி.

பூருவகணம், s. The past moment.

பூருவகதை — பூருவசரித்திரம், s. An ancient story.

பூருவகருமம்—பூருவகன்மம், s. Actions of former births, as ஊழ்வினை.

பூருவகாலம்—பூர்வகாலம், s. Ancient time.

பூருவகௌளம், s. A tune, a melody, ஓரிசை. (சது.)

பூருவசனனம் — பூருவசன்மம், s. Former state of existence.

பூருவசன், s. The eldest son, சேஷ்ட புத்திரன். 2. Elder brother, தமையன்; [ex சன், one born.]

பூருவசைலம்—பூருவபருப்பதம், s. The eastern mountain. See உதயகிரி.

பூருவஸ்திதி—பூருவநிலைமை, s. Former state.

பூருவஞானம், s. Knowledge of past events, acquired by abstract meditation.

பூருவதிக்கு—பூருவதிசை, s. The east, கிழக்கு.

பூருவதுவந்தம் — பூருவதொந்தம்—பூருவத்தொடர்ச்சி, s. The result of former births, ஊழ்வினைப்பயன்.

பூருவபக்கம் — பூருவபட்சம், s. The former half of a lunar month—oppos. to அபரபக்கம். See பக்கம்.

பூருவபதம், s. First member of a compound word in a sentence, a verse, &c., நிலைமொழி.

பூருவபற்குனி, s. The eleventh lunar asterism, பூரம். W. p. 550. POORVVA-P'HALGUNI.

பூருவபாஷை, s. Original language, ஆதிபாஷை. 2. Sacred language; i. e. Sanscrit, தேவமொழி.

பூருவபுண்ணியம், s. Former good works rewarded in the present life.

பூருவமீமாஞ்சை, s. The first part of the மீமாஞ்சை Vedas. See சமஸ்திரம்.

பூருவமுகம், s. Looking east, கிழக்குமுகம்.

பூருவவாக்கியம், s. [in astron.] The first of two successive vakyas taken from a table.

பூருவாஷாடம், s. [Tamil பூராடம்.] The twentieth lunar asterism. W. p. 550. POORVVASHADA.

பூருவாப்பியாசம், s. Old customs; manners of former ages, தொன்றுதொட்ட வழக்கம்.

பூருவோத்தரம், s. All the circumstances from ancient time, sometimes பூர்வோத்தரசங்கதி. (c.) 2. The north-east.

அவனுடையபூருவோத்தரமெல்லாமெனக்குத்தெரியும். I know all about him from beginning to end.

பூர்வோத்தரங்கள், s. Generations, உற்பத்திக்கிரமம்.

பூனா, s. A mere nothing, இன்மை. (Old Dic.)

அதுபூனாபாய்ப்போயிற்று. It has come to naught.

•பூனா, s. Fulness, நிறைவு; [ex Sa. Pura, to be full.] (p.)

பூனாயிட, inf. To become tedious, as a story, அலுக்க.

பூர்ணம், s. Mouldiness. See பூசணம். 2. See பூரணம்.

•பூர்த்தி, s. Fulness, completion; satisfaction, நிறைவு. W. p. 549. POORTTI. (c.) 2. Absorption with the deity, ஐக்கம்.

பூர்த்தியாக, inf. To be satisfied, or filled.

பூர்பூரெனல், v. noun. Swelling, enlarging suddenly or growing rapidly, விரைவிற்பருத்தல். (c.)

•பூர்வகம், s. What is before—as ஞானபூர்வகம், foreknowledge. (p.)

•பூர்வம், s. Antiquity, &c. See பூருவம்.

பூர்வக்கண்டமனிதன். A very old man.

பூர்வகாட்சியனுமானம், s. Inference of a thing from ancient observation. See அனுமானம்.

பூர்வாணம், s. Fore-noon—oppos. to அபராணம், as பூர்வான்னம். (R.)

பூர்வான்னம், s. The first part of the day, the fore-noon, பகலின்முற்பகுதி. W. p. 550. POORVVAHNA.

•பூர்வீகம்—பூருவீகம், s. Antiquity, old times, பழைமை. 2. Origin of a thing, மூலம். (c.)

பூர்வீகஇதிகாசம் — பூர்வீகசரித்திரம், s. Ancient history.

பூர்வீகர், s. [pl.] Those of old time, ancients.

பூர்வீகன், s. The founder of a thing, முன்படைத்தோன். (Old Dic.)

•பூலதை, s. A climbing plant, ஓர்கொடி.

பூலத்தி, s. The மருது tree, Terminalia.

பூலா—பூல், s. A tall shrub, the bark of which is used as a red dye, Many Flowered Phyllanthus, ஓர்செடி.—சிறுபூலா, பனைப்பூலா, முட்பூலா, வெட்பூலா, are different species.

பூவணம், s. A place of resort, sacred to Siva, near Madura, ஓர்சிவஸ்தலம்.

பூவந்தி, s. [com. பூந்தி.] Notch-leaved soap-nut tree. See செப்புக்கொட்டை.

பூவந்திப்பழம், s. [also பூவம்பழம்.] Its fruit, used for removing spots, and the scurf of the hair.

பூவமளி — பூவரசு — பூவாளி. See பூ, flower.

பூவல், s. Red, சிவப்பு. 2. An unwalled well, or a hole for getting water, நூவு. (சது.)

பூவல்மண், s. Red earth, as செவ்வல்.

பூவை, s. The Maina bird, நாகணவாய்ப்புள். 2. A lady, a woman, பெண். 3. A tree. See காயா. (p.)

பூவைவண்ணன், s. Vishnu, விஷ்ணு. See காயாம்பூவேனியன்.

பூவோடு, s. A kind of arsenic, as தொட்டிப்பாஷாணம்.

பூழான், s. A partridge, கவுதாரி. 2. A turkey, or jungle-hen with long legs, காட்டுக்கோழி. (சது.)

பூழி, s. Powder, தூள். 2. Dust, புழுதி. 3. Soft mire or mud, குழைசேறு. 4. Bubbles in muddy water, சேற்றுக்குமிழ். (சது.) 5. One of the twelve districts around the Tamil country. See கொடுந்தமிழ்நாடு.

பூழியன், s. Sera, any prince of the Sera dynasty, சேரன். (சது.)

பூழில், s. The aquila or eagle-wood, அகில். (சது.)

பூழிவேந்தன், s. Any king of the Pandyan dynasty, பாண்டியன். (p.)

பொருவிலறம்புரிந்தபூழிவேந்தன். Pandu, who performed a penance of unrivalled merit. (பாா.)

பூழை, s. [an elongation of புழை, which see.] A small door in a larger one as புதவு.

பூழ், s. A kind of bird, காளுக்கோழி.

பூழ்க்கை, s. [contrac. of புழைக்கை.] Elephant, யானை. (p.)

பூழ்தி, s. [poetic form of புழுதி.] Dust, தூசி. 2. Powder, பராகம். 3. Flesh or fish, ஊன். (சது.)

பூளை, s. A medicinal shrub, ஓர்செடி, Illecebrum lanatum. 2. Silk-cotton, இலவம்பஞ்சு. 3. (Beschi.) Rheum in the eyes as பீளை. (c.)—அவரைப்பூளை, சிறுபூளை, கொடிப்பூளை, கூரைப்பூளை, are species of பூளை.

பூளைப்பூ — பூளைப்பஞ்சு, s. Silk-cotton used for stuffing pillows.

பூனை, s. [poet. பூசை.] A cat.—For கடுவன்பூனை, காட்டுப்பூனை, புனுகுப்பூனை, பெட்டைப்பூனை, see these words. (c.)

பூனைசீறுதல். Hissing of a cat in anger.

பூனைகுறுக்கேபோயிற்று. The cat comes across the road, considered a bad omen.

பூனைகத்துதல். Mewing of a cat.

பூனைபுறுபுறுத்தல். Growling of a cat.

பூனைகண்மூடிப்பாற்குடிப்பதுபோலே. As a cat [shutting its eyes] drinks the milk; i. e., one shutting his own eyes to his faults, thinks them hidden from others.

பூனைக்கச்சி, s. An herb, ஓர்செடி. (Old Dic.)

பூனைக்கண், s. Eyes like a cat. 2. A gem, cat's eye, பூனைக்கண்வைடூரியம்.

பூனைக்கண்ணன், s. [fem. பூனைக்கண்ணி.] A man with cat-like eyes.

பூனைக்கண்புருடராகம்—பூனைக்கண்வைடூரியம், s. A gem. See பூனைக்கண், 2.

பூனைக்கழற்சி, s. A species of கழற்சி, a grey colored creeper.

பூனைக்கழற்சிக்கொட்டை, s. Seeds of பூனைக்கழற்சி, used medicinally.

பூனைக்காஞ்சொறி, s. A kind of nettle, Tragia cannabina.

பூனைக்காய்ச்சி, s. An empty or blasted ear, or crop.

பூனைக்காய்வேளை, s. A shrub; Galega villosa.

பூனைக்காலி, s. A perennial climbing plant, whose root is used in cholera-morbus, ஓர்செடி, Dolichos pruriens, L.

பூனைக்கீரை, s. A plant, ஓர்கீரை, Ipomia pestigridis.

பூனைக்குட்டி, s. A kitten.

பூனைச்சம்பந்தம், s. The grasp of Deity on the soul. See சம்பந்தம்.

பூனைத்திசை, s. South-east, தென்கிழக்கு. See திசை.

பூனைபோலேயிருக்க, inf. To act with affected humility.

பூனைப்பிடுக்கன்—பூனைமடி, s. A kind of herb, ஓர்செடி, Crotalaria nummularia.

பூனைமயிர், s. Grey hair in men, like the cat. 2. As பூனைக்கழற்சி plant.

பூனைவணங்கி, appel. n. The குப்பைமேனி plant; (lit.) cat worshipped.

# பெ

பெ. A syllabic letter compounded of ப் and எ.

பெங்கு, s. A kind of toddy, ஓர்வகைக் கள். (சது.)

*பெடம், s. Much, abundance, மிகுதி. (சது.)

பெடை, s. [as பெட்டை.] Female of birds, a hen, பறவைப்பெண். (p.)

*பெட்டகம், s. [com. பெட்டி.] A chest or box, especially one in which presents are carried to a bride, வரிசைப்பெட்டி.
பெட்டகங்கொட்ட, inf. To clap the hands for joy, when presents are carried to a bride. (R.)

பெட்டல், v. noun. Desiring, wishing, விரும்பல். See பெட், v. (p.)

*பெட்டி, s. A chest, trunk, coffer, box, case, பேழை. 2. A basket, கடை. See பிட்டி.—Of baskets and boxes there are different varieties, especially அஞ்சறைப்பெட்டி, கட்டுப் பெட்டி, கைப்பெட்டி, கொட்டைப்பெட்டி and சடப்பெட்டி, which see. (c.)
மூத்திரப்பெட்டி, s. A bladder.

பெட்டிவிக்குழல், s. A long tube through which pellets of clay are blown—as சக்கக்குழல். (R.)

பெட்டு, s. Lie, falsehood, untruth, பொய். (சது.)

பெட்டை, s. Female of birds, the hen, பறவைப்பெண். 2. The female of the lion, horse, camel, dog, cat, monkey, hog, deer, goat, &c. 3. [vul.] A woman, a girl, பெண். 4. [in some connec.] Any physical imperfection, as பொட்டை. (c.)
பெட்டைக்கடல், s. A shallow sea, சிறு கடல்.
பெட்டைக்கண், s. A defective eye, ஊனக்கண். 2. [prov.] Squint eyes, சப்பக் கண். 3. The two smaller of the three eyes of a cocoa-nut.
பெட்டைப்பூனை, s. A she-cat.
பெட்டைமாறி, s. [also பெடைமாறி, பெண்மாறி.] A cuckold; (lit.) wife-changer. 2. A masculine woman. (c.)
பெட்டைமுடிச்சு—பெட்டைக்கட்டு, s. [prov.] A loose knot, a knot badly tied.
பெட்டையன், s. An hermaphrodite, a eunuch, அலி. 2. An effeminate man, as பெண்ணன்.

பெட்பு, s. Desire, lust, ஆசை; [ex பெட், v.] (p.)

பெண், s. [gen. பெண்ணின்.] A female in general, பெண்பொது. 2. A female of the human species, a woman. a girl, &c., ஆடவள். 3. A bride, a wife, விவாகப்பெண். 4. The feminine gender in the animal and vegetable kingdom, விலங்குமுதலியவற்றின்பெண். (c.)
பெண்ணென்றால்பேயுமிரங்கும். Even a fiend will pity a woman.
பெண்கரு, s. Female embryo.
பெண்கலை, s. The latter half of a verse, called வஞ்சனம்.
பெண்கள்சிகாமணி, s. A jewel-like woman. (in admiration.)
பெண்கள்நாயகம், s. An excellent woman, a lady.
பெண்குறி, s. Pudendum muliebre.
பெண்கேட்க, inf. To solicit a girl of her friends, in marriage.
பெண்கொடி, s. A lady; (lit.) a female vine. (p.)
பெண்கொடுக்க, inf. To give a girl in marriage.
பெண்கொடுத்தமாமன், s. A father-in-law, as distinguished from தாய்மாமன்.
பெண்கொள்ள—பெண்ணெடுக்க, inf. To take a wife, to take a woman in marriage, to marry.
பெண்கோலம்—பெண்வேஷம், s. Female attire or costume.
பெண்சகோதரம், s. A sister, உடன்பிறந்தாள். (Colloq.)
பெண்சாதி, s. A wife, மனைவி. (usage.)
பெண்சோடினை, s. Adorning a bride for marriage. 2. See சோடினை.
பெண்டகர்—பெண்டர், s. [pl.] Hermaphrodites, eunuchs, அலிகள். (சது.)
பெண்டகை—பெண்டகைமை, s. Womanhood, feminine properties, excellencies; [ex தகை, nature.] (p.)
பெண்ணரசி, s. A reigning female, a queen. 2. An opulent lady, செல்வமுடையாள்.
பெண்ணரசு, s. Female government. 2. A superior woman. 3. [met.] Domination of a woman.
பெண்ணரசுநாடு, s. A country governed by a woman.
பெண்ணலம், s. Female excellency; [ex நலம்.] 2. Enjoyment with a woman, பெண்ணின்பம்.
பெண்ணன், s. A timid, effeminate, cowardly man, பேடிப்பயல்.
பெண்ணாசை, s. Desire for a woman. See ஆசை.
பெண்ணாய்ப்பிறந்தவள், appel. n. A female, a woman; (lit.) one born a female.
பெண்ணாய்ப்பிறந்தவள் வீட்டிலிருக்கவேண்டும். A woman should keep at home.
பெண்ணாள், s. [in astrol.] The female division of the lunar asterism; [ex நாள்.]
பெண்ணீலி, s. A very atrocious, wicked woman. 2. A female demon; [ex நீலி.]
பெண்ணுடம்பு, s. The body of a woman. 2. [modestè.] Verenda mulieris. (Beschi.)
பெண்ணுறுப்பு, s. Symmetry of a woman, female form, பெண்வடிவு. 2. As பெண்குறி.
பெண்ணெழுத்து, s. Long vowels, நெட்டெழுத்து.
பெண்தண்டு. s. See தண்டு.
பெண்பருவம், s. The different stages of life in the female. See பருவம்.
பெண்பழி—பெண்பாவம், s. The guilt of forcing a woman.
பெண்பனை, s. The female palmyra, useful for fruit and timber. See பனை.
பெண்பாடு, s. Women's work or affair.
பெண்பால், s. [in gram.] Feminine gender. See பால்.
பெண்பிள்ளை, s. A female infant, a girl, பெண்குழந்தை. 2. A woman, in general. 3. A bride, மணப்பெண்.
பெண்பிறப்பு, s. Female birth, commonly regarded as a misfortune.
பெண்புத்தி—பெண்மதி, s. Female indiscretion; woman's wit. [in contempt.]
பெண்புத்திபின்புத்தி. Female advice will result in disappointment.
பெண்பேதை, s. A female, as being weak and indiscreet.
பெண்போகம், s. Enjoyment with a woman. 2. One of the thirty-two acts of charity, and of the eight enjoyments. See அறம், and போகம்.
பெண்மகள், s. A woman, a lady, பெண்.
பெண்மயக்கம்—பெண்மயல், s. Fascination from love-sickness.
பெண்மயிர், s. Female locks, அளகம்.
பெண்மரம், s. A female tree or plant, &c. 2. (சது.) A tree, the outside of which is harder than the inside, புறவயிர முள்ளமரம்.
பெண்மாயம், s. Fascinations of a women.
பெண்மாறி. See பெட்டைமாறி.
பெண்மை, s. Womanliness, nature of women, பெண்டன்மை. 2. Household dignity, domestic excellence, மனையாட்சிமை. (சது.)
பெண்மைச்சினைப்பெயர், s. [in gram.] Nouns feminine, from any member, or part, as முடத்தி, a female cripple—also applied to the lower animals.
பெண்மைச்சினைமுதற்பெயர், s. Nouns feminine from a member but including the whole body, as முடக்கொற்றி, the lame Kotty, though lame only in a limb.
பெண்மைமுதற்பெயர், s. Nouns feminine being the name of a person, as கொற்றி, a woman.
பெண்வகை, s. Four classes of women: 1. பதுமினி, the highest class, possessing excellence of form, and sweetness of disposition; 2. சித்திரணி or சித்தினி, a class addicted to love; 3. சங்கினி, a mediocre class, irascible and passionate; 4. அத்தினி, the lowest class libidinous and furious.
பெண்வழி, s. Family descent in the female line.

பெண்டாரி, s. A Pindaree. See பிண்டாரி.

பெண்டு, s. [plu. பெண்டிர், பெண்டுகள்.] A woman, பெண். 2. A wife, மனைவி.

பெண்டாட்டி, appel. n. A wife, a married woman; [ex ஆள்.] See ஆட்டி. 2. [vul.] A woman.

பெண்டுகேட்ட, inf. To reproach either sex with criminal intercourse.

பெண்டுகெள்சட்டி, s. One who is under his wife's management.

பெண்டுபிள்ளை, s. Wife and children.

பெண்ணை, s. The seventeenth lunar asterism, அனுடன். 2. The name of two rivers, the வடபெண்ணை, near Nellore, and தென்பெண்ணை, near Cuddalore. 3. A palmyra tree, பனைமரம். (சது.) 4. As பெண்மரம்.

பெதும்பை, s. A girl eleven years old, or from eight till eleven inclusive. See பருவங்கள். 2. A woman in general, பெண்பொது. (சது.)

•பெத்தம், s. A band, a tie. See பந்தம். 2. The bondage of the soul. See பந்தம்.

பெத்தகாலம், s. Time during which a soul is subject to evil from births.

பெத்ததிசை, s. The influence on a soul from births. See திசை.

பெத்தமுத்தி, s. The two states of the soul—bondage and liberation. See பந்தமுத்தி.

பெத்தர், s. [pl. also பத்தர்.] Persons in bondage—oppos. to முத்தர். See பத்தர்.

பெத்தரிக்கம், s. [Tel. పెద్దరికము.] Pride haughtiness, petulence, அகங்காரம். (c.)

•பெந்தம், s. Bond. See பந்தம்.

•பெந்து, s. Relationship. See பந்து.

பெந்தை, s. [prov.] Hugeness, monstrousness, அவலட்சணமாய்ப்பருத்தது. 2. A part of a plough-share, கலப்பையின்வோருறுப்பு.

பெந்தைக்கயிறு, s. A rope not neatly twisted, வடக்கயிறு. 2. The rope which binds the parts of a plough-share.

பெந்தைவிழி, s. Goggle-eyes. 2. A staring, or rolling of the eyes, as in consternation.

பெம்மான், s. [contract. of பெருமான்.] A great person, உயர்ந்தவன். (சது.)

பெயர், s. [also பேர்.] Name, appellation, designation, epithet, நாமம். 2. A person, பேர். 3. Reputation, renown, celebrity, கீர்த்தி. 4 [in combin.] That which is nominal, not real, உண்மையில்லாமை. (c.) 5. [in gram.] A noun, பெயர்ச்சொல்.

பெயருக்கு. To each, separately.

பெயர்பாதியாகக்கொடு. Give equal shares to both.

சாதுபெயரும். Many, all. See சாது.

பெயரகராதி, s. A part of a dictionary. See அகராதி.

பெயரடி—பெயர்ப்பகுதி, s. [in gram.] A nominal root of a word. 2. The root of a noun. (p.)

பெயரன், s. [com. பேரன்.] A grandson, he taking the grandfather's name, பௌத்திரன். 2. [prov.] Grandfather, பாட்டன்.

பெயராயிருக்க, inf. To be famous, celebrated. 2. To be rumored.

பெயராளி, s. A man of celebrity, as கீர்த்திமான், also used in irony.

பெயரிடுதல்—பெயர்வைத்தல், v. noun. Naming, giving a name.

பெயரியற்சொல், s. [in gram.] A class of substantives which occur in ordinary usage.

பெயரின்னிசை, s. One of the ninety-six treatises containing ninety, seventy, or fifty verses, which end always with the name of a certain person. See பிரபந்தம்.

பெயருரிச்சொல், s. Adjective.

பெயரூர், s. [com. பேரூர்.] One's name and country.

பெயரெச்சம், s. [in gram.] Relative participle. See எச்சம்.

பெயரெடுக்க, inf. [v. noun பெயரெடுப்பு.] To get a name. See எடு, v. 2. To mention one's name, பெயர்சொல்ல.

கள்ளனென்றுபெயரெடுத்தான். He is known as a rogue.

பெயரெடுத்துப்போடுதல், v. noun. Erasing a name from a list.

பெயர்க்கணக்கு, s. Distribution of shares. 2. [in arith.] Division.

பெயர்ச்சொல், s. [in gram.] A noun or pronoun.

பெயர்டாப்பு, s. A list of names, a catalogue, a roll.

பெயர்தரித்தல், v. noun. Taking or bearing a name or title.

பெயர்த்தி, s. [com. பேத்தி.] Granddaughter. 2. [prov.] Grand-mother.

பெயர்நேரிசை, s. A poem in which the name of a certain person is repeated in verses of நேரிசைவெண்பா. See பிரபந்தம்.

பெயர்படைக்க, inf. To get a name. (p.)

பெயர்போக—பெயர்விளங்க, inf. To be renowned, celebrated, famous.

அவன்பெயர்போகவாழுகிறான். He is getting on prosperously.

பெயர்ப்பிரஸ்தாபம், s. The celebrity of one's name.

பெயர்மங்குதல், v. noun. Becoming tarnished in character, losing celebrity.

பெயர்வழி, s. Names in order, பெயர்முறை. 2 Genealogy, தலைமுறை. 3. As பெயர்டாப்பு.

பெயர்விகுதி, s. The termination of compound nouns.

பெயர்வேற்றுமை, s. [in gram.] The nominative, எழுவாய்.

பெயர், கிறது, ந்தது, பெயரும், பெயர, v. n. [com. பேர், sometimes பெயரு.] To move, leave, stir, rise, depart, போக. 2. To be removed, displaced, dislodged, இடமாற. 3. To turn aside, to retire, ஒதுங்க. 4. To vary, to change, to turn about, to shift, to veer, வேறுபட. 5. To be agitated, to shake, அட. 6. To be rubbed, தேய. 7. To be rooted out, பிடுங்குப்பட. 8. To grow loose—as a finger-nail, கெழ. 9. To return, மீள. (c.)

தண்டுபெயர்ந்துபோயிற்று. The army has decamped.

தளம்பெயர்ந்துபோய்க்கிடக்கிறது. The pavement is in a ruined state.

எனக்குப்பெயரப்பிரியக்கூடாது. I am unable to stir, from sickness or engagements.

பெயர்ந்திரு. Give way, stand aside.

அதுபெயராது. It would not go off.

காற்றுப்பெயர்ந்துவிட்டது. The monsoon has set in. (Beschi.)

பெயரப்பெயரப்பார்த்தல், v. noun. [prov.] Looking at again and again.

பெயர்ந்து, gerund. [as adv.] Again. 2. Presently, afterwards.

பெயர்ந்துவா Come again.

பெயர்ந்துபடுக்க, inf. To roll or turn over, as one when lying down.

பெயர்தல், v. noun. [also பெயர்ச்சி.] Moving, shifting, being rubbed, &c.

பெயர்வு, v. noun. Dislocation; abstraction.

பெயர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [com. பேர்.] To remove, displace, dislodge, unseat, transpose, abstract, பிரிக்க. 2. To turn over, subvert, overthrow, புரட்ட. 3. To remove or agitate from the basis, or foundation. அப்புறப்படுத்த. 4. To root up, to force open, as a door, பிடுங்க. 5. To turn over with the ladle, as a cake, திருப்ப. 6. To remove cattle from one place to another, புறப்படுத்த. 7. To blow up, to blast, கிளைக்க. (c.) 8. To dislocate. 9. (R.) To redeem, to save, மீட்க.

கள்ளன் கதவைப் பெயர்த்துப்போட்டான். The thief forced open the door.

சொன்னதைப்பெயர்த்துச்சொல்லுகிறான்.......He repeats what he has already said.

இந்தச்செடியைஅங்கேபெயர்த்துவை. Remove the plant to that place.

பெயர்த்துநட, inf. To transplant, displace.

பெயர்த்தெடுக்க, inf. To root up, to pull up.

பெயர்த்தெழுத, inf. To copy, to transcribe.

பெயர்ப்பு—பெயர்த்தல், v. noun. Removal, change, eradication, &c., as the verb.

மொழிபெயர்த்தல். Translating; a translation. See மொழி.

பெயர்த்தி, v. noun. [also பெயர்ச்சி.] Removal, movement. 2. See பெயர்.

கிரகபெயர்ச்சி. Transit of a planet from one sign to another.

பெயலை, s. Rain, மழை. (சது.)

பெயல், s. Rain, மழை. 2. Rain drops, மழைத்துளி. (சது.)

பெய், கிறேன், தேன், வேன், ய, v. a. [vul. பேய்.] To strew, scatter, தூவ்க்க. 2. To pour down, சொரிய்க்க. 3. To discharge, as urine, பிறப்பிட. 4. To scatter or send forth, as arrows, அம்புவிட. 5. To shed, as tears, or as milk from the breasts, சொரிய. 6. To put, place, lay, இட. 7. To put in or into, to stuff, to insert, புகுத்த. 8. To put on—as jewels, clothes, harness, அணியணிய. 9. v. n. To rain, to fall, as rain, dew or hail. See பனி, மழை.

மழைபெய்கிறது. It rains.

மூத்திரம்பெய்கிறான். [vul.] He passes urine.

படைபெய்கூடு, s. The scabbard of a weapon. (p.)

பெய்கலம், s. Any vessel. (p.)

பெய்துரை, s. Preface, introduction as inserted, prefixed, &c., பாயிரம். (சது.)

பெய்வளை, s. A damsel, woman, பெண். (p.)

பெய்விக்க, inf. To cause to rain.

பெய்வு, v. noun. Emission, discharge, &c.

பெரிது, [contract. of பெரியது, improp. பெரிசு.] That which is great.

**பெரிய**, *adj.* Great. See பெருமை.

பெரியாணங்கை, *s.* [*com.* பெரியாநங்கை.] A medicinal plant.—oppos. to சிறியாணங்கை, நிருபு, Polygala telephioidie.

**பெரு**, *adj.* [*in combin. with the incremental*, க், ஞ், ங் or ம்.] Great. For its combinations, see பெருமை.

**பெருகு**, *s.* (*Tel.* పెరుగు.) Curdled milk, தயிர். (சது.)

**பெருகு**, கிறது, பெருகினது, ம், பெருக, *v. n.* To increase in numbers, to multiply, spread, abound—oppos. to சிறுகு, விருத்தியாக. 2. To enlarge, grow great, to branch out—as subjects of discussion, விரிக்க. 3. To rise, swell, overflow, as water, நிரம்பெருக. 4. To thrive, become rich, செல்வமுண்டாக. 5. [*meton.*] To bring prosperity—as a wedding badge, as தாலிபெருக. (*c.*)

ஆசைபெருகஅலைச்சலும்பெருகும். As desires increase cares multiply.

பெருக, *inf.* [*as adv.*] Fully and abundantly.

பெருகவாழ். Live happily or prosperously.

**பெருகு**, கிறேன், பெருகினேன், வேன், பெருக, *v. n.* To grow larger, to increase in size; increase in length, or breadth, பருமையாக. 2. To thicken; to grow bulky, plump or full; to swell, to bloat, வீம்ம. 3. To be increased, augmented—as an account, or estate, அதிகப்பட. 4. To become serious in aspect or consequences; to be aggravated, வலிமையாக. 5. To rise in dignity, honor, rank or circumstances, சிறக்க. (*p.*)

**பெருக்கம்**, *s.* Increase, augmentation, enlargement, வளர்ச்சி. 2. Multiplicity, plentifulness, மிகுதி. 3. Prosperity, opulence, wealth, திரண்டதனம் (*c.*)

சனப்பெருக்கம், *s.* Thick population.

பெருக்கம்பண்ண, *inf.* [*prov. used at the threshing floor.*] To scrape up scattered corn with the hands.

**பெருக்கன்**, *s.* [*as* பருக்கன், *which see.*] Coarseness, &c.

**பெரு**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* [*as* பரு, *v. which see.*] To grow thick or stout, &c. (*c.*)

அவனிலும்நான்பெருத்திருக்கவில்லையா. Am I not stouter than he?

சனம்பெருத்துக்கிடக்கிறது. The people are numerous.

**பெருக்கு**, *v. noun.* Flooding, overflowing of a river, an inundation, வெள்ளம். 2. Rise of the tide, ஏரேற்றம். 3. Height of the circulation of the blood, which is supposed to ebb and flow daily, like the tide, உதிரவோட்டம். 4. Influx of wealth, செல்வமிகுதி; [*ex* பெருகு.] 5. Multiplication, multiplying, கணக்குப்பெருக்கம்.

பெருக்காளர், *s.* [*pl.*] Grandees, noblemen, சிறப்புடையர். 2. Men of the Vellala caste.

பெருக்குக்கணக்கு, *s.* Multiplication.

பெருக்குவேளை, *s.* Time of the flow of tide. 2. The part of the day when the circulation of the blood is at its height.

பெருக்கெடுக்க, *inf.* To overflow as a river, or the sea. 2. To rise or flow as the tide. (*c.*)

**பெருக்கு**, கிறேன், பெருக்கினேன், வேன், க்க, *v. a.* To cause to increase, to make greater, அதிகரிப்பிக்க. 2. To cause to swell and overflow, மிகச்செய்ய. 3. To sweep, குப்பைகூட்ட. 4. [*in arith.*] To multiply, as மூன்றைஆறுபெருக்கப்பதினெட்டாகும், three times six are eighteen. (*c.*)

கோயில்பெருக்கி, *appel, n.* One who sweeps a fane.

**பெருங்காயம்**, *s.* Assafœtida, Ferula assafœtida. (*c.*)

கறிப்பெருங்காயம், *s.* Assafœtida, for seasoning food.

யானைப்பெருங்காயம், *s.* Assafœtida used in physic for elephants.

**பெருச்சாளி**, *s.* A large kind of rat, a bandycoote. (*c.*)

பெருச்சாளிவாகனம், *s.* Bandycoote as a vehicle of Ganesa.

**பெருப்பம்**, *s.* [*as* பருப்பம், *which see.*] Bigness, thickness, &c.

**பெருப்பி**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To magnify, to enlarge, அதிகப்படுத்த. 2. To magnify in description, to exaggerate, பருப்பிக்க. (*c.*)

**பெருமு**, கிறேன், பெருமினேன், வேன், ம், *v. n.* [*com.* பொருமு.] To be puffed up or bloated. (*R.*)

**பெருமை**, *s.* Greatness, largeness—oppos. to சிறுமை, பருமை. 2. Highness, dignity, excellence, eminence, nobleness, grandeur, மாட்சிமை. 3. Abundance, excessiveness, மிகுதி. 4. Power, might, வல்லமை. 5. Celebrity, renown, கீர்த்தி. 6. (*fig.*) Pride, vanity, self-consequence, haughtiness, அகந்தை. 7. [*in combin.*] Grossness, heinousness, notoriousness. (*c.*)—*Note.* For the changes in combination, see அருமை. The first letter is lengthened as பே, in the adjective.

பெருமைபீற்றற்கேலம். Pride will end in rags.

பெருமைபெத்தநிக்கமில்லாமலிருக்கிறது. Being free from pride and arrogance.

பெருமையாய்ப்பேசுதல். Speaking arrogantly.

அதனக்குப்பெருமையல்ல. That is no honor to you.

பெரியகுடி — பெரியகுடியானவன், *s.* The chief ryot in a village.

பெரியகுணம், *s.* A noble, liberal disposition; magnanimity, பெருந்தன்மை. 2. Superiority to worldly greatness, honors or pleasure.

பெரியகுளம், *s.* A large tank. 2. A town in the Madura district, நகர்.

பெரியகை, *s.* [*fig.*] A liberal or bountiful hand, தாராளமானகை. 2. An influential party.

பெரியசலவாதி. See சலபாதை.

பெரியதகப்பன், *s.* [*com.* பெரியப்பன்.] The father's elder brother, or the mother's elder sister's husband.

பெரியதம்பிரான், *s.* A god, ஓர்தேவதை; *also used in irony.* 2. See தம்பிரான்.

பெரியதனம், *s.* Dignity, honor, கனம். See தனம். 2. Pride, haughtiness, arrogance, மேட்டிமை. 3. Superintendence.

பெரியதனத்துக்கிருக்க, *inf.* To affect to be a great man; to anticipate great things. 2. To expect the office of governor, &c.

பெரியதனம்பண்ண, *inf.* To govern, to hold the office or place of a magistrate or governor.

பெரியதாய் — பெரியமாதா — பெரியாத்தாள் — பெரியாயி — பெரியம், *s.* The wife of a father's elder brother, &c. See தாய்.

பெரியது. That which is great or large.

பெரியத்தை, *s.* [*contrac. of* பெரியஅத்தை.] The father's elder sister.

பெரியநங்கை — பெரியாநங்கை, *s.* A medicinal plant. See பெரியாணங்கை.

பெரியநடை, *s.* A noble course of conduct, nobleness, gentility, நல்லொழுக்கம்.

பெரியநாயகி, *s.* An epithet of Parvati at Vriddhachalam, பார்வதி.

பெரியநாள், *s.* A special day, holiday.

பெரியபட்டணம், *s.* A large city. 2. A town on the Malabar coast so called.

பெரியபாட்டன், *s.* Grand-father's elder brother.

பெரியபாட்டி, *s.* Grand-mother's elder-sister.

பெரியபிராட்டி, *s.* Lukshmi.

பெரியபுராணம், *s.* An ancient Purana, describing the history of the sixty-three famous devotees of Siva.

பெரியபுலு, *s.* [*in cant numbers.*] A hundred, நூறு.

பெரியபெயர், *s.* A great name, celebrity, popularity.

பெரியமனம், *s.* A noble mind, magnanimity, உதாரமனம்.

பெரியமனிதன், *s.* A great man, பெரியமனிதன். 2. An aged man.

பெரியமாமன் — பெரியம்மான், *s.* The mother's elder brother.

பெரியம்மை, *s.* [*contrac. of* பெரியஅம்மை.] Small-pox, நல்லம்மை.

பெரியர் — பெரியவர் — பெரியார் — பெரியோர், *s.* [*pl.*] The aged, முதியோர். 2. The great.

பெரியவன், *s.* A grown-up man. 2. A man in authority or office, a man of wealth, or excellence, மேன்மையுள்ளோன்.

பெரியவீட்டுக்காரன், *s.* (*lit.*) One living in a large house; *ironically*; one living in a hut. 2. A Pariah.

பெரியவுழைப்பு, *v. noun.* Close application to labor or study, மிகுமுயற்சி.

பெரியவெண்ணம், *s.* High aspirations, great conceptions. 2. [*fig.*] High conceit, assumption.

பெரியோரியல்பு, *s.* Properties, qualities or characteristics of the great, of which seven are enumerated: 1. அறம், virtue, beneficence; 2. பொருள், property, wealth; 3. இன்பம், pleasure, enjoyment; 4. அன்பு, love, affection; 5. புகழ், celebrity, fame; 6. மதிப்பு, estimation, esteem; 7. பொறுமை, patience, forbearance. (சது.)

பெருங்கடல், *s.* The wide sea, the great deep.

பெருங்கணக்கு, *s.* A large amount, பெருந்தொகை. 2. On a large scale, மொத்தம்.

பெருங்கணக்கிலேபேசுகிறான். He talks arrogantly, as though he were a great man.

பெருங்கதை, *s.* A very long story. 2. A general report, a thing well known, பிரசித்தசெய்தி. 3. [*prov.*] The last reading of the பெரியபுராணக்கதை, at a temple.

பெருங்காக்கைபாடினியம், *s.* A treatise. See காக்கைபாடினியம்.

பெருங்காடுதரிசு, *s.* Land left waste for upwards of fifteen years. (*Govt. usage.*)

பெருங்காப்பியம், *s.* The principal epic poems, as பாரதம் and இராமாயணம். See காப்பியம்.

பெருங்காய்ஞ்சொறி, *s.* A kind of nettle. See காய்ஞ்சொறி.

பெருங்காரை, *s.* A kind of fish. 2. A kind of shrub. See காரை.

பெருங்கால், *s.* The elephantiasis, or enlarged leg, யானைக்கால். 2. A large trench, பெருவாய்க்கால். 3. (*p.*) A strong wind, a gale—oppos. to சிறுகால், சண்டமாருதம்.

பெருங்கிரந்தி, *s.* An eruption. See கிரந்தி.

பெருங்கிராமம், *s.* A large village. See கிராமம்.

பெருங்கிழங்கு, *s.* A plant, Aristolochia, Ind. See ஈசுரமூலி.

பெருங்கிழமை, *s.* Entire or sole right. See கிழமை.

பெருங்குமிழ், *s.* A tree. See குமிழ்.

பெருங்குருகு, *s.* The ruddy goose, சக்கரவாகம், said to devour elephants. (*சது.*)

பெருங்குருந்து, *s.* A fragrant tree. See குருந்து.

பெருங்குழி, *s.* A large pit. 2. See குழி.

பெருங்குறட்டை, *s.* A plant. See குறட்டை.

பெருங்குறிஞ்சா, *s.* A plant. See குறிஞ்சா.

பெருங்கொடி, *s.* A large flag, பெரியதுவசம். 2. A large kite.

பெருங்கொன்றை, *s.* A flower-tree. See கொன்றை.

பெருங்கோடணை, *s.* A kettle drum, (*lit.*) the larger noise; [*ex* கோடணை.]

பெருஞ்சீத்தனார், *s.* A professor of the Madura college, his impromptu on the Kural only is preserved, ஓர்சங்கப்புலவன்.

பெருஞ்சீரகம், *s.* Anise seed. See சீரகம்.

பெருஞ்செருப்படி, *s.* A plant, Croton plicatum. See செருப்படி.

பெருஞ்சொல், *s.* Words of general acceptation, பலரறிசொல். (*p.*)

பெருநந்தியாவட்டம், *s.* The eye-flower-tree. See நந்தியாவட்டம்.

பெருநறளை, *s.* A plant. See நறளை.

பெருநறுவிலி, *s.* A fruit-tree. See நறுவிலி.

பெருநாரை, *s.* Stork. See நாரை.

பெருநாள், *s.* A festival, a high day, பண்டிகைநாள். 2. The last of the twenty-seven lunar mansions, இரேவதிநாள்.

பெருநீர், *s.* Sea, ocean, கடல். (*p.*)

பெருநெஞ்சு, *s.* A proud heart.

பெருநெருஞ்சி, *s.* A large thistle. See நெருஞ்சி.

பெருநெருப்பு, *s.* A conflagration.

பெருநெல், *s.* A kind of paddy longer in growing than other kinds.

பெருநையல், *s.* A disease causing the fingers, to fall off, பெருவியாதி. 2. Small-pox, வைசூரி.

பெருந்தகை, *s.* A noble king, அரசன். 2. A noble minded man. (*R.*)

பெருந்தக்காளி, *s.* A plant. See தக்காளி.

பெருந்தலைக்கறையான், *s.* A large-headed white ant.

பெருந்தன்மை, *s.* Dignity, high rank, மேன்மை. 2. Pride, haughtiness, self-consequence, மேட்டிமை.

பெருந்தாரா, *s.* A goose.

பெருந்தாலிகட்டிவெள்ளாழர், *s.* A class of Vellalas who wear a large marriage-badge—oppos. to சிறுதாலிகட்டி.

பெருந்தாளி, *s.* A large kind of winding plant, Convolvulus maximus.

பெருந்திணை, *s.* [*in love poet.*] Lust; criminal connexion with a woman by violence. See திணை.

பெருந்தீனி, *s.* [*in a bad sense.*] Food in large quantities, more sumptuous than ordinary, பேருண்டி. 2. Gluttony, voluptuousness, luxury. See தீனி.

பெருந்துத்தி, *s.* A plant. See துத்தி.

பெருநகை, *s.* Great or intense laughter. See இரசம்.

பெருந்தொடை, *s.* The thick part of the thigh. 2. See தொடை.

பெருந்தேவனார், *s.* (*Hon.*) Names of two professors of the Madura college; one of whom wrote an imitation of the Mahabharat in வெண்பா, which is known by the name of சங்கத்துப்பாரதம். The other was the author of a treatise on versification called கவிசாகரம்.

பெருந்தேனீ, *s.* A honey-bee.

பெருந்தேன், *s.* Honey by bees, as distinguished from கொசுத்தேன். See தேன்.

பெருமகன், *s.* [*pl.* பெருமக்கள்.] A prince, a nobleman, பிரபு. 2. A gentleman, a master, எசமானன்.

பெருமகிழ்ச்சிமாலை, *s.* A panegyric in which the character of an excellent wife is described. See பிரபந்தம்.

பெருமங்கலம், *s.* A poem describing the proceedings of a king's birth-day, ஓர்பிரபந்தம்.

பெருமந்தாரை, *s.* A tree. Bauhinia.

பெருமம்—பெருமன், *s.* [*also* பருமம், பருமன்.] A large bulky thing, பெரியது.

பெருமரம், *s.* A kind of tree, பெருங்கள்ளி, Plumosa alba. 2. A stinking tree. See பீநாறிமரம்.

பெருமரத்துப்பட்டை, *s.* Bark of the above tree.

பெருமருந்து, *s.* A twining plant, Indian Birthwort, Aristolochia Ind.

பெருமருந்துவேர், *s.* Root of the above.

பெருமலை, *s.* Mount Meru, or the golden mountain, மேருகிரி.

பெருமலைகலக்கி, *appel. n.* A plant, Adiantum caudatum.

பெருமழை, *s.* Heavy rain.

பெருமா, *s.* Any large animal as an elephant, யானை; [*ex* மா.] (*சது.*)

பெருமாட்டி, *s.* A lady, mistress, princess.

பெருமாந்தம், *s.* A disease in children.

பெருமல்லரி, *s.* As பெருமரம், 1. (*R.*)

பெருமாள், *s.* [*a change of* பெருமான்.] A prince, a nobleman, பெருமையிற்சிறந்தோன். 2. Vishnu, திருமால்.

பெருமான், *s.* A prince, a king, அரசன். 2. A nobleman, பெருமையிற்சிறந்தோன். 3. An elder, an elder brother, மூத்தோன். 4. Siva, சிவன். 5. Vishnu, விஷ்ணு. 6. A guru, குரு.

நான்தான்பெருமானென்றுவந்தான். He came calling himself a great man.

பெருமாகோதையர், *s.* [*also called* சேரமான்பெருமான், *which see.*] A king and a poet. Of his productions, are மும்மணிக்கோவை, கைலாசவுலா, பொன்வண்ணத்தந்தாதி.

பெருமிதம், *s.* Joy, களிப்பு. [Compare பருமிதம்.] 2. Plenty, மிகுதி. (*சது.*) 3. Great measure, அதிகஅளவு. (*R.*)

பெருமீன், *s.* A large fish, as யானைமீன்.

பெருமுசட்டை, *s.* A plant, Convolvulus Malabaricus.

பெருமுத்தரையர், *s.* Persons of independent wealth, கவாதீனச்செல்வர். (நாலடி.)

பெருமூச்சு, *s.* Hard breathing, sighing, panting. (*c.*)

பெருமூச்சுவிட—பெருமூச்செறிய, *inf.* To fetch a deep breath from grief, rage, &c.

பெருமைகாட்ட, *inf.* To manifest pride or arrogance.

பெரும்பசிரி, *s.* A garden herb. See பசிரி.

பெரும்படி, *s.* Coarseness, thickness, &c., as பரும்படி.

பெரும்பதி, *s.* A town surrounded by villages, மருங்கிலூர்குழ்பதி.

பெரும்பயறு, *s.* A kind of pulse. See பயறு.

பெரும்பயன், *s.* Great, lasting, or eternal benefit.

பெரும்பராக்கு, *s.* Carelessness, negligence, supineness, அசட்டை.

பெரும்பறவை, *s.* The feigned bird with eight legs, எண்காற்புள்.

பெரும்பனசை — பெரும்பனையன், *s.* Small-pox, with large pustules. See பனசை.

பெரும்பாடு, *s.* Immoderate flow of the menses; (*lit.*) great suffering.

பெரும்பாடிறைக்க, *inf.* To flow excessively, as the menses.

பெரும்பாந்தள் — பெரும்பாம்பு, *s.* A large snake.

பெரும்பாலார், *s.* [*pl.*] The majority. See பால்.

பெரும்பாலும். For the most part, generally, commonly, customarily, மிகுதியும்.

பெரும்பாவி, *s.* A great sinner, கொடும்பாவி.

பெரும்பாழ்-பெரும்பாழ்வெளி, *s.* The extreme point of space, as பெருவெளி.

பெரும்பாற்சொற்றி, *s.* A plant. See பாற்சொற்றி.

பெரும்பிடி, *s.* Exaction.

பெரும்பிரண்டை, *s.* A large kind of பிரண்டை creeper. See பிரண்டை.

பெரும்பிளவை, *s.* A bad ulcer.

பெரும்புலி, *s.* The royal tiger.

பெரும்புள், *s.* The large owl, கூகை. (*சது.*)

பெரும்பூண், *s.* A jeweled-breast-plate.

பெரும்புழை, *s.* A wicket in a large gate. (*p.*)

பெரும்பூளை, *s.* A plant, Illecebrum Javanicum.

பெரும்பெயர், s. A great name, great renown.

பெரும்பெயர்க்கடவுள். The Supreme Being.

பெரும்பொங்கல், v. noun. A ceremonial boiling of rice by great numbers. See தைப்பொங்கல்.

பெரும்பொழுது, s. The six seasons of the year, as distinguished from சிறுபொழுது. See பொழுது, and பருவம்.

பெருவயிறு, s. A large belly. 2. A kind of disease. See மகோதரம், குன்மவயிறு.

பெருவயிறுபற்ற, inf. To swell, as the belly, in dropsy.

பெருவள்ளிக்கிழங்கு, s. A plant, Dioscorea sativa. (R.)

பெருவாகை, s. A tree, Mimosa flexuosa. (Rott.)

பெருவாரி—பெருவாரிக்காய்ச்சல், s. A pestilence, plague, epidemic.

பெருவாழ்வு, s. Great prosperity. See பதிவாழ்வு.

பெருவியாதி, s. A leprosy causing the dropping off of the fingers, toes, &c., குஷ்டம்.

பெருவிரியன், s. A poisonous serpent, great viper.

பெருவெளி, s. A large open plain. 2. The vast etherial expanse as the abode of Deity. 3. As சிதாகாசம்.

பெருவெள்ளம், s. Great inundation.

பெருவெள்ளை, s. A kind of rice, ஓர் நெல்லு.

பெருவ — வாய்ப்பெருவ, inf. To chatter in sleep, தூக்கத்தில்பிதற்ற. (Beschi.)

பெலக்க, inf. [com. for பலக்க, which see.] To become strong, mighty, &c.

*பெலம்—பெலன், s. Strength, power, vigor. 2. Firmness, validity, &c. See பலம். (c.)

பெலன்காட்ட, inf. To make a display of strength, powers, abilities. 2. To perform extraordinary exploits. 3. To be powerful—as medicines.

*பெலி, s. A sacrifice, &c. See பலி.

பெல்லி, s. A puny devil, an elf, பிசாசம். 2. Witchcraft, சூனியம், as பில்லி. (vulgar usage.) 3. [prov.] A short stick tied to the end of a pole forming a hook or crook, துரட்டியின்முளை.

பெள், பெட்கிறேன், பெட்டேன், பெட்பேன், பெட்க, v. a. and v. n. To wish, desire, விரும்ப. 2. To long for, ஆசைப்பட. (சது.)

பெட்டார், appel. n. Friends, lovers, சிநேகிதர். (சது.)

பெறு, கிறேன், பெற்றேன், வேன், பெற, v. a. To obtain, attain, secure, possess. அடைய. 2. To beget, generate, ஜெனிப்பிக்க. 3. To bring forth, to have children, பிரசவிக்க. 4. To experience, to be affected favorably or unfavorably, அனுபவிக்க. 5. To have the benefit or enjoy the privilege of, சுகிக்க. 6. v. n. To be worth, to bring a price, to be valid for, விலைபெற. 7. To be worthy, தக.—Note. In some cases this verb when preceded by another in the infinitive has much the sense of பட, as அடையப்பெறும், it may be had; சொல்லப்பெறும், it may be said; காணப்பெற்றேன், I obtained sight of.

ஆதாயத்தைப்பெற்றான். He obtained profit.

இதுபிரயாசத்தைப்பெறாது. It is not worth the trouble.

பத்துப்பணம்பெறும். It is worth ten fanams.

அவன்பெறுமானவன். He is a worthy man.

ஒருகாசும்பெறாதவேலை. It is worth nothing.

பெற்றமனம்பித்துப்பிள்ளைமனங்கல்லு. The heart of the mother is bile [water]; the heart of the child is stone.

பெறாத, neg. rel. part. Insufficient, unsound, ineffectual, &c.

பெறாதசாமீ. Insufficient security.

பெறாதகாரியம். An unsound argument, or ineffectual lawsuit.

பெறாதபேச்சு. Worthless talk.

ஆற்றுப்பெறாதவேதனை. Intolerable torment. (p.)

பெறுத்த, inf. [prov. in combin. v. noun. பெறுத்தல்.] To cause, பெறுவிக்க. நிலைபெறுத்தலும்,நீக்கலும். Establishing and removing or destroying. (இல.)

பெறுமதி, s. [prov. பெறுதி.] Worth, value, தகுதி. 2. Ability, திராணி. 3. Validity, security, உறுதி. 4. Prize, reward, வெகுமதி.

பெறுவதுகொள்வோர், appel. n. Prostitutes, வேசையர். (p.)

பெற்றகடன், s. Obligation which the child owes to its parent, especially the mother, for giving it birth, தாய்க்குச்செய்யுமுரிமை.

பெற்றதகப்பன், s. One's own father.

பெற்றதாய், s. One's own mother,

பெற்றபிள்ளை, s. One's own child.

பெற்றவயிறெரிய, inf. To grieve, yearn, as a mother at the death or sufferings of her child.

பெற்றவன், appel. n. A father, [fem. பெற்றவள்.] 2. [in combin.] One who has received, as பெயர்பெற்றவன், வரம்பெற்றவன்.

பெற்றோர், appel. n. Parents, இன்றோர்.

பெற்றோர்பிறந்தார், appel. n. Parents, brothers, and sisters.

பெற்றுவளர்க்க, inf. To bring forth and bring up a child.

பெறல்—பெறுதல், v. noun. Obtaining, அடைதல். 2. Finding, getting, கிடைத்தல். (சது.)

பெறுதி s. [prov.] Worth, &c. See பெறுமதி, under பெறு, v.

பெற்றம், s. A bull, எருது. 2. Taurus of the Zodiac, இடபவிராசி. 3. A buffalo in common, பசுவின்பொது. 4. Wind, air, காற்று. (சது.)

பெற்றம்பெற்றவன்றன்னை. Bhima who was begotten by the wind. (பாரதம்.)

பெற்றி-பெற்றிமை, s. Nature, quality, natural property, குணம். 2. Kind, character, description, manner, order, தன்மை. (p.)

பென்னம்பெரியது, [symb. verb.] Very large, used interjectively. Compare சின்னஞ்சிறியது. (R.)

# பே

பே. A syllabic letter formed of ப் and ஏ.

பே, (Hind.) No, not, இல்லை.

பேபந்து. Without order.

பேபாக்கி. No remainder.

*பே, s. [contract. of பேனம்] Foam, scum, froth, நுரை. 2. Cloud, மேகம். (p.)

*பேகம், s. A frog, தவளை. W. p. 627. B'heka. 2. See மேகம்.

பேகன், s. One of the last of the kings famed for liberality, கடையெழுவள்ளலொருவன். 2. [fem. பேகி.] The male of frogs, ஆண்தவளை.

பேசு, கிறேன், பேசினேன், வேன், பேச, v. a. To talk with, to converse, speak, to hold conversation, to commune, சம்பாஷிக்க. 2. To deal or bargain; to negociate a business verbally, தரபேச. 3. To tell, say, communicate, சொல்ல. 4. [fig.] To abuse, to vilify, as ஏச. (c.)

பேசாதே. Don't speak, don't tell.

பேசத்தெரியாதவன், appel. n. One who is not a good speaker, or who cannot negociate, &c.

பேசாதபேச்சு, s. Improper talk. 2. Indecent or obscene language.

பேசாமடந்தை, s. A princess who resolved not to speak, but was forced to do so by Vikramaditya.

பேசாமலிருக்க, inf. To be silent.

பேசிக்கொண்டிருக்க, inf. To be conversing socially.

பேசுவாய், s. A chief minister of the Tanjore kings. (Beschi.)

பேச்சு, v. noun. Speaking, பேசுதல். 2. Speech, language, பாஷை. 3. Declaration, expression, விளம்புதல். 4. Praise, புகழ். 5. Conversation, talk, subject of conversation, சம்பாஷணை. 6. Errand, message, verbal communication, report, செய்தி. 7. Rumor, வதந்தி. 8. A word, வார்த்தை. 9. Discourse, speech, harangue, பிரசங்கம். (c.)

பேச்சிலேகுற்றங்கண்டுபிடிக்கிறது. Finding a flaw in one's speech.

உன்பேரிலேவெகுபேச்சுண்டு. Many bad things are spoken of you.

இப்படிஒருபேச்சுப்பிறந்தது. There arose a rumor to this effect.

அவன்பேச்சுமூச்சில்லாமலிருக்கிறான். He is without speech or breath; i. e. near death.

பேச்சிலேவிட்டுப்பார்த்தால்தெரியும். His ability is known in his addresses.

பேச்சழிய-பேச்சுத்தப்ப, inf. To fail in keeping one's word, சொற்றப்ப.

பேச்சறுதி, s. Decision in bargaining, as சொல்லறுதி.

பேச்சற்றவன், appel. n. One who does not keep his word. 2. A silent ascetic.

பேச்சாளி, s. A good speaker. 2. An upright man, as சொல்வாளி.

பேச்சுக்காரன், s. As பேச்சாளி, 1.

பேச்சுக்கிடம், s. Liberty of speech. 2. Occasion for slander.

பேச்சுக்கொடுக்க, inf. To speak with one in order to obtain secrets.

பேச்சுத்தடுமாற, inf. To contradict one's self. 2. To be confused, puzzled or disconcerted in speaking.

பேச்சுத்தட்ட, inf. To stammer, stutter, hesitate.

பேச்சுத்தாராளம், s. Freedom or freeness of conversation. 2. Fluency of speech, eloquence. 3. Civility, politeness, in address, or discourse.

பேச்சுத்திறாணி, s. Power of language, eloquence.

பேச்சுத்துணை, s. One to converse with.

பேச்சுநடக்க, inf. To go on as a speech, story or conversation. 2. To spread as a rumor.

பேச்சுநடக்கிறது. The report goes abroad.

பேச்சுப்பிடுங்க, inf. To fish out secrets from one's talk.

பேச்சுமூச்சு, s. Speech or breathing.

பேச்சுவல்லபம், s. Ability in speaking, eloquence.

பேச்சுவளர, inf. [trans. பேச்சுவளர்க்க.] To become prolonged, to grow warm, or to abuse—as in a dispute.

பேச்சுவார்த்தை, s. Speech. 2. Amicable or speaking terms.

அவர்களுக்குள்பேச்சுவார்த்தையில்லை. They don't speak with each other.

பேச்சுறுதி, s. Faithfulness to one's word or promise.

பேச்சாட்டுத்துணை—பேச்சொடுதுணை, s. One to talk with. (c)

பேச்சுப்பல்லக்குநடும்பேர்ல்நடை. His words are in a palankeen; he is on foot.

•பேச்சி, s. A female imp. See பிச்சி. W. p. 553. Pesee.

பேஜா, adj. Improper, inaccurate.

பேஷ், adj. (Pers. Beish.) Good, proper, best, நல்ல.

பேஷ்கஷ், s. (Pers.) A tribute, இறை.

பேஷ்கார், s. (Pers.) An officer of revenue inferior to a Tahsildar.

பேஷ்கி, s. (Pers.) Advance of money.

பேஷ்வா, s. (Mahrat.) Leader, foreman, a title formerly applied to a prime minister.

பேடர், s. [sing. பேடன்.] Hermaphrodites, அலிகள்; [ex பேடு.]

பேடி, s. [pl. பேடியர்.] An hermaphrodite, inclining toward the female, அலி.

பேடிகைவில்வாள்போலே. Like a sword in the hand of a hermaphrodite, is learning to many.

பேடியெழுத்து, s. A letter neither male nor female—that is a guttural, as க.

பேடிசம், s. Imposition, deception, dissimulation, false appearance, hypocrisy, மயக்கு. (c.)

பேடிசக்காரன், s. A dissembler, a hypocrite.

பேடிசங்காட்ட—பேடிசம்பண்ண, inf. To play the hypocrite. 2. To counterfeit a work, &c.

பேடிசவித்தை, s. Dissimulation, hypocrisy.

பேடு, s. An hermaphrodite, அலி. 2. Dance of Kama, மன்மதன்கூத்து. 3. Town or village, ஊர். 4. Female of birds, the hen, பெண்பறவை. (p.)

பேடாடல், a. noun. Dance of Kama, as பேடு, 2.

பேடை, s. Female of birds, the hen, பறவைப்பெண். (p.)

பேட்டி, s. (Hind.) Access to, or waiting on, a great person. (c.)

பேட்டிகொடுக்க, inf. To give audience.

பேட்டிபண்ணிவைக்க, inf. To procure one access to a great person.

பேட்டியாச்சுது. I have had access to the governor, &c.

பேட்டு, s. [for.] A stripe or streak in general, rather broad, பட்டைக்கரை. (c.)

•பேட்டை, s. Suburb, pettah. Compare பட்டு. 2. A village near a market-town, சந்தையூர். (சது.)

•பேணகம், s. A kind of pastry, ஓர் பணிகாரம்.

பேணம், s. [prov.] Tenderness, affection, regard, esteem, மதிப்பு. 2. Care, caution, as பதனம். 3. Nurture, fostering, as பேணல்.

பேணு—பேண், கிறேன், பேணினேன், பேணுவேன், பேண, v. a. To take great care of, to treat tenderly, to pamper, பராமரிக்க. 2. To cherish, foster, nurture, tend, ஓம்ப. 3. To regard, esteem, value, appreciate, respect, honor, சங்குமதிக்க. 4. To protect, secure, காக்க. 5. To wish for, to desire greatly, ஆசைபெருக. 6. To purpose, think, கருத. 7. To mark out, indicate, குறிக்க; [from Sa. Pen'a, to embrace.]

பேணாவு, v. noun. [sometimes பேணல்.] Great desire; esteeming.

பேணார்—பேணலர், appel. n. Foes, பகைவர். (p.)

கர்த்தனைப்பேண, inf. To love and honor God.

தந்தைதாயைப்பேண். Honor father and mother. (Avv.)

குலஸ்திரீதன்பர்த்தாவையும், பரஸ்திரீதன்மேனியையும்பேணுவள். A married wife honors and cherishes her husband; a strange woman her own body.

பேண்—பேண்மரம், s. [prov. com. ஆடுகால்.] The two beams on which the axle of a well-sweep rests.

•பேதகம், s. Difference, disagreement, variance, discord, பேதம். W. p. 627. B'hedaka. (c.)

பேதகம்பண்ண, inf. To be insincere in friendship. 2. To be wanting in cordiality, to be disaffected. 3. To be a slack friend. 4. To sow discord.

•பேதமை, s. Ignorance, அறிவின்மை. See பேதைமை. (c.)

•பேதம், s. Difference, dissimilarity, வேற்றுமை. 2. Disagreement, variance, disaffection, பிரிவினை. 3. Diversity, variety, திரிபு. 4. Subdivision, sect, division, பகுப்பு. 5. Discord among confederates. See உபாயம். 6. Variation, modification, alteration, விகற்பம். 7. Incongruity, inconsistency, இணக்கமின்மை. W. p. 627. B'heda. 8. One of the twenty-eight Saiva Agamas. See சிவாகமம்.

பேதம், ௩. The three differences. These are: 1. சுகதபேதம், difference between the head and its ramifications, &c.; 2. சாதிபேதம், difference in the different species, as between one tree and another; 3. விசாதிபேதம், difference in things unlike, as between trees and stones.

பேதம், ௬. A six-fold division. This is as follows: 1. சாதிபேதம், division, distinction of caste or tribe; 2. சமயபேதம், or மதபேதம், differences of religion; 3. மந்திரபேதம், varieties of incantations; 4. மனப்பேதம், difference of disposition, thought, taste, or inclination; 5. சாஸ்திரபேதம், difference in science, doctrine, &c.; 6. உலகபேதம், varieties of worlds. For some other differences as இடப்பேதம், காலபேதம், சொற்பேதம், பொருட்பேதம், குணபேதம், see in their places.

பேதக்காரர், s. Schismatics, heretics.

பேதசைவம், s. One of sixteen divisions of the Saiva system. See சைவம்.

பேதம்பண்ண, inf. To make a difference. 2. To sow discord, cause alienation between parties.

பேதாதிபேதம், s. Very great difference, மிகுபேதம்.

பேதாபேதம், s. Diversity, variety, multiformity, பலபேதம். 2. Similarity and dissimilarity, agreement and disagreement, வேற்றுமையும், ஒற்றுமையும். 3. The union of separate things—as of the soul and body.

பேதலி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To vary, alter; to change in form, appearance, or nature, to be estranged, வேற்றுமைப்பட. 2. To be discouraged, dismayed, மனங்குழம்ப. 3. To hesitate, சந்தேகப்பட. (c.)

நிறம்பேதலிக்கிறது. The colors differ.

பேதலிக்கப்பண்ண, inf. To discourage one.

பேதலிப்பு, v. noun. Variation, disaffection.

•பேதனம், s. Causing separation or division. See சுரும். W. p. 627. B'hedana.

பேதா, s. [Hind.] A peon, சேவகன். 2. A chess-man, சதரங்கக்காய்ப்பிரிவு.

பேதானு, s. [Hind.] Quince-seed, ஒரு விதை. Ains. v. 1. p. 332.

•பேதி, s. That which divides, detaches, separates, பிரிப்பது. W. p. 627. B'hedin. 2. Variation, difference, change, as பேதம். 3. Discharge from the bowels, being a change; looseness; also cholera, கழிச்சல். 4. A purgative, cathartic, பேதிமருந்து. (c.) 5. Mercury, quicksilver, இரதம். 6. [in combin.] A solvent, of which there are five kinds: 1. அன்னபேதி; 2. ஊமைபேதி; 3. சொர்ணபேதி; 4. அலிபேதி; 5. சல்லிபேதி, or கல்பேதி, which see.

பேதிகாண, inf. To begin to purge, as in cholera.

பேதிகாரி, s. A purgative plant. See ஆற்றுத்தும்மட்டி. 2. A purgative in general, பேதிமருந்து.

பேதிக்குக்கொடுக்க, inf. To administer a cathartic.

பேதிக்குவாங்க, inf. To take a cathartic.

பேதியாக, inf. To operate as a cathartic, to purge. 2. To be attacked by cholera.

பேதி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. a. To divide, to separate, &c., பிரிக்க. 2. To sow discord or dissension, பேதகஞ்செய்ய. 3. To turn the mind from a right course, வேறுபடுத்த. 4. To excite disgust, to alienate, மனவெறுப்புச்செய்ய. 5. To change, diversify, மாற்ற. 6. To despise, to scorn, சிச்சிக்க. 7. v. n. To change, vary, differ, disagree, வேறுபட. 8. To degenerate, deteriorate, கெட. 9. To become estranged, to be disgusted with, மனமடிய. 10. To be relaxed in the bowels, to purge, பேதியாக. 11. To become broken, to be interrupted, frustrated, குலைய. (c.)

பேதித்தசமயம். A religion inconsistent with itself.

பேதித்துக்கேட்க, inf. To pump one.

பேதித்தல்-பேதிப்பு, v. noun. Separation, variance, dissatisfaction, purging.

பேது, s. (Hind.) Secrecy, secret inquiry, இரகசியம்.

•பேது, s. Bewilderment, confusion, consternation, intoxication, தடுமாற்றம். 2. Delirium, mental derangement, உன்மத்தம்.

பேதுற, inf. [v. noun பேதுறவு.] To be bewildered. 2. To become insane, மதிமயங்க. (p.)

•பேதை, s. A simpleton, an ignorant man, a dolt, அறிவிலான். 2. A woman, as being simple minded, பெண். (See மடம்.) 3. A girl from five to seven years old. See பருவம். (c.) 4. A hermaphrodite, பேடி. 5. A poor man, தரித்திரன். 6. Toddy, vinous liquor, கள். (சது.)

பேதைப்படுக்கும்ஊழ். Works of former births stultifying the mind. (குறள்.)

பேதைத்தனம், s. Simplicity, weakness, silliness, folly, ignorance.

பேதைப்புத்தி, s. Weak intellect, folly, credulity, indiscretion.

பேதைமை, s. [com. பேதமை.] Simplicity, weakness, ignorance, credulousness, thoughtlessness, carelessness, as மடமை.

பேதைமையென்பதுமாதர்க்கணிகலம். Simplicity is an ornament of woman. (Avv.)

பேதையர், s. [pl.] The indigent, the poor, தரித்திரர். 2. The base, the vulgar, கீழ்மக்கள். 3. Women of desert tracts, பாலைநிலமகளிர். (சது.) 4. Simpletons, the ignorant, அறிவிலர். 5. Women, பெண்கள்.

பேத்தி. See பேர்த்தி.

பேத்தை, s. An ugly looking kind of fish, as பொத்தை. (c.)

பேபந்து—பேபாக்கி. See பே.

•பேம், s. Fear, dread, terror, பயம். (சது.) See பீமம்.

பேய், s. A devil, goblin, fiend, as பிசாசம். 2. [in combin.] Wild, as plants or trees, காட்டுக்கொத்த. 3. Evil, bad, vile, ferocious, கெட்ட. (c.)

உலகத்துக்குஞானம்பேய் ஞானத்துக்குலகம்பேய்..... Wisdom is a devil to the world and vice versa. [prov.]

பேய்க்குவேப்பிலைபோலே. As repugnant to one as Margosa leaves are to devils.

பேய்போலேதிரிகிறது. Going about in eager search of gain.

பேயத்தி, s. A species of fig-tree, Ficus dæmonum, L.

பேயன், s. [fem. பேய்ச்சி, பேச்சி.] A demoniac. 2. A head-strong fool, a madman, பைத்தியகாரன்.

பேயன்வாழை, s. A kind of plantain, a medicinal fruit.

பேயாட, inf. To whirl the head through possession.

பேயாடி, appel. n. A conjurer. 2. A fortune-teller.

பேயாட்ட, inf. [appel. n. பேயாட்டி.] To cause a person, to be possessed for the utterance of oracles.

பேயாட்டம், v. noun. A devil's dance, பேய்க்கூத்து. [also பேயாட்டு.] 2. Fiendishness, ferociousness, பேய்த்தன்மை. 3. Confusion, disorder, கலக்கம்.

பேயாமணக்கு, s. A wild castor-oil-plant.

பேயாவிரை, s. A kind of wild ஆவிரை.

பேயாழ்வார், s. One of the twelve Vaishnuva devotees. He composed a hundred verses of சாஸ்திரப்பிரபந்தம், நாலாயிரம்.

பேயுறிஞ்ச, inf. [prov.] To suck the blood of a person—as a devil; either killing or greatly weakening him.

பேயுள்ளி, s. Wild onion, நருள்ளி.

பேயுறைந்தவீடு, s. A house haunted by devils.

பேயெரிக்க, inf. To burn out a devil by magic. See எரி, v.

பேயையுருவேற்ற, inf. [sometimes பேயேற்ற.] To cause a devil to possess a person.

பேயோடாடி, appel. n. Siva, as dancing with devils, சிவன்.

பேயோட்ட—பேய்துரத்த, inf. [appel. n. பேயோட்டி.] To exorcise.

பேயோணான், s. The large kind of ஓணான் lizard.

பேய்க்கண், s. Eyes, or looks of a demoniac. 2. Frightful eyes, அருச்சத்தகண்தி.

பேய்க்கண்டல், s. A tree. See கண்டல்.

பேய்க்கரும்பு, s. A wild and useless sugar-cane, Saccharum arundinaceum.

பேய்க்காடு — பேயுறைந்தகாடு — பேய்மேய்க்காடு, s. A jungle haunted by devils.

பேய்க்குணம், s. An unsociable, peevish disposition.

பேய்க்குப்படைக்க, s. To make offerings to devils; also used in cant.

பேய்க்குறை-பேய்க்கோட்டாலை, s. Evil, disaster, &c., resulting from the malice of an unpropitiated devil.

பேய்க்கூண்டு — பேய்ப்பள்ளி, s. A noted place where the black arts are said to be taught, மாயவித்தைபயிற்றுமோரிடம்.

பேய்க்கொம்மட்டி, s. Coloquintida or bitter apple, Cucumis colocynthis.

பேய்க்கோலம், s. A hideous, monstrous or diabolical appearance.

பேய்ச்சத்தம், s. Hideous noise of devils, said to be heard in desert places in time of epidemics.

பேய்ச்சிலை, s. An idol, a statue of a demon.

பேய்ச்சுரை, s. A bitter variety of gourd.

பேய்த்தக்காளி, s. A plant, Solanum Lycopersicum.

பேய்த்தண்ணீர், s. [in cant.] Ardent spirits; (lit.) devil's water, சாராயம்.

பேய்த்தனம், s. Fiendishness, ferociousness, &c.

பேய்த்தும்மட்டி, s. As பேய்க்கொம்மட்டி.

பேய்த்தும்பை, s. A plant. See தும்பை.

பேய்த்தேர், s. The mirage or vapor of the noonday-sun, said to be the chariot of devils.

பேய்நரி, s. A mad fox.

பேய்நாய், s. A mad dog.

பேய்நிலை, s. One of the postures of devils.

பேய்பிடிக்க, inf. [appel. n. பேய்பிடித்தவன்.] To be possessed by a devil.

பேய்ப்பசலை, s. A plant. See பசலை.

பேய்ப்பழக்கம், s. Unnatural and irregular habits.

பேய்ப்பயல், s. A foolish fellow.

பேய்ப்பள்ளி. See பேய்க்கூண்டு.

பேய்ப்பாகல், s. A creeper. See பாகல்.

பேய்ப்பாட்டு, s. Diabolical songs addressed to devils, &c.

பேய்ப்பார்வை, s. Demon-like, frightful looks.

பேய்ப்பாற்சொற்றி, s. A plant. See பாற்சொற்றி.

பேய்ப்பிடி, s. An irresistible grasp.

பேய்ப்பிள்ளை, s. A disobedient, intractable child.

பேய்ப்புடல், s. A gourd. See புடல்.

பேய்ப்புத்தி, s. Imprudence, folly, rashness.

பேய்ப்புல், s. A kind of grass. See புல்.

பேய்ப்போக்கு, s. Irregular, absurd conduct, &c., ஒழுங்கில்லாநடை.

பேய்மருட்டி—பேய்வெருட்டி, appel. n. A plant. See பேய்த்தும்பை.

பேய்மனம், s. The vile heart, the carnal mind.

பேய்முகம்—பேய்மூஞ்சி, s. A hideous face, hideous features.

பேய்முசுட்டை, s. A plant, Convolvulus speciosus.

பேய்முன்னை, s. A tree, Celtis orientalis, L.

பேய்விட்டாட்ட, inf. To cause possession by a devil.

பேய்வித்தை, s. Witchcraft, sorcery, conjuring, சூனியவித்தை.

பேய்ப்பேயெனல், v. noun. An exclamation of affright; as to say—a spectre! பயக்குறிப்பு. 2. The bleating of sheep, ஆடு கப்பிடுதல்.

பேரன். See பேர்.

•பேரி, s. A kettle drum, முரசு. W. p. 627. B'HERI. 2. A drum in general, பறைப்பொது.

•பேரிகை, s. A kettle drum, முரசு.

பேர், s. [a change of பெயர்.] Name, word, &c. (c.)

பேரடிபட—பேர்பட—பேராக, inf. To be celebrated, to have fame.

பேரப்பிள்ளை, s. A grand-child.

பேரன், s. A grand-son. 2. A grandfather. See பெயரன்.

பேராளன், s. [also பேராளி.] A renowned personage. 2. See பேர், adj.
பேரிட, inf. To give a name.
பேரிடாப்பு—பேர்டாப்பு, s. A list of names; [ex இடாப்பு.]
பேருக்குச்செய்ய-பேருக்குநடத்த, inf. To act in reference to a reward, as an eye-servant; or for fame.
பேரூர், s. One's name and country.
பேரூரில்லாதகடிதம். Anonymous letter.
பேரெடுக்க, inf. To get a name, acquire fame, &c.
பேரெழும்ப, inf. To spread as one's fame.
பேரேடு, s. An ola-account-book, or ledger, to receive entries from the day-book, பெயர்க்கணக்கேடு. (c.)
பேர்த்தி, s. [also பெயர்த்தி.] A granddaughter, பௌத்திரி. 2. [prov.] A grandmother, as பாட்டி.
பேர்படுதல், v. noun. Being named, entitled, styled. 2. Becoming celebrated.
பேர்பட்டவன் — பேர்பெற்றவன், appel. n. A famous person.
பேர்வழி, s. A list of names; a roll, register, பேரட்டவணை. 2. Genealogy, வமிசவரிசை.
பேர்வழிப்பட்டோலை, s. An ola containing a list of names, பேர்டாப்பு.
பேர்வைத்தல், v. noun. Naming. 2. Giving a nickname.

பேர், adj. [used as a prefix.] Great, large, excellent, principal, பெரிய. See பெருமை.
பேரகத்தி, s. A large-leaved kind of அகத்தி.
பேரகத்தியம், s. The larger treatise on Grammar by Agastya; the other being called சிற்றகத்தியம்.
பேரணி, s. The main body, the centre of an army, நடுப்படை.
பேரணிகலம், s. The principal breastplate, பெரும்பதக்கம்; [ex அணிகலம்.] (சது.)
பேரம்பலம், s. One of the five sacred halls of சிதம்பரம், its character being mystic, சிதம்பரத்தைந்துசபையிலொன்று.
பேரவியல், v. noun. [prov.] A great rice-boiling for a company of religious mendicants, பெரும்பொங்கல்.
பேரழகு, s. Great beauty.
பேரறிவு, s. Knowledge of man, as contrasted with that of brutes, மக்களுணர்வு. 2. Divine knowledge, spiritual knowledge, ஞானம். 3. Uncommon mental powers, high attainments, முதறிவு, as distinguished from சிற்றறிவு.
பேரறிவாளர், s. [pl.] Persons of mature understanding.

பேரறுகு, s. A kind of அறுகு grass.
பேராசை, s. Intense desire; avarice; lasciviousness, பேரவா.
பேராண்டு, s. Indian cycle of sixty years, அறுபதுவருடங்கொண்டது.
பேராண்மை, s. Intrepidity, manliness, great courage, valor, வீரம்.
பேராந்தை, s. A large kind of owl, கூகை. (Old Dic.) 2. The bartavelle, or Greek partridge. See கிலாமுகிப்புள். (சது.)
பேராமணக்கு, s. The castor-plant. See ஆமணக்கு.
பேராமல்லி, s. A species of Jasmine, Jasminum undulatum.
பேராமுட்டி—பேரமுட்டி, s. A sweet smelling plant, Pavonia oderata.
பேராலவட்டம், s. A large kind of circular fan. See ஆலவட்டம்.
பேராழிமாமுனி, s. The father of Tiruvalluvar, Avvai, and others.
பேராளன், s. The fifth lunar asterism, மிருகசீரிடநாள். (சது.) 2. See பேர், name.
பேரானந்தம், s. [also பேரின்பம்.] Supreme enjoyment, final bliss, as பரமானந்தம்.
பேரியாழ், s. One of the four kinds of musical instruments. See யாழ்.
பேரிலக்கம், s. [in arith.] A whole number, முழுவிலக்கம்.
பேரிழவு, s. [vul. பேரெழவு.] A great calamity—as many deaths in a family. (c.)
பேரிளம்பெண், s. A woman from thirty-two to forty years. inclusive, நாற்பதுவயதுப்பெண். See பருவம்.
பேரின்பம், s. Heavenly joy, great delight.
பேரின்பம்வேண்டிற்சிற்றின்பமொழிக்க. If you desire heavenly joy, give up sensual pleasure.
பேரின்பக்காதல், s. A poem. See காதல்.
பேரின்பப்பாட்டு, s. A song or verses addressed to a deity—oppos. to சிற்றின்பப்பாட்டு.
பேரீச்சு—பேரீஞ்சு—பேரீந்து, s. The date-tree. See ஈச்சு.
பேரீச்சம்பழம், s. Dates, fruit of the பேரீஞ்சு.
பேருண்டி, s. [also பேருணவு.] A principal meal—oppos. to சிற்றுண்டி.
பேருதவி, s. Help in great extremity.
பேருமரி, s. A delicate, brittle, saltish herb. See உமரி.
பேரூர், s. A large town or district. 2. A town in an agricultural tract, கிராமம். 3. As மேலைச்சிதம்பரம்.

பேரூற்று, s. A large spring or fountain.
பேரெல்லை, s. [in வெண்பா verse.] That which has the greatest number of lines, the limit being eight—oppos. to சிற்றெல்லை.
பேரொலி — பேரோசை, s. A great noise, clamor. 2. Roar, din, பேரிரைச்சல்.
பேரொளி, s. A great light—as in the presence of the deity, பெரும்பிரகாசம்.
பேரோலக்கம், s. A great assembly. See ஓலக்கம்.

பேர், கிறது, ந்தது, பேரும், பேர, v. n. To become loose, to be detached, சிதைய. 2. To leave, depart, remove, to go away, நீங்க. For other meanings, see பெயர், v.
பேர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To change, remove, &c. See பெயர், v. a. (சது.)
பேர்த்தி. See பேர்.
பேலு-பேல், கிறேன், பேன்றேன், வேன், பேல, v. a. [vul.] To ease one's self, மலவிசர்ச்சனைசெய்ய.
•பேழை, s. [corrup. of Sa. Ped'a.] A round basket, a coffer, chest or box, an ark, பெட்டி. (c.)
பேழ், adj. Great, large, பெரிய. (p.)
பேழ்வாய், s. Large mouth. (திருவிளை.)
பேறு, s. A good obtained, a benefit, an acquisition, ஆதாயம். (சது.) 2. Endowment, bestowment, supernatural gift, வரம். 3. Gift, prize, reward, boon, வெகுமதி. 4. Advantage, profit, result, பலன். 5. Worth, merit, desert, தகுதி. 6. Birth, பெறுகை. 7. Offspring, issue, a child, சந்தானம்; [ex பெறு, v.] —Note. Of பேறு, or acquisition, there are sixteen kinds: 1. புகழ், celebrity; 2. கல்வி, learning; 3. வலி, power, physical strength; 4. வெற்றி, victory, success; 5. நன்மக்கள், good children; 6. பொன், gold; 7. நெல், abundance of rice and other grain; 8. நல்லூழ், a favorable destiny; 9. நுகர்ச்சி, proper and unsullied enjoyment; 10. அறிவு, wisdom; 11. அழகு, beauty; 12. பெருமை, greatness, magnanimity; 13. இளமை, youthfulness; 14. துணிவு, courage; 15. நோயின்மை, perfect health; 16. வாழ்நாள், longevity.
பேறுகாலம், s. Time of child-birth.
பேறுபெற, inf. To obtain a dignity. 2. To obtain bliss.
பேற்று, v. [vul. for பிதற்று.] To babble.
•பேனம், s. [also பே.] Froth, foam, நுரை. W. p. 597. P'HENA.
பேன், s. A louse. See தலைப்பேன்.
பேன்குத்துகிறது. Cracking lice.
பேன்பார்க்க, inf. To hunt lice.

## பை

பை. A syllabic letter formed of ப் and ஐ.
பை, s. Bag, sack, purse, satchel, சாக்கு. 2. Hood of a cobra, பாம்பின்படம். 3. Any bladder, duct or sack in animal bodies, குடற்பை. (c.) 4. [ex பசு.] Color, நிறம். 5. Beauty, அழகு. 6. Green, பச்சை.
பைங்கண், s. A fresh green place, பசுமையாகியவிடம்; [ex கண், place.]
பைங்கிளி—பைந்தார்—பைந்தினை. See under பசு, adj. signifying green, &c.
பைங்கூழ், s. Growing corn, or other crops, பயிர். 2. Disease, நோய். (சது.)
பைந்தொடி, s. A bracelet, an ornament for the arm, கைவளை. 2. See தொடி.
பைந்நாகம், s. The hooded cobra, சர்ப்பம்.
பைம்பூண், s. An ornament of fine gold. (நீதிநெறி.)
பைம்பொன், s. Fine gold, as பசும்பொன். 2. Mount Meru, மேருகிரி. (சது.)
பை, adv. [com பைய.] Slowly, softly.
பையப்பைய. Gently, gently.
பையப்பையப்பேச. Speak slowly.
பையப்பையநட. Walk quietly.

பையப்பையவென்றால் பனையையுமெல்லலாம். If one munch slowly, even a palmyra tree may be chewed; i. e. patience will overcome difficulties.

பைகோ-பைகோவு-பைகோவை, *s.* [*for.*] Pegu, the country, ஓர்தேயம்.

பைகோமட்டம், *s.* A Pegu pony.

பைகோவைச்சிவப்பு, *s.* The Pegu ruby, ஓர்வகைமாணிக்கம்.

ꝉபைக்கம், *s.* [*also* பயிக்கம்.] Alms. See பிச்சை. W. p. 627. B'HAIKSHA.

பை, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To become green or greenish, பசுமையாக. 2. To color, as by anger, நிறக்குறிப்புக்காட்ட. 3. To be angry, கோபிக்க. 4. To spread the hood of the neck—as a cobra, பாம்புபடம்விரிக்க. (சது.)

பைத்தபாம்பு. An excited snake. (நைட.)

பைத்தல், *v. noun.* Sorrow, affliction, துன்பம். 2. Change of color from love-sickness, &c., *as the verb.*

பைசந்தி, *s.* One of the four வாக்கு.

பைசல், *s.* (*Hind.*) A judgment, decision, adjustment, தீர்ப்பு. (*Govt. usage.*)

பைசல்தீர்வை, *s.* The rates settled on each field at the time of the original assessment.

இந்தக்காரியம்பைசலாயிற்று. This case has been decided.

•பைசாசம், *s.* That which appertains to devils, fiends or vampires; (*fig.*) the devil. See பிசாசம். 2. One of the four attitudes of the archer. See நிலை. 3. One of the eight modes of marriage. See மணம். W. p. 554. PISACHA.

பைசார், *s.* (*Hind.*) Slippers, Indian shoes. See பசார்.

பைஸ், *s.* (*Hind.*) A pie, *commonly* பைசா, one twelfth of an anna.

பைஞ்ஞீலம்—பைஞ்ஞீல், *s.* Mankind, the race of man, மக்கட்பரப்பு. (சது.)

பைஞ்ஞீலி, *s.* The name of a town, ஓரூர். (சது.)

பைதல், *s.* [*for* பையல்.] A boy. 2. As பைத்தல். (சது.)

•பைதிரம், *s.* A country, district, நாடு. (சது.)

•பைத்தியம், *s.* Derangement, delirium, &c. See பயித்தியம்.

பைத்து, *s.* Green—the color; [*ex* பசுமை.] (சது.)

•பைபீலவாதம்-பைபீலிகாவாதம், *s.* The fancied language of brutes, &c. 2. The Epicurean philosophy. See பிபீலவாதம், பிபீலிகாவாதம், பீலுவாதம்.

பைமை, *s.* Greenness—the color, பச்சைநிறம்; [*ex* பை, *v.*] 2. A female ascetic, a nun, தவப்பெண். (சது.)

பைம்பல், *s.* [*vul.*] Joviality, festivity, &c. See பம்பு, *v.*

பையல், *s.* [*com.* பயல், *which see.*] A boy, &c.

பையன், *s.* [*also* பய்யன்.] A boy, சிறியன். (*c.*)

பையுள், *s.* Poverty, adversity, lowness of circumstances, சிறுமை. 2. Distress, suffering, துன்பம். 3. Pain, நோய். (சது.)

பையெனல், *v. noun.* Being slow, gentle, gradual, dull, மந்தக்குறிப்பு. (சது.)

பையப்பைய. Slowly, slowly. See பை, *adv.*

•பைரவம், *s.* Formidableness, terribleness, பயங்கரம். 2. Dread, awe, great fear, அச்சம். (சது.) 3. [*as* வைரவம்.] Sect or religion of Bhairava, one of the forms of Siva, as a ferocious deity. See சமயம். W. p. 627. B'HAIRAVA.

பைரவசந்தானம், *s.* Succession of gurus of the Bhairava sect.

பைரவன், *s.* [*com.* வைரவன்.] Bhairava, the god.

பைரவி, *s.* A tune exciting terrific emotions. See இராகம். 2. Kali, Durga, காளி. (சது.)

•பைராகி, *s.* An ascetic. See வைராகி.

## பொ

பொ. A syllabic letter composed of ப் and ஒ.

பொ, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To perforate, puncture, make a hole or opening in a thing that easily yields, துளைக்க; [*ex Tel.* பொக்கை, a hole.]

பொகுட்டு, *s.* A mud-bubble, சேற்றிலெழுங்குமிழி. 2. The seed-vessel of the lotus, தாமரைக்கொட்டை. 3. Mountain, a hill, மலை. (சது.)

பொக்கசம், *s.* [*Tel. com.* பொக்கிஷம், *which see.*] Treasure, &c.

பொக்கணம், *s.* A beggar's bag, a wallet, or cloth used as a sack, சோழிப்பை.

பொக்கணி, *s.* [*prov.*] A deep rice-mortar, குழியுரல். 2. A large open navel, caused by rupture, விரிந்தகொப்புள்.

பொக்கனை, *s.* [*prov.*] A hole in a tree, in a stone, or in the ground, பொந்து. 2. As பொக்கணி, 1.

பொக்கம், *s.* A lie, falsehood, பொய். 2. Extension, bulk, increase, பொலிவு. 3. Abundance, மிகுதி; [*ex* பொங்கு, *v.*] (சது.)

பொக்கல்வாய், *s.* [*prov.*] A toothless mouth, பொக்கைவாய்.

பொக்கிஷம், *s.* Treasure, stores, &c., திரவியம். (*c.*)

பொக்கிஷகாரன், *s.* A treasurer.

பொக்கிஷப்பெட்டி, *s.* A coffer.

பொக்கிஷவீடு, *s.* Treasury, or storehouse.

பொக்கு, *s.* Defect, fault, blemish, குற்றம். (சது.) 2. [*improp. for* பொருக்கு.] Flake, scale, &c.

பொக்குப்பொக்கெனல், *v. noun.* Making a noise in chewing, as an old man, ஒலிக்குறிப்பு. 2. A sign of haste, விரைவுக்குறிப்பு.

பொக்குளிக்க, *inf.* [*prov.*] To rise in blisters—as கொப்புளிக்க.

பொக்குளிப்பான், *appel. n.* [*corrupt. of* கொப்புளிப்பான்.] Measles, &c.

பொக்குள், *s.* [*corrupt. of* கொப்பூழ், *prov.*] Navel.

பொக்கெனல், *v. noun.* Being sudden, abrupt, unexpected, &c., விரைவின்குறிப்பு. Compare பொருக்கெனல்.

பொக்கெனப்புறப்பட, *inf.* To set out, or start suddenly, unexpectedly.

பொக்கென்றுபற்ற, *inf.* To take fire suddenly—as gunpowder.

பொக்கை, *s.* [*Tel.* బొక్క.] A little hole, சிறுதுவாரம்.

பொக்கைவாய், *s.* [*sometimes* பொக்குவாய்.] A toothless mouth—the face being shortened thereby.

பொக்கைவாயன், *s.* [*fem.* பொக்கைவாய்ச்சி.] A man without teeth.

பொரிமாவைமெச்சுவாரும்பொக்கைவாயன். A man without teeth will praise meal of parched grain.

பொங்கடி, *s.* An elephant—as being large footed, யானை; [*ex* பொங்கு.] (சது.)

பொங்கம், *s.* Increase, abundance, exultation, joy, பொலிவு; [*ex* பொங்கு.]

பொங்கமாகப்பேச, *inf.* To speak joyfully.

பொங்கர், *s.* Branch of a tree, மரக்கொம்பு. 2. Hill, mountain, மலை. 3. The silk-cotton tree, இலவமரம். (சது.) 4. A grove, சோலை. (*p.*)

பூமலிந்திடுபொங்கர்வாய். In the grove filled with flowers.

பொங்கல். See பொங்கு.

பொங்கழி, *s.* Unsifted rice, தூற்றுநெல். (சது.)

பொங்காரம், *s.* Sadness which brings tears from the eyes. 2. Grief, bitter sorrow, மிகுதுக்கம்; [*ex* பொங்கு *et* ஆரம்.]

பொங்கு, கிறது, பொங்கினது, ம், பொங்க, *v. n.* To boil up, bubble up by heat, கொதிக்க. 2. To foam and rage—as the sea, கொந்தளிக்க. 3. To ferment, to effervesce, நுரையெழ. 4. To rise as bread from leaven, மாப்புளிக்க. 5. To be inflamed and swell, as a sore, வீங்க. 6. To increase, expand, extend, மிக. 7. To grow intense, பெருக. 8. To abound, to flourish, to be fruitful, செழிக்க. 9. To rise, grow high, to become elevated, உயர. 10. To swell—as the heart in anger, sorrow, joy, &c., மனம்பொங்க. 11. To be flushed with hope, or desire, கிளர்ந்தெழ. 12. To be elated, to be puffed up with pride, பெருமிதங்கொள்ள. 13. *v. a.* To boil rice, சோறுசமைக்க. 14. To boil rice in cow's milk, as a religious rite at a temple, கோயிலில்பொங்க.

பொங்குங்காலம் புளிபூக்கும், மங்குங்காலம்மாகாய்க்கும். In propitious seasons the tamarind abounds, in scarce times, the mango.

பொங்கிக்கொடுக்க, *inf.* To cook for one—as a host for a lodger.

பொங்கித்தெளித்தல், *v. noun.* Boiling rice in milk, and sprinkling a house with the liquid, because an owl has lighted on the roof. *(Jaff.)*

பொங்கிவழிய, *inf.* To boil over, as rice, milk, &c. 2. To superabound or overflow as wealth.

பொங்குசனி, *s.* [*in astrol.*] The second and most propitious of ஏழரையாண்டுச்சனி. See சனி.

பொங்கல், *v. noun.* Boiling, bubbling; fermentation. 2. Raging as the sea. 3. The festival when the sun enters Capricorn about the 11th of January. See தைப்பொங்கல். (*c.*) 4. Abundance, excess, profusion, மிகுதி. 5. Rejoicing, exulting, மகிழ்தல்.—For மாட்டுப்பொங்கல், see in its place.

பொங்கலாண்டி - பொங்கலான் - பொங்கற்காரன், *s.* A cook, one who boils his own rice and lives by himself in a niggardly way.

பொங்கலிட - பொங்கல்பொங்க, *inf.* To boil rice without straining out the water in which it has been boiled. 2. To boil rice for a religious purpose—also பொங்கல்போட.

பொங்கல்வரிசை, *s.* The presents sent to a married woman from her parents, at the பொங்கல் feast. 2. Presents sent to a superior at that time, as உலுப்பை.

பொங்கல்வைக்க, *inf.* As பொங்கலிட. 2. [*in cant.*] To injure a person. 3. To kill one.

பொங்கற்சம்பா, *s.* A kind of rice. See சம்பா.

பொங்கற்சாதம், *s.* Rice boiled at the temple. 2. See சாதம்.

பொங்கற்பானை, *s.* A new pot bought to boil rice for the feast.

பொசி, கிறது, ந்தது, யும், ய, *v. n.* To ooze out, to soak through, as கசிய. 2. To flow gently as tears, milk, or a stream, வடிய. 3. [*fig.*] To melt or soften as the heart in benevolence, மனமுருக. 4. To ooze out, as a report, வெளிப்பட.

ஏரிநிறைந்தாற்கரைபொசியும். If the reservoir be full, water will ooze out of the embankment.

பொசிவு, *v. noun.* Oozing, flowing or issuing gently.

பொசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* [*com. for* புசி, *which see.*] To eat.

பொசுக்கு, கிறேன், பொசுக்கினேன், வேன், பொசுக்க, *v. a.* To singe, to toast, to scorch, to bake slightly, தீய்க்க. 2. [*fig.*] To scorch, as the sun a child, &c., வெதுப்ப. 3. To burn hair, paper and other combustibles, பொசுங்கச்செய்ய. 4. [*in burlesque.*] To break wind. (*c.*)

பொசுங்கு, கிறது, பொசுங்கினது, ம், பொசுங்க, *v. n.* To be singed, toasted, கருக. 2. To be scorched slightly, as grain, தீய. 3. To burn, consume, as hair or paper, எரிந்துபோகப்பண்ணிய. 4. To be united, to agree together, பொருந்த. 5. [*fig.*] To be reduced in circumstances, சிறுக்க. (*c.*)

இருவருக்கும்பொசுங்காது. There is no agreement between the two.

பொசுங்கல், *v. noun.* Any thing singed, scorched, &c., கருகினது. 2. One who speaks or acts, with hesitation—as பொசுங்கலான்.

பொசுபொசெனல், *v. noun.* Being easily burnt, as light fuel, விரைவுக்குறி. 2. Coming suddenly, as the report of a gun, வெளிப்படல். (*c.*)

பொசுபொசென்றுநெருப்புப்பற்றுகிறது. The fire burns up rapidly.

பொசுபொசென்றுதூறுகிறது. It rains slightly, or drizzles.

பொச்சடி, *v. noun.* [*prov.*] Smacking the lips, in eating, or as a token of aversion or contempt, வெறுக்கக்காட்டுதல்.

பொச்சம், *s.* Fault, defect, blame, moral evil, குற்றம். (நிகண்.) 2. (*Jaff.*) Greediness, too great a desire for food, அவா. 3. Fibrous husk of the cocoa-nut, தேங்காய் மட்டை.

பொச்சமிலன்பும். Faultless love. (*p.*)

பொச்சா, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To forget, to become unconscious of, மறக்க. (*p.*)

பொச்சாப்பு, *v. noun.* Forgetfulness, unconsciousness, மறதி. [*neg.* பொச்சாவாமை.] (சது) 2. Badness, evil, wickedness, பொல்லாங்கு.

பொச்சாளி-பொச்சாளிநெல், *s.* A kind of சாலி paddy.

பொச்சு, *s.* [*improp. for* பொச்சம்.] Flaw, defect, குற்றம் 2. [*prov.*] Blighted parts in jack-fruit or mangoes. 3. As பொச்சம், 3.

•பொச்சு, *s.* [*a corrupt. of* புச்சம்.] Anus. (*Beschi.*) 2. [*immodeste.*] Crines muliebris pudendi. (*R.*) 3. (*Tel.* బొచ్చు.) A quantity of hair, &c. See புச்சம்.

பொச்சை, *s.* Forest, *jungle* copse, காடு. 2. Hillock, சிறுமலை. 3. Hill, mountain, மலை. 4. Elephant-forest, யானைக்காடு. (சது.) 5. Harbor or nest of insects, புழுக்கூடு. (*Old Dic.*) 6. [*Tel.* బొజ్జ.] A paunch, a paunch-belly, பெரும்வயிறு.

பொச்சைப்பிறைக்குட்டிடாதே. Put not your hand into an insect's nest.

•பொஸ்தகம், *s.* A book. See புஸ்தகம்.

பொஞ்சு, கிறது, பொஞ்சினது, ம், பொஞ்ச, *v. n.* [*prov.*] To agree together, as பொருந்த. 2. To prosper, or thrive well, செழிக்க.

மாடுகன்றுபொஞ்சாது. Cows and calves do not thrive with him.

பொடி, *s.* Powder, தூள். 2. Dust, புழுதி. 3. Pollen of flowers, பராகம். (சது.) 4. Any thing small or minute, a particle, a fragment, சிறியது. 5. A small gem, as செம்புப்பொடி. 6. Snuff, மூக்குத்தூள். 7. Magical powders, as சொக்குப்பொடி. 8. Solder, metallic cement, பற்றவைக்கும்பொடி. (*c.*) 9. Ashes, சாம்பல். 10. Sacred ashes, திருநீறு. 11. [*prov.*] A little child, சிறுபிள்ளை.

பொடிப்பயல்கள். Little boys.

பொடிப்பொடியாய்நறுக்கு. Cut it into small pieces.

பொடிப்பொடியாய்ப்போயிற்று. It is reduced to small pieces.

பொடிக்கல், *s.* Small stones, pebbles, gravel stones or small gems.

பொடிசு, *s.* [*improp.*] A particle, as of sand; a fragment, any thing small, தகள். (*Old Dic.*)

பொடிதூவுதல், *v. noun.* Sprinkling, with flour, or seasoning powder—as salt or pepper.

பொடிபொட்டு, *s.* Any thing small, சிறியது. 2. That which is like chaff, பதாரகு.

பொடிப்போட, *inf.* To take snuff. 2. To cast magical powders on one.

பொடிமீன், *s.* A small fish.

பொடியன், *s.* [*fem.* பொடிச்சி.] A boy, சிறுவன். (*Jaff.*)

பொடியாக்குதல், *v. noun.* Pulverizing, shivering to pieces.

பொடியெழுத்து, *s.* Small letters, small writing.

பொடிவரகு, *s.* A kind of grain, Panicum fluitans.

பொடிவெட்டி, *appel. n.* A goldsmith's shears, or scissors, for cutting wire, &c., நூக்கத்திக்கோல்.

பொடிவைத்தூதல், *v. noun.* Soldering.

பொடி, கிறேன், ந்தேன், வேன், ய, *v. n.* To be broken to pieces—as paddy, to become pulverized, தகள. 2. To perish, to be destroyed, கெட. 3. *v. a.* [*prov.*] To curse bitterly, சபிக்க.

திட்டிப்பொடிகிறான். He curses you to powder.

பொடிவு, *v. noun.* Any thing broken or shivered, சிதைவு. 2. Cursing, சபிப்பு.

பொடி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To pulverize, to reduce to dust, or powder, தகர்க்க. 2. To destroy, கெடுக்க. 3. *v. n.* To spring up, to shoot, முளைக்க. 4. To rise as the hair of the body—as புளகிக்க.

பொடிப்பு, *v. noun.* Pulverizing, comminution; rising as the hair, *as the verb.*

பொடுகன், *s.* A very little man, சிற்றன். (*Jaff.*)

பொடுகு, *s.* [*sometimes* சொடுகு.] Scurf, dandruff, scall on the head, &c., அழுக்கு. 2. [*prov.*] Smallness, as பொடுகுப்பணிகாரம்.

பொடுகுதின்கிறது. Scall is itching.

பொடுதலை, *s.* A kind of plant, நூர்பூடு, Verbena nodiflora, *L.*

பொடுபொடு, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To burst in pieces, as cords, with a snapping sound, வெடிக்க. 2. To spatter, as light rain, with noise, தூறிக்க. 3. To be scanty, hardly sufficient, குறைய. 4. To speak fast, in a rattling manner, விரைவாய்ப்பேச. 5. To wamble as the bowels, வயிறிரைய. 6. To fall—as stones one after another, ஒலிக்குறிப்பு.

பொடுபொடெனல், *v. noun.* Sounding as bursting cords, sounding as drops of rain, falling fruits or stones, ஒலிக்குறிப்பு. 2. Rattling in speaking, விரைவாய்ப்பேசல்.

•பொட்டணம்-பொட்டணி-பொட்டலம், *s.* [*corrup. of Sa.* Pot't'alee.] A bundle of cloth, bunch, tie, சீலைமூட்டை. 2. A bundle of ground drugs or mashed leaves, tied up for a fomentation, ஒத்திடும்பொட்டலம்.

பொட்டணமொத்த--பொட்டணமொற்ற, *inf.* To apply a fomentation.

பொட்டல், *s.* An arid tract, கரம்பு.

பொட்டிமகன், *s.* A clever fellow. (*c.*)

பொட்டிலி—பொட்டில், *s.* [*for.*] A machine with pistolets, to make a cracking noise in a procession, நூவெடி.

பொட்டில்சுட, *inf.* To discharge, or fire the pistolets.

பொட்டிலுப்பு, s. Saltpetre, as வெடியுப்பு.

பொட்டிலுப்புத்திராவகம், s. Nitrous acid. (Ains.)

பொட்டு, s. A spot or wafer of red sandal paste worn on the forehead, as திலகம். 2. One of the two marriage badges, worn, especially by Telugus, on the neck, தாலிப்பொட்டு. 3. Empty grains of corn, தானியப்பொட்டு. 4. An insect, or moth in its catterpillar state, பூச்சி. (சது.) 5. A small round spot, dot, or mark, அடையாளம். 6. A small bodied spider with long legs, நீலெட்டுப்பூச்சி. 7. A magical spot worn on the forehead, said to enable one to conquer in games, மயமைப்பொட்டு. 8. [fig.] Repute, esteem, &c., obtained by imposing on others, மதிப்பு. 9. [vul.] A hole or opening in a hedge to creep through, நுழைவழி. 10. [South usage.] The temples.

பொட்டரிக்க, inf. To fret a garment—as moths.

பொட்டரித்தவஸ்திரம். A moth-eaten garment.

பொட்டுக்கட்ட, inf. To tie on the marriage badge, or that of a dancing girl.

பொட்டுக்குத்த, inf. [com. பச்சைகுத்த.] To make indelible spots on the body with a vegetable preparation.

பொட்டுக்கேடு, v. noun. Loss of ill-gotten repute.

பொட்டுத்தாலி, s. A roundish marriage-badge. See தாலி.

பொட்டுப்பூச்சி, s. A small round-bodied venomous spider with long legs.

அங்கேபூச்சிபொட்டாயிருக்கும். There will be troublesome insects in that place.

பொட்டிட்டாற்போலேபிடித்துக்கொள். Catch him at once, just as he stands.

பொட்டிட்டாற்போலேஎடு. Take it up carefully, without moving the other things.

பொட்டெனல், v. noun. Being sudden, abrupt, quick, nimble, ஒக்குறிப்பு.

பொட்டெனவந்தான். He came quickly, promptly.

பொட்டை, s. Weak-sightedness, கூசியகண். 2. Blindness, குருடு. 3. [vul. for பெட்டை.] A hen.

பொட்டைக்கண், s. Weak eyes.

பொட்டைக்கண்ணன்—பொட்டையன், s. [fem. பொட்டைக்கண்ணி—பொட்டைச்சி.] A weak-eyed man. 2. A blind man.

பொதி, s. A filled sack as a load for a beast, மாட்டின்மேற்பொதி. 2. Pack, bundle, a parcel tied in a cloth, மூட்டை. 3. Umbrella of palm-leaf, ஓலைக்குடை. 4. An elephant-forest, களக்காடு. 5. A public room, town-hall, அம்பலம். (சது.) 6. A flower-bud, மலர்அரும்பு. 7. The பொதியம் mountain.

பொதியிலேவிளைந்தசந்தனம். The sandal wood which grew on the பொதியம் mount.

பொதியவிழ்ந்தசெந்தாமரைமலரில். Like the bud of the red lotus just opening. (p.)

பொதிக்காரர், s. [pl.] Persons attending pack-oxen.

பொதிமாடு—பொதியெருது, s. A pack-bullock.

பொதி, கிறேன், ந்தேன், வேன், ய, v. a. To roll up as a cloth, a bundle, &c., சுருட்ட. 2. To bury, insert, to bag, அடைக்க. 3. To hide, conceal, to cover up, மறைக்க. 4. To tie up, பிணிக்க.

பொருள்பொதிந்தசொல். A word full of meaning. (p.)

பொதிசோறு, s. [com. கட்டுச்சோறு.] Boiled rice tied up for a journey.

பொதிவு, v. noun. Packing up, concealing, &c.

பொதிகை, s. The பொதியம் mountain; [ஏ ஐ, place].

பொதிப்போதா, s. The larger heron, பெருநாரை. (சது.)

பொதியம் — பொதியமலை, s. [also பொதியில்.] Mount Pothiyam, famed as the abode of Agastya, and other sages, situated near Cape Comorin, தென்மலை.

பொதியவெற்பன், s. Any king of the Pandya dynasty, as having the பொதியம் mountain within his kingdom, பாண்டியன். (சது.)

பொதியில், s. A hall, as பொதி. 2. (சது.) As பொதியம். (p.)

பொதிர், s. Fear, trembling, நடுக்கம்.

பொதிர்-பொதிரு, கிறது, பொதிர்ந்தது, பொதிரும், பொதிர, v. n. To increase, abound, மிக. 2. To fear, to dread, அஞ்ச. 3. To tremble, நடுங்க. (p.)

பொதிர்புகுந்தஇருள். Thick darkness.

பொதிர்தல், v. noun. Increasing, abounding, மிகுதல். (சது.)

பொதிர்ப்பு—பொதிர்வு, v. noun. Fear, dread, அச்சம். 2. Trembling, நடுக்கம். (சது.)

பொதிர்பொதிரெனல், v. noun. [sometimes பொதின்பொதினெனல்.] Sounding as the falling of heavy fruits, thumping blows, &c., ஒலிக்குறிப்பு. (c.)

பொது, s. That which is shared by many, சாதாரணம். 2. The genus in distinction from the species, பொதுவினம். 3. A public assembly, சபை. 4. What is public, general, ordinary, usual, வழக்கம். (c.)

எல்லாரோகத்துக்கும்பொதுமருந்து. A physic for all diseases, a panacea.

பொதுக்கட்டுதல், v. noun. Sequestrating, taking from both parties. 2. Depositing by mutual consent, as in Panchayat.

பொதுக்கட்டியிருக்கிறது. It is deposited until an award is issued.

பொதுக்காரியம், s. A common or public affair.

பொதுக்குணம்—பொதுத்தன்மை, s. An attribute common to the simile and to that to which it is compared—as redness, to coral and to the lips.

பொதுச்சீர், s. Poetical feet containing four syllables. See சீர்.

பொதுச்சூத்திரம் — பொதுவிதி, s. A general rule.

பொதுச்சொல், s. A general term. 2. [in gram.] A word common to both திணை, or to two or more genders.

பொதுஸ்திரி — பொதுப்பெண் — பொதுமகள்—பொதுமடந்தை, s. A whore, a harlot, prostitute, (lit.) a common woman, வேசை.

பொதுத்திணை, s. [in gram.] That which is common to both திணை.

பொதுநன்மை, s. Common or public good

பொதுநிலம், s. Common land.

பொதுநிறம், s. An indefinite color between red and black; spoken of persons.

பொதுப்பட, inf. [as adv.] Generally, commonly.

பொதுப்படப்பேசினான். He spoke without particularizing any one.

பொதுப்பெயர், s. [in gram.] Nouns common to both திணை, and two or more பால்—opposed to சிறப்புப்பெயர்.

பொதுப்பேச்சு, s. General speech, language not definite, not minute. 2. Ambiguous talk.

பொதுமனிதன்—பொதுவன், s. A mediator, மத்தியஸ்தன்.

பொதுமுதல், s. Common stock in trade.

பொதுவசனம், s. A word, phrase, or sentence of more than one meaning, பலபொருள்ஒருசொல். 2. As பொதுப்பேச்சு.

பொதுவனுமானம், s. One of the four modes of arriving at a conclusion. See அனுமானம்.

பொதுவிலேவிட, inf. To let a thing be common.

பொதுவிலெடுத்துச்செலவழிக்க, inf. To expend out of the common stock.

பொதுவில், s. A public hall, as பொதியில், அம்பலம்.

பொது, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To perforate, to bore through, துளைக்க. (சது.)

பொதுக்கு, கிறேன், பொதுக்கினேன், வேன், பொதுக்க, v. a. [prov. com. பதுக்கு.] To conceal, மறைக்க. 2. To embezzle, களவு.

பொதுபொதெனல், v. noun. Yielding to pressure—as soft ground. 2. Falling apart as a mud wall. 3. Imitative sounds, நெகிழ்க்குறிப்பு. (c.)

பொதுமை, s. Commonness, generality, பொதுத்தன்மை. (சது.)

பொதும்பர், s. Grove, garden, park, pleasure-ground, மரச்செறிவு. 2. [poet. form of பொதும்பு.] A hole in a tree, மரப்பொந்து.

பொதும்பு, s. A hole, a hollow place, as பொந்து.

பொதுவர், s. [fem. பொதுவியர்.] Herdsmen, cow-herds, இடையர். (சது.)

பொதுள்—பொதுளு, கிறது, பொதுண்டது, பொதுளும், பொதுள, v. a. To become thick, close, crowded, as அடர. 2. To sprout, to thrive, &c., as தழைக்க. (சது.)

*பொத்தகம், s. A book. See புத்தகம்.

பொத்தம்பொது, s. Generality, as பொத்தி. (Colloq.)

பொத்தல், s. A hole, an orifice, a rent, துவாரம். 2. v. noun. Perforating. See பொ, v.

பொத்தலடைக்க, inf. To stop holes in walls, a roof, &c. 2. [fig.] To pay off debts. 3. To make sham excuses.

பொத்தாறு—பொத்தாறுக்கட்டை, s. The part of the plough to which the plough-tail is fastened.

பொத்தி, s. A garment of fibres, மரப்பட்டை. 2. Cloth, சீலை. 3. [prov.] The unblown flower of the plantain, வாழைப்பூ. 4. The ear or cob of maize in the sheath, சோளப்பொத்தி. 5. An ear of corn in a sheath, தானியப்பொத்தி. 6. The young tender palmyra root, with the membrane about it, தோலுரியாதபனங்கிழங்கு. 7. [vul. also பொத்திரத்தானம்.] Scrotum. 8. [for பொது.] Generality.

பொத்தித்தோவத்தி, s. A garment of fibres, worn in making oblations; as பொத்தி, 1.

மழையடைத்துக்கொண்டது. It rains incessantly.

மழை வெளிவாங்கிப்போயிற்று—மழைவாங்கிப்போயிற்று. The sky is cleared.

மழைசாரடையாய்ப்போய்விட்டது. It proved a slight rain.

மழைவிட்டோய்ந்தது. It ceased raining; also spoken of the cessation of disputes.

மழைக்கண்மங்கையர். Cool, refreshing-eyed females. (*p.*)

மழைக்கண்ணி, *s.* [*prov.*] A kind of bird, ஓர்பறவை.

மழைகாலம், *s.* [*also* மாரிகாலம்.] The rainy season, monsoon.

மழைக்கால், *s.* A water-spout.

மழைக்காலிருட்டு, *s.* Darkness of a rainy night.

மழைக்கிளி, *s.* A kind of grasshopper, ஓர்விட்டில்.

மழைக்குணம் – மழைக்கோலம் – மழைச்சாடை—மழைத்தோற்றம், *s.* A rainy aspect.

மழைக்கோளாறு, *s.* Cloudiness, &c. See கோளாறு.

மழைக்கோள், *s.* Venus as the planet which brings rain, சுக்கிரன். (*p.*)

மழைசொரிய—மழைபொழிய, *inf.* To rain in torrents, to pour down violently.

மழைதுமிக்க — மழைதூற, *inf.* To drizzle, to rain softly.

மழைத்தாரை, *s.* Rain in torrents, as a stream.

மழைத்துமி, *s.* Drizzling, small or fine drops of rain.

மழைத்துளி, *s.* Rain-drops.

மழைத்தூறல் – மழைத்தூற்றல் – மழைத்துவல், *s.* Drizzling rain.

மழைத்தோற்றம், *s.* Rainy appearances, lowering of clouds.

மழைபெய்ய, *inf.* To rain.

மழைபெலக்க, *inf.* To rain violently.

மழைப்பாட்டம், *s.* A shower of rain.

மழைப்புகார், *s.* [*prov.*] Cloudiness, threatening rain, மழைத்தோற்றம்.

மழைமரக்கால், *s.* [*in astrol.*] The measure or quantity of rain for the year, determined by the ruling planet, மாரியின் அளவு.

மழைமுகங்காணுதல், *v. noun.* Being favored by rain, as vegetation.

மழையடை, *s.* [*com.* அடைமழை.] Continual rain. (*R.*)

மழையிலடிபட, *inf.* To be exposed to rain.

மழைவண்ணன், *s.* Krishna, விட்டுணு.

**மளமள**, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To crash, to break with a crashing noise.

மளமளப்பு, *v. noun.* The rattling noise of thunder, or of a falling house.

மளமளெனல், *v. noun.* Breaking with a crashing noise, சப்தக்குறிப்பு. (சது.)

கொப்புமளமளென்றுமுறிந்தது. The branch broke with a crash.

**மளாரெனல்**, *v. noun.* Crashing, cracking, ஒலிக்குறிப்பு.

**மளிகை—மளிகைக்கடை**, *s.* A grocery shop, பலசரக்குக்கடை. (*c.*)

**மளுக்கெனல்**, *v. noun.* Crashing, cracking, ஒலிக்குறிப்பு.

மளுக்கென்றுநெட்டைவிடுகிறது. Cracking the fingers.

•**மள்ளம்–மள்ளல்**, *s.* Strength, power, robustness, வலி. (சது.) W. p. 646. Malla.

மள்ளர், *s.* Strong, powerful persons, பலமுள்ளோர். 2. Warriors, படைவீரர். (சது.)

**மள்ளர்**, *s.* The laboring class in agricultural districts. See பள்ளர். 2. The inhabitants of mountainous districts, குறிஞ்சிநிலமாக்கள். (சது.)

**மள்ளு**, *s.* Rafters, கைமரம். (*Beschi.*)

**மற**, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, *v. a.* To forget, அயர்க்க. 2. To be diverted from a course of conduct, so as to cease from it, விட்டுவிட. 3. To neglect, disregard, அசட்டைபண்ண. 4. [*with* முலை.] To be weaned, முலைமறக்க. (*c.*)

நான்மறந்துபோனேன். I have forgotten.

மறந்துதூங்குகிறது. Sleeping soundly. 2. Being unoccupied.

மறந்துபோகாதே—மறவாதே. Don't forget.

மறதி—மறப்பு, *v. noun.* Forgetfulness. 2. Obscuration or beclouding of the understanding or the spiritual faculties; oblivion as to the events of a former birth. See முக்குணம்.

அசதிமறதியாயிராதே. Be not careless and negligent.

மறதிக்காரன், *s.* A forgetful person.

**மறத்தியர்**, *s.* [*pl.*] Females of desert tracts, பாலைநிலப்பெண்கள். (சது.)

**மறத்துப்போக**, *inf.* [*com. for* மறுத்துப்போக.] To cease bearing fruit, &c.

**மறம்**, *s.* Disagreement, பிணக்கு. 2. Vice, evil, sin, பாவம். 3. Killing, murder, கொலை. 4. Strength, power, வலி. 5. Military exploits, bravery, வீரம். 6. Yama, இயமன். 7. Wrath, சினம். 8. Anger, கோபம். (சது.) 9. Injury, கேடு. (*p.*)

மறநிலைப்பொருள், *s.* [*one of the six* அரசியல்.] Obtaining revenue and wealth by forced tribute from enemies, and by success in games.

மறநிலையறம், *s.* Punishing soldiers and others who are false to their rice, and refuse to defend their country and recover plundered cattle. See அரசியல்.

மறநிலையின்பம், *s.* Having the pleasure connected with obtaining a bride by some brave act, as subduing a bull, or conquering in archery, &c. See அரசியல்.

மறப்புலி, *s.* A lion, சிங்கம். (சது.)

மறமலி, *s.* An elephant, யானை. (சது.)

**மறலி**, *s.* Yama, இயமன். 2. Confusion of mind, delusion, மயக்கம்; [*ex* மறல்.]

**மறல்**, *s.* Yama, இயமன். 2. Delusion, illusion, மயக்கம். 3. A kind of dance, ஓர்கூத்து. 4. Hatred, பகை. 5. Dissension, பிணக்கு. 6. Height, elevation, உயரம். 7. Fault, குற்றம். 8. Death, மரணம். 9. Forgetfulness, மறதி. 10. Quarrel, fight, சச்சரவு, போர். 11. Poverty, தரித்திரம்.

**மறவர்**, *s.* A caste, *Maravars*, ஓர்சாதியார். 2. The inhabitants of arid tracts, பாலைநிலமாக்கள். 3. Hunting tribes, வேடர். 4. Warriors, heroes, வீரர்; [*ex* மறம்.]

மறவன், *s.* [*fem.* மறத்தி.] A man of the above caste.

**மறவி**, *s.* Intoxicating liquor, கள். 2. Defect, குறைவு. 3. Forgetfulness, மறதி; [*ex* மறம்.] (சது.)

•**மஹ்ரஷ்டியர் — மஹ்ரட்டியர்**, *s.* The Mahrattas. See மராடம்.

**மறி**, *s.* A foal. 2. The young of the armadillo, the sheep, horse and deer. Compare செம்மறி. 3. A deer, பெண்மான். 4. Aries of the Zodiac, மேடவிராசி. (சது.) 5. (திவா.) Musk-deer, கஸ்தூரிமான்.

மறிகாலுகிறது. Bringing forth a foal, by a mare.

**மறி**, கிறேன், ந்தேன், வேன், ய, *v. n.* To be stopped, checked, arrested, detained, &c., தடைபட. 2. To recede, திரும்ப. 3. To roll as waves, மடக்க. (*p.*)

**மறி**, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To stop, detain, arrest, check, confine, imprison, தடுக்க. 2. To turn about, திருப்ப. (*c.*) 3. To turn upside down, to upset, மேல்கீழாக்க.

மந்தையைமறித்துவை. Prevent the herd from going astray.

கடன்காரன் அவனை மறித்துக்கொண்டான். The creditor arrested him [on the way].

மறி — மறிப்பு, *v. noun.* Stopping, arresting, as மறியல்.

மறிபட—மறிபட்டுப்போக, *inf.* To be stopped, as the waters of a river. 2. To be hindered, as one on business.

மறியல், *v. noun.* Stopping, detaining, checking, confining, தடை. 2. (*R.*) A halt, கிறுத்தகை. 3. Prison, jail, காவல்.

மறியற்கடுதாசி, *s.* [*prov.*] A warrant of commitment.

**மறிதர**, *inf.* To return or come back, திரும்பவர. (*p.*)

**மறு**, *adj.* Another, other, next beyond, மற்ற.

மறுஉத்தரவு, *s.* Another government order. 2. As மறுமொழி.

மறுஉழவு—மறுவுழவு, *v. noun.* The second ploughing.

மறுகறி—மறுகுழம்பு, *s.* Another dish of curry.

மறுகாய்ச்சல், *s.* Return of a fever. 2. A second drying of par-boiled paddy. 3. A second heating of iron, &c.

மறுகால், *s.* The other leg, மற்றைக்கால். 2. [*prov.*] A sluice-way of mason-work for a tank, குளத்துத்தண்ணீர்ப்போக்கு. 3. (*p.*) On the other hand, மறுதரம். 4. As மறுபடி.

மறுகால்வெற்றிலை, *s.* Betel leaves of a second crop.

மறுசனனம்—மறுசன்மம், *s.* Transmigration, as புனர்சன்மம்.

மறுசுற்று, *s.* [*also* மறை.] A spiral screw, the male screw.

மறுசீட்டு, *s.* Another bond or note.

மறுசெய்தி, *s.* An answer or reply.

மறுதடவை—மறுதரம், *s.* Another time, again.

மறுதாக்கல், *s.* A rejoinder.

மறுதாரம், *s.* A second wife.

மறுதேசம், *s.* A foreign country.

மறுநாள், *s.* The next day.

மறுபடி—மறுபடியும். Again, the second time.

மறுபத்தியம், *s.* Regimen after a course of medicine. See பத்தியம்.

மறுபாஷை, *s.* Another language.

மறுபாவி, *s.* An enemy. (*Beschi.*)

மறுபிறப்பு, *s.* Other births, as மறுசனனம். 2. See பிறப்பு.

மறுபேச்சு, *s.* Another word. 2. As மறுமொழி.

நான்சொன்னதற்கு அவன் மறுபேச்சுப்பேசவில்லை. He did not answer again a word to what I said; i. e. he obeyed.

மறுபோகம், *s.* A second crop.

மறுமாடி, *s.* A ridge. 2. The sloping roof over the breadth of a house. (*Beschi.*)

மறுமுகம், *s.* Another face. 2. Another direction. 3. A stranger. See பிறமுகம்.

மறுமுள், *s.* Warts, excrescenses formed on the marks left by small-pox, &c.

மறுமை, *s.* The next birth, as distinguished from இம்மை; the two being used together. 2. The future state.

மறுமொழி — மறுவுத்தரம், *s.* Answer, reply. 2. [*prov.*] Message, errand, அனுப்புஞ்செய்தி.

மறுரூபம்-மறுரூபு, *s.* A metamorphosis.

மறுவிசை. Again, once more.

மறுவோலை, *s.* An answering letter.

மறு, *s.* [*gen.* மறுவின்.] A mole, wart, freckle, மச்சம். 2. Spot, blemish, stain, blot—especially a spot on the moon, மாசு. 3. Stigma, fault, குற்றம். 4. (*fig.*) Harm. See சகெடல். (*c.*)

அதிலேமாசுமறுவில்லை. It is pure; (*lit.*) no spot or stain on it.

திங்கள்மறுவாற்றுஞ்சான்றோரஃதாற்றார். Though the moon endures its spots, yet the perfect suffer them not. (நாலடி.)

மறுப்பட—மறுப்பட்டிருக்க, *inf.* To be spotted. 2. To be injured.

மறு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To refuse, deny, disown, இல்லையென. 2. To object, check, contradict, தடுக்க. 3. To confute, to refute the opinion or argument of another, ஆட்சேபித்துத்தள்ள. 4. To double, to repeat a request, a word, &c., as இரட்டிக்க. 5. [*prov.*] To plough a second time, மாறியுழ. 6. (நிக.) To be ashamed, வெட்க. 7. To put away or renounce, நீக்க.

என்புத்திமதியைமறுக்கவேண்டாம். Reject not my counsel. (*Beschi.*)

மறுத்துப்போகுதல், *v. noun.* [*in comb. com.* மறத்துப்போகுதல்.] Ceasing to give, as a cow to give milk, or a tree, fruit.

மறுத்தல்—மறுப்பு, *v. noun.* Refusal, denial. 2. Objection, opposition. 3. Refutation. 4. Denying through shame. 5. [*prov.*] Ploughing again, மறுவுழவு.

மறுப்புறத்தல். Giving after refusal. (*p.*)

மறுகல், *s.* Return of a sickness, வியாதிதிரும்பல். (*R.*) 2. As மறுக்கம்.

மறுகு, *s.* A street, road, தெரு. 2. A narrow street, குறுந்தெரு. (சது.) 3. [*prov.*] A second crop of corn, from the stubble, இரண்டாம்விளைச்சல்.

மறுகு, கிறேன், மறுகினேன், வேன், மறுக, *v. n.* To whirl, revolve, சுழல. 2. To be bewildered, confused, unsteady, unsettled, மயங்க. (*c.*)

என்மறுகிமறுகிநிற்கிறாய். Why are you lingering?

அவன்மெத்தவுமறுகித்தவிக்கிறான். He is much distressed [for want of food].

மறுக்கம், *v. noun.* Whirling, unsteadiness, சுழற்சி. 2. Distress, sorrow, affliction, துன்பம். (*p.*)

மறுகை, *s.* The edible kernel of a young palmyra fruit, as நுங்கு. 2. (*R.*) The half of a filled bag, half of a bullock's load, அரைப்பொதிப்பாரம்.

மறுக்காரை, *s.* [*prop.* மருக்காரை, *which see.*] A thorny shrub.

மறுக்குத்து, *s.* A shrub, Chirongia glabra, ஓர்செடி.

மறுதலி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To deny, disown, disavow, மறுக்க. 2. க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To return as a disease, நோய்மீக்களிக்க. 3. To vary, deviate from the original, வேறுபட; [*ex* மறு, *v.*] (*c.*)

மறுதலை—மறுதலிப்பு, *v. noun.* Denial, refusal. 2. Deviation from the original.

மறுதலை, *s.* An enemy, antagonist, சத்துரு; [*ex* மறு, *v.*] 2. See மறுதலி.

மறுவல்—மறுவி, *s.* The civet-cat, நாவிப்பிள்ளை. (நிக. திவா.)

மறை, *s.* A speck or speckle, spot, blemish, கறை. (*c.*) 2. A secret thing, concealment, secresy, இரகசியம். 3. A divine precept, the sacred writings, the Vedas, வேதம். 4. Silent repetition of an incantation, மந்திரம். 5. Word, சொல். 6. A shield, பரிசை. (சது.) 7. Refuge, shelter, அடைக்கலம். 8. [*Tel.* మర.] The spiral winding of a screw, திருகுமறை. 9. [*prov. ex* மறு, *v.*] The second ploughing, மறுஉழவு.

மறைமறையாயிருக்கிறது—மறைவிழுந்திருக்கிறது. It is spotted, black and white; spoken of an animal.

நான்மறை. The four Vedas.

மறைக்கொடியோன், *s.* Brahma, பிரமன். 2. Dhronacharia as the veda-bannered, துரோணாசாரியன். 3. [*pl.* மறைக்கொடியோர்.] A brahman, பிராமணன்.

மறைசை, *s.* A name of வேதாரணியம்.

மறைத்தலைவி, *s.* Lukshmi, இலக்குமி.

மறைபுகல், *v. noun.* Taking refuge; [*ex* புகு.]

மறைப்பொருள், *s.* The deep treasures of the Vedas.

மறைமுடிவு, *s.* The substance of the Vedas, the Vedanta.

மறைமுதலி—மறைமுதல், *s.* An epithet of the deity, கடவுள். 2. Siva, சிவன்.

மறைமொழி, *s.* Incantation, மந்திரம். 2. The Vedas, வேதம்.

மறையவர்—மறையோர், *s.* [*sing.* மறையவன், மறையோன்.] Brahmans, பிராமணர். 2. Learned sages, முனிவர்.

மறையன், *s.* [*prov. fem.* மறைச்சி.] A spotted bullock, dog, &c., மறுவுடையது.

மறையாணி, *s.* A screw, as திருகாணி.

மறையிலார், *appel. n.* [*pl.*] The ignorant, the low, இழிஞ்சோர். (*p.*)

மறையோன், *s.* Brahma, பிரமன். 2. Jupiter, preceptor of the celestials, வியாழன். See குரு. 3. See மறையவன்.

மறை, கிறேன், ந்தேன், வேன், ய, *v. n.* To be hidden, shrouded, ஒளிக்க. 2. To disappear, become invisible; to vanish, to recede, as a shore from one sailing, தோன்றாதொழிய. (*c.*)

மறைபொருள், *s.* Hidden or secret meaning. 2. A mystery.

அவன்மறைந்துகொண்டான். He lurked in some place.

நிலைமறையமறவனைநம்பாதே. Trust not a double dealing *Marava* man.

மறைவு, *v. noun.* Vanishing, evanescence, தோன்றாமை. 2. Secrecy, a covert, இரகசியம். 3. [*in astron.*] Occultation, கிரகணம். 4. A shelter, a screen, மறைக்கும்படல்.

மறைவிடம், *s.* A hiding or lurking place.

மறைவுகட்ட, *inf.* To fence a place by screens.

மறை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To hide, conceal, secret, keep back, as ஒளிக்க. 2. To cover, shroud, shelter, ward off, மூட. (*c.*)

நீமுன்சொன்னதைமறைக்கிறாய். You shift, or contradict, your first statement.

மறைப்பு, *v. noun.* Concealment, obscuration, as ஒளிப்பு. 2. [*vul.* மறப்பு.] A screen, as மறைவு.

*மற்கடம், *s.* [*prop.* மர்க்கடம், *which see.*] A monkey.

*மற்குணம், *s.* A bug. See மத்குணம்.

மற்கோல், *s.* Hatred, enmity, பகை.

*மற்சரம், *s.* Envy, &c. See மச்சரம்.

மற்று. An expletive, அசைநிலை, as அது மற்றவலங்கொள்ளாது, that allows no grief. 2. A disjunctive particle, as கெடுப்பதூஉமற்றெடுப்பதூஉமழை, rain is both destructive and restorative; 3. *adv.* Otherwise, else; as இனிமற்றொன்றுரை, speak again.

மற்ற, *adj.* The other, another, as மற்றை.

மற்றது, *appel. n.* That which is remaining, the other.

மற்றதுகள், *s.* [*com. for* மற்றவை.] Other things.

மற்றப்படி — மற்றைப்படி, *adv.* [*Jaff.* மற்றும்படி.] Else, otherwise.

மற்றவர்—மற்றவர்கள், *s.* Other persons.

மற்றவன், *s.* [*fem.* மற்றவள்.] Another man.

மற்றவை-மற்றவைகள், *s.* As மற்றதுகள்.

மற்றுண்டாகிய—மற்றுமுண்டாகிய—மற்றையுண்டான. Other, not this.

மற்றும். And so on, பிறவும்.

மற்றுந்தேவையானகாரியங்கள். These and other things needful.

மற்றொன்று, *s.* Another thing, or matter.

மற்றொன்றும்—மற்றியாதொன்றும். Any thing besides.

மற்றொன்றுவிரித்தல். Digression from the subject. See தற்குற்றம், under குற்றம்.

மற்றை, *adj.* The next, following, other.

மற்றைநாள். The next day, the following day, the morrow.

மற்றைப்பேர்கள். Other people, the rest of the people.

மற்றையது. Another, the above-mentioned, the aforesaid.

மற்றையோர். Others.

மற்றோ. A word expressive of pity, அதிசயஇரக்கக்குறிப்பு. (சது.)

*மனசு—மனது, *s.* Mind, heart, will, உள்ளம். W. p. 635. MANAS. 2. Purpose, intention, feeling, எண்ணம். 3. Desire, inclination of the mind, விருப்பம்.

மனசறிந்தவன், *appel. n.* One who is fully conscious.

மனசறிய, *inf.* [*adverbially.*] Knowingly or wilfully, as மனசார, நெஞ்சறிய.

மனசறியச்செய்தான். He has wilfully done it.

மனசாயிருக்க, *inf.* To be willing; to purpose.

மனசார — மனதார, *inf.* [*adverbially.*] Spontaneously, cordially.

மனசாரநானொன்றும்அறியேன். To the best of my recollection, I know nothing of it.

மனசிரங்க—மனதிரங்க, *inf.* To pity, to commiserate.

மனசிரங்கிக்கொடுத்தான். He gave it out of pity.

மனசிலேயிடக்கட்டும். Keep your own mind.

மனசிலேவைத்துக்கொள். Keep this in mind.

மனசில்லாமை—மனதில்லாமை, *v. noun.* (*neg.*) Unwillingness, reluctancy.

மனசிளகப்பண்ண, *inf.* To soften the mind. 2. To move the affections.

மனசிலேகாண, *inf.* To meditate, to consider.

மனசுஅதின்மேலேயிருக்கிறது. The mind is bent upon it.

மனசுக்குச்சரிபோனபடிசெய்கிறான். He acts according to his own mind.

மனசுக்கேற்கநடக்க, *inf.* To walk or act according to one's mind or will.

மனசுநோக—மனசுநோவ, *inf.* To be grieved in mind.

மனசொருவிதமாயிருக்கிறது. My mind is wavering.

மனசோடே. Wilfully.

மனதின்தீக்குணம், *s.* [*also* மனத்தீக்குணம்.] The evil dispositions of the mind. See தீக்குணம்.

மனதின்நற்குணம், *s.* The good dispositions of mind: 1. அருள்நினைவு, kind thoughts; 2. ஆசையறுத்தல், mortification of corrupt desires; 3. தவப்பற்று, persevering penance. See நற்குணம்.

மனதைக்கருக்க, *inf.* To wound the feelings. See கருக்கு, *v.*

மனதொழுக்கம் — மனத்தொழுக்கம், *s.* Right way of thinking.

அதின்மேலெனக்குமனதில்லை. It does not suit me.

மனஸ்தாபம் — மனத்தாபம், *s.* Grief, heart-burning. 2. Displeasure, வெறுப்பு. 3. [*Chris. usage.*] Repentance.

உத்தமமனஸ்தாபம். True repentance.

அவரென்மேல்மனஸ்தாபமாயிருக்கிறார். He is displeased with me.

*மனம், *s.* Mind, will, the reasoning faculty, நெஞ்சு. 2. Purpose, intention, sentiment, desire, as மனசு. 3. [*in comb.*] Memory, ஞாபகம்; [*from Sa. Mna.* W. p. 676.]

மனம்போனபடிநடவாதே. Do not follow your own will [obstinately].

மனங்கொண்டதுமாளிகை. What the mind accepts becomes a palace.

மனக்கசப்பு, *s.* Rancor, hatred, bitterness of mind.

மனக்கடினம், *s.* Sternness, hardness of heart.

மனக்கண், *s.* [*com.* மனதின்கண்.] The eye of the mind, mental sight.

மனக்கலக்கம், *s.* Perturbation of mind, agitation.

மனக்கவலை, *s.* Anxiety, care, restlessness of mind.

மனக்கவலைபலக்குறைவு. Anxiety of mind enfeebles.

மனக்களிப்பு, *s.* Elation of spirits, joy. See களிப்பு.

மனக்கள்ளம், *s.* [*com.* மனதிற்கள்ளம்.] Guile.

மனக்காட்சி, *s.* Perception by the senses. See மானதக்காட்சி.

மனக்கிடக்கை, *s.* One's own feeling, &c. See கிட, *v.* (*p.*)

மனக்கிடை, *s.* Inmost thought. (*p.*)

மனக்கிலேசம், *s.* Sorrow of heart.

மனக்குத்துதல், *v. noun.* Sting of conscience, compunction, remorse.

மனக்குருடு, *s.* Mental blindness, illusion.

மனக்குழப்பம், *s.* Agitation of mind.

மனக்குறிப்பு, *s.* Aim of the mind. 2. Guess.

மனக்குறை, *s.* Dissatisfaction, discontent, umbrage.

மனக்குறைதீர்க்கிறது. Relieving a dissatisfied mind, as by granting favors. 2. Revenging injuries.

மனக்கூர்மை, *s.* Sagacity, acumen.

மனக்கோட்டம் — மனத்தழுக்கம், *s.* Envy, dislike. (*p.*)

மனக்கோட்டரவு, *v. noun.* Lowness of spirits.

மனங்கசிய, *inf.* To melt as the heart, to be tender. See கசி.

மனங்கரைய, *inf.* To relent. 2. To be sorry.

மனங்கலக்குவிப்போன், *appel. n.* An epithet of Kama; (*lit.*) one who confuses the mind. See மன்மதன்.

மனங்கனிய, *inf.* To be tender in mind. See கனி, *v.*

மனங்கருக, *inf.* To be displeased. See கருகு, *v.*

மனங்குருவ, *inf.* To be piqued, dissatisfied; to take umbrage.

மனங்கூச, *inf.* To be shy, diffident, &c. See கூச, *v.*

மனங்கூம்ப, *inf.* To close the mind, excluding earthly objects. (*p.*)

மனங்கொதிக்க, *inf.* To grieve. 2. To yearn. 3. To rage with anger.

மனங்கொள்ள, *inf.* To will. 2. To desire.

மனங்கோட, *inf.* To be envious, displeased, &c. (*p.*)

மனங்கோண, *inf.* To be offended, discontented; to be cross, தவறிச்சாய.

மனச்சஞ்சலம், *s.* Grief of mind.

மனச்சம்பூரணம், *s.* Satisfaction of mind.

மனச்சலிப்பு, *v. noun.* Grief, aversion, displeasure.

மனச்சாட்சி, *s.* Testimony of the mind. conscience, as மனோசாட்சி.

மனச்சாய்ப்பு — மனச்சாய்வு, *v. noun,* Inclination of the mind, propensity. 2. Partiality, prejudice, பட்சபாதம்.

மனச்சார்பு. Tendency of the mind, as மனப்போக்கு.

மனஞ்சலித்தல். Being troubled in mind; wearied in spirit.

மனத்தாராளம், *s.* Generosity, openheartedness; frankness.

மனத்தாழ்மை, *s.* Humility, lowliness of mind.

மனத்திடம், *s.* Firmness of mind, resolution, energy.

மனத்திட்டம் — மனநிதானம், *s.* Estimate in the mind of another's abilities, or of any quantity, quality, or distance. 2. As மனநேர்மை.

மனத்தியானம், *s.* Meditation, reflection.

மனத்திருத்தி, *s.* Contentment, satisfaction of mind.

மனத்தீமை, *s.* Depravity of heart.

மனத்துக்கம்—மனத்துயரம், *s.* Grief of mind, sorrow of heart.

மனத்துப்புரவு-மனத்தூய்மை, *s.* Purity of mind, sincerity.

மனத்தெளிவு — மனத்தேற்றம், *v. noun.* Clearness of mind.

மனநிதானம்—மனோநிதானம், *s.* Determination of mind, resolution.

மனநிலை, *s.* Steadiness of mind, firmness of will.

மனநிறை, *s.* Purity of heart, as மனத்தூய்மை. 2. Contentment, as மனத்திருத்தி. 3. Impartiality.

மனநெருடு, *s.* Crabbedness, moroseness, sullenness, வெடுவெடுப்பு.

மனநேர்மை, *s.* Sincerity, truth.

மனநோ—மனநோவு, *s.* Regret, remorse; (*lit.*) pain of mind.

மனநோக்கம், *s.* Aim, intention.

மனநோக, *inf.* To regret; to feel remorse. 2. To be discontented, to repine.

என்னைமனநோகச்செய்தான். He grieved me.

மனந்தளம்ப, *inf.* To vacillate, be unstable in mind. 2. To be distressed with cares.

மனந்தளர, *inf.* To grow discouraged or dispirited.

மனந்திரித்தல்—மனந்திருப்பல், *v. noun.* Turning the mind, changing one's purpose.

மனந்திருந்துதல். Change of mind, reformation of character.

மனந்திரும்புதல். Turning of the mind. 2. [*Chris. usage.*] Conversion.

மனப்படுத்தல். Causing to agree, persuading. (*p.*)

மனப்பதைப்பு. Agonizing pain of mind, intense anxiety. 2. As மனோவாஞ்சை.

மனப்பற்று. Emotion.

மனப்பாடம், *s.* A lesson learned by heart. See பாடம்.

மனப்பால்குடித்தல், *v. noun.* Indulging the imagination, fancying, (*lit.*) drinking the mind's milk.

மனப்பிரமை — மனமருள், *s.* Distraction of mind, derangement.

மனப்பீடை, *s.* Distress of mind. See பீடை.

மனப்பூரணம், *s.* Contentment, as மனத்திருத்தி. 2. Exquisite joy, hilarity, உள்ளக்களிப்பு. 3. Ingenuousness, as மனநேர்மை.

மனப்பூரிப்பு, *v. noun.* [*inf.* மனம்பூரிக்க.] Fulness of heart, excessive joy, மிகுகளிப்பு. 2. Contentment, as மனப்பூரணம்.

மனப்பொறுப்பு. Forbearance, patience, பொறுமை.

மனமகிழ்ச்சி — மனமலர்ச்சி, *v. noun.* [*inf.* மனமகிழ—மனமலர.] Cheerfulness, joy, hilarity.

மனமடிவு, [*inf.* மனமடிக்க, *com.* மனமடிவாக்க.] Pain of mind, mortification, great disgust. 2. Discouragement, dispiritedness, depression, தைரியமின்மை.

மனமுறிய, *inf.* [*v. noun* மனமுறிவு, *aversion*; *sometimes* மனமுறிக்கல்.] To be broken-hearted, dispirited, discouraged.

அவனென்னோடுமனமுறியப்பேசினான். He spoke so as to wound my feelings.

மனமுறுத்த, *inf.* [*com.* மனதையுறுத்த.] To pain the mind as a sarcasm, &c.

மனமேட்டிமை, *s.* Haughtiness of mind.

மனம்பிடிக்க, *inf.* To be pleasing to the mind, to suit one's fancy.

மனம்பேதிக்க, *inf.* To be at variance, to disagree in opinion. 2. To be distracted in mind, as மனக்கலக்க.

மனம்பொங்குதல், *v. noun.* Excitement of the mind from joy, sorrow, or anger. 2. Being enraged.

மனம்பொருந்த, *inf.* [*v. noun* மனப்பொருத்தம்.] To consent to, சம்மதிக்க. 2. To approve, to like, அங்கீகரிக்க. 3. To be in accordance with one's mind.

மனம்பொறுக்க, *inf.* To forbear, to have patience—For the *negat.* see under பொறு.

மனம்போனபோக்கு, *v. noun.* A wilful or head-strong course.

மனரம்மியம், *s.* Contentment, as மனோரம்மியம்.

மனராசி, *s.* Consent of will, as மனோராசி.

மனவருத்தி, *s.* Desire of mind, as மனவிருப்பம். (*p.*)

மனவலி — மனவூக்கம், *s.* Strength of mind; mental energy.

மனவாக்குக்காயம் – மனோவாக்குக்காயம், *s.* The three instruments of good or evil in man—the mind, or thoughts; organs of speech, or words; and the body, or actions.

மனவிகாரம்—மனோவிகாரம், *s.* Aberration of mind.

மனவிசனம், *s.* Displeasure, dissatisfaction.

மனவிருப்பம்—மனோவாஞ்சை, *s.* The desire of the mind. 2. Choice.

மனவுறுதி, *s.* Resolution, as மனத்திடம்.

மனவெரிச்சல், *s.* Envy, jealousy.

மனவெழுச்சி, *v. noun.* Excitement, energy, ambition; [*ex* எழுச்சி.]

மனவேகம்—மனோவேகம், *s.* Activity or quickness of mind, as மனோகதி.

மனவொருமிப்பு — மனவொன்றிப்பு, *v. noun.* Union, harmony, concord.

மனோகுலம்—மனோகுலம்-மனவியாகுலம்—மனோவியாகுலம், *s.* Grief; [*ex* ஆகுலம்.]

மனோகதி, *s.* Quickness of mind, acuteness of perception.

மனோகரம்—மனோக்கியம், *s.* Beautifulness, pleasingness. 2. Desirableness.

மனோசலம்-மனோசலனம், *s.* Emotions of mind.

மனோசன்-மனோபவன்—மனோபு-மனோபோசி—மனோற்பவன், *s.* Kama, the Hindu Cupid; (*lit.*) the mind-born.

மனோசாட்சி, *s.* Conscience, சீவசாட்சி.

மனோச்சாகம்—மனோற்சாகம், *s.* Freedom of mind, தன்னிஷ்டம். 2. As மனவூக்கம்; [*ex* உச்சாகம்.]

மனோதண்டம், *s.* Restraint of one's passions or lustful desires.

மனோதத்தம், *s*, A vow, &c. See தத்தம்.

மனோதைரியம் — மனோபலம் — மனத்தைரியம், *s.* Fortitude, good courage.

மனோநிச்சயம்—மனோநிதானம், *s.* As மனநிதானம்.

மனோபதி, *s.* Brahma's city, பிரமன்நகரம். (ஸ்காந்தம்.)

மனோபவம், *s.* The thought of the mind; (*lit.*) what is born in the mind, மனதிலேபிறந்தது.

மனோபாவம்—மனோபாவனை, *s.* Imagination, fancy, மனதற்பாவிக்கை. 2. [*usage.*] The real state of the mind.

மனோபிஷ்டம்—மனோபீஷ்டம், *s.* Pleasure. See அபிஷ்டம்.

மனோபூசை, *s.* An ejaculation, a mystical form of prayer, மானதபூசை.

மனோமயம்—மனோமயகோசம், *s.* One of the five investitures of the soul. See கோசம்.

மனோரஞ்சிதம், *s.* That which delights the mind, இன்பமானது. See இரஞ்சிதம்.

மனோரதம், *s.* Desire, pleasure, சந்தோஷம். (பஞ்சதந்.)

மனோரமை, *s.* The daughter of Mount Meru and wife of Mount Hymalaya.

மனோரம்மியம், *s.* Satisfaction, contentment; [*ex* இரம்மியம்.]

மனோராசி, *s.* Agreement, consent, as மனராசி.

மனோராச்சியம், *s.* Idle fancy, reverie, chimera, வீணெண்ணம்.

மனோராச்சியம்பண்ண, *inf.* To build castles in the air; (*lit.*) a kingdom in the mind.

மனோலயம், *s.* Extinction of will, மனவொடுக்கம். (கல, 36.)

மனோலி, *s.* A wit, a joker, ஆசியக்காரன்; [*from Sa. Manolowlya.* W. p. 641.]

மனோலித்தனம், *s.* Wit, pleasantry.

மனோவியாபாரம், *s.* The operation of mind, மனதின்செய்லுகை.

மனோவிருத்தி — மனோவிர்த்தி, *s.* The extension or improvement of mind.

மனோற்பவன், *s.* Kama. See மனோசன்.

மனோன்மணி, *s.* Parvati, பார்வதி; [*ex* உன்மணி.] (சது.)

மனாவிருதி, *s.* A kind of melody, இசைப்பாட்டு. (சது.)

மனாவு, *s.* A mock-pearl, அக்குமணி. 2. A conch, சங்கு. 3. A gem in general, மணிப்பொது. (சது.)

•மனனம், *s.* Minding, considering, சிந்தித்தல். W. p. 640. Manana. 2. Memory, ஞாபகம். See மனம். (*c.*)

மனனம்பண்ண, *inf.* To get by heart. 2. To meditate.

•மனுகுலம். See மனம்.

மனுவு, *s.* A gold or silver girdle, as அரைப்பட்டிகை. (சது.)

•மனிசன்—மனிஷன், *s.* [*fem.* மனிஷி.] Man, a male person. See மனுஷன்.

•மனிதர், *s.* [*sing.* மனிதன்.] Men, human beings, mankind, persons, மானிடர்.

மனிதசஞ்சாரம், *s.* Being frequented or inhabited by human beings.

மனிலா, *s.* Manilla, a town in the Philippine Islands, ஊர்.

மனிலாஆத்தா, *s.* Coarse custard-apple, bullock's heart. See ஆத்தா.

மனிலாப்பயறு, *s.* [*also* மனிலாக்கொட்டை.] A plant. See கொக்கட்டை.

மனு, *s.* Petition, request, விண்ணப்பம். 2. *A maund.* See மணு. (*Beschi.*)

இந்தமனுத்தரவேண்டும். Please grant this request.

ஒருமனுவிருக்கிறது. I have to beg of you a favor.

மனுக்கேட்டுக்கொள்ள — மனுச்செய்துகொள்ள, *inf.* To petition.

•மனு, *s.* *Menu*, the great legislator and saint, regarded as the son of Brahma, or a personification of that god, and the author of மானவம் or Institutes of Menu. He is called *Swayambhuva*, மனுச்சக்கிரவர்த்தி. 2. A generic term, applied to the fourteen successive *Menus* who preside over the universe, each for the period of a *Manuvantara*—In the present *Kalpa* there have already been six, of whom *Swayambhuva* was the first. The seventh, or now ruling Menu, is *Vaivoswata*. 3. Man in general, மனுஷன். 4. Mantra, a mystical verse, or formula, மந்திரம். W. p. 641. Manu. 5. One of the treatises of jurisprudence. See தருமநூல்.

மனுப்பெருத்ததேசம். A country thickly populated.

மனுஅவதாரம், *s.* The incarnation of a deity in human form.

மனுஉரு—மனுவுரு, *s.* Human shape.

மனுகுலத்தோர்—மனுமரபோர், *s.* [*pl.*] Descendants of king Menu.

மனுக்கள், *s.* Men.

மனுக்குலம், *s.* Mankind.

மனுநீதி—மனுநெறி, *s.* Statutes, institutes of Menu, தருமநூல். 2. Equity.

மனுப்பிரளயம், *s.* The general deluge at the close of each *Manuvantara*.

மனுப்புத்திரர், *s.* [*pl.*] The descendants of Menu, மனுவமிசத்தார். 2. Men, human beings, மனுடர்.

மனுப்பூடுகள், *s.* [*vul.*] Human beings, *in pity*.

மனுமகன், *s.* A man of noble descent, பிரபு. 2. [*com.* மனுஷமகன்.] An honest man, a man of truth, யோக்கியன்.

மனுமக்கள், *s.* [*pl.*] Men, human beings, மனிதர்.

மனுரூபம் — மனுவடிவம், *s.* Human form, image, shape. 2. As மனுஅவதாரம்.

மனுவந்தரம் — மன்வந்தரம், *s.* The reign of a *Menu*, a period equal to seventy-one ages of the gods, fourteen of them making a Kalpa, or 4,320,000,000 of years, of mortals, மனுவின்அரசாட்சி. W. p. 643. Manvantara.

மனுவர், *s.* [*pl.*] Human beings. (*p.*)

•மனுசன்—மனுஷன்—மனுடன், s. [also மனுஷன்.] Man, மனிதன்; [fem. மனுஷி.] W. p. 641. MANUJA, MANUSHYA. (c.) 2. [in metaph.]—The sentient soul, ஆத்துமா.
மனுஷனைப்பிடித்துத்தின்கிறவர்கள். Cannibals.
மனுஷசங்காத்தம், s. Intercourse with men.
மனுஷசுபாவம், s. Human nature.
மனுஷமகன், s. An honest man. See மனுமகன்.
மனுஷர்சந்தடி, s. Bustle of men.
மனுஷாக, inf. To attain the age of a man. 2. To become illustrious.
மனுஷாவதாரம், s. As மனுஅவதாரம்.
மனுஷீகம், s. [also மானுஷீயம்.] Manhood, human nature.

மனுவர், s. Smiths, blacksmiths, கம்மாளர். (சது.) 2. See மனு, Sa.

மனை, s. A piece of ground of 2,400 square feet, உகுசா-குழிகொண்டநிலம். 2. A house, வீடு. (c.) 3. Wife, மனைவி. 4. Family, household, குடும்பம். 5. A table of cards, in tick-tack, சூதாடுபலகைமினறை.
மனைக்கட்டுக்கிவேசனம், s. Ground on which a house stands.
மனைக்கிழத்தி, s. A wife, மனைவி. (p.)
மனைக்கோன், s. A lizard, பல்லி.
மனைச்சீட்டு—மனைக்கிரயச்சீட்டு—மனைமுறி, s. A title-deed of ground, மனைக்கிரயபத்திரம்.
மனைத்தக்காள், s. A wife, a house-wife; [ex மனை et தக்கான்.] (குறள்.)
மனைத்தாயம், s. [prov.] The virtue of domestic life, இல்லறவொழுக்கம். (குறள்.)
மனைமாட்சிமை, s. The excellency of domestic life, title of a chapter in the Cural.
மனையறம், s. The domestic life, as இல்லறம்.
மனையாட்டி—மனையாள், s. A wife, a bride. (சது.)
மனையையொற்றிவைக்க, inf. To mortgage a house-land.
மனைவரி, s. Quit-rent.
மனைவாழ்க்கை, s. Conjugal life, as இல்வாழ்க்கை.
மனைவிருத்திச்செலவு. The daily expenses in a household.

மனை, v. [improp. for வனை, which see.] To make, &c.

•மனைவி, s. A wife, இல்லாள்; [from Sa. Manavee.]

•மனோசிலை, s. [also சிலை.] A kind of orpiment; red arsenic, ஈர்பாஷாணம். W. p 640. MANAHSILA.

•மனோபலம்—மனோமயம்-மனோன்மணி. See under மனம்.

மன். [an affix particle.] 1. An expletive, ஓரசைச்சொல், அதுமற்கொண்கன்றேரே, that is the chief's chariot. 2. Modification, ஆக்கம், கானமன்பண்டு, [இப்போதுநாடாயிருக்கிறது.] it was formerly a wilderness [now cultivated]. 3. Indicating words omitted necessary for a full sense, ஒழிபிசை, கூரியதோர்வாண்மன், it is a sharp sword [it has cut down many]. 4. What is gone, கழிவு, as சிறிய கட்பெறினே யெமக்கீயுமன்னே, had he obtained an elephant he would have given it to us—[but he is dead]. 5. Greatness, பெருமை, abundance, மிகுதி, as எந்தையெமக்கருளுமன், my father will give us abundantly. (சது.) 6. Durableness, நிலைபேறு, மன்னுஉலகத்துமன்னியது மொழிமோ, say, what is enduring on this unsubstantial earth. 7. A medial particle, இடைநிலை, என்மனார், they will say so. 8. A personal affix, பெயர்விகுதி, வடமன், a northern tribe. 9. s. A king, அரசன்.

மன், s. [Beng.] A maund of $82\frac{2}{7}$ pounds, Avoirdupois.

மன்பதை, s. The world collectively; a crowd of people, மக்கட்பரப்பு. (சது.)

•மன்மதன், s. Kama, காமன். W. p. 643. MANMAT'HA. 2. (சது.) One who confounds the mind, மனக்கலக்குவிப்போன்.
மன்மதன்கணை, டு. The five arrows of Kama. See பஞ்சபாணம்.
மன்மதகிரகம், s. Pudendum mulieris.
மன்மதபாணம், s. An arrow of Kama. 2. A kind of jasmine, ஒர்வகைமல்லிகை.
மன்மதவருஷம், s. The twenty-ninth year in the Hindu cycle, corresponding with A. D. 1835.
மன்மதவேதனை, s. Suffering from love.

•மன்வந்தரம், s. As மனுவந்தரம், under மனு.

மன்விருத்தம், s. As ஆசிரியவிருத்தம். See பா, and பாவினம் under இனம். (சது.)

மன்ற, s. Certainty, தேற்றம். (சது.) 2. Abundance, மிகுதி. (p.)
கடவுளாயினுமாகமடவைமன்றவாழியமுருகே.......O Muruka, god or not, thou art to a certainty ignorant!

மன்றம், s. [also மன்றகம்.] A place of assembly, அம்பலம். 2. An open space, a common, வெளி. 3. A long street, நெடுந்தெரு. 4. Scent, perfume, வாசனை. 5. Certainty, நிச்சயம். (சது.)
மன்றம்கறங்கமணப்பறையாயின. That which has become a festive drum, beaten in an assembly. (கலடி.)

மன்றல், s. Marriage, விவாகம். 2. As மன்றம், 3, 4. (p.)

மன்றாடு, கிறேன், மன்றாடினேன், வேன், மன்றாட, v. a. To pray, entreat, implore, petition, supplicate, வேண்ட. (c.)
மன்றாட்டம்—மன்றாட்டு, v. noun. [improp. மன்றாட்டு.] Petition, request, entreaty, prayer, வேண்டுகை.
மன்றாட்டின்மேலேவர, inf. To come supplicating.
மன்றாட்டுக்கேட்க, inf. To beg a favor.
மன்றாட்டுக்குப்போக, inf. To go to beg or pray.
மன்றாட்டுவேண்டுதல், v. noun. [R. C. usage] Supplication and prayer.

மன்று, s. A court, assembly-room, சபை. 2. The temple of Siva, at Chillumbrum, in South Arcot, சிதம்பரம். 3. (சது.) An open field, வெளி.
மன்றுகூடுதல், v. noun. Coming together as a Panchayat.
மன்றுபட, inf. To come to the knowledge of the public, to be divulged, வெளிப்பட. (சது.)
மன்றுளாடி, appel. n. Siva, as dancing in void space, or as existing in vacuum, சிவன்.

மன்னவன், s. A king, an emperor, அரசன். 2. The twenty-sixth lunar asterism, உத்திரட்டாதி. 3. A universal master, எப்பொருட்குமிறைவன்; [ex மன்.] (p.)

மன்னன், s. A king, a prince, அரசன்; [pl. மன்னர்.] 2. A man in his prime, or from thirty-two to forty-eight, ஆடவர்பருவத்தொன்று; [ex மன்.]
மன்னர்பின்னோர், s. [pl.] The வைசியர் caste, including the three classes employed in industry and labor—merchants, agriculturalists, and shepherds.
மன்னர்மன்னவன்—மன்னர்மன்னன்—மன்னவர்மன்னன், s. The king Dury'od'hana, துரியோதனன். (சது.) 2. A king of kings, as இராசாதிராசன்.

மன்னாட்டு — மன்னாப்பு. See மன்னுட்டு, and மன்னிப்பு.

மன்னார், s. The town of Manaar, ஓரூர். 2. See மன்னு, v.
மன்னார்க்குடாக்கடல், s. The gulf of Manaar.
மன்னார்கோயில், s. Name of another town, ஓரூர்.

மன்னி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To spare, forgive, pardon, governing the dative of the person and the accusative of the thing, பொறுக்க. (c.)
அவனுக்குப்பாவத்தைமன்னித்தார். He forgave his sin.
மன்னிப்பு, v. noun. [improp. மன்னாப்பு.] Pardon, forgiveness, remission.

மன்னிறைதருதல், v. noun. Paying tax, tribute or assessment—as one of the duties of husbandmen, இறைசெலுத்தல். (p.)

மன்னு—மன், கிறேன், மன்னினேன், மன்னுவேன், மன்ன, v. n. To be fixed, lasting; to remain, to be settled, நிலைபெற. 2. [also பன்னு.] To be close or thick, பொருந்த. (p.) 3. [prov.] To gather up the skirts of a garment, திரைக்க.
மன்னார், appel. n. [pl.] Enemies, foes, பகைவர். (சது.)
மன்னுமான், s. The Deity, the lasting one, கடவுள். (p.)
மன்னுயிர், s. Human life, the soul as surviving death, ஆத்துமா. Thus Beschi, உயர்வீட்டை மன்னுயிரெலா முறவருந்த முறிமரக் தோய். (தேம்பாவணி.) 2. Animal life; the soul as transmigrating, சீவன். Thus in the Cural,தன்னுயிர்தானறப்பெற்றானையேனையமன்னுயிரெல்லாந்தொழும். (குறள்.)
மன்னுலகம்—மன்னுலகு, s. The abode of the gods, Swerga; (lit.) the enduring world, மோட்சலோகம். (சது.)
மன்னல் — மன்னுதல், v. noun. Being steady. 2. Persevering.

மன்னெச்சி, s. [prov.] A gruff, surly, pouting countenance, சினக்குறிப்பு.

மன்னை, s. [vul. மென்னை.] The throat, தொண்டை. (c.) 2. [prov.] Anger, displeasure, கோபம். 3. Bloated cheeks, கதுப்பு.
மன்னையிறங்குதல், v. noun. Putting on a gruff, pouting countenance [opprobriously].
மன்னையைப்பிடிக்க, inf. To take one by the throat.
மன்னையைப்பிடித்துறத்திவிட்டது. It seized [it] by the throat and drained off the blood—spoken of a tiger, &c.

மன்னே, s. An expletive, அசைச்சொல். (p.)

# மா

**மா.** A syllabic letter, composed of ம் and ஆ.

**மா**, *s.* [*gen.* மாவின்.] Flour, meal, dough, pulverized powders, [*commonly* மாவு.] இடிமா. 2. The mango-tree, or fruit, மாமரம், Mangifera Indica. 3. The sweet mango, தேமா. 4. A fraction $\frac{1}{320}$, ஒர்இலக்கம்... 5. (*p.*) A beast, an animal, விலங்கின்பொது. 6. A horse in general, குதிரைப்பொது. 7. The male of the horse, hog and elephant. 8. An expletive, அசைச்சொல், as உப்பின்றபுற்கை யுண்கமாகொற்கையோனே. 9. Strength, வலி. 10. Blackness, கறுப்பு. 11. Cloth, சீலை. 12. A humming insect, வண்டு. 13. A field, வயல். 14. [*prov.*] Dust, தூசு. 15. Calling, a call, அழைப்பு. 16. (*Beschi.*) The after-birth, secundines, சஞ்சக்கொடி.

மாகாய்த்துவிட்டது. The mango-tree bore fruit.

மாவுறைமலையேறும். Small sums may make a large total. [*prov.*]

**மாகரி**, *s.* A male elephant, ஆண்யானை.

**மாகாணி**, *s.* One-sixteenth, a fractional part.

ஆயிரமாகாணிஅறுபத்திரண்டரை. A thousand sixteenths make sixty two and a half

**மாக்கருவி**, *s.* A saddle, குதிரைக்கல்லணை. (சது.)

**மாக்கல்**, *s.* Slate-stone. See கல்.

**மாக்காப்பு**, *s.* Flour-water. See under கா, *v.*

**மாக்குளித்தல்**, *v. noun.* A kind of girl's play.

**மாங்கன்று**, *s.* A mango-plant.

**மாங்காய்**, *s.* Unripe mango-fruit. 2. The kidney of quadrupeds, and gizzard of fowls. (*c.*)

மாங்காய்பெரிக்கிறது. The mango has a hot taste.

**மாங்காய்ப்பூட்டு**, *s.* A kind of lock.

**மாங்காயூறுகாய்**, *s.* A pickle of unripe mangoes.

**மாங்காய்வற்றல் — மாவற்றல்**, *s.* The dried unripe mango-fruit, used in curry.

**மாச்சிலை**, *s.* A kind of stone, as மாக்கல்.

**மாந்தளிர்—மாந்துளிர்**, *s.* The tender foliage of mango-trees, or the first shootings of mango-leaves.

**மாந்தளிர்ப்பச்சை**, *s.* A kind of green stone, ஒர்பச்சைக்கல்.

**மாந்தோப்பு**, *s.* A mango-grove.

**மாப்பிசைதல்**, *v. noun.* Kneading.

**மாப்புளித்தல்—மாவுப்புதல்.** Becoming leavened.

**மாமரம்**, *s.* The mango-tree.

**மாம்பழம்**, *s.* A ripe mango.

**மாவடு**, *s.* A very young unripe mango-fruit.

**மாவரைத்தல்**, *v. noun.* Grinding corn.

**மாவலர்**, *s.* [*pl.*] Horsemen, குதிரைப்பாகர். 2. Elephant-drivers, யானைப்பாகர்.

**மாவிடைமரவிடை**, *s.* All kinds of beasts and trees.

மாவிடைமரவிடை சலம்நிதி பாஷாணமுள்பட விற்றேன். I have sold the beasts, water, hidden treasures and stones contained [in the ground]; *a form of a deed.*

**மாவிலைத்தோரணம்**, *s.* A string of mango-leaves. See தோரணங்கட்ட.

**மாவிளக்கு**, *s.* An offering of kneaded flour in the midst of which a little pit is made for oil or ghee to burn, as in a lamp.

**மாவிளக்கெடுக்க**, *inf.* To make an offering as above.

**மாவிறங்குதல்**, *v. noun.* Becoming mealy and edible, as the esculent root of the young palmyra.

**மாவுத்தன்**, *s.* An elephant-driver, யானைப்பாகன். (*c.*) 2. A horseman. (*p.*)

***மா**, *adj.* [*contrac. of Sa. Mahat.*] Great, பெரிய. See மகா.

**மாகண்டம்**, *s.* One of the twenty-seven sections of the lunar path, as அதிகண்டம்.

**மாகனன்**, *s.* [*prov.*] A brahman, பிராமணன்.

**மாகாளம்**, *s.* A place celebrated for the worship of Siva, ஓர்சிவஸ்தலம்.

**மாகாளி**, *s.* Durga. (சது.)

**மாகேந்திரம்**, *s.* [*in astrol.*] See தசப்பொருத்தம்.

**மாசனம்—மாசனங்கள்**, *s.* Excellent or great persons, பெரியோர். 2. Brahmans, பிராமணர்.

**மாசாந்தம்**, *s.* Great patience.

**மாசாலம்**, *s.* Whining, cant, சிணுங்குகை. 2. Using affectation, playing tricks.

**மாசாலக்கள்ளி**, *s.* A dissimulating woman. See கள்ளம்.

**மாசேனன்**, *s.* A name of Argha, அருகன். 2. The deity, கடவுள். (சது.) 3. The god Subramanya, முருகன்.

**மாதண்டம்**, *s.* A principal road, king's high-way, இராசவீதி. (சது.)

**மாதவம்**, *s.* Great austerities.

**மாதவர்**, *s.* [*pl.*] Ascetics, Rishis, இருஷிகள்.

**மாதறி**, *s.* A large timber, விட்டம். (*R.*)

**மாதிசை**, *s.* [*prop.* மாதசை, *in astrol.*] Aggregate influence of the planets, as மகாதிசை.

**மாதிசை**, கூ. The nine planetary influences. They are, சூரியமாதிசை, சந்திரமாதிசை, செவ்வாய்மாதிசை, இராகுமாதிசை, சனிமாதிசை, கேதுமாதிசை, புதன்மாதிசை, சுக்கிரன்மாதிசை; embracing in all one hundred and twenty years.

**மாதுரோகம்**, *s.* [*appel.* மாதுரோகி.] Great treachery.

**மாதேவன்**, *s.* Siva, சிவன், as மகாதேவன். (சது.) 2. See உருத்திரர்.

**மாதேவபட்டணம்**, *s.* A town so called in the extreme south, ஒரூர்.

**மாதேவி**, *s.* Parvati, பார்வதி.

**மாத்தகை**, *s.* Superfineness, splendor, மிகுசிறப்பு. (சிதி.)

**மாத்தியாகி**, *s.* A very liberal person or prince.

**மாநடன்**, *s.* Siva, சிவன். (சது.)

**மாபலன்**, *s.* Wind, காற்று. See மகாபலன்.

**மாபலி—மாபலிவாணன்**, *s.* *Mahabali.* See மகாபலி.

**மாபலிபுரம்—மாவலிபுரம்**, *s.* A town. 2. The seven pagodas near Sadras.

**மாபுலி**, *s.* A lion, சிங்கம்; *used also in contempt.*

**மாபாவி**, *s.* A very wicked person.

**மாபுற்பாகம்**, *s.* External Saiva-puja, வெளியரங்கசிவபூசை.

**மாபூதி**, *s.* One of the seven hells. See நரகம்.

**மாப்பிரயத்தனம்**, *s.* A great effort.

**மாப்பிளை — மாப்பிள்ளை**, *s.* A bridegroom. 2. A husband. 3. A son-in-law. 4. The Moplas in the Malayalim country.

**மாமகம்**, *s.* A Hindu festival, as மாமாங்கம்.

**மாமகக்குளம்**, *s.* A sacred reservoir at Combaconum.

**மாமணி**, *s.* A gem, as மாணிக்கம்.

**மாமருத்துநூலோர்—மாமாத்திரர்**, *s.* [*pl.*] Physicians, வைத்தியர். (சது.)

**மாமலை**, *s.* Any great mountain. (*p.*)

**மாமல்லபுரம்**, *s.* As மாபலிபுரம், 2.

**மாமாங்கம்**, *s.* [*colloq. for* மாமாகம்.] A festival celebrated every twelve years at Combaconum. See மகாமகம். 2. [*in the Malayalum country.*] Period of the reign of a subordinate king under the Raya dynasty of Vijayanagaram.

இவன்நாலுமாமாங்கம்கண்டவன். He is about fifty years old; (*lit.*) one who has seen four such festivals.

மாமாங்கமாளுற்பார்க்கக்கூடாது. Brothers and sisters who have not visited each other during a மாமாங்கம், should not meet without a propitiatory offering.

**மாமாத்திரர்.** See மாமருத்துநூலோர்.

**மாமாயை**, *s.* [*also* மகாமாயை.] A form of Maya, the maternal principle, or the chief cause of all things.

**மாமாலம்**, *s.* Great deceitfulness.

**மாமுகில்**, *s.* Thick clouds.

**மாமுனி**, *s.* An epithet of Argha, அருகன். 2. The sage *Vasisht'a*, வசிஷ்டன்.

**மாமேரு**, *s.* Maha Meru. See மகாமேரு.

**மாரதம்**, *s.* One of the four kinds of war chariots. See இரதம்.

**மாரதன்.** See மகாரதன்.

**மாவலி**, *s.* *Mahabali.* See மகாபலி.

**மாவிரதம்**, *s.* A religious system of the Saivas. See மகாவிரதம்.

**மாவிரதியர்**, *s.* Saivas. See மகாவிரதியர்.

மாவீரன், s. A great hero, champion.

மாவுரம், s. Strength; [ex உரம்.] (சது.)

*மா, s. Lukshmi, இலக்குமி. 2. Good fortune, felicity. 3. Wealth, செல்வம். W. p. 630. Ma. 4. Beauty, அழகு. 5. Disgust, வெறுப்பு. 6. (Sa.) Mother, as அம்மா, மாதா.

மாதவன், s. Vishnu as the husband of Lukshmi, விஷ்ணு. (R.)

மாமகன், s. Kama, being the son of இலக்குமி, காமன். (சது.)

*மாகதம், s. That which belongs to, or is produced in the kingdom of Magadha, or south Behar, மகதசம்பந்தம்; [ex மகதம்.] W. p. 654. Magad'ha.

மாகதர், s. [pl.] The inhabitants of Magadha, as மகதர். 2. A particular tribe said to spring from a *Kshatrya*, or kingly, mother, and a *Vaisya*, or servile, father. Their profession is that of minstrels, who sing the praises and chivalrous exploits of sovereigns, and attend on the march of an army. They are still numerous in the west of India under the name of *Bhauts*.

மாகதி, s. Long-pepper. See திப்பிலி. 2. A kind of jasmine, முல்லைக்கொடி. Jasminum fricotomum. (*Rott.*) 3. The language of *Maga'dha*, a dialect of Sanscrit; a *Prakrit*—nearly the same as the *Pali* of the Buddhas and Jainas. See *Sa. Magadha*.

*மாகந்தம், s. Mango-tree, மாமரம். W. p. 654. Makanda.

*மாகம், s. The month February, மாசி. W. p. 648. Mag'ha. 2. The tenth lunar mansion, as மகம். 3. The sky, the air, atmosphere, ஆகாயம். (*Sa. Vaka.*)

மாகநீர், s. Sacred bathing, as மாமகம்.

மாகயம், s. A kind of prepared arsenic, ஓர்வகைப்பாஷாணம்.

மாகாணம், s. [*Hind.*] District, province, தேசம். 2. [*in southern usage.*] A Taluk, தாலுகா.

*மாகுலவர், s. [pl.] Hunters, savages, வேடர். (சது.)

*மாகேசுவரி, s. Parvati, as மகேசுவரி.

மாகேவாரி, adj. [*Mahar.*] Monthly. மாகேவாரிசாகுபடி. Monthly cultivation.

மாக்கல்—மாக்கருவி—மாக்காப்பு. See மா, *Tamil.*

மாக்கள், s. [*com.* மக்கள்.] Men, people, mankind, மனிதர். 2. Children, of any age, பிள்ளைகள். (*p.*)

*மாங்கல்யம்—மாங்கல்லியம், s. A marriage badge, tied to the neck.—For the compounds, see மங்கலியம்; [*ex Sa. Mangalya*, propitiousness.]

மாங்கன், s. [*prov.*] A kind of fish, ஓர் மீன். 2. The kidney, மாங்காய்ப்பிண்டம்.

மாங்காய். See மா.

*மாங்கிசம்—மாங்கிஷம், s. Flesh, animal flesh. See மாமிசம், மாம்சம். (*c.*)

மாங்குடி, s. A town, ஓரூர்.

மாங்குடிமருதனார், s. One of the forty-nine professors of the Madura college.

மாசகதாசகம், s. Insinuation, act of worming one's self into favor, or ingratiating one's self by cunning. (*Colloq.*)

அவன்எப்படியோஅவனைமாசகதாசகம்பண்ணித்தன் கைவிற்போட்டுக்கொண்டான். She won and took him by artifice.

மாசக்காய், s. [*also* மாச்சக்காய்.] The gall-nut, the oak-apple. (*c.*)

மாசக்காய்தின்றவன்போலேபேசுகிறாய்.........You speak as if intoxicated. (*R.*)

மாசங்கம். See மாசு.

*மாசம், s. [*gen.* மாஸத்தயின், *vul. for* மாதத்தின்.] Month, as மாதம் W. p 660. Masa.—*Note.* The abbreviated sign is ௴. The months are solar, as the *Vâkya*, and not the *Siddhânta* system, is followed. The twelve months are, சித்திரை, April; வைகாசி, May; ஆனி, June; ஆடி, July; ஆவணி, August; புரட்டாசி, September; ஐப்பசி, October; கார்த்திகை, November; மார்கழி, December; தை, January; மாசி, February; பங்குனி, March. Each of these begins about the 11th or 12th of the corresponding English month; so that it includes most of that month, and a part of the next. The months are also called in Sanscrit as சைத்திரம், வைகாசம், ஜேஷ்டம், ஆஷாடம், சிராவணம், பாத்திரபதம், ஆஸ்வீசம், கார்த்திகம், மார்கசிரம், புஷியம், மாகம், பாற்குனம். To each of the months is alloted one of the twenty-seven asterisms; to April, சித்திரை; to May, விசாகம்; to June, மூலம்; to July, உத்திராடம்; to August, அவிட்டம்; to September, பூரட்டாதி; to October, அச்சுவினி; to November, கார்த்திகை; to December, மிருகசீரிடம்; to January, பூசம்; to February, மகம்; to March, உத்திரம்; that is, to the Tamil months corresponding generally with these.

மாசக்கோறும். Monthly.
போனமாசம். Last month, ultimo.
நடமாசம். The current month.
வருகிறமாசம்-அடுத்தமாசம். Proximo, the next month.

மாசசந்தாயம், s. Tax paid monthly. See சந்தாயம்.

மாசப்பிறப்பு—மாதசங்கிராந்தி, s. The beginning of a month.

மாசமாசம். Month by month.

மாசவிடாய்—மாதவிடாய், s. Women's monthly course, as தலைமுழுகு.

மாசாந்தம், s. The end or last day of a month; [*ex* அந்தம்.] 2. See மா, *adj.*

மாசாந்தரம், *adv.* Monthly, every month; *per mensem.*

மாசார்நாமா, s. (*Pers.*) A statement of fact in writing signed by several respectable persons in attestation of its truth; a memorial. (*Govt. usage.*)

மாசனம், s. [*Hind.*] A confection, similar in effect to opium, ஓர்லேகியமருந்து. 2. See மா, *adj.*

*மாசி, s. February, *recte*, most of February and part of March, ஓர்மாதம். 2. The tenth lunar mansion, மகநாள். (See மாகம்.) 3. A new ridge in a paddy field, புதுவரம்பு. 4. [*colloq. also* மாசு.] Mist, cloud, மேகம். (*Beschi.*)

மேல்மாசி, s. A drizzling cloud.

கொடிமாசிகள், s. Flitting clouds.

மாசிமகம், A great festival at Combaconum. See மகாமகம்.

*மாசிகம்—மாசியம், s. A monthly ceremony through a year for one deceased; the first at the end of thirty days, மாசசிராத்தம். W. p. 660. Masika.

*மாசிபத்திரி, s. Indian wormwood, Artemisia Indica, ஓர்பூடு.

மாசியம்—மாசிம், s. As மாசனம்.

மாசு, s. A spot, stain, or flaw; taint, tarnish, defect, அழுக்கு. 2. Fault. குற்றம். (See மறு.) 3. Cloud, மேகம். 4. Blackness, கருமை. (சது.) 5. The galaxy, or milky way, பால்வீதிமண்டலம்.

மாசங்கம், s. Women's menses, சூதகம்; [*ex* அங்கம்.]

மாசறல், *v. noun.* [*lit. free from spot.*] Being blameless, pure, spotless, பரிசுத்தமாதல். (சது.)

மாசற்றவன், *appel. n.* One who is spotless.

மாசுதீர்ப்பான், *appel. n.* A barber, மயிர்வினைஞன். (சது.)

மாசுமறைத்தது. A cloud has obscured [the sun or moon].

மாசுணம், s. A rock-snake, a large serpent, மலைப்பாம்பு. 2. Snake, பாம்பு. (சது.)

மாசூல், s. (*Hind.*) Product of a field, all kinds of grain, பயிர்வழிமாசூல்.

கண்டமாசூல்என்னவு. What is the actual produce [of the field]?

*மாசை, s. [*also* மாசடை.] Gold, பொன்; [*from Sa. Masha*, a gold-weight.]

மாச்சக்காய், s. [*also* மாசக்காய்.] The gall-nut, Quercus Infectoria. (*Ains.*)

*மாச்சரியம், s. [*also* மாற்சரியம், மச்சரம், மற்சரம்.] Envy, malice, பொறாமை. W. p. 656. Matsarya.

மாச்சல், *v. noun.* [*prop.* மாய்ச்சல்.] Dying. 2. Mortality. See under மாய்.

மாச்சி—மாச்சு, s. [*prov.*] Fetters.

மாஜி. [*Arab.*] Late; recently deceased.

*மாஞ்சி, s. A fragrant substance, ஓர்வாசனைப்பண்டம். (சது.) 2. A medicinal grass, Valeriana Jatamansi. See சடாமாஞ்சி. [*in* சது, மாஞ்சில்.] W. p. 654. Mamsa.

மாடகம், s. The screw-pin of a lute, வீணைமுறுக்காணி. (சது.)

மாடம், s. A house, hall or palace, உப்பரிகை. [*Compare* மாடி.] 2. As மாடக்குழி.

மாடமாளிகைகூடகோபுரங்கள்............Halls, palaces, pinnacles and towers.

பிள்ளையார்மாடம், s. A niche in a wall for an image of பிள்ளையார்.

விளக்குமாடம், s. A hole in a wall for a lamp.

மாடக்குழி, s. [*vul.* மாடாக்குழி.] A niche in a wall.

மாடப்புறா, s. The domestic pigeon.

மாடப்புறாக்கண்ணிறம், s. A medicinal plant. See அழுக்கிறு.

*மாடம்—மாஷம், s. A kind of pulse, green gram, Phaseolus mungo, உழுந்து. W. p. 660. Masha.

மாடல், *v. noun.* [*defective.*] Doing, செய்தல். (சது.)

*மாடன், s. An ignorant or stupid man, a clown, a dullard, முட்டாள். W. p. 660. Masha. 2. The name of a devil, ஒர்பேய்.
சாம்பிராணிமாடன், s. A regular fool. 2. [vul.] An imp, a devil, ஒர்பேய்.

*மாடி, s. A palace, அரமனை. W. p. 655. Mad'i. 2. Distress, danger, இக்கட்டு. 3. Anger, கோபம். 4. The border of a garment, புடவைபோரம். (Sa. Mad'hi.)
மறுமாடி, s. A ridge. See மறு, adj.

மாடு, s. [gen. மாட்டின்.] A cow or bull, the genus bos, மாட்டின்பொது. 2. A place, இடம். 3. Side, பக்கம். 4. A particle of declension for the ablative of place, ஒருருபிடைச்சொல். (p.)
கறக்கிறமாடு. A milch-cow.
அரசன்மாடு. With, or from, the king.
என்வீட்மாடேவா. Come to my house-side. (p.)
தலைமாடு. Head of a bed.
கால்மாடு. Foot of a bed.
மாடுசாய்த்தல் — மாடுபெயர்த்தல்—மாடோட்டுதல், v. noun. Driving cattle.
மாடுமேய்க்க, inf. [appel. n. மாடுமேய்க்கிறவன்.] To feed oxen, &c.
மாட்டடைறைதல், v. noun. [prov.] Endorsing on the back of a note, &c.
மாட்டடி, s. The step, or footstep, of a cow or bull. 2. A severe blow, as though beating an ox.
மாட்டாங்கோல், s. Rod of a ploughman, or drover.
மாட்டிறக்கம், s. A bullock-ford across a river, ஆற்றிறக்கம்.
மாட்டிறைச்சி, s. Beef.
மாட்டிறைச்சிதின்பதில்லையன்றுமின்றும்வேதியர், மாட்டிறைச்சியல்லவோமரக்கறிக்கடொத்தது. The brahmans eat no beef, but is not beef [in assafœtida] with their vegetable curry?
மாட்டுக்கட்டை, s. A stake for tying cattle.
மாட்டுக்காரப்பயல், [vul. மாட்டாங்காரப்பயல்.] s. A neat-herd; also used in contempt.
மாட்டுக்காரன், s. The owner of a cow, or bullock.
மாட்டுக்கிடை,—மாட்டுத்தொழு, s. A cow-stall.
மாட்டுக்கொட்டில், s. A cow-house.
மாட்டுத்தனம், s. Clownishness, brutishness.
மாட்டுப்புத்தி, s. Dullheadedness, brutishness.
மாட்டுப்பொங்கல், s. A cattle-feast. See பொங்கல்.
மாட்டுமுலைக்காளான், s. [prov.] A kind of fungus resembling the teat of an udder.

*மாடு, s. Felicity, prosperity, செல்வம்; [ex மா.] 2. Gold, பொன். 3. A flat gem, அகன்மணி; [from Sa. Mad'a, or Masha.] See மாசை. (சது.)

மாடை, s. [prov.] Being spread and bent forwards, மாடைக்கொம்பன். See கொம்பு.

*மாடை, s. Gold, பொன். (சது.) 2. A gold-coin, a half moidore, மாடைப்பணம். 3. (Tel.) A half pagoda, அரைவராகன்.

மாட்சி—மாட்சிமை, s. Glory, greatness, magnificence, splendor, majesty, மகிமை. 2. Beauty, அழகு; [ex மாண்.]
மனைமாட்சியில்லாள்கண். The glory of the house is the wife. (p.)

மாட்சிமுமதி. The splendid moon. (p.)

மாட்டு, கிறேன், மாட்டினேன், வேன், மாட்ட, v. a. To button, to tackle, பூட்ட. 2. To beat violently, அடிக்க. 3. To put in, as wood into the fire, நுழைக்க. 4. To hook in, to shut, கொக்கிமாட்ட. 4. v. n. [with கொள்ள.] To get entangled. (c.)
அவனைநன்றாய்மாட்டினான். He gave him good blows.
பறவைகண்ணியில்மாட்டிக்கொண்டது. The bird was entangled in a net.
கடிவாளமாட்ட, inf. To bridle.
மாட்டிக்கொடுக்க —மாட்டிவிட—மாட்டிவைக்க, inf. To put into the stocks, தொழுவிலேமாட்ட.
மாட்டல்—மாட்டுதல், v. noun. Buttoning, fastening, hooking, inserting, beating.
மாட்டு, v. noun. A beat, a stroke, as நல்லமாட்டு, good blows. 2. Referring.
மாட்டெடுத்தல், v. noun. A rule of criticism, viz., comparison with other parts of the book. (நன்னூற்பாயிரம்.) 2. [a law term.] Inventory, on the outside of a deed, of the property mentioned, and of its disposal, புறத்திற்குறிப்பு.
மாட்டெடுத்தொழுகல். A rule of criticism—one of the thirty-two உத்தி.
மாட்டேற்று. Allusion, reference, குறிப்பு. 2. As மாட்டெடுத்தல், 2.
மாட்டுவிக்க, inf. To hook, பூட்டுவிக்க.

மாட்டு, வேன், வாய், வான், &c. [defec. v. as positive, used in the future only.] I can, thou canst, he can, &c.
மாட்டேன், டாய், டான், &c. neg. I cannot, thou canst not, he cannot, &c.
அதைச்செய்யமாட்டேனென்கிறான். He refuses to do it.
எழுந்திருக்கமாட்டேன். I cannot get up. 2. I won't get up.
நீபோகமாட்டாயா? Will you not go?
மாட்டாமை, v. noun. Inability, moral or physical incapacity, இயலாமை.
மாட்டார், appel. n. [pl.] Incapable or incompetent persons, வலாதார்.

மாணடி, s. The sacred foot. See மாண்.

*மாணம், s. Greatness, excellency, பெருமை. See மானம், மானியம். (சது.)
நாணமுமில்லைமாணமுமில்லை. There is neither shame nor honor [honesty].

மாணல். See மாணு, v.

*மாணவகன், s. A pupil, scholar, a religious student, மாணாக்கன். 2. A lad more than eight and less than sixteen years of age; a manikin. W. p. 655. Man'avaka.

*மாணவன், s. A man, a male person, ஆண்மகன். (Sa. Man'ava.)

*மாணவ்வியம், s. Childhood, sonship, பிள்ளைத்தன்மை. (Sa. Manavya.)

*மாணாக்கன், s. [a corruption of மாணவகன், pl. மாணாக்கர்.] A scholar, pupil, student, disciple, சற்பேர். (சது.)
மாணாக்கர், s. Three orders of scholars, as given in நன்னூல். They are: தலைமாணாக்கர் or முதன்மாணாக்கர், the first or head scholars; இடைமாணாக்கர், the middling; கடைமாணாக்கர், the last. For particulars see Nannúl.
அவர்கள்ஒருசாலைமாணாக்கர். They are pupils of one school.

மாணி, s. Virum genitalia, penis, ஆண்குறி.
மாணிக்குழி, s. The name of a town, at the south, ஒரூர்.
மாணிக்குறி, s. The penis, or its likeness.
மாணியரிய, inf. To castrate a man.

*மாணி, s. A Brahmachary, or bachelor who is a religious student. See பிரமசாரி.

மாணிக்கத்தாள், s. A prostitute, வேசி.

*மாணிக்கம், s. A ruby, a carbuncle. W. p. 655. Manikya. 2. A precious stone in general, இரத்தினப்பொது. (c.)
மாணிக்கதீபம், s. A very bright gem, said to have been used in king's palaces as a light.
மாணிக்கவாசகர், s. [hon.] A devotee of the Saiva religion and a poet. He flourished during the reign of அரிமர்த்தபாண்டியன் of Madura, and with அப்பர், சுந்தரர், and சம்பந்தர், destroyed Buddhism in Southern India. His compositions, consisting of hymns, and mantras, are considered by Saivas, as of divine authority and are called திருவாசகம், or sacred words. Those of the others, தேவாரம், or sacred hymns. From the place of his nativity, he is also named வாதவூரர்.

மாண், s. Greatness, honor, glory (குறள். p. 6.); splendidness, illustriousness (நீதிநெறி); excellence (Ell. 170.); worthiness (148-3.), பெருமை; [ex மானம்.] (p.)

மாண்—மாணு, கிறேன், மாண்டேன், மாணினேன், மாண்பேன், மாணுவேன், மாண, v. n. To become excellent, பெருமைப்பட. (p.)
மாணடி, s. The great, worshipful or sacred foot.
மாணாமை, neg. Worthlessness, disgracefulness.
மாணார், s. appel. n. [pl.] Foes, enemies, பகைவர். (சது.)
மாண்டது, appel. n. That which has become excellent, மகிமைப்பட்டது.
மாண்டார், appel. n. [pl.] The illustrious, the great, பெருமையோர். (நால.) 2. See மாள்.
மாணல் — மாண்டல், v. noun. Being great, being good.
மாண்பு, v. noun. Honor, dignity (நீதி); excellence (El. 170. 152); respectability, virtue (El. 1886. 1933); மாட்சிமை. 2. Beauty, அழகு.

*மாண்டூகம், s. One of the thirty-two Upanishads. See உபநிடதம்.

*மாதங்கம், s. Elephant, யானை. W. p. 655. Matanga. 2. [prov.] Kingship, royalty, government, அரசாட்சி.

*மாதங்கன், s. A mongrel—the mother being of the Rajput caste, and the father of the hunter's tribe, அரசமாதக்கும் வேடனுக்கும் பிறந்தசெருப்புத்தைப்போன். 2. A low caste man, இழிமகன். 3. A hunter, a fowler, வேடன். (Sa. Matanga.) (p.)
மாதங்கர், s. [pl.] The wicked; base, or vile people, chandalas, சண்டாளர்.
மாதங்கி, s. [also மதங்கி.] Kali, காளி. 2. Durga, துர்க்கை. (சது.)

*மாதம், s. A month. See மாசம்.

மாதசூதகம் — மாததூரம்—மாதத்தீட்டு —மாதவிடாய், s. The menses.

மாதசங்கிரமம்—மாதசங்கிராந்தி, s. Beginning of a month, as மாசப்பிறப்பு.

மாதத்தோடேமாதம், s. A month's time, used in reference to the intervening days.

மாதப்படி, s. [appel. மாதப்படிக்காரர்.] Monthly allowance to a temple, or to aged relatives, &c.

மாதப்பிசகு, s. Mistake in reckoning months.

மாதப்பிறப்பு, s. The beginning of a month, மாதத்தோற்றம்.

மாதப்புறு, s. A water-bird which remains in the country during the six months of the wet season only, Onocrotalus. (R.)

மாதமுடிவு— மாதக்கடைசி—மாதவறுதி, s. The end of a month.

மாதவாக்கியம், s. A Table giving the length of the months in days, nalikais, &c

•மாதரி, s. Kali, காளி. See மாதர்.

•மாதர், s. Women, பெண்கள். 2. Matrons, தலைவியர். [sing. மாது.] (சி.) 3. Beauty, அழகு. 4. Desire, lust, ஆசை. (p.)

மாதர்கள், s. The seven saktis, or mothers. They are: பிராமி, Brahmi, consort of Brahma; 2. மயேச்சுவரி, Mahasvari, consort of Siva; 3. கௌமாரி, Kaumari, consort of Kumara; 4. நாராயணி, Narayani, consort of Narayan, or Vishnu; 5. வாராகி, Varahi, consort of Vishnu, as வராகன்; 6. இந்திராணி, Indrani, the consort of Indra; 7. காளி, Kali, the consort of Virabhadra. Some authorities make them eight by including Aparajita wife of Kuvera. W. p. 655. MATRU. Their respective conveyances in order are: 1. அன்னம், a swan; 2. இடபம், a bull; 3. மயில், a peacock; 4. கருடன், Garuda, or a kite; 5. சிங்கம், a lion; 6. யானை, an elephant; 7. பேய், a devil.—Their weapons, மறை or வேதம், the law; 2. பினாகம், a bow; 3. வேல், a lance, or spear; 4. ஆழி, the chakra, a circular missile; 5. கலப்பை, a plough; 6. வச்சிரம், a thunderbolt; 7. சூலம், a trident. (சது.)—Note. Two other lists are given in Wilson.

•மாதலி—மாதுலி, s. The charioteer of Indra, இந்திரன்சாரதி. W. p. 655. MATALI, MATULI.

•மாதவம், s. The season of spring, வசந்தகாலம். 2. The month of May, வைகாசி. 3. Spirituous or fermented liquor, கள்; [ex மது.] W. p. 656. MAD'HAVA. 4. Great austerity. See மா, adj.

மாதவன், s. The Hindu Cupid, lord of the spring-season, வசந்தன். 2. Vishnu, விஷ்ணு. (சது.)

மாதவி, s. Sugar; treacle from sweet toddy, வெல்லம். 2. A large creeper, வசந்தகாலமல்லிகை, Gærtnera racemosa.

•மாதவி, s. A female messenger or procuress, usually for bad purposes; a bawd, தூதிகை. 2. A danseuse, a prostitute, நாடகக்கணிகை. (Sa. Mad'havi.) 3. The wife of Arjuna, sister of Krishna, அருச்சுனன்மனைவி. 4. The wife of Krishna, or கண்ணன்; [ex மாதவன்.] 5. The concubine of கோவலன், a merchant, கோவலன்கூத்தி. 6. The குருக்கத்தி tree. (சது.) 7. See under மாதவம்.

மாதவிகொழுநன், s. Krishna, கண்ணன். 2. Arjuna, அருச்சுனன்—as the husbands of மாதவி, 3, 4.

•மாதளை, s. The Pomegranate, Punica granatum—There are several kinds of மாதளை, including, improperly, the citron as well as the pomegranate; as நாரமாதளை or பூமாதளை, புளிமாதளை, கொடிமாதளை, கொம்மட்டிமாதளை, வெள்ளைமாதளை, which see.

மாதளஞ்செடி, s. The common citron. W. p. 655. MATULUNGA.

மாதளம்பழம், s. Pomegranate-fruit.

வயல்மாதளை, s. A plant. See வயல்.

•மாதா, s. Mother, தாய்; [ex மாதுரு.] 2. Parvati, பார்வதி.

மாதாபிதாகுருதெய்வம். Mother, father, guru, and god—[to be reverenced.]

மாதி, s. A circular motion, வட்டமாயோடல். (சது.) 2. [in astron.] A revolution.

மாதிகம், s. A horse-course, a circus, குதிரைமார்க்கம். (சது.)

மாதிரம், s. The air or atmosphere, ஆகாயம். 2. A region of the world, திசை. 3. Earth or ground, பூமி. 4. A mountain, மலை. 5. An elephant, யானை. (சது.)

•மாதிரி, s. [Tel. మాదిరి.] Pattern, example, manner, way, விதம். 2. (சது.) Specimen, kind, class, form, sample, சாயல். (c.)

மாதிரிகாட்ட, inf. To exhibit models, patterns, &c.

மாதிரியெடுக்க, inf. To take a pattern or copy.

மாதிரிவைக்க, inf. To set an example.

இதென்னமாதிரி. How is this? [in contempt.]

•மாதிருகை, s. Mother, மாதா, as oppos. to புத்திரிகை, a daughter. W. p. 656. MATRUKA. 2. The original—as applied to books, மூலப்பிரதி; oppos. to பிரதி, a copy.

மாது, s. A woman, a damsel, பெண். See மாதர். 2. An expletive, ஓரசைச்சொல்.

மடமாது. A feeble woman. (El. 212. 2.)

விளிந்தன்றுமாதவர்த்தெளிந்தவென்னெஞ்சே. My heart confiding in him too readily, died within me.

மாதுபாகம், s. A precious stone, புஷ்பராகம். 2. A woman's side, பெண்பக்கம்.

மாதுபாகன்—மாதொருபாகன், s. Siva as having his wife Parvati on his side; (lit.) the female-sided, சிவன்.

•மாதுகரம் — மாதூகரம், s. Alms received by a Brahmachary from five individuals, பிராமணரிப்பிச்சை. W. p. 656. MAD'HUKAREE.

•மாதுரியம், s. Sweetness, tastefulness, இனிமை; [ex மதுரம்.] W. p. 656. MAD'HURYYA.

மாதுரியவசனம், s. Sweet words, language, or conversation, இன்சொல்.

•மாதுரு, s. Mother, மாதா. W. p. 655. MATRU.

மாதுருகமனம், s. Incest with a mother.

மாதுருகோத்திரம், s. The maternal pedigree or relatives.

மாதுருவாக்கியம், s. The words of a mother, தாய்சொல்.

•மாதுலன், s. Maternal uncle, a father-in-law, as மாமன். W. p. 655. MATULA.

•மாதுளுங்கம்—மாதுளங்கம்-மாதுளம், s. Pomegranate; Citrus. See மாதளை. (சது.)

•மாதுவம், s. Spirituous liquor, toddy, கள். See மாதவம். (சது.)

மாதோ, s. An expletive, ஓரசைச்சொல், as கமலமொத்திருந்ததுமாதோ—meaning கமலத்தை ஒத்திருந்தன, those resembled the lotus.

•மாத்தியானம்—மாத்தியான்னம்—மாத்தியானிகம், s. The mid-day, noon, as மத்தியானம்; [ex Sa. Madhya et ahna, day.]

மாத்தியானபூசை — மாத்தியானிகபூசை, s. Púja at mid-day. See பூசை.

•மாத்திரம், s. [a pleonastic addition to words.] Quantity, measure, &c., பிரமாணம். (c.) 2. The primitive, subtle, invisible type of visible elementary matter. See தன்மாத்திரை. 3. [as an adv.] Only, solely, exclusively, merely, ஒருசொற்குறிப்பு. W. p. 656. MATTRA.

எம்மாத்திரம். How much?

அம்மாத்திரம். So much.

இம்மாத்திரம். This much.

நான்மாத்திரம்வந்தேன். I came alone.

அவன்சொன்னமாத்திரத்திலே. As soon as he had spoken.

அதைமாத்திரங்கொண்டுவா. Bring that only.

•மாத்திரை, s. A medicinal pill, குளிகை. (c.) 2. Measure, அளவு. 3. Quantity in prosody, எழுத்தினளவு. 4. A moment of time, கணம். (See under இமை.) 5. Swiftness of time, காலவிரைவு. (Sa. Mattra.)

மாத்திரைக்கோல், s. A conjuror's wand, வித்தையாட்டுங்கோல். 2. A measuring rod, அளவுகோல். 3. A yogi's staff.

பேதிமாத்திரை, s. [also விரோசனமாத்திரை.] A drastic pill. See பேதி.

மாத்து, s. [improp. for மாற்று.] A change.

மாத்பர், [Arab.] Creditable, respectable.

•மாந்தம், s. A disease in children. W. p. 657. MANDYA. (c.)

அஷ்டமாந்தம். Eight kinds of மாந்தம். 1. செரியாமாந்தம், indigestion; 2. பொருமாந்தம், visceral obstructions; 3. வலடிமாந்தம், loathing of milk with fever; 4. பெருமாந்தம், flux and cold; 5. வாதமாந்தம், flatulency; 6. சுழிமாந்தம், colic, with rolling of the eyes; 7. வலிமாந்தம், convulsions; 8. கணமாந்தம், fever and disordered bowels.

மாந்தசன்னி, s. Convulsions of infants from indigestion.

மாந்தசுரம் — மாந்தக்கொதி, s. Fever from indigestion, chiefly in children.

மாந்தப்புல், s. A grass. See புல்.

•மாந்தன், s. [pl. மாந்தர்.] A male child, ஆண்மகன். 2. A man or one of human kind, மனிதன்; [from Sa. Mantu. W. p. 641.] (p.)

•மாந்தாதா, s. A king fostered by Indra, ஓரரசன். W. p. 657. MAND'HATRU.

•மாந்தி, s. Mango-tree, மாமரம். (சது.) 2. A marriage ceremony, ஓர்கலியாணச்சடங்கு. 3. v. part. See under மாந்து.

மாந்து, கிறேன், மாந்தினேன், வேன், மாந்த, v. a. To eat, feed, உண்ண. 2. To drink, குடிக்க. 3. To experience pleasure and pain from former births, ஊழ்வினைப்பயனனுபவிக்க. (p.)

மாந்தல், v. noun. Eating. 2. Drinking.

மாந்தி, v. part. Having eaten, &c.

மாந்தை, s. The name of a town, ஓரூர்.

மாப்பு, s. [Arab.] Forgiveness; exemption, as மன்னிப்பு. 2. (R.) Abundance, மிகுதி. சென்னுக்கூனிமாப்பு. A shoal of shrimps.

மாப்பாயிருத்தல், v. noun. Being abundant as clouds, birds, &c.

மாப்புப்பண்ண — மாப்புச்செய்ய, inf. To forgive.

மாப்புறவாணு, s. A free pass for goods, &c. (Govt. usage.)

*மாமடி, s. [in மீளுட்சிபிள்ளைத்தமிழ்.] As மாமன்.

*மாபலி — மாபலிபுரம். See மா, adj.

*மாமன், s. [voc. மாமா.] A mother's brother, maternal uncle, தாயுடன்பிறந்தோன்; [contract. of Sa. Mamaka. W. p. 657.] 2. The paternal aunt's husband, அத்தைகொழுநன். 3. The husband's or wife's father; also his own brothers.

மாமனார், s. [hon.] Father-in-law, as மாமன், 3.

மாமன்முறையோன், s. The husband's or wife's father's brother.

மாமி, s. [pl. மாமிமார்.] The paternal aunt, அத்தை. 2. The maternal uncle's wife, அம்மான்மனைவி. 3. The husband's or wife's mother; also applied to her sisters. மாமிக்கேற்றமருமகளில்லை. There is no daughter-in-law that would suit a mother-in-law.

மாமிமுறையாள், s. Wife's or husband's mother's sister.

மாமியார், s. [hon.] Mother-in-law, as மாமி, 3. See குடம்.

*மாமிசம்—மாம்சம், s. [com. மாங்கிசம், மாங்கிஷம்.] Flesh, meat, தசை. W. p. 654. Mamsa.

துர்மாம்சம், s. Proud flesh. See துர்.

மாம்சகதவியாதி, s. A disease affecting the flesh.

மாம்சகிரந்தி, s. Excrescences, fat breasts, *spoken in contempt by ascetics.*

மாம்சச்சிலை, s. A kind of black stone, ஓர்கல்.

மாம்சதாரி, s. An eater of flesh.

மாம்சபக்ஷணம் — மாம்சபட்சணம், s. [appel. மாம்சபட்சணி.] Eating flesh, ஊனுணவு.

மாம்சபேதி, s. A solvent of flesh.

மாம்சோத்தானம், s. [R. C. usage.] The resurrection of the body, உயிர்த்தெழுகை.

மாமிலத்து—மாமலத்து, s. [Mahar.] Revenue business, பணம்அறவிடுமுறை.

மாமூலனார், s. A professor of the ancient Madura college.

மாமூல், s. [Arab.] Mamul, established custom or usage, பூர்வவழக்கம். (c.) மாமூல்தப்பிநடக்கப்படாது. We cannot deviate from the established custom. மாமூற்படி—மாமூல்பிரகாரம். In the usual manner.

*மாமை, s. Beauty, அழகு. 2. Color, நிறம்; [ex Sa. மா.] (சது.)

*மாயம், s. Ideality, illusion, unreality of the visible world, as மாயை. 2. Hypocrisy, trick, outward garb, வஞ்சனை. 3. Uncertainty, instability, நிலையின்மை. 4. Deception, பொய். 5. Wickedness, evil act, treachery, தீமை. W. p. 657. Maya. 6. Beauty, அழகு. 7. Blackness, கறுப்பு.

அதுகண்ணுக்குக்காணுமல்மாயமாய்ப்போயிற்று. It vanished away from the eyes—*spoken when lost in wonder.*

மாயக்கள்ளி, s. A deceiving and bewitching woman.

மாயக்காறன், s. A conjuror, a juggler; a buffoon.

மாயசாலம், s. Dissimulation, deceit.

மாயஞ்செய்தல், v. noun. Juggling, மாரீசம்பண்ணல்.

மாயப்பெண், s. A disguised woman, or a man in the garb of a woman, as வேஷப்பெண்.

மாயமாலம், s. A deceitful devil, வஞ்சனைபுரிபேய். (R.)

மாயரூபம், s. A phantom, shadow, as மாயாரூபம்.

மாயமடிக்க, inf. To dissemble.

மாயவாக்கை, s. Unstable or mortal body; [ex ஆக்கை.] (p.)

மாயவாழ்வு, s. Transitory enjoyment, illusory life.

மாயன், s. Vishnu, திருமால். 2. A dark-colored person, கரியவன்.

மாயவித்தை, s. Magical tricks, sleight of hand, phantasmagoria, optical illusions.

மாயாவி, s. A conjuror, an impostor, மாயவித்தைக்காரன். (Sa. Mayavin.)

*மாயவன்—மாயோன், s. Vishnu as மாயன்.

*மாயவரம், s. A town. See மாயூரம்.

*மாயவள், s. An evil being, இடாகினி. 2. A maid-servant of Kali, காளிசேவல்செய்மகள். 3. Goddess in general, தெய்வப்பெண். (சது.)

*மாயாசக்தி—மாயாதேவி. See மாயை for these and similar compounds.

மாயிலி, s. A kind of boat, ஓர்வகைப்படகு. (R.)

*மாயுநாடி, s. [in anat.] An artery, the cystic artery, பித்தநாடி.

*மாயூரம், s. A town, Mayaveram, *commonly* மாயவரம், ஓரூர். 2. A peacock, மயில், as மயூரம். (p.)

*மாயேசுவரி—மாயேஸ்வரி, s. Parvati, as consort of Siva—as மகேசுவரி.

*மாயை, s. Falsehood, vanity, ideality of the world, பொய். 2. A power or energy, as மாயாசத்தி. 3. Deceit, fraud, trick, வஞ்சம். 4. Tricks, jugglery, இந்திரசாலம். 5. Lukshmi. W. p. 657. Maya. 6. Kali, காளி. 7. Rati, wife of Kaman, இரதி. 8. A town, as மாயாபுரி. 9. Matter, See வித்தியாதத்துவம்—*Note.* This word retains its Sanscrit pronunciation in combination.

மாயை, ௫. Five kinds of delusion, or evil, on the principles of Adwitas or followers of Sankaracharya. They are: 1. தமம், *the tamasa* disposition—darkness, or obscurity of mind; 2. மாயை, ideality, inherent evil, personified matter; 3. மோகம், depravity, error; 4. அவித்தை, ignorance, folly; 5. அநிர்தம், that which is without, or strange, opposed to God.

அதோமாயை—அசுத்தமாயை, s. Subordinate or inferior illusion, or *Maya.* அதோமாயையிலிருந்துபிரகிருதிதோன்றும். The female principle in nature springs from the inferior *Maya.*

சுத்தமாயை—மகாமாயை, s. Primitive or original *Maya*, as காரணமாயை.

மாயாகாரியம், s. The effects of *Maya*, its various changes, and diversifications in nature.

மாயாசங்கற்பம், s. Any remarkable effect of *Maya* by way of creation or destruction.

மாயாசத்தி, s. A power, energy, or principle which contains the five kinds of மாயை, given above. See மாமாயை.

மாயாசாலம்—மாயாஜித்து, s. Dissimulation, treachery, imposture.

மாயாதருமம், s. Transient or deceptive merit, பொய்ப்புண்ணியம். 2. Nature or peculiarity of *Maya*, மாயையின்றன்மை.

மாயாதர்மம், உ. The two peculiarities of *Maya* are: 1. சங்கோசம், contracting; 2. விகாசம், expanding.

மாயாதாரகம், s. That which has *Maya* for a principal cause.

மாயாதாரணை, s. Things formed by *Maya*, the third of nine classes. See தாரணை.

மாயாதேகம், s. A transitory body, நிலையற்றசரீரம்.

மாயாதேவி, s. The mother of Buddha, புத்தன்றாய்.

மாயாதேவிசுதன், s. The son of *Maya*, Buddha. (சது.)

மாயாபஞ்சகம், s. As மாயை, ௫.

மாயாபாசம், s. Being under the influence of *Maya.*

மாயாபுரி, s. One of the seven famous towns. See புரி. 2. Brass, பித்தளை.

மாயாப்பிரதிவிம்பர், s. [hon.] He whose glories are reflected, in creation, &c., by means of *Maya*, மாயையாற்பிரதிபலிக்குமுதல்வனைபோல். (உபநி-124.)

மாயாமலம், s. As மாயைமலம்.

மாயாரூபம், s. Feigned shapes, forms assumed, or caused by super-human powers.

மாயாலட்சணம், s. The properties of *Maya.* They are five; 1. அசத்து, unreality; 2. சடம், matter; 3. அநித்தம், transientness; 4. துக்கம், distress; 5. கண்டம், division, a part.

மாயாலீலை, s. Sportive illusions, as of Krishna, Siva, &c. See இலீலை.

மாயாவல்லபம், s. The power or efficacy of *Maya.*

மாயாவாதம், s. A religion whose doctrines are false, skepticism, ஓர்மதம்.

மாயாவாதி, s. Destroyer of *Maya*, and its evils. (பிரபுலிங்.) 2. One of the above religion, or sect; a skeptic.

மயாவித்தை, s. Magic, as மாயவித்தை.

மாயாவிமோசனம், s. Removal of *Maya.*

மாயாவிநோதம், s. Legerdemain, sportive deception, கண்கட்டுவித்தை.

மாயைமலம், s. Confusion of mind, one of the three defilements. See மலம்.

மாயையுற்றுள், appel. n. Kali, காளி.

மாயோபாதானம், s. That which is caused by *Maya*; [ex உபாதானம்.]

மாயோமாயோவென, inf. [prov.] To cry, as a cat, பூனையழுதற்குறிப்பு.

மாயோன், s. Vishnu, விட்டுணு. (சது.)
மாயோள், s. A woman as a dissembler.
மாயோனாள், s. The twenty-second lunar mansion, திருவோணம். (சது.)
மாயோன்மருகன், s. Skanda, கந்தன்.

மாய், கிறேன், ந்தேன், வேன், மாய, v. n. To die, perish, &c., சாக. 2. To vanish, be annihilated, be terminated, ஒழிய, மறைய.
கரிமறைக்கும்பயிர். A field with crop [high enough] to hide an elephant. (p.)
கொடுக்கமாட்டாமல்மாய்கிறான். He would rather die than give.
மாய்ச்சல்—மாய்வு, v. noun. Death, சாவு. 2. A shelter, மறைவு. (சது.)

மாய், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To kill, destroy, reduce to nothing, கெடுக்க. (c.)
உடலைமாய்த்துக்கொள்ளுகிறது. Afflicting one's self by beating the breast, &c., through grief. 2. Laboring hard.
தன்னுயிரைமாய்த்துக்கொண்டான். He killed himself.
மாய்த்தல்—மாய்ப்பு, v. noun. Destroying. (சது.) 2. A hiding, as மறைப்பு. (R.)

மாய்ச்சல், s. [improp. மாச்சல்.] Difficulty, great trouble, வருத்தம். (Colloq.) 2. See மாய், v. n.
அவன்வெகுமாய்ச்சற்படுகிறான். He is in great trouble.

மாய்ச்சி, s. [prov. also மாச்சி, மாச்சு.] Manacle, shackles, புட்டுவிலங்கு.

மாய்மாலம், s. [also மாமாலம்.] Hypocrisy, dissimulation, pretence, மாரீசம். (c.)

•மாரகம், s. [causal form of Sa. Mara.] Death, சாவு. 2. That which causes death, மரணம்வருவிக்கிறது. 3. (St.) Any epidemic disease, as மாரி. W. p. 658. Maraka.

•மாரசயன், s. Buddha. See under மாரன்.

•மாரணம், s. Killing, slaughter, கொலை. W. p. 658. Maran'a. 2. Killing by magic or enchantment, மந்திரத்தாற்கொல்லல்.
மாரணமந்திரம், s. A *mantra* causing death, *used by sorcerers.*
மாரணம்பண்ணுதல், v. noun. Killing by magic. See under எரி, and பேய்.
மாரணயாகம் — மாரணவோமம், s. A sacrificial ceremony causing death. 2. A ceremony for the dead, as அந்தியேஷ்டி.
மாரணவித்தை, s. Necromancy, witchcraft, சூனியவித்தை.

மாரத்துச்சாமை, s. A kind of grain. See சாமை.

•மாரன், s. Kama, காமன். W. p. 658. Mara.
மாரகாகளம், s. The koil bird, குயில்.
மாரசயன், s. A name of Buddha as conqueror of மாரன், புத்தன். (சது.)

•மாராட்டம், s. The Mahratta country, &c., as மகாராட்டிரம். 2. (சது.) A town in general, ஊர்.

மாராப்பு, s. A method of covering the breast by native females; [ex மார்.]
மாராப்புப்போட்டுக்கொள்ளுகிறது. Putting on a scarf as above. 2. Taking a pack on one's back, fastened by a band brought forward.
மாராப்புச்சீலை, s. The cloth for covering the breast. (c.) 2. [prov.] Washerman's pack of cloth.
மாராப்புச்சீலையைப்பற்றியிழுத்தவனைராசா தண்டித்தான். The king punished him for pulling off her breast-cloth.
மாராப்புப்பட்டை, s. A band to fasten in front a load on the back. 2. A sword-belt, கத்தியின்கச்சை.

மாராயம், s. Good news, auspicious tidings, நற்செய்தி. 2. Compliment, congratulation, உபசாரம்; [ex Sa. Ma, auspiciousness.]
மாராயஞ்சொல்லுதல், v. noun. Giving information (by the washerman of the town) of a girl's arriving at puberty.

மாரி, s. Rain, a shower, மழை. 2. A cloud, மேகம். 3. Water, நீர். 4. Fermented sap of a palm tree, கள். (சது.)
மாரியல்லதுகாரியமில்லை. Without rain nothing will prosper. (Avv.)
தேன்மாரி. A shower of honey.
அம்புமாரி. A shower of arrows.
மாரிகாலம், s. Monsoon-time, or the rainy season.
மாரிக்கார், s. A kind of paddy.
மாரிக்குடா, s. The north-eastern quarter, வடகீழ்த்திசை.
மாரிக்குருவி, s. A kind of bird.
மாரிநாள், s. The twelfth lunar mansion, உத்திரநாள். (சது.)
மாரிப்போகம், s. The produce of the புஞ்சை cultivation.
மாரிமறுத்தல், v. noun. The cessation of rain, மழையொழிதல்.

•மாரி, s. Death, சாவு. 2. A destructive and contagious disease, ஒட்டுநோய். W. p. 658. Mari. 3. An evil goddess, supposed to inflict the small-pox, and to deliver from it, *Chandi.* 4. A variety of the small-pox, மாரிமுத்து.
மாரியம்மன் — மாரியம்மை — மாரியாத்தாள், s. The goddess, as மாரி, 3.
மாரியம்மன்கொண்டாடி, appel. n. One possessed with that evil spirit.

மாரிசா, s. A very great billow or surf, breaking over a vessel, &c., பெருந்திரைக்கொள்ளி. 2. Tergiversation, malversation, மாறுபாடு.

மாரிபத்து—மாரீபத்து, [Arab.] To the care of; in the charge of; by means of.
இதைஅவன்மாரிபத்திலேவாங்கினேன். I bought this through him.
இதுஅவன்மாரிபத்திலேவிட்டிருக்கிறது. This is left to his care.

•மாரீசம், s. Hypocrisy, dissimulation. 2. A *Upa-Purana.* See உபபுராணம்.
மாரீசம்பண்ணுதல், v. noun. Dissembling, pretending.

•மாரீசன், s. The name of a Rakshasa, maternal uncle of Ravana, இராவணன்மாமன். W. p. 644. Mareecha.

•மாருதம், s. Air, wind, காற்று. (See கண்டமாருதம்.) 2. Vital air, one of the three humors of the body, வாயு. 3. A demigod of whom there is a class of forty-nine.—*Note.* The demigods called, *Marutas* are said to be sons of Diti, from divisions of the fœtus in utero, by the Vajra or thunderbolt of Indra; [ex Sa. *Mru,* to die.] W. p. 658. Maruta.
மலயமாருதம், s. The south wind, from mount Pothiyam in the south.
மாருதி, s. A name of Hanuman, அநுமான். 2. B'hima, one of the Panduvas, வீமன், (lit.) the wind-born. (Sa. Maruti.)
மாருதிநாகம், s. Sand mixed with lead ore, வங்கமணல்.

மார், s. Breast, *properly* மார்பு. (c.) 2. A plural termination of nouns—as தகப்பன்மார், fathers; and poetically of verbs—as உண்மார், பலபாக்குதி.
மாரடிக்க, inf. To beat the breast, as females in bewailing the dead. 2. [fig.] To be troubled by one. See இழவுக்கடிக்க.
மாரடைப்பு, v. noun. Obstruction of the breast, as in asthma.
மாரிழவு, s. Bewailing the dead by beating one's breast. See மயிரிழவு.
மாரெலும்பு, s. Breast bone, as மார்பெலும்பு.
மார்க்கண்டம், s. The breast of man or beast.
மார்க்கண்டம்வேகவில்லை. The breast bone was not consumed [when the corpse was burned]—*said of one who had a strong attachment to his wife and children.*
மார்த்தோல், s. A toddy-drawer's breast-leathers.

•மார்கழி, s. The month corresponding mostly with December, தனுமாதம். (c.) 2. The fifth lunar mansion, மிருகசீரிடம். W. p. 658. Marga.
மார்கழித்திருவாதிரை. The time when the moon at full is at or near ஆதிரை.

•மார்க்கசிரம், s. The month of December, மார்கழி. W. p. 658. Margasira.

•மார்க்கணம், s. Asking, begging, இரப்பு. 2. An arrow, அம்பு. 3. Research, inquiry, தேடுகை. W. p. 658. Margan'a.
மார்க்கணர், s. [pl.] Mendicants, beggars, இரப்போர். (சது.)

•மார்க்கண்டன்-மார்க்கண்டேயர், s. A muni or sage, the supposed author of the purana called மார்க்கண்டேயம், ஒருமுனி. W. p. 658. Markan'da, Markan'deya.
மார்க்கண்டேயம், s. A *purana* as above. See புராணம்.

•மார்க்கம், s. A road, path, way, orbit, வழி. 2. Conduct, behavior, course of duty, religion, ஒழுக்கம். 3. The month of December, மார்கழி. W. p. 658. Marga. 4. A street; a long street, நெடுந்தெரு. (சது.) 5. A kind of dance, ஒர்கூத்து. 6. A mode of beating time. See தாளப்பிரமாணம்.
எந்தமார்க்கமாய்ப்பிழைக்கிறான். How does he support himself?
அதற்கொருமார்க்கம்பண்ணவேண்டும். You must find some way for it.
அவன் அந்தமார்க்கமாய்ப்போய்விட்டான். He took that road.
ஒருமார்க்கமாய்க்கிரகித்துக்கொண்டான். He has somewhat understood it, i. e. imperfectly.
கிரகங்கள்தந்தம்மார்க்கங்களிற்செல்லுகின்றன. The planets revolve in their orbits.
அதொருமார்க்கமாய்ப்போயிற்று. The difficulty was in a manner settled.
அவர்கள்வெகுமார்க்கமாய்ப்பேசிக்கொள்ளுகிறார்கள். They speak to one another very politely.

அமார்க்கம், *s.* Irreligion.

கிறிஸ்துமார்க்கம், *s.* Christianity, the christian religion.

சன்னியாசமார்க்கம், *s.* Celibacy.

சமுசாரமார்க்கம், *s.* Conjugal life.

சன்மார்க்கம், *s.* Morality.

துன்மார்க்கம், *s.* A wicked course.

விபசாரமார்க்கம், *s.* Adultery.

மார்க்கசகாயதேவர், *s.* A distinguished poet called கவி. Of his compositions, only பிள்ளைத்தமிழ் on the childhood of Skanda, remains.

மார்க்கந்தப்பினவன், *appel. n.* An unprincipled man, one out of the right way.

மார்க்கப்படுத்த—மார்க்கம்பண்ண, *inf.* To seek means. 2. To set in order.

மார்க்கமாய், *adv.* Orderly, in the right way.

மார்க்கமாய்ப்போகிறது. Going in the right path. 2. [*in contempt.*] Acting hypocritically.

•மார்ச்சனம், *s.* Cleaning, wiping, துடைப்பு. W. p. 659. MARJJANA.

மார்ச்சனி, *s.* A broom, விளக்குமாறு. 2. [*adopted.*] Indian rubber.

மார்ச்சனை, *s.* The sound of a drum. 2. A black substance, smeared on a drum, to increase its sound, முழவின்மார்ச்சனை.

•மார்ச்சாலம், *s.* A cat, பூனை. W. p. 659. MARJALA. 2. The pole-cat, மரநாய். (*Sa. Marjjara.*)

மார்ச்சாலநியாயம்—மார்ச்சாலநியாயத்தீர்ப்பு. Partial judgment. See கிமாயத்தீர்ப்பு.

•மார்த்தாண்டன், *s.* The sun, சூரியன். W. p. 659 MARTTAN'DA.

மார்த்தாண்டம், *s.* [*also* பிரமகைவர்த்தம்.] One of the eighteen Puranas. See புராணம்.

மார்பு, *s.* Bosom, breast, chest; *modestly*, the female breast, நெஞ்சு. 2. Breadth, அகலம். (சது.)

மார்பகம்—மார்பம், *s.* Breast, chest, நெஞ்சு. (*p.*)

மார்பாணி, *s.* An eruption on the breast. See ஆணி.

மார்பூசி, *s.* A breast-pin, a broach. (*modern.*)

மார்பெலும்பு, *s.* The sternum. See எலும்பு.

•மாலதி, *s.* A small kind of the fragrant Champaka flower, சிறுசண்பகம். 2. A kind of Jasmine, நல்லிகை. 3. Another species of Jasmine, முல்லை. (சது.)—In Wils. Great flowered Jasmine.

மாலதீவு, *s.* [*sometimes* மால்தீவு.] The Maldive Islands, *said to have formerly been one.*

மாலதீவுத்தேங்காய், *s.* The fruit of a dwarfish cocoanut-tree from the Maldive Islands.

மாலம், *s.* The குங்குமம் tree giving a pleasant smell, நமரம். 2. A devil, பேய்.

மாலமாயம், *s.* Deceit, or allurement of a devil, பேய்தந்திரம்.

•மாலயம், *s.* [*St.* மஹாலயம், *also called* மாளயம்.] A ceremony performed once a year for deceased parents, especially in the month of September.

•மாலர், *s.* A coat of armor, கவசம். 2. Those whose mothers are Brahmans and fathers Sudras. 3. Savages, வேடர். 4. Those of no caste, or Pariars, புலையர்; [*from Sa. Mala.* W. p. 659.] (சது.)

மாலவன், *s.* The planet Mercury, புதன்.

•மாலி, *s.* The name of a Rakshasa, ஒரு இராக்கதன். 2. One who wears a garland, மாலையணிந்தோன். 3. Toddy, கள். (சது.)

•மாலிகை, *s.* A garland, a string of flowers, மாலை. 2. Things that stand in a row, நிரல்படநிற்குங்குழூஉ. W. p. 659. MALIKA.

மாலிகாபரணம், *s.* Ornaments of wreaths, garlands and flowers.

•மாலிங்கம், *s.* A kind of arsenic, as இலிங்கபாஷாணம்.

மாலிமி, *s.* [*Tel.* మాలిమి.] The friendship made in youth, இளம்பருவத்திற்செய்நட்பு. (சது.)

•மாலியவான், *s.* The name of a Rakshasa, ஒரரக்கன்.

•மாலினி, *s.* An epithet of Durga, or Kali, துர்க்கை. W. p. 659. MALIN.

மாலு—மால், கிறேன், மாலினேன், வேன், மால, *v. n.* [*prov.*] To be confused, மயக்க. *v. a.* [*Rottler.*] To form mouldings on a pillar or wall, மாலிழுக்க; [*ex* மால்.]

•மாலுகம், *s.* [*St.* மாலகம்.] The Neem, or Margosa tree, வேம்பு. W. p. 659. MALAKA.

•மாலுதானம், *s.* A green snake, found on trees, which darts at the eyes, a whip-snake, கண்குத்திப்பாம்பு. (சது.) Wils. a variegated snake.

மாலுமி, *s.* The captain of a vessel, a pilot, கப்பலோட்டி. (சது.)

மாலுமிசாஸ்திரம், *s.* The science of sailing or navigating a ship or vessel; navigation.

•மாலூரம், *s.* A tree, Gratævo religiosa, வில்வமரம். W. p. 660. MALOORA.

•மாலை, *s.* A garland, or wreath of flowers, or gold; a string of beads. (*c.*) 2. A poem of several parts, ஒர்பிரபந்தம். 3. A line, a row, ஒழுங்கு. W. p. 659. MALA. 4. Natural quality, இயல்பு. 5. (*c.*) Evening, அந்திப்பொழுது. 6. One of the six divisions of the day, from sunset till ten o'clock. See பொழுது. 7. A kind of disease affecting the neck, as கண்டமாலை. 8. A palace, அரண்மனை. (See மால்.) 9. A woman, பெண். 10. [*in combin.*] Continuity, as உருபுமாலை, declension of nouns; வினைமாலை, conjugation of verbs.

அவள்மாலைமாலையாய்க்கண்ணீர்விட்டழுதாள். She shed tears in streams.

காலைமாலை. Morning and evening.

மாலைமுழுக்காகாது. Bathing [with oil] in the evening is not healthy.

மாலைகட்ட, *inf.* [*appel. n.* மாலைகட்டி.] To make a garland of flowers and leaves.

மாலைகோக்க, *inf.* To string a garland.

மாலைக்கண்—மாலைக்காமாலை, *s.* Night-blindness, nyctalopia.

மாலைக்கண்ணன், *s.* A pur-blind person, nyctalops.

மாலைசாத்த, *inf.* To adorn an idol, &c. with garlands.

மாலைசுழற்றியெறிய, *inf.* To cast a garland at random to ascertain the successor to a deceased king by its falling on the person; or sometimes, the destined husband for a king's daughter. In choosing a king, an elephant sometimes throws the garland.

மாலைசூட, *inf.* To adorn with a garland.

மாலைதுழைஞ்சான், *appel. n.* A dark bird with white breast which nestles in the sand at dusk, ஓர்குருவி.

மாலைநேரம், *s.* The evening time.

மாலைபோட, *inf.* To put a garland on one's neck. 2. [*fig.*] To choose a husband.

மாலைப்பண், *s.* A kind of tune, an evening song, அந்திப்பாடும்பண்.

மாலைப்பதநீர், *s.* [*com.* மாலைப்பதனி.] Palmyra sap taken in the evening.

மாலைமசங்குகிறநேரம், *s.* The dusk of evening.

மாலைமாற்று, *v. noun.* Exchange of garlands. 2. A peculiar species of verse, ஒர்சித்திரகவி.

மாலையணி, *s.* Ornaments of wreaths, garlands and flowers. 2. A rhetorical figure, ஓரலங்காரம்.

மாலையாங்காலம், *s.* [*prop.* மாலைக்காலம்.] Evening, மாலைநேரம். (*usage.*)

மாலையிடு, *v. noun.* [*inf.* மாலையிட.] Casting of a flower garland by a lady, on the person of her choice, மாலையிடுகை. 2. A monument of one burnt with her deceased husband. (*Southern usage.*)

அவளுக்குமாலையிட்டவன். Her husband.

மாலைவெள்ளி, *s.* Venus as the evening star—oppos. to காலைவெள்ளி.

மாலோன், *s.* Vishnu, திருமால்.

•மால், *s.* Greatness, பெருமை; [*ex* மா.] Illusion, delusion, aberration of mind, dullness, stupor, மயக்கம்; [*ex* மலம்.] 3. [*com.* திருமால்.] Vishnu, விட்டுணு. W. p 659. MALA. 4. Argha, அருகன். 5. Indra, இந்திரன். 6. Mercury, புதன். 7. King of the Cholas, சோழன். 8. Wind, காற்று. 9. Cloud, மேகம். 10. Blackness, கருமை. 11. Concupiscence, lust, காமம். (சது.) 12. [*contrac. of Sa. Malika.*] A large building, *Mahl.* [*Hind. usage.*] 13. (*Beschi.*) A kind of net, ஒர்வலை. 14. A sort of ladder, கண்ணேணி. 15. A wooden mould for forming the mouldings of a pillar or cornice of a wall, சிற்பத்தொழிற்கருவியிலொன்று. 16. [*Hind.*] Property, wealth; quit-rent. 17. (*c.*) A form, a schedule, a plan, மாதிரி. 18. A limit, எல்லை. 19. A stable, a stall, இலாயம்.

இருக்கிறமாலிலேயிருக்கட்டும். Let it be as it is.

மாலயற்கரியான். The unknown to Vishnu and Brahma—that is Siva. (சது.)

மாலுக்கிளையாள்—மால்தங்கை, *s.* Durga as younger sister of Krishna, துர்க்கை.

மாலுந்திவந்தோன், *appel. n.* Brahma as one produced from the navel of Vishnu, பிரமன்.

மாலுற, *inf.* To be fascinated, deluded, charmed, மயங்க. 2. To misapprehend, come to an erroneous conclusion, மறுபாடாய்நினைக்க. (*p.*)

மாளுர்தி, s. Garuda the vehicle of Vishnu, கருடன். (சது.)

மால்தார், s. A proprietor, a rich man.

மால்போடுதல், v. noun. Drawing a plan, demarkation.

மால்முடிய, inf. To make a net.

மால்யானை, s. A furious elephant.

மால்வெட்டுதல், v. noun. Cutting out a form or pattern, making a plan or diagram, மாதிரிசெய்தல்.

மான்மகன், s. Brahma, பிரமன். 2. Kama, மன்மதன். (சது.)

மான்மைத்துனன், s. Siva, சிவன்.

மால்குஜாரி, s. (Pers.) Lands paying revenue to Government in distinction from *Lakhiraj*.

மால்ஜாமீன், s. [*Arab.*] Security for the payment of a debt or for personal attendance.

மால்சு, s. [*Hind.*] Rubbing, scrubbing—as a horse.

மால்பு, s. A sort of ladder, as கண்ணேணி. (சது.)

மாவடு, s. A very young mango-fruit—For similar compounds, see மா.

மாவிலங்கை—மாவிலிங்கு, s. A tree, the garlic-pear, or three-leaved caper tree. Cratæva Roxburghü, *L.*—*Note.* Its timber being light, is used for sandals, its bark is astringent and used as a tonic. It has a smell of garlic.

மாவிளம், s. The வில்வம் tree—as மாலூரம். (சது.)

மாவு, s. [*com. for* மா.] Flour.

மாவுத்தன், s. A horseman. See மா.

மாழா, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, v. n. To be charmed, fascinated, bewildered, மயங்க. (*p.*)

மாழை, s. Gold, பொன். (Compare மாடை.) 2. Beauty, அழகு. 3. A collection, an accumulation, திரட்சி. 4. Ignorance, அறிவின்மை. 5. A lump of metal, உலோகக்கட்டி. 6. A leaf of palm tree, ஓலை. 7. [*Sa. Mohakala.*] A mango-tree, மாமரம். 8. A sour mango-tree, புளிமா. (சது.) (*p.*)

மாழ், கிறேன், மாழ்ந்தேன், வேன், மாழ, v. n. To be lazy, சோம்ப. 2. To be bewildered, மயங்க. (சது.)

மாழ்கு, s. The fifth lunar mansion, மிருகசீரிடம். (சது.)

மாழ்கு, கிறேன், மாழ்கினேன், வேன், மாழ்க, v. n. To die, சாக. 2. To be allured, bewildered, as மாழ். 3. To mingle, to hold intercourse, மேவ. (*p.*)

மாழ்கல், v. noun. Dying. 2. Being fascinated. 3. Mingling—as of powders; also in sexual intercourse. (சது.)

மாள, s. An expletive prefix in personal verbs, ஓர்முன்னிலைஅசை. (சது.)

சிறிதுதவிர்த்தீகமாளகின்பரிசிலருய்ம்மார். Yet by giving only a little, thy suppliants may be kept alive. (*p.*)

*மாளயம், s. [*com. for* மாலயம், *which see.*] A ceremony for one deceased.

*மாளவம், s. The Malwa country. See தேசம். W. p. 659. Malava.

மாளவகவுளம், s. A melody, ஓர்இராகம்.

*மாளவி, s. A melody. See இராகம்.

*மாளிகை, s. A palace, a strong edifice, அரசன்மனை. W. p. 659. Malika. 2. A house, வீடு.

திருமாளிகை, s. A temple. 2. See திரு.

தேவர்திருமாளிகையெங்கே. Where does your honor live?

மாளு—மாள், கிறேன், மாண்டேன், வேன், மாள, v. n. To die, perish, be absorbed, அழிய. 2. To be exhausted, expended, ஒழிய. 3. (*Colloq.*) To be able, இயல. (*c.*)

ஆடுமாடெல்லாம்மாண்டுபோயின. All the sheep and oxen died; i. e. by some plague.

அதுஉன்னாலேமாளாது. You cannot effect it.

வேலைமாளவில்லை. The work is not yet finished.

மாளாத்திரவியம். Imperishable riches.

மாண்டார்—மாண்டோர், appel. n. [*pl.*] The dead, இறந்தோர். 2. See மாளு.

மாண்டார்வருவரோ. Will the dead come? (முதுரை.)

மாறன், s. A title of Pandyan kings, பாண்டியன். (சது.) 2. An epithet of a Vaishnuva devotee, சடகோபாழ்வார்.

மாறாடு, கிறேன், மாறாடினேன், வேன், மாறாட, v. a. To derange, disorder, invert, புரட்ட. 2. v. n. To waver in mind or intellect, be undetermined, as under dreadful suspicions, தடுமாற; [*ex* மாறு *et* ஆடு.]

அவன்மாறாடப்பார்க்கிறான். He is looking out to cheat.

மாறாடி, appel. n. A cheat, a swindler.

குதிரைமாறாடி. One who cheats in horse-dealing.

மாறாட்டம், v. noun. Craziness, aberration of mind, பைத்தியம். 2. Fraud, trickery, keeping what belongs to another, as deposits, புரட்டு. (*c.*)

மாறாட்டஞ்செய்யாதே. Use no deceit.

மாறாட்டம்பண்ணுதல். Using deceit, or double-dealing.

மாறு, s. A particle of continuity, regularity, time, change of time, as பகன்மாறு வருகிறான், he always comes in the daytime. 2. A besom, a broom, விளக்குமாறு. 3. A twig or branch without leaves, மிலாறு. 4. Mutation, change, வேறு. 5. Enmity, பகை. 6. Recompense, கைம்மாறு.

மாறுகண், s. [*appel.* மாறுகண்ணன்.] Squint eyes, ஓரக்கண்.

மாறுகால்மாறுகைவாங்குதல், v. noun. Cutting off one leg and one hand—a punishment said to have been inflicted by the Zemindars of old times.

மாறுகொளக்கூறல். Contradiction. See நூற்குற்றம், under குற்றம்.

மாறுகோள், s. Contradiction, விரோதம். 2. Discrepancy, ஒவ்வாமை. (*p.*)

மாறுத்தரம், s. An answer, as மறுவுத்தரம். (*c.*)

மாறுபட, inf. [*trans.* மாறுபடுத்த.] To be opposed, to disagree, differ, to be discordant, to be in contrast.

மாறுபடுபுகழ்நிலை, s. A figure in rhetoric. See அலங்காரம்.

மாறுபாஷை, s. Another language, as மறுபாஷை.

மாறுபாடு, v. noun. Opposition, diversity, disagreement, disunion, perverseness, double-dealing. (*c.*)

இதற்குமாறுபாடாக. On the contrary.

மாறுபாட்டுக்காரன், s. A double-dealer, one who contradicts.

மாற்றாந்தகப்பன், s. [*fem.* மாற்றாந்தாய்.] A mother's second husband.

மாற்றுக்கதை—மாற்றுநொடி, s. A conundrum, or riddle proposed in return.

மாற்றுவஸ்திரம், s. A spare cloth, or garment.

மாறு, கிறேன், மாறினேன், வேன், மாற, v. n. To become changed, exchanged, altered, reversed, cured; corrected in state, place, form, appearance, வேறுபட. 2. [*improp. for* மாற்று.] To change money, as மாறிக்கொண்டவன், he who has changed [a rupee]. 3. To lose an employment, *with the dative of the person*, as அவனுக்குத்திபோகம்மாறிப்போயிற்று. 4. [*in combin.*] To change, as மாறிவிழ, to draw back from a promise; மாறிவிழுந்துபேசுகிறது, to tergiversate. 5. v. a. To whip with a rod, அடிக்க. 6. To exchange goods; to barter, பொருள்மாற. 7. To multiply numbers, எண்பெருக்க. 8. [*prov.*] To deny, மறுக்க. (*c.*)

மரங்காய்த்துமாறிப்போயிற்று. The tree has ceased to bear fruit.

அவனுக்குத்திபோகம்மாறிப்போயிற்று. His office passed out of his hands.

மாறி, appel. n. [*in combin.*] One who barters goods. 2. A double-dealing person—as பெட்டைமாறி.

மாறிப்போட, inf. To change, மாற்ற.

மாறியடிக்க, inf. To whiffle, shift about as wind.

மாறிவிழ, inf. To fall headlong. 2. (*R.*) To draw back.

மாறிவிழுந்துபேசுகிறது. Varying in one's word or speech, tergiversating.

மாறிவைக்க, inf. To put a thing out of order.

மாறினவன், appel. n. [*improp. for* மாற்றினவன்.] He that has changed money, &c. 2. One who has changed his habits.

மாறல், v. noun. Moving, ஆடல். 2. Ceasing, being excepted, தவிர்தல். 3. Leaving, விடுதல். 4. Selling, விற்றல். (சது.) 5. An optative form—as மாறுக, let (me, thee, him, her, or it) change; also the plural, let us, &c., also a negative of the same optative form. 6. Changing from one form to another, வேறுபடல். 7. [*in arith.*] Multiplying numbers, எண்பெருக்கல். 8. Being changed, வேறுக்கப்படல்.

மாறுகம், s. A cloth, சீலை. (சது.)

*மாற்கம், s. Way, &c. See மார்க்கம்.

*மாற்சரியம், s. Envy, malice. See மாச்சரியம்.

மாற்றம், s. A word, especially an answer, or reply, சொல். 2. Hatred, பகை. 3. Change, diversity, வேற்றுமை. (சது.) 4. (*R.*) Remedy, as மாற்று; [*ex* மாறு, v.] (*p.*)

மாற்றஞ்சொல்ல — மாற்றமுரைக்க, inf. To say otherwise. 2. To contradict.

மாற்றலர், s. [*pl.*] Enemies, foes, பகைவர். (சது.)

மாற்றவள், s. A female rival. (*p.*)

மாற்றான், s. [vul. மாத்தான், pl. மாற்றார்.] A foe, an enemy, பகைவன்; [ex மாறு.] (c.) 2. (R.) A piece of wood joined to a board of insufficient length, ஒட்டுப்பலகை.

மாற்று, s. Remedy, antidote, counteraction, உபசாந்தம். 2. Barter, truck, exchange, மாறுதல். 3. [vul. மாத்த.] Change of cloths supplied by a washerman on taking those soiled, *a general custom*, வண்ணான்மாற்று. 4. [*in metallurgy.*] Fineness of gold, or silver, by the touchstone, பொன்வெள்ளிகளின்மாற்று. 5. (*Beschi.*) An acre of land or as much as one yoke of oxen can plough in a day, ஏர்ணைமாடொருநாளுழும்நிலம்.

எத்தனைமாற்று. What is the degree of fineness of the gold?

மாற்றுயர்ந்தபொன். Fine gold.

மாற்றுக்கட்டை, s. Inferior in quality, as gold, &c.

மாற்றுக்கொடுக்க, inf. To supply a change of cloths, commonly to women during their confinement, &c. 2. [*with* ஒரு] To administer an antidote.

மாற்றுமருந்து, s. An antidote, or medicine given to repel poison or subdue another medicine.

மாற்றுவஸ்திரம், s. A change of garment.

மாற்று, கிறேன், மாற்றினேன், வேன், மாற்ற, v. a. To change, alter, வேறுபடுத்த. 2. To rectify, convert, cure, set straight, செம்மைப்படுத்த. 3. To dispel, remove, நீக்க. 4. To derange, change, or alter for the worse, கெடுக்க. 5. To abrogate, repeal, தவிர்க்க. 6. To involve, reduce nature to its primitive elements by resolving the whole into the deity, சங்கரிக்க. 7. To barter, traffic, trade, truck, வியாபாரத்திலமாற்ற. 8. To change money, பணமாற்ற. (c.) 9. To deny, detain, தாமதிக்க.

அவன்வியாதியைமாற்றிப்போட்டான். He cured his disease.

அவனைமாற்றிப்போட்டார்கள்..........They have changed him to another place.

இந்தரூபாயைமாற்றிக்கொண்டுவா. Get me the change of this rupee.

மாற்றுவிக்க, inf. To cause to change.

மாற்றல், v. noun. Detaining, denying. 2. Changing.

மான. A word of comparison, உவமைச்சொல்; [ex மானு, v.] 2. An expletive used with verbs in the second person, முன்னிலையசைச்சொல். 3. Infinitive of மானு, ஓர்வினையெச்சம்.

அவன்சொன்னமானடந்தான். He acted as he said, or promised. (p.)

•மானசம் — மானதம், s. The mind, faculty of reason, as மனசு, மனது. 2. Thought, attention, நினைவு. 3. A lake on the Hymalaya mountains, இமையமலைவாவி, W. p. 657. Manasa. 4. A fancied tank, as மானசவாவி. —*Note.* This word is used as an *adj.* in Sans. compounds referring to the mind.

மானதக்காட்சி, s. Mental perception. See காட்சி.

மானதஸ்நானம், s. Mental purification, as மனஸ்நானம். See ஸ்நானம்.

மானததீட்சை, s. A mode of spiritual illumination. See தீட்சை.

மானதபூசை, s. Worship in the mind, spiritualism.

மானதப்பிரத்தியட்சம், s. That which is evident to the eye of the understanding, *a term in Logic or Metaphysics.*

மானதவாவி, s. A celebrated tank said to be in the world of Brahma.

•மானசாரம், s. A treatise on architecture. See சிற்பநூல்.

•மானதம், s. Mind. See மானசம்.

•மானதீபம், s. A Upanishad. See உபநிடதம்.

•மானபோதம், s. A treatise on architecture. See சிற்பநூல்.

•மானம், s. Honor, favor, greatness, பெருந்தன்மை. 2. Pride, self-respect, dignity, பெருமை. 3. Shame, bashfulness, வெட்கம். 4. Measure in general, அளவு. 5. (சது.) Strength, வலி. 6. Fault, குற்றம். 7. Comparison, உவமை. 8. [*colloq. for* வானம்.] The heaven or sky. 9. The computation of a year, solar, lunar, or siderial—as சௌரமானம், சாந்திரமானம். W. p. 656. Mana.—*Note* The word generally takes certain prefixes, as அபி, அனு, அவ, உப, சன், &c., and differs a little in meaning according to the connection. Sometimes it is found in combination, as தன்மைமானம், பகல்மானம், &c.

ஒழுக்கமுள்ளஸ்திரீமானத்தைக்காப்பாள். A gracious woman retaineth honor. (*Prov.* xi. 16.)

மானத்தைமூடு. Cover your nakedness. (c.)

சௌரமானம், s. Solar reckoning, motion of the sun in its orbit.

தேவமானம், s. The periods of time among the gods.

நரமானம், s. The period of man's life.

பிரகற்பதிமானம், s. Reckoning by Jupiter's motion in his orbit.

வெகுமானம், s. A present. See வெகு.

மானஈனம்—மானக்குறை-மானக்கேடு-மானத்தாழ்ச்சி — மானத்தாழ்வு — மானபங்கம் — மானவீனம், s. Dishonor, disgrace, ignominy.

மானக்குருடன், s. A very blind man.

மானங்காத்துக்கொள்ள, inf. See கா, v.

மானங்குலைய—மானங்கெட, inf. To be deflowered, &c. See குலை, v.

மானங்கெட்டவள், appel. n. A shameless woman.

மானதகார்த்தம், s. Virtuous dispositions.

மானபாவன், s. A great man, as மானுபாவன்.

மானமா, s. The yak or bos grunniens, as கவரிமா. (சது)

மானம்பாடி, appel. n. [improp.] A skylark, as வானம்பாடி.

மானமரியாதை, s. Regard and politeness.

மானம்பார்த்தநாடு, s. A country, without rivers, dependent upon rain.

மானயோகார்த்தம், s. Sum of the Semi-diameters of either the sun and moon, or of the moon and earth's shadow.

மானவர், s. [pl.] Honorable people, மானமுடையோர். 2. Heroes, strong men, champions, வீரர். (சது.)

மானவேதியன், s. The venerated lord of the Vedas, வேதமுணர்ந்தோரிறைவன்.

மானி, s. A person of honor, magnanimity. (சது.) 2. A coward. (சவ.)

•மானவம், s. A Upa-Purana. See உபபுராணம். 2. As மனு. See தருமநூல்.

•மானவர், s. [pl.] Men, human beings of the male sex, ஆடவர். 2. Human kind in general, மனிதர். W. p. 657. Manava. 3. See under மானம்.

மானவு, s. Intellectual clearness, தெளிவு; [*from Sa. Mana,* to investigate.] (சது.)

•மானி, s. See under மானம்.

மானி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To respect, to honor, to treat with politeness, மதிக்க; [ex மானம்.]

மானு, s. Grand-father, *also* a father, பாட்டன். (*Congu usage.*)

மானுகம், s. The gigantic crane, பெருநாரை.

மானுர், s. [pl.] Women, பெண்கள். (p.) 2. See மானு, v.

•மானிடம்—மானுடம்—மானுஷம் —மானுஷியம், s. Humanity, manliness, that which relates to mankind, மனுஷீகம். W. p. 659. Manusha, Manushya.

மானிடசாதி, s. Mankind.

மானிடஜென்மம், s. Human birth.

மானிடச்சட்டை, s. The human form as assumed by deity.

மானிடத்தன்மன், s. An epithet of Kuvêra as having a human nature, குபேரன். (சது.)

மானிடர்—மானுடர், s. [sing. மானிடன்.] Men, human beings, மனிதர்.

•மானிதம், s. [neg. அவமானிதம்.] Pride; dignity, கனம். (*Sa. Manita.*)

•மானியம், s. Honor, respect, மரியாதை. W. p. 656. Manya. 2. (c.) Lands held on free tenure, உம்பளிக்கை.—*Note.* In the second meaning it is often used for Enams in general.

காணிமானியம், s. Hereditary lands, free of tax.

குடிமக்கள்மானியம், s. Land given to washermen, barbers, &c., in free tenure.

மானியக்காரன், s. One who holds a *manium.*

•மானினி, s. A woman, பெண்; [ex மானம்.] W. p. 657. Manin.

மானு, கிறேன், மானினேன், or மான்றேன், வேன், மான, v. n. To be like, to resemble, be equal to, ஒக்க. 2. To be doubtful, ஐயுற. 3. To be confused, மயங்க. (p.)

மானார், appel. n. [pl.] Enemies, foes, பகைவர். (சது.)

மானல், v. noun. Resembling. 2. Doubting. 3. Being confused. (சது.)

மான்றல், v. noun. Being doubtful, or confused, மயக்கம். (சது.)

•மானுஷம் — மானுஷியம் — மானுஷிகம், s. Human kind. See மானிடம்.

மானுஷன், s. A man, as மனுஷன்.

மானுஷியமில்லாதவன்மனுஷப்பதர். One without urbanity is human chaff.

•மானுடம், s. One of the five kinds of charity. See யாகம், 6. 2. Human kind. See மானிடம்.

மானுடயாகம், s. Giving alms in rice, &c. See யாகம்.

•மானுபாவன், s. [contrac. of மகாநுபாவன்.] An illustrious person.

மான், s. A deer, hart. (c.) 2. Shape, figure, உருவம். 3. A woman, பெண். 4. Capricorn of the Zodiac, மகரவிராசி. 5. A sea-monster, as மகரமீன். 6. A generic term for beast, விலங்கின்பொது.—*Note.* Of deer are, கலைமான், கவரிமான், சருகுமான், புள்ளிமான், வெளிமான், which see.

மானுக்கொருபுள்ளிபேறினுமென்ன குறைந்தாலென்ன. What if there be a spot more or less on the deer! [*prov.*]

மானிடத்தன்—மானிடமுடையோன்—மானிடமேந்தி, *appel. n.* An epithet of Siva, as holding a deer in one of his hands, சிவன்.

மானேறு, s. The male of a deer—as கலைமான். 2. The twelfth lunar mansion, உத்திரநாள்; [*ex* ஏறு.]

மான்களங்கம், s. Spots on the moon, considered as disease from a curse, and supposed to resemble those of the deer.

மான்கிளை, s. A plant. See கிளை.

மான்செவி, s. A plant, hart's-ear. See எருமைநாக்கு.

மான்செவிக்கள்ளி, s. A milky shrub. See கள்ளி.

மான்மதம், s. Musk, கஸ்தூரி. (சது.)

மான்றலை, s. The head of a deer. 2. (சது.) The fifth lunar mansion, as மிருகசீரிடம்; [*ex* தலை.]

•மான், s. The active agency of nature, பிரகிருதித்துவம்; [*from Sa. Manu*, an agent.] (Drew's Kural. *p.* 25.) 2. An affix to words both Sa. and Tamil, implying possessor, as கல்விமான், a learned man; சீமான், an opulent man; மன்னுமான், the Everlasting One, &c.

•மான்மியம், s. Glory, மகிமை.

## மி

மி. A syllabic compound of ம் and இ.

மிகு, கிறேன், ந்தேன், [*poet.* மிக்கேன்.] வேன், மிக, *v. n.* To exceed, to surpass, to become superior, அதிகரிக்க. 2. To remain, to be left, be to spare, be superfluous, (*c.*)

மிக, *inf.* [*also* மிகவும், *as adv. or adj. in the superlative.*] Very much, abundantly, பெருக.

மிகப்படல், *v. noun.* Increasing, abounding, அதிகரித்தல்.

மிகப்படச்சொல்லுகிறது. Saying too much.

மிகல். Becoming plentiful, increasing, மிகுதல். 2. Becoming great.

மிகன்மக்கள். The great. (நீதிநெறி.)

மிகவல்லோர், s. [*pl.*] Very powerful persons, அதிவீரர். 2. Those that are well skilled in any art, அறிவிலுயர்ந்தோர்.

மிகவும். Very much, abundantly.

மிகவுஞ்சந்தோஷப்பட்டான். He greatly rejoiced.

மிகவும்வருத்தமாயிருக்கிறது. It is very hard.

மிகவும்பயந்துபோனேன். I was very much afraid.

மிகவுந்தொந்திப்படுகிறான். He is suffering greatly.

மிகு, [*Aorist as an adj.*] Great.

மிகுகொடையாளன், s. Karna, as very liberal, கர்ணன். (சது.)

மிகுதம்—மிகுதி, *v. noun.* Much, abundance, profusion, redundance, அதிகம். 2. Excess, overplus, மீதி. 3. A crowd, திரட்சி. 3. Fulness, satiety, பூரிப்பு. 5. Increase, பொலிவு.

மிகுதியான, [*as an adj.*] Abundant.

மிகுதியானது. That which is abundant.

மிகுதியானபேர். The majority.

மிகுதியும். Greatly, exceedingly.

மிகுதியுஞ்சுருக்கிப்போட்டான்.........He has greatly abridged, or curtailed.

மிகுந்த, [*rel. part. as adj.*] Much, great, &c.

மிகுந்தவாசனை. A strong, fragrant smell.

மிகுந்தகிரயம். An exorbitant price.

மிகுந்தவயசு. Very old age.

மிகுந்திருத்தல், *v. noun.* Being too much, or in excess. 2. Being left, as மிச்சிருத்தல்.

மிகை, *v. noun.* Abundance, superfluity, மிகுதி. 2. Sorrow, affliction, துன்பம். 3. Destruction, கேடு. 4. Trouble, வருத்தம். (சது.) 5. Fault, defect, error, குற்றம்.

மிகைபட, *inf.* To be blamed.

மிகைபடச்சொல்லேல். Don't speak injuriously. (*Avv.*)

மிகைபடக்கூறல், *v. noun.* Redundancy as a fault in composition. See குற்றம், under குற்றம்.

மிகைபோட—மிகைசொல்ல, *inf.* To charge one falsely. (*R.*)

மிக்க, [*rel. part. as adj.*] Overmuch, superior, &c. (*p.*)

தந்தைசொல்மிக்கமந்திரமில்லை. No precept is better than that of a father. (*Avv.*)

மிக்கசெயல், s, Extraordinary power; magnanimity. See ஊராண்மை.

மிக்கு, *v. noun.* Greatness, superiority, பெருமை. (*p.*)

மிக்குடைய. Possessing greatness. (நீதிநெறி)

மிக்கது, *appel. n.* What is abundant, excessive.

மிக்கவன்—மிக்கான், s. A great or excellent person, உயர்ந்தோன்.

மிக்கவை, s. [*pl.*] Remains of food after a meal, மிச்சவை. 2. (சது.) Unjust proceedings, நியாயமற்றவை. 3. Increase, fulness, abundance, மிகுந்திருப்பவை. 4. Food, ஊண். 5. Boiled rice, சோறு.

மிக்கிளமை, s. Juvenility, மிகுந்தஇளமை.

மிக்கோர், s. [*pl.*] Men of knowledge, superior men, அறிஞர். (சது.)

மிகு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To augment, to make large, அதிகப்படுத்த. 2. To excel, surpass, surmount, உயர்த்த. 3. க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To be increased, பெருக.

ஆஸ்திமிகுத்துப்போயிற்று. Riches are increased.

மிகை—மிக்க. See மிகு, *v. n.*

மிசல், s. [*Arab.*] Entry, தாக்கல். 2. Examination, பரிசோதனை.

மிசல்திர்வை, s. The assessment fixed on a field with reference to the adjacent land. (*Govt. usage.*)

•மிசிரம், s. A mixture, mixing, கலப்பு.

மிசிரவர்ணம், s. A mixed class or tribe.

•மிசிரன்—மிசுரன், s. An affix to the name of certain brahmans, meaning a respectable person—as சக்கேஷ்மிசிரன். W. p. 662. Misra.

மிசுக்கன், s. A vile or worthless person, ஈனன். Compare சக்கான். (*R.*)

மிசுக்கை, s. A trifle; a vile or worthless thing, அற்பமானது.

மிசை, s. Eminence, elevation, உயர்ச்சி. 2. A hill, மேடு. 3. Poverty, தரித்திரம். 4. Food, சோறு. 5. [*prep.*] On, upon, above, மேல். (சது.) (*p.*)

மிசைத்திரள், s. The ankles, கரடு. (சது.)

மிசைவடம், s. A warrior's ankle-rings, வீரதண்டை. (திவா.)

மிசை, கிறேன், ந்தேன், வேன், ய, *v. a.* To eat, to take food, உண்ண. (*p.*)

மிசைதல், *v. noun.* Eating, உண்ணல்.

மிச்சம், s. Excess, surplus, overplus, remainder, that which is to spare, மீதி; [*ex* மிஞ்சு.] (*c.*)

குடிகளில்மிச்சமானபேர்கள். The majority of the inhabitants.

அவன்மிச்சமாயெடுத்துக்கொண்டான். He took too much.

மிச்சஞ்சொச்சம், s. Any thing left; that which can be spared.

•மிச்சரம், s. A mixture, as மிசிரம்.

மிச்சில், s. What is left, or remaining after a meal, *commonly* எச்சில். 2. Any remainder, ஒழிபொருள்; [*ex* மிஞ்சு.] (சது.)

மிச்சை, s. Falsehood, a lie, பொய்; [*a corrupt. of* மித்தை.] 2. Ignorance, அஞ்ஞானம். 3. Poverty, தரித்திரம்; [*from Sa. Michcha*, to cause distress.]

மிஞிறு, s. [*poet. change of* ஞிமிறு.] A chafer, வண்டு. (சது.)

மிஞ்சி, s. A ring worn on the second toe of each foot.—*Note.* It is put on the feet of a bridegroom, as a marriage ceremony by the parents of the bride.

மிஞ்சு, கிறேன், மிஞ்சினேன், வேன், மிஞ்ச, *v. n.* To exceed, abound, surpass, to increase too much, மிக. 2. [*fig.*] To become proud, be elevated, பெருமைகொள்ள.

சாப்பாடுமிஞ்சிப்போனது. There was an excess of food.

காரியம்மிஞ்சிப்போயிற்று. The matter has been already settled.

அவன்மிஞ்சிப்பேசலாமா. Can he speak haughtily ?

அவன்மிஞ்சிமிஞ்சிவருகிறான். He is coming on furiously.

மிஞ்ச, *inf.* [*used adv.*] Excessively. மிஞ்சவொட்டமாட்டேன். He will allow none to act extravagantly.

ஒருவனைமிஞ்சவொட்டாமல்அடப்பிக்கிறது....... Keeping one from exceeding due bounds.

மிஞ்சியிருக்க, *inf.* To be over and above. 2. To be arrogant.

மிஞ்சினது, *appel. n.* The remainder, any thing left as a surplus.

மிஞ்சினதுகொண்டுமேற்கேபோகலாகாது. It is not good to take a surplus and go westward. [*prov.*]

மிஞ்சினவன், *appel. n.* A froward, unmanageable man.

மிடல், *s.* Strength, power, might, வலி; [*from Sa. Misha*, to vie.] (சது.)

மிடறு, *s.* [*gen.* மிடற்றின்.] Throat, தொண்டை. 2. Neck, கழுத்து. 3. The lower jaw, கீழ்வாய். 4. [*improp.* மிணறு.] Draught, quantity of liquid taken at once. (*c.*)

ஒருமிடறுதண்ணீர்குடித்தேன். I took a draught of water.

மிடா, *s.* A large earthen vessel, தடா. 2. A corn-measure containing sixteen மரக்கால், or marcal; *used in Mysore.* (*Beschi.*)

மிடி, *s.* Poverty, want, தரித்திரம். (சது.)

மிடிபடுதல், *v. noun.* Suffering poverty, being pained by want.

மிடி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To be poor, to be in want, to be destitute, வறுமையுற. (சது.)

மிடிமை, *s.* Poverty, வறுமை. (*p.*)

மிடியன், *s.* A poor man, தரித்திரன்.

மிடுக்கு, *s.* [*also* முடுக்கு.] Strength, stiffness, வலி. 2. Pride, மேட்டிமை.

மிடுக்கன், *s.* A strong, stout, valiant man, வலியுடையோன். 2. [*prov.*] Coarseness, முருக்கன்.

மிடை, *s.* A bush, small shrub, தூறு. (சது.)

மிடை, கிறேன், ந்தேன், வேன், ய, *v. n.* To be close, thick, crowded, pressed, நெருங்க. (*p.*)

மிடைதூறு. A thick group of shrubs or bushes.

மிடைபேய். Crowds of vampires.

மிட்டா, *s.* [*Hind.*] An estate, a possession, விருத்திமனை. 2. A small sub-division of a Taluk, *a Mittah*, தக்கடி.

மிட்டாதார், *s.* The proprietor of a *Mittah.*

•மிட்டாயி, *s.* Sweet-meats, confectionery, பலகாரம். [*Hind. usage.*] W. p. 662. Mısнт'a. (*c.*)

மிட்டாயிக்கடை, *s.* A bazaar for confectionery.

மிட்டாயிக்காரன், *s.* A confectioner.

மிணறு, *s.* [*improp. for* மிடறு.] A draught of water, ஒருமிடறுதண்ணீர்.

•மிணுமிணுக்க — மிணுமிணென, *inf.* [*also* முணமுணக்க, முணுமுணுக்க.] To mumble, speak with a low reiterated sound. [*corrupt. of Sa. Manmana.* W. p. 643.]

மிணுமிணுத்தல் - மிணுமிணுப்பு, *v. noun.* Mumbling.

மிண்டி, *s.* [*prov.com.* நெம்புதடி, உலுக்குமரம்.] A lever.

மிண்டு, *s.* A wilful fault, a crime, மதத்தாற்செய்பிழை. (சது.) 2. [*prov.*] A prop, a support, as முட்டு.

மிண்டன், *s.* A strong man, as கண்டன்.

மிண்டு, கிறேன், மிண்டினேன், வேன், மிண்ட, *v. n.* To be thronged, நெருக்க. 2. *v. a.* [*vul.* முண்டு.] To give a push, to force forward; to lift, தள்ள. (*c.*)

நீஎன்னிடத்திலேமிண்டப்பார்க்கிறாய். Will you attempt to contend with me?

மிண்டல் - மிண்டுதல், *v. noun.* Thronging. (சது.) 2. Pushing.

மித, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, *v. n.* To float, to swim on the surface of water, &c. 2. To rise high in the sky, மேலெழும்ப. 3. To be heaped, as corn in a measure, மட்டுமிஞ்ச. 4. (*fig.*) To rise in office, dignity, or wealth, மேலாக. 5. To assume a character above the reality, வெறும்பெருமைபண்ண. (*c.*)

மிதப்பு, *v. noun.* Floating. 2. A float. See தூண்டில்.

தம்பிக்குக்கொஞ்சம்மிதப்பாயிருக்கிறது. He is somewhat sulky.

•மிதம், *s.* Abstinence, moderation, as மட்டு. W. p. 661. Mıta. (*c.*)

மிதமாய்ச்சாப்பிடவேண்டும். You must be abstemious in food.

மிதமிஞ்சிப்பேசாதே. Be not assuming when you talk.

மிதசுரம், *s.* Middle accent, as மத்திமசுரம்.

மிதலை, *s.* Navel, கொப்பூழ். (சது.)

மிதவை, *s.* A raft of boards, as தெப்பம்; [*ex* மித, *v.*] 2. Boiled rice, சோறு; [*from Sa. Mid*, to be soft.] (சது.)

மிதி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To tread down, trample on, காலால்மிதிக்க; [*from Sa. Mrudu, Mradu.*] (*c.*) 2. *v. n.* To jump, குதிக்க.

மிதி, *v. noun.* Treading, மிதித்தல். 2. A tread. 3. The treadle of a weaver's loom, நெய்வார்காலிலிடுமொன்று. 4. As மிதிமரம்.

மிதிகல், *s.* A step-stone by a well.

மிதிபலகை, *s.* A foot-stool.

மிதிபாகல், *s.* A creeping plant, Momordica muricata; *opposite to* கொம்புப்பாகல்

மிதிமரம், *s.* A step-board near a tank or well. 2. The treadle of a loom.

மிதியடி, *s.* Common shoes. 2. Wooden slippers, பாதகுறடு.

மிதியடிக்கட்டை. A worthless sandal, *spoken contemptuously.*

மிதியிட, *inf.* To make a track or impression by the foot, காலாற்குறிசெய்ய. 2. To tread under foot, மிதிக்க.

மிதியிட்டகளிமண். Trodden clay.

சோவுக்குமிதியிடுகிறது. To mollify contracted or diseased limbs by rubbing them with oil. (*R.*)

•மிதிலை, *s.* [*com.* மிதுலை.] A city in the province of Behar, to the Northwest of Bengal, சனகபதி. 2. The country itself. See விதேகை. W. p. 661. Mıt'hıla.

மிதிலைநகரம், *s.* As மிதிலை, 1.

மிதுக்கை, *s.* A small kind of cucumber-creeper.

மிதுக்கங்காய், *s.* The unripe fruits of the above, used in curry.

மிதுக்கங்காய்வற்றல் — மிதுக்கம்வற்றல், *s.* The dried unripe fruits of மிதுக்கை, used for food after parching.

•மிதுனம், *s.* A couple, a pair, as much again, இரட்டை. 2. Union, copulation, புணர்ச்சி. 3. Gemini of the Zodiac, மிதுனவிராசி. W. p. 661. Mıt'huna. 4. A species of bird, ஒருபுள்.

மிதுனவிராசி, *s.* Gemini.

மிதுனவீதி, *s.* An astronomical tri-section of the Zodiac, named the Gemini course. See சூரியவீதி.

•மித்தியம் — மித்தியை, *s.* Lie, falsehood, பொய். W. p. 661. Mıt'hya.

மித்தியாவாசகம், *s.* Falsehood, a false story, பொய்மொழி.

மித்தியாவாதி, *s.* A liar, பொய்யன்.

மித்தியோத்தரம், *s.* A false reply; [*ex* உத்தரம்.]

மித்தியொபசாரம், *s.* Pretended friendly services; [*ex* உபசாரம்.]

•மித்திரம், *s.* Friendship, affection, நட்பு. W. p. 661. Mıtra. 2. [*com. for* மித்தியம்.] Lying, prevarication; malicious tale-bearing, புரளி, கோள்.

மித்திரக்காரன், *s.* [*vul.*] A false or unjust accuser, கோட்காரன்.

மித்திரதுரோகி — மித்துருதுரோகி, *s.* One who betrays his friends, a traitor, சிநேகத்துரோகி.

மித்திரத்துருகன், *s.* A pretending friend, a traitor, one who pretends to be a friend, வஞ்சகச்சிநேகன். (*Sa. Mitradruha.*)

மித்திரநாள், *s.* The seventeenth lunar mansion. See அநுடநாள். (சது.)

மித்திரபேதம் — மித்துருபேதம், *s.* Sowing discord among friends. See பஞ்சதந்திரம்.

மித்திரன், *s.* A friend, an ally, adherent. [*pl.* மித்திரர்.] 2. Sun, சூரியன். (சது.)

மித்திரை, *s.* A female companion, தோழி.

•மித்துரு *s.* A friend — *oppos. to* சத்துரு, சிநேகன். W. p. 661. Mıtrayu.— For the compounds, see மித்திரம்.

•மித்தை, *s.* [*as* மித்தியம்.] Falsehood, illusion, appearance, பொய். (சது.)

மியா, [*an interjectional affix.*] Hearken, attend, as கேண்மியா, hear thou; சென்மியா, go thou, முன்னிலையசைச்சொல். (*p.*)

மியூலசிவி, *s.* A plant, Sow thistle-leaved Cacalea, Cacalea sonchifolia, ஒர்பூடு.

மிரட்டு, கிறேன், மிரட்டினேன், வேன், மிரட்ட, *v. a.* [*improp. for* வருட்டு, வெருட்டு.] To frighten, பயமுறுத்த. 2. To infatuate, மயக்க. (*c.*)

மிரதம், *s.* Snake, serpent, பாம்பு. (சது.)

மிரளு, கிறேன், மிரண்டேன், வேன், மிரள, *v. n.* [*improp. for* வருளு.] To fear, be confused, or put in mental agitation. (*c.*)

மிராசி — மிராசு, *s.* [*Arab.*] Landlordship, heritage, patrimony, right to official emoluments, உரிமை.

மிராசுதாரன் — மிராஸ்தாரன் - மிராசுதார், *s.* One who holds land or office under the above tenure.

குடிகளுடையமிராசி. Right of the inhabitants.

மிரிகை, s. A tuning key for the cords of a lute, as பிருடை.

மிரியல், s. Pepper, மிளகு. (சது.) Compare மரிசம். (*Tel. usage.*)

•மிருகண்டன் — மிருகண்டு-மிருகண்டன், s. The name of a muni. W. p. 669. MRUKAN'DAKA, MRUKAN'DU.

•மிருகம், s. A deer, an antelope, மான். 2. An animal in general, விலங்கின்பொது. 3. A beast, a brute. W. p. 669. MRUGA. 4. A pig, a hog, பன்றி.

மிருகக்ஷீரம்—மிருகக்ஷீரம், s. The milk of a doe, மான்பால்; [*ex* க்ஷீரம், க்ஷீரம்.]

மிருககுணம்-மிருகத்தனம், s. A brutish disposition, beastliness.

மிருகசஞ்சாரம், s. A place frequented and infested by beasts. 2. Bestiality; beastliness in sexual intercourse; gross indecency, சகமிருகப்புணர்ச்சி.

மிருகசண்டாளம், s. Extreme atrocity; gross sinfulness. See சண்டாளம்.

மிருகசாதி, s. The brute creation. 2. Brutish tribe of people.

மிருகசாலிகை, s. A net or snare by which deers are entrapped, மான்வலை.

மிருகசிரம், s. A mode of using the hands in dancing. See கரவட்சணம்.

மிருகசீரிடம் — மிருகசீரிஷம், s. [*also* மார்கழி.] The fifth lunar mansion containing three stars in Orion, and figured by an antelope's head, whence its name, நக்ஷத்திரம்; [*ex* சிரசு, சிரம், the head.]

மிருகசீவனன்—மிருகத்தியு, s. A fowler, hunter, வேட்டைக்காரன்.

மிருகசைடகம், s. A pole-cat, wild cat, ஆண்பூனை. (*Sa. Mrugachaidaka.*)

மிருகதஞ்சகன், s. A dog, நாய்; [*ex Sa. Damsaka,* who bites.]

மிருகதந்தம், s. Horns, or teeth of hogs, பன்றிமருப்பு.

மிருகதரன், s. Moon, சந்திரன்; [*ex* தரம்.] See மான்களங்கம்.

மிருகதூர்த்தகன், s. Fox, நரி; [*ex* தூர்த்தகன், a cheat.]

மிருகநாபி, s. Musk-bag, கஸ்தூரி. 2. The musk-deer [cat], கஸ்தூரிப்பூனை; [*ex* நாபி, the navel, *the musk being formed in a bag near the navel.*]

மிருகநாபிசம், s. Musk, கஸ்தூரி; [*ex* சம், produced.]

மிருகபதி—மிருகேந்திரன், s. A lion, சிங்கம்; [*ex* பதி, இந்திரன், lord.] (சது.)

மிருகபந்தினி, s. Nets to ensnare musk-deers, மான்வலை; [*ex* பந்தனம்.]

மிருகபயம், s. Fear or danger of wild beasts.

மிருகபாலிகை, s. Musk-cat, கஸ்தூரிப்பூனை; [*ex* பாலி, to preserve.]

மிருகமதம், s. Musk, கஸ்தூரி; [*ex* மதம், *the secretion being considered analogous to that from the temples of elephants in rut.*] (சது.)

மிருகராசன், s. A lion, சிங்கம். (சது.) 2. A species of tiger, வேங்கைப்புலி.

மிருகவாகனன், s. God of the wind, the wind, வாயு.

மிருகவ்வியம், s. Hunting, fowling, வேட்டை.

மிருகாங்கம், s. Wind, காற்று. 2. Moon, சந்திரன்; [*ex* அங்கம்.]

மிருகாங்கன், s. The moon, சந்திரன். 2. Siva, as holding a deer, சிவன். (சது.)

மிருகாண்டி, s. [*in combin. com.* மிறாண்டி, *vul.* முறண்டி.] As காட்டுமிருகாண்டி.

மிருகாதனம், s. A lion, சிங்கம். 2. A hyæna, புலி. 3. A leopard, சிவிங்கி; [*ex Sa. Adana,* eating.]

மிருகாதி, s. A tiger, புலி. (*Sa. Mrugad.*)

மிருகாயினம், s. The skin of a deer, மான்தோல்.

மிருகாரசிங்கி, s. A kind of arsenic, ஓர் பாஷாணம்.

மிருகாரி, s. A lion, சிங்கம். 2. A tiger, புலி. 3. A dog, a hound, நாய்; [*ex* அரி, enemy.]

•மிருசம், s. Sight, perception by the eye, காட்சி; [*from Sa. Mrusa,* to see.]

•மிருடங்கணம், s. Child, பிள்ளை. W. p. 670. MRUD'ANKAN'A.

•மிருடன், s. A name of Siva as delighted, சிவன். W. p. 670. MRUD'A.

•மிருடாலகம் — மிருஷாலகம், s. Mango-tree, மாமரம். W. p. 672. MRUSHALAKA.

•மிருடோத்தியம், s. Lie, falsehood, பொய். W. p. 672. MRUSHOD'HYA.

•மிருதகம், s. A dead body, a corpse, பிரேதம். W. p. 670. MRUTAKA.

•மிருதங்கம், s. Drums, tabours, &c., முழவு. See சகலகுரவம். W. p. 671. MRUDANGA.

•மிருதம், s. A corpse, as மிருதகம். 2. Death, மரணம். W. p. 670. MRUTA. 3. (சது.) Battle, fight, போர்.

மிருதசஞ்சீவி — மிருதசஞ்சீவனி, s. A medicament said to restore the dead to life, as சஞ்சீவி.

மிருதபாஷாணம், s. A kind of prepared arsenic, ஓர்பாஷாணம்.

•மிருதாண்டன், s. The sun, சூரியன். W. p. 670. MRUTAN'DA.

•மிருதாரசிங்கி, s. A kind of poison prepared from lead, ஓர்வகைப்பாஷாணம். See சிங்கி.

•மிருதி, s. A law-book, as ஸ்மிருதி, தருமநூல். 2. Death, as மிருதம், மரணம். (சது.)

•மிருது — மிருதுவு, s. [*com.* மெது, மெதுவு.] Softness, மென்மை. 2. Gentleness, mildness, leniency, சாந்தம். W. p. 671. MRUDU.

மிருதுநட்சத்திரம், s. [*also* இலகுநட்சத்திரம்.] A small star, giving a feeble light.

மிருதுபாஷிதம்—மிருதுபாஷிதம், s. Soft mild conversation, affable language, மென்மொழி.

மிருதுவாதம், s. The soft, gentle, and refreshing south wind, சிறுதென்றல்.

மிருதூற்பலம், s. A blue water-lily, as நீலோற்பலம்; [*ex* உற்பலம்.]

•மிருதுன்னகம், s. Gold, பொன். W. p. 671. MRUDUNNAKA.

•மிருதை, s. Earth, பூமி. W. p. 671. MRUDA.

•மிருத்தஞ்சயன் — மிருத்தியுஞ்சயன், s. An epithet of Siva, as one conquering death, சிவன்; [*ex* மிருத்தியு *et* சய.]

•மிருத்திகை, s. Earth, soil, clay, sand, மண். W. p. 671. MRUTTIKA.

•மிருத்தியு, s. Death, an end of all things, மரணம். 2. Yama, இயமன். W. p. 671. MRUTYU.

•மிருத்து, s. Earth, பூமி. See அவமிருத்து and காலமிருத்து. W. p. 671. MRUD. 2. Death, as மிருத்தியு, மரணம்.

மிருத்துசாந்தி, s. A ceremony in time of sickness to appease the god of death.

மிருத்துசூதகம், s. Impurity from death in a house, மரணசூதகம்.

மிருத்துஞ்சயன்—மிருத்துவஞ்சனன், s. Siva, as மிருத்தஞ்சயன்.

மிருத்துபஞ்சகம் — மிருத்துபயம், s. Liability to death, by contracting marriage at a certain hour, ascertained from astrological calculations, மரணபயம்.

•மிருநாளம், s. The stalk of a lotus, and its fibres, தாமரைத்தொடு. W. p. 670. MRUN'ALA.

மிலாந்து, கிறேன், மிலாந்தினேன், வேன், மிலாந்த, v. n. [*prov.*] To gaze, stare, look about—as persons looking for game; to look wild, or ghastly, as dying people, சறிறக்கப்பார்க்க. Compare மலைக்க.

மிலாந்தி, *appel. n.* One who stares or gazes.

மிலாரடி, s. The state of one in perturbation, a dilemma, மயக்கம். 2. Unfeelingness, stupor, stupefaction, as உன்மத்தம்.

மிலாறு, s. [*also* மலாறு, *prop.* விளார்.] Twigs, reed, tender, fibrous sticks; a switch. (*c.*)

மிலாற்றுலேமழுக்கிவிட்டான். He flogged him smartly with a switch.

•மிலேச்சம், s. A country to the North of the Saraswati river in the neighborhood of Delhi, சரச்சுவதியாற்றின்வடதேசம். (சது.)

மிலேச்சசாதிகள், s. Barbarous nations, foreigners. The tribes enumerated under this head by *Menu*, appear to be principally the inhabitants of the countries bordering on India, north and south; especially those adjacent to Bengal and Behar, and on the Southern part of the Coromandel coast, which are severally called *Paundrakas, O'dras (Uriyas)*, and Draviras; also the Cambojas; Yavanas (Greeks or Bactrians); Sakas; Paravas; Pahlavas (ancient Persians); Chinese; Kiratas, generally mountaineers; Deradas (Daradæ) and K'hasas (Scuthi). W. p. 677.—*Note.* The term is now applied, more especially, to Europeans, and those from any remote country.

மிலேச்சதேசம்—மிலேச்சமண்டலம், s. A foreign country, a country on the borders of India.—According to Wils. any country where the black antelope is not found.

மிலேச்சத்தனம், s. Clownishness, barbarism.

மிலேச்சன், s. [*fem.* மிலேச்சி, மிலேச்சச்சி.] A barbarian, one of a foreign tribe, of a foreign religion, customs, &c., சண்டாளன்.—According to Wils. one speaking any language but Sanskrit, and not subject to the usual Hindu institutions. 2. A weak man, simpleton, dunce, dolt, பேதையன். 3. A clown, clodhopper, மடையன்.

மிலே, கிறேன், ந்தேன், வேன், ய, *v. a.* To put on, to dress, அணிய. 2. To put on flowers, சூட. (*p.*)

மிலேச்சு, கிறேன், மிலேச்சினேன், வேன், மிலேச்ச, *v. a.* To put on, அணிய. (*p.*)
　மிலேச்சல்-மிலேச்சுதல்-மிலேதல், *v. noun.* Wearing, adorning, அணிதல். (சது.)

மிழலே, *s.* Prattling, lisping, &c., as மழலே. (சது.)

மிழற்று, கிறேன், மிழற்றினேன், வேன், மிழற்ற, *v. a.* To speak softly, to prattle as a child, மென்மையாய்ச்சொல்ல; [*from Sa. Mlaksha*, to speak incorrectly.] (*p.*)
　மிழற்றல், *v. noun.* Defective speech, கிரம்பாமென்சொல். 2. Speaking, சொல்லல். 3. Inarticulate sound in speech, பேசலா வெழுமொலி. (சது.)

மிழி—முழி, *s.* [*vul.*] The eye-ball, கருவிழி; [*from Sa. Meela*, to wink.] Compare விழி.

மிழுங்கு, *v.* [*vul. for* விழுங்கு, *which see.*] To swallow, devour, eat up.

மிளகாய், *s.* [*vul.* முளகாய்.] Red pepper, *chilly*, goat-pepper-plant, Capsicum frutescens, ஓர்செடி. (*c.*)
　மிளகாய்ச்சக்களத்தி, *s.* A kind of plant, ஓர்செடி, Vinea pusilla.
　மிளகாய்ப்புள், *s.* A kind of gull, ஓர் குருவி.

மிளகு, *s.* Pepper, Piper nigrum, *L.*
　மிளகரணே, *s.* A plant, Prickly toddalia, Scopolia aculeata.
　மிளகாணம், *s.* [*prov.*] Pepper-broth of a thick consistence.
　மிளகுசம்பா, *s.* A kind of rice. See சம்பா.
　மிளகுசாறு — மிளகுதண்ணீர் — மிளகுநீர்—மிளகுரசம், *s.* [*politely* ரசம்.] Pepper-broth, pungent soup.
　மிளகுதக்காளி, *s.* A plant whose fruits resemble the pepper—as மணித்தக்காளி.
　மிளகுதிரி, *s.* A kind of small-pox. See உதிரி.
　மிளகுதூள், *s.* Powdered pepper.
　வால்மிளகு, *s.* A plant. See வால்.

மிளிர், *s.* Greatness, பெருமை. 2. Light, splendor, ஒளி. (சது.)

மிளிர், கிறேன், ந்தேன், வேன், மிளிர, *v. n.* To be great, பெருமைப்பட. 2. To shine, ஒளிசெய்ய. (*p.*)
　மிளிர்தல், *v. noun.* Shining, ஒளிசெய்தல். (சது.)

மிளிறு, *s.* A bear, கரடி. (சது.)

மிறல், *s.* Greatness, பெருமை. (சது.)

•மிறுகம், *s.* [*improp.*] A beast, as மிருகம்.

மிறை, *s.* Fear, அச்சம். 2. Fault, குற்றம். (சது.) 3. Trouble, perplexity. (*p.*)
　மிறைக்கவி, *s.* A curiously constructed poem, as சித்திரகவி.

மிறை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To suffer, be afflicted, துன்பப்பட. 2. *v. a.* To inflict suffering, துன்பஞ்செய்ய. (*p.*)
　மிறைத்தல், *v. noun.* Being afflicted or troubled, துன்பப்படல். (சது.)

மினக்கெடு, கிறேன், மினக்கெட்டேன், வேன், மினக்கெட, *v. n.* [*improp.*] To be interrupted from work by useless talk, &c., தடைபட. (*c.*)
　மினக்கேடு, *v. noun.* [*Beschi* மினேக்கேடு, *com. for* வினேக்கேடு.] Uselessness of an action or a business; time lost by interruption of a work; labor expended to no purpose, வியர்த்தம்.

மினவு, கிறேன், மினவினேன், வேன், மினவ, *v. a.* [*com. for* வினவு.] To salute, congratulate, உபசரிக்க. (*Beschi.*)
　மினவுதல், *v. noun.* Salutation.

மினுஹா, *s.* [*Hind.*] Deduction, கழிவு.

மினுன், *s.* A village accountant, கணக்கன். (*Malabar usage.*)

மினுக்கம்—மினுக்கு, *s.* Polish, splendor, ஒளி. 2. [*fig.*] Vainness, worthlessness, a thing of unreal excellency, பகட்டு.
　மினுக்குப்பசை, *s.* A kind of varnish used by weavers, செய்வாரிடும்பசையிலொன்று.
　மினுக்குமினுக்கென, *inf.* To glimmer, coruscate, as fire-flies, &c., மினுமினுக்க.
　மினுக்கெண்ணெய், *s.* A kind of oil to make one's body shine. 2. A varnish.

மினுக்கு, கிறேன், மினுக்கினேன், வேன், மினுக்க, *v. a.* To polish, gloss, brighten, adorn, விளக்க. See துலக்கு.
　விலேமகட்கழகுதன்மேனிமினுக்குதல். The prostitute's adornment is of her body.
　மினுக்கிக்கொள்ள, *inf.* To make one's self gay.

மினுங்கு, கிறது, மினுங்கினது, ம், மினுங்க, *v. n.* To be polished, to brighten, glitter, shine, பிரகாசிக்க.

மினுமினுக்க, *inf.* [*v. noun* மினுமினுப்பு.] To glimmer, glitter, dazzle, இலங்க.

மின், *s.* Coruscation, lightning, glitter, மின்னல். 2. Flash, brightness, ஒளி. 3. A young woman, பெண்மகள். (சது.) 4. [*vul. for* முன்.] Before.
　மின்னுக்கெல்லாம்பின்னுக்குமழை. Rain follows lightning. (*Avv.*)
　மின்சாரம், *s.* Electricity.
　மின்சாரக்கம்பி, *s.* An electric wire.
　மின்சாரயந்திரம், *s.* An electric machine.
　மின்மினி — மின்மினிப்பூச்சி, *s.* [*vul.* மின்னிட்டாம்பூச்சி, மின்னும்பூச்சி.] A fire-fly, glow-worm.
　மின்மினிப்பிரகாசம், *s.* The shining of a glow-worm.
　கிறிஸ்துவின் பிரசங்கத்தின்முன்னே மற்றைமதஸ்தர்களின்பிரசங்கஞ்சூரியப்பிரகாசத்தின்முன்மினமினிப்பிரகாசம்போலிருக்கிறது. In view of the discourses of Christ, those of other religious teachers, are like the glow-worm in the light of the radiant sun.
　மின்னார், *s.* [*pl.*] Women, females, பெண்கள். (*p.*)
　மின்னாள், *s.* A handsome woman. (*p.*)
　மின்னெறி, *s.* The mark of lightning, as running in straight or curved lines, மின்னலின்மார்க்கம்; [*ex* நெறி.]

மின், மின்னுகிறது, மின்னினது, மின்னும், மின்ன, *v. n.* To lighten, flash, coruscate, glitter, ஒளிசெய்ய. (*c.*)
　மின்னுகிறதெல்லாம்பொன்னுமல்ல. All is not gold that glitters.
　மின்னுமலிடிபிடித்தது. It fell as a thunderbolt without flashing—spoken of false charges published on a sudden.
　மின்னிமின்னியிடிக்க, *inf.* To thunder with incessant lightning.
　மின்னியார்க்க, *inf.* To lighten and thunder. (*p.*)

மின்னல், *s.* Lightning, மின். (*c.*) 2. (*Beschi.*) A new and bright coin.
　மின்னல்மின்னுகிறது. It lightens.
　மின்னற்கொடி, *s.* A flash of lightning.

மின்னி — மின்னிப்பயறு, *s.* A leguminous plant, ஓர்பயறு.

## மீ

மீ, *s.* A syllabic letter compounded of ம் and ஈ.

மீ. [*as a prefix.*] Upon, above, on, over, up, மேல். 2. *s.* The top, the surface, மேற்புறம். 3. Height, elevation, eminence, loftiness, உயர்ச்சி. 4. Illustriousness, glory, renown, மகிமை. 5. The sky, the heaven, வானம். (*p.*)
　மீகண். Above or over the eye, கண்ணின்மேல். (*p.*)
　மீக்கூர்தல், *v. noun.* An increasing, பெருகல். (சது.)
　மீக்கூற, *inf.* [*v. noun* மீக்கூற்று.] To celebrate, புகழ. 2. To praise, மெய்ச்ச.
　மீக்கூறுவோர், *appel. n.* [*pl.*] Panegyrists, eulogists, புகழ்வோர்.
　மீக்கூற்று. Praise, புகழ். (சது.)
　மீக்கோள், *s.* Ascent; upholding; presumption, ஏறுதல். 2. An upper garment, மேற்போர்வை. (சது.)
　மீச்செலவு, *v. noun.* Forward behavior, presumption, கருவம். (நீதிநெறி.)
　மீத்தோல்-மீந்தோல், *s.* [*com.* பீத்தோல், பீத்தோல்.] The cuticle.

மீகாமன்—மீகான், *s.* [*also* நீகாமன்.] A pilot, steersman, helmsman, the captain of a vessel, மாலுமி. (*p.*)
　மீகாமனில்லாமரக்கலமோடாது. The ship sails not without a master. (*Avv.*)

மீக்குவம், *s.* A tree, மருதமரம், Terminalia. (சது.)

•மீசரம்-மீசுரம், *s.* [*Tel.*] That which is superior or preferable, மேலானது. 2. Plenty, as மிசு. 3. [*prov.*] Speed, விரைவு.
　நீஎனக்கென்னமீசரம். In what are you superior to me?
　இந்தத்தானியம்மீசரமாயிருக்கின்றது. The grain is of a superior quality.
　தானியமீசரமாய்க்கிடைக்கிறது. Corn is plenty.

மீசு, *s.* Abundance, plenty, copiousness, மிகுதி.

மீசுபொலி, s. [prov.] The corn first taken at the threshing floor for religious purposes.

மீசை, s. [in the south, வீசை, also Tel.] Mustachios; [ex மீ, over.]

மீசையைமுறுக்குதல், v. noun. Twisting the mustachios in anger, or defiance, before fighting.

கடுக்குமாசைமீசைக்குமாசை. Desire mustachios and desire gruel, i. e. seek health and wealth.

புரட்டிப்புரட்டியுதைத்தாலும் மீசையிலேமண்படவில்லையென்கிறான். Though he was rolled down and kicked, yet he says that his mustachios did not touch the ground.

மீட்க, inf. To redeem, &c. See மீள், v. a.

மீட்டு, கிறேன், மீட்டினேன், வேன், மீட்ட, v. n. To fillip, to snap a finger from the end of the thumb, விரலைநெரிக்க. (Tel. usage.) 2. To strike the strings of the lute, வீணைவாசிக்க. (c.) 3. To extend the string of a bow, நாணேற்றிப்பிசிக்க.

மீட்டிப்பார்க்க, inf. To try the strings of a lute.

மீட்டல், v. noun. Thrumming, வீணைவாசித்தல். (சது.) 2. See மீள், v. a.

மீட்பர், s. A saviour.--*For this and similar compounds, see* மீள், v. a.

மீதி, s. [contrac. of மிகுதி.] Remains; that which is left, மிகுந்தது. (c.)

மீதியைக்கொண்டுவா. Bring what remains.

மீது. [prep.] On, upon, மேல். 2. Above, over, அதிகம். 3. s. The top, the surface, மேற்புறம். (p.)

என்மீதிரங்கியருளும். Have mercy on me.

மீதூண்விரும்பேல். Be not gluttonous. (Avv.)

மீதுரை, s. Repetition, tautology, பலகால்விளம்பல்; [ex உரை.] (சது.)

மீதிலே—மீதே. On, above, as மீது.

மீதூரு—மீதூர், கிறேன், மீதூர்ந்தேன், மீதூருவேன், மீதூர, v. n. To be pressed, thronged, to be narrow, நெருங்க. (p.)

மீதூர்தல், v. noun. Being pressed, compressed, thronged. (சது.)

மீந்திருக்க, inf. [contrac. of மிகுந்திருக்க.] To be superfluous, to remain or be left, மிஞ்சியிருக்க.

நான்மாத்திரம்மீந்திருக்கிறேன். I only am left.

தின்றமீந்ததைநாய்க்குப்போடு. Throw to the dog what is left after eating.

*மீமாஞ்சை, s. One of the six religious systems. See சமயம். 2. A philosophical system including the பூர்வமீமாஞ்சை, and உத்தரமீமாஞ்சை. See சாஸ்திரம். W. p. 662. Meemamsa.

மீமிசை, prep. Above, over, மேல். (சது.) 2. s. Pleonasm or the use of redundant words, ஒருபொருட்பன்மொழி. (p.)

மீமிசைச்சொல், s. A figure in Rhetoric—redundance of words, as இடைநடு, the middle; நாகிளங்கமுகு, a young areca; புனிற்றிளங்கன்று, a young calf.

மீரு—மீர், v. To remain, as மீது. (R.)

மீருசாதகம், s. (Hind.) Equivocation.

மீளி, s. A king, அரசன். 2. A strong man, திண்ணியன். 3. A chief of a barren country, பாலைநிலத்தலைவன். 4. Great men, worthies, மேன்மக்கள். 5. Greatness, பெருமை. (சது.) 6. Strength, வலி. (p.)

மீளிமை, s. Valor, a heroic appearance; vaunting, வீரத்தன்மை.

மீளு—மீள், கிறேன், மீண்டேன், வேன், மீள, v. n. To turn, take a turn, திரும்ப. 2. To be cured, rescued, redeemed, liberated, இரட்சிக்கப்பட. (c.)

பாம்புகடித்தமீளுகிறது. The bite of the snake is cured.

வியாதிமீளாது. The disease is incurable.

மீளாநரகத்திற்காளாவாய். May you go to an interminable hell; [a curse.]

மீண்டுவர, inf. To return safely.

போனால்மீண்டுவரமாட்டாய். If you go (there) you will not return in safety.

மீள—மீளவும்—மீண்டும், adv. Again, furthermore, மறுபடியும்.

மீளாக்கதி—மீளாமோட்சம், s. Eternal bliss, as distinguished from மீளாநரகம்.

மீட்சி—மீளல், v. noun. A turn, திரும்புகை. (சது.)

நரகத்திலேமீட்சியில்லை. No change in hell.

மீள், மீட்கிறேன், மீட்டேன், மீட்பேன், மீட்க, v. a. To liberate, extricate, release, சிறைமீட்க. 2. To ransom, redeem, bring back, restore, rescue, இரட்சிக்க. 3. To chew the cud, இரைமீட்க. 4. To bring back, திருப்ப.

நான்ஈடுவைத்தநகையைமீட்டுக்கொண்டேன். I have redeemed the mortgaged jewels.

மீட்டும், [as மீண்டும்.] Again, furthermore.

மீட்டெடுக்க, inf. To redeem, to rescue, to save.

மீட்டல் — மீட்பு, v. noun. Releasing, redeeming, saving.

மீட்பர், s. Saviour, redeemer, liberator, restorer, இரட்சகர்.

மீள்விக்க, inf. To cause one to be redeemed, preserved, &c.

மீறு, கிறேன், மீறினேன், வேன், மீற, v. a. [sometimes வீறு.] To break a law; to violate or infringe a right, கடக்க. 2. To go beyond, exceed, அதிகரிக்க. (c.) 3. v. n. [southern usage.] To be over and above, to remain, மீந்திருக்க.

நீஎன்கட்டளைமீறிப்போனாய். You went against my order.

மீறினதுபத்துப்பணம். Ten fanams remain. (Beschi.)

அத்துமீறுதல், v. noun. Passing beyond bounds.

மீறித்திரிய — மீறிநடக்க, inf. To act disorderly.

மீறிப்போக, inf. To grow lofty as a tree. 2. [fig.] To become haughty.

ஆள்மீறிப்போய்விட்டான். He has grown stout.

*மீனம், s. A fish, மீன். 2. One of the signs of the Zodiac, Pisces, ஓரிராசி. W. p. 662. Meena. (p.)

மீனக்கொடியோன் — மீனகேதனன், s. Kama, மன்மதன். 2. An epithet of the Pandyan kings, from their having a fish-banner, பாண்டியன். (சது.)

மீனச்சனி, s. Saturn in the Pisces. See சனி.

மீனமாதம், s. The month of March, பங்குனி.

மீனராசி—மீனவிராசி, s. As மீனம், 1.

மீனாட்சி—மீனாக்ஷி, s. [lit. fish-eyed.] A daughter of Kuvêra, குபேரன்மகள். (Sa. Meenakshee.) 2. Name of the tutelary goddess at Madura, as அங்கயற்கண்ணி. 3. A Hindu proper name, பெயர்.

மீனாம்பூச்சி, s. [prov.] A glow-worm, a fire-fly, மின்மினிப்பூச்சி.

மீன், s. A star, உடு. 2. The fourteenth lunar mansion, சித்திரைநாள்; [ex மின், v.] (சது.)

மீன்முளைத்திருக்கிறது. Stars appear [in the sky]. Vulgar usage.

மதியைமீன்சூழ்ந்ததுபோல. As the stars surround the moon.

மீனிலா, s. Star-light. (R.)

மீன்சுவை, s. As மீன், 2. (சது.)

*மீன், s. [a contrac. of மீனம்.] A fish, மச்சம், commonly மீனு. [fig. சலபுட்பம், சலவாழைக்காய்.] 2. A sea-monster, a shark, சுறமீன். 3. A drum used in a village near the sea, or on a brackish soil, நெய்தற்பறை. (சது.)

மீனங்கம், s. Fish-bone, as மீன்முள்; [ex அங்கம்.]

மீனஞ்சு, s. [com. மீன்கொல்லிப்பூடு.] A plant that kills fish, Crotalaria paniculat; [ex நஞ்சு, poison.]

மீனம்பர், s. Ambergris, செம்மீன்வயிறம்; [ex அம்பர்.]

மீனவன், s. Pandya, as மீனக்கொடியோன். (சது.)

மீனாய், s. [com. நீர்நாய்.] Beaver. See நாய்.

மீனாலயம், s. [lit. abode of fishes.] The ocean, the sea, கடல்; [ex ஆலயம்.]

மீனேறு, s. A sea-monster, probably, the horned shark, மகரமீன். (சது.)

மீன்கண்டம்—மீன்துண்டம், s. A piece of a fish.

மீன்காரன், s. [fem. மீன்காரி.] One who sells fish. 2. A man of the fisher caste.

மீன்குஞ்சு, s. A very young fish, a minnow. See கீச்சுப்பழக்க.

மீன்குத்தி—மீன்கொத்தி, appel. n. [poet. மீனெறி.] Kingfisher.

மீன்குழம்பு, s. [sometimes மீனுணம்.] A fish-sauce.

மீன்கூடு, s. A fishing enclosure.

மீன்கொடியோன், s. Pandya, as மீனக்கொடியோன்.

மீன்கொல்லி—மீன்கொல்லிப்பூடு—மீன்கொல்லி, appel. n. As மீனஞ்சு.

மீன்சிதள், s. Fish-scales, as மீன்செதிள்.

மீன்சிறகு, s. Fish-fins.

மீன்சினை, s. Fish-spawn.

மீன்செதிள்—மீன்செதில்—மீன்செதின், மீன்செதும்பு, s. [sometimes மீன்பிராால், மீன்பிலால்.] Fish-scales.

மீன்படுதல், v. noun. [prov. மீன்பாடு.] Fishes being caught. See படு.

மீன்பறி, s. See பறி.

மீன்பிடிகாரர், appel. n. Fishers.

மீன்பிலி, s. A fish-shaped jewel. See கெண்டைப்பிலி.

மீன்புலால்—மீனாற்றம், s. Bad smell of fish.

மீன்முள்—மீனெலும்பு, s. Fish-bone.

மீன்வேட்டை, s. Fishing.

மீன்வேட்டையாடுகிறது. Fishing or angling.



**மு.** A syllabic letter, compounded of ம் and உ.

**மு,** *num. adj.* [*contrac. of* மூ *or* மூன்று.] Three, third—used in combination. Most of the compounds may be referred to திரி.

**முக்கடுகம்—முக்கடுகு,** *s.* Three spices, as திரிகடுகம்.

**முக்கணன்—முக்கண்ணன்,** *s.* [*lit. three-eyed one.*] An epithet of Siva, சிவன். 2. Vinayaga, விநாயகன். 3. Vîrabadra, வீரபத்திரன். (சது.)

**முக்கணி—முக்கண்ணி,** *s.* [*fem.*] An epithet of the sakti of Siva—as Kali, காளி, and Parvati, பார்வதி. (சது.) 2. A cocoa-nut, தேங்காய்.

**முக்கரணம்,** *s.* The three classes of faculties, as திரிவிதகரணம். See கரணம்.

**முக்கலம்,** *s.* Three *kalams*, or thirty-six markals.

**முக்கனி,** *s.* The three special fruits. See முப்பழம்.

**முக்காணி,** *s.* A fraction, the $\frac{3}{5}$ of a மாகாணி.

**முக்காதலர்,** *s.* [*pl.*] The triple friends, *usually* husband, a male friend, and a son; [*ex* காதலன்.] (சது.)

**முக்காதவழி,** *s.* See காதம்.

**முக்காலம்,** *s.* The three divisions of time. 2. The three tenses in grammar. These are இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம். See காலம்.

**முக்காலமறிந்தவன்,** *appel. n.* An epithet of the Deity, as knowing the past, present, and future, கடவுள்.

**முக்காலி,** *s.* A three-footed stool, a tripod, as distinguished from நாற்காலி.

**முக்காலும்,** *s.* Three times. See கால், and குளி, *v.*

**முக்கால்,** *s.* Three fourths, $\frac{3}{4}$. See under கால்.

**முக்கால்நோக்கு-முக்காணோக்கு,** *v. noun.* One of the four planetary aspects. See நோக்கு.

**முக்காழி,** *s.* See காழி.

**முக்குடுமி,** *s.* A trident, சூலம். (சது.) 2. A triple lock of hair. See சிகைப்பா, பக்கக்குடுமி.

**முக்குடை,** *s.* [*appel.* முக்குடைச்செல்வன்.] The three umbrellas peculiar to Argha, viz.; சந்திராவட்டம், சகலபாசனம், நித்தியவிநோதம்.

**முக்குணம்,** *s.* Three principles in nature, *Satva*, *Raja* and *Tama*. See குணம்.

**முக்குலம்,** *s.* The three races of kings: 1. Solar, or the race of the sun; 2. Lunar or the race of the moon; 3. Agni, the race of fire.

**முக்குலைச்சு,** *s.* [*prov. in cant numbers.*] Three quarters, முக்கால். 2. A technical word used by certain tribes.

**முக்குழிச்சட்டி,** *s.* A triple-holed-pan for baking cakes. (*Madura usage.*)

**முக்குளம்,** *s.* The name of a village 2. Three reservoirs reputed to unite the rivers Jumna, Sarasvati and Ganges. 3. The twentieth lunar mansion, பூராடம்.

**முக்குற்றம்,** *s.* The three kinds of guilt. See under குற்றம்.

**முக்குற்றங்கடிந்தோன்,** *appel. n.* God, Deity, கடவுள். 2. B'uddha, புத்தன். (சது.)

**முக்கூட்டு,** *s.* The second lunar mansion. 2. Oven, hearth. See அடுப்பு.

**முக்கூட்டெண்ணெய்,** *s.* A medicinal oil. See under கூட்டு, *v.*

**முக்கோணம்,** *s.* A triangle, as திரிகோணம். See கோணம்.

**முக்கோல்,** *s.* The three united staves, as திரிதண்டம். 2. (சது.) The twenty-second lunar mansion. See திருவோணம்

**முக்கோற்பகவர்,** *s.* [*pl.*] Those who carry three staves tied together. See திரிதண்டசன்னியாசி, under சன்னியாசம்.

**முச்சகம்,** *s.* Three worlds, as திரிலோகம்.

**முச்சங்கம்,** *s.* The three colleges of learning which existed formerly at Madura. See சங்கம்.

**முச்சதுரம்,** *s.* Three angled or three sided figure.

**முச்சத்தி,** *s.* Three Saktis. See சத்தி.

**முச்சந்தி,** *s.* Three periods of the day. See திரிசந்திகாலம், under காலம். 2. See சந்தி.

**முச்சிரம்,** *s.* Trident, சூலம். (*p.*)

**முச்சிரடி,** *s.* A metrical line of three feet, சிந்தடி.

**முச்சுடர்,** *s.* The three lights. See சுடர்.

**முச்சுழி,** *s.* The three curled letter ண.

**முச்செயல்,** *s.* Three kinds of divine actions, as முத்தொழில்.

**முச்சை,** *s.* [*prov.*] Three strings tied to a paper-kite, in a triangular form, to which the line is attached.

**முச்சொல்லலங்காரம்,** *s.* A rhetorical figure, a word or phrase capable of three meanings, as மாதங்கன், a possessor of an elephant; possessor of gold; an epithet of Siva as possessor of Parvati.

**முத்தண்டு,** *s.* Three staves. See திரிதண்டு.

**முத்தமிழ்,** *s.* Three different kinds of Tamil. See தமிழ்.

**முத்தமிழ்முனியோன்,** *appel. n.* Agastya, அகத்தியன். 2. Bhairava, வைரவன். (சது.)

**முத்தரம்,** *s.* Three kinds, or degrees. 2. Three heads—as in முத்தராத்தார், three persons.

**முத்தரையர்,** *s.* [*pl.*] Wealthy persons, செல்வர். (நாலடி.)

**முத்தலை,** *s.* The three points or heads of a lance, சூலம்.

**முத்தலைவேலோன்,** *appel. n.* Bhairava, வைரவன். (சது.)

**முத்தானம்,** *s.* The three ways of bestowing gifts. See தானம்.

**முத்தீ,** *s.* The three household fires. See தீ.

**முத்தொகைவினா,** *s.* [*in arithm.*] The rule of three, rule of proportion.

**முத்தொழில்,** *s.* The three kinds of divine operation. See பஞ்சகிருத்தியம், under கிருத்தியம்.

முத்தொழிற்பகவன். God—as creating, preserving and destroying.

**முத்தொழிலோர்,** *s.* [*pl.*] Three classes of people—agriculturists, traders and herdsmen, வைசியப்பொது. (சது.)

**முத்தொள்ளாயிரம்,** *s.* A kind of popular poetry embracing three sections of different metres, each containing nine-hundred stanzas, ஓர்காப்பியம்.

**முத்தோஷம்,** *s.* Three humors of the body. 2. Three defects in composition. See தோஷம்.

**முந்நாழி,** *s.* Three measures. See நாழி.

**முந்நீர்,** *s.* The sea as containing three different kinds of water—rain, river-water, and that of the abyss; and as having three different qualities—to produce, preserve, and destroy, கடல்.

**முந்நூல்,** *s.* The three kinds of sacred learning. See நூல். 2. A brahman's sacred thread, the *poita*, பூணூல். (*p.*)

**முந்நூறு,** *s.* Three-hundred.

**முப்பது,** *s.* Thirty; [*ex* பது=பஃது.]

**முப்பகை,** *s.* The three enemies. See பகை.

**முப்பலம் — முப்பலை,** *s.* The three medicinal fruits. See திரிபலை.

**முப்பழம்,** *s.* The three chief kinds of fruit, வாழை, plantain; வருக்கை, jack, and மா, mango.

முப்பழமும்சோறும்போடுகிறது. Serving up rice and the best fruits; i. e. treating hospitably. (*c.*)

**முப்பழச்சாறு,** *s.* The juice of the three kinds of fruit.

**முப்பாட்டன்,** *s.* [*fem.* முப்பாட்டி.] A grand-father's grand-father. (*c.*)

**முப்பால்,** *s.* The three genders, as திரிலிங்கம். 2. Three kinds of subjects, as அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால்.

**முப்பாவினம்,** *s.* The three classes of poems. See பாவினம், under இனம்.

**முப்பாழ்,** *s.* [*in Hindu Metaphysics.*] Three vacua in the human body, said to be in three different parts.

**முப்பான்,** *s.* Thirty; [*ex* பான்.] (*p.*)

**முப்பிணி,** *s.* The three kinds of temperament. See பிணி.

**முப்புடி,** *s.* The three qualities, as திரிபுடி.

**முப்புடைக்காய்,** *s.* Cocoa-nut, தேங்காய். (*p.*)

**முப்புரம்,** *s.* [*also* மூவெயில்.] The three cities. See திரிபுரம்.

**முப்புரி,** *s.* The three strands of a cord. 2. The three cities, as முப்புரம்.

முப்புரிக்கயிறு. A three stranded string, a three-fold cord. (*c.*)

முப்புரிநூல், s. A three-threaded-cord, brahmanical cord, பூணூல்.

முப்புரிநூலோர். Brahmans, those who wear the three-fold-cord, பார்ப்பார். (p.)

முப்புள்ளி, s. The letter ஃ, ஆய்தஎழுத்து. (சது.)

முப்பூரம், s. The three distinct lunar mansions, பூரட்டாதி, பூரம், and பூராடம். (p.)

முப்பேதம், s. The three differences. See பேதம்.

முப்பொருள், s. *Trimurti*, &c. See பொருள்.

முப்பொறி, s. The three organs of sense as instruments of worship. See பொறி.

மும்மடங்கு—மும்மடி, s. Three times over, three-fold. See மடங்கு. (c.)

மும்மடியாகுபெயர், s. A species of nouns of secondary signification, by three steps of application, as கார்அறுக்கப்பட்டது, the rainy season's harvest is gathered. In this கார், black—applied to clouds—is used for the rainy season; the crop gathered is of that season.

மும்மணிக்கோவை, s. A necklace of three strings of beads. 2. A poem of thirty stanzas, divided into three parts of ten stanzas, the verses of each ten, containing different stanzas, and in each ten, the classification is diverse from the rest. See பிரபந்தம்.

மும்மணிமாலை, s. A poem of thirty stanzas, of three different kinds of verse, வெண்பா, கலித்துறை, and அகவல், with the அந்தாதி termination.

மும்மண்டலம், s. The three parts in the human body. See மண்டலம்.

மும்மலம், s. The three evil passions. See மலம்.

மும்மாரி, s. Raining thrice. See திங்கள்.

மும்மீன், s. The fifth lunar mansion. See மிருகசீரிடம். (சது.)

மும்மூர்த்தி, s. The Hindu Triad, as திரிமூர்த்தி.

மும்மூன்று, s. Three times three. 2. Three by three, by threes, மூன்றுமூன்று.

மும்மை, s. Three different states of existence: 1. உம்மை, the former birth; 2. இம்மை, the present state, &c.; 3. அம்மை, or மறுமை, futurity; [ex மை.] (p.)

மும்மொழி, s. Three sorts of speech. See மொழி.

முக, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, v. a. To draw water, &c., as மொள்ள. 2. [for மோக்க.] To smell. 3. To measure grain or liquids with a measure of capacity.

முகத்தல், v. noun. Drawing water, &c., மொள்ளல்; or baling, சேர்க்கல்.

முகத்தலளவு, s. Measurement of capacity, மொண்டளக்குமளவு.

முகத்தலளவையாகுபெயர், s. Metonymy, by which a measure of capacity—as a gallon—is put for the thing measured. See ஆகுபெயர்.

ஆழவமுக்கிமுகப்பினும்,ஆழ்கடலில் நாழிமுகவாது நானாழி. Though you sink the நாழி measure low in the deep sea, you will draw only that measure of water, i. e. you will receive only what is ordained. (மூதுரை.)

முகவை, s. A ladle, அகப்பை.

முகடி, s. The elder-sister of Lakshmi, மூதேவி; (*lit.*) poverty, or misfortune. (சது.)

முகடு, s. [gen. முகட்டின்.] The top of a hill or mountain, மலையினுச்சி. (சது.) 2. (c.) The ridge of a house, வீட்டினுச்சி. 3. A long cross-beam of a house, விட்டம். 4. The zenith, உச்சி.

அண்டமுகடு, s. See அண்டம்.

முகடுகட்ட—முகடுதெற்ற—முகடுமூட, inf. [sometimes முகடுமுடிக்க.] To construct the ridge of an ola-roof, கூரைவீட்டின் முகடுசேர்க்க.

முகடுந்தல், v. noun. Overcoming, excelling, மேற்கொள்ளல். (இராம.)

முகடோடி, appel. n. [prov.] A long ridge-beam of a house, to which the rafters are fastened.

முகட்டுப்பூச்சி, s. A bug, மூட்டைப்பூச்சி.

முகட்டுவளை, s. [also மோட்டுவளை.] A beam as a cross-tie for rafters to keep them at a proper distance.

முகட்டோடு, s. A ridge-tile.

முகதா — முகதாவு — முகத்தாவு, [*Arab.*] In presence of, before one's face; in person, முகத்தின்முன்.

முகதாவிலேபேசிக்கொள். Speak in person.

முகதாவிலேநின்றான். He stood in the presence [of the king, &c.].

முகப்பு, s. The front, forepart, porch; frontispiece, ஆசாரம்; [ex முகம்.] (c.)

முகப்பிலே. In the front.

முகமன், s. Civility, politeness; officiousness, உபசாரவார்த்தை. (சது) 2. Flattery, முகஸ்துதி; [ex முகம்.]

முகமன்சொல்லுதல்—முகமன்பேசுதல், v. noun. Flattering.

முகமுகெனல், v. noun. The humming of bees, gurgling of water, &c., ஈரடுக்கொலிக்குறிப்பு. (சது.)

•முகம், s. The mouth, வாய். 2. Face, countenance, visage, mien, வதனம். 3. Entrance to a house, a harbor or river, வாயில். 4. Commencement, தொடக்கம். 5. Aspect, look, appearance, தோற்றம். 6. Prospect—as the front of an army, படைமுகம். 7. Head—as of a street, or point, முனை. 8. Design, object, purpose, நோக்கம். 9. Chief, முதன்மை. W. p. 663. MUK'HA. 10. Place, இடம். 11. State or condition, as காரியங்கள்லமுகத்தைக்கொள்ளுகிறது. (*Beschi.*)

அபிமுகம். Presence.

அதோமுகம். A down-cast look.

அறிமுகம். Acquaintance.

சிரிமுகம்—ஸ்ரீமுகம்—ஸ்ரீமுகம்—திருமுகம்.... A letter from a guru.

புதுமுகம். An unknown person; (*lit.*) a new face.

என்வீட்டுமுகமாய்த்திரும்பும். Please turn towards my house.

அவர்கள்ஒருமுகமாயிருக்கிறார்கள். They are all on one side.

காற்றுமுகத்திலேதூற்றிவிடு. Winnow [the corn] before the wind.

கிழக்குமுகமாயிரு. Sit towards the east.

முகத்துக்குமுகக்கண்ணாடி. Personal inquiry is as a perspective.

சுவாலாமுகம்-சுவாலாமுகி, s. A place, where subterraneous fires break forth, venerated by the Hindus.—*Note.* A celebrated *Jvalamukhi* exists in Lahore, to which pilgrimages are made. The soil abounds with carburetted hydrogen, which takes fire on coming in contact with the external air, especially if a light be applied. Vents are made; and a light being brought near the orifice, a flame is kindled; which is fed by the escaping stream of gas. The tongue of Parvati is said to have fallen at this place, அக்கினிக்கமுடம். W. p. 357. JVALAMUK'HEE.

முகம், உ. Two aspects of Brahma as given in the Agamas: 1. அந்தர்முகம், knowing from within; 2. பகிர்முகம், knowing from without.

முகம், யச. Fourteen expressions of the face shewing various emotions and passions. They are: 1. அஞ்சிதமுகம். 2. அதோமுகம். 3. ஆகம்பிதமுகம். 4. பிரகம்பிதமுகம். 5. ஆலோலிதமுகம். 6. உலோலிதமுகம். 7. உத்தவாகிதமுகம். 8. சமமுகம். 9. செவாக்தமுகம். 10. உத்தரமுகம். 11. விதமுகம். 12. பராவிருத்தமுகம். 13. பரிவாகிதமுகம். 14. நிரச்சினமுகம், which see in their places.

முகக்கடுப்பு, s. An austere or harsh countenance.

முகக்கட்டை, s. [com. மோவாய்க்கட்டை.] The chin.

முகக்களை, s. Shining of the countenance.

முகக்கிளர்ச்சி, v. noun. Cheerfulness of the countenance, as முகமலர்ச்சி.

முகக்குறி—முகக்குறிப்பு, s. [in medi.] A symptom expressed by the countenance. See குறி. 2. See குறிப்பு.

முகக்கோட்டம், v. noun. Expression of grief in the countenance; (*lit.*) crookedness of the face. See கோடு, v.

முகங்கழுவுதல். Washing the face before eating.

முகங்காட்டுதல். Shewing one's self for mere ceremony, as at a feast, &c., for a short time. 2. Shewing one's self in order to be known. 3. Shewing the face, as a person standing within doors and calling. 4. Shewing the face as a courtezan to allure paramours.

முகங்குப்புற — முகங்கவிழ, inf. To incline the face towards the ground—used adverbially. Compare குப்புற.

முகங்குருவுதல், v. noun. Being of a sad countenance.

முகங்கொடுத்தல். Granting a kind hearing. 2. Fondling or treating with great indulgence, பட்சங்காட்டல்.

பிள்ளைக்குமுகங்கொடாதே. Indulge not a child.

முகங்கொள்ளல். Shooting forth, as a boil, &c., பருமுகங்காணல்.

முகங்கோடுதல்—முகங்கோணுதல். Being down-cast as the countenance. See கோடு, v.

அவன்முகங்கோணிப்போனான். He went away dissatisfied.

முகச்சரக்கு, s. Commodities for show. [limited.]

முகச்சவரம் — முகச்சௌரம் — முகசேவை, s. Shaving the face.

முகச்சாடை, s. A winking or slight notice, a pretended half notice, கண்ணெடுகாணுமை. 2. As முகச்சாயல்.

முகச்சாயல், s. One's features or likeness. See சாயல்.

அவனுடையமுகச்சாயலாயிருக்கிறான். This one is like the other.

முகச்சாய்ப்பு, v. noun. A slight aversion, or half willingness, anger, விருப்பின்மை.

மொலு—மொல்லு, s. [indeclin.] An imitative sound. 2. A noise made with the hands, or feet preparatory to a fight, இரைச்சல்.

மொலுமொலெனல், v. noun. Indicating an unceasing, troublesome talking; also scratching, ஒலிக்குறிப்பு. 2. Indicating a noisy clamor.

மொலுமொலென்றுபிடித்துக்கொள்ளுகிறது....... Attacking one with great noise and bustle.

மொழி, s. A word, a saying, சொல். 2. Speech, declaration, expression, வாக்கியம். தேவமொழி. An oracle, சஜுக்கிரகம்.

மொழி, ௩. Three sorts of speech: 1. மெய்கூறல், speaking the truth; 2. புகழ்கூறல், panegyrising, or flattering; 3. பழிகூறல், calumniating or abusing.

மொழிதடுமாற, inf. To stammer in speaking, naturally or otherwise.

மொழிபிசக — மொழிபிறழ, inf. To fail in keeping one's word.

மொழிபெயர்ப்பு, v. noun. Translation, interpretation. See தாவியாப்பு.

மொழிமாற்று, v. noun. A transposition of words, as சுரையாழவம்மிமிதக்க, the gourd sinks, the grinding stone swims. [சன்னூல்.]

மொழிமாற்றுப்பொருள்கோள், s. One of the eight modes of constructing a verse. See பொருள்கோள்.

மொழிமுதலெழுத்து, s. Initial letters, proper to begin words. These are any of the twelve vowels, and க, ச, த, ப, ந, ஞ, ந, ம, ய, வ. as animated consonants.—Note. Usually these consonants (as initials) may be animated by any vowel as well as அ, but ஙு, must have also a vowel prefix.

மொழிமுதற்காரணம், s. See காரணம்.

மொழிமை, s. An old word, பழஞ்சொல். (சது.)

மொழியிடையெழுத்து, s. Letters proper to follow inanimate consonants in the middle of a word. See Nannûl.

மொழியிறுதி—மொழியீறு, s. [in gram.] The termination of a word.

மொழியீற்றெழுத்து, s. Final letters. These are, the twelve vowels, and ஞ், ண், ந், ம், ன், ய், ர், ல், வ், ழ், ள், or animated by உ short, as found in குற்றியலுகரமொழிகள்.

மொழியொலிக்குறிப்பு, s. Tone, emphasis, or inflexion.

மொழியோசை, s. Pronunciation, உச்சரிப்பு.

மொழி, கிறேன், ந்தேன், வேன், ய, v. a. To say. to speak, சொல்ல. (p.)

மொழிவதறமொழி. Say what thou sayest rightly.

மொழிவதுமறக்கினெழிவதருமம். If the words of the ancients be forgotten, the business will not succeed.

மொழிதல், v. noun. Speaking.

மொழுக்கன், s. [for மழுங்கன்.] A jewel without engraving, a plain jewel.

மொழுக்கன்மோதிரம். A plain ring.

மொழுக்கதோலை. A plain ear-ring for a female.

மொழுப்பு, v. [for மழுப்பு.] To protract a business, delay a law-suit, or put off payment on frivolous pretences.

மொள்ளு, கிறேன், மொண்டேன், வேன், மொள்ள, v. a. To draw water, தண்ணீர் மொள்ள.

மொண்டாலுகிறவீட்டிற் கொண்டாண்டாகிறையும். Does a house with drawn-water [from a well] need water bought?

மொறுமொறு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To evince anger, to murmur, as முறமுறக்க.

மொறுமொறெனல், v. noun. Crumpling—as overdone cakes, dried leaves or paper.

## மோ

மோ. A syllabic letter compounded of ம் and ஓ.

மோ. An expletive [affixed to the second person singular of verbs.] as கேண்மோ, hear.

•மோகம், s. Fierce, ungovernable lust, lasciviousness, காமம். 2. Desire, affection, ஆசை. 3. Confusion of mind, bewilderment, fainting, உன்மத்தம். See under பகை, உட்பகை க., also மாயை ௫. and பஞ்சபாதுகைகள். W. p. 676. MOHA. 4. [in comb.] Barrenness. See அமோகம்.

மோகம்முப்பதுநாள்ஆசைஅறுபதுநாள். Venereal appetite continues thirty-days, desire for sixty; [after marriage.] Prov.

அவனுக்கதின்பேரிலேமோகம். He lusts after it.

மோகஇச்சை, s. Libidinous desire.

மோககவனம், s. Passionate desire, libidinous inclination; [ex கவனம்.]

மோகங்கொள்ள, inf. To grow libidinous.

மோகந்தீர, inf. To gratify lust.

மோகர், s. [pl.] Painters as fascinating people by their work, சித்திரக்காரர்.

மோகலீலை, s. Lascivious behaviour. See லீலை.

மோகவியாபாரி, s. A lascivious person, காமவிகாரி.

மோகன், s. Kama, the Hindu Cupid, மன்மதன். (சது.)

மோகாந்தகாரம், s. Mental darkness caused by sensuality.

•மோகரம், s. Confusion of mind, fascination; lasciviousness, மயக்கம். 2. Vehemence, ardor, fervency of mind, மோகவுக்கிரம்.

மோகரக்கணை—மோகரபாணம், s. A fiery dart.

மோகரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To be confused in mind, மயங்க. 2. To be inflamed with anger, கோபிக்க.

•மோகனம், s. Libidinous fascination by magic. See கருமம், க்லைஞானம். 2. Confusion of mind, mental perturbation, giddiness, மயக்கம். W. p. 676. MOHANA.

மோகனக்கல், s. A flat stone as a lintel over the gate-way of a Hindu temple, உத்திரக்கல்.

சோற்றுக்கல்லெடுக்கமாட்டாதவன்மோகனக்கல்லைத்தூக்குவானு. Can one, not able to lift the stones in his rice, carry away the stone-lintel of a temple gate-way ?

மோகனசாஸ்திரம்—மோகனநூல், s. See காமநூல்.

மோகனநாட்டியம், s. Lascivious dancing.

மோகனமாலை, s. The name of a hanging neck-ornament, ஓர்கழுத்தணி.

மோகனவித்தை, s. The art of fascinating by magic.

மோகனாங்கனை—மோகனாங்கினி, s. A fascinating female, as மோகினி; [ex அங்கனை.]

மோகனாஸ்திரம், s. An enchanted missile-weapon; [ex அஸ்திரம்.]

மோகனீயம், s. Subjection to the passions. See அஷ்டகுற்றம், under குற்றம்.

மோகி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To lust, to be lascivious, மோகங்கொள்ள; [ex மோகம்.]

மோகிக்கப்பண்ண—மோகிப்பிக்க, inf. To excite to voluptuous desires.

மோகிதன், s. An amorous man, காமங்கொள்வோன்.

மோகிப்பு, v. noun. Fascination, lusting. (உப. 405.)

•மோகினி, s. An attractive woman, மயக்குமுருவுடையாள். 2. A female incarnation of Vishnu, as Mohini. See திருமாலவதாரம்.

மோகினிப்பணம், s. Money given at a temple-procession when the god appears as a female, உற்சவவரிப்பணம். [limited.]

மோகினிரூபம் — மோகினிவடிவம், s. The form of a மோகினி.

மோகூப், s. [Arab.] Stopping; suspending, தள்ளுகை.

அவனைமோகூப்செய்திருக்கிறது. He is suspended.

மோகொரம், s. [com. மொகரம்பண்டிகை.] A Mohammedan festival in commemoration of the martyrdom of Hussan and Hosein [the grandsons of Mohammed,] who ruled at Medina; the former was imprisoned, and the latter slain in battle with Ayzed, king of Syria.

•மோக்கம்—மோக்ஷம்—மோட்சம், s. Heaven, eternal bliss, endless felicity, everlasting happiness, பரகதி. [adopted use.] 2. Liberation, from the body, release from transmigration, entire liberation, absorption, விடுகை. W. p. 675. MOKSHA.

**மோக்களா**, *s.* [*Hind.*] Joviality, conviviality, ஆரவாரம்.

அவன்வீட்டிலேவெகுமோக்களாவாய்க்கிடக்கிறது... In his house are stir, and bustle.

**மோ, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க**, *v. a.* [*com* முகரு, மோரு.] To smell a thing, மணக்க. 2. [*for* முக.] To draw water, மொள்ள.

இவன்அவளைமோந்துகொண்டேவிருக்கிறான். He is scenting [following] her.

நான்மோவேன். I will not smell.

குடமோக்கவில்லை. The pitcher does not take water.

மோந்துகொடுக்க, *inf.* To smell and give to another.

மோப்ப, *inf.* [*poet. form of* மோக்க.] To smell. See under குழை, *v.*

மோப்பு, *v. noun.* The sense of smell. See மோப்பம்.

**மோசம்**, *s.* Treachery, deceit, cunning, வஞ்சனை. (சது.) 2. Danger, risk, detriment, accident, அபாயம்.

கனமோசம். Great danger.

ஜீவமோசம். Danger of life.

எம்பிமோசம்போகிறது. Being disappointed.

மோசக்காரன், *s.* A deceiver.

மோசத்துக்குட்பட, *inf.* To be exposed to danger.

மோசநாசம், *s.* Treachery, damage, villany, கிருபுரட்டு.

மோசநாசங்கம்பளிவேஷம். Treachery will bring mean attire.

மோசப்பட — மோசம்போக, *inf.* To go wrong, to fall into danger; to be mistaken, to be deceived.

அவனெங்கேபோமோசம்போய்விட்டான். He is somewhere lost, [*through some woman.*]

மோசம்பண்ண — மோசம்போக்க, *inf.* To deceive.

**மோசனம்**, *s.* A species of paddy, ஓர் வகைநெல். (சது.)

•**மோசனம்**, *s.* Liberation, deliverance, the end of an eclipse, கிரகணம்விடுகை. 2. Expiation, abolition, விடுகை. W. p. 657. MOCHANA.

சாபமோசனம். Abolition of a curse.

பாவமோசனம்—பாபவிமோசனம். Expiation of sin.

**மோசிகை**, *s.* A tuft of hair on the crown of the head, உச்சிமுடி. (உப. 157.)

**மோசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க**, *v. n.* [*prov.*] To err, to go into danger.

**மோசுப்பா**, *s.* [*Hind.*] Responsibility, security, பொறுப்பு.

**மோசூல்**, *s.* [*Arab.*] A guard, காவல்.

**மோடம்**, *s.* (*Tel.*) Cloudiness, மப்புமந்தாரம். 2. Stupidity. See மூடம்.

மோடன், *s.* An ignorant man, as மூடன்.

அவன்மோடனாயிருக்கிறான். He is a blockhead.

மோடத்தனம், *s.* As மோட்டுத்தனம்.

**மோடணம்**, *s.* [*Tel.*] Stupidity, as மோடு. 2. As மோடி, 3.

என்னைநீமோடணம்பண்ணவாமென்றுபார்க்கிறாயோ. Do you think to fool me?

**மோடாமோடி**, *s.* Haughtiness, ostentation, pomposity, பெருமோடி. (*Colloq.*)

மோடாமோடியாய்ச்செலவுசெய்கிறது.......Living extravagantly.

**மோடி**, *s.* An exhibition, a show, வேடிக்கை. 2. Haughtiness, austerity, மேட்டிமை. [*Tel. usage.*] 3. A kind of craft or enchantment. See மசடி. (*c.*) 4. A love-quarrel, பிணக்கு. 5. A forest-goddess. See காடுகாள்.—For some compounds, see மசடி.

இராசமோடி. Royal grandeur.

இராணுவமோடி. The array of an army.

சேவகமோடி. Manners, habit, or bravery of a soldier.

அவன்மோடியாய்த்திரிகிறான்.........He is high-minded, or he looks moody.

எனிக்குமோடிபண்ணுகிறாய். Why do you make such a show?

மோடியாய்வாங்குகிறது. Buying by whole sale.

மோடிக்காரன், *s.* An unfriendly, frowning man.

மோடிப்புடவை, *s.* Cloth all white, without variety of colors. (*R.*)

**மோடு**, *s.* Height, உயர்ச்சி. 2. A hill, an eminence, மேடு. 3. The top of a height, a hill, house, &c., as முகடு. 3. Greatness, பெருமை. 5. Belly, stomach, வயிறு. 6. Stupidity, ignorance, dullness of intellect, மடமை.—For the compounds, see முகடு, மேடு.

மோட்டுத்தனம், *s.* Stupidity, perverseness.

திருடன்மோட்டைப்பிரிக்கிறான். The thief broke through the top of the house.

•**மோட்சம்**, *s.* End; liberation. See மோக்கம்.

மோட்சகாலம்—மோட்சநாடி, *s.* Time when an eclipse ends, கிரகணம்விடுங்காலம்.

மோட்சசத்துரு, *s.* Obstacles or foes in the way to heaven, as given in the Agamas.

மோட்சசத்துரு, மிக. The thirteen hinderances to bliss. They are: 1. இராகம், passion; 2. த்வேஷம், hatred; 3. காமம், lust, sexual desire; 4. குரோதம், malice; 5. உலோபம், avarice; 6. மோகம், licentiousness; 7. மதம், presumption; 8. மாற்சரியம், envy; 9. சகிமை, impatience; 10. அசூயை, calumny; 11. டம்பம், pomposity; 12. தற்பம், self-importance; 13. அகங்காரம், pride, individuality.

மோட்சசாம்பிராச்சியம், *s.* As மோட்சானந்தம். (*Beschi.*)

மோட்சஞ்சேர — மோட்சமடைய, *inf.* To go to heaven, to gain heaven.

மோட்சதீபம், *s.* Lights with attendant ceremonies for the dead, among the Lingavites, லிங்கதாரிகளுக்குள்வழங்குந்தீபம்.

மோட்சமண்டலம்—மோட்சலோகம், *s.* [*Chris. usage.*] The heavens.

மோட்சமித்துரு, *s.* Aids to heaven. They are, சிரத்தை, devotion; 2. பத்தி, piety.

மோட்சவாசம், *s.* Dwelling in heaven.

மோட்சவாசிகள், *s.* Beatified souls.

மோட்சவிளக்கு, *s.* [*R. C. usage.*] Lamps lighted for the dead; (*lit.*) *the light of glorification.*

மோட்சவிளக்குக்காட்டுதல், *v. noun.* Setting a light for eight days, when a வீரசைவன், or a Pandaram (who are not burned), is buried in a sitting posture. 2. Carrying a lamp or flambeau before a corpse, when taken out to be burnt.

மோட்சானந்தம், *s.* Heavenly felicity.

மோட்சோபாயம், *s.* Means for obtaining bliss; [*ex* உபாயம்.]

மத்தியமோட்சம், *s.* Mean end of an eclipse.

சுத்தமோட்சம், *s.* True end of an eclipse.

•**மோதகம்**, *s.* A cake of a conical form, made of rice-flour filled with pulse, and boiled or steamed, அப்பவருக்கம். 2. A kind of cake called, தோசை. 3. Delight, agreeableness, சந்தோஷம். W. p. 676. MODAKA.

மோதகப்பிரியன், *appel. n.* Ganésa or the belly-god, as fond of this cake, விநாயகன்.

மோதகமரம், *s.* [*com.* குதிரைப்பிடுக்கன்.] A tree, Sterculia.

•**மோதம்**, *s.* Smell, scent, strong perfume, வாசனை. 2. Joy, rejoicing, gladness, சந்தோஷம். W. p. 675. MODA. 3. Intoxication, களிப்பு. 4. Bishop's weed, ஓமம்.

**மோதர்பா**, *s.* [*Arab. Mohtarpha, improp.* மோதரபா.] Taxes levied on the manufacturing and trading community, தொழில்வரி.

**மோதிரம்**, *s.* A ring for the finger, விரலாழி.

மோதிரக்கன்னி, *s.* A shrub, Hugonia mystax, ஓர்செடி.

மோதிரமொளித்துவிளையாட, *inf.* To play by hiding a ring.

மோதிரம்போட, *inf.* To fasten a ring.

மோதிரவிரல், *s.* The ring-finger.

மோதிரவிளையாட்டு, *v. noun.* A marriage-ceremony in which the bride and bride-groom are required to pick out a ring from a pot of water.

உருட்டுமோதிரம், *s.* A plain gold-ring.

கணையாழிமோதிரம், *s.* A seal-ring.

பட்டாணிமோதிரம், *s.* Three rings, each one having, severally, an emerald, a ruby, and a diamond. (*R.*)

**மோது, கிறேன், மோதினேன், வேன், மோத**, *v. n. and v. a.* To beat against with force, to strike, to smite, அறைய. 2. To cover with clouds, or as an eagle a dead body, அப்ப.

காற்றுமோதிமோதியடிக்கிறது. The wind blows violently.

அலைமோதுதல், *a. noun.* Beating as waves against the shore. 2. [*fig.*] Being unsettled; wavering.

அலைமோதும்போதேதலைமுழுகுகிறது. Bathing in the sea among beating waves; *performing our duties in the midst of impediments.*

மோதிக்கொள்ளுதல், *v. noun.* [*freq. and reflex.*] Striking against, striking one's self against.

சுவர்க்குமண்மோத, *inf.* To put earth to a mud-wall in making repairs. (*R.*)

மோதல், *v. noun.* Beating, dashing against.

**மோத்தை**, *s.* The ram of a long legged species of sheep, வெள்ளாட்டுக்கடா. (சது.)

கருப்பஞ்சாறுமோத்தைபோமாட்டெம். Can a ram discern the juice of sugar-cane? (*p.*)

**மோப்பம்**, *s.* [*sometimes* மோப்பு.] Smelling, வாசனையறிகை; [*ex* மோ, *v.*]

மோப்பம்பிடித்தல், *v. noun.* Smelling, detecting a smell, as hounds on a track.

மோப்பி, s. [Tel. మోప్పి.] A widow, *disrespectfully*, கைம்பெண்—as முண்டைமோப்பி.

மோயன்—மோயின், s. [*Arab.*] Establishment.

மோயன்ஜாப்தா, s. A roll of the authorised establishment.

மோரா—மோரு, s. [*Hind.*] A gold-coin, gold-mohur of 15 Rupees; also மொகர். 2. A stool for the feet, பாதப்படி.

மோரீசு, s. The island of Mauritius.

மோர், s. Butter-milk, மச்சிகை. 2. [*improp. for* மொகர்.] A seal.

மோர்பெருக்கிச்சாப்பிடவேணும். Butter-milk must be taken diluted with water.

மோர்க்குழம்பு, s. See குழம்பு.

நீர்மோர், s. Thin watery butter-milk. See நீர்.

மோர்—மோரு, v. [*com. for* மோ.] To smell.

மோவாய், s. The beard, தாடி. (சது.)

மோவாய்க்கட்டை, s. The chin. See கட்டை.

மோவாய்க்கட்டையெலும்பு. The jaw-bone.

மோழல், s. A swine, பன்றி. (சது.)

மோழை, s. A stump, a block, மொட்டை. [See மூ, v.] 2. Stupidity, மூடம். 3. A subterranean water-course, which, if it enters wells, destroys them, கீழூற்று. 4. A beast without horns, கொம்பில்லாதவிலங்கு. 5. (சது.) Rice-gruel, கஞ்சி.

ஏழைமைக்கண்டால் மோழையும்பாயும். Even a beast without horns will butt at a poor person. *Prov.*

கற்றறிமோழை, s. [*vul.* கத்தரிமோழை.] One who appears ignorant though learned, as கற்றறிமூடன்.

மோழைபுறப்படல், v. noun. Gushing out as water from a subterranean stream.

மோழைப்பசு, s. A cow without horns.

மோழைமாடு, s. Any bull without horns; *commonly*, the Genus bos.

மோழையாக்க, *inf.* To stupify.

மோறை, s. [*Tel.* మోర.] The chin.

நான்உன்மோறையைப்பேர்ப்பேன். I will break your chin.

*மோனம், s. Silence, muteness. See மௌனம்.

மோனர், s. [*pl.*] Sages, silent hermits, மௌனியர். (சது.)

மோனை, s. The beginning, ஆதி.—as முதனை. 2. [*in poet.*] A resemblance between the first letter of one சீர் or foot, and the first letter of one or more of the succeeding feet, in the same line. See தொடை.—*Note.* அ corresponds with ஆ, ஐ, ஔ; இ with ஈ, எ, ஏ; உ with ஊ, ஒ, ஓ; ம with வ; ஞ with ந, &c.

## மௌ

மௌ. A syllabic letter composed of ம் and ஔ.

மௌஜே, s. [*Arab.*] A town, a village.

மௌஜேவாரி—மௌஜேவார், s. Detailed account of towns.

*மௌஞ்சி, s. The girdle, or waist-cord of a brahman, made of three strings of munja grass, Saccharum spontaneum, நாணற்புல்லரைஞாண். W. p. 676. MOUNJEE.

*மௌட்டியம், s. Fanaticism; ignorance, folly, destitution of spiritual wisdom, மூடத்தனம். W. p. 676. MOUD'HYA.

மௌண்டூகம், s. A Upanishad. See உபநிடதம்.

*மௌத்திகம், s. A pearl, as முத்து. [*Sa. Mouktika.*]

*மௌர்வி, s. A bow-string, வின்னாண். W. p. 678 MOURVVEE.

*மௌலி, s. A lock of hair on the head of men, as குடுமி. 2. A tuft of hair braided round the head, as மயிர்முடி. 3. A crown; a diadem, முடி. 4. The head, தலை. W. p. 676. MOULI. 5. (சது.) Palm-tree-sap. toddy, கள்.

மௌல்வி, s. [*Arab. com.* மோல்வி.] A learned Mohammedan teacher, *Moulvi.*

மௌவல், s. The wild Jasmine, வனமல்லிகை. (சது.)

*மௌனம், s. [*also* மோனம்.] Silence, taciturnity, muteness, பேசாமை. [*Sa. Mouna.*] —*For examples, see* மவுனம்.

*மௌனியர், s. [*sing.* மௌனி.] Hermits, silent devotees, மோனர். [*Sa. Mounee.*]

## ய்

ய். The eleventh consonant and first medial, இடையினம்.

ய. A syllabic letter compounded of ய் and அ. It is a numeral, probably a corruption of ௰ the initial of Dasan=ten; a numeral before it is in the place of tens—thus ௩௰, is thirty.—Derivatives from Sa. roots generally have இ prefixed, or ய, changed to எ; as a middle letter for the Sa. ஜ.

யகரவுடம்படுமெய், s. [*in gram.*] The consonant ய் as a connecting letter.

*யக்கர், s. A class of demigods, as இயக்கர். W. p. 677. YAKSHA.

*யக்கியம், s. A sacrifice, யாகம். See எக்கியம்.

*யசசு, s. Glory, fame, praise, புகழ். W. p. 683. YASAS.

*யசமானன், s. Offerer of a sacrifice. 2. A master. See எசமானன், இயமானன்.

*யசனம், s. A sacrifice, யாகம். (சது.) —In *Wils.* offering sacrifices.

*யசுரு—யசுசு, s. The second Veda, Yajur, யசுர் having வேதம், always subjoined. See இயசுர்.

*யட்சிணி, s. A demoness. See எட்சிணி.

*யட்டி, s. A staff, a stick, ஊன்றுகோல். 2. A garland of pearls, முத்தத்தாழ்வடம். W. p. 683. YASHTI.

*யதா, [*Sans. prefix, adj. or adv. com.* எதா.] As, according to; proper, fit, right. W. p. 679. YATHA.

யதாஸ்து. Be it so.

யதாஸ்தானம், s. The proper place.

யதாப்பிரகாரம், s. In like manner.

யதார்த்தம், s. Truth, correctness. See எதார்த்தம்.

*யதி, s. A pause in music. See தாளப்பிரமாணம். 2. A sage, an anchoret, முனி. W. p. 679. YATI. 3. Alliteration, similarity of sound, as மோனை.

*யது, s. The name of a king, son of the fifth of the lunar line, and head of the Yadâva race, ஓரரசன். W. p. 680. YADU.

*யதேஷ்டம், s. [*com.* எதேஷ்டம்.] As much as one wishes, satisfaction. W. p. 680. YATHESHD'A. 2. Profuseness, மிகுதி.

அதுயதேஷ்டமாய்க்கிடைக்கிறது. The article is often exposed for sale.

*யத்தனம்-யத்தினம், s. Preparation, &c. See இயத்தினம், எத்தனம்.

*யந்திரம், s. Machine, engine. See இயந்திரம் or எந்திரம்.

யந்திரசாஸ்திரம், s. Mechanics.

யந்திரஸ்தாபனம், s. Making figures upon a flat piece of metal to be used in *puja*, பூசிக்குஞ்சக்கரம்.

யந்திரவூர்தி, s. A conveyance artificially conducted.

*யமகண்டம், s. [*also* எமகண்டம்.] A composition of the poet காளமேகம், each stanza containing a description of two different things, ஓர்செய்யுள்.

*யமகம், s. A species of alliteration, the repetition of words or syllables of like sound but varying in sense, in the different parts of a stanza, as at the beginning, middle or end of each hemistich. Ten varieties are enumerated. W. p. 681. YAMAKA. One is here given.—

வடமலையப்பனகஞ்சேர்ந்தவனிடைமங்கைகொங்கை
வடமலையப்பனரும் போகந்துய்த்தவன்மாயன் கண்ணன்
வடமலையப்பனருள்போற்றிவைகர்மயக்குசா
வடமலையப்பனிருகாமகாவிள்மலக்குவமே—thus paraphrased, ஆலிலையிலும் திருப்பாற்கடலிலும்சேஷ

பனத்திலுஞ்சேர்ந்தவன்பின்னைப்பிராட்டியின்கொங்கையில் தாழ் வடம்மலையப்பன்னரும்போகந் துய்த்தவன்மாயன் கண்ணனுகியவடமலையப்பனுடையஅருளைப்பிரார்த்தித்து ஐம்புலன்களுமடக்குகின்றகாரவடம்அலையப்பன்னிரண்டொமங்களையுங்காவிளுல்துதிசெய்வோமாக.

•யமதக்கினி, s. A celebrated Rishi. See சமதக்கினி. W. p. 681. YAMADAGNI.

•யமம், s. A work on law. See தருமநூல். 2. One of the postures of a yogi. See இயமம்.

•யமளம், s. A couple, a brace, a pair, இரட்டை. W. p. 681. YAMALA.

•யமன், s. Yama, the god of death. See இயமன் or எமன்.

யமபகினி, s. The river Jumna as the sister of Yama, யமுனநதி.

யமரதம், s. Male buffalo, as the conveyance of Yama, எருமைக்கடா.

•யமி, s. A sage; one self-restrained, முனிவன். W. p. 681. YAMIN.

•யமுனை, s. The river Jumna, rising near the Himalaya and entering the Ganges at Allahabad, காளிந்திநதி. W. p. 681. YAMUNA.

•யயாதி, s. The fifth of the lunar race, ஓரரசன். W. p. 681. YAYATI.

•யவட்சாரம், s. Nitre, nitrate of potassa, salt-petre. See சவட்சாரம்.—Note. According to some commentators it is said to be prepared from burnt barley.

•யவம், s. Barley, வாற்கோதுமை. W. p. 682. YAVA.

•யவனம், s. A Mohammedan country, perhaps Bactria, or possibly Affghanistan. By late Hindu writers it is applied to Arabia. See தேசம். W. p. 682. YAVANA.

யவனர், s. [pl.] Moormen, artificers, sculptors. See இயவனர்.—According to Wilson it is applied to both the Mohammedan and European invaders of India, and often used for any barbarous race.

•யவ்வனம், s. [also யௌவனம்.] Adolescence. See சவ்வனம்.

## யா

யா. A compound letter of ய் and ஆ.

யா, s. An interrogative letter as in யாவன், what man? 2. An interrogative in the neuter plural, அஃறிணைப்பன்மைவினு. 3. Doubt, suspicion, discrepancy, சந்தேகம். 4. An expletive, அசைச்சொல், as யாபன்னிருவ ரகத்தியனுக்குமாணுக்கர், Agastya had twelve pupils. 5. A tree, மரம்.

•யாகம், s. A sacrifice, an oblation, வேள்வி. W. p. 683. YAGA.

யாகம், ரு. Five oblations. See பஞ்சமகாயக்கியம்.

யாகம், உக. Twenty-one sacrifices: 1. அக்கினிஷ்டோமம்; 2. அத்தியக்கினிஷ்டோமம்; 3. உத்தியம்; 4. சோடசி; 5. வாசபேயம்; 6. அதிராத்திரம்; 7. அப்தோரியாமம்; 8. அக்கினிபாதேயம்; 9. அக்கினிகோத்திரம்; 10. தரிசபூர்ணமாசம்; 11. சாதுர்மாசியம்; 12. நிருடபசுபந்தம்; 13. ஆக்கிரானம்; 14. சௌத்திராமணி; 15. அட்டகை; 16. பார்வணம்; 17. சிராத்தம்; 18. சிராவணி; 19. ஆக்கிரகாயணி; 20. சைத்திரி; 21. ஆசவயுசி.

யாகசமித்து, s. Wood and other combustibles for a sacrifice, as சமித்து.

யாகசாலை, s. A sacrificial hall.

யாகசேனன், s. Panchala the father of Drobad'hi, பாஞ்சாலன்.

யாகஞ்செய்ய, inf. To make an oblation.

யாகத்திரவியம், s. The ingredients burnt with a sacrifice, such as ghee, milk, cow's urine, cow-dung, mango-leaves, sandal-wood, &c.

யாகஸ்தம்பம், s. [also யூபஸ்தம்பம்.] A post to which a goat, brought for sacrifice, is tied.

யாகபதி, s. One of the fifteen incarnations of Vishnu. See திருமாலவதாரம்.

யாகபோசனர், s. [pl.] Celestials, வானோர். (சது.)

யா, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To bind, கட்ட. (சது.) 2. To shut the mouths of others by strong arguments.

யாத்தல், v. noun. Binding.

•யாக்கியவற்கியம், s. A Upanishad. See உபநிடதம். 2. As யாஞ்ஞவற்கியம்.

யாக்கை, s. The body, as consisting of fibres and ligaments, as ஆக்கை. 2. Any thing bound or tied, a frame, a band, a tie, a system, கட்டு; [ex யா, v.] (p.)

யாக்கைக்குறுகுற்றம் – யாக்கைக்குறுபதினெண்குற்றம், s. The eighteen properties of the body: 1. பசி, hunger; 2. நீர்வேட்டல், thirst; 3. பயம், fear; 4. வெகுளி, anger; 5. உவகை, joy; 6. வேண்டல், desire; 7. நினைப்பு, thought; 8. உறக்கம், sleep; 9. நரை, hoariness; 10. நோய், pain; 11. மரணம், death; 12. பிறப்பு, birth; 13. மதம், passion; 14. இன்பம், pleasure; 15. அதிசயம், admiration; 16. வியர்த்தல், sweating; 17. கேதம், affliction; 18. கையறவு, incapacity for work.

யாங்கணம்-யாங்கண், [interrogative.] At what place? as யாங்ஙனம். (p.)

யாங்கு, [interrog.] Where? எங்கு.

யாங்ஙனம், [interrog.] Where; what place, as எங்ஙனம். 2. How, in what manner, of what nature? எப்படி. (p.)

•யாசகம், s. Begging; mendicity, இரப்பு. W. p. 683. YACHAKA.

யாசகம்பண்ண, inf. To practise begging, to seek alms.

யாசகர், s. [sing. யாசகன்.] Beggars, mendicants, இரப்போர். (சது.)

•யாசனம், s. The direction of a sacrifice, யாகஞ்செய்விக்கை. W. p. 683. YAJANA.

யாசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To beg, to ask alms, to solicit, இரக்க; [ex Sa. Yacha.] (சது.)

•யாஞ்ஞவற்கியம், s. A work on Hindu law called after its author, Yagnavalkya. See தருமநூல்.

யாடு, s. A goat, as ஆடு. (p.)

யாணர், s. Beauty, அழகு. 2. Carpenters, stone-cutters; architects, தச்சர். 3. A good, நன்மை. 4. Novelty, புதுமை. 5. Fertility, fruitfulness, prosperity, வளமை.

யாண்டு, s. Time, a year, காலம். 2. [interrog.] Where, in what place? எங்கு. (சது.) 3. When? எப்பொழுது. (நீதிநெறி.)

யாண்டும். Always. 2. Under all circumstances. 3. In all places. (p.)

யாண்டை, [interrog.] What place?—as யாங்கண். (சது.)

•யாதம், s. An elephant-goad, &c. See இயாதம். (p.)

•யாதனம், s. A raft, தெப்பம். 2. A boat, a ship, மரக்கலம். (சது.)

•யாதனை, s. [com. வாதனை.] Pain, anguish, agony, torment, துன்பம். 2. Punishment inflicted by Yama, or his ministers, இயமவாதனை. W. p. 684. YATANA. 3. The never ceasing pains of hell, நரகயாதனை.

யாதனுசரீரம். A body capable of unending suffering in hell; see சரீத்திரயம்.

யாதாஸ்து—யாதஸ்து, s. [Arab.] A written memorandum, ஞாபகப்பத்திரம்.

யாதி, s. [Hind.] Memory, ஞாபகம். 2. Meditation, thought, சிந்தனை.

யாது, [inter. pron.] What, which?—an expression of doubt, commonly ஏது. 2. s. Palm-tree-sap, fermented, கள். (சது.) 3. [com. for யாதி.] Memory.

எனக்குயாதில்லை. I do not remember.

யாதாமொருவன் — யாதொருவன். Any body, one or the other.

யாதிற்குங்கடை. The last of all. (p.)

யாதெனில். If it be asked what; that is to say.

யாதொருபொருள் — யாதாகிலுமொன்று — யாதொன்று. Any thing.

யாதோ. There is doubt.

•யாது—யாதுதானர், s. A kind of Rakshasa; in Wils, a goblin or a demon. W. p. 684. YATU, YATUD'HANA.

•யாத்திரை, s. Pilgrimage to sacred places, தேவஸ்தலத்திற்குச்செல்லல். 2. Journeying, especially by sea, கப்பற்பயணம். (c.) 3. A festival with an idol procession, திருவிழா. W. p. 684. YATRA.

தேசயாத்திரைக்குப்போகிறது. Seeking for a livelihood. (R.)

கப்பல்யாத்திரை—சமுத்திரயாத்திரை. A sea-voyage.

கரையாத்திரை. A land-journey.

காசியாத்திரை. A pilgrimage to Benares.

யாத்திராகமம், s. [Chris. usage.] Exodus.

யாத்திரைக்காவி, s. Cloth dyed with red ochre, worn by pilgrims.

யாத்திரைபோக—யாத்திரைபண்ண, *inf.* To go on a pilgrimage. 2. To travel, or make a voyage.

•யாபாரம், *s.* Trade. See வியாபாரம்.

யாப்பண்டம், *s.* [*com. for* வயாப்பண்டம்.] Things longed for by a pregnant woman. See வயா.

யாப்பு, *s.* A bandage, a tie, கட்டு. 2. Poetry, செய்யுள். 3. [*fig.*] Prosody, or binding words together, செய்யுளிலக்கணம். [*ex* யா, *v.*] (*p.*)

யாப்பதிகாரம்—யாப்பிலக்கணம், *s.* That part of grammar which treats of versification, Prosody.

யாப்பருங்கலம், *s.* A treatise on Prosody, ஓர்யாப்புநூல்; [*ex* அருங்கலம்.]

•யாமம், *s.* Midnight, the middle watch of the night. 2. A watch of three hours. 3. Night-time. See சாமம். W. p. 684. YAMA. 4. The south, தெற்கு; [*ex* யமன்.] See திக்குப்பாலகர். 5. A drum beaten with a stick and not the hands, இடக்கைமேளம். (சது.)

நான்யாமத்திலேவருவேன். I shall come at midnight.

யாமவதி, *s.* The night, இராத்திரி. [*Sa. Yamavati.*]

•யாமளம், *s.* Two, a couple, இரட்டை, as யமளம். W. p. 684. YAMALA. 2. Green color, பச்சை.

யாமளை, *s.* Kali, காளி. (சது.)

•யாமிகன், *s.* One spying out a city in disguise, *incognito*, களவோற்றுவோன்; [*ex Sa. Yami*, night.] (சது.)

•யாமியம், *s.* The south, தெற்கு. W. p. 685. YAMYA. 2. [*for* யமம்.] A work on Hindu law. (*R.*)

•யாமினி, *s.* The night, இராத்திரி; [*Sa. Yamninee.*]

•யாமினியம், *s.* The south, தெற்கு; [*ex Sa. Yamini.*] (சது.)

•யாமுனாசாரியர், *s.* A Vaishnuva devotee.

யாம், [*pers. pron. sing.* யான்; *com.* நாம்.] We. (*p.*)

யாரி, *s.* A door, கதவு. (சது.) 2. [*prov.*] An adversary, a rival, as எதிரி.

யார், [*inter. pron.*] Who or which, as ஆர்.

யார், *s.* [*prov.*] A kind of sorrel, as சத்தைக்குரி.

யாலம், *s.* A tree, black-wood, as ஆச்சா.

•யாவச்சீவம், *s.* All that belongs to this life, சீவனுக்குரியசகலமும். [*ex Sa. Yavat*, as long as, *et* சீவம்.] 2. [*fig.*] All things, and secrets. W. p. 685. YAVAJJEEVA.

அவனுடையயாவச்சீவமும் அறிந்திருக்கிறேன்......I know all about him.

யாவத்தீவு—யாவம், *s.* The island of Java.

•யாவத்தும், *adv.* As much as, as many, as far as, அவ்வளவும். W. p. 585. YAVAT.

யாவன், [*inter. pron.*] Who, or which man? as எவன்; [*ex* யா *et* அன்.]

யாவர், [*pl.*] Who?

யாவரும். All people.

யாவரையும், [*accus. of* யாவர் *with* உம்.] All people.

யாவும். All, the whole, எல்லாம்.

யாவை, [*inter. neut. pl.*] What or which things?

யாவையும். All things, எவையும்.

யாழ, [*an expletive.*] A poetic affix to the second pers. sing. as நீயேசெய்வினைமருங்கிற் செலவயர்ந்தியாழநின்கைபுனைவில்லினாணூர்ந்தியே. By using the string of the ornamented bow, you will complete the business, முன்னிலையசைச்சொல்.

யாழல், *s.* The white ant, termites, கறையான். (சது.)

யாழ், *s.* A musical instrument, the lute, வீணை. 2. The first lunar mansion, as அச்சுவினி. 3. The sixth lunar mansion, திருவாதிரை. 4. Gemini in the Zodiac, மிதுனவிராசி. (சது.)

யாழோர்கூட்டம், *s.* Marriage by mutual consent, *synonymous with* காந்தருவமணம்.

யாழ்த்திறம், *s.* Different lutes, peculiar to the different soils, as குறிஞ்சி, நெய்தல், மருதம், பாலை, முல்லை.

யாழ்நரம்பு, *s.* The strings of musical instruments.

யாழ்ப்பாணம், *s.* Jaffna.

யாழ்ப்பாணநாயனார், *s.* A blind minstrel of the Chola country, who being favored by the Singalese king, obtained possession of Jaffna, then uninhabited, and introduced there a colony of Tamil people.

யாழ்ப்பாணர், *s.* The people of Jaffna. 2. Players on the lute, யாழ்வாசிப்போர். (*p.*)

யாழ்வகை, *s.* The different species of lute. They are four. 1. பேரியாழ். 2. சகோடயாழ். 3. மகரயாழ். 4. செங்கோட்டியாழ், which see.

யாழ்வல்லோர், *s.* [*pl.*] Heavenly choristers, கந்தருவர். 2. Skilful players on the lute, வீணைவல்லோர்.

யாழ்வாசிக்க, *inf.* To play upon the lute.

யாளி, *s.* The lion, சிங்கம். 2. Leo, the Zodiacal sign, சிங்கவிராசி. 3. [*also* யாளியானை.] A fabulous animal like a lion with an elephant's proboscis; possibly the mammoth. See ஆளி. 4. A small vessel for casting water to wet the sail of a dhoney, or for lading out bilge water, இறைபட்டை.

யாளியூர்தி, *s.* Durga as lion-borne, காளி.

யாறு, *s.* A river. See ஆறு. (சது.)

•யானம், *s.* Any carriage or vehicle for conveyance, வாகனம். 2. A palankeen, சிவிகை. 3. A vessel, or ship, மரக்கலம். W. p. 684. YANA. 4. Palm-tree-sap, fermented, கள். (சது.)

யானை, *s.* An elephant. 2. The sign of Kuvêra, as regent of the north. 3. The Pepul tree. See ஆனை.

யானைகட்டக்கயிறுதானேயெடுத்துக்கொடுக்கும். The elephant gives the rope to tie itself; *said of those who bring trouble on their own heads. Prov.*

யானைக்கச்சை, *s.* An elephant's rope, or the string around his neck; also his girth.

யானைச்சார்வு, *s.* A place of rest for elephants, a stall for them, யானைதுயிலிடம். (சது.)

யானைத்தடிப்பு—யானைப்பிச்சான், *s.* A plant, Cissus acida.

யானைப்படுகுழி, *s.* A pit-fall for catching elephants.

யானைப்பெருங்காயம், *s.* See பெருங்காயம்.

யானைமாவுத்தன், *s.* An elephant-driver, as மாவுத்தன்.

யானைமீன், *s.* A very large fish so called. (*R.*)

யானைமீனைவிழுங்குமீன், *s.* A fish which swallows the யானைமீன்.

யானைமுகவற்கிளையோன், *s.* An epithet of Vîrabhadra, வீரபத்திரன். (சது.)

யானையீருரி, *s.* See ஈர், *v. a.*

யானையுரித்தோன், *appel. n.* An epithet of Siva, as having skinned an elephant. (சது.)

யானைவிச்சுளி, *s.* A kind of eagle, the ospray, ஓர்கழுகு. (*R.*)

யானைவீரிடல், *v. noun.* The trumpeting of an elephant.

## யு

யு. A syllabic letter compounded of ய் and உ.

•யுகந்தரம், *s.* One of the fifty-six countries. See தேசம். 2. See under யுகம்.

யுகம், *s.* The earth, as உகம். (சது.)

•யுகம், *s.* An age of the world as உகம்; any one of the four yugas, in which sense it seems to be a primitive word, found in most of the ancient languages—in Heb. *Olim*; in Gr. *Aion*; in Lat. *Ævum*—like தேவம், which resembles the Greek Theos and Latin Deus. 2. A yoke, *commonly* நுகம். 3. A couple, a pair. See உகம். W. p. 686. YUGA.

யுகம், *s.* The four Yugas, கிரேதாயுகம் or கிருதயுகம்; 2. திரேதாயுகம்; 3. துவாபரயுகம்; 4. கலியுகம். For particulars see the words.

யுகதருமம், *s.* The actions and characteristics of a particular Yuga. 2. The conduct prescribed in the *shastras* for any Yuga, and the events appropriate to it.

யுகந்தரம், *s.* The pole or shaft of a coach, plough, &c., which supports the yoke, ஏர்க்கால்; [*ex* தரம், holding.] (*Sa. Yugand'hara.*)

யுகபேதம், *s.* The difference of one age from another. 2. Any strange or anomalous occurrence supposed to result from the vices of the age.

யுகப்பிரளயம்-யுகாந்தப்பிரளயம், s. The final deluge.

யுகாதி, s. The beginning of a year. 2. An epithet of Argha, அருகன்.

யுகாதிபண்டிகை, s. A feast at the beginning of a year. (*Beschi.*)

யுகாந்தம், s. The end of the world, &c.—For similar compounds, see உகாந்தம்.

•யுகளம்—யுகளி, s. A pair, a brace, இணை. W. p. 686. YUGALA.

•யுக்தம், s. (*St.*) Conclusion, as யுத்தம்.

•யுத்தநாதி, s. Precession of equinoxes at a given time.

யுத்தநாதிவாக்கியம், s. Table of the amount of precession for a given time.

•யுத்தம், s. Fitness, propriety, உசிதம். 2. Combination, closeness, union, சேர்மானம். 3. Any thing proved by inference or argument; equity, நியாயம். 4. Being engaged in or intent upon, as in நியுத்தன். W. p. 685. YUKTA. 5. [*vul.* உயுத்தம்.] War, battle, a fight, போர். (*Sa. Yudd'ha.*)

அவருடையயுத்தப்படிசெய். Follow his advice.

உம்முடையயுத்தமென்ன. What is your opinion?

யுத்தங்கலந்தது. The battle was joined.

யுத்தந்தொடுக்கிறார்கள். They raise a war.

தர்மயுத்தம், s. A lawful war.

யுத்தகளம், s. Battle-field.

யுத்தசன்னத்தன், s. One prepared for battle, as சன்னத்தன். See சன்னத்தம்.

யுத்தசன்னியாசம், s. Renunciation of military life by vow.

யுத்தஞ்செய்ய—யுத்தம்பண்ண, *inf.* To war, to fight, to make war.

யுத்தமுகம், s. [*also* முனைமுகம், *lit. the face of battle.*] The middle or thickest of a fight; the front of the army.

யுத்தாங்கம், s. Divisions of an army in war; [*ex* அங்கம், part.]

•யுத்தி, s. Reasoning, argument, inference, யோசனை. 2. Counsel, advice; a specification of circumstances, or written evidence; the supplying of an ellipsis, a mystical expression; union, connexion, propriety, fitness, யுத்தி. W. p. 685. YUKTI. 3. An expedient, artifice, உபாயம். 4. Deliberation, ஆராய்வு. 5. Attention, discrimination, விவேகம். 6. Deduction from argument, reason, நியாயம். See உத்தி.

யுத்திக்காரன், s. A man with keen intellect; a man of ready apprehension.

யுத்திசித்தி, s. Logical demonstration, logical deduction, rational conclusion.

யுத்திசொல்ல, *inf.* To give counsel.

யுத்திநியாயம், s. Argumentation.

யுத்திபாய்ப்பார்க்க, *inf.* To consider, to observe with attention.

யுத்தியுத்தர்—உத்தியுத்தர், s. Logicians, lawyers, தார்க்கிகர். (தி. 435. 437.)

யுபம், s. Means, practice, skill, art, சாமர்த்தியம். (*R.*)

யுபமாய்ச்செய்கிறது. Doing a thing skilfully.

•யுவ — யுவவருஷம், s. The ninth year of the Hindu cycle, as A. D. 1875.

•யுவராசன், s. A young prince, especially the heir apparent. See இளவரசு. W. p. 687. YUVARJA.

•யுவன், s. [*fem.* யுவதி.] A young man between sixteen and thirty years of age. See உவா. W. p. 687. YUVAN.

## யூ

யூ. A syllabic letter compounded of ய் and ஊ.

•யூகம், s. Reasoning, disputation, logic, தருக்கம். 2. Knowledge of secret arts, உட்பொருளுணர்தல். 3. Military array, படைவகுப்பு. 4. Battle, படை; [*from Sa. Ooha; or by aphæresis, Vyooha.* W. p. 821.] 5. A black monkey, கருங்குரங்கு. 6. A female monkey, பெண்குரங்கு. 7. A large black ape, as முசு. (சது.) Compare ஊகம்.

யூகி, s. A reasoning man, a wise, ingenious person, விவேகி. W. p. 167. OOHIN.

யூகமந்திரி, s. A wise minister, as மதிமந்திரி.

யூகி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To meditate, scrutinize, consider attentively. See ஊகி. [*from Sa. Ooha*, to reason.]

யூகிபாஷை—யூகிப்பயில், s. A kind of secret language in occult characters.

•யூகை, s. Learning, erudition, கல்வி. 2. [*fig.*] An erudite person; [*ex* யூகம்.]

•யூதம், s. A herd of elephants, யானைக்கூட்டம். (பிங். 52.) 2. A multitude of birds, beasts, &c., விலங்கின்கூட்டம். W. p. 687. YOOT'HA.

யூதநாதன்—யூதபதி—யூதபம், s. The chief elephant, or leader in a wild herd, யானைக்கூட்டத்துக்குத்தலைவானை.

யூதர், s. [*Chris. usage.*] Jews, ஓர்சாதியார்.

•யூபம், s. A sacrificial post to which the victim for sacrifice is bound, யாகஸ்தம்பம். [*also* யூபஸ்தம்பம்.] W. p. 687. YOOPA. 2. A head and trunk deprived of members, உடற்குறை. 3. A sacrifice, யாகம். 4. Battle-array, as யூகம், படைவகுப்பு. (சது.)

யூமியா, s. [*Arab.*] Allowance or pension, calculated originally by the day.

## யோ

யோ. A syllabic letter compounded of ய் and ஓ.

•யோகம், s. Religious, and abstract meditation, contemplation; keeping the body in a fixed posture, நிட்டை. 2. Luck, fortune, a lucky conjunction, அதிஷ்டம். 3. Civility, urbanity, உபசாரம். 4. A means, an expedient, உபாயம். 5. Height, excellency, உயர்ச்சி. 6. Effort, perseverance, உற்சாகம். 7. Union, junction—especially of stars and planets, கூடல். 8. An astrological element of an almanac. See பஞ்சாங்கம். 9. An assembly, கூட்டம். W. p. 688. YOGA. 10. [*by aphæresis of* வியோகம்.] Death, சாவு.

அவனுக்குயோகமடிக்கிறது. He has good luck.

எனக்கதிலேயோகமில்லை........I am not fortunate in that.

யோகம், அ, or அஷ்டாங்கயோகம். The eight qualities, of a yogi; 1. இயமம், restraint of the appetites; 2. நியமம், voluntary religious observances; 3. ஆசனம், position; 4. பிராணாயாமம், breathing in a peculiar way; 5. பிரத்தியாகாரம், restraining the senses; 6. தாரணை, fixing the mind on a member of the body; 7. தியானம், silent meditation. 8. சமாதி, vision of one's self—which see in their places.

யோகம், உஎ. [*in astrology.*] Twenty-seven sections of the lunar path or ecliptic, depending upon the sum of the longitudes of the Sun and moon—opp. to Tithi which depends upon their difference. They are: 1. விட்கம்பம்; 2. பிரீதி; 3. ஆயுஷ்மான்; 4. சௌபாக்கியம்; 5. சோபனம்; 6. அதிகண்டம்; 7. சுகர்மம்; 8. திருதி; 9. சூலம்; 10. கண்டம்; 11. விருத்தி; 12. துருவம்; 13. வியாகாதம்; 14. அரிஷணம்; 15. வச்சிரம்; 16. சித்தி; 17. விதிபாதம்; 18. வரியான்; 19. பரிகம்; 20. சிவம்; 21. சித்தம்; 22. சாத்தியம்; 23. சுபம்; 24. சுப்பிரம்; 25. பிராமம்; 26. ஐந்திரம்; 27. வைதிருதி.

யோகக்காட்சி, s. The spiritual perception of the yogi. See காட்சி.

யோககாரன்—யோகமுள்ளவன்—யோகவான், s. A fortunate man.

யோகசமாதி, s. As சமாதி. See யோகம், அ.

யோகசம், s. One of the twenty-eight Agamas of the Saivas. See சிவாகமம்.

யோகசாதனை, s. The practice of *yoga* discipline, and exercise.

யோகசாஸ்திரம் — யோகநூல், s. The science of abstract devotion, including the postures. See கலைஞானம்.

யோகசாரணம், s. A system of religion. See சமயம். III.

யோகஞ்சாதித்தல், v. noun. Practising *yoga* devotions, and contemplations.

யோகட்சேமம்—யோகக்ஷேமம், s. Welfare, well-being; national prosperity, the

good government of a state or agents in maintaining it—as king, minister, priest. 2. News, intelligence, செய்தி.

யோகதண்டம், s. A staff used by *yogis* for supporting the neck to keep their head erect.

யோகதிட்சை, s. Instruction by example. See திட்சை.

யோகத்திலிருக்க—யோகத்தில்நிற்க, *inf.* To remain in profound meditation.

யோகநித்திரை, s. Conscious or contemplative sleep—as an attribute of the gods, especially of Vishnu. See அறிதுயில்.

யோகநிலை, s. Religious and abstract meditation—as யோகம். In the Tantras it is thus described, ஐம்பொறியடக்கி, மூலவாயுவையெழுப்பி, இடைபிங்கலை வழியை மிறைவடைத்து, சுழிமுனைவழியைத் திறந்து, பிரணவநாதத்தொலிகேட்டு, ஐந்தெழுத்தும் பிரணவருபமாகத்தன்மை கண்டுசிதாகாசத்திற்கலந்திருக்கை, by restraining the external senses; driving upwards the air in the entrails; stopping the breath which should come through the nostrils; and opening the porous passage in the head, [the devotee] will hear a divine sound, see the five holy characters, in the shape of a mountain; and enter into union with the omnipresent God.

யோகபதம், s. A complex word, resolvable into simpler elements,—oppos. to ரூடபதம், a simple word, சாரணச்சொல்.

யோகபரீட்சை — யோகாப்பியாசம், s. Experience or practice of *yoga* meditation.

யோகப்பட்டை, s. A thick and broad tape used by *Yogis.* See பட்டை.

யோகப்பிரத்தியட்சம், s. One of the elementary principles of reasoning, or logic, as யோகக்காட்சி.

யோகமார்க்கம், s. *Yoga* system of religion.

யோகரூடி, s. Arbitrary use of a word expressing quality as a substantive, thus அந்தணர், the good natured, is made an epithet of brahmans, காரணஇடுகுறி.

யோகர், s. [*pl.*] Sages among the Jainas or Buddhists, சமணமுனிவர். 2. Anchorets, or ascetics, முனிவர். (சது.)

யோகவேஷ்டி, s. A certain garment or dress, worn by a *yogi* or ascetic.

யோகாக்கினி, s. A heap of fire. 2. Excessive heat, caused in the eyes of a *Yogi* by continued meditation.

யோகாசனம், s. A *Yogi*-posture in meditation. See ஆசனம்.

யோகாசாரியன், s. A teacher of the *Yoga* philosophy.

யோகாதிகாரம், s. Ability to undertake the practice of the *yoga* philosophy; power for abstract meditation. (சி. 21.)

யோகாதிசயம், s. Condition, state, health.

ஒருவனுடையயோகாதிசயங்கேட்கிறது. Inquiring after one's health.

யோகார்த்தம், s. A word of various meanings and significations, பலகருத்துடைய ஒருசொல்; [*ex* அர்த்தம்.]

யோகி, s. A *Yogi*, a contemplative sage, கிருடையெய்வோன். (*El.* 68.) 2. An ascetic, முனிவன். 3. Siva, சிவன். 4. Argha, அருகன். 5. Ayanar, ஐயனர். (சது.) 6. [*in anat*] Abductor muscle.

யோகி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To meditate deeply, to contemplate mentally, ஆழ்ந்துநினைக்க; [*ex* யோகம்.]

யோசித்துக்கண்டுபிடிக்கிறது. Inventing.

யோகித்துப்பார்க்கிறான். He is reflecting.

யோகிப்பு, *v. noun.* Meditation, thought, consideration, சிந்திப்பு.

•யோகினி, s. A female fiend, or spirit, attendant on Durga, காளிசேவகப்பெய்ப்பெண். W. p. 688. Yogin. 2. Kali, காளி. (சது.)

யோகினிதிசை, s. The influence of a sevenfold class of demi-goddesses, as calculated in the horoscope.

•யோகு, s. Meditation, as யோகம், நிட்டை.

•யோக்கியதை, s. Propriety, honesty, integrity, யோக்கியம். W. p. 689. Yogyata.

யோக்கியதாபத்திரிகை, s. A certificate of good character.

•யோக்கியம், s. Fitness, suitableness, worthiness, eligibility, qualification, தகுதி. 2. Goodness, desert, worthy conduct, conformity to rule; purity; holiness, as of the Vedas, which may not be learnt by unworthy persons, புனிதம். W. p. 689. Yogya. 5. [*in cant.*] Hazard, danger, fate, மோசம்.

இதைச்செய்வதுஉனக்குயோக்கியமல்ல. It does not become you to do this.

உழவுக்குயோக்கியமானமாடு. An ox fit for ploughing.

இராசயோக்கியம். Becoming for a king.

பிராமணயோக்கியம். Suitable to a brahman.

பிராணயோக்கியம். Risk of life.

பலயோக்கியம். Very good! (*ironical.*)

யோக்கியத்துக்குக்கொடுக்க, *inf.* To advance money, to an honest man upon his character. 2. (*R.*) To risk one's own money in a ship, &c.

யோக்கியபாத்திரம், s. A decent vessel. 2. [*met.*] A respectable person.

யோக்கியப்பட்டவன்—யோக்கியமுள்ளவன்—யோக்கியவான், *appel. n.* An honest man.

யோக்கியர், s. [*sing.* யோக்கியன்.] Worthy persons. 2. Capable heads.

அதற்குஅவன்யோக்கியனல்ல He is not a proper person for the work.

யோக்கியாசனம், s. A seat or place suitable to one's dignity, யோக்கியமானஇடம்.

யோக்கியாதி, s. [*in Hindu astron.*] A table giving the equation of the sun's motion, at the rate of a degree for a day, to his true motion for every day in the year.

யோக்கியாயோக்கியம், s. Worthiness and unworthiness; [*ex* அயோக்கியம்.]

யோக்கியயோக்கியங்தெரிந்துகொள்ளவேண்டும். One must discriminate worthiness and unworthiness.

•யோசனை, s. A measure of distance reckoned from 4 to 10 நாழிகை, *usually* about 13 miles. *Wils.* about 9 miles. (*Sa. Yojana.*) 2. Thought, opinion, sentiment, discretion, prudence, wisdom, skill, device, scheme, contrivance, ஆலோசனை. 3. A sound, ஓசை. (சது.) 4. [*in astron.*] The 5059th part of a great circle, or on the equator, about 4½ geographical miles.

உம்முடையயோசனையென்ன. What is your opinion?

நான்அங்கேபோகயோசனையாயிருக்கிறேன். I intend to go there.

யோசனைகந்தி, s. An epithet of *Satyavati*, the mother of *Vyasa*, வியாதர்தாய்.

யோசனைக்காரன்—யோசனையுள்ளவன், s. A prudent man.

யோசனைசாலி, s. A politic man.

யோசனைசொல்ல, *inf.* To give advice.

யோசனைபண்ண, *inf.* To consider, to reflect.

யோசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To deliberate, to consider, to ponder, ஆராய. (*c.*)

உன்காரியத்தைக்குறித்துயோசிப்பேன். I will consider your case.

•யோசியம், s. [*prov. for* சோதிடம்.] Astrology, prognostication, divination.

•யோதைகள், s. Learned men, sages, men of extraordinary qualifications, அறிவுடையோர். (*p.*)

•யோனி, s. Cause, origin, காரணம். 2. The vulva, இடக்குறி. 3. Birth, பிறப்பு—as கும்பயோனி, one born from a pot, a name of Agastya. W. p. 689. Yoni.

யோனித்துவாரம், s. The genital organs of the female animal creation.

யோனிபேதம், s. Diversities of animal kinds and species. They are seven as எழுபிறப்பு. 1. Supernals and infernals embracing 1,400,000; 2. The human species 900,000; 3. Quadrupeds 1,000,000; 4. Flying creatures 1,000,000; 5. Creeping things 1,100,000; 6. Fishes and other acquatic creatures 1,000,000; 7. Vegetables 2,000,000; in all 84,000,000 different species of creatures. Some reckon 200,000 more than the above for the gods and 200,000 less for vegetables.

யோனிப்பொருத்தம், s. One of the தசப்பொருத்தம்.

## யௌ

யௌ. A syllabic compound of ய் and ஔ.

•யௌகிகம், s. A divisible word, பகுபதம்; [*ex* யோகம்.] W. p. 689. Yougika.

•யௌதகம், s. A nuptial gift, presents made to a bride at her marriage, by her father or friends, and to the bridegroom or son-in-law, சீதனம். W. p. 689. Youtaka.

•யௌவனம், s. Adolescence, youth, manhood. See சவ்வனம். 2. Beauty, அழகு. 3. Joy, களிப்பு. (சது.)

# ர்

ர். The twelfth consonant and the second of the இடையினம் or medium class. It is not grammatically an initial. When animated by அ, ஆ; இ, ஈ; எ, ஏ; generally, இ is prefixed—as in இரணம், இராகம், இரிஷி, இரீதி, இரெப்பம், இரேகை; sometimes, அ may precede ர—as அரங்கம், அரத்தம், அரம்பை, &c.; and if it is animated by உ, ஊ; ஒ, ஓ; the vowel உ is the proper prefix—as உருசி, உரூபம், உரொட்டி, உரோமம்.—For most words therefore beginning with this letter, see under இ or உ. As foreign terms take their natural pronunciation, both in common conversation and in writing, without the prefix, some are here given.

•ரகசியம், s. A secret, &c. See இரகசியம்.

•ரங்கம், s. A public place, &c. See அரங்கம்.

ரங்கு, s. [Tel.] Color, dye.

•ரசபுத்திரர், s. Rajputs, people of Rajputana.

•ரசம், s. Vegetable juice or flavor. See இரசம். 2. Pepper-broth.

ரசா, s. [Hind.] Leave, உத்தரவு.

ரஸ்தா, s. [Pers.] A road, பாட்டை.

ரஸ்தாளி, s. A plantain-tree, as இரசதாளி. (Colloq.)

ரஸ்தாளிக்கரும்பு, s. A large kind of sugar-cane.

ரஸ்து, s. [Hind.] Provisions. See இரஸ்து.

•ரதம், s. A car, &c. See இரதம்.

•ரத்தினம், s. A gem. See இரத்தினம்.

ரத்து, s. [Arab.] Rejection, தள்ளுபடி.

•ரந்திரம், s. A fissure. 2. [fig.] Secrecy. See இரந்திரம்.

ரம்ஜான், s. [Arab.] A Mohammedan month of fasting.

•ரம்மியம், s. Satisfaction. See இரம்மியம்.

ரயத்து—ரயித்து, s. [Arab.] A cultivator of the soil, a ryot.

ரயித்துவாரி, s. An annual settlement in which each ryot's *pattah* is considered.

ரவாணா, s. [Pers.] A despatch, a permit to pass goods free of duty.

ரவிக்கை, s. [Tel.] A bodice. See இரவிக்கை.

## ரா

ராகி, s. [Canar.] A kind of millet, raggy.

ராஜி, s. [Arab.] Consent, agreement; resignation. See இராசி.

ராஜிநாமா, s. A deed of consent. 2. An agreement, a resignation.

என்வேலையைராஜிநாமாசெய்துபோட்டேன்...... I have resigned my employment.

•ராட்சதர், s. [sing. ராட்சதன்.] Rakshasas. See இராக்கதர்.

ராட்டினம், s. [Tel.] A spinning wheel. 2. A turning swing. See இராட்டினம்.

ராதாரி, s. [Tel.] A guide, a pass. 2. Collection of duties on roads.

ராப்தா, s. [Arab.] Thorough-fare.

ராப்பொடி, s. Filings, as அரப்பொடி.

•ராமச்சீத்தா, s. Bullock's heart. See இராமசீத்தா.

•ராமன், s. Rama. See இராமன்.

•ராவணன், s. Ravana. See இராவணன்.

ராவு, v. To file. See இராவு.

ராவுடவேலை, s. The work of filing.

## ரி

•ரிஷபம், s. A bull, &c. See இடபம்.

ரிவாஜ், s. [Arab.] Practice, custom, usage, வழக்கம்.

## ரீ

ரீகர், s. [Hind.] The black soil generally known as cotton ground, கரம்பைநிலம்.

## ரு

•ருசி, s. Good taste, &c. See உருசி.

ருஜு, s. [Hind.] Proof. See உருசு.

ருஜுமம், s. [Arab.] Customary gratuities, perquisites either in kind or money.

•ருஷ்டி, s. Violence, rage, துஷ்டம். W. p. 708. RUSHT'I.

ருமாலை, s. See உருமாலை.

## ரூ

•ரூபம், s. Form, shape, &c. See உருபம்.

•ரூபாய், s. [Hind.] A rupee. See உரூபாய்.

ரூபி, v. To prove. See உரூபி.

ரூபுரூபு, s. [Pers.] Presence, face to face, முன்னிலை.

## ரெ

ரெட்டு, s. Sackcloth, as இரட்டு, under இரண்டு.

ரெட்டி, s. [Tel.] A caste. See இரெட்டி.

ரெண்டு, s. Two. See இரண்டு.

ரெம்ப, as adv. [also ரொம்ப.] Much, abundantly. (Colloq.)

## ரே

ரேகம், s. [vul. for தேகம்.] The body.

•ரேவணசித்தியர், s. A Saiva ascetic-author of a metrical lexicon, called after his name, ரேவணசித்தியர்நிகண்டு.

ரேவு, s. [Tel.] A port, &c. See இரேவு.

## ரொ

•ரொக்கம், s. Ready money. See உரொக்கம்.

## ரோ

•ரோசம்—ரோஷம், s. Keen sensibility. See உரோசம்.

ரோஜ், s. [Pers.] A day, நாள்.

ரோஜ்நாமா, s. A daily account or report.

ரோஜ்கார், s. [Pers.] Service, situation, பணிவிடை.

ரோந்தை, s. [Tel.] Filthiness, vileness.

•ரோமம், s. The hair of the body. See உரோமம்.

# ல்

ல். The thirteenth consonant and third of the இடையினம் class. Like ர் it is not properly, an initial, but has இ or உ prefixed. A few words only are here given as more common without the prefix.

லகோட்டா, s. [Arab.] An envelope.

•லக்கம், s. A number, &c. See இலக்கம்.

லங்கர்கானா, s. [Pers.] An alms-house, a place for distributing food to paupers.

•லச்சை, s. [com. லெச்சை.] Shame; trouble, &c. See இலச்சை.

லஞ்சம், s. [Tel.] A bribe. See இலஞ்சம்.

•லட்சம், s. [com. லெட்சம்.] A lak. See இலட்சம்.

லட்டு, s. [Hind.] A sweet-meat.

லத்தாடு, s. Vexation, agitation. (c.)

லப்பம், s. [for.] Putty, as மக்கு.

லப்பை, s. [also லெப்பை.] Lubbis, a class of Mohammedans.

•லயம், s. Dissolution, destruction. See இலயம்.

லவாடி, s. A prostitute, வேசி. (Colloq.)

## லா

லாகிராஜ்-லாக்ஜாரி, s. [Arab.] Land held free from payment of revenue—oppos. to மல்குஜாரி.

லாகிரி, s. Intoxication, as இலகிரி.

•லாகு, s. Facility, as in கைலாகு. See இலாகவம்.

லாகை, s. Way, manner. See இலாகை.

லாஸ்கார், s. [for.] A lascar.

லாடம், s. [Tel.] A horse-shoe. See இலாடம்.

லாயக்கு, s. [Arab.] Fitness, suitableness, ஏற்றது.

லாயம், s. [Tel.] A stable. See இலாயம்.

•லாலனே, s. Support, தாங்கல்.

•லாவணி, s. A Mahratta song, ஓர் பாட்டு.

லாவு, v. [prov.] To pounce or dart upon, as இறுக.

## லி

•லிங்காபட்டியம், s. A commentary on the Amera Kosha, அமரம், called after its author Lingapat'ya, லிங்கமல்லிருதநல்.

## லு

லுக்சான், s. [Arab.] Waste, loss, சேதம்.

லுச்சா, s. A vile wretch, போக்கிரி. (Colloq.)

## லெ

•லெகு, s. Ease, as இலகு.

•லெச்சை, s. Shame. See லச்சை.

•லெட்சம், s. A lak, as லட்சம்.

லெப்பை, s. Lubbis, as லப்பை.

## லே

லேஞ்சி — லேஞ்சு, s. [Port. lengo.] A handkerchief, as உறுமால்.

## லொ

லொங்க, inf. To be humble. See உலொங்கு.

லொட்டி, s. A small earthern pot used in drawing toddy from the tree, கள்ளுக்குடுவை. See உலொட்டி.

லொட்டிமூஞ்சி, s. [in cant.] A drunkard, குடியன்.

லொட்டை, s. A kind of cake.

## லோ

•லோகம், s. World. 2. Metal, &c. See உலகம், or உலோகம்.

லோகாபவாதம், s. A world-wide-scandal.

லோடா, s. [Mahr.] A drinking vessel, செம்பு.

லோட்டு, s. Trouble, வருத்தம். (Colloq.)

•லோபம், s. Stinginess, &c. See உலோபம்.

லோபி, s. An avaricious person.

## லௌ

•லௌகிகம்-லௌகீகம், s. Worldliness. See இலௌகிகம்.

# வ்

வ். The fourteenth consonant and fourth of the இடையினம், or middle class.

வ. An indication of one fourth, as கால்.

வகரம் — வகாரம் — வஃகான், s. [in gram.] The letter வ, with கரம், காரம், and கான் affixed.

வகி, க்கிறேன், த்தேன், ப்பேன், வகிக்க, v. a. [com. வகி.] To bear, to carry, to assume, to take, to endure, சகிக்க; [from Sa. Vaha.]

•வகிரங்கம், s. An external part, limb or member. See பகிரங்கம். [உ.ப. 217.] (Sa. Vahiranga.)

•வகிரியாகம், s. One of the two kinds of Saiva puja—the external, வெளிபூசங்க பூசை.

வகிரு—வகிர், கிறேன், வகிர்ந்தேன், வகிருவேன், வகிர்வேன், வகிர, v. a. To divide, to slice, to cut in slips, அறுக்க. 2. To disentangle and part the hair, கோத. 3. To distribute, பங்குசெய்ய. 4. To split, பிளக்க. (சூ.)

தலைமயிரைவகிர்ந்துவிடு. Part the hair of the head.

வகிர்ந்துபார்த்தல், v. noun. Cutting to pieces.

வகிர், s. The mark or line of hair, of a woman, parted from the crown to the forehead, மயிர்வகிர், வகுடு. 2. A leather girdle, வார். 3. A long scratch with the nails on the body, கீறு. 4. Way, road, வழி.

வகிர்வகிராய்ச்சிரைக்க, inf. To shave off parts of the beard, and hair of the head, as a punishment.

வகு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To classify, divide, separate, designate, apportion, distribute, as good and evil, வகைப்படுத்த. [ராமா. 73, 92. El. 97, 191, 6.] 2. To divide or expend revenue—as a prerogative of kings. See அரசர்வல்லமை.

இயற்றலுமீட்டலுங் காத்தலுங்காத்த வகுத்தலும்வல்ல தரசு. He is a king who is able to acquire, to lay up, to guard, and to distribute (wealth). (குறள்.)

வகுத்துக்காட்டல், v. noun. The subdivision of a scientific or literary work. See உத்தி.

வகுதி, s. A classification of letters, as பரிமாணவகுதி, long and short vowels, and பரிவர்வகுதி, the three sub-divisions of consonants.

•வகுத்திராபிகாரம், s. The five senses or their organs. See ஐம்பொறி; [ex Sa. Vahutra, many ways et அபிகாரம், seizing, &c.]

வகுந்து, s. A way or road, வழி. (ராமா.)

வகுப்பு, s. Beauty, அழகு. (p.) 2. v. noun. A section, paragraph, a division, a class, பகுப்பு.

முதல்வகுப்பு. First class, highest rank.

புயவகுப்பு. The beauty of a shoulder. 2. A division of a poem.

எண்ணின்வகுப்பு—எண்ணின்தானம், s. The Tamil enumeration table, which consists of thirty-six digits. 1. ஏகம், a unit; 2. தசம், ten; 3. சதம், a hundred; 4. சகஸ்திரம், a thousand; 5. அயுதம், ten-thousand; 6. நியுதம், a hundred-thousand; 7. பிரயுதம், a million; 8. கோடி, ten-millions; 9. தசகோடி, a hundred-millions; 10. சதகோடி, a thousand-millions; 11. அர்ப்புதம், ten-thousand millions; 12. நிகர்ப்புதம், a hundred thousand millions; 13. கர்வம், a billion; 14. மகாகர்வம், ten-billions; 15. பதுமம், a hundred billions; 16. மகாபதுமம், a thousand billions; 17. சங்கம், ten-thousand billions; 18. மகாசங்கம், a hundred-thousand billions; 19. க்ஷோணி or கூேஷாணி, one trillion; 20. மகாகூேஷாணி, ten-trillions; 21. க்ஷிதி or கூதி, a hundred trillions; 22. மகாகூதி, a thousand trillions; 23. கோபம், ten-thousand trillions; 24. மகாகோபம், a hundred-thousand trillions; 25. பரார்த்தம், a quadrillion; 26. சாகரம், ten-quadrillions; 27. பரதம், a hundred-quadrillions; 28. அசிந்தியம், a thousand quadrillions; 29. அத்தியந்தம், ten-thousand quadrillions; 30. அனந்தம், a hundred-thousand quadrillions; 31. பூரி, a quintillion; 32. மகாபூரி, ten-quintillions; 33. அப்பிரமேயம், a hundred quintillions; 34. அதுலம், a thousand quintillions; 35. அகம்மியம், ten-thousand quintillions; 36. அவ்வியத்தம், a hundred-thousand quintillions.—Note. Of the above, 11 and 13 are different from what was before given, following the Sanscrit; but these appear to be right.

வகுலி, s. A kind of fish, ஓர்மீன். (சது.)

•வகுளம், s. A tree, மகிழமரம், Mimusops, L. W. p. 728. VAKULA.

வகுளாபரணர், s. One of the twelve distinguished votaries of Vishnu, called also சடகோபர்.

வகுளி, s. A sound, ஒலி. (சது.)

வகை, s. Kind, sort. 2. Manner, way, method, முறை. 3. Means, உபாயம். 4. Class, assortment, தரம். 5. Division, branches, ramifications of a subject, கூறுபாடு. 6. A part, or portion, வகுப்பு. 7. [in arith.] Parts of the தொகை or sum total in addition. 8. (Beschi.) Goods, property, means, வழிவகை. 9. The principal stock in trade, முதல்.

எனக்கொருவகையாயிருக்கிறது. I am in a sort of way; i. e. I am unwell.

அவனுக்குவகையுண்டு. He has property.

வகைதேடுதல். Seeking means.

வகைதொகையறியாதவன், appel. n. A dunce—one who knows not the whole from its parts.

வகைப்படுதல், v. noun. Being classified, assorted, settled.

அதுவகைப்பட்டகாரியம். That is a settled business.

வகையகத்திணை, s. Amplification. See அகப்பாட்டுறுப்பு.

வகையறுத்தல், v. noun. Discerning, distinguishing mentally. 2. Deciphering, unraveling.

வகையுளி, s. A fault in versification, when the first half of a word is to be scanned as a part of the first, and the other, as a part of the second foot—as கடு வைத்துணைத்தேழ்கடலைப்புகட்டிக் குறுகத்தறித்தகுறள்.

வகையரா — வகைரா, adv. [Arab.] And others; and so forth, உள்ளிட்டார்.

வக்கணம், s. Address of a letter, as வக்கணை. 2. [prov.] Taunt, a twitting accusation, நிந்தை.

வக்கணப்பேச்சு, s. Accusation, invective.

வக்கணத்தி, s. A shrub, Symphoresma involucrata, ஓர்செடி.

வக்கணை, s. The address of a letter, வர்ணனை. 2. [fig.] Esteem, politeness.

வெகுவக்கணையாய்ப்பேசுகிறான்.......He speaks very politely; sometimes used in irony.

அவனுக்கெப்படிவக்கணையெழுத. How must I address him?

வக்கறை, s. [prov. for பற்கறை.] Artificial blackness of the teeth.

வக்கா, s. A bird, a kind of stork, ஓர் பறவை.

வக்காமணி, s. Beads of a kind of cockle-shell, of which strings are tied on children's neck.

வக்காமணிச்செட்டிகள், s. Traders in such shells.

வக்காமணிக்குவழிப்பற்றவன். One not worth a cockle-shell.

வக்காலத்து — வகாலத்து, s. [Arab.] Agency, proxy.

வக்காலத்துநாமா, s. A power of attorney, அதிகாரச்சீட்டு.

•வக்கிரம், s. A curve, a bend, the winding of a river, வளைவு. 2. Retrograde motion, as of a planet, or its direct course and retrogression, மீளமடங்குகை. 3. Violence, cruelty, கொடுமை. 4. Fraud, a lie, dishonesty, வஞ்சனை. W. p. 728. VAKRA. 5. Impatience, envy, பொறாமை. 6 A circle, வட்டம். 7. Confusion, disorder, கலக்கம்.

வக்கிரக்கிரகம், s. A retrograding planet.

வக்கிரசாரம், s. Motion of a planet when retrograding.

வக்கிரதந்தம், s. Curved teeth, fangs, வளைந்தபல்.

மிருகவக்கிரதந்தம். The curved teeth of beasts.

வக்கிரன், s. A man of perverse temper, குரூரன். 2. The planet Mars, செவ்வாய்.

வக்கிராங்கம், s. A swan, as having a crooked neck; அன்னம்; [ex அங்கம்.]

வக்கிராஸ்தமனம், s. Heliacal setting of a planet when retrograding.

வக்கிரோதயம், s. Heliacal rising of a planet when retrograding; [ex உதயம்.]

வக்கிரி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To be crooked, to be retrograde—as planets, வளைய.

வக்கில்-வக்கீல், s. [Arab.] One endowed with authority to act for another; a pleader in a court of justice.

வக்கு, s. [indeclinable.] An imitative sound. 2. [colloq.] Means, resources, influence, வழி.

வக்குவக்கென்றிருமுகிறது. Making a coughing noise.

அவனுக்குச்சோற்றுக்குவக்கில்லை. He has no means, of getting food.

நாய்வக்குவக்கென்றோடுகிறது...........The dog makes a noise while running.

வக்குத்திரிகரணம், s. [prov.] A bed, படுக்கை.

வங்கணம், s. Friendship, love, familiarity, சிநேகம். (சது.) 2. The name of a country, ஓர்தேயம்.

வங்கணக்காரன்—வங்கணன், s. [fem. வங்கணக்காரி, வங்கணத்தி.] A familiar friend, a clandestine lover.

வங்கணம்பிடித்தல், v. noun. Contracting friendship.

•வங்கம், s. Lead, ஈயம். 2. Tin, தகரம். 3. Bengal, ஓர்தேயம். 4. Bengali language, ஓர்பாஷை. 5. The egg-plant. See கத்தரி. W. p. 729. VANGA. 6. A ship, மரக்கலம். 7. Silver, வெள்ளி.

வங்கசிந்தூரம், s. Red lead, Minium. See செந்தூரம்.

வங்கபஸ்பம், s. White lead, carbonate of lead. See ஈயப்பற்பம்.

வங்கர், s. [pl.] Base, or vile persons. (சது.) 2. People of Bengal, வங்கதேயத்தார்.

வங்கனூர், s. A professor of the ancient Madura college,—commonly ஆலங்குடிவங்கனூர்.

வங்கா, s. A kind of trumpet, காளம்.

•வங்காரம், s. An ingot, or mass of metal, உலோகக்கட்டி. (சது.) 2. Gold, பொன்.

வங்காரவச்சி, s. An herb eaten by poor people, and found, chiefly, near water, Sesuvium adscendens, ஓர்பூண்டு.

தாயுக்குதப்பனுக்குதள்ளிவிட்டகாலத்திலுமொன்றை வைத்தவங்காரவச்சி. The Sesuvium which calls [is offered to] children cast off by their parents [in time of famine].

•வங்காளம், s. [also பங்காளம்.] A country, Bengal, as வங்கம். 2. A kind of tune. See இராகம்.

வங்காளப்பச்சை, s. Subacetate of copper, verdigris, ஓர்வர்ணம்.

வங்கி, s. A crooked instrument, கருவி. (சது.) 2. [Tel. వంకి.] An arm-ring, ஓர் கைவளை.

வங்கிவளையல், s. A kind of bracelet.

•வங்கிசம்—வங்கிஷம், s. Race, family, lineage, descent, kindred. See வமிசம். (c.)

வங்கிசம்வார்த்தைக்கஞ்சும்புழுக்கைபுதைக்கஞ்சும்.... Those of [good] family heed a word, a slave only a kick. [prov.]

வங்கிசவிருத்தப்போகை. The extinction of a race.

வங்கிசம்நாசமாய்ப்போகிறது.......One's family being ruined.

வங்கிஷத்தான் — வங்கிசன், s. [fem. வங்கிஷத்தி.] A kinsman.

வங்கிஷவழி, s. A line of descendants.

•வங்கியம், s. A pipe, a kind of hautboy, இசைக்குழல். (சது.)

வங்கு, s. An orifice, a hole in a stone, or of a rat or snake in the earth, அளை. 2. A cave, a hollow; a space between beams, or the ribs of a vessel; a socket, for a mast, சந்து. 3. A hyena, கழுதைப்புலி. 4. [also மங்கு.] Black spots in the face, முகமங்கு. 5. Bent planks for making a boat, வளைந்தபலகை.

அந்தவங்குதொடாக்கெல்லாமேன்கேட்கிறாய். Why do you inquire so carefully? (lit.) into the holes and crooks.

வங்குபடருகிறது. The spots spread on the body.

வங்குக்கால், s. The knees of a vessel, or timbers to which the planks are nailed.

வங்கூழ், s. Wind, காற்று. (சது.)

வசக்கு, கிறேன், வசக்கினேன், வேன், வசக்க, v. a. [prov. வயக்கு.] To break in, to tame, to subdue, வசப்படுத்த; [ex Sa. Vasa, tamed.]

மாட்டைஉழவுக்குவசக்கவேணும். The oxen must be trained to the plough.

•வசதி, s. A house, a dwelling, a residence, வீடு. W. p. 743. VASATI. 2. (கொ.) A commodity, a convenience, சல்லீடம். (c) 3. (சது.) A town or village in a cultivated country, மருதநிலத்தூர்.

வசதியானஇடம். A commodious place.

•வசந்தம், s. The season of spring, வசந்தகாலம். W. p. 743. VASANTA. 2. The palace of Indra, இந்திரன்மாளிகை. 3. The south-wind, தென்றற்காற்று. 4. Odor, scent, வாசனை. (சது.)

வசந்தகாலம், s. The months of April and May.

வசந்தத்திருநாள் — வசந்தத்திருவிழா, s. A spring festival.

வசந்தபைரவி, s. A kind of melody, ஓரிராகம். (சது.)

வசந்தமண்டபம், s. An edifice open to the gentle south-wind.

வசந்தமாலே, s. A panegyric on the south-wind. See பிரபந்தம்.

வசந்தன், s. Kama, மன்மதன். 2. The south-wind, as வசந்தம்.

வசந்தனடித்தல், v. noun. [sometimes வசந்தங்கவிக்க.] Clapping the hands and dancing, as கும்மி.

•வசந்திகை, s. Spots in the face or on the body, of a yellow color, தேமல். (சது.)

•வசம், s. Subordination; subjection, dependence, கீழ்ப்படிகை. 2. Possession, கைவசம். 3. Proper state, condition, நிலவரம். 4. Good order, regularity, ஒழுங்கு. 5. Possibility, power, இயலுகை. 6. Occupancy, ஆட்சி. W. p. 742. VASA.

இதுஎன்வசத்திலிருக்கிறது. It is in my possession.

இதுஅவன்வசமல்ல. It is beyond his ability.

சரீரம்வசமில்லாமலிருக்கிறது. I am indisposed.

அதைஎன்வசம்பண்ணினான். He has put it in my possession.

அதுவசத்துக்குவாராமற்போயிற்று. It did not succeed.

வசமறியாமலகப்பட்டுக்கொண்டான். Not knowing what was proper, he became entangled.

அவன்வசத்துக்குவந்தான். He is reformed.

அவனந்தேசவசமறியாமற்போனான். He went there not knowing the state [of things].

சப்பட்டைவசமாய்வை. Lay it along flat.

சுவசம், s. Good health; better circumstances.

புறவசம், s. Another's affair, or possession.

வசகிருதி, s. [com. வசவிருதி.] Act of taming, training, reforming; [ex கிருதி.]

வசக்கட்டு, s. Possession. (R.)

இதார்வசக்கட்டாயிருக்கிறது. To whom does this belong?

வசக்கேடு — வசப்பிழை, s. Loss of health, disorder, delirium. (Beschi.)

வசங்கட்டிவைக்க, inf. To deposit a thing in custody of an arbitrator. (R.)

வசங்கண்டவன், appel. n. One who understands the state of things. 2. A man of much experience.

வசங்கெட்டவன், appel. n. An impotent man, one whose health is impaired. 2. A man in reduced circumstances. 3. (R) One who has set himself free.

வசஞ்செய்ய — வசப்படுத்த — வசமாக்க — வசம்பண்ண, inf. [intrans. வசப்பட — வசமாக.] To bring into one's possession, or under one's power.

அவன்வசப்பட்டான். He submitted, yielded.

வசந்தப்பி, [as an adv.] Irregularly, on the wrong side.

இதுவசந்தப்பிச்சேர்த்திருக்கிறது. The parts of the frame are irregularly joined.

வசமழிக்க, inf. To renounce subjection. (Beschi.)

வசமாக்க, inf. To make one's own. See வசஞ்செய்ய.

வசமாய், adv. Aright, in good order.

வசமாயிணை. Join it properly.

வசமாய்வை. Place it rightly.

வசவிர்த்தி, s. Acting according to the pleasure of another.

•வசம்பு, s. Sweet flag, Acorus calamus, உக்ரகந்தம். W. p. 729. VACHA.

வசப்பங்தேறு, s. [com. வசம்புத்தேறு.] A piece of Calamus-root.

வசலே—வசளே, s. A creeper, as பசளே.

வசவி, s. A woman of bad life. See அசதி.

வசவு, s. Abuse, bad language, as வசை.

•வசனம், s. Speech, a word, சொல். 2. A verse, a sentence, வாக்கியம். 3. Prose in distinction from poetry, வாசகம். 4. A rule, an aphorism, பழமொழி. W. p. 729. VACHANA. 5. [in St. gram.] Number, as ஏகவசனம், த்விவசனம், பகுவசனம்; the corresponding Tamil terms being, ஒருமை, இருமை, and பன்மை.

•வசனுவி — வசநாவி, s. A strong poison. See வச்சநாபி, under நாபி. (c.)

வசனி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To speak, to say, to discourse, சொல்ல. (p.)

வசனிப்பு, v. noun. Talk, speech, saying.

வசா — வஜா, s. [Arab.] Deduction, கழிவு.

வசி, s. Point, or edge, கூர்மை. 2. A pointed stake, a pale, an impaling stake, கழுமுள். 3. A trident, சூலம். 4. A sword, வாள். 5. The mark of a stripe, தழும்பு. (சது.)

வசிநட — வசிநட்டடைக்க, inf. To place pointed stakes, to make a palisade.

•வசி, s. Possession, as வசியம். (சது.)

வசிகரணம்—வசிகரம், s. Magical subjection. See வசிகரணம்.

வசித்துவம், s. The state of holding in possession. 2. See அட்டசித்தி under சித்தி.

•வசிகரம், s. Beauty, as முகவசிகரம். 2. See வசி.

வசிகரி—வசீகரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To use magical charms for obtaining an object, வசியஞ்செய்ய; [ex வசிகரம்.]

வசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. and v. a. To dwell, to live, to abide, reside, தங்க; [ex Sa. Vasa.] 2. To cajole, wheedle, inveigle; to gain one's affections, to charm, வசியஞ்செய்ய; [ex வசம்.] 3. To speak, to utter, வசனிக்க; [ex Sa. Vacha.]

•வசிட்டன்—வசிஷ்டன், s. [also வதிட்டன்.] Vasishta, a Rishi of the first order. See முனி, ௭. W. p. 742. VASISHT'HA. 2. Family-priest of மருத்தராசன். (ராம. 17.)—Note. Vasishta is termed பிரமன்மானதபுத்திரன், son of the mind of Brahma and கோவணன்; also ranked as one of the seven stars of Ursa major.

•வசியம், s. Actual possession, கைவசம். 2. The exercise of a charm, magic influence. See கருமம்; [ex Sa. Vasi. W. p. 742.]

வசியப்படுத்த, inf. To seize, to bring into possession.

வசிவு, s. A curve, an arch, a vault, வளைவு. (சது.)

•வசிகரணம்—வசிகரம், s. [sometimes வசிகரணம்—வசிகரம்.] Magic influence for obtaining an object of desire. See கலைஞானம். 2. Subjection, possession, as வசம். W. p. 742. VASEEKARAN'A.

வசிகரன், s. A magical charmer.

•வசு, s. A ray of light, கிரணம். (தத். 23.) 2. A species of demigod, வசுக்கள். 3. A name of Agni, அக்கினி. 4. Wealth, substance, பொருள். 5. Gold, பொன். W. p. 743. VASU. 6. The young of a cow, a calf, பசுவின்கன்று. (p.)

வசுக்கள், அ. The eight Vasus, viz.: 1. அனலன்; 2. அனிலன்; 3. ஆபசுவன்; 4. சோமன்; 5. தருவன்; 6. பிரத்தியூசன்; 7. பிரபாசன். (ராம. 65, 66, 68.) These names in Sanscrit are D'hava, Druva, Soma, Vishnu, Anila, Anala, Prub'husa, Prab'hava. Their classes including themselves contain 80,000,000. See தேவர்வகை.

வசுதேவன், s. A demigod, father of Krishna, கண்ணனின்தந்தை.

வசுதை—வசுந்தரை—வசுமதி, s. Earth as having wealth, பூமி; [ex Sa. Dha, Dhru, having.] (சது.)

வசுநாள், s. The twenty-third lunar mansion, அவிட்டநாள். (சது.)

•வசுவசி, s. Mace—a spice, சாதிபத்திரி.

•வசூரி, s. [corrup. of மசூரி.] The small-pox, as வைசூரி.

வசூல்—வசூலத்து, s. [Arab.] Collection; government's demand upon land.

வசூல்செய்ய, inf. To collect revenue.

வசூல்பாக்கி, s. Arrear.

வசை, s. A fault, defect, குற்றம். 2. Reproach, censure. (சீதி); blame, stigma, இகழ்ச்சிச்சொல்; [corrup. of Sa. Vachalu, fault.] (சது.)

வசைபொழிய வாழ்வாரே வாழ்வாரிசைபொழிய வாழ்வாரேவாழாதவர். The good alone truly prosper, those who thrive by wrong do not thrive. (குறள்.)

வசைகவி, s. Satire, a lampoon, commonly அறம். 2. A satirist.

வசைபேச, inf. [prov. வசைவக்கணம்பேச.] To speak reproachfully.

வசைவினே, s. Improper conduct. (p.)

வசை, கிறேன், ந்தேன், வேன், ய, v. n. [prov.] To bend, to yield, to lean, as வளைய. 2. To be environed, to be encompassed, to be enclosed, சூழப்பட.

வசை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [prov.] To bend, to incline, to make crooked, வளைக்க. 2. To surround, to encompass, to encircle, சூழ.

•வச்சகம், s. A tree, Millingtoria, as மலைமல்லிகை. W. p. 731. VATSAKA.

•வச்சநாபி, s. A strong poison. See under நாபி.

வச்சி, s. A shrub, Memecylon, காயாமரம். (சது.)

•வச்சிரம், s. Diamond, commonly, வயிரம். See இரத்தினம். 2. [fig.] Any thing very hard. (Beschi.) 3. The thunder-bolt of Indra. See குலிசம். 4. A species of Euphorbia, சதுரக்கள்ளி. 5. A strong glue made of thoroughly boiled hides of oxen, &c., ஓர்பசை. W. p. 729. VAJRA. 6. A weapon used by wrestlers in boxing, a hand of horn. (Beschi.) 7. A treatise on architecture. See சிற்பநூல்.

வச்சிரதாரணே, s. One of the nine forms of worship. See தாரணை, II. 8.

வச்சிரபாணி, s. Indra as holding a thunder-bolt; (*lit.*) the thunder-bolt hand, இந்திரன்.

வச்சிரமணி, s. Diamond—as வச்சிரம்.

வச்சிராங்கம், s. A species of Euphorbia, சதுரக்கள்ளி.

வச்சிராப்பியாசம், s. Cross multiplication. (*Sa. Vajrab'yasa.*)

வச்சிராயுதம், s. The diamond weapon; thunder-bolt.

வச்சிராவர்த்தம், s. The bow of Rama, இராமன்வில். (சது.)

வச்சிரி, s. An epithet of Indra, இந்திரன். (சது.)

•வச்சிரீகரணம், s. Two passages and one receptacle for breath in the human body; the former are the left nostril, இடை, and the right nostril, பிங்கலை; the latter is சுழுமுனை, the place of union for the breath from both.

•வச்சையம், s. A roebuck, Capreolus dorcas, கலைமான். (சது.)

•வக்ஷஸ்தலம், s. The breast, the bosom, மார்பு. W. p. 729. VAKSHAS.

•வஸ்திரம்—வத்திரம், s. A garment, vestment, ஆடை. 2. Cloths, dress, உடை. W. p. 744. VASTRA.

அங்கவஸ்திரம், s. An upper garment to cover the body.

வஸ்திரபோசனம், s. Food and raiment.

வஸ்திராபரணம், s. Clothes and jewels.

வஸ்திராலங்காரம், s. Decoration of one's person by clothes.

*வஸ்து, s. [*pl.* வஸ்துகள், வஸ்துக்கள், *poetice* வத்து.] A thing, a being, a creature, பொருள். W. p. 744. VASTU. 2. [*in cant.*] Spirituous liquors, or any thing intoxicating, மயக்கவஸ்து.

பரமவஸ்து. The Supreme Being.

ஏகவஸ்து. The one Being, God.

வஸ்துதாரணை, s. One of the nine forms of things. See தாரணை. I. 8.

வஸ்துநிச்சயம், s. The certainty of God's existence, கடவுள்நிர்ணயம்.

வஸ்துப்பரிச்சேதம், s. Certainty as to the thing specified. See பரிச்சேதம்.

வஸ்துலட்சணம், s. The properties of the Supreme Being. They are five as given in the Agamas. 1. சத்து, reality; 2. சித்து, spirit; 3. ஆனந்தம், bliss; 4. நித்தியம், eternity; 5. பரிபூரணம், all pervading.

•வஞ்சகம், s. Fraud, deceit, சூது. W. p. 730. VANJCHAKA.

வஞ்சகம்பேசேல். Speak not deceitfully. (*Avv.*)

வஞ்சகம்நெஞ்சைப்பிளக்கும். Deceit will rend one's heart. [*prov.*]

வஞ்சகம்பண்ண, *inf.* To cheat, as வஞ்சிக்க.

வஞ்சகன், s. An impostor, a cheat.

•வஞ்சம், s. Cruelty, vehemency, violence, கொடுமை. 2. Smallness, சிறுமை. 3. A lie, பொய். 4. A sword, வாள். 5. Fraud, as வஞ்சகம்; [*from Sa. Vanjcha.*] (*p.*)

வஞ்சப்பெண், s. A female servant of Kali, காளியேவல்செய்பவள்.

வஞ்சம்வைக்க, *inf.* To foster malicious thoughts, and watch for revenge.

வஞ்சர், s. Deceitful persons. (*p.*)

வஞ்சவம், s. A snake, பாம்பு. (சது.)

•வஞ்சனம், s. [*com.* வஞ்சனை.] Fraud, deceit, வஞ்சகம். (*Sa. Vanjchana.*) 2. A vow, as வஞ்சினம்.

வஞ்சனி, s. A kind of female imp; a female servant of Kali, இடாகினி. 2. A female; a woman, பெண். (சது.)

•வஞ்சனை, s. Deceit, as வஞ்சனம். 2. A lie, falsehood, as பொய். 3. Hypocrisy, dissimulation, as மாயம். (*c.*) 4. An oath, a vow, ஆணை. 5. A goddess, தெய்வப்பெண்.

வஞ்சனைபண்ண, *inf.* To cheat, to deceive.

வஞ்சனையாளன், s. A deceiver.

வஞ்சி, s. A generic name of winding shrubs, படர்கொடிப்பொது. 2. A creeping plant, சீந்தில். 3. A town of the Sera country, now applied to one in the Coimbatore district, *commonly* கரூர். 4. A goddess, தருமதேவதை. 5. A female, பெண். 6. One of the eight wreaths with which conquerors were crowned, அட்டவெற்றிமாலையி லொன்று. 7. A kind of stanza. See பா. 8. One of the different modes of combining metrical feet, வஞ்சித்தளை. (*p.*)

வஞ்சிச்சீர் — வஞ்சியுரிச்சீர், s. A metrical measure ending in a compound syllable. See சீர்.

வஞ்சித்தாழிசை—வஞ்சித்துறை, s. A subdivision of வஞ்சிப்பா. See பா.

வஞ்சிப்பா, s. As வஞ்சி, 7.

வஞ்சியர், s. [*pl.*] Women, பெண்கள். (*p.*)

வஞ்சிவிருத்தம், s. A subdivision of வஞ்சிப்பா. See பா.

வஞ்சிவேந்தன், s. An epithet of Sera kings, சேரன்.

வஞ்சி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To deceive, to supplant; to defraud, to cheat, வஞ்சனைசெய்ய; [*ex* வஞ்சம்.] (*c.*)

அவனென்னைவஞ்சித்துப்போட்டான்......He has cheated me.

வஞ்சிரம், s. [*also* வஞ்சிரம்.] A kind of fish, ஓர்மீன்.

•வஞ்சினம், s. An oath, சபதம். See வஞ்சனை. (வை.)

•வஞ்சுளம், s. The Ashoca-tree, Uvaria, அசோகம். 2. [*in* சது. வஞ்சுளன்.] A bird, கரிக்குருவி. W. p. 730. VANJULA.

வட, *adj.* Northern; [*ex* வடக்கு.]

வடகரை, s. The north-bank of a river, &c.

வடகலை, s. A religious mark of the Vaishnuvas. See தென்கலைத்திருமண். 2. Sanscrit literature, வடநூல்.

வடகாற்று, s. The north wind, வாடை.

வடகாற்றடிக்கவத்துமழையே. The north-wind blows; there will be rain.

வடகிரி, s. The north or gold-mountain, *Maha-Méru.*

வடகிழக்கு—வடகீழ்த்திசை, s. North-east, வடகிழக்குத்திக்கு.

வடகீழ்த்திசைப்பாலன், s. Siva as the guardian of the north-west, ஈசானன்.

வடகைலாயம், s. The northern Kaylasa, or heaven of Siva.

வடகோடு, s. The northern horn of the cresent moon.

வடகோடை, s. The north-west wind, குன்றுவாடை.

வடதிசைப்பாலன், s. Kuvêra, the guardian of the north, குபேரன்.

வடதேசம், s. Northern countries.

வடநடைப்பகுபதம், s. A Sanscrit word formed by a root with a termination—as நீதிமான், a just man; நீதி is the root and மான் the termination.

வடநூல், s. A Sanscrit book, சமுஸ்கிருதசாஸ்திரம்.

வடநூலோர், s. [*pl.*] Those learned in Sanscrit, சமுஸ்கிருதசாஸ்திரிகள்.

வடந்தை, s. North-wind, வடகாற்று.

வடபரதம், s. Northern India. See பரதம்.

வடபாரிசம்—வடபுறம், s. [*poet.* வடபால்.] Northern side or quarter.

வடபாரிசத்தார், s. [*poet.* வடபாலார்.] People of the north, வடக்கத்தியார்.

வடமர், s. [*pl.*] A class of Brahmans, ஓர்வகைப்பிராமணர்; [*ex* மன்.]

வடமலை, s. The mountain called திருப்பதி, sacred to Vishnu. 2. Mount Meru, மகாமேரு.

வடமலைவாணன்—வடமலைவாண்டன்—வடமலையான், s. A kind of rice-corn, ஓர்வகைநெல். 2. Vishnu as residing in this mountain, திருப்பதிப்பெருமாள்.

வடமீன், s. A small star in Ursa Major, as அருந்ததி.

வடமுகம், s. The northern quarter, வடபாரிசம். 2. [*prov.*] Head of a water-course, in watering garden-beds, நீர்க்கால் மடைப்பு.

வடமேரு, s. The mountain called *Maha-Meru,* மகாமேரு.

வடமேற்றிசைப்பாலன், s. *Vayu* the guardian of the north-west, வாயு.

வடமொழி, s. [*in gram.*] Sanscrit words, or derivatives from them.

வடவேங்கடம், s. The mountain *Tirupati,* வடமலை, as distinguished from தென்வேங்கடம் or அழகர்மலை, near Madura. See வேங்கடம்.

வடவேங்கடந்தென்குமரியாயிடை. In that place, between வடவேங்கடம் and தென்குமரி. (தொல்காப்.)

•வட, *adj.* Of, or belonging to a banyan-tree; [*ex* வடம்.]

வடமரம்—வடவிருக்கம்—வடவிருட்சம், s. A banyan-tree, ஆலமரம்.

•வடகம், s. A seasoning consisting of pulse, onions, cumin, &c., fried together, வற்றல். W. p. 730. VAT'AKA. 2. The skin, தோல். 3. An upper garment, அங்கவஸ்திரம்.

வடக்கு, s. North.

வடக்குப்பார்த்தவீடு. A house facing towards the north.

வடக்கத்தியான், s. An inhabitant of a northern country. Compare தெற்கத்தி.

வடக்கே, *as adv.* Northward.

•வடம், s. A cable, a rope for drawing a car, வடக்கயிறு. 2. A string, நிரைகயிறு. 3. A string of jewels, அணிவடம். 4. The string of a bow, நாணி. 5. Banyan tree, ஆல். W. p. 730. VAT'A. 6. A flower-bud, பூவரும்பு. 7. A town, ஊர். (சது.)

வடக்கயிறு, s. A cable, as வடம், 1.

வடம்பிடிக்க, *inf.* To pull the cable with which a car is drawn.

வடலி, s. [prov.] A young palmyra tree, இளம்பனை.

•வடவனல்-வடவாக்கினி-வடவாநலம் — வடவாமுகம் — வடவாமுகாக்கினி, s. [in mythol.] A submarine fire, which will cause the final conflagration. It is in the shape of a mare's head. Springing from the thighs of அருப்பகமாமுனி, it was received by the ocean. See ஊழித்தீ; [ex வடவை, a mare.] W. p. 597. BAD'AVANALA.

•வடவை, s. A mare, பெண்குதிரை. W. p. 597. BAD'AVA. 2. The submarine fire, as ஊழித்தீ. 3. A buffalo, எருமை. 4. A female elephant, பெண்யானை. (சது.)

வடி, s. Palm-tree-sap, கள். 2. A dog, நாய். (சது.)

வடிகட்ட, inf. To strain, to filter, &c., as வடிக்க. (c.)

வடிகயிறு, s. Halter for a horse, குதிரைக்கயிறு. (சது.)

வடி, கிறது, ந்தது, யும், வடிய, v. n. To percolate, to flow downwards, to trickle down, or fall—as tears from the eyes; to distil by drops, ஒழுக. 2. To be diminished, as water in a tank or river; to ebb, to flow back to the sea, வற்ற. 3. To lengthen, to become long, நீள.

ஆறுஒருமுழம்வடிந்தது. The river is fallen a cubit.

புண்ணிலேசீவடிகிறது. Matter comes from the ulcer.

வடிகாது—வடிந்தகாது, s. [also வடிசற்காது.] Ears with the perforation much enlarged, தொங்குசெவி.

வடிகை, v. noun. Ebbing of the tide, வற்றுகை. 2. Dropping of tears, blood, &c., ஒழுகுகை.

வடிசல் — வடிதல் — வடியல், v. noun. Ebbing; decreasing, வற்றல். 2. Being long, lengthening, நீளல். (சது.)

வடிவு, v. noun. The ebb, as வடிசல். 2. As வடிகை.

வடிவுப்பானை, s. [com. வடிபானை.] A pot which receives distilled liquids. (R.)

வடிக்கதிர், s. [prov. வடிக்கருது.] A spindle, an instrument for twisting threads. (R.)

வடி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To make to flow, வடியச்செய்ய. 2. To strain, to filter, to filtrate, பிழிய. 3. To distil, தைலமிறக்க. 4. To make clear by decanting liquor from the dregs, வடித்தெடுக்க. 5. To make a sharp point, to point a style, &c., கூராக்க. 6. (சது.) To take or give in possession, வசமாக்க.

சோறுவடித்தல், v. noun. Straining the conjee-water from boiled rice.

காறுவடித்தல். Sharpening the point of a plough-share.

வடிதயிர், s. Curds well strained [and tied up].

வடித்தகஞ்சி—வடிகஞ்சி, s. [vul. வடிச்சகஞ்சி.] Strained conjee-water.

வடியெண்ணெய், s. Oil extracted from a composition of drugs.

வடிப்பு, v. noun. Straining, filtering.

வடிப்பம், s. Beauty, elegance, அழகு. 2. Method, eloquence in speech, செப்பம்.

வடிப்பம்வடிப்பமாய்ப்பேசுகிறாய். You boast yourself. (R.)

வடிம்பு, s. The border or edge of a roof, கூரைச்சாய்வு. 2. Edge of a garment, வஸ்திரத்தினோரம். (R.)

வடிம்புகழி, s. Transverse timbers in a roof, குறுக்குவிட்டம். (R.)

வடிம்புபிடிக்க, inf. To tie cross timbers on a roof.

வடிவம், s. Form, shape, figure, as உருவம். 2. Beauty, comeliness, elegance, as அழகு. (சது.)

வடிவு, s. Form, shape. 2. Beauty, as வடிவம். 3. (சது.) Mons veneris, அல்குல். 4. See வடி, v. n.

இவள்மெத்தவடிவு. She is very beautiful.

ஒலிவடிவு, s. An articulate sound.

வரிவடிவு, s. A letter, as வடிவெழுத்து.

வடிவெழுத்து, s. A letter, a written character, as distinguished from ஒலியெழுத்து. 2. (Beschi.) Fine writing.

வடு, s. [gen. வடுவின், pl. வடுக்கள்.] Unripe fruit, commonly very green mangoes, பிஞ்சு. 2. A scar, wale, cicatrice, தழும்பு. 3. Taunt, reproach, குற்றம். 4. A wart, a mole, மச்சம். (c.) 5. Copper, செம்பு. 6. A kind of lute, மருதயாழ்த்திறம். 7. A beetle, வண்டு. (சது.)

அதுவடுவும்புள்ளியுமாயிருக்கிறது. It has warts and spots.

ஆறாதேநாவினாற்சுட்டவடு. The wound inflicted by a burning tongue never heals. (குறள்.)

வடுச்சொல்ல, inf. To upbraid, reproach, taunt; to cast in the teeth, குற்றங்கூற.

வடுப்பட, inf. To be injured as fruits. 2. To be indented. 3. To be stigmatized.

வடுவுரை, s. A reproach, a scandal, a stigmatizing word, language which injures another's character. (Ell. 287.)

வடுகன், s. Bhairava, a form of Siva, வைரவன். (p.) 2. See வடுகு, Tamil.

வடுகன்றாய்—வடுகி, s. [also called காடுகாள்.] The mother of வைரவன். (சது.)

வடுகு, s. The Telugu country or language, as தெலுங்கு. (c.)

வடுகுபேசுகிறான். He speaks Telugu.

வடுகக்காது, s. Large ear-laps artificially made. (R.)

வடுகச்செட்டி, s. A caste formerly slaves, now registered as Chitties, நீசசாதி.

வடுகன், s. [fem. வடுகச்சி.] A Gentu man.

•வடுகு, s. [St. வடுகரணம்.] The investiture of the sacred thread. See உபநயனம்; [ex Sa. Vat'u. W. p. 730.]

வடு, க்கிறது த்தது, க்கும், வடுக்க, v. n. To set, as the bud of fruits, பிஞ்சுவிட. (p.)

வடுவரி, s. Bees, beetles, insects, வண்டு; [ex வடு.] (சது.)

•வடை, s. A cake made from meal of a kind of pulse, உழுந்து, and rice-flour, fried in ghee, ஓர்பலகாரம். W. p. 730. VAT'A.

வடையுந்தோசையுமடைவுடன்படைத்தல். Religious offering of cakes, pastry, &c. (p.)

வட்கு, கிறேன், வட்கினேன், வேன், வட்க, v. n. To be destroyed, கெட. 2. To be ashamed, as வெட்க. (p.)

வட்கார், appel. n. Enemies, பகைவர். (சது.)

வட்கல், v. noun. Being destroyed. 2. Being ashamed. (சது.)

•வட்டகை, s. Place or region round about. 2. [sometimes வட்டகைநிலம்.] An enclosed field, அடைப்புநிலம்; [ex Sa. Vat'a, to encompass.]

இதஅந்தவட்டகையிலுண்டோ. Is it in that place?

வட்டக்காய், s. (Tel.) The scrotum with the testicles, பீசக்கு.

•வட்டணம், s. A shield, பரிசை. (சது.)

வட்டணி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To make round or circular, வட்டமாக்க. 2. v. n. [prov.] To become round or circular, வட்டிப்பாய்வர.

வட்டணிக்கை, v. noun. A compass, சுற்றுகை. 2. Roundness, a rounding, வட்டவடிவு.

•வட்டணை, s. A cymbal, தாளம். 2. A circle, வட்டம். (சது.)

வட்டணையுறுத்தல், v. noun. Beating cymbals, தாளந்தட்டல். (p.)

•வட்டம், s. A circle, a circular form, a ring-like shape, சக்கரம். W. p. 730. VAT'A. 2. A halo round the sun or moon, பரிவேடம். 3. A potter's wheel, a mill, திரிகை. 4. A shield, கேடகம். 5. A hand-bell, கைமணி. 6. A pond, or tank, குளம். 7. A receptacle for different things, கொள்கலம். 8. A large water-pot, சிச்சால். 9. A seat, a chair, பீடம். 10. A curved club, a weapon, வளைதடி. 11. A cloth, சீலை, as பரிவட்டம். 12. Lowness, a valley, தாழ்வு. (சது.) 13. A revolution, as that of Jupiter in about twelve years, or his cycle, of sixty years, வியாழவட்டம்,—Note. The Hindus commenced to reckon by the cycle A. D. 426. Twenty-three cycles have already past, and the present cycle is the twenty-fourth. 14. Revolution of a planet. 15. A premium in exchange; (R) loss or gain in money transactions, உள்வட்டம். 16. (Beschi.) Place, as வட்டகை.

அந்தவட்டகைகளிற்காணேன். I did not see [them] in those places.

வட்டஞ்சுற்றியும்வழிக்குவரவேண்டும். Although you pass round, you must get in by the entrance.

அவன்வட்டத்துக்குவந்தான்.........He became teachable.

வட்டக்கலம், s. A round porringer or other vessel.

வட்டக்கிலுகிலுப்பை, s. A species of the கிலுகிலுப்பை plant. See கிலுகிலுப்பை.

வட்டக்கோல், s. Periphery or circumference of a circle; ellipse or other curvilinear figure. (R.)

வட்டங்கொடுத்துமாற்ற — வட்டமிட்டுமாற்ற, inf. To exchange money by paying a premium.

வட்டத்தாமரை, s. A tree growing in the Malayalam country, its leaf resembling that of the lotus.

வட்டத்திரி, s. Match for a gun, நெருப்புவைக்குந்திரி. 2. A rolled bit of cloth put into the pierced lobe of the ear to widen the orifice, காதிறெக்கை.

வட்டத்திருப்பி, s. A plant, Cissampelos. Compare பொன்முசுட்டை.

வட்டத்துக்குக்கொடுக்க, inf. To lend money at a premium.

வட்டப்பாறை, *s.* A round and flat stone, or rock; a rocky barren surface.

வட்டப்பாறைநாச்சியார், *s.* A local Durga at Trivatûr, திருவொற்றியூர், dwelling in a cave covered with a வட்டப்பாறை.

வட்டப்போதிகை, *s.* A circular piece of timber placed under the போதிகை.

வட்டமணியம், *s.* [*com.* வட்டகைமணியம்.] Superintendence over a small tract.

வட்டமரம், *s.* A class of jungle fruit-trees—It is of two varieties, பெருவட்டம், the common வட்டம் tree; சிறுவட்டம், the வட்டம் shrub with scarlet flowers in clusters, the juice of which is pressed and with கல்லெண்ணெய், is given to children for cutaneous eruptions.

வட்டமாய்போடல், *v. noun.* A circular motion or course.

வட்டமிட, *inf.* [*sometimes* வட்டம்போட.] To pass round, to hover about as a hawk; to gyrate. 2. [*fig*] To hang about in order to obtain an object.
 ஆகாசத்திற்பருந்து வட்டமிட்டுக்கொண்டேயிருக்கிறது. The kite in the air continues to sail round.

வட்டம்பண்ண, *inf.* [*prov.*] To repeat daily the praises of a deity.

வட்டம்பிடிய, *inf.* To gain in exchange.

வட்டவடிவு, *s.* A circular form.

வட்டாகிருதி, *s.* A circle, periphery, the circumference of a sphere; [*ex* ஆகிருதி.]

வட்டாரவு, *s.* [*prov.*] The nature or quality of being circular, வட்டவடிவு.

வட்டா, *s.* [*Hind.*] A plate, porringer, or bowl, மல்லே.

வட்டாப்பத்து, *s.* [*prov.*] A fan made of a single Talipot-leaf, ஓலேவிசிறி.

வட்டாரம், *s.* A circuit, a surrounding region, வட்டகை. 2. The court-yard of a house, வீட்டின்சுற்றுப்புறம். 3. A house, வீடு. 4. A place in the house where grain is kept, தானியக்களஞ்சியம்; [*ex* வட்டம்.]
 வட்டாரமெல்லாம்போயிருக்கிறது. The whole house is decayed. (*R.*)

•வட்டி, *s.* Interest on money, முதலின்லாபம். 2. Cowries, small coins, பலகறை. 3. A rough basket of palm-leaves; a twig-basket, கூடை. 4. (*R.*) A kind of sickness incidental to pregnant women. 5. [*improp. for* வட்டில்.] A platter.
 அநியாயவட்டி. Usury.
 தர்மவட்டி. Lawful interest.

வட்டிக்குவட்டி — வட்டிமேல்வட்டி, *s.* Compound interest.
 வட்டிக்குவாசிக்குவாங்குகிறது. Borrowing on interest or making a discount.
 வட்டிபோட்டுக்கொடுப்பாயா.........Will you pay [the money] with interest?

வட்டிகை, *s.* A basket, கூடை. 2. A hand-bell, கைமணி. 3. A picture or carved work, சித்திரம். 4. An unguent, one of the four. See சக்கு. (சது.)

வட்டிகைப்பள்ளம், *s.* [*in anat.*] Fossa ovalis.

வட்டி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v.n.* To be round, வட்டமாக. 2. *v. a.* To swear, to take an oath, ஆணையிட. 3. To beat a cymbal, தாளம்போட. 4. To distribute, or serve out food, or victuals, பந்திபரிமாற. (சது.) 5. (*R.*) To reprove, to reprimand, to censure, கடிய.
 அவனென்னைவட்டித்தான். He reproved me.

வட்டில், *s.* A brass tray, platter, or cup, கிண்ணம். 2. A basket for lading water, as புட்டில். 3. A basket, கூடை. 4. A way, வழி. (சது.) 5. A board for draughts. See சொக்கட்டான்வீடு.

வட்டு, *s.* A small spheroidal pawn or draught, சூதாடுகருவி. 2. Any thing round —as a ball, a bush, the tuft of a palm-tree, or the place where the ribs of an umbrella meet, திரட்சி. (சது.) 3. A kind of play, தவிளையாட்டு. 4. A low, thorny shrub, of the brinjal genus, ஒர்செடி.

வட்டாட, *inf.* To play at draughts.

வட்டுக்கருப்புக்கட்டி, *s.* [*com.* வட்டுக்கருப்பட்டி.] A ball of jaggery.

வட்டுக்காய், *s.* Dice, சூதாடுகருவி. 2. A வட்டு fruit.

வட்டுக்குத்தி, *s.* The part just below the top of a fresh palm-leaf, மரக்குருத்தினடி.

வட்டுவேர், *s.* The root of the வட்டு shrub, used as a medicine for infants.

வட்டுவம், *s.* A kind of purse or bag for betel, areca-nut and lime, for chewing.

வட்டுவப்பை, *s.* A separate pocket in a purse, கல்லப்பை. 2. A purse of triangular form containing several pockets for medicine, as மருந்துப்பை.

வட்டுடை, *s.* A cloth, சீலே. (சது.)

வட்டெலி, *s.* A rat found in trees, தவெலி.

வட்டை, *s.* A way, வழி. (சது.) 2. A cart-wheel without a tire. 3. The stripes on a tiger's body, புலியினுடல்வரி.

வட்புலி, *s.* A lion, சிங்கம்; [*ex* வள்.]

வணக்கம், *s.* Adoration, reverence, submission, respect, worship, தொழுகை; [*ex* வணங்கு.]
 அவனுக்குவணக்கமொன்றுமில்லை. He shows no respect. 2. He receives no reverence.
 வணக்கமுள்ளவன், *appel. n.* A respectful, devout man.
 வணக்கமொடுக்கம், *s.* Good manners, as ஒடுக்கவணக்கம்.

வணக்கு, கிறேன், வணக்கினேன், வேன், வணக்க, *v. a.* To make submissive, கீழ்ப்படுத்த. 2. To bend; to make flexible; to train the body for athletic exercises, வளைக்க.
 வணக்கல், *v. noun.* Bending any thing.
 வணக்கு. Adoration, as வணக்கம். (*p.*)

வணங்கு, கிறேன், வணங்கினேன், வேன், வணங்க, *v. a.* To worship, to adore; to reverence, to salute respectfully, தொழ. 2. *v. n.* To submit one's self, பணிய. 3. To bend, to yield as a plant to the flood, or the wind, வளைய.
 வணங்காக்கழுத்து, *s.* An unbending neck.
 வணங்காமுடியினன் — வணங்காமுடிபோன், *appel. n.* One not subject to any other, an independent monarch, சர்வபௌமன். (சது.) 2. An epithet of Duryodhana who bowed his head to none, துரியோதனன்.
 வணங்கிச்செய்ய, *inf.* To take much pains in doing a thing.
 வணங்கல், *v. noun.* Adoring, தொழுதல். 2. Being bent, வளைதல். (சது.)

வணர், *s.* A vault, an arched roof, வளைவு. (சது.)

•வணிகம், *s.* [*also* வாணிகம்.] Commerce, traffic, trade, வியாபாரம். W. p. 597. Ban'ij.
 வணிகன், *s.* [*pl.* வணிகர்.] A merchant, tradesman, வியாபாரி. 2. One of the வைசியர் caste, a merchant, farmer or herdsman, வைசியன். (சது.)
 வணிகர்குணம், அ. The eight characteristics of merchants: 1. தவிணையாதரல், suffering separations; 2. முனிவிலனுதல், slowness to anger; 3. இடனறிந்தொழுகல், conforming to people of different countries; 4. பொழுதொடுபுணர்தல், catching the spirit of the times; 5. உறுவதுநோக்கல், foresight; 6. இறுவதஞ்சாமை, undauntedness under losses; 7. ஈட்டல், power of accumulating; 8. பகுத்தல், habit of giving.

•வணிச்சியம், *s.* [*also* வாணிச்சியம்.] Trade, trafficking, buying and selling, வர்த்தகம். (*Sa. Banijya.*)

வணிதம், *s.* Goodness, elegance, handsomeness, as வடிப்பம்; [*ex Sa. Varnita.*]

வண்களமர், *s.* [*pl. as* களமர்.] Men of the fourth, or servile tribe, சூத்திரர். 2. Agriculturists, land-owners, *now holding various employments*, வேளாளர்; [*ex* வண்மை.]

வண்சிறை, *s.* [*as* சிறை.] Part of a fort or fortified wall, மதில். (சது.)

வண்டர், *s.* Bards, reciting old compositions, as பண்டர். 2. Panegyrists, encomiasts, மங்கலப்பாடகர். 3. See வண்டன்.

வண்டல், *s.* Dregs, lees, sediment, the mud or mire in tanks, அடிமண்டி. (*c.*) 2. A game at which women play, மகளிர்விளையாட்டு. (சது.)
 வண்டற்படுகை. A muddy bank of a river.

வண்டன், *s.* [*also* மிண்டன், *pl.* வண்டர்.] A valiant man, திண்ணியன். (சது.) 2. A vagabond, a blackguard, a mean and wicked man, துர்ச்சனன். (*c.*)
 வண்டத்தனம், *s.* A wicked action, a lewd course; impudence.
 வண்டப்பேச்சு, *s.* Abusive language.

வண்டானம், *s.* A heron, a pelican, நாரை. (சது.)

வண்டி, *s.* [*sometimes* வண்டில்.] A cart, carriage, *bandy*. See பண்டி. (*c.*)
 சக்கடாவண்டி, *s.* A common cart.
 பெட்டிவண்டி, *s.* A carriage with body and seats.
 வில்வண்டி, *s.* A carriage with springs.
 வண்டிக்காரன், *s. Bandy*-man, the driver.
 வண்டிக்கால், *s.* A carriage wheel.
 வண்டிக்கொழுப்பு, *s.* Grease for the *bandy*.
 வண்டிச்சத்தம், *s.* [*loc.*] Carriage-hire, cart-hire, *commonly* வண்டிவாடகை.
 வண்டிப்பட்டா, *s.* [*loc.* வண்டிக்கட்டு.] The flat iron-bar used for the tire of a cart-wheel.
 வண்டியகவாய், *s.* The axle-tree hole.
 வண்டியிலேறு. Get into the cart.
 வண்டிபோடு. Tie the bullocks; harness the horse. (*Colloq.*)
 வண்டிகுடைகவிழ்ந்தது. The *bandy* was upset.

வண்டு, s. A chafer, a beetle or scarab of any kind, சுரும்பு. (c.) 2. An arrow, அம்பு. 3. A fault, குற்றம். 4. A bracelet, கைவளை. 5. A chank, a conch, சங்கு. 6. The eighth lunar mansion, பூசணி. (சது.)

வண்டுகேன்படுவதல்லால்மனிதரும்படுவதாமே. Not only do insects suffer [by burning lamps], but men [by prostitutes]. (சிந்தா.)

சிள்வண்டு, s. A kind of cricket. See சில்.

விளக்குவெட்டிவண்டு, s. A candle-fly.

வண்டுகொடி, s. The sting of a wasp. 2. The cicatrice of a sting or bite.

வண்டுகொல்லி, appel. n. A kind of flower-tree whose leaves are used to cure cutaneous eruptions, Cassia alata, ஓர்செடி.

வண்டுணாமலர்மரம், s. [lit. a flower-tree untouched by beetles.] Michelia champaca. 2. The வேங்கை tree, Pterocarpus. (சது.)

வண்டேறுமலர், s. A flower untouched by bees. (p.)

வண்டுறை, s. Inarticulate sound, எழுத்தில்லாவோசை. (சது.)

வண்டை, s. [also வெண்டை.] An esculent plant, Hibiscus sinnantus, ஓர்செடி.

•வண்டோதரி s. [also மண்டோதரி.] A name of the wife of Ravana. See மண்டோதரி.

•வண்ணகம், s. A member of the கலிப்பாவுறுப்பு; in general, a rapid, or trochaic measure.

•வண்ணம், s. [also வர்ணம்—வர்னம்—வன்னம்.] A musical mode, a melody, இராகம். 2. [in combin.] Way or manner; property, குணம். 3. Harmony, சந்தம். 4. All kinds of ointment, சாந்துப்பொது. 5. Color, நிறம். 6. Beauty, அழகு. 7. A good, happiness, நன்மை. 8. Variation of metre. 9. Form, figure, வடிவு. 10. [in math.] Co-efficient. W. p. 737. VARN'A.

அவ்வண்ணமாய். In like manner.

எவ்வண்ணமாகிலும். In any wise.

வண்ணக்களஞ்சியம், s. A certain poet.

வண்ணக்குழலி, s. A beautiful woman with perfumed hair. (p.)

வண்ணக்குழிப்பு—வண்ணக்குனிப்பு, s. A melodious tune with a sprightly succession of short syllables. See குழிப்பு.

வண்ணமகள், s. A lady's maid, a woman employed in dressing and adorning another.

வண்ணாந்தக்குக்கீண்ணம்பாடுகிறான்........He sings an unmelodious tune, i. e. he is contrary. [prov.]

வண்ணாத்தி, s. The name of a bird, Mainate, ஓர்பறவை. 2. [also வண்ணாத்திப்பூச்சி.] An insect, ஓர்பூச்சி. 3. A washer-woman. See வண்ணான்.

வண்ணான், s. [fem. வண்ணாத்தி, pl. வண்ணார்.] A washer-man, bleacher, as ஏகாலி.

அழுக்குவண்ணானுக்குப்போட்டிருக்கிறது......The soiled cloths are given to the washer-man.

வண்ணான்துறை — வண்ணாரத்துறை, s. The water-side, where washer-men wash.

வண்ணான்மாற்று, s. Cloths given by washer-men in exchange. See மாற்று. 2. [fig.] Any thing temporary, evanescent, ephemeral.

வண்மை, s. Bounty, liberality, ஈகை. 2. Quality, good quality, property, குணம். 3. Beauty, அழகு. 4. Reputation, celebrity, as கீர்த்தி. 5. Truth, மெய்ம்மை. 6. Fruitfulness, fertility, abundance, வளமை. 7. Manner, nature, விதம். (சது.)

வதக்கம், s. Fatigue; lassitude, வாட்டம்; [ex வதங்கு.]

வதக்கு, கிறேன், வதக்கினேன், வேன், வதக்க, v. a. To cause to fade, to make dry, to scorch, to parch, வாட்ட. (c.)

வதக்கிக்கட்டுதல், v. noun. Applying scorched leaves, or plants, to a wound.

வதக்குவதக்கெனை — வதுக்குவதுக்கெனை, inf. To be hard, or tough; not tender; not well boiled, as greens, &c., வேவாதிருக்க.

வதங்கு, கிறேன், வதங்கினேன், வேன், வதங்க, v. n. To wither, to fade away, to grow dry, வாட. (c.)

செடிகள்வாடிவதங்கிப்போயின. The plants faded away.

வதங்கல், v. noun. That which is withered.

•வதந்தி, s. Speech, talk, report, பேச்சு. W. p. 732. VADANTI.

லோகவதந்தி. The usage of the world.

•வதம், s. Murder, கொலை. W. p. 598. BAD'HA.

வதன், s. A murderer, கொலைசெய்வோன். (சது.)

•வதரி, s. The Jujube tree, as பதரி.

வதவல், s. That which is partially dried or parched, அரைக்காய்ச்சல்.

வதவலரிசி—வதவரிசி, s. Rice not well dried. (Beschi.)

வதறு, கிறேன், வதறினேன், வேன், வதற, v. n. [Tel.] To chatter, to prate, to be talkative; to use abusive language, திட்ட; [ex Sa. Vada, to speak.]

வாயாலேவதறுகிறவன். He is a great prater, and abuser.

•வதனம், s. The mouth, face, countenance, முகம். W. p. 732. VADANA.

•வதானியன், s. A munificent man, a bountiful giver, உதாரன். (Sa. Vadanya.) 2. An epithet of Kuvêra, குபேரன். (சது.)

வதி, s. Mire, சேறு. 2. A way, வழி. (சது.)

எல்லாம்வதியிற்கிடக்கிறது. The things are trodden down in the way.

வதி, கிறேன், ந்தேன், வேன், ய, v. n. To dwell, to abide, to sojourn, to tarry, to stay, தங்க. (பஞ்சதச.)

வதிதல், v. noun. Tarrying, sojourning.

•வதிட்டன், s. Vasishta, husband of அருந்ததி, as வசிட்டன். (p.)

•வதிரன், s. A deaf person, as பதிரன், செவிடன். (சது.)

வதில். In lieu of. See பதில்.

வதுக்கு, s. [Tel. பதுக்கு, బ్రతుకు.] An improved condition, good circumstances.

வதுக்காயிருக்கிறான்—வதுக்குபெற்றிருக்கிறான். He is in better circumstances.

வதுவர், s. [pl.] Horsemen, cavaliers, குதிரைப்பாகர். 2. Riders on elephants, யானைப்பாகர். (சது.)

வதுவை, s. A recent marriage, first joining, புதுமணம். 2. Smell, வாசனை. (சது.)

•வதை, s. Murder, as வதம். [See சித்திரவதை.] 2. Affliction, torment, வாதனை. 3. A honey-comb, தேன்வதை.

அவனைவதைசெய்தான். He killed him.

வதை, கிறேன், ந்தேன், வேன், ய, v. n. To be afflicted, distressed in agony, துன்பப்பட.

சாப்பாடில்லாமல்வதைகிறான். He is distressed for food. (R.)

வதை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To kill, to murder, கொல்ல. 2. To torment or distress, in body or mind, துன்புறுத்த.

ஒருவனைஉயிரோடேவதைக்கிறது. Putting any one to great pain.

•வத்தகம் — வர்த்தகம், s. Traffic, trade, commerce, வியாபாரம்.

வத்தங்கி, s. A tree. See வத்தேக்கு.

•வத்தமானம்—வர்த்தமானம், s. A matter, a business. 2. News, &c. See வர்த்தமானம்.

வத்தல், s. [Port. batel.] A little boat. 2. [vul. for வற்றல்.] Dried vegetable fruit.

•வத்தனை, s. Livelihood; wages. See வர்த்தனை.

வத்தாக்கு, s. [Port. Pateca.] The water-melon, கொம்மட்டி.

வத்தாவி, s. Batavia, the chief town in Java, ஓர்நகரம்.

•வத்தி, s. A wick, as வர்த்தி. W. p. 739. VARTHI. 2. [fig.] Slander, கோள்—There are different wicks, as சாம்பிராணிவத்தி, திவத்தி, பகல்வத்தி, மெழுகுவத்தி, விளக்குவத்தி, which see.

தீல்வத்தி, s. [prov.] Tarred wick burnt in the November-festival.

சுளுந்துவத்தி, s. Match for firing cannons. [limited.]

வத்தி, v. To increase, to grow, to thrive. See வர்த்தி.

•வத்திரம், s. The face, முகம். 2. A garment. See வஸ்திரம். W. p. 728. VAKTRA.

•வத்திராட்சம், s. A kind of nut worn by religious mendicants. See ருத்திராட்சம்.

•வத்து, s. A being, thing, &c. See வஸ்து.

வத்தேக்கு, s. The water-melon. See வத்தாக்கு. 2. [southern usage. வத்தங்கி, வத்தங்கிக்கட்டை.] A tree yielding a red-color, Sappan-wood, Casalpinia sappan, வத்தேக்குச்சாயமரம். (Beschi.)

வந்தனம்—வந்தனை. See வரு, v.

•வந்தனம்—வந்தனை, s. Reverence, homage, adoration, வணக்கம். W. p. 734. VANDANA.

வந்தனம் ஐயா. My respects, sir.

வந்தனைபுமக்குத்தந்தேன்மலரடியெனக்குத்தந்தாய்... I offered thee adorations, and thou permittedst me [to approach] thy holy feet.

வந்தனமாலை, s. The ornamental arch of a gate-way, வாயிலின்மேற்சித்திரம். 2. A wreath of flowers, or leaves, hung over the door of a house, தோரணம். [Sa. Vandanamala.]

திஷ்டிவந்தனே, s. Homage by waving lighted torches before great persons, or images. Compare ஆலத்தி.

வந்தனிக்க, inf. To reverence, to adore, வந்தனம்பண்ண.

•வந்தி, s. Bracelets, as கைவந்தி. 2. Perversity, pertinency, முரண்டு. (Beschi.) 3. As வந்தியை.
வந்தியானவுழவு. Difficult ploughing.
வந்தியானவேலை. Hard work.

•வந்திகள், s. Paid panegyrists, புகழ் வோர். 2. Retained minstrels, மங்கலப்பாடகர்; [also வந்தியர்.] 3. Poets, கவிஞர். (சது.)

வந்தி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To do homage, to salute reverentially.
வந்தித்துநிற்போர், appel. n. Paid panegyrists, as வந்திகள். (சது.)

•வந்தியர், s. See வந்திகள்.

•வந்தியை — வந்தி — வந்தை, s. A barren woman, மலடி. W. p. 599. BAND'HYA.

வந்து, s. Wind, காற்று. (சது.)

வந்தை. See வரு.

•வந்தை, s. Greatness, பெருமை. 2. See வந்தியை.

•வபனம், s. Shaving, சிரைக்கை. W. p. 734. VAPANA. 2. Baldness, மூண்டிதம்.

•வபு, s. The body, உடல். (Sa. Vapus.)

•வபை, s. The fat or marrow in the region of the navel, the caul, used in sacrifices, வயிற்றாபிக்குள்வெண்டுஇல் போன்றபுரையாகி யகிணம். W. p. 734. VAPA.

•வமனம், s. Vomiting, சத்திபண்ணுகை. 2. An emetic. W. p. 735. VAMANA.

•வமிசம் — வம்சம், s. Race, lineage, descent, kindred. W. p. 727. VAMSA.—For the compounds, see வங்கிஷம்.
வம்சபாரம்பரை, s. Genealogy.

வம்பலர், s. [pl.] Neighbors, அயலோர். 2. New comers, guests, புதியோர். (சது.)

வம்பல், s. A region of the world, திசை. (சது.)

வம்பு, s. Ribaldry, obscenity, brutal language, தீச்சொல். 2. Insolence, petulance, violence, தீச்செயல். 3. Braggardism, boasting, bombast, வீம்பு. 4. A woman's bodice, கச்சு. 5. Instability, நிலையின்மை. 6. Novelty, புதுமை. 7. An earthen vessel, a water urn, மிடா. 8. Smell, வாசனை. 9. An unseasonable or unripe fruit, வம்புக்காய். 10. A quarrel, சண்டை. (Beschi.) 11. (for.) A kind of cross-tree to which criminals are tied when whipped, வம்புமரம். 12. [prov.] A bastard, வம்புப்பிள்ளை.
வம்படிக்க, inf. To treat one with insolence.
வம்பன், s. [fem. வம்பி.] A mean, vile person.
வம்புதும்பு, s. Ribaldry and taunting.

வம்மரம், s. [for வன்மரம்.] A tree, Satin-wood. See வல்.

வயக்கு, v. To tame, break in, as வசக்கு.

வயங்கு, கிறேன், வயங்கினேன், வேன், வயங்க, v. n. To shine, ஒளிசெய். 2. v. a. conduct, manage, நடத்த. (p.)

வயங்கல், v. noun. Being bright. 2. Conducting, carrying on. (சது.)

•வயசு — வயது, s. Age, period of lifetime from birth, வயசுகாலம். 2. Youth, juvenility, இளமை. W. p. 735. VAYAS.
உனக்கெத்தனைவயசு. How old are you?
வயசுசென்றவன், appel. n. An old man.
வயசுபின்னிடுதல், v. noun. The passing of a life-time.
வயசுப்பிள்ளை - வயசுப்பிள்ளையாண்டான், s. A youth.
திரும்பினவயசிலே. In the post-meridian of life.

வயணம், s. [Tel. also வயனம்.] Manner, way, circumstance, neatness.
வயணமாய், adv. At large, minutely, neatly.
வயணமாய்ச்சொல். Speak particularly.
வயணமாய்ச்சாப்பிடுகிறது. Faring sumptuously.
குழம்புவயணமாயிருந்தது. The curry was very nice.

•வயது, s. Age. See வயசு.

•வயந்தம், s. The season of spring, as வசந்தம்.

வயம், s. Power, might, வலி. (நீதி.) 2. Victory, conquest, வெற்றி. 3. Horse, குதிரை. 4. Water, நீர். (சது.)
வயப்புலி — வயப்போத்து, s. A lion, சிங்கம். (சது.)
வயமா, s. A lion, சிங்கம். 2. A tiger, புலி. 3. An elephant, யானை; [ex மா.]
வயவரி, s. A tiger, புலி. (p.)
வயவன், s. [pl. வயவர்.] A hero, வீரன். 2. A black-bird, as கரிக்குருவி. 3. See வயவு.

•வயம், s. State of subjection, as வசம். 2. A bird, பறவை. (Sa. Vayas.)
வயத்தன், s. One in subjection;—for the compounds, see தன்வசத்தனுதல்.
காற்றுவயமாயிருக்கிறது. The wind is favorable.

வயல், s. A rice-field, கழனி. 2. Ground suitable for rice, மருதநிலம். 3. An open field, வெளி.
வயற்கரை, s. A rice-field. (a pleonasm.)
வயற்காவல், s. A guard in agricultural fields.
வயற்கொடிக்கி, s. A plant, Heliotropium Coromandelianum, L. For similar compounds as வயற்சள்ளி, வயற்செம்பை, வயற்றத்தி, or நிலத்தத்தி, வயல்செட்டி, வயல்மாதளை, வயல்மெருகு, see their primitives.
வயற்சார்பு, s. Agricultural tracts of country.

வயவன், s. A hero, a valiant man. See வயம், and வயவு.

வயவு, s. Desire, love, affection, ஆசை; [ex Sa. Vasa, to desire.] (சது.) 2. (சமா.) The womb, as வயாவு.
வயவன், s. A husband; a friend, காதலன். (p.)

வயளை, s. Spinage. See பசளை.

வயவை, s. A way, வழி. (சது.)

வயனம், s. Manner, mode, &c. See வயணம்.

வயா — வயாவு, s. Faintness, exhaustion from hunger, heat of the sun, &c., as சோர்வு. 2. The faintness, and weakness attending the early stages of gestation; the longings of a pregnant woman, மசக்கை. 3. The pains of child-birth, கருப்பவருத்தம். 4. The womb, கருப்பம். 5. Desire, as வயவு.
வயாமயக்கம், s. Dizziness of a pregnant woman.
வயாப்பண்டம், s. [vul. யா, யாப்பண்டம்.] Things longed for by pregnant women.

வயானம், s. A bird in general, பறவை. (சது.)

வயானன், s. A small black-bird, as வயவன். (சது.)

•வயிக்கிராந்தம் — வைக்கிராந்தம், s. A kind of native arsenic, as குமுதம்.

•வயிடூரியம் — வைடூரியம், s. [St. வைதூர்யம்.] A gem, lapis lazuli. See இரத்தினம்.—Note. The name is derived from a mountain where the stone is found, or a city where it is polished.

வயிதா, s. [Hind.] An instalment. See வாயிதா.

•வயித்தியம்-வைத்தியம், s. Doctoring, therapeutics, பரிகாரம். W. p. 810. VAID'HYA.
வயித்தியஞ்செய்ய — வயித்தியம்பார்க்க, inf. To doctor, to use healing arts.
வயித்தியநாதன், s. A form of Siva.
வயித்தியன், s. [pl. வயித்தியர்.] A physician.

•வயிந்தவம், s. A house. See வைந்தவம்.

வயிரங்கி, s. An instrument for opening the touch-hole of a gun. (Beschi.)

•வயிரம், s. [also வைரம்.] The heart of a tree, மரவயிரம். 2. A diamond, வச்சிரமணி. 3. A diamond-weapon, வச்சிராயுதம். 4. Hardness, solidity, as வச்சிரம். 5. Obstinacy, malice, கலஞ்சாதிப்பு. 6. Wrath, சினம். [Sa. Vaira.] 7. Club, தண்டாயுதம். 8. The point or edge of a thing, கூர்மை. 9. The twenty-second lunar mansion, திருவோணம். 10. An ornamental knob on a tusk or horn, கிம்புரி.
வயிரக்கடுக்கன், s. [loc. ரவைக்கடுக்கன்.] An ear-ring with a diamond inlaid.
வயிரச்சன்னம் — வயிரப்பொடி, s. Diamond-dust, very small diamonds.
வயிரஞ்சாதித்தல், v. noun. [com. வன்மஞ்சாதித்தல்.] Bearing a grudge, cherishing, and giving vent to malice.
வயிரத்தளம், s. A flat diamond, தட்டைவயிரம்.
வயிரப்படை, s. Any weapon, or war-instrument, made of diamond, வச்சிராயுதம். (சது.)
வயிரமணி, s. A diamond. 2. A prismatic-jewel of gold, ஆபரணம். (R.)
வயிரமுத்து, s. Sound pearls of the first quality.
வயிரவாளி, s. A diamond-arrow. 2. [prov.] A female ear-ornament.
உள்வயிரம். Internal soundness or hardness.
புறவயிரம். External soundness or hardness.

•வயிரவம், s. Fear. 2. A sect. See பைரவம்.

வயிரவசாந்தி, s. See சாந்தி.

வயிரவன், s. [also பைரவன், வைரவன்.] A demon, one of the sons, or an incarnation of Siva; under which form he is said to have cut off Brahma's fifth head.—Note. Of Bhairavas there are 80,000,000.

வயிரவன்மடை, s. Oblations and sacrifice, offered to Bhairava.

வயிரவி, s. [also பைரவி.] Durga, துர்க்கை. 2. A musical mode, ஒரிராகம்.

•வயிராகம் — வைராகம், s. Zeal, enthusiasm, as வயிராக்கியம். (Sa. Vairaga.)

•வயிராக்கியம் — வைராக்கியம், s. Absence of secular passions or desires, இச்சையின்மை. W. p. 811. VAIRAGYA. 2. [usage.] Zeal, earnestness, persistence, perseverance, fanaticism, மனோதிட்டம். 3. Obstinacy, pertinacity, பிடிவாதம். (c.)

ஞானவயிராக்கியம், s. Religious zeal; self-denial. (R.)—Note. பத்திவைராக்கியம், பிரசூதவைராக்கியம், மயானவைராக்கியம், see in their places.

வயிராக்கியசதகம்-வைராக்கியசதகம், s. A poem of a hundred verses on self-control, by சாந்தலிங்கதேசிகர்.

வயிராக்கியன், s. A zealot.

•வயிராவி, s. An enthusiast, a Byragee, as வைராகி.

•வயிரி—வைரி, s. An enemy, சத்துரு. 2. [com. வைரி.] A hawk, வல்லூறு; [ex வயிரம்.]

வயிரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. and v. a. To become unfeeling, to be hardened, to be obstinate, கடினப்பட.

வயிரிப்பு, v. noun. A hardening.

வயிரியம், s. A woollen cloth; a cloth made of hair, மயிர்ச்சீலை. (சது.)

வயிரியர், s. [pl.] Hired dancers, male or female, stage-players, கூத்தர். 2. Hired panegyrists, as வந்திகள். (சது.)

வயிர், s. A large trumpet, a horn, ஊதுகொம்பு. (சது.)

வயிறு, s. [gen. வயிற்றின், improp. வயறு.] Belly, paunch, stomach, உதரம். (c.) 2. The womb, கருப்பப்பை. (Ell. 171.)

எனக்குவயிற்றாலேபோகிறது. I have looseness of the bowels.

வயிறுமுழங்குகிறது. Wambling of the bowels.

வயிறுகொதிக்கிறது. The bowels yearn, (lit.) the belly boils.

வயிறுபகீரெனல். Trembling of the belly from sudden fear.

வயிறுகனத்துக்கொள்ள, inf. [v. noun வயிற்றுக்கனப்பு.] To feel heavy in the stomach, &c. See கன, v.

வயிறுகாய—வயிறுகாந்த, inf. To hunger.

வயிறுகுளிர, inf. To be satisfied, refreshed by food; also used adverbially.

வயிறுசம்பூரணமாகுதல், v. noun. Filling the stomach with food.

வயிறுதாரி—வயிற்றுமாரி, s. A glutton; a devourer.

வயிறுபொருமுதல்-வயிறூதுதல், v. noun. Puffing up of the belly, by indigestion. 2. Swelling of the belly from eating.

வயிறெரிய, inf. [v. noun வயிற்றெரிவு.] To feel heat in the stomach. 2. [fig.] To be envious, zealous, பொறாமைகொள்ள. 3. To yearn in compassion, இரங்க. 4. To be hungry, பசிக்க.

இந்தவயிற்றெரிவுஎன்னாலேபார்க்கக்கூடாது. I can't look upon this distressing scene.

வயிற்றிற்கிருமி, s. Belly-worms.

வயிற்றுக்கடுப்பு, s. Pains in dysentery, &c. 2. Dysentery.

வயிற்றுக்கட்டி, s. An abscess in the bowels.

வயிற்றுக்கனப்பு, s. Constipation, &c. See கன, v.

வயிற்றுக்குத்து, s. Piercing pain in the belly.

வயிற்றுக்கொதி, s. Hunger, &c. See கொதி.

வயிற்றுப்பறப்பு, s. [prov. வயிற்றுப்பதி.] Voraciousness. 2. Livelihood sought with great labor, (lit.) flying of the stomach.

வயிற்றுப்பாடு — வயிற்றுப்பிழைப்பு, v. noun. Livelihood.

வயிற்றுப்புகைச்சல், v. noun. [lit. smoking in the belly.] Excessive heat in the stomach from the duodenum, on account of long standing impurities.

வயிற்றுப்பிசும்—வயிற்றுப்பொருமல், s. Flatulency, tympany.

வயிற்றுச்சோற்றுக்குவேலைசெய்கிறது. Serving one for daily support.

வயிற்றுப்போக்கு. Looseness of the bowels. 2. Cholera.

வயிற்றுவலி—வயிற்றுநோய், s. Stomach-ache, belly-ache.

வயிற்றுளைவு, s. Cramp in the stomach. 2. Diarrhœa.

வயிற்றைமொறுத்தல், v. noun. Pinching one's self, stinting in one's food.

வயிற்றெரிச்சல்-வயிற்றெரிவு. Yearning, great sorrow, grief. 2. A pitiful object or event.

வயிற்றெரிச்சலென்னசொல்ல. What can I say of my bowel's yearning?

•வயினம், s. A bird, பறவை; [ex வயம்.]

வயினதேயன், s. The brahmany kite, கருடன். (p.)

வயின், s. Place, இடம். 2. Belly, stomach, வயிறு. 3. A house, வீடு. (சது.) 4. A particle used in declension of the seventh case of nouns, ஏழுனுருபு.

அவன்வயிற்செல்லாய். Go to him. (p.)

•வயோதிகம், s. [also வார்த்திகம்.] Old age, gray hairs, முதுமை; [ex வயஸ், et அதிகம்.] W. p. 735. VAYOD'HIKA.

வயோதிககாலம், s. Time of old age, or of gray hairs.

வயோதிகர், s. [pl.] Old persons, கிழவர்.

வரகு, s. A kind of millet, Paspalum frumentaceum, ஒர்பயிர்.—The different kinds are கேழ்வரகு, raggy; புல்வரகு, Paniculum colonum; பொடிவரகு, Panicam fluitans.

வரகம்வைக்கோல்—வரகுவைக்கோல், s. Its straw used for thatching.

வரகரிசி, s. Its grain freed from the husk.

வரகுக்கோழி, s. A small bustard, Floriken, ஒர்புள். (Ains. v. 1. p. 182.)

வரகுதிரி, s. A kind of small-pox. See உதிரி.

வரட்சி, s. [for வறட்சி.] A kind of disease, which reduces, wastes, and dries up the system.

•வரதை, s. A girl, a virgin, கன்னி. W. p. 735. VARADA.

வரத்து, s. A due, a right, a perquisite, வருமானம். 2. Income, revenue, resources, அசிறை. 3. See வரு, v. (c.)

வருகிறவரத்தின்மேலேசெலவழிக்கிறது. Limiting expenditure to income.

வரப்பு, s. [pl. வரப்புகள்.] A ridge to retain water in corn-fields, வயல்வரம்பு. (c.) 2. A limit, border, எல்லை.

வரப்புப்போட, inf. To make ridges.

வரப்புன், s. A rice-field, வயல். (சது.)

•வரம், s. Boon, gift, privilege, or endowment by a deity or some superior, கொடை. 2. Favor, help, அநுக்கிரகம். 3. Excellency, eminence, மேன்மை. W. p. 735. VARA. 4. One of the nine kinds of treasures, நவநிதியிலொன்று. (சது.)

வரகவி, s. A natural poet, a poetic genius.

வரங்கொடுக்க — வரமளிக்க, inf. To bless as a deity, to endow with supernatural gifts one who has performed rigid austerities.

வரதம், s. Bestowing a gift, granting a boon, ஈதல். (Sa. Varada.)

வரதன், s. One granting a boon, a benefactor, உபகாரன். 2. An epithet of Siva, Vishnu and Argha. (சது.)

வரநதி, s. The river Ganges, கங்கை. (சது.)

வரப்பிரசாதம், s. [appel. வரப்பிரசாதி.] Divine grace, spiritual gifts. (local.)

வரம்பெற்றவன், appel, n. A man who has a particular gift or talent.

வரர், s. [pl.] Sages, மேலோர். 2. Celestials, வானோர். (சது.)

வரன், s. A husband, புருடன். 2. An epithet of Siva and Brahma—as granting boons. 3. An elder brother, தமையன்.

வராங்கம், s. The head, தலை. (சது.) 2. An elegant form, அழகியவுருவம். 3. A celestial body, முத்திபெறுமெய்; [ex அங்கம்.]

வரேந்திரன், s. One richly gifted.

வரோதயன், s. One born by special favor of a god, வரத்தினாற்பிறந்தவன்.

வரம்பு, s. A low ridge in a tilled piece of ground, as வரப்பு. 2. (சது.) A boundary, limit, extent, எல்லை. (சூடா.) 3. A way, வழி. 4. (R.) A brim, விளிம்பு.

வரம்புயரநீருயரும். As the ridges are raised, the water will rise.

வரம்பிகக்க, inf. To exceed limits, to be boundless, அளவுகடக்க. (p.)

வரம்பிலாற்றல், s. Almighty power.

வரம்பிலின்பமுடைமை, v. noun. Possessing infinite happiness, one of the attributes of the Deity. See எண்குணம், under குணம்.

வரம்பில்காட்சி, s. Omniscience.

வரம்பில்ஞானம், s. Infinite wisdom.

வரம்பின்மை, *v. noun. neg.* Being without limit.

வரம்புகட்ட, *inf.* To make ridges or banks in rice-fields to retain the water. 2. To embank, to make a dam. 3. To allot, assign, appropriate.

வரம்புதிரட்ட, *inf.* See திரட்டு, *v.*

•வரர், *s.* Sages. See வரம்.

வரலாறு, *s.* Circumstances, adjuncts, details, சங்கதி. 2. Origin, மூலம். 3. Example in grammar, or science, of the use of words, உதாரணம். 4. A table of contents, அட்டவணை. 5. To wit, namely, as follows, on this wise, திருஷ்டாந்தம். 6. (*Beschi.*) A passage; a coming, வருமாறு; [*ex* வரல் *et* ஆறு, way.]

வரலாற்றுவஞ்சி, *s.* A panegyric in the வஞ்சிப்பா verse on high birth, greatness and fame. See பிரபந்தம்.

நதியின்வரலாறு. The tributaries of a river.

வரவை, *s.* A square or compartment in a paddy-field bounded by ridges, வயல் குட்சதுரம். (*p.*)

•வரன், *s.* A husband, &c. See வரம்.

வரன்று, கிறேன், வரன்றினேன், வேன், வரன்ற, *v. n.* To sweep along or over the ground, as a river, கொழிக்க, வார. (சது.)

•வராகம், *s.* A swine, a hog, a boar, பன்றி. 2. A *purana.* See புராணம். W. p. 736. VARAHA. 3. An incarnation of Vishnu. See திருமாலவதாரம்.

வராகன், *s.* A gold-coin with the figure of a boar; *com.* a Pagoda, worth three and a half rupees, பொற்காசு. 2. (சது.) Vishnu from his incarnation of a boar, விஷ்ணு.

வராகி, *s.* The sakti of Vishnu. See மாதர்கள், ஏ.

•வராங்கம், *s.* The head, &c. See வரம்.

•வராடகம், *s.* The seed-vessel of the lotus, தாமரைக்காய். 2. Small shells, cowries, பலகறை. W. p. 736. VARAT'AKA.

•வராடம், *s.* Small shells, பலகறை, (*Sa. Varat'a.*) 2. A country, as மராடம்.

•வராடி, *s.* Small shells, as வராடம். 2. [*Sa. Varasi.*] Coarse cloth, முரட்டுசீலை. (*p.*)

வராட்டி, *s.* [*for* வறட்டி.] A dried cake of cow-dung, used for fuel, எருவறட்டி.

வராத்தம், *s.* [*Arab. also* பராத்தம்.] An assignment, an order, கட்டளை.

வராத்தக்காரன், *s.* The bearer of an order.

வராலி, *s.* A kind of shrub. See விராலி.

வரால், *s.* [*improp.* விரால், *com.* விராமீன்.] A fish, Ophicephalus striatus, ஓர்மீன். (சது.) 2. See வரு, *v.*

•வராளம், *s.* A snake, பாம்பு. (சது.)

•வராளி, A kind of melody. See இராகம். W. p. 736. VARALI.

வரி, *s.* A line; a streak, வரை. 2. The streak on shells; grained streaks in timber, சங்குவரி. 3. Tribute, impost, toll, tax, duty, குடியிறை. 4. A letter, a line of writing, எழுத்து. 5. A course, as of stones or bricks, கல்வரி. (*Beschi.*) 6. A dot; spots on, the face, &c., தேமல். 7. Length, distance, நீளம். 8. Rice in the husk, நெல். 9. A beetle, வண்டு. 10. A road, வழி. 11. A melody in general, இசைப்பாட்டு. 12. The lines in the palm of the hand, கைவரை.

அதுவரிவரியாயிருக்கிறது. It is striated.

ஒற்றைவரி. A single line.

புல்வரி, *s.* Tax on pasturage—*For* தலைவரி, மனைவரி, நிலவரி, *see in their places.*

வரிக்கடை, *s.* A chafer, வண்டு. (சது.)

வரிக்குதிரை, *s.* A horse with marks, or having different colors. 2. A horse not saddled.

வரிக்குயில், *s.* The striped koil bird.

வரிக்கோரை, *s.* A kind of grass.

வரிச்சந்தி, *s.* A place where four streets meet, a cross-way, நாற்றெருகூடுமிடம். (சது.)

வரிதண்ட, *inf.* To gather a tax.

வரிபிளந்தெழுத, *inf.* To interline.

வரிப்பணம், *s.* Money collected by taxation.

வரிப்புலி, *s.* A striped tiger.

வரிப்புறம், *s.* A squirrel striped on its back, அணில். (சது.)

வரியச்சு, *s.* Black lines laid under paper to guide in writing. (*R.*)

வரியொட்டி, *s.* A kind of fish, ஓர்மீன்.

வரியோரா, *s.* A species of ஓரா fish.

வரிவைக்க — வரிபோட, *inf.* To impose, to tax. 2. To set bricks, &c., in a course.

முகட்டுவரி, *s.* A house-tax.

வரி, கிறேன், ந்தேன், வேன், ய, *v. a.* To write, to draw lines, எழுத. 2. To paint, சித்திரமெழுத. 3. To bind sticks in regular order for covering a hut, வரிச்சல்வரிய. 4. To tie together the openings of two bags to be laid on a bullock, சாக்குவரிய. (*c.*)

அவன்சம்மாவரிகிறான். He is going on writing.

வேஷ்டியைவரிந்துகட்டிக்கொண்டான். He gathered up and tied the folds of his garment round his waist.

வீடுவரிந்தாயிற்று. The roof-sticks are regularly tied.

வரிகயிறு, *s.* A rope to tie the loading of a cart.

வரிகோணியல், *s.* A bag joined with another.

வரிவடிவெழுத்து, *s.* Written, in distinction from spoken, letters.

வரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To bind, to join as a bridegroom and bride, கட்ட. 2. To smear, to paint, பூச. (*p.*)

வரிக்கை, *s.* [*improp. for* வருக்கை.] A jack-tree.

வரிசை, *s.* Order, regularity, row, ஒழுங்கு. 2. Custom, turn in duty or work, முறைமை. (*Ell.* 190. 5.) 3. A present, a donation—especially to a daughter as a marriage-portion, or otherwise, after marriage, வெகுமானம். (சது.) 4. A distinctive mark of honor, or a privilege, granted by authority, as பரிசு. 5. Good circumstances, நற்சீர்.

எட்டெட்டுப்பேராகவரிசைப்படுத்து. In ranks or files of eight deep.

வரிசையாய்நில்லுங்கள். Stand in a line.

கருமவரிசையால். For the sake of securing an object. (நீதி. 65.)

வரிசைகொடுக்க, *inf.* To give presents to a married daughter.

வரிசைகொண்டுபோக-வரிசையெடுக்க, *inf.* To take presents—as the friends of a bridegroom or bride.

வரிசைக்காரன், *s.* An orderly well behaved man. 2. One whose turn has come for duty, as முறைகாரன். (*R.*)

வரிசைக்கிரமம், *s.* Order, regularity.

வரிசைசெய்ய, *inf.* To render civility or courtesy.

வரிசைதப்பி, [*as an adv.*] Without order.

வரிசைபார்த்தல், *v. noun.* Being too precise, formal, or ceremonious.

வரிசைபெற, *inf.* To get distinction or honor.

வரிச்சு—வரிச்சல், *s.* [*loc.* வலிச்சல்.] Transverse lath, or rods, tied across a roof, கலங்கார்வரிச்சு.

வரிச்சாணி—வரிச்சலாணி, *s.* Nails for reapers.

புல்வரிச்சு, *s.* Roof-sticks, tied upon thatch.

•வரிடன், *s.* One of a class of religious ascetics, துறவிதசக்கியரிஷி.

வரியரிசி, *s.* Cumin, சீரகம்.

வரியாத்து—வரியாத்துக்கிழங்கு, *s.* Rhubarb, Rheum palmatum, ஓர்மருந்து.

•வரியான், *s.* The eighteenth of the astrological yogas. See யோகம். W. p. 736. VAREEYAS. 2. An ascetic, as வரிடன்.

வரு, கிறேன் [*com.* வாறேன்], வந்தேன், வேன், வர, *v. n.* [*neg.* வரேன், வாரேன், *imper.* வா.] To come, 2. To happen, occur, சம்பவிக்க. 3. To accrue, be at command—as strength to move a limb, இயல. 4. To proceed spontaneously, இயல்பாய்வர. 5. (*fig.*) To come to mind, தோன்ற.

நீவந்தகாரியமென்ன. What is the object of your coming?

நாளைக்கங்கேவருவேன். I will come there to-morrow.

உனக்குப்பாடம்வருமா. Do you know your lesson?

நீஎப்போவந்தாய். When did you arrive?

எனக்குஅடிக்கக்கைவராது. My hand is not at command to strike him.

அவன்வந்தாபோலேபோனான். He returned no sooner than he came.

உனக்குஎன்னவந்தாலும்நான்இருக்கிறேன். I will be [near], whatever may happen.

இப்பொழுதுஅவனுக்குப்பெருமைவந்துவிட்டது. He is now very proud.

வந்ததைவரப்பற்று. Receive whatever comes.

அவனுக்குவியாதிவந்துகொண்டேஇருக்கிறது. He is always subject to sickness.

ஒருமனம்வந்தால்கொடுப்பான். He will give you if he have a mind.

உனக்குச்சம்பளம்வந்ததா. Did you get your wages?

வாய்வந்தவாறெல்லாம்புகழ்ந்தார்கள். They offered praises with every kind of commendation which could proceed from their mouths. (பிரபுலி.)

எனக்குநினைவுவந்தது. I just remembered.

அப்போதுவாய்வரவில்லை. I could not speak then.

அவனுக்கிரண்டுகாலும்வராது. He is lame in both feet.

வந்தனம்—வந்தும். We came. (*p.*)

வந்தனை-வந்தாய். You came (*second pers. sing.*) (*p.*)

வரக்காட்ட, *inf.* To send off.

வரத்தகும். It is right to come.

வரத்து. [also வருத்து.] Advent; coming in; 2. The entrance of water. 3. The confluence of the water.

இத்தக்குளத்துக்குவரத்தெங்கே. Where is the entry of water to this tank?

வரத்தென்னபோக்கென்ன. What comes and what goes?

வரத்துப்போக்கு. Going and coming. 2. Frequenting.

வரத்தாறு, s. A tributary stream.

வரத்துப்பல்லி, s. An obstructing lizard.

வரப்பற்றிக்கொள்ள, inf. To receive back again.

வரப்பார்க்க, inf. To expect, காக்க. 2. To suffer to come, இடங்கொடுக்க. 3. To wait for, எதிர்பார்க்க.

வரப்போகிறவைகள், appel. n. Future occurrences.

வரவர, [as adv.] By degrees, gradually, at length.

வரவரக்கண்டறிவோம். We shall learn by degrees.

வரவிட, inf. To send away.

வரவொட்டாதேயடிக்க, inf. To drive away people from coming to a worthy person.

வராதநாள், s. Days of absence.

வாரல். Come not. (p.)

வருக. Please to come.

வருகிற, as adj. Next.

வருகிறவாரம். Next week.

வருகிறமாசம். Next month, proximo.

வருகிறவருஷம். Next year.

வருகிறேன். I will come again. 2. I am just coming.

வருங்காலம், s. Future time. 2. The future tense. 3. The expected time of one's coming.

வருங்காரியம், s. A coming event.

வருத்து. A coming in. 2. As வரத்து.

வருபுனல், s. A river, the water of a river, ஆறு. (சது.)

வருமட்டும்—வருமளவும். Until coming.

வருமாறு, s. The way, manner, as வரலாறு.

அவைவருமாறு. They are as follows.

வருமானம், s. Income, sources of income.

வருமானவரி, s. Income-tax.

வருமொழி, s. [in gram.] The word which follows the antecedent.

வருவதும்போவதும். Coming in and going out.

வருவாய், s. Source, means of acquirement, resources or income, also called, பொருள்வருவாய். (Ell. 280.)

வரல், v. noun. A coming, வருகை. 2. As வாரேல், come not. (p.)

வரலாம். I, you or he may come.

வரலாறு, s. As வருமாறு. 2. See in its place.

வரன்முறை, s. A schedule, a genealogical list, வரலாறு. 2. Old, பழமை. (சது.)

வரவு, v. noun. Coming, as வருகை. 2. Income, வருமானம். 3. Any thing received, கைப்பற்றினது.

வரவுவைக்க, s. To enter in the receipt.

வருகை, v. noun. A coming; an advent.

வருகைநாள், s. The day for arriving.

அவருடையவருகைக்கெதிர்பார்த்திருக்கிறேன்.... I am looking for his coming.

கிறிஸ்துவின்இரண்டாம்வருகை. The second advent of Christ. (Chris. usage.)

•வருக்கம்—வர்க்கம், s. A class, kind, species, வகுப்பு. 2. A multitude, a crowd, கூட்டம். 3. A section, a chapter, அத்தியாயம். 4. An increase by a given ratio, also a square number. W. p. 737. VARGA. 5. Order, regularity, ஒழுங்கு.

வருக்கம், அ. The eight things used for medicines. See அஷ்டவருக்கம்.

வருக்கஎழுத்து, s. A row of compound letters of the alphabet. 2. Classes of letters in the Sanscrit.

வருக்கக்கோவை, s. An alphabetical poem in which the letters with which Tamil words begin are followed in regular order. See பிரபந்தம்.

வருக்கசங்கலிதம். s. Summation of the series of squares of the numbers in their natural order. See சங்கலிதம்.

வருக்கத்திரயங்கள், s. Three orders or classes. 1. மூலிகைவர்க்கம், vegetables; 2. மிருகவர்க்கம், animals; 3. பாஷாணவர்க்கம், minerals, particularly, kinds of arsenic.

வருக்கமாலை, s. A poem subject to restrictions as to the initial letter of every line. See பிரபந்தம்.

வர்க்ககனம், s. The square of a cube.

வர்க்கமூலம், s. The square root.

இரடிவர்க்கம், s. A stanza of two lines in which the first and middle letters of each are the same.

வருக்கு—வர்க்கு, s. Rice-gruel, கஞ்சி.

•வருக்கை—வர்க்கை, s. Order, as வர்க்கம், ஒழுங்கு. 2. Class of letters of the Alphabet—as உயிர்வருக்கை, the class of vowels; மெய்வருக்கை, the class of consonants; உயிர்மெய்வருக்கை, the class of syllabic compounds. (சது.) 3. The jack-tree, பலாமரம், also called வருக்கைப்பலா.

•வருச்சம் — வர்ச்சம், s. Leaving, abandoning. W. p. 737. VARJJA.

உனக்குவர்ச்சராகுகாலம்பிடித்தது. You are under a bad influence.

வர்ச்சகாலம், s. See வர்ச்சியகாலம்.

வருச்சி — வர்ச்சி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To quit, abandon, avoid, or abrogate, நீக்க; [ex வருச்சம்.]

•வருச்சியம் — வர்ச்சியம், s. [com. வர்ச்சம்.] What is to be shunned, excepted, abandoned, தள்ளப்படுவது. (Sa. Varjjya.)

வர்ச்சியகாலம், s. [com. வர்ச்சகாலம்.] A point in each lunar mansion, during the passage of the moon, at which no business should be begun. 2. [met.] An inauspicious time, கேடுகாலம்.

வர்ச்சியாவர்ச்சியந்தெரியாதவன், appel.n. One who does not know what to choose and what to reject.

•வருஷம் — வருடம், s. A year or a year's time. ஆண்டு. 2. Rain, மழை. 3. A principal division of the known continent, கண்டம். W. p. 740. VARSHA.—The common reckoning is by a cycle of 60 years, the years of which are: 1. பிரபவ. 2. இபவ or விபவ. 3. சுக்கில. 4. பிரமோதூத. 5. பிரசோற்பத்தி. 6. ஆங்கீரச. 7. சிமுக, or ஸ்ரீமுக 8. பவ. 9. யுவ. 10. தாது. 11. ஈசுர. 12. வெகுதானிய. 13. பிரமாதி. 14. விக்கிரம. 15. விச or விஷு. 16. சித்திரபானு. 17. சுபானு. 18. தாரண. 19. பார்த்திப. 20. விய.—which twenty are thought to be good years or உத்தமவிம்சதி.—21. சர்வசித்து. 22. சர்வதாரி. 23. விரோதி. 24. விகிர்தி. 25. கர. 26. நந்தன. 27. விசய. 28. சய. 29. மன்மத. 30. துர்முகி. or துன்முகி. 31. ஏவிளம்பி. 32. விளம்பி. 33. விகாரி. 34. சார்வரி. 35. பிலவ. 36. சுபகிருது. 37. சோபகிருது. 38. குரோதி. 39. விசுவாவசு. 40. பராபவ.—which are regarded as twenty medium years, மத்திமவிம்சதி.—41. பிலவங்க. 42. கீலக. 43. சௌமிய. 44. சாதாரண. 45. விரோதிகிருது. 46. பரிதாபி. 47. பிரமாதீச. 48. ஆனந்த. 49. இராட்சத. 50. நள. 51. பிங்கள. 52. காலயுத்தி. 53. சித்தார்த்தி 54. இரௌத்திரி. 55. துன்மதி. 56. துந்துமி. 57. உருத்திரோற்காரி. 58. இரத்தாட்சி. 59. குரோதன. 60. அட்சய. This last twenty are considered unfortunate, அதமவிம்சதி. See the words in loco. In books and inscriptions, the year of the Caliyuga, or of the era of Salivahana, is sometimes also given.

இரண்டுவருஷகாலம். The space of two years.

வருஷசங்கிரமம் — வருஷப்பிறப்பு, s. Beginning of a year.

வருஷந்தோறும் — வருஷவாரி. Every year.

வருஷகாலம், s. Time of rain, மாரிகாலம். (சமா.சது.)

வருஷாந்தம்— வருஷாந்தரம். Yearly, year by year.

வருஷாந்தரசங்கம் — வருஷாந்தரக்கூட்டம், s. [Chris. usage.] An anniversary meeting of a religious society.

வருஷாந்தரவரத்து, s. Annuity.

வருஷி-வருடி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To rain. 2. v. a. [fig.] To shower down arrows, flowers, &c., சொரிய.

வருடு, கிறேன், வருடினேன், வேன், வருட, v. a. To stroke, to shampoo; to beat or thrum a musical instrument, தடவ. (p.)

வருடல், v. noun. Stroking, chafing.

வருடை, s. [in mythology.] The eight-footed bird, as சரபம். 2. A fleecy sheep, குறும்பாடு. 3. Aries of the Zodiac, மேடவிராசி. 4. Mountain-sheep, வரையாடு. (சது.)

வருட்டம், s. The Neem-tree. See வேம்பு. (சது.)

வருட்டு, கிறேன், வருட்டினேன், வேன், வருட்ட, v. a. To fortify, encourage, strengthen, அப்புறத்த. (p.)

வருட்டல், v. noun. Encouraging, strengthening. (சது.)

•வருணம், s. A color, நிறம். 2. A letter, எழுத்து. 3. A tribe, a caste, a class, சாதி. 4. A musical mode, இசைக்கவி. See வண்ணம். 5. Water, நீர். (Sa. Varun'a.)

நாலுவருணம், s. The four principal castes. See சாதி.

வருணம், ஐ. The five principal colors; 1. வெண்மை, whiteness; 2. கருமை, blackness; 3. செம்மை, redness; 4. பொன்மை, yellowness; 5. பசுமை, greenness. (சது.)

வருணப்பாய், s. [also வண்ணப்பாய்.] A variegated grass-mat.

வருணமண்டலம், s. Region of Varuna, god of the waters, in the upper-world.

வருணமிழைக்க, inf. To mix colors for drawing.

வருணம்பூச — வருணம்வைக்க — வருணம்போட, inf. To paint, to color.

வருணவில், s. The secondary rainbow, உபவானவில்.

வருணன், s. Varuna, god of the waters; regent of the west-point, *com.* வருணபகவான். 2. The fifth of the twelve Adityas. See துவாதசாதித்தர்.

வருணனுள், s. The twenty-fourth lunar mansion, சதயநாள். (சது.)

வருணாசாரம், s. The custom or usages of each class; [*ex* ஆசாரம்.]

வருணாஸ்திரம், s. A missile weapon, from வருணன். 2. A weapon the subject of incantations in the name of Varuna.

•வருணனை, s. Praise, panegyric, தோத்திரம். 2. Describing elegantly, exaggerating, சிறப்பித்தல். W. p. 738. VARN'ANA.

வருணி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To color a statement, to exaggerate, to describe elegantly; to praise, சிறப்பிக்க. 2. To show analogy, to make use of figures of comparison, உவமிக்க; [*ex* வருணம்.]

•வருத்தகம்—வர்த்தகம், s. [*also* வத்தகம்.] Trade, commerce, merchandize, வியாபாரம்.

வர்த்தகம்நடக்கிறதா. Is the trade going on?

வர்த்தகசங்கம், s. Chamber of commerce.

வர்த்தகம்விட, *inf.* To give out contracts to *weavers, painters, &c.* 2. To give up trade, &c.

வர்த்தகன், s. A merchant, a trader, வியாபாரி.

கூட்டுவர்த்தகர், s. A company in trade.

வருத்தம், s. Suffering, affliction, pain, suffering, துன்பம். 2. Annoyance, தொந்தரை. 3. Any kind of sickness. [*ex* வருந்து.]

அதெனக்குவருத்தமாயிருக்கிறது. It is very hard for me.

அவனுக்குவருத்தமாயிருக்கிறது. He is very sick.

வருத்தப்பட, *inf.* [*trans.* வருத்தப்படுத்த.] To be troubled, to suffer pain.

•வருத்தனை—வர்த்தனை, s. Wages or fee, வருமானம். (*Sa. Varttana.*)

வருத்து, s. A coming, as வரவு. 2. Income, as வருத்து.

வருத்து, கிறேன், வருத்தினேன், வேன், வருத்த, v. a. To afflict, to cause pain, to vex another, துன்புறுத்த. 2. To cause one to come, வரும்படிசெய்ய.

வருந்து, கிறேன், வருந்தினேன், வேன், வருந்த, v. n. To suffer, to be distressed, to be grieved, துன்புற. 2. v. a. To take pains, முயல. (நீதி.) 3. To beg earnestly, கெஞ்ச.

வருந்திக்கேட்கிறது. Soliciting, entreating.

யாவருக்கும்வருந்தின்றுக. Without molesting any. (*p.*)

வருந்திச்செய்ய, *inf.* To take trouble, to take pains.

வருந்தினர், *appel. n.* Distressed persons.

வருந்தல்—வருந்துதல், v. *noun.* Being troubled; taking pains; soliciting.

•வருமம், s. Malice. See வர்மம்.

வருவாய், s. Source of income. See வரு.

வருவி, க்கிறேன், த்தேன், ப்பேன், வருவிக்க, v. a. To cause to come, வரச்செய்ய. 2. [*in gram.*] To supply an omission, to express what is understood. [*ex* வரு.]

•வரூதம், s. A fender or ledge of wood, or of tiger's skin, for a car, தேரைப்பாதுகாக்கும்புலித்தோல்முதலியன W. p. 736. VAROO-T'HA.

•வரூதினி, s. An army, படை. (*Sa. Varut'hinee.*) 2. The name of a goddess, ஓர்தெய்வப்பெண். (சது.)

வரை, s. Measure, limit, அளவு. 2. A hill or mountain, மலை. 3. A shore, bank, margin, கரை. 4. A small ridge, as சிறுவரம்பு. 5. The lines in the finger, விரல்ரேகை. 6. The bambû, மூங்கில். (சது.) 7. A furrow of the forehead, a wrinkle in the face, வரி. 8. Marriage, விவாகம்.

அதுவரைக்கும்போ. Go as far as that [place].

காலதுவரைக்கும். Up to the present time.

வரைசிறகரிந்தோன், *appel. n.* An epithet of Indra, இந்திரன். (சது.)

வரைபகவெறிந்தோன். An epithet of Kumara, குமரன். (சது.)

வரைபொருட்பிரிதல், v. *noun.* Departing to get means for an intended marriage.

வரையரமகளிர், s. Goddesses residing in mountains, மலைவாழ்தெய்வப்பெண். (*p.*)

வரையற, *inf.* [*as an adv.*] Without remainder, exactly. 2. Abundantly.

வரையறத்தீர்த்துப்போட்டேன். I cleared his account.

வரையறக்கொடுப்போன், *appel. n.* One who gives abundantly.

வரையறவு—வரையறை, v. *noun.* Limit, measure, bound, எல்லை. 2. Strictness, exactness, rigidity, திட்டம். 3. Economy, frugality, provident care, மட்டானசெலவு.

வரையறுக்க, *inf.* To find out, determine or specify a number, or a meaning, மதிக்க. 2. To determine in order the tenses, &c., in grammar. 3. To settle, decide, determine, define, limit, ascertain, எல்லைப்படுத்த. 4. To surround, encircle, வளைக்க.

வரையறுத்தபாட்டியல், s. The name of a composition, ஓர்நூல்.

வரையாடு, s. A kind of mountain-sheep.

வரையுறுத்த, *inf.* To bend, to crook or make crooked, வளைக்க. (*p.*)

வரையோடு, s. [*prov.*] The mouth of a broken pot placed on the top of a mortar to keep the grain from scattering.

வரை, கிறேன், ந்தேன், வேன், ய, v. a. To write, எழுத. 2. To take, கொள்ள. 3. To paint and draw, to delineate, சித்திரமெழுத. 4. To reject, நீக்க. 5. To exchange, மாற்ற. 6. To marry, விவாகஞ்செய்ய. (சது.)

வரையாக்கொடை. A gift which is never withheld.

வரைப்பு, v. *noun.* A limit or border, எல்லை. 2. A wall of a fortification or fane, மதில்.

வரைவு, v. *noun.* Measurement, அளவு. 2. A limit, or bound, எல்லை. 3. Separation, rejection, பிரிவு. 4. Change, perversity, மாறுபாடு. (சது.) 5. Marriage, விவாகம்.

வரைவின்மாது, s. A profligate, one who lives not within proper limits, வேசை. (சது.)

வரோணிக்கம், s. [*R. C. usage.*] A casket for the crucifix.

•வர்க்கம், s. A kind, caste, &c. See வருக்கம்.

•வர்க்கை, s. Order, &c. See வருக்கை.

வர்க்கி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [*in arith.*] To square a number.

•வர்ச்சம்-வர்ச்சியம், s. That which should be avoided. See வருச்சியம்.

வர்ச்சி—வருச்சி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To avoid, reject, leave, separate from, தள்ள.

•வர்ணம், s. Color, tribe, &c. See வன்னம், வருணம், வன்னம்.

•வர்த்தகம்—வத்தகம், s. Trade. See வருத்தகம்.

•வர்த்தமானம் — வருத்தமானம்— வத்தமானம், s. [*in gram.*] Present time, present tense, நிகழ்காலம். W. p. 739. VARTTAMANA. 2. Circumstances, particulars, occurring events, நிகழ்வு. 3. Matter, business, சங்கதி. 4. News, செய்தி.

திரிகாலவர்த்தமானங்கள். Occurrences of the past, present and future.

நடந்தவர்த்தமானங்களைச்சொல்லு. Tell (me) the particulars of the case.

வர்த்தமானி, s. A giver of news; a news-paper.

•வர்த்தனம் — வருத்தனம் — வத்தனம், s. Increase, பெருகுகை. W. p 739. VARDD'HANA.

•வர்த்தனை—வருத்தனை — வத்தனை, s. Wages, reward, fees, வரவேண்டியது.—*By Beschi*, a reward to a brahman, &c. W. p. 738. VARTTANA.

•வர்த்தி, s. The wick of a lamp, &c. See வத்தி. 2. A thin plate under gems, இரத்தினங்களின்கீழ்ப்பதிக்குந்தகடு.

வர்த்தி — வருத்தி — வத்தி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To increase, to grow abundantly, to thrive, அதிகரிக்க; [*ex Sa. Vardd'ha.*]

எனக்கொன்றும்வர்த்திக்கிறதில்லை.........Nothing prospers with me.

வர்த்தித்திருக்க—வர்த்தித்துவர, *inf.* To be multiplied.

வர்த்திப்பு, v. *noun.* Augmentation, increase.

•வர்த்துலம் — வருத்துலம் — வத்துலம், s. That which is circular, round, வட்டவடிவு. W. p. 739. VARTTULA.

•வர்மம்—வருமம், s. [*also* வன்மம்.] Malevolence, spite, &c. See மர்மம்.

வர்மி, s. [*masc. and fem.*] A malicious person.

வர்மி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To hate, to bear hatred, to act from malice, சலஞ்சாதிக்க. (*Beschi.*)

வர்ன்னி, v. To praise. See வன்னி.

வலக்காரம், s. A lie, பொய். (சது.) 2. See under வலம், *Sa.*

வல, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To become fruitful, fat or strong, கொழுக்க, as பலக்க. 2. To bend, வளைக்க; [*from Sa. Vala.*] 3. To say, to speak, சொல்ல. (*p*)

வலங்கமத்தார். See வலம், *Tamil.*

•வலங்கம், s. A large family, many relations, பரிசமுசாரம்; [*ex* வலம், *Sa.*]

வலங்கமுடையான். One who has many relatives.

வலங்காரம், s. The side of a drum which is glued.

வலங்கை, s. The right hand. *For other similar compounds, see* வலம், *Tam.*

வலசல், s. A change of abode by a family. *(R.)*

வலசை, s. [*Tel.*] Flying for fear, removing hastily, குடிபோதல். (*c.*)

வலசைவாங்கிப்போகிறது. Flying from home for fear of an enemy.

வலது. See under வலம், *Tamil, and Sa.*

வலந்தம், s. A word, வசனம். 2. A curve, an arch, a vault, வளைவு; [*ex* வல, *v.*]

வலப்பம், s. A slate-stone used for writing. See பலப்பம்.

வலம், s. [*adjectively,* வல.] The side, இடம். 2. The upper side, over, or upon, மேல். 3. The right hand or dexter side, as வலக்கை, வலப்பக்கம், &c. 4. A form of the seventh case, or local ablative, ஏழனுருபு.

கைவலத்தியாழ்வரைகின்றது. A lute was in his hand. (*p.*)

வலக்கை, s. The right-hand.

வலக்கைகொடுக்கிறது. To pledge, giving the right-hand.

வலங்கமத்தார்-வலங்குலத்தார், s. [*prop.* வலங்கைபுறத்தார்.] An honorific appellation of Pariahs.

வலங்கை, s. The right-hand, as வலக்கை. 2. The right-hand class.

வலங்கையான், s. [*pl.* வலங்கையார், *sometimes* வலங்கைபுறத்தார்.] One of the right-hand class.

வலசாரி, s. Turning, wheeling to the right—as in dancing, &c.

வலஞ்சுழி, s. A curl to the right; a curl of hair on a horse's forehead to the right, as a good mark.

திருவலஞ்சுழி. The name of a town on the Kâvery, from a whirlpool in the river; the subject of a legend.

வலது, *appel. n.* That which is on the right; *oppos. to* இடது. 2. See வலம், *Sa.*

வலதுகை, s. The right-hand.

வலதுகைப்பாரிசம் — வலதுபாரிசம், s. The right-side.

வலத்துமாடு — வலத்தெருது, s. The right-hand ox, when yoked.

வலத்தே. To the right-side, *emphatic.*

வலப்பக்கம்—வலப்புறம்—வலதுகைப் பக்கம்—வலதுகைப்பாரிசம், s. The right-side.

வலம்புரி, s. That which is turned to the right. 2. A chank turning to the right, being of great value, *commonly* வலம்புரிச்சங்கு. 3. The circumgyration of a temple, &c., to the right, பிரதட்சிணம். 4. A shrub, Helicteres Isora, *L.*, ஒரு செடி.

வலம்புரிக்காய், s. The fruit of the above shrub, used medicinally.

வலம்புரிப்புல், s. A grass, Andropogon contortum.

•வலம், s. Power, potency, as பலம். 2. Victory, triumph, ascendency, வெற்றி. 3. An army, a force, சேனை. W. p. 741. Vala.

வலக்காரம், s. Might, power, authority.

வலக்காரம்பேசுகிறான். He speaks ostentatiously.

வலது, *appel. n.* That which is strong.

அதுஎன்வலதல்ல. It is not in my power.

வலவந்தம், s. [*vul.* வலவந்தரம், வலற்காரம்.] Compulsion—as பலவந்தம்.

வலவந்தன், s. A powerful man.

வலவன், s. A capable man, சமர்த்தன். 2. A charioteer, தேர்ப்பாகன். 3. A conqueror, வெற்றியாளன். 4. Vishnu, விஷ்ணு.

வலவை, s. As இடாகினி. 2. An epithet of Kali, காளி. 3. A strong woman, வல்லவள். 4. A strong man, வல்லவன். 5. A female attendant, *especially* on Cali, காளியேவற்பெண். (*சது.*)

வலன், s. One who is strong, வல்லவன். 2. An Asura, ஓரசுரன். 3. [*poet. form of* வலம்.] Strength, as பலம். 4. Victory, வெற்றி.

வலாட்டிகன்-வலாட்டியன், s. A powerful man, as பலாஷ்டிகன், பலாட்டியன்.

வலோத்காரம்—வலோற்காரம், s. Force, compulsion, as பலோத்காரம்.

•வலயம், s. A bracelet, அஸ்தகடகம். 2. An enclosure, சூழ். W. p. 741. Valaya. 3. A circle, வட்டம். 4. The sea, கடல். 5. A tank, குளம். (*சது.*)

•வலாகம், s. A heron. See பலாகம்.

•வலாரி, s. Indra as the destroyer of Bala. See பலாரி.

வலி, s. Strength, force, power, the power of a state, வல்லமை. 2. A cramp, or metal-plate, on the corners of cabinet-work, மூலைத்தகடு. (*பாஷ்.*) 3. Large pincers, or tongs, பற்றிரும்பு. 4. Throbbing pains in the head or bowels; shrinking or contracting of a limb, convulsions, spasms, சோவு. 5. A figure of rhetoric, ஓரலங்காரம். 6. The profits, of one day in eight, given at the pearl-fishery to the boat-owners.

எனக்கிதிலேவலியில்லை. I have no pain from it.

கூலிகொடுத்தாலுனக்குச்செய்கிறதற்கென்னவலி.... What trouble is there for you when you get *cooly?*

சிறுவலி, s. Premature pains of a pregnant woman.

வலியது—வலிது, *appel. n.* That which is strong, powerful—*oppos. to* எளியது.

வலியறிதல், *v. noun.* Ascertaining [comparative] force, *as before a battle.* 2. *The heading of a chapter in the Cural.*

வலியன்-வலியான், s. A kind of blackbird, கரிக்குருவி. 2. See வலியார்.

வலியார், s. [*sing.* வலியான்.] The powerful, strong, good or influential; those in good circumstances—*oppos. to* எளியார். See எளியவன்.

வலியாரையஞ்சுமறலி. The god of death respects the strong (*in merit*).

வலியுறுத்தல், *v. noun.* Strengthening; encouraging. 2. Emphasis.

வலி, கிறேன், ந்தேன், வேன், வலிய, *v. n.* To be excited, stimulated, மூள. 2. To venture, துணிய. 3. To stay, தங்க. 4. *v. a.* To force, பலவந்தமாக.

வலிந்தகருத்து, s. A forced meaning. (*p.*)

வலிந்துகோடல், *v. noun.* [*lit. drawing by force.*] Interpreting verses by far-fetched meanings, forcing upon a passage, a meaning not obvious; such meaning is called, வலிந்துகோடற்பொருள்.

வலிய, *inf.* [*as adv.*] Voluntarily, freely, spontaneously, gratuitously, தானே. 2. [*as adj.*] Strong, as வலு.

வலியச்சண்டைக்குவருகிறது. Quarrelling with one unnecessarily.

வலியத்தலைக்கொடுத்தான். He has given himself [his head] willingly, *to the business.*

வலியசர்ப்பம்-வலுசர்ப்பம், s. A strong serpent, a dragon.

வலியவன், s. A strong man. 2. A rich man—*oppos. to* எளியவன்.

வலியவன்வெட்டினதுவாய்க்கால். The channel made by a man in power is the water-course.

வலி, க்கிறது, த்தது, க்கும், க்க, *v. n.* To have pain, உளைய. 2. க்கிறேன், த்தேன், ப்பேன், க்க. To pine, droop, languish, ஏங்க. 3. To agree, to concur, உடன்பட. 4. To become stout, திரைக்க. 5. *v. a.* To draw, attract, pull, இழுக்க. 6. To take forcibly, to compel, கட்டாயப்படுத்த. 7. To row a boat, as தண்டுவலிக்க. 8. To hoist the sails of a vessel, பாய்தூக்க. 9. To emphasize words, பலமாயுச்சரிக்க. 10. [*in gram.*] To substitute a hard for a soft consonant, மெல்லினவலியாக்க. 11. To interpret a passage by far-fetched words, அருங்கருத்துக்கொள்ள. 12. To bend, incurvate, வளைக்க. 13. To make efforts for effecting an object, பிரயத்தனஞ்செய்ய. 14. To dry, scorch, parch, வறட்ட. 15. To imagine, think, நினைக்க.

படகைவலித்துக்கொண்டுபோ. Go on rowing the boat.

காந்தக்கல்இரும்பைவலிக்கிறது. The load-stone attracts iron.

எனக்குத்தலைவலிக்கிறது. My head aches.

வலித்திரும்பு, s. A load-stone, as காந்தம்.

வலிமாந்தம், s. Convulsions. See மாந்தம்.

வலிமுகம்—வலீமுகம், s. A monkey, குரங்கு, *as taking a* [*human*] *face.* (*சது.*)

வலித்தல், *v. noun.* Consenting; becoming stout. 2. Substituting a hard consonant for a soft.

வலிப்பு. Convulsions, fits, இழுப்பு. 2. Paining, நோதல். 3. Rowing, தண்டுவலிக்கை. 4. Attraction, ஈர்ப்பு.—Of convulsions are, உள்வலிப்பு, inward; புறவலிப்பு, outward; நடுக்குவலிப்பு, a trembling convulsion.

வலிங்கம், s. [*prov. for* வலுவந்தம்.] Compulsion. (*Jaff.*)

வலிச்சல், s. Roof-lath. See வரிச்சல். 2. [*prov.*] Palmyra fruits that do not ripen, பழுக்காதகொட்டை.

வலிச்சலாணி, s. Nails for laths.

வலிமை, s. Strength, power, as வலுமை. 2. Hardness, வன்மை. 3. Force, பலாத்கம்.

வலிமைகாட்ட, *inf.* To exhibit power, or ability.

வலிமைசெய்ய, *inf.* To force, to ravish.

வலியன், s. A strong man, &c. See வலி.

வலு, *adj.* Strong, powerful, வன்மையான. 2. Great, valiant, heavy, கனமுள்ள. 3. *s.* Strength, பலம். 4. A great musquito, கொசுகு. 5. A coin above the standard-weight. Compare மெலு. 6. [*in cant numb.*] Eight.

வலுவாய்க்கூப்பிடுகிறது. Crying vehemently.

வலுவாய்ச்சொல்லு. Speak loud.

உடம்பிலேவலுவில்லை. There is no strength in my body.

வலுகடினம், *s.* Great hardness.

வலுகட்டாயம், *s.* Much force.

வலுகிழம், *s.* A very old person, animal or thing.

வலுமோசம், *s.* Great danger, or great deception.

வலுவந்தம், *s.* Might. 2. Compulsion, as பலபந்தம்.

வலுவாயன், *s.* A good speaker. See வல்வாயன்.

வலுவுயரம், *s.* Great height.

வலு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To be, or grow strong, பலக்க.

உத்திரம்வலுக்குமா. Will the beam prove strong?

வலுக்க. Strongly, vehemently.

வலுமை, *s.* Strength, force, violence.

வலுமைக்குவழக்கில்லை. There is no striving against power.

வலுமைபண்ணுகிறது. Acting with violence.

வலை, *s.* Net, trammel.—Of nets are கயிற்றுவலை, large sea-nets; கரைவலை, a draw-net; வீச்சுவலை, casting net.

வலைகாரர், *s.* [*pl.*] Fishermen.

வலைக்குணுக்கு, *s.* Metal-weights on the lower edge of a net.

வலைபோட—வலையெறிய—வலைவீச, *inf.* To cast a net, as a fisherman, &c.

வலைப்பட, *inf.* To be ensnared, caught in a net; to run a risk; to be endangered. (சது.)

வலைப்பூச்சி, *s.* The spider.

வலையர், *s.* [*sing.* வலையன், *fem.* வலைச்சி.] Inhabitants of villages near the sea, பரதவர். 2. Fishermen. 3. [*southern usage.*] A tribe of people who use nets in the chase, when hunting beasts.

வலையால்முற்றுண்பான்வலையன். The fisherman lives by fishing.

வலையன்சாமை, *s.* A kind of சாமை grain.

•வலையம், *s.* Circuit, boundary, as வலயம்.

•வலோத்காரம், *s.* Violence. See வலம், *Sa.*

வல், *s.* Strength, power, வல்லமை. 2. Quickness, speed, சீக்கிரம். 3. A hillock, மேடு. 4. Dice, சூதாடுகருவி. (சது.)

வல்—வல்ல, *adj.* Powerful; hard.

சர்வத்துக்கும்வல்ல. Omnipotent.

வல்லடி, *s.* Violence, oppression of a king, or other powerful person, பலவந்தம்.

வல்லடிவந்தவனைவாரிக்கொண்டுபோக. May a violent death carry you off. (*a curse.*)

வல்லடியடிக்க, *inf.* To use violence.

வல்லடியிலேபோக, *inf.* To die prematurely.

வல்லடிவழக்கு, *s.* An unjust lawsuit, a forcible attack on one who is weak; laying hands unlawfully upon one's property.

வல்லடிவழக்கைச்சொல்லடிமாமி. As if a son-in-law should say, father-in-law, no harm will come.

வல்லணங்கு, *s.* The malevolent goddess, Durga, துர்க்கை. (சது.)

வல்லவன், *s.* [*sometimes* வல்லவி.] A mighty man.

வல்லவனுக்குப்புல்லும்ஆயுதம். Even grass may be a weapon for a strong man. [*prov.*]

வல்லவனுக்குவல்லவனவையகத்திலுண்டு........ There is in the world a more mighty man.

வல்லமை, *s.* Power, might, as வலிமை.

வல்லமையறைவான், *appel n.* One who vaunts his own prowess not knowing that of his adversary. (*p.*)

வல்லாண்மை, *s.* Manliness; conceitedness. (*Colloq.*)

வல்லார், *s.* [*pl.*] Strong persons, the stronger sex, men, சமர்த்தர். (*Elli.* 179.) 2. [*ex* அல்லு, *v.*] Incapable persons, மாட்டாதார். (சது.) 3. Neighbors, அயலார்.

வல்லார்துக்கம். Mourning for the valiant.

வல்லார்கொள்ளை வாழைப்பழமாகும். The plunder of the powerful will vanish as plantain-fruit. *Prov.*

வல்லாளராசா, *s.* A titular name of a local chief of திருவண்ணாமலை.

வல்லாளர்கண்டன், *s.* [*com.* வல்லாளகண்டன்.] One powerful among the powerful. 2. A dexterous person.

வல்லாளன், *s.* A stout or valiant man, திண்ணியன். 2. A mighty man, வல்லவன். (சது.)

வல்லான்—வல்லோன், *s.* A strong or mighty man.

வல்லிசை, *s.* The treble or high tone in music. 2. A snake, பாம்பு. (சது.)

வல்லினம்—வன்கணம், *s.* The class of hard consonants. See இனம்.

வல்லினஎதுகை, *s.* See இனவெதுகை, under எதுகை.

வல்லீட்டுக்குற்றி, *s.* [*prov.*] A mallet.

வல்லெழுத்து, *s.* Hard consonants, as வல்லினம்.

வல்லெனல், *v. noun.* Repetition of a natural sound, an echo, அநுகரணவோசை.

வல்வாயன் — வலுவாயன், *s.* A good speaker, an eloquent man, an orator; (*lit.*) *one having a strong mouth.*

வல்விலங்கு, *s.* An elephant, யானை. (சது.)

வன்மீன், *s.* A crocodile—For similar compounds, see வன். (சது.)

•வல்கிதம், *s.* An amble, one of the five paces of the horse. See தாரகதி. W. p. 741. VALGITA.

வல்சி, *s.* Eating, உண்டல். 2. Boiled rice, சோறு. (சது.) 3. Rice not boiled, அரிசி; [*corrup. of Sa. Val'bha,* to eat.]

•வல்லகி, *s.* The Indian lute, or *Vin'a,* வீணை. W. p. 742. VALLAKI.

வல்லபம், *s.* Power, might, வல்லமை. [*Colloq.*]

வல்லபசத்தி, *s.* Great strength, as குண்டலிசத்தி.

வல்லபன், *s.* [*fem.* வல்லபி.] A mighty man.

•வல்லபன், *s.* A husband, நாயகன். 2. One beloved or desired, பிரியமுள்ளோன். W. p. 742. VALLAB'HA. 3. See வல்லபம்.

வல்லபை, *s.* A beloved wife, பிரியநாயகி. 2. Female of the Asuras, இராக்ஷசமாது. (சது.) 3. A mistress, சமாட்டி.

வல்லமை, *s.* Power. See வல்.

வல்லம், *s.* A town in the Tanjore district, ஓரூர்.

வல்லத்துக்கல், *s.* An excellent quartz found in that place.

•வல்லரி, *s.* A creeper, கொடி. 2. A compound pedicle, பூங்கொத்து. W. p. 742. VALLARI. 3. A bud, தளிர். (சது.)

•வல்லவன், *s.* A shepherd, a herdsman, இடையன். 2. A cook, சமையற்காரன். W. p. 742. VALLAVA. 3. A husband, as வல்லபன். 4. See under வல்.

வல்லவி, *s.* A wife, மனைவி. (சது.)

வல்லவை, *s.* As வல்லபை.

வல்லவாட்டு — வல்லவட்டு, *s.* [*Tel.* వల్లెవాటు.] A scarf worn by men.

வல்லவாட்டுப்பிச்சைவாங்குகிறது. [Wearing] a scarf and begging.

வல்லவாட்டுப்போட்டுக்கொள். Put on the scarf.

வல்லாரை, *s.* A medicinal plant, Indian Pennywort. See ஆரை. 2. The eighteenth lunar mansion, கேட்டைநாள். (சது.)

வல்லாரைக்கிருதம், *s.* See கிருதம்.

•வல்லி, *s.* A creeper, படர்கொடி. W. p. 742. VALLI. 2. A woman, a young woman, a lady of respectability, பெண். 3. A measure, அளவு. 4. A village of shepherds, இடைச்சேரி. 5. A fetter, கால்விலங்கு. 6. Removal, cessation, நீக்குகை. 7. Separation, பிரிவு. 8. A Upanishad. See உபநிடதம்.

•வல்லிகம், *s.* Pepper, மிளகு. (*Sa. Vallija.*) 2. A climbing plant, the pepper-creeper, கொடி. (சது.)

•வல்லிகை, *s.* The Indian lute, யாழ், வீணை. [as வல்லகி.] 2. A jewel for the ears, காதணி. (சது.)

•வல்லிசாதம், *s.* A creeper, ஓர்கொடி.

•வல்லியம், *s.* A village of shepherds, as வல்லி, இடைபுரி. 2. The name of a mountain, in the Sera kingdom; sometimes also used for the Chola kingdom, as conquered, கொல்லிமலை. 3. A tiger, புலி. (சது.) 4. A tiger-banner of the Chola kingdom.

வல்லு, கிறேன், வல்லினேன், வேன், வல்ல, *v. n.* To be able, possible, வல்லமையுடைத்தாக. (சலவு.)

வல்லுநர், *appel. n.* Strong men, வல்லோர். (சது.)

வல்லுதல், *v. noun.* Being able. 2. Propriety, discipline, ஒழுங்கு.

•வல்லூரம், *s.* Jungle, a thick wood, காடு. 2. Flesh of the wild boar, as வல்லூரம். 3. Loneliness, solitude, தனிமை. 4. A field. வயல். 5. A grassy place, புற்றரை. 6. A bunch of flowers, பூங்கொத்து. 7. Sand, மணல். W. p. 742. VALLURA. 8. A wilderness, a desert, வனாந்தரம்.

வல்லுவம் — வல்லுவப்பை, *s.* [*com.* வட்டுவம்.] A large betel-pouch with several partitions. (*R.*)

விகடபுத்தி, s. Intriguing designs.

விகண்டி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [prov] To refute, ஆட்சேபிக்க.
விகண்டிப்பு, v. noun. Difference.

•விகண்டை, s. [for விதண்டை.] Refutation, ஆட்சேபம். 2. Hostility, impatience, விரோதம்.

•விகமனம், s. A bad course of life, ill conduct, தீநடக்கை; [ex வி et கமனம்.]

•விகர்த்தனன், s. Sun, சூரியன். W. p. 758. VIKARTTANA.

•விகலம், s. Deficiency, a want, குறை. [Sa. Vikala.]

•விகலை, s. A moment, காலநுட்பம். 2. A second or 1-60th of a கலை. 3. (R.) An Indian hour of 24 minutes, நாழிகை; [ex வி et கலை.]

•விகற்பம், s. Diversity, variety, difference, வேற்றுமை. 2. Error, mistake, தவறு. 3. Doubt, ஐயம். W. p. 759. VIKALPA.
என்னோடேவிகற்பம்பண்ணலாமா. Is it proper for you to change toward me?
சித்தவிகற்பம், s. Confusion of mind.
விகற்பக்காட்சி, s. Discrimination between things that differ. See காட்சி.
விகற்பத்தின்முடித்தல், v. noun. An author's discussing a point at large or giving varieties, particulars, &c. in detail. See உத்தி.

விகற்பி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To make a difference or change, வித்தியாசப்படுத்த.

•விகாசம், s. Any thing open; also that which is blown, as a flower, மலர்ந்தது. W. p. VIKASA.

•விகாதம், s. An impediment, obstacle, prohibition; opposition, விரோதம். W. p. 762. VIGHATA.
அவன்விகாதம்பண்ணுகிறான். He contradicts or opposes.
விகாதக்காரன், s. An opponent. (c.)

விகாதி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. [com. விகாதம்பண்ண.] To impede, hinder.

•விகாரம், s. Modification, change—as varieties of inflection or combination in grammar, &c, திரிபு. 2. Sickness, நோய். 3. Delirium, பைத்தியம். 4. Passion, emotion, a change from a quiet or natural state in a soul, or in the deity. W. p. 759. VIKARA.
அவனுக்குவிகாரம்பிறக்தது. He is delirious.
விகாரங்காணுகிறது. Sensual affection arises.
காமவிகாரம்—மோகவிகாரம். Lasciviousness.
விகாரம், அ. The eight evil dispositions, These are காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், for which see உட்பகை, also add இடும்பை, arrogance and அசூயை, envy.
விகாரசன்னி, s. Epilepsy, convulsions.
விகாரப்புணர்ச்சி, s. [in gram.] Changes of letters in the combination of words, being of three kinds: தோன்றல், திரிதல் and கெடுதல்—oppos. to இயல்புப்புணர்ச்சி.
விகாரி, s. [masc. or fem.] A lascivious or lewd person, மோகி. (தி. 232.)

•விகாரி, s. The 22d year of the Hindu Cycle, A. D. 1839—40, தீவருஷம். 2. See under விகாரம்.

விகாரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To change, பேதிக்க. 2. To be sensual, மோகிக்க. (p.)

•விகிதம், s. Prescribed rule, direction, appointment, விதிமுறை. 2. Proportion, ratio, வீதம். 3. Comparison of one thing to another, ஒப்பிடுகை. 4. Propriety, தகுதி. 5. Classification, order, வகுப்பு. 6. (c.) Intimacy, harmony, சிநேகம்; [ex Sa. Vihita, fixed. W. p. 796.]
உனக்கும்அவனுக்கும்விகிதமா. Is there great intimacy between you and him?
விகிதமாயிருக்க, inf. To be proper.—Note. The Sanscrit is different.

•விகிரம், s. A bird, பறவை. 2. A fragment, கண்டம். 3. Any thing scattered, இறைக்கப்பட்டது. W. p. 759. VIKIRA.

•விகிருதி — விகிர்தி, s. The twenty-fourth year of the Hindu Cycle, தீவருஷம். 2. [com. in gram. விகுதி.] A change, an ending, a termination.

•விகிர்தம், s. A lie, பொய். 2. Diversity, வேறுபாடு. (சூ.)

விகு, s. Tightness; austerity. See பிகு.

•விகுணம், s. Bad nature, குணமின்மை; [ex வி et குணம்.] W. p. 761. VIGUN'A.
விகுணி, s. [masc. and fem.] One wanting in good qualities, குணக்கெட்டவன். 2. [met.] Intoxicating drink, மது.

•விகுதி, s. Change, விகாரம். 2. [in gram.] The termination in a compound word, பகுபதவுறுப்பிலொன்று. [corrupt. of விகிர்தி.] 3. [in the Sankya philos.] Generated effects, created objects, results of primitive principles not reproductive, as distinct from பிரகிருதி, or பகுதி.

விக்கல், s. Hiccough. See விக்கு.

•விக்கியாதன், s. One well known, a famous man, பிரசித்தன்; [ex வி et கியாதம்.] W. p. 761. VIKHYATA.

•விக்கியாபனம் — விக்ஞாபனம்—விஞ்ஞாபனம், s. A communication, information, அறிவிப்பு. 2. A memorial, விண்ணப்பம். W. p. 765. VIGNGAPANA.

•விக்கியானம்— விக்ஞானம்—விஞ்ஞானம், s. Knowledge, science, secular knowledge, கல்வி. [Sa. Vigngana.]
விக்கியானமயம், s. That which belongs to a science. See மயம்.
விக்கியானி, s. A learned man, கல்விமான்.

•விக்கிரகம், s. A body, a shape, a form, உடல். 2. An idol, an image, சுரூபம். 3. Separation, destruction, as சந்திவிக்கிரகம். W. p. 761. VIGRAHA.
விக்கிரகபூசகன், s. [com. விக்கிரகாராதனைக்காரன்.] An idolater.
விக்கிரகவணக்கம்—விக்கிரகாராதனை, s. Idolatry, worship of images.

•விக்கிரம, s. The fourteenth year of the Hindu cycle, தீவருஷம்.

•விக்கிரமம், s. Bravery, heroism, strength, பராக்கிரமம். 2. Great strength, மிகுபலம். W. p. 761. VIKRAMA.

விக்கிரமாதித்தன் - விக்கிரமசேனன் - விக்கிரமசிங்கன்—விக்கிரமார்க்கன், s. The celebrated Vicramaditya king of Oujein from whom an era is reckoned, commencing fifty-six years before the Christian.
விக்கிரமாதித்தவருஷம், s. The era of Vickramaditya.

•விக்கிரயம், s. Sale, selling, vending, விற்கை; [ex வி et கிரயம்.] W. p. 760. VIKRAYA.
அன்னவிக்கிரயம். The sale of food.
வீட்டுவிக்கிரயம். The sale of a house.
விக்கிரயபத்திரம் — விக்கிரயச்சீட்டு, s. A bill of sale.
விக்கிரயம்பண்ண — விக்கிரயஞ்செய்ய — விக்கிரயப்படுத்த, inf. To sell.

•விக்ஷேபம் — விக்ஷேபம் — விட்சேபம், s. Celestial latitude in general. W. p. 760. VIKSHEPA. 2. [in lunar eclipses.] The latitude of the moon, சசிவிக்ஷேபம். 3. [in solar eclipses.] Three elements to be found, சசிவிக்ஷேபம், இரவிவிக்ஷேபம், சித்தியவிக்ஷேபம், which see.

•விக்கினம், s. Obstacle, impediment, hinderance, difficulty, இடையூறு. 2. That which is noxious, dangerous, injurious—as a drug, தீமை. W. p. 762. VIG'HNA.
விக்கினம்பண்ண-விக்கினப்படுத்த, inf. To hinder, check, impede.
விக்கினேசுரன் — விக்கினேச்சுவரன், s. Ganesa, as remover of obstacles; [ex ஈசுரன்.]

விக்கு, கிறேன், விக்கினேன், வேன், விக்க, v. n. To hickup, hiccough, விக்கலெடுக்க. 2. To be choked, throttled; to stick in the throat, to be stopped as a shooting ear in the spathe, அடைக்க. (c.)
விக்கல், v. noun. [sometimes விக்குள்.] Hiccough.
விக்கலெடுக்க, inf. To hiccough.

•விங்களம், s. Tergiversation, difference, diversity, திரிபு. 2. Guile, deception, insincerity, treachery, கபடம். 3. [usage.] Adulteration, vileness, alloy, கலப்பு. 4. Want of cordiality, coolness in friendship, withholding proper aid, பேதம்.

விங்களி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To tergiversate, to shift, to separate, பிரிக்க. 2. v. n. To keep back, to be wanting in cordiality or co-operation, கெடுபட. 3. To be insincere, treacherous, deceptive, சூதுசெய்ய. 4. To shift, to be unsteady, நிலைபற்றிருக்க.
விங்களிப்பு, v. noun. Diversity, disagreement, tergiversation.
விங்களிப்புபண்ண, inf. To treat a friend as a stranger.

•விசதம், s. Whiteness, வெண்மை. 2. Any thing clear or pellucid, நிர்மலம். 3. That which is evident or apparent, வெளிப்படை. 4. Purity, சுத்தம். W. p. 780. VISATA.

•விசய, s. The twenty-seventh year of the Hindu cycle, தீவருஷம்.

•விசயச்சந்தம், s. An ornamental string of seven hundred pearls, எழுநூறுகோவைமுத்துத்தாழ்வடம். W. p. 764. VIJAYACHANDA.

•விசயநகரம், s. The name of a town, ஓர்பட்டணம்.

•விசயம், s. Conquest, victory, success, வெற்றி. W. p. 763. VIJAYA. 2. Refuge, shelter, அடைக்கலம். 3. Research, speculation, examination, ஆராய்வு. 4. Doubt, discrepancy, incongruity, ஐயம். 5. Sugar, சருக்கரை. 6. One of the twenty-eight Agamas of the Saivas, சிவாகமங்களிலொன்று. 7. The sun's region, or the solar system, சூரிய மண்டலம். 8. A chariot, or howda, of the gods, தேவவிமானம்.

விசயகோதண்டம், s. A victorious bow, வெற்றிவில்.

விசயதந்தன், s. A rat, எலி. (பஞ்.)

விசயன், s. An epithet of Arjuna, அருச்சுனன். 2. A title of Salivahana, சலி சகாத்தன். 3. The door-keeper of Vishnu, திருமால்வாயில்காப்போன். (சது.)

•விசயாரத்தம், s. Mount Kylasa, கைலைமலை. (சது.)

•விசயை, s. Durga, துர்க்கை. [Sa. Vijaya.]

•விசரம், s. A crowd, a multitude, கூட்டம். W. p. 794. VISARA. 2. Murder, கொலை.

விசர், s. [prov.] Madness, rabidness, பைத்தியம்.

விசர்நாய், s. A mad dog.

விசர்ப்புத்தி, s. Confused understanding, delirium, madness, disorder of the brain.

•விசர்க்கம், s. Setting free, விடுகை. 2. Evacuation, கழிச்சல். 3. [in astron.] The southern course of the sun. W. p. 794. VISARGA.

•விசர்க்கை, s. [in St. gram.] The soft aspirate marked by two dots one above the other (:) denoting a lengthening of the sound.

•விசர்ச்சனம், s. Gift, donation, ஈகை. 2. Relinquishment; despatching, விடுதல். W. p. 794. VISARJANA.

•விசளோ, s. A pan, a shallow earthen vessel, சட்டி. (சது.)

•விசனம், s. Sorrow, affliction, distress, துயர். 2. Intense application; great desire, பேராசை; [contrac. of Sa. Vyasana.] 3. An uninhabited place, a solitary place, மனிதரில்லாதவிடம். [Sa Vijana.] 4. A fan, விசிறி; [contrac. of Sa. Vyajana.] (சது.)

எனக்கதிகவிசனமாயிருக்கிறது. I am very sorry.

விசனக்கரை, s. A cemetery. (R.)

•விசாகம், s. The sixteenth lunar mansion, அனிலாசான். 2. The month of May, as வைகாசி. (p)

விசாகன், appel. n. Kartikeya, குமரன். W. p. 786. VISAKHA.

விசாதி, s. [vul. for வியாதி.] Disease.

•விசாதி—விசாதிபேதம், s. Difference in things unlike—oppos. to சாதி. See பேதம். W. p. 764. VIJATI.

•விசாரணை, s. Investigation, oversight, superintendence, ஆராய்ச்சி. W. p. 763. VICHARAN'A.

சாஸ்திரவிசாரணைபண்ணுகிறது. Searching the Shastras.

வீட்டுவிசாரணைக்காரன். A steward.

விசாரணைக்குக்கொண்டுவருகிறது. To bring to trial.

என்வியாச்சியம்நாளைக்குவிசாரணையாகும். My case will be investigated to-morrow.

விசாரணைக்காரன் — விசாரணைக்கர்த்தன், s. A superintendent.

விசாரணைநியமஸ்தர், s. [R. C. usage.] The ordinary.

•விசாரதம், s. A rhyming quatrain. (R.)

•விசாரதர், s. Learned persons, those who examine, புலவர். W. p. 786. VISARADA.

•விசாரம், s. Care, concern, trouble, anxiety, disquietude, solicitude, கிலேசம். (c.) 2. [Sa. Vichara.] Consultation, ஆலோசனை. 3. Opinion, cogitation, thought, எண்ணம். (சது.)

அவன்மெத்தவிசாரப்படுகிறான். He is very sorry.

விசாரத்தகடு, s. An iron hoop. (R.)

விசாரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To think, to consider, எண்ண. [ரோம. 21. 18.] 2. (c.) To take care of, பாதுகாக்க. 3. To provide, or procure, பராமரிக்க. 4. To examine, ஆராய.

என்னசெய்தியென்றுவிசாரி. Inquire what news.

இவனைநன்றாய்விசாரியும். Treat him very hospitably.

குற்றவாளியைவிசாரிக்கிறது. Examining a culprit.

ஒருஇடம்விசாரிக்கிறது. Searching out a place. [of residence].

விசாரிதம், s. What has been investigated, ஆலோசிக்கப்பட்டது. (சது.)

விசாரிப்பு, v. noun. Superintendence. 2. Management, direction. 3. Examination. 4. Oversight of land, or of a village.

இந்தநிலமவன்விசாரிப்பு. This land is his charge.

•விசாலம், s. Extension, நீளம். 2. That which is large, broad, wide, அகலம். W. p. 786. VISALA. 3. A tree, Eugenia racemosa, கடம்பு. 4. An order of architecture. See சிற்பநூல்.

விசாலப்படுத்த, inf. To extend, spread out; to make wide.

விசாலாக்கன்—விசாலாட்சன், s. Garuda, கருடன். 2. Siva, சிவன்; [ex அக்கம்.]

விசாலாட்சி, s. Parvati as having large and beautiful eyes, பார்வதி; [ex அட்சி.]

விசாலி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To extend, spread out, become wide, விரிய.

•விசாலை, s. A city, Oujein, உச்சினி. [Sa. Visala.]

விசானம், s. [also வியானம்.] A place of cremation, as மசானம்.

விசி, s. A bench, commonly, விசிப்பலகை. 2. A band, கட்டு.

•விசிகம், s. An arrow, அம்பு. W. p. 786. VISIK'HA. 2. A wave, புனற்றிரை. [Sa. Vichi.]

விசிகை, s. A swath, a band, a girdle. கச்சை. 2. Thought, deliberation, கருத்து. 3. A street, தெரு. (சது.)

விசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To fasten, to bind, கட்ட. (சது.)

•விசிட்டம்-விசிஷ்டம், s. Superiority, supreme excellence, eminence, மேன்மை. (சித்.) W. p. 787. VISISHTA.

விசிட்டஞானம், s. Excellent wisdom, divine knowledge.

விசிட்டாத்துவிதம், s. A treatise by எம்பெருமானார்.

விசிதம், s. Sacred ashes, விபூதி. (சது.)

•விசிதை, s. As வசித்துவம். See அஷ்டசித்தி under சித்தி.

•விசித்திரம், s. [also விச்சித்திரம்.] Any thing curiously wrought or handsome, பலசிறமுள்ளது. 2. Wonderfulness, அதிசயம். 3. (Beschi.) Show, pomp, வேடிக்கை; [ex வி et சித்திரம்.] W. p. 763. VICHITRA.

விசித்திரமானவேலை. Very curious workmanship.

விசித்திரம், ௫. The five manual arts. See கைத்தொழில்.

விசித்திரவேளாகொல்லி, s. A kind of melody, கொல்லித்திறம். (சது.)

•விசிராமம், s. Rest, repose, இளைப்பாறுகை. W. p. 788. VISRAMA.

விசிறி, s. A fan, சிற்றாலவட்டம். [Compare விசனம்.] 2. A shrub with leaves, &c., like a fan, Ehretia buxifolia, ஓர்செடி. 3. The top of a letter, the symbols of ி and ீ, எழுத்திலேறுருப்பு.

விசிறிகட்டிநடக்க, inf. To walk with a swinging motion, to swing the hands, &c. (Jaff.)

விசிறிமுருகு, s. An ear-ring of gold like a fan, worn on the upper part of the ear.

மேல்விசிறி, s. The mark of இ, &c., at the top of a letter.

விசிறு, கிறேன், விசிறினேன், வேன், விசிற, v. a. To fan, வீச. 2. To brandish, சுழற்ற. 3. To hurl, to throw with a whirling motion, சுழற்றியெறிய. 4. v. n. To splash, to cast up—as surf; to beat upon—as rain, மோத.

வளைதடியைவிசிறியெறிந்தான். He whirled the cudgel round and threw it.

•விசு—விஷு, s. The fifteenth year of the Hindu cycle, ஒருவருஷம்.

விசுக்கிட—விசுக்கிட்டுக்கொள்ள, inf. [vul.] To become displeased, விரைப்பட.

•விசுத்தி, s. A region of the body. See ஆதாரம். 2. A freeing from, நீங்கல். 3. Equality, சமம். W. p. 787. VISUD'DHI. 4. Phlegm, ஐயம். 5. Purity, சுத்தம். 6. Correction, good state, ameliorated condition, திருத்தம்; [ex வி et சுத்தி.]

விசும்பு, s. The visible heavens, the sky, ether, ஆகாயம். 2. Swerga, the heaven of the inferior gods, தேவலோகம். 3. A cloud, மேகம். 4. A point of the compass, திசை. (சது.)

விசும்புத்திசை, s. The zenith, உச்சி.

விசும்பு, கிறேன், விசும்பினேன், வேன், விசும்ப, v. a. To throw away in contempt, to toss, to cast away, அசட்டையாய்விலக்க. (Beschi.)

•விசுவம் — விச்சுவம், s. The world, உலகம். 2. Entireness, எல்லாம். W. p. 788. VISVA. 3. [also விஷுவம் விஷுவம்.] Equinoxes. See சமவிஷுவம். [Sa. Vishva.]

விசுவகருமன் - விசுவகர்மன்—விசுவகன்மன்—விசுவகர்மா, s. The son of Brahma, and architect of the gods.

விசுவச்சாயை — விசுவச்சாயாங்குலம் s. Equinoctial shadow.

விசுவசித்து, s. A particular ceremony, or sacrifice, ஓர்யாகம்.

விசுவதேவர், s. A particular class of thirteen celestials. (சது.) 2. A class of superiors worshipped at funerals.

விசுவநாதன் — விசுவேசன், s. Siva as worshipped at Benares, காசிச்சிவன். (சது.)

விசுவநாள், s. The twenty-first lunar mansion, உத்திராடம். (சது.)

விசுவப்பிரகாசன், s. One who is a universal light.

விசுவம்பரன், s. Vishnu as supporter of all things, விஷ்ணு. (சது.)

விசுவம்பரை, s. The earth as bearing and nourishing all, பூமி. (சது.)

விசுவரூபம்—விசுவசொரூபம், s. That which exists in all forms.

விசுவரூபன், s. An epithet of Vishnu.

விசுவாமித்திரன், s. [also கௌசிகன்.] A famous Rishi or Muni, preceptor of Rama, who by extraordinary austerities obtained superior powers, and is said by some to have formed creatures, counterpart and opposed to those formed by Brahma.

விசுவாமித்திரசிருஷ்டி, s. Any creature made by Visvamitra.

விசுவாமித்திரப்புல், s. A kind of grass, Saccharum spontaneum.

விசுவான்மா, s. Brahma as soul of the world, பிரமன். (சது.)

•விசுவாசம், s. Confidence, trust, நம்பிக்கை. 2. Faithfulness, veracity, உண்மை. 3. Faith, பத்தி. W. p. 789. VISVASA.

வாக்குவிசுவாசம் Faithfulness to one's word.

அவிசுவாசம். Unbelief, infidelity.

விசுவாசகன், s. A trusty person. (R.)

விசுவாசகாதகன், s. A covenant-breaker, a double-dealing person, a villain. (பஞ்.)

விசுவாசபத்தி, s. Faithful adherence.

விசுவாசபாதகம், s. Breach of trust, violation of intimate belief.

விசுவாசபாதகன், s. A treacherous man.

விசுவாசமில்லாமை, s. Want of confidence. 2. [Chris. usage.] Unbelief.

விசுவாசமுள்ளவன், appel. n. A faithful man. 2. As விசுவாசி.

விசுவாசி, s. [masc. and fem.] One who depends upon another. 2. [Chris. usage.] A believer.

அவன் விசுவாசத்திலிருக்கிறேன். I am under his protection. (R.)

விசுவாசி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To believe, to credit, to trust, நம்ப.

•விசுவாமித்திரன், s. See விசுவம்.

•விசுவாவசன்—விசுவாவசு, s. One of the celestial singers or Gandharbas, ஓர் கந்திருவன். W. p. 789. VISVAVASU.

•விசுவாவசு, s. The twenty-ninth year of the Hindu cycle, ஓர் வருஷம். 2. See விசுவாவசன்.

விசுளி, s. Fermented palm-tree-sap, கள். (சது.)

•விசேஷகம்—விசேடகம், s. Relation; narrative; anything special. [Sa Viseshaka.]

விசேஷகன், s. One who brings tidings, a narrator, as சுவிசேஷகன்.

•விசேஷணம்—விசேடணம், s. A qualifying term, epithet, attribute; one of the five specialities of grammatical construction. See அன்னுவயவிலக்கணம்.

•விசேஷம்—விசேடம், s. Speciality, peculiarity, a particular thing or matter. See அன்னுவயம். 2. A figure of rhetoric. See அலங்காரம். 3. Difference, distinction, விகற்பம். 4. Excellence, சிறப்பு. W. p. 787. VISESHA. 5. A narrative, a word, சொல். 6. (Beschi.) Remainder, as சேஷம்.

ஏதும்விசேஷமுண்டோ. Is there any thing in particular?

வாய்விசேஷமாய். By word of mouth.

எழுத்துவிசேஷமாய். By letter.

விசேஷக்கால், s. That which inadvertently occurs in conversation. (R.)

விசேஷதினம், s. A feast-day.

விசேஷதீட்சை, s. A special rite by a guru to confirm a disciple. See சிவதீட்சை, under தீட்சை.

விசேஷமாய். Especially, principally.

விசேஷாலங்காரம், s. As விசேஷம், 2.

•விசேஷியம் — விசேடியம், s. The thing qualified. See அன்னுவயவிலக்கணம். [Sa. Viseshya.]

விசேஷி — விசேடி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To make special, to make prominent, சிறப்பிக்க. 2. To excel, to surpass, மேற்பட.

விசேஷித்தது, appel. n. That which is excellent or preferable.

விசை, s. Spring, elasticity, force, impulse, impetus. 2. Haste, speed, swiftness, தீவிரம். 3. A spring-trap, பொறி. 4. Any mechanical instrument—as a lever, மிண்டி. 5. Bend, distention, வளைக்கை. 6. Change, turn, தரம். 7. A stay, a prop.

விசைதப்பிப்போயிற்று. The contrivance miscarried.

விசையாய்ப்போனான். He went away in haste.

எத்தனைவிசை. How many times, how often?

ஒருவிசை. Once.

விசைமெத்தஇருக்கிறதுஅறுந்துபோம். The rope will break, the distention is so great.

விசைகொள்ள, inf. To be elastic, வலிக்க. 2. To make haste, வேகமுற.

விசைக்காற்று, s. Wind or air in motion from a person walking swiftly.

விசைத்தடி, s. A weaver's instrument. நெய்வார்கருவியினொன்று. 2. A part of a trap.

விசையேற்ற, inf. To set up a spring or trap, to cock a gun, or to bend a bow.

அவன்வில்லைவிசையேற்றினான். He strained the bow.

விசையைத்தட்டுதல், v. noun. Springing a trap. 2. [fig.] Falling into difficulty.

விசையைவைத்துத்தூக்கல். Raising with a lever.

விசை, கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To make haste, தீவிரிக்க. (சது.) 2. To become angry, கோபங்கொள்ள. (p.)

விசைப்பு, v. noun. Anger, கோபம்.

•விசையம், s. Victory. See விசயம்.

•விச்சாதரர் — வித்தியாதரர், s. A class of celestials, தேவசிரேணிவகுப்பார். (சது.)

•விச்சாதி — விசாதி, s. Difference of caste, வேற்றுச்சாதி; [ex வி et சாதி.] W. p. 764. VIJATI.

•விச்சிராமம், s. Evacuation by stool, மலங்கழிக்கை.

•விச்சிரானம், s. A purgative; purging, பேதிமருந்து.

விச்சிரிப்பு-விச்சிலுப்பை, s. A kind of pustules on the skin, as சிச்சிலுப்பான். (Beschi.)

•விச்சின்னம், s. What has been divided, parted, alienated, பிரிக்கப்பட்டது; [ex வி et சின்னம்.] W. p. 763. VICHCHINNA.

விச்சு, s. [also விஞ்சு.] A repetitious sound, அநுகாரஓசை.

விச்சுக்கொட்ட, inf. To make such a sound in contempt.

•விச்சு, s. Seed, as வித்து. 2. Abundance, மிகுதி. (R.)

•விச்சுவம், s. The universe, &c. See விசுவம்.

விச்சுவகாசிபம்—விச்சுவசாரம்—விச்சுவதருமம்—விச்சுவபோதம், s. Different systems of architecture. See சிற்பநூல்.

விச்சுவரேகை, s. Celestial equator, வானவளை.

விச்சுவர், s. A class of celestials, வானோர்சிரேணிவகுப்பார். 2. Artizans, artists, mechanics, workmen, சிற்பர். (சது.)

விச்சுவேசம், s. A system of architecture. See சிற்பநூல்.

விச்சுளி, s. A swift-winged bird, Alcedo, அதிவேகப்பறவை. 2. [also விச்சுவியன்.] An ingenious, quick, clever person, commonly a mere youth who takes a short course and gets before others, சாதுரியமுள்ளவன்.

விச்சுளிப்பாய, inf. To spring as a cat.

விச்சுளியாயிருக்க, inf. To be agile, nimble, expeditious.

விச்சை, s. Street, தெரு. (சது.)

•விச்சை, s. Science, as வித்தை.

•விச்சொரூபம், s. Deformed shape, விகாரவடிவம்; [ex வி, priv. et சொரூபம்.]

விச்சோடு, s. An odd one [of a pair], inequality, ஒவ்வாதது; [ex வி, priv. et சோடு.]

•விஷமம், s. Mischief, wickedness, injury, இடக்கு. 2. That which is difficult, பிரயாசை. W. p. 790. VISHAMA.
விஷமத்துக்காகிலுஞ்செய்கிறான். He acts from rivalry.
விஷமத்துக்குச்சொன்னான். He spoke that maliciously.
விஷமக்கணக்கு, s. A very difficult problem.
விஷமச்சுரம், s. A malignant fever.
விஷமன், s. [fem. விஷமி.] A wicked man.

•விஷம்—விடம். s. Poison, நஞ்சு. 2. Any thing hurtful or destructive. W. p. 790. VISHA.
அப்பியாசேவிஷம்சாஸ்திரம். Want of practice is poison to all learning.
விஷந்தீண்டிச்செத்தான். He was bitten by a snake and died.
காலகூடவிஷம், s. Deadly poison. See காலகூடம்.
விஷக்கடி, s. [com. விஷகடி.] A poisonous bite.
விஷக்கடிவாய், s. The place bitten.
விஷக்கடிவேளை, s. An unfortunate time. (R.)
விஷக்கல், s. The Bezoar-stone, said to draw out poison.
விஷக்காய்ச்சல், s. A pestilential fever. See காய்ச்சல்.
விஷங்கொல்லி, appel. n. (lit. poison killer.) An herb, ஓர்பூடு.
விஷநீர், s. Malignant humors causing swelling, &c.
விஷநீரேற்றம், s. The dropsy.
விஷந்திரும்பல், v. noun. The dispelling of poison.
விஷந்தீண்டல். Being bitten by a venomous snake. See தீண்டு.
விஷபாகம், s. A sudden swelling of the body.
விஷபேதி, s. Virulent diarrhœa, cholera-morbus.
விஷப்பனி, s. Mildew, dew pernicious to health.
விஷமிறக்க, inf. To remove poison.
விஷமிறங்குதல், v. noun. The action of animal poison being subdued.
விஷமுட்டி, s. A poisonous tree, Strychnos, எட்டிமரம்.
விஷமூங்கில், s. A medicinal shrub, Crinum Asiaticum.
விஷமேறுதல், v. noun. Diffusing poison, through the system.
விஷமேற்ற, inf. To cause reduced animal poison to spread again through the system by magic. 2. [fig.] To provoke one to fury, சினக்கோபமூட்ட.
விஷவாக்கு, s. A word of bad omen, as நச்சுவாக்கு.
விஷவாதகரப்பன், s. A kind of cutaneous disease.

விஷமி, க்கிறது, த்தது, க்கும், க்க, v. n. To turn into poison, விஷமாக. 2. To be mischievous, விஷமம்பண்ண.
விஷமித்தவன், appel. n. A patient whose regimen and medicine disagree.

•விஷயம் — விடயம், s. That which is peculiar, characteristic or natural, உரியது. 2. Objects of sense, worldly objects, காணப்பட்டவைகள். 3. Origin, original cause, காரணம். 4. Semen virile, சுக்கிலம். 5. Refuge, shelter, அடைக்கலம். 6. Country, தேசம். 7. A lord, master, superior, நாயகன். W. p. 791. VISHAYA.
விஷயக்காட்சி, s. Perception of objects by the senses.
விஷயஞானம், s. Knowledge of sensible things.
விஷயபரித்தியாகம், s. Abstraction.
விஷயவஞ்ஞானம், s. Ignorance, illusion. (நிவ. 23.)
விஷயவாஞ்சை, s. Sensuality.

•விஷேபம், s. Mutation, change, திரிபு.

•விஷ்ணு, s. Vishnu. See விட்டுணு.

•விஸ்தரி—வித்தரி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To lay open, expand, விரிக்க. 2. To enlarge, to amplify, பெருக்க. 3. To explain, expound, விரித்துரைக்க.
கொஞ்சம்விஸ்தரித்துச்சொல்லு. Explain the subject a little.
விஸ்தரிப்பு, v. noun. Amplification, exposition.

•விஸ்தாரம்-வித்தாரம், s. Extension, diffusion, amplitude, அகலம். W. p. 794. VISTARA. 2. An order of architecture. See சிற்பநூல். 3. A kind of verse, ஓர்கவி.
விஸ்தாரமானபட்டணம். A town of great extent.
விஸ்தாரமாய்ப்பேசினான். He spoke at large.
விஸ்தாரக்காரன் — வித்தாரக்காரன், s. One who makes long speeches; a boaster.

•விஸ்தீரணம், s. Largeness, extensiveness, prolixity. [Sa. Visteern'a.]
வீடுவிஸ்தீரணமில்லை. The house is not large.
நிலம்விஸ்தீரணமாய்க்கிடக்கிறது. It is an extensive plain.

•விஞ்சை, s. Knowledge, கல்வி. 2. Magic. See வித்தை.
விஞ்சையர், s. A class of celestial singers, as வித்தியாதரர். 2. (சது.) As புலவர்.
விஞ்சையரூர், s. Swerga, நாகலோகம். (சது.)

•விஞ்ஞானம், s. Knowledge, science. See விக்கியானம்.
விஞ்ஞானகலர், s. The first of the three classes of souls, subject to but one மலம், free from births and deaths, and preparing for final absorption. Compare சகலர், and பிரளயாகலர்.
விஞ்ஞானப்பிரகாசம், s. Light of wisdom. (நிப. 442.)
விஞ்ஞானமயம், s. The spiritual faculty with means of discernment. See கோசம்.

விடக்கு, s. Flesh, ஊன். (சது.)

•விடங்கம், s. Beauty, அழகு. 2. Bravery, ability, ஆண்மை. 3. The inside of a bent arm, கொடுக்கை. 4 The projection of a beam or rafter outside the wall of a house, கைப்புறத்துநீண்டஉத்திரம். 5. Dovecotes on a pillar, புறாமடம். 6. The top of a house, முகடு. 7. A flag hoisted in a street, வீதிக்கொடி. (சது.)

விடங்கர், s. A narrow way, சிறுவழி. (சது.)

•விடரூசகம், s. A bird, probably the red partridge, சகோரப்புள். (சது.)

•விடதம், s. Cloud, முகில். 2. Verdigris, துரிசு. (தீபம்.)

•விடதரம், s. A snake, a serpent, பாம்பு; [ex விடம்.] 2. As விடதம்.
விடதரன், s. Siva, as ஆலகண்டன்.

•விடதாரி — விஷதாரி, s. A doctor, a physician, வைத்தியன்; [ex விடம், poison.] (Ell. 281.)

•விடதாளம், s. A rule of keeping time in music. See தாளம், ௯.

விடத்தேரை-விடத்தேர், s. [improp. விடத்தலை.] A medicinal shrub, Mimosa cinerea, ஓர்செடி.
எள்ளிலுஞ்சிறியஇலையென்னஇலை. What leaf is smaller than the sesamum seed? Ans. விடத்தேரை.

விடந்தை, s. The name of a town, ஓரூர். (சது.)

•விடபம், s. A bull, bullock, எருது; (also இடபம்.) [corrup. of Sa. Vrushaba.] 2. A little shrub, சிறுதூறு. 3. A branch of a tree, மரக்கொம்பு. W. p. 765. VIT'APA. 4. [in anat.] Perinæum, or septum of the scrotum. 5. A vehicle and banner of Siva, சிவனூர்தியுங்கொடியும். (சது.)
விடபகதி, s. The short trotting pace of the bull. See தாளகதி.

•விடபி, s. A tree, மரப்பொது. [Sa. VIT'APIN.]

விடப்பு—விடம்பு, s. A fissure, கமர். (சது.)

•விடம், s. Poison. 2. Any thing hurtful. See விஷம். 3. Inflammation from a bite, sting, or prick, &c., கடுப்பு. 4. Gallantry, debauchery, விடமார்க்கம். 5. A mountain, மலை. W. p. 765. VIT'A.
விடன், s. [pl. விடர்.] A gallant, a licentious person, தூர்த்தன். (சது.)

•விடயம், s. Any object of sense. See விஷயம்.

•விடருகம், s. A cat, பூனை. [corrup. of Sa. Vid'uraka.] (சது.)

விடர், s. A fissure, கமர்; [ex Sa. Vid'a.] 2. A forest, காடு. 3. A cleft of a mountain, மலைப்பிளப்பு. 4. See விடம். (சது.)

விடர்வு—விடவு, s. Cranny, chink, வெடிப்பு.

•விடலை, s. A male-child, ஆண்மகன். 2. A bride-groom, மணவாளன். 3. A man from sixteen to thirty-two, சவயதுள்ளவன். 4. The chief of a barren district, பாலைநிலத்தலைவன். 5. A steer, இளங்காளை; [ex Sa. Vrushala.] (சது.)

விடல், s. A fault, குற்றம். 2. See விடு.

•விடவம்—விஷவம்-விஷுவம்-விஷ்வம், s. The equinox. See விசுவம்.

விடவிடென, inf. To tremble from cold, fear, &c., நடுக்கக்குறிப்பு.
குளிர்விடவிடென்றுகொட்டுகிறது. He is shivering with cold.

விடவு, *s.* Any fissure. See விடர்வு.

விடன். See விடம்.

•விடாணம்—விஷாணம், *s.* Horn of animals, விலங்கின்கொம்பு. W. p. 792. VISHAN'A.

•விடாந்தகன், *s.* Siva as remover of the poison at the churning of the sea, சிவன்; [*ex* விடம்.]

விடாய், *s.* Thirst, தாகம். 2. Longing, craving, ஆசை. 3. Weariness, lassitude, சோர்வு; [*ex Sa. Vishada.*] 4. (*R.*) A holiday, விடுமுறை.

என்களைவிடாய்தீர்ந்தது. My weariness is over.

விடாயாற்றி, *appel. n.* Giving repose. 2. A ceremony within a fane after a procession—a resting, விடாயாற்றிப்புசைவம்.

விடாயாற்றிவிருந்து. A scanty meal after a festival.

விடாய், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. n.* To grow thirsty, தாகங்கொள்ள. 2. To grow faint and weary, களைப்பாக.

அவன்விடாய்த்துவிழுந்தான். He fell down from weariness.

எனக்குவிடாய்க்கிறது. I feel thirsty.

விடாய்ப்பு, *v. noun.* Thirsting.

•விடாலகம், *s.* A cat, பூனை. W. p. 766. VID'ALAKA.

விடி, *s.* A curtain, திரைச்சீலை. (சது.)

விடி, கிறது, ந்தது, யும், ய, *v. n.* To break or dawn, as the day, உதயமாக. 2. To be dissipated; to be divided as night from day; to be dispersed—as poverty, நீங்க. 3. To be full after privation, நிறைந்திருக்க.

எழுந்திருவிடிந்துபோயிற்று. It is day-break, get up.

பலபலவென்றுவிடிந்துவருகிறது. It begins to dawn.

அவனுக்கென்னகிடைத்தாலும்விடியாது. Whatever he may obtain, it will not be enough.

நீபொருபொழுதும்விடியமாட்டாய். You will never prosper.

என்தரித்திரமெப்போதுவிடியும். When shall my poverty be removed?

விடிநிலா, *s.* Morning-moon.

விடியாப்பானை, *s. (lit.)* A vessel which cannot be filled, (*met.*) one who cannot be satisfied. (*local.*)

விடியாமூஞ்சி, *s.* A person with whom nothing prospers. (*in contempt.*)

விடியுமுன்னமேயும். Before day-break.

விடிவெள்ளி, *s.* Morning-star.

விடியல், *v. noun.* Break of day.

விடியற்காலம் — விடியற்றம், *s.* Day-break. 2. [*as an adv.*] Early in the morning.

விடு, கிறேன், விட்டேன், வேன், விட, *v. a.* To set at liberty, to release, to despatch, அனுப்ப. 2. To emit, issue, give out, as the clouds, பகிர்விட. 3. To let flow as water, செல்லப்பண்ண. 4. To quit, leave, forsake, abandon, துறக்க; [*ex Sa. Vit'a,* to break.] 5. To get rid of, part with, கழிக்க. 6. To permit, let, give leave, விடைகொடுக்க. 7. To cease, discontinue, ஒழிய. 8. To split, பிளக்க.

இவ்விடத்தைவிட்டுப்போனான். He has left this place.

போய்விட்டான். He is gone.

அவன்வராவிட்டால். If he do not come.

இல்லாவிட்டால். If not.

அவனைவழிவிட்டுப்போனான். He accompanied another a little way and took leave.

அவனைப்போகவிடாதே. Do not let him go.

வாணம்விட்டார்கள்..........They discharged rockets.

அதைவிட்டுவை. Leave it as it was.

அந்தஉத்திரம்விட்டுப்போயிற்று. The beam is broken.

சாதந்தண்ணீர்விட்டுப்போயிற்று. The boiled rice has become watery.

விடாக்காய்ச்சல் — விடாச்சுரம், *s.* A continued fever, a hectic.

விடாச்சுரந்தீர்க்கும்கொட்டைகரந்தை. The plant, Sphœranthus Indicus, a specific for a hectic.

விடாதகண்டன், *s.* A persevering man.

விடாதவாகுபெயர், *s.* Instrumental nouns used for the agent, as in குதிரைபாய்ந்தவ்வூரைக்கொள்ளையிடப்பட்டது, that town was plundered by the horse [*cavalry*].

விடாப்பிடி, *s.* Taking and keeping hold of a person. 2. Tenaciousness, pertinacity. 3. Unchangeableness, ஒரு கண்டிப்பு.

விடாமழை, *s.* Unceasing showers, as அடைமழை.

விடுகதை, *s.* A riddle, an enigma.

விடுகதைவிடுவிக்கிறது. Solving a riddle.

விடுகாசு, *s.* Small money for change. 2. [*com.* விடுகாசுவளையல்.] A kind of glass arm-ring.

விடுகாலி, *s.* A cow at large, கட்டாமாடு. 2. A person under no restraint, a libertine, துர்த்தன்.

விடுகுறை—விட்டகுறை, *s.* That which is left for a future time.—*oppos. to* தொடுகுறை, தொட்டகுறை. 2. As விடுதுறை.

விடுகோடெருது, *s.* A spare bullock. (*R.*)

விடுதுறை, *s.* A stopping place in singing, reading, or in explaining verse.

விடுதேங்காய், *s.* Cocoa-nuts moved by magic.

விடுந்தலைப்பு, *s.* The front end of a cloth, முன்றானை. (சது.)

விடுபட, *inf.* To be left, abandoned, relinquished, விட்டுவிடப்பட.

விடுமுறை, *s.* Vacation or holidays in a school.

விட்டடி, *s.* The line just read—as விட்டடிக்கொட்டடியுமறியான், he does not know the beginning nor the end, *of a discourse.*

விட்டவர், *appel. n.* Enemies, பகைவர். 2. Ascetics, துறந்தோர். (சது.)

விட்டவாகுபெயர், *s.* A figure in which the name of a person or thing is used for its adjunct—as கல்லைக்கண்டகொள்ளி.

விடேன்றொடேனென்றுநிற்கிறது. Refusing to leave off.

விட்டிசைத்தல், *v. noun.* A diæresis, or sounding one syllable as two, பிரித்திசைத்தல்.

விட்டுக்கொடுக்க, *inf.* To put one forward, &c., in order to try how a matter will go. 2. [*prov.*] To disclose secrets. 3. To roll a cocoa-nut in the new year's game to be struck by a competitor. 4. To pimp.

விட்டுமாற, *inf.* To take another course; to change in principles or conduct.

விட்டுவேலாக்கி, *appel. n.* [*prov.*] One who lends his wife for gain.

விட்டுவிட, *inf.* To forego, to resign, to relinquish.

விடுகை—விடுதல், *v. noun.* Leaving, dispensing with; sending away; setting at liberty, casting or throwing.

விடு, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To send away, to dismiss, அனுப்ப. 2. To reject, தள்ள. 3. To cause to go, make to walk, நடத்த. 4. To revive, animate, உயிர்க்க. 5. To separate, பிரிக்க. 6. *v. n.* To remain, தங்க.

கட்டைவிடுத்துக்காட்டு. Please open *the packet.*

விடுத்துவிடுத்துச்சொன்னாலுமவனுக்குத்தெரியவில்லை. Although I explained to him again and again he did not understand.

விடுதலை, *s.* Release, liberty, deliverance, நீக்குகை. (*c.*)

விடுதலைப்பத்திரம், *s.* The *Habeas corpus,* granted to some persons.

விடுதலையாக்க, *inf.* To set at liberty.

விடுதி, *s.* Lodging place, a temporary abode, தங்குமிடம். (*c.*) 2. A separate apartment, solitariness, வேறுபாடு. 3. Leave, permission to go, உத்தரவு.

உனக்கெங்கேவிடுதி. Where is your lodging?

இரண்டுஞ்சோடியல்ல, விடுதி. Two things not mated—*as shoes.*

விடுதிமாடு, *s.* A spare bullock.

விடுதியாள், *s.* Any one to be spared. 2. A single man.

விடுதிவிட, *inf.* To give one a lodging. 2. To lodge.

விடுது, *s.* [*in seaman's language.*] A sounding line, as விழுது.

விடுதுவிட்டுப்பார்க்கிறது. Sounding with the lead.

விடுத்தம், *s.* [*Madura usage,* கடுத்தம்.] Change, turn, times, as நாலுவிடுத்தம், four times, தடவை. (*Beschi.*)

விடுப்பு, *s.* Inquisitiveness, ஆராயுங்குணம். 2. A show, curiosity, விநோதம்.

விடுப்புக்காட்ட, *inf.* To show a curious sight.

•விடுவம், *s.* The equinox. See விசுவம்.

விடுவாய்ச்செய்ய, *inf.* To cut off, அறுக்க. (சது.)

விடுவி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, *v. a.* To liberate, to set free, விடுதலைசெய்ய. 2. To explain, interpret, to solve a riddle, விரித்துரைக்க. (*c.*)

அவனைவிடுவித்துக்கொண்டேன். I set him at liberty.

நானுனக்குவிடுவித்துச்சொல்லவேணுமா. Must I explain to you?

அவனதைவிடுவித்துப்போட்டான். He solved the riddle.

விடேசி, *s.* An arrow, அம்பு. (ஞானவாசி.)

விடேலெனல், *s.* The repetition of a natural sound, அனுகாரவோசை. (சது.)

விடை, s. Answer, reply, உத்தரம். 2. Liberty, leave, license, permission, விடுகை; [ex விடு, 2.] (சு.) 3. [com. விடைக்கோழி.] A pullet.

விடைகொடுக்க, inf. To give an answer. 2. To give leave.

•விடை, s. A bull, எருது. 2. The sign Taurus, இடபராசி. W. p. 802. VRUSHA.

விடைகாலெறிதல், v. noun. Struggling, twiching the legs—as a beast or person in dying. 2. Bending the legs backward. (c.)

விடைதழாஅல். Grappling and subduing a wild bull—as a test of bravery by a suitor; [ex தழுவு.] (p.)

விடையோன், s. An epithet of Siva as having a bull, சிவன். (சு.)

விடை, கிறேன், ந்தேன், வேன், ய, v. n. To be angry, கோபங்கொள்ள. 2. To become disjointed, to split, பிரிய. (சு.)

விடை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To frown, reprove, கோபிக்க. 2. To reveal secrets, வெளிப்படுத்த. (சு.)

காதைவிடைத்துக்கொண்டோடிற்று. It ran off twisting its ears.

விடைப்பு, v. noun. Manifesting anger. 2. Calumniating.

•விட்கம்பம்-விஷ்கம்பம், s. An astrological yoga. See யோகம். 2. Diameter. W. p. 792. VISHKAMBA.

•விட்சேபம், s. Celestial latitude. See விக்ஷேபம்.

விட்சேபசத்தி, s. Elasticity. (உபயி.)

•விட்டம், s. A cross beam, உத்திரம். (சு.) 2. Any thing put across. 3. Diameter; [ex Sa. Visht'a, penetrated.]

குருட்டுப்பூனைவிட்டத்திற்பாய்ந்தாற்போல. As a blind cat jumped at the beam. Prov.

விட்டக்கோல், s. As விட்டம், 3. (R.)

விட்டார்த்தம், s. Semi-diameter, பாதி விட்டம்.

•விட்டரம், s. A seat of ascetics of Kusa grass, தவத்தோர்பீடம். 2. A tree, மரம். W. p. 792. VISHT'ARA. 3. (சு.) A receptacle, கொள்கலம்.

விட்டாற்றி, s. Rest, repose, as இளைப்பாற்றி; [ex விடு et ஆற்றி.]

விட்டி-விஷ்டி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To evacuate the stomach, மலங்கழிக்க; [ex விட்டை.]

விட்டில், s. A locust, வெட்டுக்கிளி. 2. [com. விட்டி.] A small winged insect, destructive to rice; a grass-hopper, விட்டிற்பூச்சி. 3. (சு.) A tree, பிரம்மரம், Trophis.

•விட்டுணு — விட்ணு — விஷ்ணு, s. Vishnu one of the Hindu Triad.

விட்டுணுகரந்தை, s. A plant. See கரந்தை.

விட்டுணுகாந்தி, s. A medicinal plant, Evolvulus Alsinoides. 2. [for விட்ணு.] A law-book. See தருமநூல்.

விட்டுணுபதம், s. The milk-sea, பாற்கடல். 2. See வைகுந்தம். 3. The highest heaven, பரமபதம். [Sa. Vishnupata.]

விட்டுணுபுராணம், s. The Vishnu Puranas. See புராணம், and வைணவம்.

விட்டுணுவல்லபை, s. Lukshmi, இலக்குமி; [ex வல்லபை, wife.]

விட்டேறு — விட்டேறாணம், s. Any missile weapon, வேல். (சு.) [ex விடு et ஏறு.]

•விட்டை—விஷ்டை, s. The dung of apes, dogs and some other animals, இலத்தி. W. p. 792. VISHT'A.

விட்டோசை, s. Separating letters in speaking, as விட்டிசை.

விணிகை, s. A bodice for women's breasts, முலைக்கச்சு. (சு.)

விண், s. Air, atmosphere, sky, as ஆகாயம். 2. Cloud, மேகம். 3. Youthfulness, tenderness, இளமை. (சு.)

விண்டலம், s. The etherial space, ஆகாயம்; [ex தலம்.] (சு.)

விண்ணவன், s. A celestial being, தேவன். 2. Argha, அருகன். (சு.)

விண்ணுலகம், s. The world of the celestials.

விண்ணுளார் — விண்ணோர், s. [pl.] The celestials.

விண்ணேறு, s. Thunder-bolt. See ஏறு.

விண்மணி, s. The sun. See நபோமணி.

விண்மண், s. Heaven and earth.

விண்மீன், s. A star. See மீன்.

விண்முழுதாளி, appel. n. Indra as ruler of the sky, இந்திரன். (சு.)

விண்வீழுங்கொள்ளி, s. A meteor.

விண்டல், s. The bambu, மூங்கில். (சது.) 2. See விண் for similar compounds.

விண்டு, s. Wind, காற்று. 2. A cloud, மேகம். 3. A name of Vishnu, விஷ்ணு. 4. A hill or mountain, மலை. 5. The bambu, மூங்கில். (சு.) 6. A plant, தகரை, Cassia Tora. 7. Another plant, as விஷ்ணுகாந்தி.

விண்டுநதி, s. The celestial Ganges, as ஆகாயகங்கை. (சு.)

விண்டுபதம், s. [lit. the abode of wind.] The etherial region, ஆகாயம். (சு.)

விண்ணப்பம், s. A petition, மன்றாட்டு.

விண்ணப்பக்காரன், s. Petitioner.

விண்ணப்பஞ்செய்ய, inf. To petition.

விண்ணப்பபத்திரம், s. A written petition; an application.

விண்ஞாணம், s. Knowledge, wisdom, as விஞ்ஞானம். 2. Pretended speech, habit, &c., artfulness, சாதுரியம். 3. Fashion, taste, assumed qualities of a high character, சாகசம். (Colloq.)

விண்ஞாணக்காரன், s. An ostentatious person, one ludicrously witty.

விண்விண்ணெனல், inf. To sound tinklingly—as the strings of a lute, lyre, &c., இசைக்குறிப்பு. 2. [fig.] To pain accutely as a boil, குத்தலெடுக்க.

விரற்சுற்றுவிண்விண்ணென்றுதெறிக்கிறது. The whitlow is very painful.

வித, க்கிறேன், ந்தேன், ப்பேன், க்க, v. a. To make special mention of, to indicate something to be noticed, விசேஷித்துரைக்க. 2. To enhance, to distinguish, மிகுக்க.

விதப்பு — விதப்பம், v. noun. Abundance, மிகுதி. (சு.)

விதப்புக்கிளவி, s. [in gram.] A qualifying term.

•விதண்டை, s. [improp. விதண்டா.] Disputation, controversy; investigation, வாக்குவாதம். (உபயி.) W. p. 766. VITAN'DA. 2. Hostility, பகை. (c.)

விதண்டாவாதம், s. A perverse dispute, wrangle.

விதண்டைக்காரன், s. An adversary.

விதண்டைக்குச்சொல்லுகிறது. Speaking invidiously.

விதப்பு, s. Haste, சீக்கிரம். 2. Cornice of a wall, மதிலுறுப்பு. (சு.) 3. See வித, v.

•விதம், s. Form, manner, method, மாதிரி. 2. Kind, sort, இனம். 3. Way, rule, சூத்திரம். W. p. 770. VID'HA.

விதவிதப்பாயிருக்கிறது ........Being of various forms. (R.)

விதத்துக்கொருகறி. A curry of each kind.

அந்தவிதமாய்ச்செய். Follow that method.

பலவிதத்திலுமெனக்குத்தொந்தரவு............I am troubled on all sides.

அதற்கொருவிதம்பண்ணு. Devise some expedient.

•விதரணம், s. A gift, donation, ஈகை. W. p. 766. VITARAN'A. 2. Capacity, cleverness, விவேகம்.

விதரணன், s. [com. விதரணபுருஷன்.] A generous man. 2. An eloquent man.

•விதரணை, s. Cleverness, eloquence, as விதரணம்.

•விதர்க்கம், s. Reasoning, discussion; doubt, conjecture; [ex வி et தர்க்கம்.] (Sa. Vitarka.)

•விதர்ப்பம், s. A district and city to the south-west of Bengal, the modern Bara-Nagpûr, said to be the country of Bhima the father of தமயந்தி wife of Nala-Raja, நிடதேசம். W. p. 467. VIDARB'HA. —Note. The name is said to be given to this country because it produces no தர்ப்பை grass, in consequence of the curse of a Rishi whose son had died of a wound from a blade of the grass.

விதர்ப்பு, s. Fear, அச்சம். [also விதிர்ப்பு.] 2. Crowdiness, closeness, நெருக்கம். 3. Battle, fight, போர். 4. Victory, வெற்றி. (சு.)

•விதலம், s. A division of the lower world, the next below the earth. See கீழேழுலகு under உலகம். [Sa. Vitala.]

விதலை, s. Trembling, shivering, நடுக்கம். (சு.)

விதலையேனே. I who am trembling. (திருவா.)

விதவிதெனல், inf. To be luke-warm. See வெதுவெதெனல்.

•விதவை, s. A widow, அமங்கலி; [ex வி priv. et தவன், husband.] W. p. 770. VID'HAVA.

விதவாகாமி, s. One who has intercourse with a widow.

விதறு, v. [prop. பதறு.] To be overhasty. (R.)

•விதனம், s. Chagrin, sorrow, grief, வேதனை, 2. Repentance, compunction, கழிக்கமும். [Sa. Vyathana, Vyad'hana.]—For the compounds, see விசனம்.

•விதாதா, s. A name of Brahma, பிரமா. 2. Argha, அருக்கம்; [ex வி et தாதா.] (சு.)

•விதாரணம், s. A rent, breach, cleft, பிளப்பு. W. p. 768. VIDARAN'A. 2. [in anat.] Fissures.

•விதானம், s. Manner, way, விதம். 2. Means, expedient, உபாயம். 3. A crowd, கூட்டம். W. p. 770. VID'HANA. 4. An awning, a canopy, மேற்கட்டி.

விதானி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To canopy, to spread cloths beneath the roof of a building, or the covering of a marriage saloon, for ornament.

விதானை, s. [prov.] A village officer; used in Jaffna.

•விதி, s. Fate, destiny, ஊழ். 2. Brahma, பிரமன். 3. Institute, precept, text, வேதவிதி. 4. Rule, principle, law, சூத்திரவிதி. 5. Felicity, prosperity, செல்வம். 6. Determination, decision, நியமனம். 7. Truth, உண்மை. 8. Knowledge, அறிவு. 9. An act, an action, செய்தொழில். 10. A proposition, குணம். (சு.) W. p. 770. VIDHI.

விதிப்படி. According to the prescribed rule.

விதியர், s. Writers, accountants, கணக்கர். 2. Military men, சத்திரியர். 3. Kings, ministers, மந்திரிகள். (சு.)

விதிவசம், s. Fate, destiny.

என்விதிவசமப்படியிருந்தது. It was my fate.

விழலுக்குமுத்துநீரிறைத்தேனென்விதிவசமே. It was my destiny I watered the beds [in vain]. (p.)

விதிவிலக்கு, v. noun. Law enjoining and law forbiding, செய்வதும்தவிர்வதும்.

தலையில்விதி, s. Fate [written] in the head. See under தலை.

விதி, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To appoint, institute, enact, enjoin, நியமிக்க. 2. To make, create, உண்டாக்க. 3. To do, to act, to transact, செய்ய. 4. To say, to utter, to lay down rules, சொல்ல.

அவனுக்குமரணதண்டனைவிதிக்கப்பட்டது. He was condemned to death.

விதித்தோன், appel. n. God the Creator, கடவுள். 2. Brahma, பிரமன்.

விதிப்பு, v. noun. Act of instituting; appointment, நியமிக்கை.

•விதிக்கு, s. A corner-region, கோணத்திசை; [ex வி, priv. et திக்கு.] (சு.)

•விதிதம், s. That which is known, manifest, clear, வெளிப்படை. W. p. 768. VIDITA.

•விதிபாதம், s. An astrological yoga. See யோகம்.

விதிப்பாள், s. Daughter, மகள். (சது.)

•விதியர், s. Writers, &c. See விதி.

விதியுளி, s. A burnt offering of the Hindus, ஓமம். 2. A messenger, தூதன். 3. Matrimony, விவாகம். (சு.)

•விதினை, s. The second phasis of the moon. See திதி. (சு.)

விதிர், க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. n. To fear, அஞ்ச. 2. To tremble, to quiver, நடுங்க; [ex Sa. Vyat'ha.] 3. v. a. (சி.) To brandish—as a sword, வாள்வீச.

கைவிதிர்க்கிறது. Swinging the hands.

விதிர்ப்பு, v. noun. Trembling, shivering, நடுக்கம். 2. Tremor, fear, அச்சம்.

விதிர்விதிர்க்க, inf. To throb, to flutter, to quiver with intensity of feeling, to be tremulous, தடிதடிக்க; [ex விதிர் reiterated.]

•விது, s. The moon, சந்திரன். 2. A name of Vishnu, விஷ்ணு. W. p. 770. VID'HU.

விதுக்கு, கிறேன், விதுக்கினேன், வேன், விதுக்க, v. n. To use obscene words. 2. To be in haste. 3. To be lascivious. (R.)

விதுக்குவிதுக்கெனல், v. noun. Fearing, apprehending an assault, or seizure; feeling the heart beat, பதைபதைப்பு.

விதுப்பு, v. noun. Haste, சீக்கிரம். 2. Desire, lust, ஆசை. (சு.) 3. Being sensually inclined, காமித்தல்.

•விதுடி—விதுஷி, s. [mas. and fem.] A learned person, அறிவாளி.

•விதுதமுகம், s. A gesture of the head and face expressive of disgust. See முகம், 8.

விதும்பு, கிறேன், விதும்பினேன், வேன், விதும்ப, v. n. To desire, to long for, hanker after, ஆசைப்பட. (குறள். 369.)

விதும்பல், v. noun. Longing, desiring.

•விதுரன், s. A learned man, அறிஞன். 2. The younger brother of Dhrutarashtra and counsellor of Duryodhana, திரிதராட்டிரன்தம்பி. W. p. 768. VIDURA. 3. A valiant man, திண்ணியன். 4. A widower, பெண்சாதிசாகக்கொடுத்தோன்; [ex Sa. Vidhura.]

•விதேகம், s. Emancipation from the body, either real or imaginary—as in trances, and ecstacies, தேகவியோகம்; [ex வி, priv. et தேகம், body.] 2. As விதேகை.

விதேகமுத்தி, s. Being delivered from bodies and births; attaining union with the deity. See முத்தி. (உபநி.)

•விதேகை, s. A district in the province of Behar, the ancient Mithila or modern Tirhut. See மிதிலை.

•விதேயன், s. One who is compliant, obedient, governable, சொற்படிகேட்போன். W. p. 771. VID'HEYA.

விதை, s. Seed of plants, வித்து. (c.) 2. Greatness, பெருமை. (சு.)

விதைகட்ட, inf. To lay up corn for seed. (தி. 528.)

விதைநெல்தெளிய, inf. To sow seed [grain].

விதைப்புனம், s. A spot of ground newly cultivated, as இதை. (சு.)

விதைமணி, s. Seed-corn.

விதை, க்கிறேன், த்தேன், ப்பேன், க்க, v. a. To sow seed, வித்திட. 2. [fig.] To make public.

விதைப்பு, v. noun. Sowing.

விதைப்புக்காலம். The time of sowing.

•வித்தகம், s. Knowledge, ஞானம்.

வித்தகர், s. Artificers, கம்மாளர். 2. Messengers, தூதர். (சு.)

வித்தகன், s. A knowing one, ஞானி. 2. B'hairava, வைரவன். (சு.)

•வித்தம், s. Wealth, gold, பொன். 2. Wisdom, ஞானம். W. p. 767. VITTA.

வித்தன், s. A learned man, வித்துவான்.

வித்தரி, v. To expand. See விஸ்தரி.

•வித்தாரம், s. A kind of verse. See கவி. 2. An order of architecture. 3. Extension, &c. See விஸ்தாரம்.

வித்தாரக்காரன், s. A boaster.

வித்தாரம்பேச, inf. To make long speeches.

•வித்தியர், s. Artificers—as mechanics, goldsmiths, &c., கம்மாளர்; [ex வித்தை.]

•வித்தியாசம், s. [contrac. of வியத்தியாசம்.] Difference, contrariety, வேறுபாடு. (c.) அதற்கிதுவித்தியாசம். This differs from that.

வித்தியாசமானவார்த்தைகள். Abusive language.

•வித்தியாதத்துவம், s. A department of knowledge. For this and other similar compounds, see under வித்தை.

•வித்தீரணம், s. Extensiveness, &c. See விஸ்தீரணம்.

வித்து, s. Seed, விதை. 2. Semen virile, விந்து. 3. Race, lineage, வமிசவழி. 4. [fig.] A cause. See under சம்பிரதாயம்.

வித்துப்பஞ்சமோ. Is grain scarce?

வித்திட, inf. To sow seed. (p.)

வித்துத்தெளிக்க, inf. To scatter seed.

வித்து, கிறேன், வித்தினேன், வேன், வித்த, v. a. To sow, விதைக்க. (p.)

•வித்துரு, s. Lightning, மின்னல். W. p. 769. VIDYUT.

•வித்துருமம், s. Coral, பவளம். W. p. 769. VIDRUMA.

•வித்துவான், s. A learned man. See under வித்தை.

•வித்துவேஷணம்—வித்துவேடணை, s. Excitement to enmity. See சுரமம் and கிலேசனம்.

•வித்துவேஷம் — வித்துவேடம், s. Enmity, hatred, பகை; [ex வி et துவேஷம்.] (சு.)

•வித்தை, s. [St. வித்தியா.] Science, learning, sacred or profane, a branch of learning, கல்வி. W. p. 768. VIDYA. 2. Skill, ingenuity, dexterity, சாமர்த்தியம். 3. Arts displaying skill, சித்திரத்தொழில். 4. Magic, jugglery, சாலவித்தை.—It retains its Sans. pronunciation in most of the compounds.

வித்தியாசாலை, s. A college.

வித்தியாதத்துவம், s. A department of knowledge, one of the தத்துவத்திரயம். According to the Saivas, it includes; 1. காலம், time; 2. நியதி, fate; 3. கலை, science; 4. வித்தை, arts; 5. இராகம், desire; 6. புருடன் or ஆன்மா, soul; 7. மாயை, matter.

வித்தியாதரர், s. [pl.] Demigods of a certain class. See பதினெண்கணம் under கணம்.

வித்தியாதரிசிகள், s. Inspectors of schools.

